# கலைமகள்



## தொகுதி கஉ

பகுதி எஉ—எஅ

[ஈசுவர ௵ தை ௴ முதல் வெகுதான்ய ௵
ஆனி ௴ வரை]



ஆசிரியர்:
ஆர். நாராயணசாமி ஐயர், பி.ஏ., பி.எல்.

1938

சென்னை லா ஜர்னல் அச்சுக்கூடம், மயிலாப்பூர்

 [விலை ரூ. 2 6 0.

# பதின்மூன்றாந் தொகுதியின் பொருளடக்கம்

**உபாத்தியாயர் பகுதி:**



**கதை:**

கவி:



குறிப்பும் திரட்டும்:



சரித்திரம்:



சாஸ்திரம்:

சிறுவர் பகுதி:



நற்கலை:



புத்தகக் குறிப்பு:

# கட்டுரை எழுதியவர்கள்

## தனிப் படங்கள்



விஜயாலய சோளீசுவரத்திலுள்ள துவாரபாலகன்

(30-ஆம் பக்கம் பார்க்க)




# உதிர்ந்த மலர்கள்

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

---

பத்துப்பாட்டை நான் ஆராய்ந்து பதிப்பிக்கத் தொடங்கியபோது எனக்கு முதலில் மூலமுள்ள பிரதி கிடைக்கவில்லை. பதவுரைமட்டும் அடங்கிய பிரதிகளே கிடைத்தன. அதன் முதற் பதிப்பில் உரையிலிருந்து தொகுத்த மூலத்தையே வெளியிட்டேன்.[1] அக்காலத்தில் மூலப்பிரதி எங்கேனும் கிடைக்குமோ வென்று சிரமப்பட்டுத் தேடியும் பயனில்லை.

உரையில் நச்சினார்க்கினியர் கொடுத்துள்ள மூலப்பகுதிகளை இணைத்து எதுகை, மோனை, பொருட்டொடர்பு முதலியவற்றை ஆராய்ந்து ஒருவகையாக அமைத்துக்கொண்டேன். அந்த நிலையிலும் ஓர் இடையூறு உண்டாயிற்று.

* * * *

பத்துப்பாட்டில் எட்டாவது பாட்டாக இருப்பது குறிஞ்சிப்பாட்டென்பது. அது சங்கப்புலவர்களில் தலைசிறந்தவராகிய கபிலரால் ஆரிய அரசனாகிய பிரகத்தன் என்பவனுக்குத் தமிழின் நயத்தைத் தெரிவிக்கும்பொருட்டுப் பாடப் பெற்றது. அதன் கண் ஒரு தலைவி ஒரு தலைவனைக்கண்டு காமுற்று அளவளாவிய செய்தியாகிய களவொழுக்கம் மிக அழகாகச் சொல்லப்படுகின்றது:

மலைவாணர் மகளாகிய ஒரு தலைவியை அவளுடைய தாய், "தினைக்கொல்லையைக் காத்து வருவாயாக" என்று கூறித் தோழியுடன் அனுப்பினாள். தலைவியும் தோழியும் தினைக்கொல்லைக்குச்

---

1. 1889-ஆம் வருஷம்.

சென்று பரண்மேலிருந்து கிளி முதலியவற்றை ஓட்டிக்கொண்டிருந்தார்கள்.

பிறகு அருவியிலே விளையாடி மகிழ்ந்தும், பாட்டுக்களைப் பாடியும், பலவகையான அழகிய மலர்களைப் பறித்துப் பாறையிலே குவித்தும், தழைகளையெல்லாம் ஆடைபோலக் கட்டி உடுத்தும், மாலைதொடுத்து அணிந்தும், இடையிடையே கிளிகளை ஓட்டியும் பொழுது போக்கினார்கள்.

அப்பொழுது அங்கே ஒரு தலைவன் வந்தான். அவன் அழகும் வீரமும் உடையவன். அவன் தன் தலைமயிரில் எண்ணெயும் மயிர்ச்சாந்தும் பூசியிருந்தான். அகிற்புகையினால் அதனை உலர்த்தினமையின் அதில் வாசனை கமழ்ந்தது. அவ்வாசனைபற்றி வண்டுகள் அவன் குடுமியிலே மொய்த்தன. பல மலர்களை அவன் தன் தலையில் அணிந்து பிச்சி மலரால் தொடுத்த ஒற்றைவடத்தைச் சுற்றிக்கொண்டிருந்தான். ஒரு காதில் அசோகந்தளிரைச் செருகியிருந்தான். பூமாலையும் ஆபரணமும் அவன் மார்பிலே விளங்கின. கையில் வில்லையும் அம்புகளையும் ஏந்தியிருந்தான். இடையிலே கச்சையும் காலிலே வீரக்கழலும் திகழ்ந்தன.

அவனோடு சில நாய்கள் வந்தன. அவை குரைத்துத் தலைவியையும் தோழியையும் வளைத்துக்கொண்டன. அவர்கள் அஞ்சி வேறிடத்திற்குச் செல்ல முயன்றார்கள். அப்பொழுது அவ்வீரன் அவர்களை நோக்கி இனிய சொற்களைக் கூறி அவர்கள் அழகைப் பாராட்டினான்.

எப்படியேனும் அவர்களோடு பேசவேண்டுமென்பது அவன் விருப்பம். அதனால் பொய்யாக, "நான் வேட்டையாடி வந்தேன். யானைமுதலிய சில மிருகங்கள் எனக்குத் தப்பி இங்கே வந்தன. அவற்றை நீங்கள் கண்டீர்களோ?" என்று வினவினான். மகளிர் இருவரும் நாணமிகுதியால் ஒன்றும் விடை பகரவில்லை.

அவன் மேலும், "என் வினவிற்கு ஏற்ற விடை தாராவிடினும் என்னோடு ஒரு வார்த்தையாவது பேசக்கூடாதா?" என்று சொல்லிவிட்டு ஒரு பூங்கொம்பை எடுத்துக் குரைத்துக்கொண்டிருந்த தன் நாய்களை அடித்து அடக்கினான். தலைவியின் வாயிலிருந்து ஒரு சொல்லேனும் வருமோவென்று எதிர்பார்த்து நின்றான் அவன். ஒன்றும் வரவில்லை.

அப்பொழுது, வேடன் ஒருவனால் தினைப்புனத்திலிருந்து துரத்தப்பட்ட ஒரு யானையானது மதமிகுந்து மரங்களை முறித்துக்கொண்டு அவ்வழியே வந்தது. அதைக்கண்ட அம் மகளிர் இருவரும் அஞ்சி நடுங்கினர். அவர்களுடைய நாணம் இருந்த

இடம் தெரியாமல் மறைந்தது. உயிருக்கே ஆபத்து வந்தபோது நாணம் என்செய்யும்! உடனே அவ்வீரனருகிலே ஓடிச்சென்று நடுங்கி நின்றார்கள்.

நினைத்தபொருள் கைவந்தவனைப்போல அவன் மகிழ்ந்து மிகவும் எளிதாக ஓர் அம்பைத் தொடுத்து அந்த யானையின் முகத்தில் எய்தான். அது வெருவி ஓடிவிட்டது. மகளிர் அச்சம் நீங்கினர்.

தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே ஒருவகை அன்பு உண்டாயிற்று.

பிறகு மகளிர் இருவரும் மலையருவியிலே குதித்து விளையாடுகையில் கால் நிலையாமல் நீரால் இழுத்துச் செல்லப்பட்டனர். அப்பொழுது தலைவன் சென்று அவர்களைக் காப்பாற்றினான். தலைவியைத் தழுவிக்கொண்டு அன்பு செய்தான். அதுமுதல் அவ்விருவரும் காதலராயினர். தினந்தோறும் சென்று தலைவன் தலைவியைக் கண்டு அளவளாவி வந்தான். தலைவி காலையிலே தினைப்புனஞ் செல்வதும் கிளியை ஒட்டுவதும் தலைவனைக்கண்டு பேசி அளவளாவி மகிழ்வதும் மாலையிலே தன் வீடு திரும்புவதுமாக இருந்துவந்தாள்.

பின்பு தினைக்கதிர் விளைந்தவுடன் தலைவிக்குத் தினைப்புனங் காக்கும் வேலை ஒழிந்தது. இதனால் அவள் தன் வீட்டிலேயே இருந்தாள். அக்காலத்தில் தலைவன் இராப்பொழுதில் அவளை நாடி வீட்டிற்கு வந்து சென்றுகொண்டிருந்தான்.

அவன் வரும்போது இராக்காலமாதலின் இடைவழியிலே அவனுக்கு நேரக்கூடும் அபாயங்களுக்கும் தன் ஊரிலும் வீட்டிலும் உள்ள காவல்களுக்கும் பயந்து தலைவி வருந்தினாள். அந்த வருத்த மிகுதியினால் அவள் உடல் மெலிவுற்றது. அம்மெலிவைக் கண்ட தாய் முதலியோர் அதற்குக் காரணம் என்னவென்று ஆராயத் தொடங்கினர்.

தலைவிக்கு உண்டான நோய், மருந்தால் தீர்வதன்றென்பதை அவர்கள் அறிந்திலர். முதியவர்களையும் தெரிந்தவர்களையும் கேட்டார்கள்; கடவுளுக்குப் பூசைபோட்டனர்; அவர்களால் நோயின் காரணத்தை அறியமுடியவில்லை. உண்மையறியாமல் அவர்கள் வருந்துவதையும் தான் தலைவனை மணம்செய்து கொள்வதற்கு வழியின்றித் துன்புறுவதையும் தலைவி உணர்ந்து யோசித்தாள். 'நம்முடைய காதலை வெளிப்படுத்தாவிடின் அதனையறியாத இவர்கள் ஏதேனும் செய்யத் துணிவார்கள். அதனால் நம்முடைய காதலுக்கும் கற்புக்கும் குறை நேரும். ஆபரணங்கள் உடைந்துவிட்

டால் மறுபடி திருத்தி அமைத்துக்கொள்ளலாம். ஒழுக்கமும் கற்பும் வழுவினால் மறுபடியும் அமைத்துக்கொள்ள முடியுமா? எப்படியேனும் நம் நிலையைத் தாய்க்குத் தெரிவிப்பதுதான் பரிகாரம்' என்று துணிந்தாள். துணிந்து தன் உயிர்த்தோழிக்கு அதனை அறிவித்தாள். அத்தோழி அதனைக் கேட்டு அவள் விருப்பத்தின் படியே செவிலித்தாய்க்குத் தலைவியின் காதல் வரலாற்றைச் சொல்லுகின்றாள்.

* * * * *

அப்படிச் சொல்லும் முறையிலே குறிஞ்சிப் பாட்டு அமைந்திருக்கின்றது. அதில் உள்ள வருணனைகளும், பழைய வழக்கங்களும், பிறவும் என் மனத்தைக் கவர்ந்தன. தலைவியும் தோழியும் பலமலர்களைப் பறித்துப் பாறையிலே குவித்த செய்தி கூறப்படுமிடத்தில் 99 மலர்களின் பெயர்கள் வருகின்றன. 'இவ்வளவு பூக்களின் பெயர்களை எதற்காக அடுக்கி இங்கே சொல்ல வேண்டும்?' என்று யோசித்தேன். ஆரிய அரசனுக்குத் தமிழ்ச்சிறப்பை அறிவுறுத்த வந்த கபிலர், "தமிழர்கள் இயற்கையின் எழிலை நன்கு உணர்ந்தவர்கள். நிலப்பாகுபாடுகளையும் மரஞ்செடி கொடிகளின் இயல்புகளையும் தெளிவாக ஆராய்ந்தவர்கள். அவர்களுக்கு வார்த்தைப் பஞ்சமில்லை" என்பதை அவ்வரசன் தெரிந்துகொள்வதற்காக இப்படிப் பாடியிருக்க வேண்டுமென்று கருதினேன்.

மாலைக்காலத்தை எவ்வளவு அழகாக அவர் அதில் வருணித்திருக்கின்றார்!

'சூரியன் அத்தகிரியிலே மறைகின்றான். மான் கணங்கள் மரத்தடியிலே வந்து கூடுகின்றன. பசுக் கூட்டங்கள் வயிறார மேய்ந்துவிட்டுத் தம்முடைய கன்றுகளை நினைந்து விளித்துக் கொண்டே மந்தைகளிற் புகுகின்றன. அன்றிற் பறவை பனைமரத்தில் இருந்து துணையை அழைக்கின்றது. பாம்பு இரை தேடும் பொருட்டு மணியை உமிழ்கின்றது.

'இடையர்களெல்லாம் தம்முடைய புல்லாங்குழலில் ஆம்பற் பண்ணை வாசிக்கின்றனர். ஆம்பலரும்புகள் இதழ் விரிகின்றன.

'வீடுகளிலெல்லாம் சுமங்கலிகள் விளக்கேற்றுகின்றனர். அந்தணர் அந்திக் கடனைச் செய்கின்றனர்.

'இலைகளின் மேல் அமைத்த பரண்களில் வேடர்கள் கொடிய மிருகங்களை அச்சுறுத்தக் கொள்ளிக் கட்டையால் தீ உண்டாக்குகின்றனர். மேகங்கள் மலையைச் சூழ்கின்றன; எங்கும் இருள்கின்றது. காட்டிலே கல்லென்ற ஒலி உண்டாகின்றது. புள்ளினங்கள் தத்தம் கூடுகளில் வந்து ஒலித்தன. இப்படி மாலை வந்தது'.

இவற்றைப் படிக்கப்படிக்க இக்காட்சிகள் என் மனக்கண் முன் தோன்றலாயின. ஒருமுறை படித்தேன். இருமுறை படித் தேன். பலமுறையும் படித்தேன்.

*　　　*　　　*

மூல அடிகளை நன்றாக வரையறை செய்துவரும்போது, மலர் களை வரிசையாகச் சொல்லும் பகுதியின் இடையே சில அடிகள் விட்டுப்போயினவென்று தெரிந்தது. அங்கே ஏட்டில் இடம் விடப்பட்டிருந்தது. அழகாகத் தொடுத்த அம்மலர் வரிசையிலே சில மலர்கள் காணப்படவில்லை. அவ்வரிசையின் அழகு அதனால் சிறிது சிதைவுற்றது. எவ்வளவோ இடங்களில் தேடியும் மூலம் கிடைக்கவில்லையே என்ற வருத்தத்தால் நைந்திருந்த நான், உரை யின் உதவிகொண்டு ஒருவாறு மூலத்தைச் செப்பஞ் செய்யலா மென்ற தைரியத்தை அடைந்திருந்தேன். மூலவரையறையும் ஒருவாறு அமைந்து வந்தமையால் திருப்தியுற்றேன். இடையிலே இம்மலர் வரிசை அறுந்திருந்தது. நான் என்செய்வேன்!

அங்கே செங்காந்தட் பூ முதல் செம்பூ வரையிற் பல மலர் கள் சொல்லப்படுகின்றன. செங்கொடுவேரி என்னும் பூவுக்கும் கூவிளம் பூவுக்கும் இடையிலே சிதைவு காணப்பட்டது. ஏட்டுச் சுவடியில் அடிவரையறையோ, அடிகளின் எண்ணோ இரா. எத் தனை அடிகள் அங்கே இல்லையென்று விளங்கவில்லை. 'எத்தனை மலர்கள் உதிர்ந்துவிட்டனவோ! அவற்றை எங்கே தேடி எடுத்துக் கோத்துக் குறையை நிரப்புவோம்!' என்று நான் ஏங்கினேன். ஏடுகள் தேடாத இடம் ஏதாவது இருக்கிறதாவென்று யோசித் தேன். தமிழ்வாணர்களைப் பாதுகாத்தும் சைவத்தை வளர்த்தும் வரும் தருமபுர ஆதீன மடத்தில் நான் அதுகாறும் ஏடுகளைத் தேடாதது என் ஞாபகத்துக்கு வந்தது.

அக்காலத்தில் திருவாவடுதுறையாதீனத்திற்கும் தருமபுர ஆதீனத்திற்கும் சில வழக்குகள் நடந்தன. அதனால் இரண்டு மடத் தினர்க்குள்ளும் ஒற்றுமை இல்லை. தருமபுரமடத்தின் பழம் பெருமையையும், திருவாவடுதுறை மடத்தைப்போலவே அம் மடத்திலும் தமிழ் வளர்த்த பெரியார்கள் பலர் இருந்தமையை யும் நான் அறிவேன். ஆயினும் திருவாவடுதுறை மடத்தின் சார்பு பெற்றவனாதலின் நான் தருமபுரத்திற்குச் செல்லத் துணிய வில்லை. பழங்காலத்தில் இவ்விரண்டு மடங்களும் ஒற்றுமையோடு இருந்தன. தருமபுரத்தைக் கீழைவீடென்றும் திருவாவடுதுறை யை மேலைவீடென்றும் சொல்வார்கள்,

ஆதீனங்களின் இடையே பிணக்கு நேர்ந்தபோது ஓர் ஆதீனத்திற்குரியவர்கள் மற்ற ஆதீனத்திற்குரியவர்களோடு பழகாமல் இருப்பது வழக்கம். அதனால் 'தருமபுரம் செல்வதைத் திருவாவடுதுறை மடத்தினர் விரும்பாமல் இருத்தல்கூடும்; தருமபுரத்தினர் உள்ளன்போடு என் வரவை ஏற்றுக்கொள்ளாமல் இருத்தலும் கூடும்' என்ற எண்ணத்தினாலேயே, பல இடங்களில் சென்று சென்று ஏடுகளைத் தேடிவந்த நான் தருமபுரம் செல்லாமலே இருந்தேன்.

'இப்பொழுது அவற்றையெல்லாம் எண்ணிக்கொண்டிருந்தால் காரியம் நிறைவேறுவது எப்படி? தமிழ்ப் பணியில் இந்த ஸம்பிரதாயங்களைப் பார்ப்பது அவசியமன்று. நமக்கு அகௌரவம் நேர்ந்தாலும் பெரிதன்று; நம் காரியம் நிறைவேறினால் அதுவே பெரிய கௌரவம்' என்று நினைத்துத் தருமபுரத்திற்குச் செல்லத் துணிந்தேன்.

கும்பகோணத்தில் நான் வேலையிலிருந்த காலம் அது. அக்காலத்தில் திருவாவடுதுறையில் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் 17-ஆம் பட்டத்து ஆதீனகர்த்தராக விளங்கினார். அவரிடம் சென்று என் கருத்தைத் தெரிவித்தேன். அவர் என்பால் பேரன்பு உடையவராதலின் மடங்களின் இடையிலேயுள்ள பகைமையைப் பாராட்டாமல், "அப்படியே செய்யலாம்" என்று சொல்லி விடை கொடுத்ததோடு மடத்தின் முக்கிய காரியஸ்தராகிய ஸ்ரீ பொன்னுசாமி செட்டியாரென்பவரையும் உடன் அனுப்பினார்; வண்டி முதலியவற்றையும் அனுப்பினார்.

அன்று சனிக்கிழமை. காலையில் ஏழுமணிக்கு நான் பொன்னுசாமி செட்டியாருடன் தருமபுரம் சென்றேன். அந்த ஊரை அதற்குமுன் பாராதவன் ஆதலின் அதனை முதன் முதலில் பார்க்கும்போது எனக்குச் சிறந்த இன்பம் உண்டாயிற்று. காவிரிக்கரையில் உள்ள அவ்வூரின் இயற்கையழகைக் காணும்போது சோழநாட்டின் பெருமையைப் புலவர்கள் வருணித்திருக்கும் பகுதிகள் நினைவுக்கு வந்தன.

மடத்திற்குச் சென்றேன். அங்கே நிலவிய ஒழுங்கான அமைப்பும் தவக்கோலம் பூண்டிருந்த தம்பிரான்களின் கூட்டமும் என் உள்ளத்தைக் கவர்ந்தன. திருவாவடுதுறைமடத்தில் அத்தகைய காட்சிகளைக் கண்டு ஈடுபட்டவனாதலின் தருமபுரத்திலும் அவற்றைக் கண்டபோது எனக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாயிற்று. 'இதுகாறும் இங்கே வாராதது ஒரு குறையே' என்றுகூட நான் எண்ணலானேன்.

என் வரவைச் சொல்லியனுப்பிவிட்டு மடத்தினுட் சென்றேன்.

அங்கே ஆதீனத் தலைவர்களாகிய ஸ்ரீ மாணிக்கவாசகதேசிகர் ஒரு சாய்வு நாற்காலியிலே சாய்ந்துகொண்டிருந்தனர். நான் அவர் அருகிலே போய்க் கையுறையாகக் கொண்டுவந்திருந்த கற்கண்டுப் பொட்டலத்தை அவருக்கு முன் வைத்துவிட்டு நின்றேன். என்னைக் கண்டும் அவர் ஒன்றும் பேசவில்லை. வெறுப்பின் அறிகுறியாக இருக்கலாமென்றெண்ணினேன்; 'திருவாவடுதுறை மடத்திற்கு வேண்டியவர் இங்கே வரலாமா? எதற்காக வந்தீர்?' என்று கடுமையாகக் கேட்டுவிட்டால் என் செய்வது என்ற அச்சம் வேறு என் உள்ளத்தில் இருந்தது. பேசாமல் அரைமணி நேரம் அப்படியே நின்றேன். தேசிகர் ஒன்றும் பேசவில்லை. நான் மெல்லப் பேசத் தொடங்கினேன்; "நான் கும்பகோணம் காலேஜில் தமிழ்ப்பண்டிதனாக இருந்துவருகிறேன். தமிழ்நூல்களை ஆராய்ந்து பதிப்பிக்கத் தொடங்கி யிருக்கிறேன். இப்பொழுது பதிப்பிப்பதற்காகப் பத்துப்பாட்டு என்னும் சங்க நூலொன்றை ஸித்தம் செய்து கொண்டிருக்கிறேன். அதில் இடையிலே ஒரு பாகம் சிதைவாக இருக்கிறது. பல இடங்களில் தேடித்தொகுத்த சுவடிகளில் அந்தப் பாகம் காணப்படவில்லை. இந்த ஆதீனத்தின் பெருமையை நான் நன்றாக அறிந்தவன். பல பெரியோர்கள் இங்கே இருந்தார்களென்பதையும் உணர்ந்தவன். இந்த ஆதீனவித்துவானாக இருந்த சம்பந்தசரணாலயர் இயற்றிய கந்தபுராணச் சுருக்கத்தைப் படித்து இன்புற்றிருக்கிறேன். கவிதா சார்வபௌமராகிய துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளுடைய ஆசிரியர் இந்தமடத்தில் இருந்த வெள்ளியம்பலவாண முனிவரென்பவரே. இன்னும் பல வித்துவான்கள் இந்த மடத்தின் ஆதரவுபெற்றுச் சிறந்த நிலையில் இருந்திருக்கிறார்கள்; பல நூல்களை இயற்றியிருக்கின்றார்கள். ஆதலால் இங்கே பழங் காலந் தொடங்கிப் பல அருமையான ஏட்டுச் சுவடிகள் இருக்கும். அவற்றைப் பார்க்கவேண்டுமென்ற அவா எனக்கு நெடுநாட்களாக இருந்தது. இப்பொழுது ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது. இந்த இடத்திற்கு வந்தால் சிதைந்த பாகம் கிடைக்குமென்றெண்ணி வந்தேன். ஸந்நிதானம் கட்டளையிட்டால் நான் வந்த காரியத்தைக் கவனித்துக்கொண்டு செல்வேன். மடத்துக் காரியஸ்தர்கள் சிலரும் உடன் இருந்தால் நான் விரைவில் ஏட்டுச் சுவடிகளைப் பார்க்க அநுகூலமாக இருக்கும். இந்த உபகாரத்தினால் தமிழுக்குப் பெரிய சிறப்பு ஏற்படும். ஸந்நிதானத்தின் நன்றியை என்றும் மறவாமல் இருப்பேன்" என்று சொன்னேன்.

இவ்வளவையும் கேட்டபிறகு அவர் தலை நிமிர்ந்தார். 'என்ன சொல்லுவாரோ?' என்று அப்பொழுதும் என் நெஞ்சம் படபடத்தது. தலை நிமிர்ந்தபடியே அவர் சிறிது நேரம் இருந்தார். ஏதோ யோசிப்பவர் போலக் காணப்பட்டார். பிறகு, "நாளை வரலாமே" என்று அவர் வாக்கிலிருந்து வந்தது. 'பிழைத்தேன்' என்று நான் எண்ணிக்கொண்டேன். 'இந்தமட்டிலும் அநுமதி கிடைத்ததே' என்று மகிழ்ந்தேன். "உத்தரவுப்படியே செய்கிறேன்" என்று சொல்லி மறுநாள் வருவதாக விடை பெற்றுக் கொண்டு பொன்னுசாமி செட்டியாருடன் மாயூரம் சென்றேன். தருமபுரம், மாயூரத்திற்கு அருகில்தான் இருக்கிறது.

மாயூரத்தில் அக்காலத்தில், சிறந்த தமிழ் வித்துவானும் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளை யவர்களுடைய மாணுக்கரும் முன் ஸீப் வேலையில் இருந்து உபகாரச் சம்பளம் பெற்றவருமாகிய வேதநாயகம்பிள்ளை இருந்தார். அவர் வீட்டிற்குப் போனேன். அவர் நோய்வாய்ப்பட்டு மிக மெலிந்திருந்தார். அவரைப்பார்த்து, அவரது உடல்நிலை கண்டு வருந்தினேன். அவர், "நான் இப் பொழுது வியாதியோடு சண்டை போடுகிறேன்; என்னோடு அது சண்டைபோடுகிறது. யார் ஜயிக்கிறார்களோ; தெரியவில்லை" என்று சொன்னார். வியாதியே ஜயித்ததனால் அதன்பின் சில மாதங்களில் அவர் இவ்வுலகவாழ்வை நீத்தார்.

அன்று வேதநாயகம் பிள்ளையோடு பேசிப் பொழுது போக்கினேன். இராத்திரி முழுதும் எனக்குச் சரியாகத் தூக்கமே வரவில்லை. என் மனம் தருமபுரத்திலே இருந்தது. ஏடுகளைக் குவியல் குவியலாக என்முன் கொண்டுவரச்செய்து பார்ப்பதாகவும் எவ்வளவோ அரிய நூல்கள் இருப்பதாகவும் மனத்திலே பாவனை செய்துகொண்டேன். அந்த ஓர் இரவு ஒரு யுகமாக இருந்தது. எப்பொழுது விடியுமென்று காத்திருந்தேன்.

விடிந்தது. உடனே பொன்னுசாமி செட்டியாருடன் புறப்பட்டு 7 மணிக்குள் தருமபுரம் போனேன். அன்றும் ஸ்ரீ மாணிக்கவாசக தேசிகர் முதல் நாள் இருந்த கோலத்திலேயே இருந்தார். அதே சாய்வு நாற்காலி; அதே மௌனமான நிலை. நானும் முதல் நாளைப் போலவே அருகிலே போய் நின்றேன்.

சிறிது நேரத்திற்குப் பின் அந்த மடத்திற் காறுபாறுக இருந்த ஸ்ரீசாமிநாதத் தம்பிரானென்பவர் அவ்வழியே வந்தார். அவரோடு எனக்குப் பழக்கம் இல்லாவிடினும் என்னைப்பற்றி அவர் நன்றாக அறிந்திருந்தார். அவர், நான் தமிழ் நூல்கள் விஷயத்தில் மேற்கொண்ட உழைப்பையும் திருவாவடுதுறை யாதீனத்

திற்கு வேண்டியவ னென்பதையும் தேசிகருக்கு எடுத்துச் சொன்ஞர். கேட்ட தேசிகர் மெல்ல, "சரி; ஆகவேண்டிய காரியத்தைக் கவனிக்கலாமே" என்று உத்தரவிட்டார்.

சில ஓதுவார்களையும் கணக்குப் பிள்ளைகளையும் எனக்கு உதவி செய்யும்படி தேசிகர் கட்டளையிட்டார். அவ்வாதீனத்துப் புஸ்தக சாலைக்கு அவர்கள் என்னை அழைத்துச் சென்றார்கள். அங்கே பல ஏட்டுச்சுவடிகள் இருந்தன. எல்லாவற்றையும் எடுத்து ஓரிடத்தில் தொகுத்துவைத்தார்கள்; ஆயிரக்கணக்கான ஏட்டுச் சுவடிகள் இருந்தன. அவற்றைக் கண்டவுடனே எனக்கு வியப்பு உண்டாயிற்று. எல்லாம் பழைய ஏடுகளே; புதிதாக எழுதப் பட்ட ஏடு ஒன்றேனும் அதிற் காணப்படவில்லை. பலகாலமாகப் போற்றிப் பாதுகாக்கப்பட்ட அவ்வேடுகளை ஒவ்வொன்றாகச் சோதிக்கத் தொடங்கினேன்.

உடனிருந்தவர்களில் ஒரு சாரார் ஏடுகளின் கட்டை அவிழ்த்துக் கொடுத்தார்கள். நான் ஒவ்வொன்றாகப் பார்த்தேன். பார்த்தவுடன் அவற்றை மீண்டும் ஒரு சாரார் நன்றாகக் கட்டி வைத்தார்கள். ஏடுகளைப் பார்ப்பதும் ஒழுங்காகக் கட்டுவது மாகிய காரியங்களில் அவர்களுக்கு நல்ல பழக்கம் இருந்தது.

ஏடுகளைப் பார்த்துக்கொண்டே வந்தேன். ஸ்தல புராணங் கள், மகா புராணங்கள், பிரபந்தங்கள், சைவசாஸ்திரங்கள் முதலிய பலவகைகள் இருந்தன. தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்கள் உரைகளுடன் இருந்தன. சில நூல்களிற் பல பிரதிகளைக் கண்டேன். சிவதருமோத்திரத்தில் மட்டும் நூற்றுக்கு மேற்பட்ட பிரதிகள் இருந்தன. அங்ஙனம் இருப் பதற்குக் காரணம் என்னவென்று நான் விசாரித்தேன். "இங்கே துறவு பூண்பவர்களில் ஒவ்வொருவருக்கும், காஷாயம் கொடுப் பவர்கள் இந்த நூலின் பிரதி ஒன்றைக் கொடுப்பது இவ் வாதீனத்தில் வழக்கம். அதனால் இவ்வளவு பிரதிகள் சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றன" என்று உடனிருந்தவர்கள் சொன்னார் கள். என்னுடைய தமிழாசிரியாகிய ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளை யவர்கள் ஒருமுறை சிவதருமோத்திரச் சுவடி எங்கும் கிடைக்கா மல் அதனைப் பெறுவதற்கு எவ்வளவோ சிரமப்பட்டுக் கடைசியில் ஒரு மாணாக்கர் செய்த தந்திரத்தால் மிகவும் அரிதாகச் சிலநாள் மட்டும் வைத்துக்கொள்ளும்படி ஒரு பிரதியைப் பெற்றார்கள்.[1] அவ்வரலாறு அப்பொழுது எனக்கு ஞாபகத்துக்கு வந்தது.

---

[1] ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளை யவர்கள் சரித்திரம். பாகம் 1, பக்கம், 108 - 16.

ஏடுகளைச் சோதித்துவரும்போது நான் பல அருமையான நூல்களைப் பார்த்தேன். அவற்றைப் பெறுவதில் எனக்கு விருப்ப மிருப்பினும் அதிகப் பழக்கமில்லாத அவ்விடத்திலுள்ளவர்கள் தருவார்களோ மாட்டார்களோ என்று அஞ்சி வாளாவிருந்தேன். அன்றியும் என்னுடைய நாட்டம் முழுவதும் பத்துப்பாட்டிலே தான் பதிந்திருந்தது. மிக விரைவாகச் சுவடிகளைப் பார்த்து வந்தேன். பகல் பன்னிரண்டு மணி வரையிலும் பத்துப்பாட்டு அகப் படவில்லை. பல நூறு சுவடிகளைப் பார்த்தேன்; பயனில்லை. இடை யிலே சிறிது நேரம் உண்ணுவதிற் போயிற்று. அதைத் தவிர மற்றக் கால முழுவதும் சுவடிகளைப் பார்த்துக்கொண்டே யிருந்தேன்.

நாழிகை ஆகிக்கொண்டிருந்தது; பல சுவடிகள் சோதிக்கப் பட்டன; பத்துப்பாட்டு மட்டும் அகப்படவில்லை.

சூரியன் மறைந்தான். அன்று சூரியோதய காலத்தில் என் மனம் தருமபுர மடத்து ஏட்டுச் சுவடிகளைக் காண்பதில் ஊக்க மும், நாம் தேடியது கிடைத்துவிடும் என்ற நம்பிக்கையும் உடைய தாக இருந்தது. சூரிய அஸ்தமன காலத்திலோ என் நம்பிக்கை தளர்ந்தது. குறிஞ்சிப் பாட்டின் குறை நிரம்பாமலே போய் விடுமோ என்ற ஏக்கம் தலைப்பட்டது. விடுபட்ட மலர்களை நாம் காணக் கொடுத்துவைக்கவில்லையே என்று இரங்கினேன். குறிஞ்சிப் பாட்டிலுள்ள மலர்களெல்லாம் ஒரு மாலையாக என் அகக்கண் முன் வந்து நின்றன. அம்மாலையின் இடையிலே சில மலர்கள் உதிர்ந்தமையின் அது குறையாக இருப்பது போன்ற தோற்றத்தையும் நான் கண்டேன். 'ஐயோ! இந்த மாலை நிரம்புமா?' என்று எண்ணி எண்ணி நைந்தேன்.

இரவு வந்துவிட்டது. குத்து விளக்குகளை ஏற்றிக் கொணர்ந்தார்கள். அவற்றிலுள்ள சுடரைத் தொழுதுவிட்டு நான் மேலும் பார்க்கத் தொடங்கினேன். மணி ஏழு ஆயிற்று; அதன் பின் எட்டு அடித்தது. மனக்கலக்கத்தோடு பார்த்துக் கொண்டே வந்தேன். 'இந்தத் தமிழ்நாடுதான் எவ்வளவு துர திர்ஷ்டமுடையது! இவ்வளவு அருமையான நூல்களைப் பறி கொடுத்துத் தவிக்கின்றதே!' என்று எண்ணி உருகினேன். ஒன் பது மணியும் ஆயிற்று.

அப்பொழுது ஆதீனத்தலைவராகிய ஸ்ரீமாணிக்கவாசக தேசிகர் அங்கே வந்தார். அன்று அவர் மிளகுக்காப்புச் செய்து கொண்ட தினம். சடையுடையவர்கள் எண்ணெய் தேய்த்துக்கொள் வது வழக்கமன்று. மிளகு முதலிய சில பொருள்களைப் பால் விட்டு அரைத்துத் தேய்த்துக்கொள்ளுவார்கள். அதற்குத்தான் மிளகுக்காப்பு என்றுபெயர். தருமபுர ஆதீனத்தலைவர்கள் சடா

தாரிகள். மாணிக்கவாசகதேசிகர் மிளகுக்காப்புச் செய்துகொண்டமையால் அவருடைய சடை ஈரமாக இருந்தது. அதைப் புலர்த்துவதற்காக ஒரு தவசிப்பிள்ளை அதைக் கையில் தாங்கி நின்றான். மற்றொருவன் தூபமுட்டியைப் பிடித்துக்கொண்டு அதற்குப் புகையூட்டிக்கொண்டு நின்றான். வேறொருவன் தூபமுட்டியில் தசாங்கம், சாம்பிராணி முதலியவற்றைப் போட்டுக் கொண்டிருந்தான்.

இந்த நிலையில் வந்துநின்ற தேசிகரைக் கண்டதும் நான் எழுந்தேன். அவர் நின்றபடியே கையமர்த்தி, "நீங்கள் அப்படியே இருந்து பாருங்கள்" என்று சொல்லிவிட்டுச் சிறிதுநேரம் நின்றுகொண்டிருந்தனர். அப்பால், "ஏதாவது கிடைத்ததா?" என்று கேட்டார். நான் மிக்க கவலையோடு, "பல அருமையான ஏடுகள் இருக்கின்றன. ஆனாலும் எனக்கு எது வேண்டுமோ அது கிடைக்கவில்லை. இங்கே இல்லையென்றால் வேறிடங்களில் இருக்க நியாயமில்லை. என்னுடைய அதிர்ஷ்டம் இப்படியிருக்கிறது" என்று சோர்வு புலப்படும் தொனியில் விடையிறுத்தேன்.

"இருந்திருக்கும். யாராவது கொண்டுபோயிருப்பார்கள்" என்று அவர் சொன்னார்.

"இந்த இடத்தைத்தவிரச் சுவடிகள் இருக்கும் இடம் இந்த மடத்தில் வேறு உண்டோ?" என்று கேட்டேன். வேலைக்காரர்கள் இல்லையென்று சொன்னார்கள்.

அப்பொழுது, முன்னே குறிப்பிட்ட காறுபாறு ஸ்ரீசுவாமிநாதத் தம்பிரான் அங்கே வந்தார். எனக்கு வேண்டிய சுவடி கிடைக்காமல் வருத்தத்தோடு நான் சொல்லிக்கொண்டிருந்ததைக் கேட்ட அவர், "சில தினங்களுக்குமுன் பதினெட்டாம் பெருக்கில் காவிரியிற் கொண்டுபோய் விட்டுவிடுவதற்காகப் பல பழைய கணக்குச் சுருணைகளையும் சிதிலமான வேறு சுவடிகளையும் கட்டிச் சிறிய தேரில் வைத்துக்கொண்டு போனார்கள். அதில் சில பழைய ஒற்றை ஏடுகளைக் கண்டேன். ஒருவேளை மடத்துத் தஸ்தவேஜாக இருக்கலாமென்றெண்ணி அவைகளைமட்டும் எடுத்துக் கட்டி என் பீரோவின்மேல் வைக்கச் செய்தேன். அவைகளில் ஏதாவது இருக்கிறதா என்று பார்க்கலாம்" என்று சொன்னார்.

"பார்க்கிறேன். அவற்றைக் கொண்டுவரச் செய்தால் அனுகூலமாக இருக்கும்" என்று நயந்த குரலில் நான் கூறினேன். உடனே அவர் உத்தரவிடவே ஒருவர் சென்று ஒரு கட்டு ஒற்றை ஏடுகளை எடுத்துக்கொணர்ந்து என்முன் போட்டார். மிக்க ஆவலோடு அவற்றைப் பார்க்கத் தொடங்கினேன். அந்தக்கட்டில் பலவகையான அளவுள்ள ஒற்றை ஏடுகள் இருந்தன. சிலவற்றில்

கணக்கு எழுதப்பட்டிருந்தது; சிலவற்றிற் பெரிய புராணச் செய்யுட்கள் காணப்பட்டன; இலக்கணச் சுவடிகளின் ஏடுகள் சில காணப்பட்டன. அவற்றைப் பார்த்துவந்தேன்.

ஓர் ஏட்டைப் படித்துப் பார்த்தேன். அது பத்துப்பாட்டு ஏடாக இருந்தது. அக்காலத்தில் பத்துப்பாட்டு உரை முழுவதும் என் ஞாபகத்தில் இருந்தது. அதனால் அந்த ஏட்டிலிருந்தது பத்துப்பாட்டு உரையே என்பதைக் கண்டுகொண்டேன். என் உள்ளம் சிறிதே ஊக்கம் பெற்றது.

அப்பால் அந்த ஏட்டின் அளவில் இருந்த வேறு ஏடுகளையெல்லாம் தொகுத்தேன். அவற்றைப் படித்துப் பார்க்கவோ நேரமில்லை. மணி பத்துக்குமேல் ஆயிற்று. மறுநாள் நான் கும்பகோணத்தில் இருக்கவேண்டியவனாதலின் அந்த ஒற்றை ஏடுகளை அப்படியே எடுத்துக்கொண்டுபோய் ஆராயலாமென்று எண்ணினேன். ஆதீனத் தலைவரிடம், "இப்பொழுது நாழிகையாய் விட்டது. நான் விடியற்காலையில் மாயூரத்தில் ரயிலேறிக் கும்பகோணம் போகவேண்டும். ஸந்நிதானத்தில் உத்தரவானால் இந்த ஒற்றை யேடுகளை எடுத்துக்கொண்டுபோய்ப் பார்க்கிறேன். இதில் எனக்கு வேண்டியவைகளை மட்டும் பொறுக்கிக்கொண்டு கணக்கு முதலியவை இருந்தால் ஜாக்கிரதையாகக் கொண்டுவந்து சேர்த்து விடுகிறேன். இதில் சிறிதும் ஸந்தேகம் கொள்ளவேண்டாம்" என்று உறுதிமொழி கூறினேன்.

"அப்படியே செய்யலாம். அதில் என்ன தடை?" என்று தேசிகர் அன்போடு உடம்பட்டனர். முதல்நாள் வந்தபோது அவர் இருந்த நிலையையும் அப்பொழுது அவர் அன்போடு கவனித்துக்கொண்டிருந்து ஒற்றை ஏடுகளைக் கொண்டுபோகும்படி அநுமதி யளித்ததையும் நினைக்கும்போது எனக்கு வியப்புண்டாயிற்று. "எல்லாம் திருவருட் செயலே" என்று எண்ணி ஆறுதல் அடைந்தேன்.

ஐம்பது அறுபது ஒற்றையேடுகளை அப்படியே கட்டிக்கொண்டு எல்லோரிடமும் விடைபெற்றுப் புறப்பட்டு மாயூரம் வந்து சேர்ந்தேன். அன்றிரவு நான் உணவு உட்கொண்டேனோ, இல்லையோ- ஞாபகம் இல்லை.

மறுநாட் காலை ரயிலேறிக் கும்பகோணம் வந்து சேர்ந்தேன். கொண்டு வந்த ஒற்றையேடுகளைப் பிரித்துப்பார்த்தேன். சில பத்துப்பாட்டு உரை ஏடுகள் ஒன்றற்கொன்று சம்பந்தமில்லாமல் கலந்திருந்தன. ஆத்திரத்தோடு ஒவ்வொன்றாகப் பார்த்தேன். நான் எந்தப்பாகம் காணாமல் தவித்தேனோ அதை ஓர் ஏட்டிலே பார்த்தேன். என் உச்சிமுதல் உள்ளங்கால் வரையில் ஒரே மயிர்க்கூச்சல்

உண்டாயிற்று. என் கண்களைத் துடைத்துத் துடைத்துப் பார்த்தேன்; ஏட்டையும் துடைத்துப் பார்த்தேன்.

குறிஞ்சிப் பாட்டுத்தான் என்பதில் சந்தேகம் இல்லை; விடுபட்ட மலர்களையே நான் அதில் கண்டேன்:

> [1]'தேமா---தேமாம்பூ, மணிச்சிகை—செம்மணிப்பூ, உரிது நாறு அவிழ்தோத்து உந்தூழ்—தனக்கு உரித்தாக நாறும் விரிந்த கோத்தினையுடைய பெருமூங்கிற் பூ.'

என்ற சிறுபகுதியே விடுபட்டிருந்தது. என்மனம் ஆறுதலுற்றது. இழந்த குழந்தையைக் கண்டெடுத்த தாய்க்கு உண்டாகும் மகிழ்ச்சியைத்தான் அதற்கு உபமானமாகக் கூறலாம்.

விடுபட்ட மலர்கள் மூன்றே. ஆனாலும் அந்த மலர்களைத் தேடி என் மனம் அலைந்தது. மூன்று என்பது அதற்குமுன் எனக்குத்தெரியாது. மூன்றாக இருந்தால் என்ன? முப்பதாக இருந்தால் என்ன? குறை குறைதானே?

அப்பால் குறிஞ்சிப்பாட்டு முழுமையும் செப்பஞ்செய்து கொண்டேன். குறை நிரம்பிய குறிஞ்சிப்பாட்டை இப்பொழுது பத்துப்பாட்டுப் பதிப்பிற் காணலாம்.

பத்துப்பாட்டு ஏடுகளை மட்டும் தனியே எடுத்துவைத்துக் கொண்டு மற்றவற்றை நான் வாக்களித்தபடியே தருமபுரம் மடத்திற்கு அனுப்பிவிட்டேன். அவற்றை அனுப்பும்போது எனது மகிழ்ச்சியையும் நன்றியறிவையும் தெரிவித்து ஒரு கடிதமும் எழுதினேன்.

தருமபுரமடத்தில் இப்பகுதி கிடைத்ததைப் பத்துப்பாட்டுப்பதிப்பிலும் குறித்திருக்கிறேன்.[2] அங்கே கிடைத்த ஒற்றை இதழ்களில் உதிர்ந்த அம்மலர்களைக் காணாமல் இருந்தால், பத்துப்பாட்டின் முதற்பதிப்பு அச்சிறு குறையோடேதான் வெளிவந்திருக்கும். அக்குறை நேராவாறு ஆண்டவன் காப்பாற்றினான். குறிஞ்சிப்பாட்டு, குறை நிரம்பப்பெற்றது; அதனால்,

> [3]"ஆன்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
> சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தேரியல்[4]"

ஆகிய பத்துப்பாட்டு முழு உருவத்தோடு வெளிவந்து மணக்கின்றது.

---

1. குறிஞ்சிப்பாட்டு, 64, 65, உரை.
2. 3-ஆம் பதிப்பு, பக்கம் 489, அடிக்குறிப்புப் பார்க்க.
3. நச்சினார்க்கினியர் உரைச்சிறப்புப்பாயிரம்.
4. தெரியல் - மாலை.




# மொழிவளர்ச்சிபற்றித் தொல்காப்பியர் கொண்ட கருத்துக்கள்

## I

எஸ். வையாபுரிப் பிள்ளை, பி.ஏ., பி.எல்.
(தமிழாராய்ச்சித்துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்)

தென்னிந்தியாவில் வழங்குந் திராவிட மொழிகளுள்ளே தமிழ் மொழி தனிப்பட்ட சிறப்புடையதாக விளங்குகின்றது. அதன் சிறப்பியல்புகளுள் ஒன்று ஒருவர் கண்ணையும் தப்ப முடியாததாக உள்ளது. தெலுங்கு மொழியை எடுத்துக்கொள்வோமாயின், அதற்குரிய ஆதியிலக்கியமாகிய நன்னைய பாரதம் என்ற நூல் கி. பி. 11-ஆம் நூற்றாண்டில் தோன்றியதாகும். கன்னடமொழியை யெடுத்துக்கொள்வோமாயின், அதற்குரிய ஆதியிலக்கியமாகிய கவிராஜமார்க்கம் என்ற நூல் கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் தோன்றியதாம். மலையாள மொழியை யெடுத்துக்கொள்வோமாயின், அதற்குரிய ஆதியிலக்கியமாகிய உண்ணிநீலிஸந்தேசம் என்ற நூல் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் தோன்றினமை பிரசித்தம். ஆனால் தமிழ் மொழியின் ஆதியிலக்கியங்களோ, இப்போது அறுதியிட் டிருக்கின்றபடி கிறிஸ்துவப்தத்தின் ஆரம்ப காலத்திலே தோன்றியனவாகும். இங்கே ஆதியிலக்கியங்களென்றது இப்போது அகப்படுவனவற்றுள் காலத்தால் முற்பட்டனவற்றையே. இவ்விலக்கியங்களின் திருந்திய வடிவங்களையும் செய்யுளழகுகளையும் முதிர்ந்த பக்குவத்தையும் நோக்குமிடத்து, கிறிஸ்துவப்தத்திற்கு மிகமிக முற்பட்ட காலத்தே தமிழிலக்கியங்கள் உருப்பெறத் தொடங்கி யிருத்தல் வேண்டுமென்று எளிதில் ஊகித்தல் கூடும்.

*தமிழின் தோன்மை*

இத்தொன்மைபற்றி, தமிழ் மக்களாகிய நாமனைவரும் பெருமை மேற்கொள்ளுதல் இயல்பே. இதனினு மிக்கதொரு சிறப்பு நமது மொழிக்கு உள்ளது. திராவிட வகுப்பிற் பிற மொழிகட்குரிய ஆதியிலக்கியங்களெல்லாம் வடமொழி நூல்களின்

வழிவந்தன வாம். உதாரணமாக, தெலுங்கு நூல்களுள் காலத்தால் முந்திய நன்னைய பாரதம் என்ற நூல் வடமொழியிலுள்ள வியாஸ பாரதத்தைப் பின்பற்றியது. தமிழிலக்கியங்களுள் காலத்தால் முந்திய நூல்கள் இப் பெற்றியனவல்ல. இவைகள் பரந்து பட்ட உலகியலறிவும், இயற்கையொடு ஒற்றித்து நின்று அவ்வியற்கை நலன்களனைத்தையும் ஆழ்ந்து நுகரும் உணர்ச்சிவலியும், பொருள்களை நுணுகி யாராய்ந்தறியும் அறிவாற்றலும் உடைய தமிழ்ப் புலவர்கள் தாமே புதுவதாகப் புனைந்த செய்யுட்களால் இயன்றன. புறநானூறு என்ற சங்ககாலத்துத் தொகைநூலை யெடுத்துக்கொள்க. இதன்கணுள்ள செய்யுட்கள் வடமொழி நூலொன்றினைப் பின்பற்றி இயற்றப் பட்டனவென எவரும் கூறுர். இங்ஙனமே பிற தொகைநூல்களும் அமைந்துள்ளன.

பொருண்மைச் சிறப்பு

இது பொருண்மைபற்றிய சிறப்பியல்பு. பெரும்பாலும் இப் பொருண்மை தமிழ்மொழிக்கெனத் தனியுரிமை பூண்டு நிற்பினும், ஒரோ விடங்களில் பிறமொழிநூற் கருத்துக்களோடு ஒப்புமை யுடையதாய் அமைதலுங் கூடும். அருகியே வரற்பாலதாகிய இவ்வொப்புமை தானும் அமைதற் கியலாத பிறிதொரு சிறப்பியல்பு மூன்ருவதாக நோக்கத் தக்கது. தெலுங்கு முதலிய பிறமொழிக்குரிய ஆதியிலக்கியங்கள் வடமொழி யிலக்கணங்களைப் பின்பற்றிய செய்யுட்களால் இயன்றுள்ளன. ஆனல் தமிழ்மொழியிலுள்ள ஆதியிலக்கியங்களாகிய எட்டுத் தொகை நூல்களோவெனின், தமிழிற்கே சிறந்துரியவாய் வடமொழி யிலக்கணவிலக்கியங்களிற் காணப்பெருதவாயுள்ள இலக்கண மமைந்த செய்யுள் வகைகளால் இயன்றுள்ளன. அகவற்பா, கலிப்பா, வெண்பா முதலியன தமிழிற்கே தனித்துரிய செய்யுள் வகைகளாம். இவைகள் தமிழ் மக்களது கருத்து நிகழ்ச்சிக்கும், தொன்றுதொட்டு வந்து வழக்கு நிரம்பிய தொடரமைதிக்கும் தமிழ் மக்களது செவியுணர்விற் கொத்த இசை யினிமைக்கும் பொருந்துமாறு அமைந்தன; தமிழிற்கே தனியுரிமையென முத்திரையிடப்பெற்று வெளிப்போந்து வீறுற்று உலவின.

செய்யுட் சிறப்பு

இங்ஙனமாக இலக்கியத்தொன்மையாலும், இலக்கியப் பொருண்மையாலும், இலக்கியத்துக்குரிய செய்யுள்மரபாலும் திராவிட மொழிகளுக்குள்ளே தமிழ்மொழி சிறப்பியல்களுடையதாதல் காணலாம். இச் சிறப்பியல்களுள் பின்னிரண்டற்கும் அடிப்படையாயுள்ளது யாது என்ற கேள்வி யெழுதல் இயல்பு. தமிழ்மொழியின் இயற்கையில் அமைந்த தத்துவமொன்றே இச்சிறப்பியல்களாகப் பரிணமித்தது

தமிழின் தனிப்பண்பு

என்றலே அமைவுடைத்து. இத் தத்துவத்தை *Individuality* அல்லது *Genius* என்று ஆங்கில அறிஞர் கூறுவர். தமிழின் தனிப்பண்பு என்று நாம் இதனைக் குறிப்பிடலாம்.

தமிழின் தனிப் பண்பு என்பது பற்றிச் சிறிது கூர்ந்து ஆலோசித்தல் இன்றியமையாதது. முதலாவது, இப்பண்பு யாவர்க்கும் எளிதிற் புலப்படக்கூடியதாய்ப் பிறமொழிகளின் பண்புகளினின்று எளிதில் வேறு காணக் கூடியதாய்த் தெளிவாயுள்ளது. இரண்டாவதாக, இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழ் மொழியின் சரிதத்தை ஒருவகையாக நாம் அறிந்திருக்கின்றோம். எத்தனையோ மொழிகளோடு கலந்துறவாட வேண்டும் நிலைமை அதற்கு ஏற்பட்டது; எத்தனையோ சமயப் போராட்டங்களால் அதன் இலக்கிய நெறி அலைப்புண்டது; எத்தனையோ உட்கலகங்களாலும் புறக்கலகங்களாலும் தமிழ் மொழி வழங்கிய நிலம் தாக்குண்டு அதிர்ந்தது. எனினும் இப் பண்பு தமிழ்மொழியின் சரிதத்தில் ஓரிடத்தேனும் காணப் படாமற் போகவில்லை; யாண்டும் முளைத்துக் காணப்படுகின்றது. மூன்றாவதாக, இப்பண்பு மொழிவளர்ச்சியின் கதியையும் இலக்கிய வளர்ச்சியின் கதியையும் ஒருவாறு நெறிப்படுத்தி, அவை இன்ன வாறு செல்லவேண்டுமென்று நியமனஞ் செய்கின்றது.

தனிப்பண்பின் இயல்பு

இந்நியமத்தைக் கடப்பது யாவர்க்கும் அசாத்தியமாயிற்று. இயற்கைச் சக்திகளை வெல்லவேண்டுமாயின் இயற்கைச் சக்திகளைக் கொண்டே வெல்லுதல் வேண்டும். இயற்கைச் சக்திகளை ஒரு நெறிப்படுத்த வேண்டுமாயின், இயற்கைச் சக்திகளைக் கொண்டே அவ்வாறு செய்தல் இயலும். இயற்கைச் சக்திகளுக்கு அடங்கினாலன்றி இயற்கையை வெல்லுதல் கூடாது. பிரகிருதி சாஸ்திரத்தில் நிலைகண்ட இவ்வுண்மையோடொத்து, தமிழின் தனிப் பண்பிற்கு அடங்கியே, மொழியிலும் இலக்கியத்திலும் மாறுபாடுகள் இடம் பெறுவனவாயின.

இவ்வாறு கூறிய அளவில், கைகாலை அசைக்க வொட்டாத படி தளைக்கும் விலங்கு போன்று இத் தனிப்பண்பு உளதாயிற் றென்று எண்ணுதல் தவறாகும். இப்பண்பு ஒரு கடுந்தளை போன்ற தாயின், வளர்ச்சி யென்பதும் அபிவிர்த்தி யென்பதும் இல்லாமற் போய்விடும். இவ்விரண்டும் இல்லையெனின், வெகு சீக்கிரத்தில் கேடுவிளையுமென்பது திண்ணம். கேடுறாது வளர்ந்தோங்கிவந்த தன்மையினாலும் அவ்வப்போது புதியனவாக எழுந்த நூல்களாலும் மொழி வளர்ச்சியினாலும் மேற்குறித்த தனிப்பண்பு மொழி வளர்ச்சி முதலியவற்றிற்கு இடையூறு விளைக்காதபடி பயன்பட்டு வந்ததென்றே நாம் கொள்ளவேண்டும். நமது சமுதாய வளர்ச்சி

யிலே இரண்டு வகையான சக்திகள் உளவாதலைக் காணலாம். ஒன்று வளர்ச்சியை மட்டுங் குறியாக உடையதாய்ப் பிறிதொன்றனையுங் கணியாதபடி நம்மை ஈர்த்துச் செல்லும் சக்தி; இதனை *liberalism* என்ற ஆங்கில பதத்தாற் குறிப்பிட்டால் எளிதில் விளங்கக் கூடும். பிறிதொரு சக்தி வளர்ச்சியை மட்டுப்படுத்துப் பூர்வநிலையை வலிமையுறுவித்தலைக் குறியாகவுடையது. இதனை *conservatism* என்ற ஆங்கிலப் பதம் நன்கு விளக்கவல்லது. இந்த இரண்டுவகையான சக்திகளும் சமுதாய முன்னேற்றத்திற்கு இன்றியமையாதவை. இந்த இரண்டும் ஒன்றோடொன்று போராடியே முன்னேற்றம் சிறிதுசிறிதாய் நிகழ்வதாகும். இரண்டாவது கூறிய *conservatism* என்னும் நியமசக்தி யில்லையாயின், சமுதாய நிலை கெட்டுப் போய்விடும். இந்நியம சக்தியைப் போன்றதே மேற்குறித்த தனிப்பண்பு. எனவே உண்மையான மொழி வளர்ச்சிக்கு இடந்தந்து தனது பூர்வநிலையைப் பாதுகாத்து வந்தது இத் தனிப்பண்பு என்று நாம் ஐயமறக் கொள்ளலாம்.

'மொழிவளர்ச்சி' என்று கூறி வந்தேன். இம்மொழிவளர்ச்சி தானும் எத்தகையதென நோக்குதல் வேண்டும். மிகப் பூர்வ

**மொழிவளர்ச்சியின் காரணங்கள்:**
**1. வாணிகம்.**

காலந்தொட்டு, நந்தமிழ்நாடு வாணிகத்திற் சிறந்ததொன்றா யிருந்துவந்தது. கிரேக்கர்களும், ரோம் நகரத்தினரும், அராபியரும், சீன தேசத்தவரும் வாணிகத்தின் பொருட்டுத் தமிழ் நாடு வந்து, தங்கள் பண்டங்களை விற்று முத்து முதலிய தமிழ் நாட்டுப் பண்டங்களைக் கொண்டு தங்கள் தங்கள் தேசத்திற்குச் சென்று வருவாராயினர்.

'குடதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு
குண திசை மருங்கிற் காரகில் துறந்து'

என்று வருஞ் சிலப்பதிகார வடிகள் இவ்வாணிகத்தின் தன்மையை ஒருவாறு விளக்குவன. இவ் அயல்நாட்டினருள் ஒருசிலர் தமிழ் நாட்டிற் பலவிடங்களிலும் நிலையாய்க் குடியிருந்தோருமுளர். இவர்கள் வாழ்தற்கெனத் தனியே அமைக்கப்பட்ட ஊர்ப்பகுதிகளும் காவிரிப்பூம்பட்டினம் முதலிய நகரங்களில் இருந்தனவென்பது

'கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
பயனற வறியா யவன ரிருக்கையும்' (சிலப். 5, 9-10)

எனச் சிலப்பதிகாரம் கூறுதலால் அறியப்படுகின்றது. யவனர் முதலிய அயல் நாட்டு வணிகர்கள் கூட்டுறவினால் தமிழ்மொழி நல்ல பயனை யடைந்திருத்தல் வேண்டும். தமிழ்ச்சொற்களைத் திற்கும் சொல்லாக்கங் காட்டும் நூலொன்று தக்க ஆராய்ச்சியின்

பயனாக வெளிவருமாயின், அப்பொழுது பிறமொழி மக்களால் தமிழ் அடைந்துள்ள வளத்தினை யளந்தறிதல் கூடும். இப்பொழுது ஒரு சொல்லை மாத்திரம் குறிப்பிட்டு அமைகின்றேன். 'எழினி' என்ற சொல்லைத் தமிழறிஞர்கள் அறிவார்கள்; இச்சொல் 'திரைச்சீலை' என்று பொருள் படும்; இது 'யவனிகா' என்ற சொல்லின் திரிபாகும். எனவே இச்சொல் யவனர்களோடு தொடர்புடையதென நன்குணரலாகும்.

வாணிக மூலமாக ஏற்பட்ட மொழிவளர்ச்சி யொருபாலிருப்ப, தமிழ் மக்கள் தந்நாட்டிற் குடியேறிய அந்நியர்களோடு பயின்று வந்தமையாலும் அடுத்துள்ள பிற நாடுகளுக்குச் சென்று வாழ்ந்து பின் திரும்பித் தம்மவரோடு கலந்திருந்தமையாலும், மொழி வளர்ச்சி மற்றொருபால் ஏற்பட்டது. இவ்வாறு புகுந்த சொற்களுள் பெரும்பாலனவற்றைத் திசைச் சொற்களெனப் பண்டையாசிரியர்கள் குறியீடு செய்துள்ளார்கள். தொல்காப்பியனாரும்,

**2. பிறநாட்டினரோடு கூட்டுறவு.**

'இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே' எனவும்

'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி' எனவும்

கூறுகின்றனர். இங்கே பன்னிருநிலமென்றது

'தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா வதன்வடக்கு—நன்றாய
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்'

எனக் கூறப்பட்ட பன்னிரண்டு கொடுந் தமிழ் நாடுகளையாம். தமிழொழிந்த பிறதேயத்து மொழிகளை இலக்கண நூலார் பதினேழ்நிலத்து மொழியெனக் குறிப்பிடுவர். பதினேழ் நிலங்கள்

'சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகம்
கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலிங்கம் கலிங்கம்வங்கம்
கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலம்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்நிலந் தாமிவையே'

என மயிலைநாதர் கூறுவர். தொல்காப்பியனாரது ஆசிரியராகிய அகத்தியனார் காலத்தும் இத்தேயங்கள் பலவற்றினின்றும் சொற்கள் தமிழிற் புகுந்தன என்ற வுண்மை

'கன்னித் தென்கரைக் கட்பழந் தீவஞ்
சிங்களங் கொல்லங் கூவிள மென்னு
மெல்லையின் புறத்தவு மீழம் பல்லவம்
கன்னடம் வடுகு கலிங்கந் தெலிங்கம்

கொங்கணங் துளுவங் குடகங் குன்ற
மென்பன குடபா லிருபுறச் சையத்
துடனுறைபு பழகுங் தமிழ்திரி நிலங்களும்
முடியுடை மூவரு மிடுநில வாட்சி
யரசுமேம் பட்ட குறுநிலக் குடிகள்
பதின்மரு முடனிருப் பிருவரும் படைத்த
பன்னிரு திசையிற் சொன்னய முடையவும்'

என்று மயிலைநாதர் காட்டும் அகத்தியத்தால் உணரலாகும். இவ் வடிகளால் தமிழ்நாட்டோடு தொடர்புடைய பிறநாடுகளும் அப் பிறநாட்டு மொழிகளும் ஒருவாறு அறியக் கிடக்கின்றன.

வாணிகங் காரணமாகவும் கூட்டுறவு காரணமாகவும் நிகழ்ந்த மொழிவளர்ச்சியைக் கவனித்தோம். இனி, அரசியல் மாற்றம், படையெடுப்பு முதலியவற்றால் ஏற்படும் மொழிவளர்ச்சியைக் கவனித்தல் வேண்டும். இம்மாற்றங்கள் முதலியன பிற்பட்ட காலத்தில் மிகுதியாக நேர்ந்தன. இவற்றாற் சொற்கள் வழக்கிற் புகுந்தமை யைக் கலிங்கத்துப் பரணி மிக அழகாகத் தெரிவிக்கின்றது:

3. அரசியல்மாற்றம் முதலியன.

'மழலைத்திரு மொழியிற்சில
வடுகுஞ்சில தமிழும்
குழறித்தரு கருநாடியர்
குறுகிக் கடைதிறமின்' (கலிங். 43)

போரின்கண்ணே சிறைப்படுக்கப்பட்டு வேளம்புகுந்த கருநட தேயத்துப் பெண்டிர் சில வடுகுச் சொற்களையும் சில தமிழ்ச் சொற்களையும் தம் மழலைப்பேச்சிற் கலந்து குழறி மொழிந்தன ரென்பது இங்கே கூறப்படுகின்றது. இச்செய்யுள் தோன்றிய காலம் 11-ஆம் நூற்றாண்டாகும். இதற்கு முன்னும் பற்பல காலங்களில் அரசியல் மாற்றங்கள் நேர்ந்திருத்தல் வேண்டும். அவ்வக் காலங் களில் வழக்கிற் புகுந்த சொற்களும் பலவாதல் வேண்டும். உதா ரணமாக, நாயக்க அரசர்கள் தமிழ் நாடுகளை யாண்டபொழுது வழக்கிற் புகுந்த வடுகுச் சொற்கள் எத்தனையோ வுள்ளன. தமிழ் நாட்டு அரசியற் சரிதமும், மொழிநூற் சரிதமும் விரிவாக ஆராய்ந்து எழுதப்படும்பொழுது, இவ்வழக்காறுகள் தெள்ளிதி னுணரப்படும்.

மொழிவளர்ச்சிக்குரிய காரணங்களுள் மேற்குறித்த மூன்றனை யுந் தவிர, வேறொரு அதிமுக்கியமான காரணமும் உளது. அது 'அறிவுக் கூட்டுறவு' என்று சொல்லற்பாலது. இரண்டு சமுதாயங்கள் ஒன்றுகூடு மிடத்து ஒன்றன் பழக்க வழக்கங்கள் பிறிதொன்றன்

4. அறிவுக் கூட்டுறவு.

பழக்க வழக்கங்களைச் சிறிதேனும் வேறுபடுத்தாமற் போகா. இங்ஙனமே மக்களுள் இருவர் ஒன்றுகூடிய விடத்து ஒருவன் மற்றவனைப் பல பிரகாரத்தானும் வேறுபடுத்துவன். இவ்வேறுபாடு வேண்டுமென்று முயன்று நிகழ்த்துவதுமன்று. மக்களுக்கு இயல்பாக வுரிய நடிப்புக் குணமொன்றே இங்ஙனம் ஒருவனை மற்றொருவன் பின்பற்றுதற்குப் போதியது.

இதுபோன்றே அறிவுக்கூட்டுறவும் முற்காலத்து நிகழ்ந்து வந்தது. இக் கூட்டுறவிற்கு முக்கிய வாயிலாக அமைந்தது சமயமாம். கிறிஸ்துவப்தத்தின் சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் ஜைன சமயமும் பௌத்த சமயமும் வட இந்தியாவில் தோன்றிப் பாரத தேச முழுமையும் பரந்து சமய வுணர்ச்சியை நிலைபெறச் செய்தமை யாவரும் நன்கறிந்ததே. சமய வுணர்ச்சியைப் பரவச் செய்தலில் முன்னின்றவர் இவ்விரு சமயங்களையுஞ் சார்ந்த துறவிகளே யாவர். இத்துறவிகள் தங்கள் சமய சாஸ்திரங்களையும் பிற நூல்களையும் நன்கு கற்றுப் பின்பு அவற்றைப் போதித்தற் பொருட்டுத் தங்கள் தேசங்களை விடுத்து, அந்நிய நாடு புகுந்து, அந்நாடுகளே தமக்குரிய தாயகமாகக் கருதி வாழ்ந்து, ஆண்டுள்ள மக்களுக்குத் தங்கள் சமய சாஸ்திர முதலியவற்றைப் போதித்து, தங்கள் சமயங்களை மேற்கொள்ளச் செய்து சமய நூலறிவோடு உலகியல் நூலறிவினையும் நம் நாட்டிற்குதவிய பேருபகாரிகள். இவ்வாறு கொளுத்தப்பட்ட அறிவு விளக்கு அங்கங்கே சுடர்விட்டெரிந்து ஒவ்வொரு நாட்டிலும் ஒளி பெருகி, மக்களுக்கு ஞானக்கண்ணுகை வுதவிற்று.

அறிவுக் கூட்டுறவின் வாயில்: சமயம்.

இத்துறவிகளின் பெருஞ் செயலைச் சில காலத்துக்கு முன் நமது நாட்டிற்கு வந்து கிறிஸ்துவ சமயத்தையும் மேல் நாட்டு விஞ்ஞான சாஸ்திர முதலியவற்றையும் ஒருங்குணர்த்திவந்த பாதிரிமார்களுக்கு ஒப்பிடலாம். பாதிரிமார்கள் தங்கள் மதங்களைப் பரப்புதலையே முதற்பெரு நோக்கமாகக் கொண்டிருந்த போதினும், முடிவிலே, பலவகைக் கல்வித்துறைகளையும் இந்நாட்டில் நிலையிடுவதற்குக் காரணமாயிருந்தார்கள். சமயப் பிரவர்த்தனை யெவ்வாறாயினும் அதன் பிற்பயனாய்த் தோன்றிய கல்வி யுணர்ச்சி ஒன்றானும் அழிவுறாதபடி மக்களிதயத்திலே வேரூன்றி நிலைபெற்று விட்டது. இதுபோன்றதொரு பயனே ஜைன முதலிய சமயங்கள் பரவத் தொடங்கிய முற்காலத்தினும் விளைந்திருத்தல் வேண்டும். சமய வுணர்ச்சியோடு தொடர்ந்து பற்பல உலகியல் நூலறிவும் பரவத் தொடங்கி, பின் அச் சமயவுணர்ச்சி மாறியவிடத்தும் அந்

துறவிகளின் பெருஞ்செயல்.

நூலறிவு மாருது நிலைநின்று மக்களுக்குப் பெரும்பயன் அளித்து வந்தது.

இத்துறவிகள் தங்கள் ஸ்வதேசத்தில் கற்றுவந்த மொழியைத் தாங்கள் சென்ற தேசங்களிலும் பயின்றதோடு அவ்வத்தேசத்து மக்களுக்கும் கற்பித்து வந்தனர். இம்மொழிகள் பெரும்பாலும் வடமொழியாகவும் பாகத மொழியாகவும் இருந்தன. யாதொரு வரையறையுமின்றி இந்தியாவிலுள்ள எல்லா நாடுகளுக்கும் இத்துறவிகள் சென்று சமய வளர்ச்சியின் பொருட்டு உழைத்து வந்தமையால் இம்மொழிகளும் இந்தியா முழுவதும் பரவி இந்தியப் பொதுமொழிகளாக நிலவத் தலைப்பட்டன. இவற்றுள் பாகத மொழிகள் வடமொழியின் சிதைவு எனக் கருதப்பட்டமையால் பொதுமொழியாக முடிவிற் கொள்ளப்பட்டது வடமொழியேயாம். பின் பற்பல காரணச் செறிவால் இம்மொழி பொதுமொழியாக நிலைபெற்றுவிட்டது. இக்காலத்து ஆங்கிலம் இந்தியப் பொதுமொழியாகக் கருதப்படுதற்குப் பாதிரிகளும் ஒருவாறு காரணமா யிருந்ததுபோல, வடமொழி பொதுமொழியாதற்கு முற்காலத்துச் சமயப் பிரவர்த்தனஞ் செய்துவந்த துறவிகள் முதலாயினேருங் காரணமா யமைந்தனர்.

இந்தியப் பொது மொழி வடமொழி.

வடமொழி இந்தியப் பொதுமொழி யென்பது இக்காலத்துப் புதுவதாகக் கூறப்படும் புதுக்கருத்தன்று. நமது முன்னோர்கள் இதனைத் தெளிவாக வுரைத்துள்ளார்கள். மயிலைநாதர் தமது நன்னூல் விருத்தியில், 'இஃது, ஒரு நிலத்திற்கே யுரியதன்றிப் பதினெண் பூமிக்கும் விண்ணிற்கும் புவனதிகட்கும் பொதுவாய் வருதலின், திசைச்சொல்லி னடக்காது வேறேதின ரென்க. அஃதென்னை? வடக்கண்மொழி யென்றாலோ வெனின், ஆண்டு வழக்குப் பயிற்சியை நோக்கி அவ்வாறு கூறின ரென்க' என்றெழுதினர். இதன்கண் 'பொதுமொழி' என்ற கருத்து வற்புறுத்தப்படுதலோடு, 'விண்ணிற்கும் புவனதிகட்கும் பொதுவாய் வருதலின்' என்றும் கூறப்படுகின்றது. எனவே தேவர்களுக்குரிய மொழி என்றுங் கருதப்பட்டமை தெளிவாம். இக்கருத்தினையே கம்ப நாடரும்

'தேவ பாடையி னிக்கதை செய்தவர்'

என்ற அடியில் வைத்துள்ளார். பிரயோக விவேக நூலாரும் தமது நூலில் 'சாற்றிய தெய்வப் புலவோர் மொழிக்கும்' என்று கூறினர். தேவபாஷை யென்று கூறுவதன் கருத்து வடமொழி 'இந்தியப் பொதுமொழி' யென்பதனைப் புனைந்துரை வகையால் வற்புறுத்துதலே யென்று நாம் கொள்ளலாம்.

சமயவளர்ச்சி மூலமாகவும் வடமொழி மூலமாகவும் ஏற்பட்ட அறிவுக் கூட்டுறவு மொழிவளர்ச்சிக்கு அதி முக்கிய காரணமாயிருந்தது. வாணிக முதலிய மூன்று காரணங்களால் வந்த சொற்கள் சாதாரண மக்களிடை வழக்கிற் புகுந்து பின் இலக்கியங்களில் இடம் பெறுவன; இச்சொற்களிலே இலக்கிய வழக்கிற் புகுமுன்புதானும் மறைந்தொழிந்தனவும் பலவாதல் வேண்டும்; அன்றியும் இவற்றிற் பெரும்பாலன தோன்றிய அவ்வக்காலத்திற் பொருளுணர்தற் கெளியதாய்ப் பின்பு உணர்தற் கரியவாயிருக்கும். அறிவுக் கூட்டுறவினால் விளைந்த சொற்கள் அறிஞர்களிடையே புகுவன; தாழ்த்தலின்றி இலக்கிய வழக்கில் உடன் இடம் பெறுவன; பொருள் வரையறுத்துணர்தற்கு இயல்வன; மொழியின் வாழ்வில் நீடித்து நிற்பன.

அறிவுக்கூட்டுறவினுல் விளைந்த மொழிவளர்ச்சியின் இயல்பு.

மேற்கூறியன போன்ற காரணங்களால் புதுச் சொற்கள் தமிழிற் புகுந்து மொழி வளருங்காலத்தே அம்மொழியின் தனிப் பண்பு அவ்வகை வளர்ச்சிக்கு இடங் கொடுத்து நின்றதெனக் கூறினேன். ஆனால் இறுதியிற் குறிப்பிட்டபடி அறிவுக் கூட்டுறவினால் மொழி வளர்ச்சியுண்டாங் காலத்து, அறிஞர்கள் வேண்டுமென முயலு முயற்சி காணப்படுகின்றது. இம்முயற்சியிலே அவர்கள் மனப்போக்கின் படியே சென்று வரம்பழியும்படியாக நேரிடுதலுங் கூடும். சமயங்களும் பிற கொள்கைகளும் புதியனவாகப் பரவும்போது இம் முயற்சி அதிவேகத்துடன் நடைபெறும். மொழிவளர்ச்சியின் ஆரம்ப காலத்தே இம்முயற்சி வரம்புகடந்து செல்லாதபடி நிதானமாய்ச் செல்லுதல் வேண்டும். இவ்வாறு செல்லும்படி செய்து மொழியின் தனிப்பண்பைக் காப்பாற்றுதல் மொழி வளர்ச்சியின் ஆரம்ப காலத்துள்ள ஆசிரியர்கள் பெருங்கடமை யாகும்.

ஆசிரியர் கடமை.

கிறிஸ்துவப்தத்திற்குச் சில பல நூற்றாண்டுகட்கு முன்னே ஜைன முதலிய சமயங்கள் தென்னாடாகிய தமிழ்நாட்டிற் பரவத் தொடங்கினவென மேலே கூறினேன். இக்காலம் தமிழ் வளர்ச்சிக்கு மிகச் சிறந்ததாக இருந்தது. அறமென்னும் உபாநத்தின் மீது கட்டப்பெற்ற சமயப் பெருங்கோயிற்குத் தமிழ்மக்களனைவரும் எளிதில் அடிமையானார்கள். அந்தச் சமயத்திற்குரிய சாஸ்திரங்களையும் அவற்றிற்குத் துணையாயுள்ள பிற நூல்களையும் தமிழ்மக்கள் விரும்பிக் கற்கத் தொடங்கினர். அந்தச் சாஸ்திரங்கள் முதலியன எழுதப்பெற்ற வடமொழியையும் தமிழறிஞர்கள் நிரம்பக் கற்றார்கள். தாயினுஞ் சிறந்த தங்கள் தமிழ்மொழியினும்

பலவகை நூல்கள் இயற்றத் தொடங்கினர். இவ்வாறு இயற்றத் தொடங்கிய தொல்லாசிரியருள், தொல்காப்பியரே முதன்மை பெற்றவர். இவர் தமிழின் தனிப்பண்பினை நன்குணர்ந்து அதற்குக் கேடுவாராதபடி பாதுகாத்து எவ்வாறு தம் அரியநூலை இயற்றினாரென்பதை இனி நோக்குவோம்.






# விஜயாலய சோளீசுவரம்

எஸ். ஆர். பாலசுப்பிரமணிய ஐயர், எம். ஏ., எல். டி.

தமிழர் நாகரிகம் பழமையும் பெருமையும் வாய்ந்தது என்பது யாவரும் அறிந்த விஷயமே. பண்டைக் காலத்தில் ஆண்ட தமிழ்வேந்தர்கள் சேர சோழ பாண்டியர் ஆவர். இம் மூவரில் மிகப் பெருமை வாய்ந்தவர்கள் சோழர்களே. திக்கு விஜயத்தினுல் தங்கள் ராஜ்யத்தையும் செல்வாக்கையும், வட இந்தியா, இந்தியக் கீழ்நாடுகள் முதலிய இடங்களில் பரவச் செய்தும், அயல்நாட்டில் உள்ள அரசர்களிடம் தூது அனுப்பி வாணிகத்தை வளர்த்தும், கல்வியையும் கலைகளையும் போற்றியும் தங்கள் நாடு முழுவதும் சிற்பங்களும் ஓவியங்களும் நிறைந்த அளவற்ற அற்புதக் கோயில்கள் அமைத்தும் இவர்கள் அழியாப் புகழ் பெற்றனர்.

சங்க காலத்துச் சோழர்கள் பலருளர். கரிகாற் பெருவளத் தான், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, கிள்ளிவளவன், கோப்பெருஞ் சோழன், பெருநற்கிள்ளி, கோச்செங்கணுன் முதலிய சோழவரசர் கள் பலர் ஆண்டனர். ஆனுல், ‘அவர்கள் எப்பொழுது ஆண்டார் கள்? அவர்களின் பரம்பரை வரிசை எவ்வாறுள்ளது?’ என்ற வினுக்களுக்கு விடை எளிதில் இயம்ப இயலவில்லை. பொதுவாய், கி. பி. முதல் மூன்று அல்லது நான்கு நூற்ருண்டுகளிலேயோ அல்லது சற்று முன்பின்னே என்றுதான் தற்காலம் சொல்ல இடம் உண்டு. அவர்கள் காலத்திற்குப் பிறகு ஒன்பதாம் நூற் ருண்டின் மத்தியகாலம் வரையில் சோழர்கள் மறைபொருள் போலக் கிடந்தனர். களப்பிரர்களாலோ, பின்பு பலமடைந்த பல் லவர்களாலோ இவர் பலம் அடக்கப்பட்டு இருந்த இடம் தெரி யாமல் இருந்தனர். இக்காலத்தைச் சோழர்களின் இருட்காலம் என்னலாம்.

பிறகு சுமார் கி. பி. 850-இல், விஜயாலய சோழன் கடலில் முளைத்தெழும் கதிரவன் போல வெளிப்பட்டுத் தஞ்சையைத்

தலைநகராகக் கொண்டு சோழ வம்சத்திற்குப் புத்துயிர் கொடுத்து அவ்வம்சத்தை நிலைநிறுத்தினான். அவ்வம்சத்தார் சுமார் கி. பி. 850 முதல் 1070 வரை, புகழ்பரப்பி நாட்டை ஆண்டுவந்தார்கள். அவ்வரசர்களில் சிரேஷ்டர், காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தருளின இராஜகேஸரி வர்மரான இராஜ ராஜ தேவரும், கங்கையுங் கடாரமும் பூர்வதேசமும் கொண்ட பரகேஸரிவர்மரான இராஜேந்திர சோழரும் ஆவர்.

இக்காலத்தில் தலைநகர்களாக இருந்தவை தஞ்சையும், கங்கை கொண்டசோழபுரமும் ஆகும். கி. பி. 1070-ஆம் ஆண்டில் கீழைச் சளுக்கிய சோழவம்சத்தில் உதித்த அபயன் ஜயதரன் என்ற முதலாம் குலோத்துங்கன் பட்டம் பெற்றான். இவன் வம்சத்தார் 1279-ஆம் ஆண்டு வரை ஆண்டு வந்தார்கள். பிறகு பாண்டியர்கள் சோழநாட்டை வென்று தம் வசமாக்கினர்.

தஞ்சை விஜயாலய வம்சத்தை ஸ்தாபித்தவனான விஜயாலயன் காலத்தில் அமைக்கப்பட்டதும், நார்த்தாமலையிலுள்ளதுமாகிய விஜயாலய சோளீசுவரம் என்ற கோயில் ஒன்றைப்பற்றி இங்குக் கவனிப்போம்.

நார்த்தாமலை யென்பது புதுக்கோட்டைச் சம்ஸ்தானத்திலுள்ள ஒரு சிறு கிராமம். (நகரத்தார் மலை என்பதன் திரிபு.) எட்டுச் சிறு குன்றுகளால் சூழப்பட்டது. அவைகளில் முக்கியமானது மேலை மலையும் கடம்பர் மலையும் ஆகும். திருச்சியிலிருந்து மானாமதுரைக்குச் செல்லும் தென்னிந்திய இருப்புப் பாதையில் இதே பெயருள்ள ஒரு ஸ்டேஷனுக்கு இரண்டரை மைல் தூரத்தில் உள்ளது. இங்குள்ள மாரியம்மன் கோயிலினால் தற்காலம் இதற்குப் பெருமை உண்டாகியிருக்கிறது! இம்மாரியம்மன் கோயில் மலையடிவாரத்திலுள்ளது. இதற்கு அருகில் ஒரு பழைய சிவன் கோயில் உள்ளது. ஆனால் சிற்ப சம்பந்தமான விசேஷமுள்ள கோயில்கள் கடம்பமலையிலுள்ள இராஜராஜன் காலத்திலே கட்டப்பட்ட கடம்பர் கோயிலும், மேலைமலையிலுள்ள பல்லவ காலத்து இரண்டு குடைவரைக் (*Cave temples*) கோயில்களும், விஜயாலய சோளீசுவரம் என்ற சோழர்காலத்துக் கற்கோயிலுமே.

இவ்வூரில் பண்டை நாளில் நகரத்தார் அல்லது வியாபாரக் கூட்டத்தார் குடியேறியிருந்தனர். இவ்வூர் இராஜராஜன் (I) காலத்திலே தெலுங்ககுலகாலபுரம் என்றும், மூன்றாம் குலோத்துங்கன் காலத்திலே குலோத்துங்கசோழபட்டினம் என்றும், பிற்காலத்திலே நார்த்தாமலை யென்றும் வழங்கி வருகிறது.

முன்சொன்ன மேலைமலையில் மூன்று கோயில்கள் இருக்கின்றன. இவைகளில் இரண்டு குடைவரைக் கோயில்கள். வடக்கே

படம் 1.



சமணதுடகு

படம் 2.



முதற் குகையிலுள்ள விஷ்ணுவின் திருவுருவங்களில் ஆறு

யுள்ள மலைக்கோயில் (படம் 1) சமணகுடகு என்ற பழைய பெயர் வாய்ந்தது. பல்லவ அரசனான மகேந்திர வர்மன் காலத்திற் குடையப்பட்ட மலைக்கோயில்களின் அம்சங்கள் இதில் உள. இதன்கண் குடைந்த குகையும் அதற்கு முன்பாக அர்த்த மண்டபமும் உள்ளன. நான்கு சதுரத் தூண்கள் (*cubical pillars*) மகேந்திர பல்லவன் குடைவித்த மலைக்கோயில்களிலுள்ள தூண்களைப் போன்றவை. பிற்காலத்தில் குகைக்கும் அர்த்தமண்டபத்திற்கும் இடையிலுள்ள பாறையில் பன்னிரண்டு விஷ்ணுவின் திருவுருவங்களை (படம் 2) அமைத்துள்ளார்கள். இந்தச் சிலைகளில்

படம் 3.



முதற் தகையின் அடிப்படையிற் காணப்படும் சிற்பங்கள்

அமைத்திருக்கும் சங்குச் சக்கரங்களின் உருவ அமைப்பிலிருந்து இவ்வுருவங்களும் பல்லவர் காலத்தவை எனக் கொள்ளலாமென்று தோற்றுகிறது. மகேந்திர பல்லவன் மகேந்திரவாடியில் மகேந்திர விஷ்ணுக்கிருகம் என்ற விஷ்ணு கோயிலை அமைத்துள்ளான். முகமண்டபத்து உபபீடத்திற் கண்ட குமுதப் படைகளில் (படம் 3) வெட்டப்பட்டுள்ள கல்வெட்டிலிருந்து இந்த முகமண்டபம் முதல் குலோத்துங்கன் காலத்தில் [45-ஆம் ஆண்டு—கி. பி. 1115] ஏற்பட்டிருக்கலாம் என்று தெரியவருகிறது. இக்கோயில் மூர்த்தியைத் திருமேற்கோயில் மாணிக்க ஆழ்வார் என்றும், பதினெண்

பூமி விண்ணகர எம்பெருமான் என்றும் கல்வெட்டுகள் கூறு கின்றன.

இதற்குத் தெற்கே ஐம்பதுஅடி தூரத்தில் மற்றொரு குகைக் கோயில் உள்ளது. இதிலுள்ள துவாரபாலக உருவங்களுள் ஒன்று இங்கே காணப்படுவது (படம் 4.) குகைக்கு முன் ஒருமண்ட பம் இருந்தது. ஆனால் அம்மண்டபம் இப்போது இடிந்து கிடக் கிறது. மண்டபத்தின் உபபீடத்துக் குமுதப்படையில் மற்றொரு

படம் 4.



இரண்டாவது குகையில் உள்ள துவாரபாலகன்

கல்வெட்டுளது (படம் 5). இதிலிருந்து இதன் பெயர் பழியிலி யீசுவரம் என்ற சிவன் கோயில் என்றும், பல்லவ அரசனான நிருப துங்க விக்கிரமற்கு யாண்டு ஏழாவதில் விடேல் விடுகு முத்தரையன் மகன் சாத்தம் பழியிலி' இக்கோயிலைக் குடைவித்தான் என்றும் சாத்தம் பழியிலி மகன் மீனவன் தமிழதியரையனான மல்லன் அனந்தனுக்குப் புக்க பழியிலி சிறிய நங்கை இக்கோயிலுக்கு முக மண்டபமும் 'இரஷ்வ'மும் (ரிஷபம்) 'இஷவ'க் கொட்டிலும்

படம் 5.



இரண்டாவது தளையில் அடிப்படையிலுள்ள சிலாசாஸனம்

படம் 6.



விஜயாலய சோளீசுவரம்

(ரிஷப மண்டபமும்) பலிபீடமும் செய்வித்தார் என்றும் அறி கிறோம். ஆகவே இக்கோயில் பிந்திய பல்லவர் காலத்தது; அதாவது ஒன்பதாம் நூற்றாண்டின் மத்திய காலத்ததென்று கொள்ளத் தகும்.

இவ்விரண்டு குகைக் கோயில்களுக்கும் எதிராக வுள்ளது கற்கோயிலான விஜயாலய சோளீசுவரம் (படம் 6). இக்கோயில், மத்தியில் பிரதான கோயிலும் சுற்றிலும் ஏழு சுற்றுக் கோயில் களும் இவைகளைச் சூழ்ந்துள்ள கல்மதில்களும் அடங்கியது. கோயில் மேற்குப் பார்த்தது. மேற்கேயும் வடகிழக்கேயும் இரண்டு வாயில்கள் உள. கர்ப்பக்கிருஹம் ஓங்கார வடிவ முடையது. குறுக்கில் 9 அடியும் உயரத்தில் 8 அடியும் உள்ளது. வட்டச் சுவர் 5 அடி கனமுள்ளது. நாலுமூலையிலும் சதுர வடிவு உடையது. இது முழுவதும் 29 அடி சதுரமுள்ள மண்டபத்தி லிருக்கிறது. கர்ப்பக்கிருஹத்துக்குமேல் அதேமாதிரி இரண்டு தளங்கள் இருக்கின்றன. சிகரம் வரவரக் குறுகிக் கடைசியில் கல் ஸ்தூபியுடையதாய் வட்டமாய் முடிகிறது. இது பல்லவ சிற்ப மான மஹாபலிபுரத்தில் உள்ள தர்மராஜ ரதத்தின் சிகரத்தை ஒத்திருக்கின்றது. நாலு பக்கங்களிலும் நாலு சிம்ம லலாடங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு இடையில் கீழ் வரிசையில் நான்கு திக்குகளிலும் நான்கு ரிஷபங்கள் விளங்குகின்றன. நான்குபுரை க்ளில் கற்சிலைகள் உள. மேற்கில் சிவனும் பார்வதியும், தெற்கில் வீணாதர தக்ஷிணாமூர்த்தியும் காணப்படுகின்றனர். கர்ப்பக்கிருஹத் திற்கு முன் ஓர் அர்த்த மண்டபம் உள்ளது. இது சுவருடன் உள்ளடங்கிய அரைத்தூண்களால் (*pilasters*) அடைபட்ட மண்டபம். இதன் வெளிப்புறத்தில் புரைகள் இல்லை. இம்மண்ட பத்தைத் தாங்க மத்தியில் கற்றூண்கள் இருக்கின்றன. தூண் களின் தலைப்பாகத்திலுள்ள போதிகை பல்லவ காலத்தவை போலச் சாதாரணமாயும் நடுவில் பட்டையாயும் இருபக்கத் திலும் சுருள் சுருளாயும் வருவினதாயும் இருக்கிறது.

அர்த்தமண்டபத்தின் வாசலுக்கு இருபுறத்திலும் ஐந்தடி உயரமுள்ள இரண்டு துவாரபாலகர்கள் இருக்கின்றனர். (முகப்புப் படம்.) கால்கள் ஒன்றன்மேல் ஒன்று போட்டபடி இருக்கின்றன. ஒருகையில் கதை உளது. மற்றொரு கை 'விஸ்மய'க்குறி காட்டு கிறது. அவர்கள் சடாமகுடதாரிகளாக விளங்குகின்றார்கள். சிரசில் கொம்புபோல் இரண்டு வளைவுகள் உள. இக்கொம்புகள் அநேக பல்லவக் குகைக் கோயில்களிலுள்ள துவாரபாலர்களுக்கும் உள. (வல்லம் துவாரபாலகர்களைப் பார்க்க). காதில் பத்ர குண்டலமும், உடம்பில் கடிபந்தமும், உதரபந்தமும், சலங்கை

போன்ற குஞ்சத்துடன் முறுக்கின துணிபோன்ற யஞ்ஞோப வீதமும் (பூணூலும்), கையில் வளையங்களும் காணப்படுகின்றன. இம்மூலக் கோயிலைச் சுற்றி ஆறு சுற்றுக் கோயில்கள் இருக்கின்றன. ஏழு கோயில்கள் இருந்திருக்கவேண்டும். இவை சூரியன், சத்தமாதர்கள், கணபதி, சுப்பிரமணியர், ஜேஷ்டாதேவி, சண்டேசுவரர், சந்திரன் இவர்களின் தளிகளாயிருக்கவேண்டும். இவைகள் யாவும் கற்றளிகள். அஸ்திவாரம் முதல் ஸ்தூபி வரையில் முழுதும் கருங்கல்லே. சுண்ணாம்பு இல்லாமல் செவ்வையாகவும் சாமர்த்தியமாகவும் இணைக்கப்பட்ட கற்களால் ஆக்கப்பட்டவை.

முதற் குகைக் கோயிலுக்கு வடக்கேயும், விஜயாலய சோளீசுவரத்திற்கு எதிராகவும் உள்ள கற்பாறையிலுள்ள கல்வெட்டொன்றிலிருந்து இக்கோயிலின் பெயர் நமக்குக் கிடைக்கிறது. இக்கல்வெட்டு மாறவர்மன் சுந்தர பாண்டியனின் பன்னிரண்டாம் ஆண்டில் (கி. பி. 1228-ஆம் ஆண்டு) இக்கோயிலுக்கு இந்நகரத்தார் திருப்படிமாற்றுக்கும் திருவிழா நடப்பிவிக்கவும் திருநாளில் ஆளுடையாரை எழுந்தருளுவிக்கவும் திருவீதிக் கூத்து நடத்தி வைப்பிக்கவுஞ் செய்த தர்மம்.

1. "ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாற பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் சோணாடு வழங்கியருளிய ஸ்ரீ,

2. ஸுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு 11-வதின் எதிராமாண்டு சித்திரை மாதத்து ஆரூந்தி

3. யதி இரட்டபாடி கொண்ட சோழவளநாட்டுத் தெலிங்க குல காலபுரமான குலோத்

4. துங்க சோழபட்டனத்து.....................இ

5. வ்வூர் உடையார் விசையாலைய சோளீசுவரமுடைய நாயனாற்கு......"

இதிலிருந்து இந்த விஜயாலய சோளீசுவரம் என்பது இக்கல்வெட்டுக்கு எதிரிலுள்ள இக் கற்கோயிலே என்பது தெளிவு. மகேந்திரவர்மனின் மண்டகப்பட்டுக் கல்வெட்டிலிருந்து, அவன் காலத்துக்கு முன்பு மரத்தினாலும் செங்கல்லினாலும் சுண்ணாம்பினாலும் உலோகத்தினாலும் கோயில்கள் அமைக்கப்பட்டன என்றும், அவ்வரசன் விசித்திரமாய்ப் புதுமாதிரியாய்க் குகைக்கோயில்கள் குடைவித்தான் என்றும் அறிகிறோம்.

பிறகு இரண்டாம் நரசிம்மன் காலத்துக் கற்கட்டடக் கோயில்கள் ஏற்பட்டன. இவைகளில் முக்கியமானவை:—

மாமல்லபுரத்துள்ள (மகாபலிபுரம்) கடற்கரைக் கோயிலும் (*Shore Temple*), காஞ்சியிலுள்ள கைலாஸநாதர்கோயிலும், பனைமலையில் உள்ள கோயிலும் ஆம். பல்லவர்கள் காலத்துக்குப் பிறகு குகைக் கோயில்கள் குடையும் வழக்கம் நின்றது. பிறகு கற்கோயில்களும் செங்கற் கோயில்களுமே கட்டப்பட்டன. சோழர் காலத்தே அநேக அழகு வாய்ந்த பெரிய கோயில்கள் கட்டப்பட்டன. இவைகளுக்குத் திலகம் போல் விளங்குவது விஜயாலய வம்சத்து முதல்வனை விஜயாலயன் காலத்து ஏற்பட்ட நார்த்தாமலை விஜயாலய சோளீசுவரமே.



மகாபலிபுரத்துக் கடற்கரைக்
கோயில்




## மார்கழிக் கடைசியில்

பே. நா. அப்புஸ்வாமி ஐயர், பி. ஏ., பி. எல்.

---

ஒருநாள் காலை எட்டு மணி சுமாருக்குச் சுப்பையர் சேஷையருடைய வீட்டுக்கு வந்தார். வாயிற்கதவு திறந்திருந்தது. ஆனால் குறுக்கே ஓர் ஏணியும் துடைப்பக்கட்டையும் வேறு ஏதேதோ சில சாமான்களும் கிடந்தன. அதனால், "சேஷா, சேஷா" என்று கூப்பிட்டார். "சுப்பையாவா? உள்ளே வா" என்று உள்ளேயிருந்து குரல் வந்தது.

"அப்பா, சேஷா, நீ நல்லவன். வீட்டுக்கு வருகிறவர்களை வரவேற்கிற மாதிரி வெகு அழகாயிருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே உள்ளே வந்தார் சுப்பையர்.

அவருடைய குரலைக் கேட்டு ஓடி வந்த சாமு, "மாமா, மாமா, தை மாதப் பிறப்பு வரப்போகிறதோ இல்லையோ? அதற்காக எங்கள் அகத்தில் இன்றைக்கு வெள்ளை அடிக்கப் போகிறார்கள். மேஸ்திரி சுண்ணாம்பு வாங்கிக்கொண்டு வரப் போயிருக்கிறார். நாங்கள் மற்றச் சாமான்களைத் தயாராக வைத்துக்கொண்டிருக்கிறோம். இது போதுமோ இல்லையா?" என்று பொரிந்தான்.

"ஓஹோ அப்படியா? சாமான் போதும். இன்னும் ஏதாவது போட்டால் உள்ளே ஆளே வர முடியாது" என்று சொல்லிச் சிரித்தார் சுப்பையர்.

சாமு வாசல் பக்கத்துக்குப் போய், "அப்பா, மேஸ்திரி வந்துவிட்டார்" என்று உள்ளே ஓடிவந்தான். அன்று அவனுக்கு ஒரே குதூகலந்தான்.

மேஸ்திரி சுண்ணாம்புக் கல்லை உள்ளே கொண்டுவந்து முற்றத்திலே வைத்திருந்த ஒரு பெரிய மரத்தொட்டியிலே கொட்டினான்.

"இதென்ன, கல்லுக் கல்லாக இருக்கிறதே? இதை வைத்துக்கொண்டு எப்படி வெள்ளை அடிப்பது? பொடி பண்ண வேண்டாமா? தொட்டியில் அப்படியே போடுகிறீர்களே?" என்றான் சாமு.

“பொடிபண்ண வேண்டாம். அதை நீற்றினால் தானாகவே பொடியாகிவிடும்.”

“நீற்றுகிறது என்றால்?”

“அதன்மேல் தண்ணீரைக் கொட்டுகிறது.”

“அதைக் குளிப்பாட்டுகிறதா? அம்மா கறி காயை அலம்பி உபயோகிக்கிறமாதிரி அதையும் கழுவித்தான் போடவேண்டுமா?”

மேஸ்திரி தன் வேலையைக் கவனிக்கத் தொடங்கினான். தான் தின்றுகொண்டிருந்த வெள்ளரிக்காய்த் துண்டத்தை வீசி எறிந்து விட்டுக் கையைக் கழுவிக்கொண்டு வந்த சாமு, சுண்ணாம்புக் கல்லை எடுக்கப்போனான். உடனே மேஸ்திரி, “பையா, தொடாதே, தொடாதே” என்று பரபரப்பாகத் தடுத்தான்.

“என் கை எச்சில் இல்லை; மேஸ்திரி! அலம்பியாய்விட்டது. இதோ ஈரமாயிருக்கிறது பார்” என்றான் சாமு.

“அதனால்தான் தொடாதே என்றேன்” என்று மேஸ்திரி சொல்லவே, சாமு ஒன்றும் தெரியாமல் விழித்தான்.

“ஈரக் கையோடு தொட்டால் கை கொப்புளித்துப் போகும்.”

“சும்மா பயமுறுத்தப் பார்க்காதே. நான் பயங்கொள்ளி இல்லை” என்று வீரம் பேசினான் சாமு.

“நிஜமாகத்தான். இதோ பார்” என்று மேஸ்திரி சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே வேலைக்காரி ஒருத்தியும் ஒரு பையனும் ஆளுக்கு ஒரு குடம் தண்ணீர் கொண்டுவந்து தொட்டியிலிருந்த சுண்ணாம்புக் கல்லின்மேல் கொட்டினார்கள். முதலில் ஒன்றும் ஆகவில்லை.

“என்ன மேஸ்திரி? ஒன்றையும் காணோமே” என்று சாமு சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே “சொய்” என்ற ஓசை உண்டாயிற்று. கல்லின்மேலிருந்து ஆவி கிளம்பிற்று. கல் உப்பிப் பெரிதாயிற்று. பிறகு தண்ணீர் தளதளவென்று கொதிக்கத் தொடங்கிற்று. ஆவியும் சூடும் உண்டாகிப் பக்கத்தில் உறைத்தன. சாமு ஒதுங்குவதற்கு முன்னமே தொட்டியிலிருந்து உண்டான கொப்புளம் ஒன்று வெடித்து அவன்மேல் சுண்ணாம்பு நீரைத் தெறித்தது. “அப்பாடி! கொதிக்கிறதே” என்று அவன் கத்துவதற்குள் மேஸ்திரி தன்னுடைய துணியால் அதைத் துடைத்து எடுத்துவிட்டான்.

“என்ன? நான் சொன்னது நிஜந்தானா?” என்று மேஸ்திரி கேட்டான். ஆனால் சாமு அங்கே நிற்கவில்லை. உள்ளே ஓடி, “அப்பா, வா. மாமா, வா வா. ஒரு வேடிக்கை!” என்று கத்தினான். அவர்கள் முற்றத்துக்கு வந்தார்கள். கொதிக்கும் சுண்

ணும்பைத்தவிர வேறொன்றையும் காணவில்லை. "என்னடா வேடிக்கை?" என்று கடுகடுத்தார் சேஷையர்.

"இதோ பாருங்கள், மேஸ்திரி செய்த வேடிக்கையை! அவர் கல்லுக் கொண்டுவந்தார். அது 'ஜில்' என்று இருந்தது. அதன் தலையில் பச்சைத் தண்ணீரைக் குடம் குடமாகக் கொட்டினர். அது இன்னும் குளிர்ந்துபோகும் என்று நினைத்தேன். ஆனால் அது கொதிக்க ஆரம்பித்துவிட்டது! நிஜமாகத்தான், மாமா. நல்ல சூடு; என்மேல்கூடப் பட்டது, மாமா. வலிக்கவில்லை."

"சாமு, கிட்டப் போகாதே என்றேனே" என்று உள்ளேயிருந்து குரல் கொடுத்தாள் மீனாக்ஷி அம்மாள்.

"இல்லை, அம்மா. தூரத்தான் இருந்தேன், அம்மா" என்றான் சாமு. "ஏன் அப்பா? இது வேடிக்கையா? இல்லையா? இது எப்படிக் கொதிக்கிறது, மாமா?

"எனக்குத் தெரியாது."

"ஏன் அப்பா?"

"இப்பொழுது கிருஷ்ணன் வருவான். அவனைக் கேள். உன் தோல்வாய்க்கு அவன்தான் சரி."

கூட இரண்டுகுடம் தண்ணீரை விட்டு நன்றாகக் கரைத்த சுண்ணாம்புக்குழம்பைச் சற்றே கண் அகன்ற சல்லடையில் விட்டு வடிகட்டி எடுத்துக்கொண்டான் மேஸ்திரி. அந்தக் குழம்பு சற்று வெள்ளையாக இருந்தது.

"காய்ச்சின பால் மாதிரி இருக்கிறதே."

"நாங்கள் இதைச் சுண்ணாம்புப் பால் என்றுகூடச் சொல்லுவதுண்டு. ஆனால் எவ்வளவு நன்றாக இருக்கிறது பாருங்கள். மாட்டுப் பாலெல்லாம் நீர்க்க இருக்கும். இது எவ்வளவு 'திக்'காக இருக்கிறது?" என்றான் மேஸ்திரி.

கயிற்றுப் புரியினால் பிடிபோட்ட சட்டியில் அதை விட்டான். குச்சு மட்டை ஒன்றையும் எடுத்துக்கொண்டு சுண்ணாம்பு அடிக்கப் புறப்பட்டான் மேஸ்திரி. அதற்குள் வேலைக்காரப் பையன் துடைப்பத்தால் சுவரில் உள்ள அழுக்கையும் தூசியையும் பெருக்கித் தள்ளிச் சுவரைச் சுத்தமாக்கினான்.

"நானும் வெள்ளை அடிக்கட்டுமா? மேஸ்திரி. வேடிக்கையாய் இருக்கிறதே!" என்று பையன் கெஞ்சினான்.

"அடே சாமு! கிட்டப் போகாதே என்றேனே. சுண்ணாம்பு வெக்கை கெடுதல். உடம்புக்கு ஆகாது. தூரப் போ" என்று அதட்டினாள் மீனாக்ஷி அம்மாள்.

“இல்லை, அம்மா. தூர இருந்துதான் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.”

மேஸ்திரி வெள்ளை அடிக்க ஆரம்பித்தான். சற்று நேரம் பார்த்துக்கொண்டே இருந்தான் சாமு. வெள்ளை அடித்த இடத்தையும் அடிக்காத பழைய இடத்தையும் மாறி மாறிப் பார்த்தான். உள்ளே போனான். “அப்பா, சுண்ணாம்பு நல்ல சுண்ணாம்பு இல்லை போலிருக்கிறது. வெள்ளை அடித்த இடம் எல்லாம் முன்னைவிட அழுக்காக இருக்கிறது. வெள்ளை அடித்தால் வெள்ளை வெளேரென்று இருக்காதோ?” என்று குறை சொன்னான்.

சேஷையரும் சுப்பையரும் முதலில் நம்பவில்லை. பிறகு பையன் திரும்பத் திரும்பச் சொல்லவே அவர்கள் எழுந்திருந்து வந்தார்கள். ஒரு சுவரில் பாதிவரை வெள்ளை அடித்திருந்தது.

“என்ன எவ்வளவுதூரம் ஆயிற்று? மேஸ்திரி” என்று தொடங்கினார் சேஷையர்.

“பாதிச் சுவர் ஆயிற்று, சுவாமி” என்றான் மேஸ்திரி.

கிழக்குப் பாதி சற்று வெள்ளையாயும் மேற்குப் பாதி அழுக்குப் பிடித்தாற் போல மங்கலாயும் இருந்தது. ஆதலால் அவர், “கிழக்குப் பாதி ஆய்விட்டதாக்கும்?” என்றார்.

“இல்லை, சுவாமி, மேற்குப் பாதிதான் அடித்தாகி இருக்கிறது. கிழக்குப் பாதி இனிமேல்தான் அடித்தாக வேண்டும்” என்றான் மேஸ்திரி. சேஷையருக்குத் தூக்கிப் போட்டது. நம்பமுடியவில்லை.

“என்ன, மேஸ்திரி? மேற்குப் பாதி அழுக்காகத் தெரிகிறதே! கிழக்குப் பாதியே தேவலை போல் இருக்கிறதே. வெள்ளை அடித்த இடம் பிரகாசமாக இருக்கவேண்டாமா?” என்று கேட்டார்.

“உலர்ந்து காற்றாடின பிற்பாடு பாருங்கள்; நாளைக்குப் பாருங்கள். அப்புறம் சொல்லுவீர்கள். காற்றாடக் காற்றாட அது வெளுத்துக்கொண்டு வரும். சுத்தமாக அடித்திருக்கிறேன். என் பெயரை நல்ல இடத்தில் கெடுத்துக் கொள்ளமாட்டேன், சுவாமி” என்றான் மேஸ்திரி.

நம்புவதைத் தவிர வேறு வழி இல்லை. ஆனாலும், “ஈரமாக இருக்கிற இடம் ஏன் அழுக்கு மாதிரியாக இருக்கிறது. காய்ந்த பின் ஏன் வெள்ளையாகிறது? இன்றைக்கு இருப்பதை விட நாளை ஏன் இன்னும் வெள்ளையாகும் என்கிறாய்?” என்றார் சேஷையர்.

“நான் அனுபவத்தை வைத்துக்கொண்டு சொல்லுகிறேன். எனக்குக் காரணம் தெரியாது, சுவாமி. படித்தவர்களைக் கேட்டால் தெரியும்” என்றான். சேஷையரும் சுப்பையரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள்.

இந்தச் சமயத்தில் கிருஷ்ணையர் உள்ளே வந்தார். சாமு ஓடிப்போய், "அம்மாஞ்சி மாமா, வா. நீ சொல்லு. மேஸ்திரிக்குத் தெரியவில்லை. அப்பாவுக்குத் தெரியவில்லை. சுப்பையா மாமாவுக்கும் தெரியவில்லை. நீதான் சொல்லவேண்டும்'' என்றான்.

கிருஷ்ணையர் சிரித்துக்கொண்டே, "நீ போடுகிற பிதிர்களுக்குச் சில சமயம் பிரம்மாவாலும் பதில் சொல்ல முடியாது. அவர்களுக்கு என்ன பிதிர் போட்டாய்?'' என்றார்.

"நான் சொல்லட்டுமா? : சுண்ணாம்புக் கல்லின் மேல் தண்ணீரை விட்டால் அது கொதிக்கிறதே. ஏன்? இரு, இரு. இன்னொரு கேள்வியையும் சொல்லிவிடுகிறேன்: 'சுண்ணாம்புப் பாலைச் சுவரில் அடித்தால் முதலில் அழுக்குப் பிடித்தாற் போல் இருக்கும், பிறகு வெள்ளை ஆகும்' என்கிறார் மேஸ்திரி. அதுவும் ஏன்?''

"நீ எந்த வகுப்பு? மூன்றாவது பாரம் அல்லவா? உனக்குச் சொன்னால் தெரியும். உள்ளே வாருங்கள். சொல்லுகிறேன்'' என்று அவர்கள் மூவரையும் உள்ளே அழைத்துக்கொண்டு போனார்.

"படிப்படியாகப் போவோம். சுண்ணாம்புக் காளவாயிலிருந்து மேஸ்திரி வாங்கிக்கொண்டுவந்த சுண்ணாம்பு என்ன? தெரியுமா?''

"சொல்லு.''

"அதற்குக் கால்சியம் ஆக்ஸைட் என்று பெயர். கால்சியம் என்ற வஸ்துவும், ஆக்ஸிஜேன்--பிராண வாயு—என்ற காற்று ஒன்றும், ஆக இரண்டும் ஒன்றாகச் சேர்ந்ததால் உண்டான வஸ்து அது. அதிலே ஜலம் படுகிறது. ஜலத்துக்கும் அதற்கும் ஒரு சேர்க்கை உண்டாகிறது. ஜலம் என்ன என்று தெரியுமோ இல்லையோ? ஆக்ஸிஜென் என்னும் காற்றும் ஹைட்ரஜேன் என்னும் காற்றும் ஒன்றாகச் சேர்ந்ததுதான் ஜலம். ஆகவே கால்சியம், ஹைட்ரஜென், ஆக்ஸிஜென் ஆகிய இந்த மூன்றும் ஒன்றாகச் சேருகின்றன. இதனால் கால்சியம் ஹைட்ராக்ஸைட் என்னும் புதிய வஸ்து ஒன்று உண்டாகின்றது. இதுதான் சுண்ணாம்புப் பால்.''

"ஓஹோ!''

"இப்படி இவை மாறுவது ஒரு ரசாயன மாறுபாடு, விறகு எரிவதுபோல. விறகு எரிகிறது என்றால் என்ன தெரியுமோ இல்லையோ? விறகில் உள்ள ரசாயன வஸ்துக்கள் காற்றிலுள்ள ஆக்ஸிஜெனோடு சேருகின்றன. அந்தச் சேர்க்கை நிகழும்போது

மிகுந்த சூடு உண்டாகின்றது. அதைத்தான் விறகு எரிகிறது என்று சொல்லுகிறோம். சுண்ணாம்பை நீற்றும்போது அவ்வளவு சூடு இல்லாவிட்டாலும், நல்ல சூடு உண்டாகத்தான் செய்கிறது. சூடு உண்டாவது ரசாயன மாறுபாட்டின் முக்கிய அடையாளங்களுள் ஒன்று. தெரிந்ததா?"

"தெரிந்தது. ஆனால் சுண்ணாம்பு துள்ளிக் குதித்தது மாதிரி இது வேடிக்கையாயில்லை, மாமா."

"அது ஆயிற்று. அழுக்காயிருந்த சுவர் எப்படி வெள்ளையாகும்?"

"சுவரில் அடிக்கும்போது சுண்ணாம்புப் பால் அவ்வளவு வெள்ளை இல்லைதான். ஏனென்றால், கால்சியம் ஹைட்ராக்ஸைடில் ஒரு பகுதி ஜலத்தில் கரைந்து நிறமற்ற திரவமாக ஆகிவிடுகிறது. அதனால் அதற்கு நிறமில்லை. கால்சியம் ஹைட்ராக்ஸைடில் மற்றொரு பகுதி ஜலத்தில் கரைவதற்கு முடியாமல் மிகுந்து வெள்ளைப் பொடியாகத் தங்கி விடுகிறது. அதனால்தான் வெள்ளையடிக்கும்போது சுண்ணாம்புச் சட்டியைக் கலக்கிக் கலக்கி வெள்ளையடிக்கிறார்கள்.

"அதனால், கரைந்து நிறமற்றதும் கரையாமல் வெள்ளையாயுள்ளதும் ஒன்றாகச் சுவரில் அடிக்கப்படுகின்றன. ஆகையால் அதன் நிறம் தூய வெள்ளையாயில்லாமல் சற்று மங்கலாகவே இருக்கிறது.

"இன்னொரு காரணமும் உண்டு. வெள்ளைச் சுவர் மழையில் நனைந்தால் அதன் நிறம் சற்று மங்கலாகக் காட்டும்; அவ்வளவு வெள்ளையாக இருக்காது. இதை நீங்கள் பார்த்திருக்கலாம். ஆகையால் சுவர் நனைந்து ஈரமாவதும், அது அழுக்குப் பிடித்தது போல் தோன்றுவதற்கு மற்றொரு காரணம்."

"பிறகு எப்படி அது வெள்ளையாகிறது?"

"சுவரிலே படிந்த கால்சியம் ஹைட்ராக்ஸைடும் ஒரு ரசாயன மாறுபாட்டை அடைகிறது. காற்றிலே கொஞ்சம்—மிகவும் சொல்பமான அளவிலே—கரியமிலவாயு இருக்கிறது. சுவரில் அடித்த வெள்ளை காற்றாடும்போது இந்தக் கரியமிலவாயு அதில் படுகிறது. பட்டு அதிலுள்ள கால்சியம் ஹைட்ராக்ஸைடோடு சேருகிறது. இந்தச் சேர்க்கையில் கால்சியம் கார்பனேட் என்ற பொருளும் ஜலமும் உண்டாகின்றன. உண்டான ஜலமானது காற்றில் ஆவியாகக் கலந்து போகிறது. கால்சியம் கார்பனேட் நுண்ணிய பொடியாகச் சுவரில் தங்கி நிற்கிறது. இது மிகவும் வெள்ளையான வஸ்து. கரும்பலகையில் எழுதுவதற்கு உபயோ

கப்படுத்தும் சாக்குக்கட்டி கால்சியம் கார்பனேட். அதனுல்தான் சுவர் மிகவும் வெளுப்பாக ஆகிறது. தெரிந்ததா?''

எல்லோரும் தலையை அசைத்தார்கள்.

''ஏன் மாமா, வெள்ளை அடித்தால் கெடுதலா? நல்லதா? மாமா.''

''நல்லதுதான். ரொம்ப நல்லது. யார் கெடுதல் என்று சொன்னுர்கள்?''

''அம்மாதான் சொன்னுள். நல்லதுதானே? அப்படியானுல் நானும் வெள்ளையடிக்கப் போகிறேன்'' என்று குதித்துக் கொண்டு ஓடினுன் சாமு.

''அடே, வெள்ளை அடிப்பவனுக்கு நல்லதில்லை. சுவருக்குத் தான் நல்லது'' என்று கிருஷ்ணையர் சொன்னது சாமுவின் காதில் படவே இல்லை.

ஒருவேளை பட்டதோ, என்னவோ?





# சக்ரவாகம்

என். சிதம்பர சுப்ரமணியன்

---

"வருந்தாதே. கவலைப்பட்டு என்ன பயன்? மனத்தைச் சாந்தப்படுத்திக்கொள்" என்று சமாதானம் செய்ய முயற்சித்தார்கள். ஆனால் அவன் காதில் ஒன்றும் ஏறவே யில்லை. அவர்கள் சொல்வது அர்த்தமற்ற பிதற்றலாகத் தோன்றிற்று. அவன், 'சாந்தியாம்! சமாதானமாம்! சுகத்தையும் துக்கத்தையும் பற்றி அவர்களுக்கு என்ன தெரியும்? அனுபவத்தால் அசைக்கப்படாத அசேதன வஸ்துக்கள்! மனிதன் என்ன மரக்கட்டையா? அப்படியாகும் நாள் வேறு. கவலையை எப்படிப் போக்குவது? துக்கம் என்பது ஒரு துணியா, களைந்து எரிவதற்கு?' என்று பலவிதமாக யோசித்துக் கொண்டிருந்தான்.

சிவசர்மன் ஒரு சங்கீதக் கலைஞன் - கவிஞன். அவனுடைய ஒவ்வொரு நாடியிலும் தாளம் அடித்துக்கொண்டிருந்தது. அவன் ஹ்ருதயத்திலிருந்து இசை பெருகிக்கொண்டிருந்தது. பற்பல உணர்ச்சிகளுக்கு உருக்கொடுத்து அவைகளை ராகங்களாக்கிக் கொண்டிருந்தான். அப்பொழுது எழுபத்திரண்டு மேளகர்த்தாக்கள் பிரிபடவில்லை. பரதர், ஸாரங்கதேவர் இவர்களுடைய க்ரந்தங்களே எழுதப்படவில்லை. லக்ஷ்யமே அப்பொழுதுதான் உண்டாகிக்கொண்டு வந்தபொழுது லக்ஷணங்களைப்பற்றிச் சொல்வானேன்? அங்கங்கே ராகங்கள் முளைத்து மலர்ந்தன, அக்காலத்தில். இயற்கையின் இன்னிசையை வடித்துக் கீதங்களில் ஊற்றி, ஜனசமூகத்திற்கு விருந்தளித்துக்கொண்டிருந்தான் அவன்.

ஒரு வருஷம் ஒரு நிமிஷமாகக் கழிந்தது. அந்த வருஷத்தில் அவன் செய்த சிருஷ்டிகள் அநேகம். அபூர்வ ராகங்களில் (இப்பொழுது அவைகள் ஸகஜமாகவும் ஸாதாரணமாகவும் பாடப்படுகின்றன.) அழகான கற்பனையோடு அற்புத கீதங்கள் பாடியிருந்தான். அந்த வருஷந்தான் கல்யாணமாகி மனைவி வீட்டிற்கு வந்திருந்தாள். தன் உள்ளத்தில் ஊறும், உவகைக்கும் காதலுக்கும் அன்புக்கும் காரணபூதையான அந்த அம்பிகையை, ஸ்வரங்களை வைத்துக் கட்டின புஷ்பச் செண்டுகளால் அலங்கரித்தான்.

ஆனால் இன்றோ? அவன் அசையாமல் கரையோரம் உட்கார்ந்திருந்தான். ஸங்கீதத்தால் கட்டுண்டு மயங்கிக் கிடக்கும் நாகம்போல் கிடந்தது அந்தக் காட்டாறு. ஓடிவரும் ஜலத்தின் நுரையிடம் காதல் பேசிக்கொண்டிருந்தது நாணல். கவிஞனது மனம்போல வானத்தை எட்டிப்பிடிக்க வளர்ந்திருந்தன அனேக விருக்ஷங்கள். தூங்கும் குழந்தையைக் கண்டு இமை கொட்டாமல் ஆனந்திக்கும் தாயைப்போல, வனதேவதை கண் கொட்டாமல் விழித்திருந்தாள். இந்தப் பிரகிருதி சௌந்தர்யமானது வானக் கண்ணாடியில் பிரதிபலித்துத் திக்கெங்கும் பரவிக்கொண்டிருந்தது.

இந்தத் திவ்வியசோபை அவன் ஹ்ருதயத்தில் பிரதிபலிக்கவில்லை. அவன் உள்ளம் குளிர்ந்து உறைந்துபோயிருந்தது. திரும்பினான். அஸுரன் கைக்கு அகப்படாமல் வளைந்து கொடுக்கும் அப்ஸரஸைப் போல, ஒரு கொடி, மரக்கிளை ஒன்றில் படாமல் விளையாடிக்கொண்டிருந்தது. "கொடியே, விளையாடாதே! உனக்கு ஆபத்து" என்றான். புஷ்பங்கள் கண்சிமிட்டி அவனை வரவேற்றன. "மலர்களே, நீங்கள் யார் தெரியுமா? நிமிஷத்தில் தோன்றி மறையும் மனிதனின் கனவுகள் அடுத்த நிமிஷம் என்ன ஆகின்றனவோ, அதைப்போன்று உதிர்ந்து உலர்ந்து, வாடிவதங்கி மடியப் போகிறவர்கள்."

ஆற்றை நோக்கினான். இரண்டு கரையோரமும் ஜலம். நடுவில் ஒரு திட்டு. "உன் ஹ்ருதயத்தைத் திறந்து காண்பிக்காதே. என் புன்சிரிப்பைத் தின்றவளே! என்னால் தாங்க முடியவில்லை" என்றான்.

அவன் சிரித்து ஆறுமாத காலம் ஆகிறது. ஒரு வருஷ ஆனந்தத்தை வீசி எறிந்த காலதேவன், அப்படியே அந்தக் கயிற்றைச் சுருக்கிவிட்டான் போலும். கொஞ்சமேனும் எதிர்பாராதபடிதான் அது நடந்தது! சிவசர்மனையும் அவன் மனைவியையும் அழைத்துப்போக அவன் மைத்துனன் வந்திருந்தான். அவள் பிறந்த ஊர் ஆற்றின் எதிர்கரையில் இருந்தது. அவனுக்கு அலுவல்கள் அதிகமாயிருந்தபடியால் "வரமுடியாது" என்று சொல்லிவிட்டான். மனைவி தான் மாத்திரம் போகப் பிரியப்படவில்லை; "நீங்களும் வாருங்கள். நான் தனியே போகமாட்டேன்" என்றாள் அவள்.

"வெகு தூரதேசங்களுக்குப் போவது போலல்லவா பேசுகிறாய்? இதோ இருக்கிறது. இங்கிருந்து கூப்பிட்டால் காது கேட்கும். அதற்கா இவ்வளவு பயம்?"

"நானும் போகவில்லை."

"சரிதான், போய்விட்டு வா! இல்லாததற்கெல்லாம் பிரமாதப் படுத்தாதே. ஒரு வாரத்திற்குள் வந்து விடலாம். உடனே

கொண்டுவந்து விட்டுவிடும்படி சொல்லி அனுப்புகிறேன்'' என்று கூறிக்கொண்டே அவள் நெற்றியை மறைக்கும் ஒரு சுருள் கற்றையை விலக்கினன். ஆனல், அவள் மனத்தை மறைத்த இருள் கற்றையை அவன் விலக்கவில்லை!

அரை மனதுடன்தான் போனுள். அவள் போனதிலிருந்து அவனுக்கு இருப்புக் கொள்ளவேயில்லை. ஒவ்வொரு விநாடியையும் கணக்குப் பண்ணிக்கொண்டிருந்தான். அவள் வரவேண்டிய தினம் வந்தது. அவளை எதிர்பார்த்துக்கொண்டேயிருந்தான். ஆனல், அவள் வரவில்லை. அதற்குப் பதிலாக, மனித சமூகத்தை வாட்டும் பீடைகளைப்போலக் காட்டாற்றில் வெள்ளம் பிரவாகித்து வந்தது. அவன் மனம் தவித்தது. ஒன்றும் புரியாமல் தத்தளித்தான். கடைசியில், களைத்துப் போய்த் திணறிக்கொண்டு மைத்துனன் வந்தான்; மனைவி வரவில்லை! அவளை ஆறு விழுங்கி விட்டது!

அலறினன்; அடித்துக்கொண்டான்; "அவள் சரீரத்தையா அடித்துக்கொண்டு போயிற்று? இல்லை. என்னுடைய இன்பத்தை—நாங்களிருவரும் கட்ட ஆரம்பித்த கோட்டையை. அவள் உயிர் போகவில்லை; என் உயிர்தான் போய்விட்டது. இனி நான் வறண்ட மேகம். குரலை இழந்த ஊமை'' என்று சொல்லிச் சொல்லிப் புலம்பினன். அநேகம் பேர்கள் ஆறுதல் சொன்னர்கள். ஆனல், அறுந்த உள்ளத்தை இழுத்துத் தைக்க முடியுமா? ஆறு மாதகாலம் ஆய்விட்டது. ஆற்றில் வெள்ளம் வடிந்து வற்றிப்போய்விட்டது. துயரக்கண்ணீர் லேசில் வற்றி விடுமா?

மார்பைப் பிளந்து காட்டிக்கொண்டிருக்கும் அந்நதியை வெறுப்புடன் பார்த்தான். "சீ! வெட்கமில்லை. நீ ஒரு பேய்!'' என்று சொல்லிக்கொண்டே எழுந்திருந்தான். அவன் எழுந்த வேகத்தில் மணல்கள் ஜலத்தில் விழுந்து சலசலத்தன. பாம்பு சீறுவது போலிருந்தது அச்சப்தம். அவன் திரும்பிப் பார்க்காமல் வேகமாக நடந்தான். அந்திப்பொழுதின் ஊறும் உதிரத்தை, கதிரவன் தன் கைகளால் ஓர் ஆலமரத்தின் தலையில் தடவிக்கொண்டிருந்தான். செந்நிறக் கதிர்கள் சென்னியில் விழ, செஞ்சடையாகத் தோன்றின, ஆலம் விழுதுகள். செஞ்சடைகள் கீழே விழுந்து புரள, கொடிப் பாம்புகள் அதன் உடலில் தாவ ஆடும் அந்த விருக்ஷமானது, பார்வதிக்குப் பயானக ரஸத்தைக் காட்ட ஆடித் தாண்டவம் புரியும் சிவனைப்போல் இருந்தது. அவன் தன்னை மறந்து ஆச்சர்யத்தோடு அதைக் கவனித்துக்கொண்டிருந்தான்.

கூர்ந்து கவனித்தான். கிளையொன்றிலே, இரண்டு சக்ரவாக பக்ஷிகள் கொஞ்சிக் குலவி விளையாடிக்கொண்டிருந்தன. அவை

செய்துகொள்ளும் ஸங்கேதங்கள் அவனை இன்புறுத்தின. பரிவு கலந்த பாவனைப் பேச்சு அவன் மனவேதனையைச் சிறிது மாற்றிற்று. தன்னை இழந்து அச்சிறு ஜீவன்களின் இன்ப உலகத்தை எட்டிப் பார்த்தான். அத்தனை அசைவுகளுக்கும் ஆட்டங்களுக்கும் நடுவே கவிதை செய்து கொண்டிருக்கும், அவ்வுயிர்ப் பொறிகளைக் கண்டவுடன் அவன் மனக்கசப்பு மறைந்து போயிற்று; உணர்ச்சி ஊறி வந்தது. "இரக்கையுள்ள இன்பங்களே! மனிதன் எப்பொழுது பறவையாவான்? ஆனந்த மூர்த்தியான பறவையே! உன் இன்பத்தை இன்னிசையால் இறைத்துவிடு. உன் இரக்கையின் இசைக்கு என் கீதமெல்லாம் சமமாகுமா? காதலை முற்றும் அநுபவிக்கக் கொடுத்துவைக்கவில்லை நான். காதல் தெய்வத்தின் பறவை உருவே! என் காதலை ஏற்றுக் கொள். கால இருளில் ஒளிரும் குன்றுவிளக்கே! காலத்தை மீறி இருக்கிறாய் நீ. சாசுவதமான சக்ரவாகமே!" என்று மேலே சொல்ல ஆரம்பித்தான். ஆனால், வார்த்தை வாயிலிருந்து வெளி வரவில்லை. திடுக்கிட்டு ஸ்தம்பித்து நின்றான். ஸப்தநாடியும் ஒரு நிமிஷம் ஒன்றுபட்டு வேலை நிறுத்தம் செய்தன. அவன் மிகுந்த பரபரப்பை அடைந்திருந்தான். "ஐயோ! இல்லை. இல்லை. யமன் காதில் விழுந்துவிட்டதா? யமனே! விட்டு விடு. அந்தச் சிறு பறவையைக் கொல்லாதே! என்னை வேண்டுமானால் எடுத்துக்கொள்" என்று கதறினான். ஆனால், அந்தப் பசுமைப் பறவைகளுக்குப் பின்னால் கரவில் வந்த காட்டுப் பூனை, சக்ரவாகத்தின் காதலனைக் கவ்விக்கொண்டு போய்விட்டது. கவிஞன் சொன்ன வார்த்தைகளைக் கவனிக்கவேயில்லை.

பேடை கதறிற்று. இன்பமயமான ஸங்கீதத்தைப் பொழிய வேண்டிய தன் குரலில், துன்பஸ்வரங்களைத் தன் கண்ணீருடன் சிந்திற்று. சுற்றிச் சுற்றி வந்தது. கிளைக்குக் கிளை தாவிற்று.

பூனையின் பசி தணிந்தது. ஆல விருக்ஷத்தின் பயானக தாண்டவம் ஓய்ந்தது. பிரிவாற்றுமையின் பாட்டு, பிளந்துகொண்டு வந்தது. காதற் பறவையின் கூக்குரலைக்கேட்டு வனமே கண்மாரி சொரிந்தது. அந்த நீர் புல்நுனியில் இலங்கி நின்றது.

சிவசர்மன் தவித்துக்கொண்டிருந்தான். அந்தச் சிறு பறவைப் பெண்ணின் ஆறுத் துயரம், அவனை உணர்வற்றவனுகச் செய்தது. அது வெளியிட்ட ஒவ்வோர் ஒலியும் அவனிடம் எதிரொலியை உண்டாக்கியது. பிரிவுத் துயரத்திற்குப் பறவையானுல் என்ன, பண்டிதனுனல் என்ன? அவனுல் வெளியிடப்படாமல் அடக்கி வைக்கப்பட்டிருந்த சோக அலைகள், சக்ரவாகப் பறவையினுல்

அணை கிறிவிடப்பட்டு அவன் உள்ளத்தைப் பீறிக்கொண்டு வந்தன. நித்ய ஸங்கீதத்தைக்கொடுக்கும் சக்ரவாகப்புள் புண்பட்டு வாடுவதைக் கண்டு அவன்விட்ட பெருமூச்சுகள் வானத்திலே யிருந்த மேகங்களை விரட்டின. செடிகள் விசும்பிக்கொண்டும் மரங்கள் தலை குனிந்துகொண்டும் இருந்தன.

பறவை பிரிந்துபோன காதலனைக் கூவி அழைத்தது. அருமை யாக அழைத்தது; அன்புடன் அழைத்தது; இரங்கி அழைத்தது;

“கோலக் குரலோசை கேட்கக் குதித்துவந்த
காலன் கருவிழியால் பட்டுக் கரிந்தீரோ!
நரகத்தே வாடுகின்ற நல்ல மனிதருக்குக்
குரலினிமை காட்டிக் குளிரவைக்கப் போனீரோ!
முத்தை யுதிர்த்துவகை மூழ்குவிக்கும் வாய்திறந்து
தித்திக்கும் வார்த்தையொன்று தனித்திருந்து செப்பீரோ!”

என்றெல்லாம் பாடி அழைத்துப் பார்த்தது. காதலன் பதில் சொல்லவில்லை. பலம் எல்லாவற்றையும் பாடிக் கழித்தது. சக்தி முழுவதையும் தன் சோகக் குரலில் கொட்டிற்று. உயிரையே அப்பாட்டில் அர்ப்பணம் செய்தது. ஒருதரம் மேலெழும்பிற்று. மறுவிநாடியில் பாடகன் பாதத்தில் விழுந்து பிராணனை விட்டது.

அவன் அந்தப் பக்ஷியைக் கையிலெடுத்துக் கொண்டான். கண்களிலிருந்து ஜலம் ஆறாக வந்தது. “பறவையே! உன் மாதிரி ஏன் என் பிராணன் போகவில்லை?” என்று அதைக் கேட்டான். “பிரிவுத்துயரத்தை அறிந்த சகோதரி! நீ சாகவில்லை. உனக்குச் சாவு ஏது? நீ சிரஞ்சீவி. பிரிந்தவர்களின் ரத்தத்திற்கு உருவாக அமைந்தவள் நீ. உலகமே பிரிந்து தவிக்கிறது. பிரிந்து வந்ததை ஞாபகப்படுத்திக்கொண்டிரு, அழிவற்றவளே!” என்று சொல்லித் தன் காதலிக்குச் செய்திருக்க வேண்டிய ஸம்ஸ்காரங்கள் எல்லாம் செய்தான்.

அந்தப் பிரிவுக்குரல் மாத்திரம் அவன் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தது. அதை மறக்க அவனால் முடியவில்லை. உள்ளூற அது வேதனை செய்துகொண்டே இருந்தது. கடைசி யாகக் கேட்ட கானத்தைக் காதுகள் கீழே இறக்கவேயில்லை. அந்த ஸுந்தரி ஜீவனைப் பிழிந்து பாடின ஸ்வரங்களுக்கு ஓர் உருக் கொடுத்தான். தன் அனுபவத்தையும் அப்பொற் பறவை அனு பவித்த வேதனையையும் கொட்டினான். ஓர் அரிய ஆனந்த ராகம் உண்டாயிற்று. அதுதான் அவன் கடைசியாகப் பிறப்பித்த ராகம். அந்த ராகத்தின் பெயர் சக்ரவாகம்.

---

# காவியமும் கணக்கும்

‘விபூதி’

---

(ஒரு சிறு நாடகம்)

## காட்சி 1.

இடம்: சென்னையிலுள்ள உயர்தரப் பள்ளிக்கூடம் ஒன்றில் ஐந்தாவது பாரம், ஏ. வகுப்பு மாணவர்கள் இருக்கும் அறை.

நேரம்: மணி 3-45.

[பிற்பகல் இரண்டாவது ‘பீரியட்’ முடிவை அறிவிக்கும் மணி அடிக்கிறது. அதுவரை ஆங்கிலம் போதித்துக்கொண்டிருந்த உபாத்தியாயர் வெளியே செல்லுகிறார். கொஞ்சநேரம்வரை மாணவர்களின் இரைச்சல். இனிமேல் நடக்கப்போவது தமிழ்ப் ‘பீரியட்’. ஐந்துநிமிஷங்கள் ஆகியும் தமிழ் உபாத்தியாயர் வரவில்லை. அந்த வகுப்புக்குள் பெரியமாணவனும் சட்டாம்பிள்ளையுமாகிய நடேசன் என்பவன் எல்லோரையும் நிச்சப்தமாக இருக்கும்படிச் சமிக்ஞை செய்கிறான். அதை யாரும் கவனியாமல் முன்போலவே கூச்சல் போட்டுக்கொண்டு இருக்கின்றனர்.]

நடேசன்: ஏண்டா இப்படிக் கத்துகிறீர்கள்? சற்றுச் சும்மா இருங்களேண்டா, கோவிந்தா, ரங்கா!

கோவிந்தன்: (பின் பெஞ்சியிலிருந்து) என்னடா, நடேசா? தமிழ் வாத்தியாயர் வரவில்லைபோலிருக்கிறதடா! நம்ம பாடு குஷிதான்.

ரங்கன்: அடே, நம்ம தமிழ்வாத்தியாரின் பரமானந்த சிஷ்யன் ராஜூவைக்கேட்டால் எல்லாம் தெரிந்துவிடும். (தனக்கு முன் பெஞ்சியில் உட்கார்ந்திருக்கும் ராஜூவை நோக்கி) ஏண்டா பையா, உன்னுடைய குருநாதர் ஏன் வரவில்லை?

ராஜூ: (நிதானமாக) ஆமாம். வரத்தான் மாட்டார். மத்தியானம் ‘டிபன்’ சமயத்தில் என்னைக் கூப்பிட்டு ஜூரம் என்று சொல்லி டாக்டர் வீட்டுக்குப் போனார். டாக்டர்கிட்டே உடம்பைக் காட்டிவிட்டு வீட்டுக்குப் போய்விட்டார். நான்தான் மருந்துகூட வாங்கிக்கொடுத்துவிட்டு வந்தேன்.

நடேசன்: மருந்துகூட வாங்கிக்கொடுத்தாயா?—ஊமைக்கோட்டான்! ஏண்டா, இதை அப்பொழுதே சொல்லியிருந்தாயானால் ‘ஹெட்மாஸ்டரை’க் கேட்டுக்கொண்டு இத்தனைநாழிகைக்கு ‘மாட்ச்’ பார்க்கப் போயிருக்கலாமே?

மற்ற மாணவர்கள்: (ராஜூவை நோக்கி ஏளனமாக) பாவம்! அதனால் தான் இவன் மூஞ்சி இப்படி வாடிக் கிடக்கிறது!

கோவிந்தன்: அப்பாடா! இந்த மூன்று வருஷகாலமாக நானும் பார்க்கிறேன்: இந்தத் தமிழ்வாத்தியாருக்கு ஒருநாளாவது ஜுரம் வந்ததில்லையடா! பாவம்! அவருக்குக்கூட வந்துவிட்டதென்றால் ஏன் மழைபெய்து வெள்ளந்தான் ஓடாது? (எல்லா மாணவர்களும் கொல்லென்று சிரிக்கின்றனர்.)

நடேசன்: நீங்கள் எல்லோரும் இங்கேயே இருங்கள். நான் 'ஹெட்மாஸ்டர்' கிட்டே போய்வருகிறேன். (புறப்படுகிறான்.)

கோவிந்தன்: அடே, அதெல்லாம் முடியாது. இத்தனைநேரம் 'வெட்டுவெட்டு' என்று இங்கே உட்கார்ந்திருந்ததுபோதும். நாங்களும் கூட வருகிறோம்.

ராஜுவைத் தவிர மற்றவர்கள்: ஆமாம், ஆமாம். அதுதான் சரி. (வெளியில் செல்வதற்குத் தயாராகத் தங்கள் புஸ்தகங்களை அவசர அவசரமாக எடுத்து வைத்துக்கொள்கின்றனர்.)

நடேசன்: அப்படியானால் வரிசையாக ஒருவர் பின்னால் ஒருவராகச் சத்தம் பண்ணாமல் வாருங்கள்.

[நடேசன் முன்னே போகிறான். ராஜுவைத்தவிர மற்ற மாணவர்கள் 'நான் முந்தி, நீமுந்தி' என்று ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டே நடேசனைத் தொடர்ந்து அறையைவிட்டு வெளிச் செல்கின்றனர். கடைசியாக ராஜுவும் தன் புஸ்தகங்களை எடுத்துக்கொண்டு கிளம்புகிறான்.]

## காட்சி 2.

இடம்: அதே பள்ளிக்கூடத்தில் தலைமை உபாத்தியாயரின் அறை.

நேரம்: மணி 3-50.

[அறையினுள் தலைமை உபாத்தியாயர் ஏதோ ஒரு பெரிய 'ரிஜிஸ்டரை'ப் புரட்டியவண்ணம் தமது மூக்குக்கண்ணாடி மூலமாக அதிலுள்ள சில பக்கங்களை ஊன்றிப் பார்த்துக்கொண்டிருக்கிறார். அவருக்குக் கொஞ்ச தூரத்தில் பள்ளிக்கூட வரவுசெலவுக் கணக்கு எழுதும் நாராயணராவ் தம் வேலையில் கவனமாயிருக்கிறார். அப்பொழுது சட்டாம்பிள்ளை நடேசன் அறையில் நுழைகிறான். அவனுக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த மாணவர்கள் அறைக்கு வெளியில் குசுகுசுவென்று பேசிக்கொண்டு நிற்கின்றனர்.]

தலைமை உபாத்தியாயர்: (நிமிர்ந்து நடேசனை நோக்கி) என்னடா? (மற்ற மாணவர்களும் நிற்பதைக் கண்டு) 'கிளாஸ்' இல்லையாடா இப்பொழுது?

நடேசன்: (மிகவும் விசனமுற்றவன்போல் முகத்தை வைத்துக்கொண்டு) தமிழ் வாத்தியாருக்கு ஜுரமாம், ஸார். அவர் வரவில்லை, ஸார்.

தலைமை உபா: (தமக்குள்ளேயே) ஓஹோ! மறந்தே போய்விட்டேனே! மத்தியானம் அவர் 'ஜுரம்' என்று போய்விடவில்லை?—இரண்டாவது தமிழ்ப்பண்டிதருக்கு இப்பொழுது 'கிளாஸ்' இருக்கிறது. என்ன செய்யலாம்?

[அச்சமயம் கணக்கு உபாத்தியாயர் ராமகிருஷ்ண ஐயர் மாணவர்களைப் பார்த்து ஒருவிதப் புன்னகை புரிந்தவண்ணம் அறையில் நுழைகிறார். அவர் தலையில் இறுகக்கட்டின ஒரு தலைப்பாகை. நெற்றியில் அளவுகோல் பிடித்து இழுத்ததுபோல் மூன்று ரேகை சந்தனம். உடம்பு வெடிக்கும் படி ஒரு மூடினகோட்டு அணிந்திருக்கிறார். அரையில் கருடவாகனத்துக்குக் கட்டுவதுபோன்ற பட்டையான பட்டுக்கறைப் பஞ்சகச்ச வேஷ்டி.]

தலைமை உபா: (மாணவர்களை நோக்கி) சரி, தமிழ்தானே? (ராமகிருஷ்ண ஐயரைப் பார்த்து) பசங்களை வீட்டுக்குப் போய்விடச் சொல்லலாமா, ஸார்? (ராஜுவைத்தவிர மற்ற மாணவர்களின் முகங்களில் மலர்ச்சி. இதை ஓரக்கண்ணால் பார்த்து நாராயணராவும், ராமகிருஷ்ண ஐயரும் புன்னகை அரும்புகின்றனர்.)

ராஜு: (திடீரென்று முன்னால்வந்து குறுக்கிட்டு) அது என்ன, ஸார், தமிழ் என்றால் அவ்வளவு இகழ்ச்சி? தமிழர்களான நாம் தமிழுக்குக் கௌரவம் கொடுக்கவேண்டாமா, ஸார்?......

மற்ற மாணவர்கள்: (அவனை மேலே பேசவிடாமல் தடுக்க அவன் சட்டையின் பின்பாகத்தைப் பிடித்து இழுத்துத் தலைமை உபாத்தியாயரின் செவிக்குக் கேட்டதும் கேட்காததுமாய்க் கோபத்துடன்) அட சனியனே! உன் நாற்றவாயை மூடிக்கொண்டு இருக்கக் கூடாதா? அபசகுனம்போல வந்த லீவையும் கெடுக்கிறாயே!

தலைமை உபா: (முகத்தில் சற்று அசடுதட்டத் தலையைச் சொறிந்த வண்ணம்) ஆமாம், ராஜு! நீ சொல்வது சரிதான். (மாணவர்கள் எல்லோரையும் நோக்கி) அடே! எல்லோரும் 'கிளாஸு'க்குத் திரும்பிப்போங்களடா! வீணாக என் பொழுதைப் போக்கவேண்டும்? (ராமகிருஷ்ண ஐயரைப் பார்த்து) ஏன் ஸார், உங்களுக்கு இந்தப் 'பீரியட்' ஒன்றுமில்லையே? அப்படியானால் இந்தக் 'கிளாஸை' எடுத்துக் கொள்ளுங்களேன். இன்று கொஞ்சம் தமிழ் சொல்லிக்கொடுத்துப் பாருங்களேன்...என்ன?

ராம: (பல்லைக் காட்டிக்கொண்டே) இதோ போகிறேன்.

நடேசனும் மற்றும் சில மாணவர்களும்: (ராஜுவைக் கோபத்துடன் நோக்கி மெதுவாக) ஐயோ! கெடுத்தாயேடா பாவி! கணக்கு வாத்தியார் வரப்போகிறாராம்! இன்றைக்கு நரகவேதனைதான்!

[ராஜுவைத் திட்டிக்கொண்டே தங்கள் அறையை நோக்கிச் செல்லுகின்றனர். கணக்கு உபாத்தியாயரும் இரண்டு நிமிஷங்கள் கழித்து அறையைவிட்டுப் போகிறார்.]

## காட்சி 3.

இடம்: அதே ஐந்தாவது பாரம், ஏ. வகுப்பு அறை.

நேரம்: மணி 3-55.

[மற்ற மாணவர்கள் எல்லோரும் ராஜுவைப் பார்த்து முணுமுணுத்துக் கொண்டிருக்கின்றனர்.]

ரங்கன் : (பல்லை நறநறவென்று கடித்து) அடே ராஜு! உன்னைவிட்டேனு, பார்! வாடா வெளியிலே இன்றைக்கு. உன்னைப் பார்த்துக்கொள்கிறேன்!

(ராமகிருஷ்ண ஐயர் அறையில் நுழைகிருர்.)

ராம : (நாற்காலியில் அமர்ந்து நடேசனை நோக்கி) இன்றைக்கு என்ன பாடம்?

நடே : தமிழ்க்காவியம், ஸார்—கலிங்கத்துப்பரணியில் படையெழுச்சி.

ராம : சரி. போய் ரூல்கட்டை, கம்பாஸ் முதலியவற்றை எடுத்து வா!

நடே : (முகத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு) தமிழ்ப்பாடத்தில் அதெல்லாம் எதற்கு, ஸார்? (ராஜுவைப் பார்த்து முறைக்கிருன்.)

ராம : நல்லது. கணித ஸம்பந்தமில்லாத விஷயம் எதுவும் இந்த லோகத்தில் இல்லை. தமிழ் எழுத்துக்களுக்கு மொத்தத்தில் என்னவென்று பெயர்? நெடுங்கணக்கு என்றுதானே சொல்லுகிருர்கள்?

ரங்கன்: (பின்பெஞ்சியிலிருந்து உபாத்தியாயருக்குக் கேட்காதபடி) உங்களுக்கே சந்தேகம்போல் இருக்கிறது.

ராம : (தொடர்ந்து) காவியத்தில் யாப்பிலக்கணம் என்று சொல்லுகிருர்களே; இதெல்லாம் ஒருவிதக் கணக்குத்தானேடா?—சரி, போய் அவற்றை எடுத்து வா, நடேசா; எதற்கு உபயோகம் என்று அப்புறம் தெரியும்.

[நடேசன் வெளியில் சென்று சற்றுநேரங்கழித்து ரூல்கட்டை முதலியவற்றை எடுத்துவந்து உபாத்தியாயரின் மேஜைமீது வைக்கிருன்.]

ராம : (அருகில் இருக்கும் ஒரு மாணவனின் புஸ்தகத்தை வாங்கிக்கொண்டு) சரி, என்ன பாடம்? கலிங்கத்துப்பரணியா?

கோவிந்தன்: (பின்பெஞ்சியிலிருந்து தன்னை மீறி உரக்க) இல்லை, கலிங்கத்துக் கணக்கு!

ராம: யாரடா அவன்? பெஞ்சிமேல் ஏறடா, கழுதை!

கோவிந்தன்: (எழுந்து) நான் இல்லை, ஸார்.

ராம: நீ இல்லாவிட்டால் ஏண்டா எழுந்திருக்கிருய்? அதிலிருந்தே நீதான் என்று தெரியவில்லையா? இப்பொழுது ஏறப்போகிருயா, இல்லையா?

[கோவிந்தன் பெஞ்சியின்மேல் ஏறிநின்று சற்றுநேரம் விழிபிதுங்க எதிர்ச் சுவரை நோக்கியபடி கண்கொட்டாமல் இருக்கிருன். அவ்விதம் செய்வதனுல் அவன் கண்களிலிருந்து நீர் பெருகுகிறது.]

ராம: (கோழை மனமுடையவராதலால் இதைப்பார்த்து, அவன் அழுகிருன் என்று எண்ணி) சரி, உட்காருடா, கழுதை! இனிமேல் அப்படியெல்லாம் பேசாதே! (கோவிந்தன் முகத்தில் குறும்புச்சிரிப்புடன் பெஞ்சியில் உட்காருகிருன்.) நல்லது, இப்பொழுது ஆரம்பிக்கலாம் பாடத்தை. கலிங்கத்துப்பரணியை இயற்றியவர் யார்?

எல்லா மாணவர்களும்: (ஒரே சமயத்தில்) சயங்கொண்டார், ஸார்.

ராம: அட கழுதைகளா! ஒருத்தனைத் தானேடா நான் கேட்டேன்? எல்லோரும் ஏண்டா ஊளையிடுகிறீர்கள்?—சரி, இந்தக் கலிங்கயுத்தம் எப்பொழுது நிகழ்ந்தது?

ராஜு: ஊம்-ம்-ம்-ம். (பதில் சொல்லத் தெரியாமல் விழிக்கிறான்.)

ரங்கன்: (பின் பெஞ்சியிலிருந்து ராஜுவுக்குக் கேட்கும்படி) ஏண்டா, தமிழ் தமிழ் என்று பறந்தாயே; எப்படி இருக்கிறது?

ராம: அடே! நீ கோபாலா, உனக்குத் தெரியாதாடா? நீதான் சரித்திர பாடத்தில் கெட்டிக்காரனாயிற்றே?

கோபா: சுமார் கி.பி. 1095-இல், ஸார்.

ராம: (திருப்தியடைந்தவராய்) சரி. அடே ராஜு, அப்படியென்றால் எத்தனாவது நூற்றாண்டு?

ராஜு: (திருதிருவென்று விழித்துவிட்டு) பத்தாம் நூற்றாண்டு ஸார்!

ராம: பேஷ்! பேஷ்—சீ போடா, உதவாக்கரை. அடே நீ, கோபாலா?

கோபா: பதினோராம் நூற்றாண்டு, ஸார்.

ராம: எப்படி?

கோபா: (தான் சொன்னது தவறோ என்று எண்ணித் திகைத்து) தப்பா என்ன, ஸார்?

ராம: (அதற்குப் பதில் கூறாமல்) உங்கள் தமிழ்வாத்தியார் உங்களுக்கு இதெல்லாம் சொல்லித்தராமல் வேறு என்னடா கற்றுக்கொடுக்கிறார்? நன்றாயிருக்கிறது நீங்கள் தமிழ்படிக்கிற லக்ஷணம்! என்னடா தமிழ்படித்து நீங்கள் குப்பை கொட்டுகிறது? (மாணவர்கள் எல்லோரும் லஜ்ஜையினால் முகம் கவிழ்ந்து இருக்கின்றனர்.) சரி, சரி மூஞ்சியைத் தூக்கிவைத்துக் கொள்ளுங்கள். பாவம், அந்தச் சயங்கொண்டார் அல்லவா உங்களையும் உங்கள் வாத்தியாரையும் பார்த்து வெட்கப்பட்டுச் சாகவேண்டும்?—இப்பொழுது தெரிகிறதா கணக்குத் தெரிந்திருக்க வேண்டியதன் அவசியம்?

ரங்க: (தன் கூட்டாளி ஒருவனுடன் மெதுவாக) நானும் அப்பொழுதே பிடித்துப் பார்க்கிறேன். ஒவ்வொருதடவை பேசி முடிக்கும் போதும் இதே பல்லவிதான்!

ராம: நல்லது, ஏசுகிறிஸ்து எத்தனை வருஷங்களுக்கு முன்பு இருந்தார்? நீதான், ரங்கா?

ரங்கன்: (எழுந்து நின்று தனக்குள்ளே) அடே, என்னடா இது? பேரெழவாயிருக்கிறதே? ஏசுவுக்கும் இதற்கும் என்னடா சம்பந்தம்? (கூரையைப்பார்த்து யோசனை செய்வதுபோல் பாவனை பண்ணுகிறான்.)

ராம: என்னடா? இதற்குப்பதில் கூரையில் எழுதிவைத்திருக்கிறதா? அட முண்டமே!—அடுத்த பையன். கோவிந்தா, இங்கிலீஷ் வருஷம் இது எத்தனாவது?

கோவிந்தன்: 1938, ஸார்.

ராம: அப்படியென்றால்?

கோவிந்தன்: ஊம்-ம்-ம்-ம்...... (பதில் சொல்லத்தெரியாமல் விழிக்கிறான்).

ராம: அட களிமண்ணே, இதுகூடத் தெரியவில்லையாடா?—அடே நடேசா, நீ சொல்லு.

நடே: (தட்டுத் தடுமாறிக்கொண்டே) ஏசுநாதர் 1938 வருஷங்களுக்கு முன் இருந்தார் என்று அர்த்தம், ஸார்.

ராம: (எழுந்து கரும்பலகை யருகில் சென்று சாக்குக்கட்டியால் அதில் எழுதிக்கொண்டே) அதாவது 1938—1938=0. இந்தச் சுன்னத்திலிருந்துதான் இங்கிலீஷ்வருஷ ஆரம்பம். (மாணவர்களை ஒருமுறை சுற்றிப் பார்த்துவிட்டு) இந்தச் சுன்ன வருஷத்திலிருந்து நூறு வருஷம்வரைக்கும் முதல் நூற்றாண்டு. அந்த நூறும் வருஷத்திலிருந்து இருநூறும் வருஷம் வரைக்கும் இரண்டாம் நூற்றாண்டு. இப்படியே மற்றதெல்லாம்; தெரிந்ததா?

மாணவர்கள்: அப்பாடா! (அவர்களுக்கு ஜல்லென்று வேர்க்கிறது.)

ராம: சரி, இதை நோட்டுப்புஸ்தகத்தில் குறித்துக்கொள்ளுங்கள். (எல்லா மாணவர்களும் குறித்துக்கொள்வது போல் பாவனைசெய்கின்றனர்.) அப்புறம். நீங்கள் இப்பொழுது படிக்கப்போகும் கலிங்கத்துப்பரணி சோழராஜன் ஒருவனுக்கும் கலிங்க அரசன் ஒருவனுக்கும் நடந்த யுத்தத்தைப் பற்றிய பிரபந்தம் அல்லவா? அது ஒரு சிறிய காவியம். காவியம் படிப்பதென்றால் என்ன? அதுவும் ஒரு யுத்தத்திற்குச் சமானமே யாகும். இந்தப் போரில் உங்களுடைய ஆயுதங்கள் எவை தெரியுமா? ராஜு, நீ சொல்?

ராஜு: (ஒன்றும் புரியாமல் நாக்குழற) ரூல்கட்டை முதலானவை ஸார். (இதைக்கேட்டு மற்றமாணவர்கள் கொல்லென்று நகைக்கின்றனர்.)

ராம: (கோபத்துடன் ராஜுவின் தலைமேல் ரூல்கட்டையினால் ஒரு தட்டுத்தட்டி) மண்டு! மண்டு! (மாணவர்களைநோக்கி) யாப்பிலக்கணத்தில் நல்ல தேர்ச்சியே இதை எதிர்த்து ஜயிக்கக்கூடிய ஆயுதமாகும். சந்தக்கட்டு, அது இது என்கிறார்களே எல்லாம் என்ன? கடைசியில் பார்க்கப் போனால் இவையெல்லாம்—

நடேசன்: கணக்கே, ஸார்!

ராம: (சந்துஷ்டி அடைந்தவராய்) ஆமாம்! ஆமாம்! எல்லாம் கணிதந்தான்! இதனால்தான் நீங்கள் காவியத்தைப் படித்து அதன் சுவையை அனுபவிக்கமுடியும். இதனால்தான் காவியம் அழகுடன் கூடி விளங்குகிறது. இது இல்லாவிடில் ரஸமற்ற வெறும் பதக்கோவையே—உயிரற்ற எலும்புக் கூடுபோல.

ரங்கன்: (பின்பெஞ்சியிலிருந்து மெதுவாக) ஏது, விஞ்ஞானத்தில் இறங்குகிறார் போலிருக்கிறதே?

ராம: இப்பொழுது படிடா, நடேசா!

நடே: 348-ஆம் செய்யுள், ஸார். (மிடுக்குடன் படிக்கிறான்):

"எழுந்தது சேனை யெழலு மிரிந்தது பாரின் முதுது
விழுந்தன கான மடைய வெறுந்தரை யான நதிகள்."

ராம: (குறுக்கிட்டு) நில். இதைப் படிக்கும்போது போர்க்களம் என்பது எப்படி இருக்குமென்று தெரியவேண்டியது அவசியமல்லவா? (சாக்குக்

கட்டியுடனும் ரூல்கட்டையுடனும் கரும்பலகையருகில் சென்று அதன் நடுவில், மேல்பக்கம் மட்டும் அம்புபோன்ற முனையுள்ள சிலுவை ஒன்று வரைந்து அம்பு முனைக்கு மேலே 'வ' என்று எழுதுகிறார்.)

கோவிந்தன்: (இதைக் கண்டு திகைப்புற்று ரங்கனை நோக்கி) இது எதற்காக? உனக்குத் தெரிகிறதா?

ரங்கன்: (மெதுவாக) அதுவா? ஏசுநாதரைச் சிலுவையில் அறைந்தார்களே தெரியுமோ இல்லையோ? அதைப்போல இந்தச் சிலுவையில் தமிழ்க் காவியத்தை நம்ம கணக்குவாத்தியார் அறையப்போகிறார், பார்! (அருகில் உள்ள மாணவர்கள் சிரிக்கின்றனர்.)

ராம: (மாணவர்களை நோக்கி) 'வ' என்பது வடக்குத் திக்கைக் குறிக்கிறது. (அந்தச் சிலுவைக்குக் கிழக்குப்பக்கத்தில் பல சதுரங்கள் வரைந்து அவற்றின் தலையில் 'சோ' என்றும், மேற்குப்பக்கத்தில் சில முக்கோணங்களை வரைந்து அவற்றின் தலைப்புறத்தில் 'க' என்றும் எழுதிவிட்டு) இவை என்னவென்பது தெரிகிறதா? கோபாலா!

ரங்க: (தன் கூட்டாளி ஒருவனுடன்) ஜாமெட்ரிடா! முக்கோணம், சதுரம் எல்லாம் வருகிறதே!

கோபா: (எழுந்து) தெரிகிறது, ஸார். 'சோ' என்ற சதுரங்கள் சோழனுடைய படைகளைக் குறிக்கின்றன. 'க' என்ற முக்கோணங்கள் கலிங்க ராஜாவினுடைய சேனைகளைக் குறிக்கின்றன.

ராம: (திருப்தியுடன்) சரி. (மாணவர்களுக்குக் கரும்பலகையைச் சுட்டிக்காட்டி) இப்பொழுது கவனியுங்கள்! இதுதான் கலிங்கப் போர்க்களத்தின் படம். மஹாபாரதத்தில் அர்ஜுனனுடைய வ்யூஹத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள் அல்லவா? அதேபோலச் சோழப் படைவீரர்கள் சதுரம் சதுரமாகவும், கலிங்கப்படைவீரர்கள் முக்கோணம் முக்கோணமாகவும் அணிவகுத்து நின்றிருந்தார்கள் என்று வைத்துக்கொள்வோம். இவ்விதம் அணிவகுக்கும் சேனைத்தலைவர்களுக்கு க்ஷேத்ரகணிதத்தில் நல்ல தேர்ச்சி இருக்கவேண்டும். ஆகையினால் எதுவானாலும் சரி, கணக்கில்தான் வந்து முடிகிறது என்று தெரிகிறதல்லவா?—ராஜு, இப்படி வா. போர்டில் நடேசன் படித்த அடிகள் இரண்டையும் எழுது. (ராஜு கரும்பலகையருகில் சென்று ஒரே வரியில் இரண்டு அடிகளையும் எழுதுகிறான்.) சீ, போடா முண்டம்! என்னடா நீள எழுதிக்கொண்டு போகிறாய்? போய் இடத்தில் உட்கார். (ராஜு போய் உட்கார்ந்ததும் உபாத்தியாயர் கீழ்க்கண்டவிதமாகப் பதம் பிரித்துவிட்டுச் செய்யுளின் ஒவ்வொரு பதத்தின்மேலும் ஓர் எண் எழுதுகிறார்):

2 1 1 4 2 3 3
எழுந்தது| சேனை|| எழலும்| இரிந்தது| பாரின்| முதுது|| விழுந்தன|

1 2 2 1
கானம்| அடைய|| வெறுந்தரை| யான| நதிகள்.

ராம: இவை என்னவென்று தெரிகிறதா, ராஜு?

ராஜு: (புரியாமல்) இருநூற்றுப்பதினொருகோடியேசொச்சம் படை வீரர்கள், ஸார். (எல்லா மாணவர்களும் கொல்லென்று நகைக்கின்றனர்.)

ராம: (ராஜுவின் தலைமேல் ரூல்கட்டையால் தட்டி) சீ வாயை மூடு, மண்டு! அவ்வளவு வீரர்களா?—இந்தியாவின் மொத்த ஜனத்தொகை என்னடா?

ராஜு: (கண்கலங்க) முப்பத்தைந்து கோடி, ஸார்.

ராம: இந்தக் காலத்திலேயே ஆண் பெண் குழந்தைகள் அடங்க அவ்வளவே பேர்தான் இருக்க, எங்கேயிருந்தடா அந்தக்காலத்தில் சோழ ராஜ்யத்தில் இருநூற்றுப் பதினொருகோடி வீரர்கள் வந்தார்கள்?

நடே: (பரிஹாஸமாக) ஏன் ஸார்? இருக்கலாம், ஸார். போனதடவை 'ஸென்ஸஸ்' எடுக்கும்போது எத்தனையோ பேர் தங்கள் ஊர் பெயர் இவைகளைக் கொடுக்காமல் தலைமறைந்து விட்டார்களாம். அது போதாமல், இந்தக் கலிங்கத்துப்பரணியிலேயே ஓர் இடத்தில் தமிழரைத் தவிர்த்து வெளிதேசத்தாரும் சோழனுடைய சேனையில் இருந்தார்கள் என்று எழுதியிருக்கிறது, ஸார். ஒரே ஒரு செய்யுள் அதிலிருந்து படிக்கிறேன், கேளுங்கள், ஸார். (மிடுக்குடன் படிக்கிறான்):

"வத்தவர் மத்திரர் மாளுவர் மாகதர் மச்சர் மிலேச்சர்களே
துத்திரர் துத்தர் குடக்கர் பிடக்கர் குருக்கர் துருக்கர்களே."

என்ன ஸார்! (ராஜு உட்பட எல்லோரும் சிரிக்கின்றனர்.)

ராம: (நகைத்தவண்ணம்) போதுமடா, அதிகப்பிரசங்கி! நீதான் சொல்லேன், இந்த எண்களை எதற்காகப் போட்டேன் என்று?

நடே: அன்வயந்தானே ஸார் பண்ணியிருக்கிறீர்கள்?

ராம: சரி, மேலே 346-ஆவது செய்யுளைப் படி!

நடேசன்: (படிக்கிறான்:)

"அதிர்ந்தன நாலு திசைக ளடங்கின....."

ராம: (குறுக்கிட்டு) சரி, நில். நாலுதிசைகள். எந்த எந்த திக்குகள்? (அப்பொழுது பள்ளிக்கூடம் விடுவதை அறிவிக்கும் மணி அடிக்கின்றது. மாணவர்கள் எல்லோரும் தத்தம் புஸ்தகங்களை எடுத்துக்கொண்டு புறப்பட ஆயத்தமாகின்றனர்.) என்னடா அவசரம்? இன்னும் கொஞ்சநாழிகை இருங்களேண்டா; இதை முடித்துவிடலாம்.

நடேச: இல்லை, ஸார். இன்னொருநாள் ஆகட்டும், ஸார். தமிழ் வாத்தியார் இதேமாதிரி இன்னொருநாள் வராவிட்டால் அன்று பார்த்துக்கொள்ளலாம். நாங்களும் அதற்குள் நீங்கள் சொன்னதையெல்லாம் நன்றாக யோசனைபண்ணி மனதில் பதியவைத்துக்கொள்வோம். ஒரேயடியாக எல்லாவற்றையும் விழுங்கி ஜரிப்பித்துக்கொள்ள முடியுமா, ஸார்?

ராம: (புன்னகையுடன்) சரி. அப்படியானால் எல்லோரும் ஒழுங்காக அணிவகுத்துப் போங்கள். (முன்னால் அறையைவிட்டு வெளியேறுகிறார்.)

கோபா: (ரங்கனைப்பார்த்து) அடே! நம்ம ராஜுவை ஒன்றும் செய்ய வேண்டாமடா! அவன் இன்றைக்குப் பட்டபாடு போதும், பாவம்!

[எல்லோரும் சிரித்துக்கொண்டே ஒருவரையொருவர் பிடித்துத் தள்ளிக்கொண்டு வெளியே செல்கின்றனர்.]

திரை

# ஆபீஸ் மானேஜர்

'அநுஷம்'

---

தாமோதர செட்டியார், புதிதாக ஆரம்பித்த "குட்ரயுக்தி' என்னும் பத்திரிகையின் ஆசிரியர். அவருக்கு மாதம் ஐம்பது ரூபாய் சம்பளம். அவருடைய தர்மபத்தினி லோக விஷயங்களுக் கெல்லாம் அகராதி. விளக்குமாற்றுக்கு விலை முதல் வியன்னு தேசத்துச் சமாசாரம் வரையில் அவளுக்குத் தெரியும். தாமோதர செட்டியாரை நச்சு நச்சென்று நச்சி ஒவ்வொரு சமாசாரமாக அறிந்துகொள்வாள்.

செட்டியார் நல்ல எழுத்தாளர் என்று சொல்வதற்கில்லை. அவருக்குச் சுமாராகக் கதை எழுதத் தெரியும்; கட்டுரையும் எழுது வார். எல்லாம் ஒரே மூச்சில் எழுதினால்தான் வரும். ஏதாவது எழுத ஆரம்பித்தால், யோகம் செய்பவர் மாதிரி ஏகாக்ரசித்தம் உடையவராகி விடுவார். ஆபீஸில் அவருடைய ஏகாக்ர சித்தத் திற்குப் பங்கம் வருவதில்லை. வீட்டிலோ அவருடைய ஸஹதர் மிணிக்கு அவர் எழுதத் தொடங்கும்போதுதான் ஸந்தேஹங்கள் வந்துவிடும்.

இராத்திரி சாப்பிட்டுவிட்டு ஏதாவது கதை எழுத உட்காரு வார். அவர் தர்மபத்தினி அருகில் இருப்பாள்.

"இன்றைக்கு வெற்றிலைக்காரன் ஏன் வரவில்லை?" என்று ஒரு கேள்வி போடுவாள். அப்பொழுதுதான் செட்டியார் ஒரு காதற் கதையைச் சித்திரித்துக்கொண்டிருப்பார்.

"ஜப்பான் யுத்தத்தினால் பவுன் விலை ஏறப் போகிறதாமே?" என்று வெளிநாட்டு வியவகாரத்திற் பாயும் அம்மாளுடைய கேள்வி.

"கொஞ்சம் பேசாமல் இரு" என்று சொல்லிவிட்டுச் செட்டி யார் எழுதத் தொடங்குவார். நாலு வரி எழுதியிருப்பார்.

"நேற்றுவந்த கடிதத்திற்கு இன்னும் பதில்போடவில்லையா?" என்று அம்மாள் கேட்பாள்.

"ஹூம்" என்று கோபத்தோடு கர்ஜிப்பார் செட்டியார். மறுபடி இரண்டு நிமிஷம் அம்மாள் வாயைத் திறவாமல் வெற்றி லையை மெல்லும் காரியத்தில் ஈடுபட்டிருப்பாள்,

"பியாகடை ராகத்தில் இன்று ஒரு கீர்த்தனம் பாடம் பண்ணி யிருக்கிறேன்" என்று சங்கீதத்தை ஆரம்பிப்பாள் அடுத்தபடியாக.

"என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொள்ளாதே" என்று உறுமுவார் செட்டியார்.

"இந்தாருங்கள் பானைஜலம்; குடியுங்கள்; அடங்கிவிடும்" என்று தம்ளரில் ஜலத்தை எடுத்து முன்னே வைப்பாள். செட்டியார் ஆத்திரத்தோடு அதை எடுப்பார். அவள் முகத்திலேதான் கொட்டப்போகிறாரென்று நமக்குத் தோற்றும். அவரோ வாயைத் திறந்து இரண்டு மிடறாகக் குடித்து விடுவார்.

* * *

செட்டியாரால், நாள்தோறும் இந்தத் தொல்லை பொறுக்க முடியவில்லை. வீட்டை விட்டுத் தனியாக ஓர் அறை வாடகைக்குப் பேசி அதில் இராத்திரி வேளைகளில் இருந்து கதைகள் எழுதலா மென்று யோசித்தார். தனியே ஐந்து ரூபாய்க்கு ஓர் அறை பார்த்து விடுவதென்று தீர்மானித்துக்கொண்டார்; "அவளிடம் சொல்லவே கூடாது" என்றும் சங்கற்பம் செய்துகொண்டார். அந்தச் சங்கற்பம் நழுவிவிட்டது. பேச்சுப் பராக்கில் அந்த விஷயத்தைத் தம் தர்மபத்தினிக்குச் சொல்லிவிட்டார்.

"நல்லகாரியம்; உங்கள் புஸ்தகங்களைக் கூட அங்கே வைத்துக் கொள்ளலாம். இங்கே காற்றே வருவதில்லை. ஆனால்—"

"ஆனால் என்ன? சொல்லித் தொலை!"

"நான் உங்கள் யோசனைக்குக் குறுக்கே நிற்கவில்லையே. நீங்கள் ஏன் இப்படிக் கோபித்துக்கொள்கிறீர்கள்? இந்த வீட்டுக்குப் பதின்மூன்று ரூபாய் வாடகை; அறைக்கு ஐந்து ரூபாய்; ஆக மொத்தம் வீட்டு வாடகை வகையில் பதினெட்டு ரூபாய் போய்விடும். அதற்காக எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. சொல்வதற்கு முன் கோபித்துக்கொள்கிறீர்கள்."

"சொல்லேன்."

"பதினைந்து ரூபாயில் இதைவிடப் பெரிய வீடு ஒன்று பார்க்கிறது. அதில் ஓர் அறையை 'ஆபீஸ் ரூம்' ஆக வைத்துக்கொள்வது. அதில் உங்களைத் தவிர வேறு ஒருவரும் போகக்கூடாது. ராத்திரியோ பகலோ நீங்கள் இஷ்டப்படி இருந்து எழுதிக்கொண்டிருக்கலாம்."

செட்டியார் தலையைச் சொறிந்துகொண்டார். தர்மபத்தினியின் யோசனையிலே நன்மையிருப்பதாக நினைத்தார்.

"நீ அங்கேயும் வந்து தொந்தரவு செய்தால்?"

"இல்லவே இல்லை. நீங்கள் வேண்டுமானால் 'ஆபீஸ் ரூம் - ஒருவரும் நுழையக்கூடாது' என்று போட்டு விடுங்கள்."

* * *

செட்டியார் புது வீட்டுக்குக் குடிவந்தார். ஓர் அறை 'ஆபீஸ் ரூம்' ஆயிற்று. புஸ்தகங்கள், மேஜை, நாற்காலி, பெஞ்சு முதலிய சாமான்களோடு அது விளங்கிற்று.

வந்து இரண்டாம் நாள், செட்டியார் ஏதாவது எழுதலாமென்று யோசித்தார். ஒன்றும் தோன்றவில்லை. தாகமாக இருந்தது; ஸஹதர்மிணியைக் கூப்பிட்டு ஒரு தம்ளர் ஜலம் கொண்டு வரச் சொன்னார். அவள் கொண்டு வந்து 'ஆபீஸ் ரூமி'ன் நிலைக்கு அப்புறத்திலேயே வைத்துவிட்டுப் போய்விட்டாள். செட்டியார் எழுந்து சென்று எடுத்துக் குடித்துவிட்டு வந்தார்.

"உள்ளே வந்து கொடுக்கக் கூடாதோ?" என்று முணுமுணுத்தார். "நீங்கள், உள்ளே ஒருவரும் நுழையக்கூடாதென்று எழுதியிருக்கிறீர்களே!" என்ற பதில் வந்தது.

மறுநாள் காலையில் செட்டியார் தமக்குப் பிரியமான கம்ப ராமாயணத்தை எடுத்துப் படித்தார். பாரதி பாட்டு, வ. வே. ஸு. ஐயர் கதைகள், இன்னும் சில புஸ்தகங்கள் இவற்றைப் புரட்டிப்பார்த்தார். ஆபீஸுக்கு நேரமாய்விட்டபடியால் போட்டது போட்டபடியே இருக்கக் கிளம்பிவிட்டார். மாலையில் வந்து பார்த்தார். எல்லாப் புஸ்தகங்களும் காலையில் இருந்தபடியே பாதி திறந்தும் சிதறியும் கிடந்தன.

"இந்தப் புஸ்தகங்களை எல்லாம் ஒழுங்காக எடுத்துவைக்கக் கூடாதா?" என்று தர்மபத்தினியைக் கேட்டார்.

"உங்கள் 'ஆபீஸ் ரூமி'ல் நான் எப்படி நுழைவேன்!" என்று கூறினாள் அவள்.

"இந்த மாதிரியான காரியங்களை நீ கவனிக்காமல் வேறு யார் கவனிப்பார்கள்?" என்று கோபமாகக் கேட்டார் செட்டியார்.

* * *

இராத்திரி மிகவும் ஸ்வாரஸ்யமாகக் கதை எழுதிக்கொண்டிருந்தார் பத்திரிகாசிரியர். பேனாவில் மை ஆகிவிட்டது. "எங்கே அந்த மைப்புட்டியை எடு!" என்றார்.

"நான் நீங்கள் கதை எழுதும்போது வந்தால் தொந்தரவல்லவா? உங்கள் 'ஆபீஸ் ரூமி'ல் நான் நுழையலாமா?" என்று கேட்டுக்கொண்டே நிலைக்கு வெளியில் நின்றாள் அம்மாள்.

"இந்தா, இந்தமாதிரி தினந்தோறும் வாக்குவாதம் வேண்டாம். 'ஆபீஸ் ரூமு'ம் வேண்டாம்; ஒரு மண்ணும் வேண்டாம். என் பக்கத்திலே வராமல் தீண்டாச் சாதியாக இருந்தது போதும்" என்றார் செட்டியார். அவருக்கு 'ஆபீஸ் ரூம்' ஏற்பாடு சலித்துவிட்டது.

"நான் ஒரு யோசனை சொல்கிறேன்" என்று சிரித்தாள் அவர் மனைவி.

"சொல்லேன்" என்று புன்னகையோடு அவளைக் கோணலாகப் பார்த்தார் செட்டியார்.

"இந்த 'ஆபீஸ் ரூம்' இப்படியே இருக்கட்டும். நீங்கள் இந்த ஆபீஸின் சொந்தக்காரராகவே இருங்கள். என்னுடைய உதவியில்லாமல் உங்கள் ஆபீஸ் வேலை நடவாததனால் நான் இந்த ஆபீஸ் மானேஜராக இருக்கிறேன். ஏன்? சரிதானே?"

"சபாஷ்!" என்று மேஜைமேல் தட்டினார் செட்டியார். உத்தரவை எதிர்பாராமலே நிலைக்கு வெளியில் நின்றிருந்த 'மானேஜர்' உள்ளே புகுந்தார்.



# ஸங்கீதம்

எஸ். ஜி. எஸ்.

---

இச்சரித்திரத்தை எவரேனும் படித்தால் இது ஒரு பொய்க் கதை என்றே எண்ணக்கூடும். ஆனால் அவர் அவ்விதம் எண்ணு வது, சத்தியமென்பதே ஜனங்களுக்கு வேற்றுமுகமாக மாறிவிட்ட இக்காலத்தின் விசேஷமேயொழிய இச்சரித்திரத்தின் பிழையல்ல. எது எப்படி யிருந்தாலும், நான் இருக்கும் அவஸ்தையில், இச் சம்பவத்தை உடனே வெளிப்படுத்திப் படிப்பவரின் நம்பிக்கை யோடு அவருடைய உதவியையும் பிரார்த்தித்துப் பெறவேண்டி யிருக்கிறது.

என்னுடைய அவஸ்தைக்குக் காரணமான மகாநுபாவர் தம்முடைய பெயரை எனக்குத் தெரிவிக்கவில்லை. அவர் இன்னார் தான் என்று சொல்லுவதற்கு நான் அருகனல்ல. இச்சமயம் அவர் எங்கே இருக்கக்கூடும் என்று அநுமானிப்பதற்கே எனக் குச் சக்தியில்லை. அவரை நான் மறுபடியும் காண்பேனாவென்று எண்ணும்பொழுதெல்லாம் என்னை ஏக்கம் சூழ்ந்துவிடுகிறது.

* * *

அவருடைய தரிசனம் எனக்குக் கிடைத்ததே எதிர்பார்க்கக் கூடாத ஒரு விஷயம். காலையில் சுமார் ஐந்துமணி இருக்கலாம். மயிலாப்பூரில் ஸ்ரீ கபாலீசுவரருடைய குளத்தின் மேற்குப் பாரிசத் தில் ப்ராடீஸ் ரோட்டில் சென்றுகொண்டிருந்தேன். பிரகிருதி முழுவதும் நிச்சப்தமாக இருக்கும் அச்சமயத்தில் படிக்கட்டி லிருந்து எவரோ வீணைசகிதமாய், மனதை உருக்கும்வண்ணம் பாட்டுப்பாடுவதைச் செவியுற்றேன். ஆவலுடன் படியை அடுத் துச் சென்று ஒப்பற்ற அந்த ஸங்கீதத்தை அனுபவித்துக்கொண்டு நின்றேன் :

"ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோ?கொடிய
ஆலமமு தாக விலையோ?
அக்கடலின் மீதுவட வனனிற்க வில்லையோ?
அந்தரத் தகில கோடி
தாழாம னிலைநிற்க வில்லையோ? மேருவுந்
தநுவாக வளைய விலையோ?"

அவர் பாடினவிதத்தின் மந்திரசக்தியை நான் எவ்விதம் வர்ணிப்பேன்! இதுவரை நாம் கேட்டிருக்கக்கூடிய எல்லா ஸங்கீ தத்தைக்காட்டிலும் அது அதிக இன்பத்தைக் கொடுத்தது; அது மாத்திரம் அன்று; அதனுடைய குணமே வேறாயிருந்தது. அதைக் கேட்கும்பொழுது எனது செவி ஆனந்தத்தில் மூழ்கியது; அது மட்டுமா? பலவிதத்திலும் நிகரற்ற மகிழ்ச்சியை நான் அனுபவிக்க லானேன். என்னுடைய ஜீவியகாலத்திற்குள் எவையெல்லாம் நான் வெகு அழகாகக் கண்டிருந்திருப்பேனோ—காவேரிக் கரையோ, அஸ்தமனசூரியனோ, சுந்தரவதனமோ—அவையெல்லாம் அந்தக் கானத்தின் சக்தியால் மறுபடி உருவமெடுத்து என்முன் பிரத்தி யக்ஷமாயின. சிறுகுழந்தையின் கைவிரல்போல் மிருதுவான தென் றற்காற்று எனது தேகத்தைத் தடவியமாதிரி ஓர் உணர்ச்சி உண் டாயிற்று. அத்தென்றலால் கொண்டு வரப்பட்டவைபோல் சந்தனம், ரோஜா, அகில், பவழமல்லிகை, இவைகளுடைய விதவித வாசனைகள் என்னை மாறிமாறி மயங்கச்செய்தன. இவ்விதம் எனது பஞ்சேந்திரியங்களையும் ஈடுபடுத்தியதுமல்லாமல், அந்த நாதத்தின் குணமானது எனது ஆத்மாவையும் கவர்ந்தது. பிறரைத் துன்பப் படுத்தும் பொறாமை, கோபம், வெறுப்பு, குரூரம் முதலான ஒவ்வோர் எண்ணமும், ஜலத்தில் அலம்பப்பட்டு நீங்கும் அழுக் கைப்போல, மனதைவிட்டு உதிர்ந்து போகிறமாதிரியே தோன் றிற்று. 'அதோ! அடுத்துத் தென்படும் வாசலைக்கடந்தால், உடனே சுவர்க்கத்தைக் காணலாம். அங்கே பிரவேசித்தமாத்திரத் தில் நீயும் பேரின்பமடைவாய்; உன்னைப்போல் மற்றவரும் பேரின்பமடைவார்கள். இதை உத்தேசித்து, ஜீவாத்மாக்களுள் ஒவ்வொருவரும் ஒருவருக்கொருவர் சகாயம் செய்துகொள்ள வேண்டும்' என்கிறமாதிரி ஓர் எண்ணம் மனதில் வியாபித்தது.

அச்சமயம் அந்த மகான், நான் வந்து நிற்பதைக்கண்டு, தாம் பாடுவதை நிறுத்தினர். அந்த ஸங்கீதத்தின் மாயா மயக்கம் தீரவே, கனவின் மத்தியில் விழித்தவன்போல், மயிலாப்பூர் ப்ராடீஸ் ரோட் டிலிருப்பதை நான் மறுபடியும் உணர்ந்துகொண்டேன். அறியக் கூடாத ஒரு சக்தியால் நான் இழுக்கப்பட்டு அவரை அடுத்துச் சென்று நின்றேன். அவருக்குச் சுமார் இருபத்தைந்து வயது தான் இருக்கலாம். ஆனால் தலையில் ஜடையும் அதற்குத் தக்கபடி முகத்தில் ரோமமும் வளர்ந்திருந்தன. இடுப்பில் சாதாரணமான ஒரு கம்பிக்கரையுள்ள வேஷ்டியும் மார்பில் மான்தோலினால் ஒரு யக்ஞோபவீதமும் அணிந்திருந்தார். அவருடைய கையி லிருந்த வீணையை ஒன்றரை அணுவுக்குக்கூட ஒருவன் மதிக்க மாட்டான். ஏதோ காட்டுமரத்தினால் அது செய்யப்பட்டிருந்தது.

'இந்த வாத்தியத்தின் உதவியினலா, இந்த யௌவனத்திலேயே இவர் இவ்வளவு அற்புதமாகப் பாடினர்?' என்று வியப்புற்று நின்றேன்.

"என்ன தேடுகிறீர்? என்னவேண்டும்?" என்று அவர் கேட்டார். சில ஸங்கீத வித்வான்களுக்கு, பாடும்பொழுது மாத்திரமே அவர்களுடைய குரலோசை இனிமையாயிருக்கும். அவர்கள் பேசும்பொழுது தச்சன் மரத்தை வாளால் அறுப்பதைத் தோற்கடிப்பார்கள். அந்த மகானுக்கோ அவ்விதமாக இல்லே. அவருடைய குரலின் இனிமையில் ஈடுபட்ட நான், அவர் ஏன் பேசுவதை நிறுத்திவிட்டார் என்று விசனித்தேனேயொழிய, 'அவர் ஒரு கேள்வியைக் கேட்டிருக்கிருர், அதற்குப் பதிலளிக்கவேண்டும்' என்பதே எனக்குத் தோன்றவில்லே. அவர் மறுபடியும், "என்ன வேண்டும்? என்ன பார்க்கிறீர்?" என்று வற்புறுத்திக் கேட்டார்.

அதன்மேல், "நீங்கள் யாரோ? தெரியவில்லேயே! இதற்கு முன் உங்களேக் காணும்படியான பாக்கியத்தை இந்த நகரம் பெற்றதில்லேயே?" என்றேன்.

"இதற்குமுன் நான் இவ்விடம் வந்ததில்லே. நான் ஒரு ரிஷி" என்ருர்.

"அப்படியா!" என்றேன்.

"ஆனல் ரிஷிகணங்களின் மத்தியில் நான் யார்? ஓர் அற்பன்! மிகவும் தாழ்ந்த ஒரு ரிஷி" என்ருர்.

'தாழ்ந்த ரிஷியாவது! மேம்பட்ட ரிஷியாவது! என்னேப் பரிகாசம் அல்லவோ செய்கிருர்! ஆங்கிலப்படிப்பில் இறங்கினவர்களுக்கு மற்றது எது தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், ரிஷிகள் என்பவர்களே இல்லே, அதெல்லாம் கட்டுக்கதை என்பதுகூடத் தெரியாதா? என்னேப் படிக்காதவன் என்றல்லவோ எண்ணியிருக்கிருர்! அல்லது—' ஒரு சந்தேகம் உண்டாயிற்று. அவருடைய முகத்தை உற்றுப்பார்த்தேன். ஒரு சிறுகுழந்தையின் முகத்தைப் போல் களங்கமற்றுச் சாந்தமூர்த்தியா யிருந்தாரேயொழியப் பைத்தியக்காரன் ஒருவனுடைய அடையாளங்களில் ஒன்றும் அவரிடத்தில் தென்படவில்லே. எது எப்படியாவது இருக்கட்டும். அவர் என்னவோ அதியற்புதமாகப் பாடுகிருர். அதில் சந்தேகமில்லே. அதற்குமேல் அவர், தாம் ஒரு ரிஷி என்று சொல்லட்டும்; தாமே மகாவிஷ்ணுவென்றுதான் சாதிக்கட்டும்! அதனல் எனக்கு என்ன பாதகம்? எனக்கு வேண்டியதெல்லாம் அவர் மறுபடியும் பாடுவதைக் கேட்பதே. அவருடைய இஷ்டப்படி ஸல்லாபம் செய்வதில் எனக்கு என்ன கஷ்டம்?

இவ்விதமெல்லாம் எண்ணி, "நீங்கள் ஒரு தாழ்ந்த ரிஷி யென்று சொல்லுகிறீர்கள். அதிக வினயத்தினால்தான் அவ்விதம் சொல்லும்படியாயிருக்கும். ஆனால் எப்பேர்ப்பட்ட ரிஷியுமே இந்தியதேசத்திற்கு வந்து வெகுகாலமாயிருக்குமென்று எண்ணு கிறேன்" என்று சொன்னேன்.

"ஆம்! நாட்டில் ஜனங்கள் ஸம்ஸ்கிருதம் பேசுவதை விட்டது முதல் நாங்களும் இங்கே வருகிறதை நிறுத்திவிட்டோம். பொதுவில் ஒரு பாஷை தெரியாதுபோனால் எவ்விதம் ஸகவாஸம் செய்வது?"

"இந்தக் கஷ்டம் மனிதர்களிடையில்தான் உண்டு; ரிஷிகளுக் கென்ன? அவர்கள் எல்லாப் பாஷைகளையும் அறிவார்கள் அல்லவா? இப்பொழுது நீங்கள் வெகு சுலபமாக என்னுடன் தமிழில் பேசவில்லையா?"

"அப்படியல்ல. ரிஷிகளுக்கெல்லாம் ஸம்ஸ்கிருத பாஷை ஒன்றுதான் தெரியும். அகஸ்தியர் என்கிற மகரிஷியைப்பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர். அவர் ஒருவருக்குமாத்திரம் தமிழிலும் பாண்டித்தியமுண்டு. அவர் எனக்குச் சிநேகிதராகையால் நான் அவரை வருந்திக் கேட்டதன்மேல், சில தமிழ்ப்பாட்டுகளையும் இக்காலத்தில் தமிழர்கள் பேசுகிறமாதிரியாகக் கொச்சைத் தமிழையும் கற்றுக்கொடுத்து, 'தமிழ்நாட்டைப் போய்ப் பார்த்து விட்டு வா' என்று வழிகாட்டி அனுப்பினார். கொஞ்சம் தபோ தனத்தைச் செலவுசெய்து இந்த வேஷ்டியையும் சிருஷ்டித்துக் கொடுத்தார்" என்று அற்பப்பெருமையுடன் தம்முடைய கம்பிக் கரை வேஷ்டியைக் காண்பித்தார்.

அகஸ்தியராவது! இவருடைய சிநேகிதராவது! அடுத்த நிமிஷத்தில் வால்மீகியும் தாமும் அத்தான் அம்மான்சேய் என்று உறவு கொண்டாடுவார் போலும்!

"அகஸ்தியர் இன்னும் பொதியமலையில்தானே வசிக்கிறார்? அங்கிருந்து இவ்வளவுதூரம் நீங்கள் வந்தது தேகசிரமமாயிருக் குமே?" என்று வினவினேன்.

"கொஞ்சம் சிரமந்தான். என்ன செய்யலாம்? நாட்டைப் பார்க்கவேண்டுமென்று மனதில் ஆசை தோன்றிவிட்டது. ஓர் ஆசையைத் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்றால் அதற்கு அவசிய மான சிரமத்தை அநுபவித்துத்தானே ஆகவேண்டும்?"

"சிரமமில்லாமல் ஸஞ்சரிப்பதற்கு நான் ஒரு வழி காண்பிக் கிறேன்" என்றேன்.

"அது எவ்விதம்?"

"என்னுடைய மோட்டார்காரால்."

"மோட்டார்கார் என்றால் என்ன? அகஸ்தியர் அதை எனக்குச் சொல்லித்தரவில்லையே?"

"அந்தப் பதம் தமிழ் அல்ல; இங்கிலீஷ்."

"அதற்கு ஸம்ஸ்கிருதத்தில் என்ன பெயர்?"

"அதற்குச் சரியான பதம் ஸம்ஸ்கிருதத்தில் கிடையாது என்று எண்ணுகிறேன். உங்களுக்கு ஆக்ஷேபணை இல்லை என்றால், பதத்தைத் தேடுவதைக் காட்டிலும், அந்த வஸ்துவையே கண்டு அறிந்துகொள்ளலாம். அதை வெளியில் கொண்டு வருவதற்காகத் தான் அதனுடைய லாயத்திற்குப் போய்க்கொண்டிருந்தேன்" என்றேன்.

உடனே, "நானும் வருகிறேன்" என்று சொல்லி அவர் வீணையை எடுத்துக்கொண்டு ஆவலுடன் புறப்பட்டார். லாயத்திற்குச் சென்றோம். வண்டியை வெளியில் எடுத்து, அதனுடைய பின் ஆசனத்தில் வீணையை வைத்துவிட்டு முன் ஆசனத்தில் நாங்கள் இருவரும் உட்கார்ந்தோம். வண்டி புறப்பட்டது. புதிதான ஒரு விளையாட்டுச் சாமானைக் கண்டால் ஒரு குழந்தைக்கு உண்டாகும் சந்தோஷத்தை எல்லாம் அவரிடம் கண்டேன்.

"இது வெகு உல்லாசமாக இருக்கிறது. இவ்வளவு வேகத்தில் செல்லுகிறதே! இதற்குக் கால் வலிக்காதா?" என்று கேட்டார்.

"இதற்கு உயிரும் இல்லை; கால்களும் இல்லை. உருளுகிற சக்கரங்கள்தான் உண்டு."

"அப்படியா? தேவேந்திரனுடைய ரதம்மாதிரியா?"

"ஏறக்குறைய அதேமாதிரிதான். நீங்கள் அடிக்கடி அதில் வீற்றிருந்து ஸஞ்சாரம் செய்திருக்கக்கூடுமே?"

"அடிக்கடி நேராது. நான் சொன்னதாக வெளியில் சொல்ல வேண்டாம். தன்னுடைய ரதத்தில் மற்றவர்போகிறது என்றால் தேவேந்திரனுக்கு அவ்வளவாக மனசு ஒப்பாது. என்றைக்காவது ஒருதினம், நாட்டியமோ ஸங்கீதமோ அமிர்தரசமோ அதிகப்படி திருப்தியாயிருந்தால், அவர் 'மாதலீ, இவர்களைச் சற்று நம்முடைய ரதத்தில் வைத்துக்கொண்டு இரண்டு மூன்று உலகம் ஸஞ்சாரம் செய்துவிட்டு வா' என்று உத்தரவு கொடுப்பார்."

"இந்த மோட்டார்காருக்கு மேகத்தின்மேல் ஸஞ்சாரம் செய்யமுடியாது. பூமியின்மேல் கெட்டியான பாதையாய்ச் சமதளப்படுத்தியிருந்தால் மாத்திரமே, அதன்மேல் செல்லும்."

"நாம் இப்பொழுது எவ்விடத்திற்குப் போகிறோம்?"

"சிங்கப்பெருமாள்கோயில் என்று சுமார் மூன்று யோஜனை தூரத்தில் உள்ள ஓர் இடத்திற்குப் போகலாமென்பது என்னுடைய உத்தேசம். உங்களுக்கு ஆக்ஷேபனையில்லையே?"

"கோவிலா? வெகு சந்தோஷம்!"

"அந்தக் கோவிலில் எனக்குத் தெரிந்த ஒருவருக்கு இன்று காலையில் விவாகம் நடக்கப்போகிறது."

"விவாகமா? இன்னும் அதிக சந்தோஷம்! தெய்வத்தைக் காணுகிறமாதிரியே உத்தமமான தம்பதிகளைக் காணுவதும் ஒரு புண்ணியமான கார்யம்."

"இந்தத் தம்பதிகளைக் கண்டால், கல்யாணத்தை நிறுத்தி விட்டால் புண்ணியமல்லவா என்றே உங்களுக்குத் தோன்றலாம்?"

"அதென்ன, அப்படிச் சொல்லுகிறீர்? மங்களகரமான கார்யத்தை நிறுத்தலாமா?"

"பதினைந்து வயதுப்பெண்ணை அறுபத்திரண்டு வயதுள்ள புருஷன் மணக்கப்போகிறான். இந்த விஷயத்தில் மங்களம் ஏது? என் கண்ணுக்குத் தென்படவில்லையே!"

"ஹரஹரா! பெண்ணைப்போல் நாலுமடங்கு வயதுள்ளவனா? இது மிகவும் நியாய விரோதமல்லவா? ஒருவேளை அவன் ச்யவன ரிஷிமாதிரி, ச்யவனப்ராசத்தைச் சாப்பிட்டு மறுபடியும் யௌவனத்தை அடைந்தவனா? ஆனால் அவ்விதம் அடைவதற்கு மருந்துமாத்திரம் போதாது; அவர்மாதிரியே தபோபலமும் வேணும்."

"இந்த மாப்பிள்ளை அவ்விதம் ஒரு தபஸும் செய்ததில்லை. ஆயுஸுமுழுவதும் இவர் செய்த தபஸெல்லாம் தனத்தை அடைய வேண்டுமென்பதுதான். அதை அபரிமிதமாய் அடைந்து விட்டார். யௌவனத்தை அடையவுமில்லை; நிறுத்திக்கொள்ளவுமில்லை. பிறவிக் கூனர். இப்பொழுது வயோதிகத்தினால், நடக்கும்பொழுது கால் தடுமாறுகிறது. கைவிரல் துடிக்கிறது. கண் பார்வை மத்திமம். அந்த ஸுந்தரியின் துர்ப்பாக்கியத்தினால், முழுப்பார்வையும் இழந்து விடாமல், இன்னும் பாதிதிருஷ்டி தங்கியிருக்கிறபடியால்தான் அவளைக் கண்டு மோகமடைந்தார். கிளிக்கும் குரங்குக்கும் நடக்கப்போகிற இந்த விவாகத்தை ஆசீர்வதிக்கும் பொருட்டுத்தான் நாம் இத்தனை வேகமாகச் செல்கிறோம்."

"இக் கொடிய அநியாயத்தை அரசன் தடுக்கமாட்டானா?"

"எங்களுடைய அரசர் வெகுதூரத்தில் இருக்கிறார். அவருடைய வேலைக்காரர்களின் காதில் படாமல் இருப்பதற்காகவே, நகரத்தில் செய்யாமல், இந்த விவாகத்தை இச்சிறிய ஊரில், யாரும் அறியாமல், ஒரு கோயிலில் நடத்தப்போகிறார்கள்."

"கோயிலில் தெய்வம் உண்டல்லவா?"

"இருக்கத்தான் வேண்டும்."

"அந்தக் கன்னிகை தெய்வத்தின் காலைக் கட்டிக்கொண்டு அழமாட்டாளா? அவளுக்கு விமோசனம் கிடைக்காமற் போகுமா?"

"அவள் ஏன் அவ்விதம் அழுகிறாள்? அவள்தானே இந்த விவாகத்தைக் கோருகிறாள்!"

"இப்படியும் இருக்குமா! எதற்காக இந்த விபரீத ஆவல் அவளுக்கு உண்டாயிருக்கிறது?"

"அவளுடைய ஆவல் கல்யாணத்தை உத்தேசித்தது அல்ல; அதன் மூலமாய், தன்னுடைய தாய்தந்தையரைக் காப்பாற்ற வேணுமென்பதே அவளுடைய உண்மையான ஆவல்."

"நீர் சொல்லுவது எனக்கு விளங்கவில்லையே!"

"நீங்கள் கதைகளை வழக்கமாய் வாசித்துக்கொண்டிருந்தால், நான் விவரித்துச் சொல்லாமலே விஷயம் விளங்கிவிடும்."

"ஓ! எனக்கு எல்லாக் கதைகளும் தெரியும். புராணங்கள், இதிஹாஸங்கள் இவையெல்லாம் ஓர் அக்ஷரம் பிசகாமல் அறிவேன்."

"நான் குறிப்பிட்டது அம்மாதிரிக் கதைகளல்ல. சினிமாவின் கதைகளைப் படித்திருக்கிறீர்களோ?"

"சினிமா என்பவர் யார்? வால்மீகி, வேதவ்யாஸர் இவர்களைக்காட்டிலும் அவர் அறிந்தவரா?"

"சினிமா என்பது ஒரு 'அவர்' அல்ல, பல 'அவர்கள்'. பக்த கோடிகளைக் கணக்கிட்டு நோக்கினால், அவர்களே இக்காலத்துப் பிரபல தெய்வங்கள்."

"இது ஒன்றும் எனக்கு விளங்கவில்லையே! அகஸ்தியர் இவையெல்லாம் எனக்கு விவரித்துச் சொல்லாமலிருந்துவிட்டாரே; அது போகட்டும். அந்தப் பெண் ஏன் இவ்விதம் நடக்கிறாள்? அதை எனக்குத் தெளிவாகச் சொல்லும்."

"கேளுங்கள், சொல்லுகிறேன்: இன்றைய முகூர்த்தத்தின் மணவாளனாகப்பட்டவர், வட்டிக்குப் பணத்தைக் கடன் கொடுப்பவர். எங்களுக்கிடையில் அவ்விதம் சமயத்தில் கடன் கொடுப்பதே பேருதவியாயிருக்கும். ஆனால் சிலர், அவ்வுதவியையே

மற்றவரைக் கட்டும் விலங்காக மாற்றுவதுமுண்டு. அவ்வித அகிருத்தியத்தின் சம்பந்தமாக இந்த மணவாளன் அறியாத மர்மங்கள் இவ்வுலகத்தில் இல்லை. அவரும் இப்பெண்ணின் தகப்பனாரும் -இவர்களுடைய பெயரை வெளியிட எனக்கு இஷ்டமில்லை- நெருங்கிய பந்துக்கள் ஆகவேணும். பெண்ணின் தகப்பனார், சுமார் இருபது வருஷங்களுக்கு முன் தமக்கு விவாஹமாகும் காலத்தில் அவரிடத்தில் கடன் வாங்கினார். நம்பிக்கையின்மேலும், கல்யாணம் செய்துகொள்ளப் போகிற உல்லாசத்தினாலும், கடன் பத்திரத்தைக் கவனத்துடன் படிக்காமலே கையெழுத்துப் போட்டுவிட்டார். அதுமுதல் ஒவ்வொரு வருஷமும் தாம்ஒப்புக்கொண்டபடி வட்டியைக் கொடுத்துக்கொண்டு வந்திருக்கிறார். கடன் கொடுத்த கூனருக்கு எவரும் பெண் கொடுக்கச் சம்மதிக்கவில்லை. சுமார் பத்து வருஷத்திற்கு முன் ஓர் அநாதைப் பையனைத் தம் தத்துப் பிள்ளை மாதிரி வளர்த்து வரத் தொடங்கினார். சென்ற பத்து வருஷ காலமாக, இச்சிறுவனுக்கும் இச்சிறுமிக்கும் சிநேகிதமாயிருந்து இத்தருணத்தில் காதலாகப் புஷ்பித்திருக்கிறது. இவர்களுக்கே விவாகமாகுமென்பது இரு வீட்டுக்காரர்களும்—வெளியிட்டுச் சொல்லாதுபோனாலும்—மனதால் சம்மதித்த காரியம். அவ்விதம் கல்யாணமானால், தாம் பட்ட கடனின் முதலைக் கொடுக்க வேண்டியிருக்காதல்லவா என்கிற எண்ணத்தினால் பெண்ணின் தகப்பனார் செட்டாய்க் குடித்தனம் செய்யாமல் தம்முடைய சம்பாத்தியத்தை அப்பெண்ணின் கல்விக்காகவும் சௌக்கியத்திற்காகவும் தாராளமாகச் செலவு செய்துகொண்டு வந்து விட்டார். ஆகவே கடன் தங்கிவிட்டது.

"இப்பொழுது தக்க பருவம் வந்ததனாலும் காதலினாலும் பூரித்திருக்கும் அச்சிறுமியை நோக்கும்பொழுது அந்தக் கடன் கொடுத்த கூனருக்குப் புதிய எண்ணம் உண்டாகிவிட்டது. 'அந்தப் பயலுக்கு வேறு யாராவது சிறுக்கியைப் பிடித்துக் கட்டினால் போதும். உலகத்தில் எத்தனையோ சிறுக்கிகள் இல்லையா?' என்று எண்ணினார். பாவம்! அந்தப் பையன்—அநாதையா யிருந்தவனைப் பத்து வருஷமாகத் தகப்பனைப் போல் வளர்த்து வந்தவர், இவ்விதம் சொல்லும்பொழுது நேரில் எதிர்த்துப் பேசமுடியாமல் தத்தளித்தான். பிறகு, இவருடைய ஆதரவு வேண்டாம், ஆஸ்தியும் வேண்டாம், எங்கேயாவது சென்று கூலிவேலை செய்தாவது தன்னையும் அச்சிறுமியையும் ரக்ஷித்துக் கொள்ளலாமென்று சொல்ல மனம் துணிந்தான். அச்சமயத்தில் கூனர் தம்முடைய இரண்டாவது இடி ஒன்றை இடித்தார். "மரகதத்தை நானே விவாகம் செய்துகொள்ளப் போகிறேன்" என்றார். அதனுடன்

கடன்பத்திரத்தை எடுத்து உரக்கப் படித்தார். தாம் மரகதத்தைப் பாணிக்கிரகணம் செய்தவுடன், பத்திரத்தைத் தீர்ந்ததாகத் திருப்பிக் கொடுப்பதாகவும், விவாகத்திற்குச் சம்மதிக்காத பக்ஷத்தில் உடனே வியாஜ்யம் செய்யப்போவதாகவும் சபதம் செய்தார். பத்திரத்திலோ, வாயால் பேசின வட்டியைப் போல் இருமடங்கு வட்டி எழுதப்பட்டிருந்தது; வட்டிக்கு வட்டி எழுதப்பட்டிருந்தது. இதுவரைக்கும் திருப்பிக்கொடுத்த பணத்தை இரண்டொரு தடவை தவிர வரவு வைத்து எழுதவில்லை. இவ்விதம் பெண்ணின் தகப்பனார் நம்பிக்கையினால் மோசம்போய்விட்டார். அசலும் வட்டியும் கூட்டிப் பார்த்தால் அவர் தம்முடைய வீடு வாசல் நிலம் யாவற்றையும் இழந்துவிட்டு இடுப்புத் துணியுடன் வெளியே புறப்பட்டாலும் கடன் அடையாது. அவரும் அவருடைய சம்சாரமும் மானத்திற்குக் கட்டுப்பட்டவர்கள். தங்களுடைய ஆஸ்தி முழுவதையும் கடன்காரருக்குக் கொடுத்துவிட்டு எங்கேயாவது கண் காணாமல் சென்று தங்களுடைய பெண்ணின் வாழ்வையாவது பாதுகாக்க எத்தனித்தார்கள். இவ்விஷயங்களை அறிந்தவுடன் அச்சிறுமி தன்னால் தன்னைப் பெற்றவர்கள் கஷ்டம் அடையக்கூடாதென்றும், தன்னுடைய தேகத்தையும் வாழ்நாளின் இன்பத்தையும் தியாகம் செய்து அந்தக் கூனரையே விவாகம் செய்துகொள்வதாகவும், எவரேனும் தடுத்தால் கிணற்றில் விழுந்து பிராணத்யாகம் செய்வதாகவும் தீர்மானித்தாள். என்ன சொல்லியும் அவளுடைய தீர்மானத்தை மாற்ற முடியவில்லை. இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பத்தில் இந்த விவாகத்திற்கு இன்றைய தினம் காலையில் முகூர்த்தம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் புண்ணியமான கார்யத்திற்கு மனிதர் குடியிருக்கும் வீடு ஏற்றதில்லை யென்பதுபோல், பிரார்த்தனை ஸ்தலமாகிய அந்தக் கோவிலைப் பொறுக்கும்படியாக நேரிட்டது. கூனருக்கும் எனக்கும் ஸங்கீதத்தின் மூலமாகப் பரிசயம். அதில் எவருக்கு அதிக மோகம் என்று சொல்லுவது பிரயாசம். நான் ஒருவனே இந்தக் கல்யாணத்திற்கு அழைக்கப்பட்டவன். அப்படியிருக்க, அந்தக் கோவிலின் தெய்வமாவது ஒரு வழியைக் காட்டி, கல்யாணம் நடக்காமலே நின்றுவிடாதா என்கிற எண்ணத்துடன்தான் அவ்விடம் போகிறேன்'' என்று முடித்தேன்.

''சரணம் அடைந்தவர்களைத் தெய்வம் கைவிடாது'' என்று அந்த மகான் மிருதுவாக மொழிந்தார். நான் ஒன்றும் சொல்லவில்லை. மௌனமாகவே பாக்கியுள்ள வழியைக் கடந்தோம்.

ஊரைச் சேர்ந்தவுடன் அங்குள்ள சத்திரத்தைத் தேடிச் சென்றோம். அதன் திண்ணையின்மேல் கூனர் வீற்றிருந்தார். தாம்

செய்யப்போகிற கார்யத்திற்கு இதர சாக்ஷிகளை அவர் வரவேற்கும் ஸ்திதியில் இல்லை. அவருக்கே மனதிற்குள் கொஞ்சம் லஜ்ஜை தோன்றியிருக்கவேண்டும். ஆகையால், முகத்தைச் சுபாவத்தில் உள்ள கோணலைக்காட்டிலும் சிறிது அதிகமாகவே கோணிக் கொண்டு, "யார் உன்னுடைய சிநேகிதன், தாடியும் கையில் விறகுக்கட்டுமாக?" என்று இகழ்ச்சியாய்க் கேட்டார்.

"இவர் ஒரு ஸங்கீத வித்வான்" என்றேன். அதற்குள் அந்த மகான், "இது விறகுக்கட்டு அல்ல. இது ஒரு வீணை; விசுவகர்மா எனக்கு உண்டாக்கிக் கொடுத்தார்" என்று பெருமையுடன் சொன்னார்.

"ஓஹோ! விசுவகர்மாவா!" என்று கூனர் இகழ்ந்து சிரித்தார். "நீ என்ன கின்னரனோ? குதிரையின் முகத்தைக் காணோமே? நீதான் நாரதரிஷி என்று சொல்லிக்கொள்ளேன்! ஸங்கீத வித்வானும் இவன்! க்ஷவரம்செய்து கொள்ளுவதற்குக்கூடக் காசு இல்லைபோல் இருக்கிறது! யாரோ ஒரு 'மாட் பெக்கர்'."

"அவர் என்ன சொல்லுகிறார்? எனக்குப் புரியவில்லையே? 'மாட் பெக்கர்' என்றால் என்ன?" என்று அந்த மகான் என்னைக் கேட்டார்.

"அவர் என்னவோ இங்கிலீஷில் பேசுகிறார். அதைக் கவனிப்பானேன்?" என்று நான் சமாதானமாகச் சொன்னேன்.

"எனக்குக் கோபம் வராது; பயப்படவேண்டாம். இங்கிலீஷ் எனக்குத் தெரியாமற் போனாலும், அவருடைய குரலிலிருந்து அது ஒரு நிந்தை என்று ஏற்படவில்லையா? இருந்தாலும் நான் கோபித்துக்கொள்ளவில்லையே? கூசாமல் அந்த வார்த்தைகளுக்குத் தமிழில் அர்த்தம் சொல்லும்" என்று சிறிது கண்டிப்புடன் கூறினார். என்னால் அசட்டை செய்ய முடியவில்லை.

"'பெக்கர்' என்றால் பிச்சைக்காரன்—"

"சரி, நான் ஒரு பிச்சைக்காரன். 'மாட்' என்றாலோ?"

"'மாட்' என்றால் பயித்தியக்கார" என்றேன்.

"அப்படியா?" என்றார். அவரை அறியாமல் அவருடைய கண்களில் நெருப்புப்பொறி பறந்தது; ஆனால் உடனே மறைந்து விட்டது. பிறகு முகத்தில் எப்பொழுதும்போல் சாந்தம் பிரகாசித்தது.

கூனர், "என்ன? உன்னுடைய 'மாட் பெக்கர்' சிநேகிதன் நெற்றியைச் சுளுக்கினால் நான் பயந்துவிடுவேன் என்று நினைத்தானோ?" என்று பரிஹஸித்துக் கொண்டே, தம்முடைய காலை வேளை அநுஷ்டானங்களில் ஒன்றாகிய சுருட்டுப் பிடிப்பதற்காக

ஒரு நீளச்சுருட்டை நுனியில் கொளுத்தி வாயில் வைத்துக் கொண்டார்.

"அடாடா! எறிகிற குச்சியை வாயில் வைக்கிறாரே!" என்று அந்த மகான் ஆச்சரியப்பட்டார்.

கூனர் சுருட்டை நீக்கி, "உன் கார்யத்தைப் பார்" என்று அதட்டிவிட்டு, வாயாலும் மூக்காலும் புகையை வெளியிட்டார்.

உடனே அந்த மகான், "அடாடா? அவர் தீப்பிடித்து எரிகிறார். நீர் சும்மா இருக்கிறீரே?" என்று பரிதபித்து, "தீமைக்குப் பதில் நன்மை செய்ய வேண்டாமா?" என்று சொல்லி, அருகில் ஒருவன் பல் விளக்குவதற்காகக் கொண்டுபோன செம்பைப் பிடுங்கி, அதிலிருந்த ஜலத்தைக் கூனரின் தலையின்மேல் கவிழ்த்தார்.

குளிர்ந்த ஜலம் பட்டவுடன், கூனரின் தேகம் முழுவதும் சிலிர்த்தது. வெடவெட வென்றுநடுங்கிற்று.

"ஹெல் அண்ட் டாம்நேஷன்! நாசமாய்ப் போனவனே!" என்று கத்தினார். "வேணுமென்று என் தலையில் தண்ணீரைக் கொட்டிவிட்டு எனக்கு உபகாரம் செய்கிறதாகப் பாசாங்கு வேறு செய்கிறாயா?" என்று இங்கிலீஷ், தமிழ், உருது, இம்மூன்று பாஷைகளிலும் தமக்குத்தெரிந்த நிந்தைகளை எல்லாம் சரமாரியாகச் சொரிந்தார். அந்த மகானோ இதைச் சற்றும் சட்டை செய்யாமல், வீணையைக் கையில் எடுத்துப் புன்னாகவராளி ராகத்தில் பாட ஆரம்பித்தார்:

"பொன்னொடு மணியுண் டானாற்
புலையனுங் கிளைஞ னென்று
தன்னையும் புகழ்ந்து கொண்டு
ஜாதியின் மணமுஞ் செய்வார்;
மன்னரா யிருந்த பேர்கள்
வகைகெட்டுப் போவா ராயின்
பின்னையு மாரோ வென்று
பேசுவா ரேசு வர்ரே!"

ஆனந்தத்தையே உருக்கிப் பொழிந்த மாதிரி பொழியும் அந்த ஸங்கீதத்தைக் கேட்டவுடனே, அந்தக் கூனரின் முகத்தில் முன்பு ஜலத்தைக் கவிழ்த்தபொழுது உண்டான மாறுதல்களைக் காட்டிலும் வியப்பான மாறுதல்களைக் கண்டேன். முதலில் தம்முடைய நிந்தனைகளை நிறுத்திவிட்டுச் சற்று நேரம், "ஆ" என்று வாயைத் திறந்தவண்ணம் நின்றார். பிறகு தம்மேல் வெற்றி கொள்ள வந்திருக்கும் நற்குணத்தை எதிர்த்துப்போராடுவதால் மூச்சுத் திணறிப்போனவர் மாதிரி, இரண்டு மூன்று தடவை

தேகம் துடித்துப் பெருமூச்சுவிட்டார். பின்னர், அசையாமல் சாந்தமாகச் சற்று நின்றார். அதன் பின் தம்மை அறியாமலே, முகமலர்ந்து, "ஆஹா! ஆஹா!" என்று இரண்டொரு தடவை மெல்லென மூச்சுவிட்டார். பிறகு திடீரென்று விழித்தாற்போலத் தம்முடைய சுபாவமான கடுகடுத்த முகத்தைக் காண்பித்துக் கொண்டு, "உன்னுடைய தோழன் பலே ஆசாமி! விறகுக் கட்டு மாதிரி இருக்கிற வீணையை வாசித்துக்கொண்டு தன்னுடைய பாட்டின் சக்தியால் என்னுடைய கோபத்தை மறக்கடித்து, 'சபாஷ்' சொல்லும்படியாகச் செய்துவிட்டான். இனி, சற்று நேரம் இங்கே நின்றேனாகில், என்னுடைய பணத்தை எல்லாம் அவனுக்குக் கொடுக்கும்படி செய்துவிடுவான். நான் ஓடிப்போகிறேன்" என்று சொல்லிச் சத்திரத்திற்குள் நுழைந்துகொண்டு, கதவைப் 'படார்' என்று அறைந்து சாத்தி, உள்தாழ்ப்பாளைப் போட்டுக் கொண்டார்.

அந்த மகான் பாட்டை நிறுத்திச் சற்றுப் புன்னகை செய்து கொண்டு, "வாரும். கோவிலுக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்து வரலாம்" என்றார்.

"சுவாமீ! அப்படியே ஆகட்டும். இனி நீங்கள் இட்ட கட்டளைகளை எல்லாம் கேட்கிறேன். எனக்கு ஒரு வரன் கொடுக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தேன்.

"என்ன வரனைக் கேட்கிறீர்?"

"இன்றையதினம் நடக்கப்போகிற முகூர்த்தத்தில் மேளகாரனை நிறுத்திவிட்டுத் தாங்களே தயவுசெய்து பாடவேண்டும்."

"அப்படியே ஆகட்டும்."

* * *

நாங்கள் புஷ்கரிணியில் ஸ்நானம் செய்துவிட்டு அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, பெருமாளைச் சேவித்துவிட்டு வெளிப் பிராகாரத்திற்கு வரும்பொழுது முகூர்த்தசமயம் நெருங்கிவிட்டது. அப்பிராகாரத்தின் ஒரு மூலையில் இந்த ரசாபாசமான விவாகம் தொடங்கிற்று. அப்பொழுதுதான் கலியாணப் பிள்ளை ஒரு தடியின் உதவியால் நடந்துவந்து மணையில் உட்கார்ந்தார். கடன் பத்திரத்தையும் ஒரு பௌண்டன் பேனாவையும் இடுப்பிலிருந்து எடுத்துத் தமது பக்கத்தில் தரையில் வைத்தார். அவருடைய தத்துப்பிள்ளை, இருகண்களும் கோவைப் பழங்கள் போல் தோன்ற, அவருக்குப் பின்னால் கையைக் கட்டிக்கொண்டு நின்றான். அவன் கையைக் கட்டிக் கொண்டிருப்பதை உற்று நோக்கினால், அது மரியாதைக்காக அல்ல, தன்னை மீறித் தன்னுடைய கைகள் அந்தக் கூனருடைய முதுகெலும்பைப் புடைத்

துப் பொடி செய்யாமல் இருக்கவேண்டுமென்ற பத்திரத்திற்காக வென்றே தோன்றிற்று. மரகதமோ? பாவம்! வசந்த காலத்தில் லஜ்ஜையுடன் வெளிப்படும் தளிர்களைப்போல் மிருதுவான தேகம் படைத்த அக்கட்டழகி, கண்களில் நீர்பெருக, பற்களால் உதட்டைக் கடித்துத் தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு மணையில் எவ்வளவு தூரம் ஒதுங்கி உட்காரமுடியுமோ, அவ்வளவு தூரத்தில் வீற்றிருந்தாள். அவளுடைய தாய்தந்தையரோ, இனி, பகவான் தான் தங்களுடைய பெண்ணைக் காப்பாற்ற வேண்டுமென்று எண்ணி ஏங்கினவர்களாகக் கோவில் சந்நிதியையே நோக்கிக் கொண்டிருந்தார்கள். புரோகிதரும் மேளகாரர்களும், இவ்வித மான அலங்கோலத்தைக் கண்டு வியப்புற்று, ஒன்றும் செய்யாமல் தயங்கி நின்றார்கள்.

அத்தருணத்தில், "சுவாமி! இப்பொழுது ஒரு பாட்டைக் கிருபை செய்யவேண்டும்" என்று அந்த மகானைப் பிரார்த்தித்தேன். அவர் உடனே தம்முடைய சுவர்ண சாரீரத்தில் தொடங்கினார்:

"கல்லார்க்குங் கற்றவர்க்குங்
களிப்பருளுங் களிப்பே!"

முதல் ஸ்வரங்களை அவர் அந்தாத்தில் தெளித்தவுடனே, கூனர் திடுக்கிட்டு, "இவன் இங்கும் வந்துவிட்டானா?" என்று முணுமுணுத்துக்கொண்டு மணையைவிட்டு எழுந்து பார்த்தார். பிறகு அவ்விதம் விட்டுப்போகச் சக்தியற்றவராய், முன்போலவே வீற்றிருந்து பாட்டைக் கேட்கத் தொடங்கினார். அங்கிருந்த ஒவ்வொருவரும், அந்த ஸங்கீதத்தின் மகத்துவத்திலே கட்டுப்பட்டு முகம் ஒவ்வொருவிதமாக மாறி நின்றார்கள். ஆனால் என்னுடைய கவனமெல்லாம் அந்த மணவாளன் மேலேதான் இருந்தது.

"காணார்க்கும் கண்டவர்க்கும்
கண்ணளிக்கும் கண்ணே!"

"ஆஹா! ஆஹா!" என்றார் கூனர். தம்முடைய திருஷ்டி, தம்முடைய பால்யதசையில் போல், முழுவதும் திரும்பிவந்து விட்ட மாதிரி, கண்களைத் திறந்து திறந்து களித்தார்.

"வல்லார்க்கும் மாட்டார்க்கும்
வரமளிக்கும் வரமே!
மதியார்க்கும் மதிப்பவர்க்கும்
மதிகொடுக்கு மதியே!"

கூனர் "ஆஹாஹா!" என்று சிரித்தார். "'இவன் வாஸ்தவமாகவே மரகதத்தைக் கல்யாணம் பண்ணிக்கொள்வான். இந்தக்

கிழவனுக்கு அவள் அடிமையாகப் போகிறாள்' என்று தானே நீங்கள் எல்லாரும் நினைத்தீர்கள்? நிஜத்தை ஒப்புக்கொள்ளுங்கள்!" என்று எங்களை நோக்கி அசட்டுச் சிரிப்பாகச் சிரித்தார்.

"நல்லார்க்கும் பொல்லார்க்கும்
நடுநின்ற நடுவே!"

மணப்பலகையில் ஏதோ ஓர் ஆணியிருந்து தம்மைக் குத்தி விட்ட மாதிரி, கூனர் திடீரென்று துள்ளி எழுந்து அதைவிட்டுத் தூரத்தில் போய் நின்றார். "என்னடா, பயலே! தடிப் பிரம்மசாரி மாதிரி நிற்கிறாயே! மணையில் உட்கார்ந்துகொள்ளுவதற்கென்ன?" என்று தம்முடைய தத்து மகனை நோக்கிக் கடிந்தார். நான் பைய னுடைய கையை இழுத்துவந்து மணையில் உட்கார்த்தி வைத் தேன்.

"நரர்களுக்கும் சுரர்களுக்கும்
நலங்கொடுக்கும் நலமே!"

"புரோகிதரே! எங்கே கவனித்துக் கொண்டிருக்கிறீர்? பிள்ளை யும் பெண்ணும் காத்துக் கொண்டிருக்கிறது கண்தெரியவில்லையா? மந்திரத்தைச் சொல்லுவதற்கென்ன?" என்று கூனர் கத்தினார்.

அவர் சொல்லுவது போதாதென்று, என்னால் ஆனதை நான் செய்தேன். "புரோகிதரே! இந்தப் பாட்டு முடிவதற்குள் ஸப்தபதியாவது முடிந்து கல்யாணத்தை மாற்ற முடியாமல் செய் தால், உமக்கு இரண்டு பங்கு சம்பாவனைக்கு நான் உத்தரவாதம்" என்றேன்.

"எல்லார்க்கும் பொதுவில் நடம்
இடுகின்ற பரமே!
என்னரசே யான்புகலும்
இசையுமணிந் தருளே!"

மகானை நோக்கி நான், "சுவாமீ! பாட்டை மாத்திரம் நிறுத்தி விடாதேயுங்கள்" என்று பிரார்த்தித்தேன்.

"பக்தாபாய புஜங்க காருடமணி:
த்ரைலோக்ய ரக்ஷாமணி
கோபீலோசன சாதகாம்புதமணி:
ஸௌந்தர்ய முத்ராமணி:
ய: காந்தாமணி ருக்மிணீ களகுச
த்வந்த்வைக பூஷாமணி:
ச்ரேயோ தேவசிகாமணி: திசது நோ
கோபால சூடாமணி:"

வெகு வேகத்தில் விவாகம் நடந்துகொண்டிருந்தது. "எங்கே அந்தப் பேனா?" என்று கூனர் கத்தினார். கடன் பத்திரத்தை

எடுத்து, "என் ஸ்வீகாரப் பிள்ளைக்கு உம்முடைய பெண் மரகதத்தை விவாகம் செய்வதற்கு நீரும் உம்முடைய ஸம்ஸாரமும் சம்மதித்ததற்குப் பிரதிபலனாக, இந்தக் கடன்பத்திரம் பூராவாகத் தீர்ந்துவிட்டது" என்று அவரே எழுதிக் கையெழுத்திட்டார். மேளகாரர்கள் வந்ததற்கு ஒருவேலையும் செய்யாமல் தக்ஷிணைமாத்திரம் வாங்குவானேன் என்று அவர்கள் எல்லோரையும் அதில் சாக்ஷிபோடச் செய்தேன். புரோகிதரிடமும் சாக்ஷிக் கையெழுத்து வாங்கி, பத்திரத்தைப் பத்திரமாகவே என்னுடைய கையில் வைத்துக் கொண்டேன். விவாக தம்பதிகளா, அல்லது பெண்ணின் தாய்தந்தையரா, யார் அச்சமயம் ஆனந்த சாகரத்தில் அதிகம் மூழ்கினவர்கள் என்று சொல்லுவது கஷ்டமாயிருக்கும்.

> "ஸ்ரீராம சந்த்ரானுக்கு ஜயமங்களம்—நல்ல
> திவ்யமுக பாலனுக்கு சுபமங்களம்."

விவாகம் முடிந்தது. கூனர் பிரசங்கம் செய்யலானார்: "இப்பொழுதல்லவா எல்லோருக்கும் திருப்தியாயிருக்கிறது! இப்படியல்லாமல் பண ஆசை பிடித்த உம்முடைய வார்த்தையை அநுசரித்து உம்முடைய பெண்ணை எனக்கே விவாகம் செய்திருந்தால் எவருக்காவது நன்மையில் முடிந்திருக்குமா? உமக்கு வயது ஆனதற்கு என்ன லாபம்? பாபபுண்யம், சுகதுக்கம் இவை தெரிய வேண்டாமா?"

இந்தப் பேச்சைக் கேட்டு மரகதத்தின் தகப்பனாரும் நானும் சற்றுப் பிரமித்து நின்றோம். பிறகு பாட்டு நின்றுவிட்டதே என்று திரும்பிப் பார்த்தேன். அந்த மகானைக் காணோம். "மாத்தியான்னிகம் செய்யவேண்டிய வேளை நெருங்கிவிட்டது என்று சொல்லி இப்பொழுதுதான் எழுந்துபோனார்" என்று புரோகிதர் சொன்னார். புஷ்கரிணிக்கு ஓடிச்சென்று நோக்கினேன். கோவில் முழுவதும் ஓடித் தேடினேன். அதைச் சுற்றிலும் அஷ்டதிக்குகளிலும் தேடினேன். அவரைக் காணவில்லை; நான் என்ன செய்வேன்?

* * *

நான்குநாட்கள் சென்றுவிட்டன; இன்னும் அந்த மகானைக் காணோம். மரகதமும் அவளுடைய புருஷனும் அவளுடைய தகப்பனார் வீட்டில் சுகமாயிருக்கிறார்கள். கடன்பத்திரம் என்னுடைய வசத்தில் இருக்கிறது. இன்று காலையில் கூனரிடத்திலிருந்து எனக்கு "லாயர் நோட்டீஸ்" கிடைத்திருக்கிறது. நான் கலகப் பிரியனாக யாரோ ஒரு மாயாவியை அழைத்துவந்து அவருக்கும் அவருடைய தத்துப்புத்திரனுக்கும் கலகத்தை விளைவித்ததுமல்லாமல், அவரை ஏமாற்றிப் பத்திரத்தில் தப்பாக அவருடைய

கையெழுத்தை வாங்கிவிட்டேனும். அதற்காக அவர் என் பேரில் ஒரு லக்ஷம் ரூபாய்க்கு நஷ்டப்பிராது போடப்போகிறாராம். இருந்தாலும் மறுபடியும் அந்தக் கலைப்பிரியனை, அந்த மாயாவியை வரவழைத்து ஒரு மணிநேரம் பாடச்செய்தால் எல்லாவற்றையும் மன்னித்துவிட ஸித்தமாயிருக்கிறாராம்.

அவர் என்னை மன்னிக்க வேண்டாம்; பிராது செய்யட்டும். நடந்ததை ரூபிப்பதற்கு நிஷ்பக்ஷபாதமான சாக்ஷிகளான புரோகிதரும் மேளகாரர்களும் இருக்கிறார்கள். ஆனால் நான் இறப்பதற்கு முன் அந்த மகானுடைய ஸங்கீதத்தை மறுபடியும் கேட்கவேண்டுமென்கிற ஆசை என்னை இரவும் பகலும் தொடருகிறதே! அதற்கு என்ன வழி? இந்த விஷயத்தில் எனக்கு யார் உதவி செய்வார்கள்? நீங்கள் எவராவது அந்த மகானைக் கண்டீர்களோ? பார்த்தால் சுமார் இருபத்தைந்து வயது மாதிரியே இருக்கும். சிறு குழந்தையைப் போல் நிஷ்களங்கமான முகமும், இடுப்பில் கம்பிக்கறை வேஷ்டியும், மார்பில் மான்தோலினால் யக்ஞோபவீதமும் இருக்கும். கையில் காட்டுமரத்தினால் உண்டாக்கிய ஒரு வீணையிருக்கும். தலையில் ஜடையும்—ஆனால், இதெல்லாம் முன்பே ஒரு தடவை உங்களுக்குச் சொல்லி யிருக்கிறேனல்லவா? அவரை எங்கேயாவது கண்டிருப்பீர்களோ? சென்னப்பட்டணத்திலுள்ள ஸங்கீத சபைகளிலெல்லாம் விசாரித்துப் பார்த்தேன். அங்கே தங்களுடைய அடுத்த கச்சேரியின் நோட்டீஸை நீட்டினார்களே யொழிய, இந்த மகானைப்பற்றிய விவரமொன்றையும் தெரிவிக்கவில்லையே! நான் என்ன செய்வேன்! நீங்கள் எவராவது அவரைக் கண்டீர்களோ?



# சாதித் தடை

"கும்பன்"

---

அவன் ஒரு சோம்பேறி; ஒருநாளில் பாதிக்குமேல் தூக்கத்திலே போய்விடும்; ஆனாலும் அவன் உடம்பில் ஒரு பிரகாசம்; முகத்தில் ஒரு ஜோதி! 'மூதேவி பிடித்தவன்' என்று சோம்பேறி மனிதனை நாம் சொல்கிறோம். அவனை அப்படிச் சொல்லக் கூடாது. நல்ல லக்ஷ்மீகரம் அவனுடைய இரண்டு கண்களின் கடையிலே வீசிய ஒளியில் விளங்கியது. இந்த ஆச்சரிய இளங்குமரனைப் பற்றி யாருக்கு என்ன தெரியும்?

எப்படியோ கொல்லிமலையின் உச்சிக்குச் சிரமமில்லாமல் ஏறிச்செல்கிறான்; அவனைச் சோம்பேறியென்று எப்படிச் சொல்வது? அவன் தூங்கி எழுந்தால் அவன் கண்களில் கலக்கம், சோர்வு இருக்கவேண்டுமே; அப்பொழுதுதான் சாணையிடப்பட்ட மணிபோல அவ்விரு விழிகளும் பிரகாசிக்கும். அவனுடைய விரிந்த மார்பில் ஒரு சிறந்த வீரனுடைய அம்சம் இருந்தது; திரண்ட தோள்களில் வெற்றியின் முத்திரை மறைந்திருந்தது; அவன் யார்?

இங்கே எதற்காக வந்தான்? அவனுடைய ஊர் எது? தாயார் தகப்பனார் யார்? ஒன்றும் தெரியாது. என்ன அழகு! என்ன தேகக் கட்டு! ஏன் அவன் தன் பழைய கதையை மர்மமாக வைத்திருக்கிறான்?

அவன் பேச்சுக்கும் வில்லின் நாணொலிக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கவேண்டும்; " நீ சிங்கத்தைப் பார்த்திருக்கிறாயா?" என்று பக்கத்து வீட்டு முத்து கேட்கும்போது, "ஆஹா! பார்த்திருக்கிறேன்; புலியைப் பார்த்திருக்கிறேன்; மலையாள தேசத்துக் காடு முழுவதும் சுற்றியிருக்கிறேன்" என்று அவன் கூறும் தொனியில் உள்ள ஆண்மையை யார் அளவிடவல்லார்!

"எல்லாம் சரி! ஏன் இப்படித் தூங்கித் தூங்கிக் காலத்தைக் கழிக்கிறாய்?" என்று முத்து கேட்பான்.

"இந்த ஊருக்கு வந்தபிறகு உண்டான வியாதி. என்னையே மறந்து தூங்குகிறேன்" என்று சொல்லிப் பெருமூச்சுவிடும் போது அவனுடைய கண்களில் ஆழ்ந்த உணர்ச்சியை வெளிப்

படுத்தும் ஒரு மின்னற்பார்வை தோன்றும். அவனுக்கு இடங் கொடுத்த பிச்சாண்டிக் கவுண்டன் தன்னுடைய வீட்டில் ஒரு தெய்வம் வளர்வதாகவே எண்ணினன். பிச்சாண்டிக்குப் பிள்ளை குட்டி இல்லை. அவன்தான் பிள்ளை—இல்லை; தெய்வத்தின் கிருபை யால் கந்தர்வலோகத்திலிருந்து கிடைத்த மாணிக்கம். அவனைக் கவுண்டன் 'தம்பி' என்று கூப்பிட்டான்; ஊராருக்கு அவன் செல்லத்தம்பி. செல்லத்தம்பியின் குணங்கள் எல்லோரையும் கவர்ந்தன. அவனது சோம்பலை ஒருவரும் பாராட்டுவதில்லை. மரத்தின் தழைச் செறிவுக்குள் மறைந்திருக்கும் புல்லுருவியைப் போல அது மறைந்திருந்தது. அவன் சோம்பேறிதான்; தூங்கு மூஞ்சிதான்; ஆனாலும் அவனே அவ்வூராருக்கு ஒரு கந்தர்வன். குழந்தைகள், பெண்கள், கிழவர்கள் யாவருக்கும் அவனைக் கண்டால் ஒரு சந்தோஷம்.

செல்லத்தம்பி தன்னுடைய இருபதாவது வயதில் கவுண்ட னூருக்கு வந்தான். வந்து இரண்டு வருஷங்கள் ஆயின. அவன் என்ன சாதி? யார்? இன்னும் ஒன்றும் தெரியவில்லை. அவன் முகம் ஒரு பெரிய குடும்பத்தில் கௌரவமாக வாழ்ந்த வாழ்க் கையின் சின்னத்தை வெளியிட்டது. பிச்சாண்டிக்கு அவன் மேல் உண்டான பிரேமை அளவு கடந்தது. "நீ யாரப்பா! எந்த ஊர்?" என்று அவன் செல்லத்தம்பியை இரண்டுமுறை கேட்டதோடு சரி. செல்லத்தம்பி, "அதெல்லாம் மறந்துவிட வேணும். கேட்டால் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. நான் ஓர் அநாதை. உங்களுக்கு இஷ்டமாயிருந்தால் இங்கே இருக் கிறேன். என்னாலான வேலையைச் செய்கிறேன். இல்லையென் ருல் நான் போய்விடுகிறேன்" என்று அவன் சொன்ன பதில் பிச்சாண்டியைக் கலக்கியது; கண்ணில் நீர்த்துளியை உண்டாக்கி விட்டது. 'அவன் மனத்திலுள்ள கஷ்டத்தை யார் அறிவார்கள்! என்ன கஷ்டமோ! பெற்றவர்கள் என்ன கொடுமைக்கு ஆளாக் கினர்களோ! அல்லது, தாய் தகப்பன்மாரை இழந்துவிட்டானே! எப்படி யிருந்தாலென்ன? சுவாமி கொடுத்த வரம். இவன் நமக் குப் பிள்ளை; உயிர். இனிமேல் இவனை விடக்கூடாது' என்று கவுண்டன் நிச்சயித்துக்கொண்டான்.

"தம்பி, உன் இஷ்டம்போல் இரு; எனக்கு இருக்கிற ஆடுமாடுகள் நாலு குடும்பத்தைக் காப்பாற்றும். இந்த வீடு உன் சொந்த வீடு. உன்னைப் பிரிந்திருக்க முடியாதென்று என் மனசு சொல்கிறது. தம்பி, நான் சொல்கிறது தெரிகிறதா?" என்று அன்பொழுகும் குரலில் பிச்சாண்டி பேசினன்.

"அப்படியே. இருக்கிறேன்" என்று வாக்குறுதி தந்தான் அவன். அதுமுதல் 'தம்பி'க்கு ஒருகுறையும் வராமல் பிச்சாண்டியும் அவன் மனைவி குப்பாயியும் பார்த்துக்கொண்டார்கள்.

"யாரோ மகாராசா மாதிரியல்லவா இருக்கிறுன்? அவன் முகத்திலே பால் வடிகிறதே! என்ன அழகு! அவன் என்ன சாதி? எந்த ஊர்?" என்று கேட்டாள் குப்பாயி.

"மகாராசாவா! தேவலோகத்திலிருந்து வந்தவனென்று சொல்லு. அவன் முகத்தைப் பார்த்தாலே பசி போய்விடுகிறது. அவன் யாராயிருந்தால் நமக்கென்ன? இப்பொழுது நமது 'தம்பி'; நமது வீட்டுக்குத் தெய்வம்; நமக்குக் கண்மணி. முத்து எங்கே பிறந்தால் என்ன? தாமரை எங்கே முளைத்தால் என்ன?"

பிச்சாண்டி கொஞ்சம் படித்தவன்; பேசத் தெரிந்தவன். அவனுடைய பேச்சிலே படிப்பின் மெருகு இருக்கும். ஆனல் அவனுடைய உள்ளத்திலிருந்து வெளிப்படும் அன்பு மாத்திரம் அவன் பிறவியோடு வந்தது. குப்பாயியின் உள்ளம் பளிங்கு போன்றது. அதில் அன்பைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. ஏதாவது மாசு படிந்தால் ஊதின மாத்திரத்திற் போய் விடும்.

செல்லத்தம்பியோடே வம்பளப்பதில் யாருக்கும் பிரியம் உண்டு. அவன் சொல்லும் தேசாந்தரக் கதைகளைக் கேட்பதில் ஊரிலுள்ள நரைத்தலையர்களுக்கு எல்லையற்ற ஆசை. அவனைப் பார்ப்பதிலேயே இளம் பெண்களுக்கு ஓர் ஆனந்தம்; காளிக்கோ பரமானந்தம். பிச்சையாண்டியின் தங்கை மகள் காளி. பெயர் தான் காளி; அவள் அரசகுலத்தில் பிறந்திருந்தால் அவளுக்கு நல்ல பெயராக வைத்திருப்பார்கள்; மாதவி, மல்லிகா வென்று சொல்லலாம்; நல்ல தமிழ்ப்பெயராலே நன்முல்லை, வள்ளி யென்றும் சொல்லலாம். மலரின் மென்மையும் வள்ளிக்கொடி யின் துவட்சியும் அவளுக்கு இருந்தன. காளியென்ற பெயர் அவளுக்கு எப்படிப் பொருந்தும்?

காளியின் கண்கள் விஷத்துளியை விட்ட மைக்கூண்டல்ல; நீலமணியைப் பதித்த முத்து அல்ல; பவளக்கொடியோடும் பாற் கடலல்ல; இவையெல்லாம் பழைய உவமைகள்; செல்லத்தம்பி யின் விழிகளிலே செருகும் வேலென்றோ, அவன் உள்ளத்தைக் குளிர்விக்கும் மருந்தென்றோ சொல்லுங்கள். உண்மை இதுதான்: அந்த அதிசய இளங்குமரன் எல்லோரையும் கவர்ந்து இழுத் தான்; ஆனல் காளியின் இரண்டு விழிக் கடையிலே அவன் உள் ளம் மயங்கி அடிமைப்பட்டுக் கிடந்தது.

“இந்த இரண்டு கண்களல்லவா நம்மைச் செல்லத்தம்பியாக்கின!” என்று அவன் தனிமையிலே எண்ணமிடுவான். அவன் ஓர் ஊர்சுற்றி; காடுசுற்றி; மலைசுற்றி. இப்பொழுது கவுண்டனூரில் காளியின் விழிக்கடையில் அவன் உள்ளமாகிய நங்கூரம் சிக்கிக்கொண்டது. கப்பல் மேலே போகவில்லை.

‘அவன் யார்? அவன் ஊர் எது? சாதி என்ன?’ இந்த எண்ணங்கள் காளிக்குத் தோன்றுவதுண்டு; “யாராக இருந்தால் என்ன? இப்போது நம் மாமன் மகன்” என்று உள்ளுக்குள்ளே சொல்லிக்கொள்வாள். மாமன் மகனென்பதை நாலைந்துமுறை சொல்வாள். அப்படிச் சொல்லும்போது அவளுடைய உள்ளங்காலிலிருந்து உச்சந்தலை வரையில் ஒரு மின்சாரம் போன்ற சக்தி பாயும்; மயிர்க் கூச்செறியும். அதுதான் காதலோ!

“தம்பி; நீ கலியாணம் பண்ணிக்கொள்ள வேண்டாமா? என்ன சாதியென்று சொல்லமாட்டாயா?” என்று ஒரு நாள் பிச்சாண்டி கேட்டான்.

அவன் ஆச்சரியப் பார்வையோடு கவுண்டனைப் பார்த்துச் சிரித்தான்; “கலியாணமா? இந்த அநாதைக்கு யார் பெண் தருவார்கள்?” என்று கேட்டான்.

“அநாதையா? அப்படி இன்னொருமுறை சொல்லாதே தம்பி; அப்படிச் சொன்னால் என் இருதயத்தில் வாளெறிந்தது போல் இருக்கிறது. நீ இந்த வீட்டுக்குச் சொந்தக்காரன். நானும் குப்பாயியும் உனக்குச் சொந்தமல்லவா? இந்த ஊர்க்காரனாகப் போன பிறகு நீ எப்படி அநாதையாவாய்? அப்படிச் சொல்லாதே தம்பி!” அவன் சொல்லிய வார்த்தைகளில் அவனுடைய உள்ளத்தின் நைவு வெளிப்பட்டது.

“அப்படியானால் நான் உங்கள் சாதிதானே? எனக்கென்று வேறு சாதி ஏது?” என்று கேட்டான் செல்லத்தம்பி.

கவுண்டன் வகை தெரியாமல் விழித்தான். கவுண்டர்களுடைய சாதிக் கட்டுப்பாடு மிகவும் கடுமை. தம்பி தன் வீட்டில் சாப்பிடலாம்; இருக்கலாம்; எல்லாவற்றிலும் அவன் பிச்சாண்டியின் பிள்ளை. கல்யாண மென்றால் ‘அவன் என்ன சாதி?’ என்ற கேள்வி! ‘அட பாழும் சாதியே!’ என்று மனதுக்குள் வைதுகொண்டான் கவுண்டன்; ‘இவன் முகத்தில் ராஜகளை இருக்கிறது. இவனிடம் ஊராருக்கெல்லாம் பிரியம். இவனைக் கட்டிக்கொள்வதில் பெண்களுக்கு அளவிறந்த விருப்பம். ஆனால் நடுவிலே சாதி என்று ஒரு விலங்கு! கேடுகெட்ட சாதி!’ என்று பல்லைக் கடித்தான்.

அந்தச் சாதிவிஷயந்தான் பெரிய முட்டுக்கட்டையாக நின்றது. உள்ளங்கள் கரைந்து ஒன்றுகின்றன; அழகும், அறிவும் சேர்வதற்கு ஸித்தமாகின்றன; யாருக்கும் அதனால் பெரிய நன்மையே உண்டாகின்றது. ஆனால் இவ்வளவு நல்ல எண்ணங்களிலும் சாதி புகுந்து விஷமாக்கிவிடுகிறது. பாழும் சாதி!

'சாதி தெரியாவிட்டால் கலியாணம் இந்த இனத்தில் பண்ணுவது கஷ்டம். இவனுக்கு யார் பெண் கொடுப்பார்கள்? நம் சாதியென்று தெரிந்தால் காளியைக் கட்டிக் கொடுத்துவிடலாமே!' என்று நினைந்து நினைந்து ஏங்கினான் பிச்சாண்டி.

"காளியைச் செல்லத்தம்பிக்குக் கட்டிக் கொடுக்க நினைக்கிறார்களாம். அவன் என்ன சாதியென்று தெரியவில்லையாம். அதனால் தயங்குகிறார்கள்" என்ற பேச்சு ஊரில் எழுந்தது.

காளி உருகுகிறாள். சாதிக்கு ஆயிரம் சாபம் தருகிறாள். அவளுடைய தகப்பன் முருகனுக்கு வழியொன்றும் தெரியவில்லை. தாய் மாறக்காள் ஒரே பிடிவாதமாகச் சாதியைப் பிடித்துக் கொண்டு தடுக்கிறாள். ஊரிலுள்ளவர்களுக்கு அந்தரங்கத்தில் ஏதோ ஒன்று 'இப்படிச் செய்தால் நல்லது' என்று சொல்கிறது; ஆனால் அதை வெளியிலே சொல்லத் தைரியமில்லை. சாதியென்னும் பூதம் அவர்களைப் பயமுறுத்துகிறது.

பிச்சாண்டி, "என் கண்ணுக்குக் கண்ணாலம்பண்ணி விட்டுத் தான் மறுகாரியம் பார்ப்பேன்" என்று துணிந்துவிட்டான். "சாதியை விட்டுத் தள்ளிவிடட்டும். அதனால் ஒன்றும் நஷ்டமில்லை" என்ற தைரியம் பிறந்தது. குப்பாயிக்கு ஒன்றும் தோன்றவில்லை. யாராவது அதிகமாகச் சாதியைப் பற்றிச் சொல்லிப் பயமுறுத்தினால் சிறிது அஞ்சுவாள். பிச்சாண்டி தன் தீர்மானத்தையும் சாதிக் கொடுமையையும் பற்றிப் பேசினால் அந்த எண்ணம் உடனே போய்விடும். அவன் கருத்தின் வழியே செல்லத் தொடங்குவாள். அவள் மனம் ஓர் ஓடம். பிச்சாண்டியின் மனமாகிய ஆறுபோகும் வழியே அது ஓடும். நடுவிலே ஏதாவது தடுத்தால் சிறிது நேரம் கரையருகில் தங்கும். அடுத்த கணம் அடிக்கும் காற்றினால் மறுபடியும் அந்த ஆற்றின் வேகத்திற் கலந்துவிடும்.

காளியின் தகப்பனும் அந்தத் தீர்மானத்துக்கு வந்துவிட்டான். மாறக்காளும் மனம் பொருந்திவிட்டாள். இனிமேல் கலியாணம் செய்துவிடுவது நிச்சயம்.

இந்தச் சமாசாரம் ஊருக்குள் பரவியது. அப்புறம் ஊர் முழுவதும் மாறிவிட்டது. முன்போலச் செல்லத்தம்பியின் கதை

களுக்குக் கிராக்கியில்லை. காளியைக் கண்டு பெண்கள் பேசுவ தில்லை. பிச்சாண்டியும் முருகனும் ஊராரால் சாதியை விட்டு நீக்கப்படப் போகிறார்கள். போன வாரம் ஊரினர் யாவரும் செல்லத்தம்பியின் வீரக்கதைகளிலும் வசீகரத் தோற்றத்திலும் தேனில்விழுந்த வண்டுகள்போல் மயங்கிவிழுந்தார்கள். இந்தவாரம் ஒரு பூதரும் அவனை அணுகவில்லை. அவனிடம் கதைக்குப் பஞ்சம் உண்டாகிவிட்டதா? அவனுடைய முகவசீகரம் ஏதாவது குன்றிவிட்டதா? ஒன்றும் இல்லை. காளியைக் கட்டிக்கொள்ளப் போகிறோமென்ற நினைவுகள், உள்ளக் கடலில் அலைமோதி எழுந்த மகிழ்ச்சியாகிய நுரைகளின் ஒளி, அந்த முகத்தில் வீசி அதற்குப் பின்னும் ஒரு காந்தியை அளித்தது. பின் ஏன் இந்தப் பஹிஷ்காரம்? சாதியின் மாயை! சாதியாகிய அந்தகாரம் ஊரா ருக்கு அந்த ஜோதியை மறைத்துவிட்டது.

கலியாணம் நடந்தது. உறவினர்கள் ஒருவரும் வரவில்லை. ஆனாலும் செல்லத்தம்பிக்கும் காளிக்கும் அது பெருங் குறை யாகத் தோன்றவில்லை. இரண்டு உலகம் நிறைய இருந்த ஜனங்கள் உள்ள நிறைவோடு கலந்து உத்ஸவம் கொண்டாடினால் அவர் களுக்கு என்ன ஸந்தோஷம் இருக்கும்? அத்தனை ஸந்தோஷத்தை அவர்கள் அடைந்தார்கள். சாதி முள்ளால் சூழ்ந்த அந்த ஊரா கிய கள்ளிப் புதரில் தோன்றிய மலரிலே, எங்கோ சுற்றியலைந்த வண்டொன்று வந்து சேர்ந்ததுபோலக் காளியோடு செல்லத் தம்பி இணைக்கப்பட்டான்.

கலியாணம் நடந்த மறுநாள் செல்லத்தம்பியின் முகத்தில் ஒரு வகை வாட்டம் உண்டாயிற்று. அதைப் பிச்சாண்டி கவனித் தான். "தம்பி! ஏன் அப்படி இருக்கிறாய்?" என்று கேட்டான். தம்பியின்மேல் ஈக் காற்றுப் பட்டாலும் உள்ளம் நடுங்கும் பிச் சாண்டி, அவன் முகசந்திரனில் படர்ந்த கவலை மேகத்தை அறிந்து பொறுத்திருப்பானா?

"ஒன்றுமில்லை. உங்களுக்கெல்லாம் என்னால் பெரிய கஷ்டம் உண்டாகிவிட்டதே! என்னால் நீங்கள் பறையர்களைப் போலச் சாதியிலிருந்து ஒதுக்கப்பட்டீர்களே" என்று கவலையோடு தம்பி பதிலளித்தான்.

"தம்பி! இதுதானா? இந்தப் பயல்கள் கிடக்கிறார்கள். இந்தச் சாதியிலே நம்மைச் சேர்க்காவிட்டால் நமக்கு உயிரே போய் விடுமா? உன்னைக் காட்டிலும் சாதியா பெரிது?" என்று பிச் சாண்டி அவன் தலைமயிரைக் கோதிக்கொண்டு சொன்னான்.

நாவிதன், வண்ணான் முதலிய தொழிலாளர்கள் இந்த இரண்டு வீட்டுக்கும் போவதில்லை. உள்ளூர்ச் செட்டிகூடச் சாமான்

தருவதில்லை. பத்துமைல் தூரத்திலுள்ள ஊருக்குப் போய் வேண்டியவற்றை வாங்கி வரவேண்டியிருந்தது.

* * *

கலியாணம் ஆகி ஒருமாதம் ஆயிற்று. ஒருநாள் செல்லத் தம்பி பிச்சாண்டியைப் பார்த்து, "நான் இந்த ஊரை விட்டு ஒரு வாரம் வெளியிலே போய்வரவேண்டும்" என்றான். அந்த வார்த்தை இடி விழுந்ததுபோலக் கவுண்டன் காதில் விழுந்தது. "ஐயோ! உன்னைப் பிரிந்து ஒரு நிமிஷங்கூட என்னால் இருக்க முடியாது" என்று கூவினான்.

செல்லத்தம்பியினிடம் ஈடுபட்ட கவுண்டன் அவன் அந்த ஊரைவிட்டுப் போகாமல் தன்னுடைய குடும்பத்தில் ஒருவனாகி விட வேண்டுமென்பதற்காகவே அவனுக்குக் கால்கட்டுப் போட நினைத்தான்; சாதியை எதிர்த்து நின்று தன் எண்ணத்தை நிறை வேற்றிக்கொண்டான். அவன் எண்ணத்துக்கு மாறாகச் செல்லத் தம்பி ஊரைவிட்டுப் போகவேண்டுமென்றால்—?

"நான் போய்த் திரும்பிவரமாட்டேனென்று எண்ண வேண்டாம். ஒரேவாரத்தில் வந்துவிடுகிறேன். காளியிடம் சொன்னால் மிகவும் கஷ்டப்படுவாள். நீங்கள் சொல்லித் தேற்றுங்கள். நான் வந்துவிடுகிறேன்."

"தம்பி! உன்வார்த்தையை எப்படி நம்புவேன்! உன்னை நம்பி நாங்கள் ஐந்துபேர் ஜீவிக்கிறோம். காளி உன்னைப் பிரிந்து எப்படி இருப்பாள்!" என்று அழாக்குறையாகச் சொன்னான் கவுண்டன்.

"என்ன! பைத்தியம்மாதிரிப் பேசுகிறீர்களே? என்னோடு இவ்வளவுநாள் பழகியும் என் சுபாவம் தெரியவில்லையே. சாமி மேல் ஆணையாக நான் ஒருவாரத்தில் வந்துவிடுவேன்." இப்படிச் சொல்லும்போது அவன் கண்களில் ஒருதுணிவும் வீரமும் விளங்கின.

"தம்பி! ஆணையிடாதே தம்பி! உன்மேல் நம்பிக்கையில்லாமலில்லை. உன்னைப் பிரிவதற்கு மனசு கேட்கவில்லையே!"

"நீங்கள் நான் சொல்வதை நம்புங்கள். நம் எல்லோருக்கும் சௌக்கியம் உண்டாகவேண்டுமென்றிருந்தால் எனக்கு உத்தரவு கொடுங்கள்."

அதற்குமேல் என்ன சொல்வது? தம்பி புறப்பட்டுவிட்டான்.

* * *

ஒருவாரம் நூறுயுகம்போல இருந்தது. எல்லோரும் ஜீவப் பிரேதங்களாகி விட்டார்கள். காளி ஒரு யந்திரத்தைப் போல

மாறிவிட்டாள். அவள் கண்ணில் ஒளியில்லை; முகத்தில் சோபை யில்லை.

“வழியிலே போகிறவனை நம்பி உறவினர்களைக் கைவிட்டால் தெய்வம் அப்படித்தான் தண்டிக்கும்” என்று சில பாவிகள் நாக்கில் நரம்பில்லாமல் சொன்னார்கள்.

எட்டாவது நாள்! வந்துவிட்டான்! நிஜமா? ஆம்! உண்மை; முக்காலும் உண்மை! செல்லத்தம்பி வந்துவிட்டான்! அவன் மட்டுமா? அவனோடு வேறு இரண்டுபேர், வண்டிகள்; “தம்பி வந்தாயா?” என்று ஓடி வந்து கட்டிக்கொண்டான் பிச்சாண்டி. துக்கம் நெஞ்சை அடைத்தது. பேசமுடியவில்லை. அவ்விருவரும் ஒருவரை யொருவர் தழுவிக்கொண்ட காட்சி எந்தக் கல்மனத்தையும் கரைத்துவிடும். “காளி எப்படி இருக்கிறாள்?” என்று முதலிற் கேட்டான்; அவள் ஒரு மூலையில் விம்மி விம்மி அழுங்குரல் அவன் காதிற் பட்டது; அது அவன் கண்களிலும் நீர்த் துளிகளை உண்டாக்கிற்று; அவன் வேறுபுறமாகத் திரும்பிக் கண்ணைத் துடைத்துக்கொண்டான்.

“சரி, போனதை மறந்துவிடுங்கள். இந்த இடத்தில் இனி ஒரு க்ஷணமும் இருக்கவேண்டாம். நான் கிழவன்பாளையம் மிட்டாதார் பிள்ளை. அசல் கொங்கு வேளாளக் கவுண்டன். என்னால் உங்களுடைய சாதி கெட்டுப்போகவில்லை. இதை இன்று இந்த ஊராரெல்லோரும் அறியட்டும்.”

அவனுடைய பேச்சு ஒரு பெரிய அரசன் முடிபுனைந்த நாளில் குடிகளுக்கு வெளியிடும் அபயச் செய்திபோல் இருந்தது.

எல்லோரும் ஆச்சரியக் கடலில் மூழ்கினர். அவன் ஒரு மிட்டாதார் பிள்ளையா! ஆனால் என்ன? அவன் அவர்களுக்குப் பழைய செல்லத்தம்பிதான். அவர்களிடையே இருந்த அன்புக் கயிற்றில் இன்னும் இரண்டுமுறுக்கு அதிகமாயின.

* * *

செல்லத்தம்பி கிழவன்பாளையம் மிட்டாதாரின் செல்வப் புதல்வன்; குமாரசாமி யென்பது அவன் பெயர். தன்னுடைய மனத்துக்குப் பிடிக்காத பெண் ஒருத்தியைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேனென்று கோபித்துக்கொண்டு புறப்பட்டு விட்டான். அவன் போனபிறகு அவன் தகப்பனாராகிய மிட்டா தாருக்கு அவனுடைய அருமை தெரிந்தது. இராத் தூக்கத்தை இழந்தார். ஊர்களுக்கெல்லாம் சொல்லிவிட்டார். தம் மகன் திரும்பி வந்தால் போதுமென்ற நினைவில் அவர் உடல் மெலிந்து விட்டது.

குமாரசாமி ஊர் சுற்றிவருகையில் கவுண்டனூரில் காளியின் கண்களில் மயங்கி அங்கேயே தங்கிவிட்டான். கலியாணம் ஆயிற்று. சாதித் தடையினால் உண்டான கொடுமை அவனால் பொறுக்க முடியவில்லை. 'சொந்த ஊருக்குப் போய்த் தகப்பனாரைப் பார்ப்பது. அவர் கோபத்தோடு இருந்தால் வந்துவிடுவது. இல்லாவிட்டால் பிரயாண விவரங்களைச் சொல்லி அவர் உத்தரவு பெற்று எல்லோரையும் கூட்டிக்கொண்டு கிழவன்பாளையத்துக்கே போய் விடுவது' என்று தீர்மானித்துக்கொண்டு புறப்பட்டான். இறந்தவர் பிழைத்தால் மறுபடியும் செத்துப்போவென்று சொல்வார்கள்? குமாரசாமியைக் கண்டால் மிட்டாதார் கோபித்தா துரத்துவார்?

"என்னப்பா? எங்களை இப்படித் தவிக்கவிட்டுப் போய்விட்டாயே!" என்று சொல்லிக் கதறினார் அவர்.

"நீங்கள் நாலுவருஷம் என்னைப் பிரிந்து வாழ்கிறீர்கள். ஒரு நாள்கூடப் பிரிய முடியாத புதிய தாய்தந்தையரையும் மனைவியரையும் நான் இப்பொழுது பெற்றிருக்கிறேன். அவர்களையும் கூட்டிக் கொண்டு இங்கே வர உங்கள் சம்மதம் தெரியவேண்டும்" என்று சொல்லித் தன் சமாசாரத்தை மெல்ல விரித்துக் கூறினான்.

"உன் சித்தப்படி செய்; இனிமேல் என்னைவிட்டுப் போகாமல் இருப்பதாகச் சத்தியம் செய்தால் உன்னை விடுவேன்" என்று அழுதார் மிட்டாதார். தம்முடைய சொந்தப் பிள்ளையல்லவா?

*　　*　　*

செல்லத்தம்பி பழைய குமாரசாமியாகிக் கிழவன்பாளையத்திற்குத் தன் புதிய உறவினர்களோடு வந்துவிட்டான். காளிக்கு இப்போது தேவானை என்ற பெயர் அவளுடைய மாமனாரால் கொடுக்கப்பட்டது. அவள் பட்டிக்காட்டில் இருந்தபோது அந்த ஊருக்குப் பெருமை அளித்தாள். கிழவன்பாளையத்து மிட்டாதார் மருமகளானபோது அந்தக் குடும்பத்திற்கும் பெருமையுண்டாக்கினாள். மாணிக்கத்தைத் தனியே வைத்தால் சிறிது சோபை தரும்; தங்கத்திலே புதைத்தால் பின்னும் அதிகமாகச் சோபை தரும். காளியும் அப்படித்தான். அவள் ராணியாகப் போகும் அதிர்ஷ்டமிருந்தால் அந்த ராஜ்யத்துக்குக்கூடப் பெருமை அளிப்பாள்.

---

# ஸ்வதேச கௌரவம்

'சாணக்கியன்'

"அந்தத் தேசம் மிகவும் முன்னேற்றமடைந்திருக்கிறது" என்று நாம் ஒரு நாட்டைக் குறித்துச் சிலாகித்துக் கூறும்போது அது ஆயுத பலத்திலும் இதரநாடுகளைப் பலாத்காரமாக அடக்கி ஆள்வதிலும் சிறந்து விளங்குகிறது என்பதற்காகவா அவ்விதம் சொல்லுகிறோம்? அல்லது அந்நாட்டு ஆண்பெண்கள் நவநாகரிக உடைகளணிந்து நிமிஷத்திற்கொருதரம் 'விவாக விலக்கு' செய்து கொள்வதை எண்ணியா அப்படிச் சொல்லுகிறோம்? இல்லை. அந்தத் தேசத்து ஜனங்கள் தங்கள் கலைகள், தங்கள் கைத்தொழில்கள் இவற்றை—இவற்றில் இழிவானவை என்ற பேதங்களை ஒழித்து—வளர்ப்பதையே நாம் புகழ்கிறோம்.

அந்நிய தேசங்கள் சிலவற்றில் நடந்த சில உண்மை நிகழ்ச்சிகளைக் கீழே எழுதுகிறேன். அவற்றைப் படித்தால், நம்முடைய ஸ்வதேசாபிமானம் இன்னும் எத்தனையோ மடங்கு அதிகரிக்க வேண்டுமென்பது தெரியவரும்.

## 1

ஐந்தாறு வருஷங்களுக்கு முன் ராஜாங்க விஷயமாக இந்தியர் ஒருவர் இங்கிலாந்திற்குச் சென்றிருந்தார். அவர் டோவர் ஸ்டேஷனில் இறங்கி, தம் சாமான்களைத் தூக்கிச் செல்ல யாராவது ஆள் இருக்கிறானா என்று கொஞ்சநேரம் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, "கூலி! கூலி!" என்று இரண்டு மூன்று தடவை கூப்பிட்டார். அப்பொழுது ஓர் ஆங்கில யுவகன் அவரிடம் வந்து தலை வணங்கி அவருடைய மூட்டைகளைக் கையில் எடுத்துக் கொண்டான். அவரும் நிச்சிந்தையுடன் பெருமூச்சு விட்டு முன் நடந்துசெல்லலானார். வாலிபன் பின்னால் மூட்டைகளைச் சுமந்துகொண்டே வந்தான். கொஞ்சதூரம் சென்றபின் அவன் அவரை நோக்கி, "ஐயா, பார்லிமெண்டில் அந்த—மசோதா கொண்டு வந்தார்களே; அது என்னவாயிற்று?" என்று வினவினான். இந்தியர் ஆச்சரியத்துடன் அவனைத் திரும்பிப் பார்த்தார். மூட்டை தூக்கும் ஒரு கூலிக்காரன் பார்லிமெண்டில் கொண்டு வந்துள்ள மசோதாவைப்பற்றிக் கேட்டால் யார்தாம் வியப்படையமாட்டார்கள்? அவர், "பார்லிமெண்டில் அந்த மசோதா கொண்டு

வந்திருப்பதைப் பற்றி அறிந்து உனக்கு என்ன ஆகவேண்டும்?" என்று கேட்டார்.

அதற்கு அந்த ஆங்கில யுவகன், "சும்மாத் தான் கேட்டேன்; சொல்லுங்களேன்!" என்றான்.

இந்தியர், "அதிருக்கட்டும். நீ எதுவரைக்கும் படித்திருக் கிறாய்?" என்று கேட்டார்.

வாலிபன், "ஆக்ஸ்போர்டு ஸர்வகலாசாலையில் பி. ஏ., பட்டம் வாங்கினேன். அதற்குமேல் படிக்கச் சக்தியில்லை; கையில் பண மில்லை" என்றான்.

இதைக் கேட்டதும் இந்தியர் மிகவும் சங்கடத்தில் ஆழ்ந்தார். ஆக்ஸ்போர்டு ஸர்வகலாசாலையில் படித்துப் பட்டம்பெற்ற ஒரு வன் தம் சாமான்களைத் தூக்குவதென்றால் அவருக்கு மனம் சகிக்க வில்லை. சிறிது யோசித்துவிட்டு அவன்கையிலிருந்த சாமான்களைத் தாமே எடுத்துக்கொள்ள அவனை நெருங்கினார்.

இளைஞன் அதைக் கண்டு ஆச்சரியமடைந்து, "ஏன் ஐயா? இந்த மூட்டைகளைத் தூக்க எனக்குச் சக்தியில்லை என்று எண்ணு கிறீர்கள்?" என்று கேட்டான்.

இந்தியர் தலையைச் சொறிந்துகொண்டே, "இல்லை, ஐயா! நீர் ஆக்ஸ்போர்டில் படித்தவராயிற்றே. மூட்டை தூக்க லாமோ?" என்றார்.

அதற்கு யுவகன், "ஐயா, எங்கள்தேசத்தில் வயிற்றுப்பிழைப் புக்காக எந்த விதமோ தேகசிரமப்பட்டு உழைத்துச் சம்பாதிப்ப தை இழிவென்று கருதமாட்டோம். நாங்கள் தொழிலுக்கு மரி யாதையும் கௌரவமும் காட்டுகிறோம். தொழிலில் ஏற்றத் தாழ் வில்லை, ஐயா! அவனவன் பிழைப்புக்கு ஏதாவது தொழில் செய்து தானே தீரவேண்டும்? நானே எடுத்து வருகிறேன் மூட்டைகளை" என்றான்.

அவ்விந்தியர் தம்முடைய தப்பபிப்பிராயத்தை உணர்ந்து மிகவும் வெட்கித் தலைகுனிந்து நடக்கலானார்.

## 2

பின் வருவது சமீபத்தில் இத்தாலியில் நடந்த ஒரு சம்பவம்:

ஆங்கிலமாது ஒருத்தி இத்தாலிக்கு வேடிக்கை பார்க்கச் சென்றிருந்தாள். அப்பொழுது ரோமாபுரியிலுள்ள ஒரு கடிகாரக் கடையில் 35 பவுன் கொடுத்துக் கைக்கடியாரம் ஒன்று வாங்கினாள். லண்டனுக்கு வந்ததும், 'இவ்வளவு விலைமதிப்புள்ள கடிகார மாயிற்றே; இதை இன்ஷ்யூர் செய்வதுதான் நல்லது' என்று

அதை ஓர் 'இன்ஷ்யூரென்ஸ்' கம்பெனிக்கு எடுத்துச் சென்றாள். அக்கம்பெனியார் அது ஒரு பவுன்தான் விலை மதிக்கக்கூடியது என்று சொல்லவே, கடிகாரக்காரன்தான் தன்னை ஏமாற்றி இருக்க வேண்டுமென்று கண்டுகொண்டாள் அம்மாது. உடனே, ஆத்திரம் பொங்க இத்தாலியின் ஸர்வாதிகாரியான ஸீனர் முஸ்ஸோலினிக்கு அவருடைய தேசத்து வியாபாரியின் 'பவிஷை' விளக்கி ஒரு கடிதம் எழுதினாள்.

முஸ்ஸோலினி அக்கடிதத்தைப் படித்துவிட்டு விசாரித்ததில் அவள் சொல்லியிருப்பது முற்றிலும் உண்மையென்றே தெரிந்தது. விசாரணையானதும் அவளுக்குக் கீழ்க்கண்ட கடிதத்தை எழுதினார்:

"அம்மா, தங்களை எங்கள்நாட்டு வியாபாரி ஒருவன் மோசம் செய்திருப்பதைக் கண்டு மிகவும் வெட்கமடைந்து வருந்துகிறோம். தாங்கள் நஷ்டப்பட நேர்ந்த தொகையான 34 பவுனுக்கு இதோ 'செக்' ஒன்று இதனுடன் அனுப்பி இருக்கிறேன். தயை செய்து பெற்றுக்கொள்க.

இப்படிக்கு,<br>
தங்கள் ஊழியன்,<br>
முஸ்ஸோலினி"

தம் தேசத்தின் கௌரவத்தை நிலைநாட்ட எவ்வளவு வணக்கம் பாருங்கள், 'ஸர்வாதிகாரி' என்று நாம் சிலசமயம் அருவருப்புடன் அழைக்கும் முஸ்ஸோலினிக்கு!

ஆங்கிலமாது இதை எதிர்பார்க்கவேயில்லை. அதற்குப் பின் சில தினங்கள் கழித்து, அந்தக் கடிகாரக்கடைக்காரனிடமிருந்து அவளுக்கு ஒரு கடிதம் வந்தது:

"அம்மா! நான் தங்களை மோசம் பண்ணிவிட்டது வாஸ்தவமே! அதனால் எங்கள் தேசத்துச் சட்டப்படி 6 மாதக் கடுங்காவல் தண்டனை எனக்கு விதிக்கப்பட்டிருக்கிறது. என் கடையை மூடியாகிவிட்டது. தாங்கள் என்மேல் தயை கூர்ந்து ஸீனர் முஸ்ஸோலினிக்கு என்னை மன்னித்துவிடும்படி ஒரு கடிதம் எழுதினால், நான் என்றும் நன்றி மறவாமல் இருப்பேன். கிருபை செய்யுங்கள், அம்மணி! விடுதலையாகி என் வயிற்றுப் பிழைப்புக்காகக் கடையை நடத்துவேன்."

அந்த ஆங்கில மாது இளகின மனதுடையவளாதலால் அவன் சொன்னதுபோலவே முஸ்ஸோலினிக்குக் கடிதம் வரைய, முஸ்ஸோலினியும் அதற்கிணங்கி அக்கடிகாரக்காரனை விடுதலை செய்துவிட்டார்.

## 3

சில தினங்களுக்கு முன் இந்தியர் ஒருவர் வேடிக்கையார்த்த மாக ஜெர்மனிக்குச் சென்றிருந்தார். அந்நாட்டு வழக்கப்படி ஸ்டேஷனில் இறங்கியதும் அவரைத் தாணுவிற்கு அழைத்துச் சென்று அந்தத் தேசத்து பழக்க வழக்கங்கள், சட்டங்கள் இவற்றைச் சுருக்கமாகச் சொல்லி, அவருடைய ஊர் பெயர் முதலிய வற்றை விசாரித்து எழுதிக் கொண்டனர். பிறகு, "தாங்கள் எங்கே தங்கப்போவதாக உத்தேசம்?" என்று கேட்டனர். இந்தியருக்கு முன்பின் தெரிந்தவர் அங்கு யாரும் இல்லை. அதனால் என்ன செய்வதென்று அவருக்குத் தெரியவில்லை. ஆனாலும் அந்த ஜெர்மன் போலீஸ் உத்தியோகஸ்தர்கள் அவரைப் பெர்லின் நகரிலிருந்த இந்தியர் விடுதிக்கு அழைத்துச் சென்று அங்கே ஓர் அறையில் அவரை அமர்த்திவிட்டு மிகவும் வினயத்துடன் அவரிடம் விடைபெற்றுச் சென்றனர். அவர்களுடைய மரியாதையையும், அவர்கள் அந்நிய நாட்டாரை அன்புடன் உபசரிப்பதையும் கண்டு அந்த இந்தியர் ஜெர்மானியர்களை வெகுவாகப் புகழ்ந்தார்.

இரண்டு மூன்று தினங்கள் கழித்து அவர் ஹாம்பர்க் என்ற நகருக்குச் சென்றிருந்தார். அங்குள்ள காட்சிகளையெல்லாம் பார்த்துவிட்டுப் பெர்லினுக்குத் திரும்பிவந்தார். அப்பொழுது தான் தம் தோல் கைப்பையை ரெயிலிலோ ஹாம்பர்க்கில் தங்கின ஹோட்டலிலோ மறதியாக வைத்துவிட்டு வந்தது அவர் நினைவிற்கு வந்தது. அந்தப் பையில் முக்கியமான சாமான்கள், 'அனுமதிச் சீட்டு', 4000 ரூபாய் நோட்டுகள், சில கடிதங்கள் இவை இருந்தன. 'அனுமதிச் சீட்டு'ம் ரூபாயும் இல்லாமல் எப்படி வசிக்க முடியும்? தலையில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டார். சற்று நேரங் கழித்து, 'எதற்கும் போலீஸ் அதிகாரிகளுக்கு அறிவித்து வைக்கலாம்' என்று எண்ணி அவர்களுக்கு 'டெலிபோன்' மூலம் இச்செய்தியைத் தெரிவித்தார். பத்தே நிமிஷங்களில் அவர்கள் அங்கே வந்து அவரிடமிருந்து எல்லா விவரங்களையும் கேட்டு அறிந்து தங்கள் குறிப்புப் புத்தகத்தில் எழுதிக் கொண்டனர். இந்தியர் மனம் சோர்ந்து உட்கார்ந்திருப்பதைப் பார்த்து அவர்கள், "ஐயா! கவலைப்படாதீர்கள். சற்றுத் தாமதம் ஏற்படலாம்; ஆனால் கட்டாயம் உங்களுடைய சொத்து உங்களிடம் வந்து சேரும். பயப்படாதீர்கள்! ஜெர்மானியர் அந்நிய நாட்டாரின் பொருளைக் கவரமாட்டார்கள். நாங்கள் தேடிப் புலன் விசாரித்துத் தெரிவிக்கிறோம்" என்று ஆறுதல் கூறினார்கள்,

நாலைந்து நாட்கள் கழித்து இந்தியருக்குப் போலீஸ் அதிகாரிகளிடமிருந்து முத்திரையிட்ட ஒரு 'பார்ஸல்' வந்தது. அதைப் பிரித்துப் பார்த்தார். காணாதுபோன அச்சிறிய தோல்பை இருந்தது! அதனுள் அவர் வைத்திருந்தபடியே 'அனுமதிச் சீட்டு', நோட்டுகள் எல்லாம் இருந்தன.

## 4

இந்திய வாலிபன் ஒருவன் ஜப்பானுக்குச் சென்றிருந்தான். அவனுக்கு ஜப்பானிய பாஷை தெரியாது. ஆனால் குறிப்புப் புத்தகமொன்றில் மிகவும் அவசியமான ஜப்பானிய வார்த்தைகளை முன்ஜாக்கிரதையாக எழுதி வைத்திருந்தான். அவற்றின் உதவியால் ஒருவாறு தன் காரியங்களைச் சாதித்து வந்தான். ஒருநாள் மாலை டோக்கியோ நகரில் ஒரு வீதியில் வேடிக்கை பார்த்துக் கொண்டே போகையில் தன் இருப்பிடத்திலிருந்து வெதுதூரம் வந்துவிட்டான். இருட்டிவிட்டதால் வந்த வழி தெரியவில்லை. அருகிலுள்ள ஒரு கடைக்காரனிடம் சென்று விசாரித்தான். அவன் ஜப்பானிய பாஷையில் பதில் சொன்னான். வாலிபன் தன் குறிப்புப் புத்தகத்தைப் புரட்டி, கடைக்காரன் சொன்ன வார்த்தை இருக்கிறதா என்று பார்த்தான். அதில் காணவில்லை. அவனுடைய நிலையை அறிந்த ஜப்பானியக் கடைக்காரன் எழுந்து வந்து வாலிபனை அவன் இருப்பிடத்திற்கே கொண்டுபோய் விட்டான். தனது நன்றியறிதலைக் காட்ட வாலிபன் கடைக்காரனுக்கு ஏதோ தன்னால் இயன்ற 'இனாம்' கொடுக்கப் போனான். ஜப்பானியன் சிரித்தவண்ணம் வாலிபனுக்கு வந்தனம் செய்துவிட்டு அதை வாங்கிக் கொள்ளாமல் விரைவாக வெளியே போய்விட்டான்.

அதே வாலிபனுக்கு ஜப்பானிய ஸைனியத்தில் சேரவேண்டுமென்று ஆசை. ஜப்பானியச் சட்டம் அதை அநுமதிக்கவில்லை. ஆனாலும் ஜப்பான் சர்க்கார் அவனைத் தங்கள் சொந்தச் செலவில் அமெரிக்காவிற்கு அனுப்பி அவனுக்கு ராணுவப் பயிற்சி அளித்தனர்.

* * * * *

நம்முடைய நாட்டிலும் ஸ்வதேசத்தின் கௌரவத்தையும், தொழிலின் மேன்மையையும் நிலைநாட்டிய பெரியார்கள் இராமற் போகவில்லை. சென்ற நூற்றாண்டில் ஈசுவரசந்திர வித்யாஸாகரர் என்ற பண்டிதர் ஒருவர் இருந்தார். இப்பொழுது நம் கண் முன்பாக மகாத்மா காந்தி இல்லையா? அவரைவிட வேறு உதாரணமாக எவரைக் குறிப்பிட முடியும்?

---



# சிறுவர் பகுதி

## "இன்னும் இரண்டு வரி"

'முத்தண்ணா'

---

இப்பொழுது ஜெர்மன் சாம்ராஜ்யமாக இருக்கும் பிரதேசமானது சற்றேறக்குறைய இருநூறு வருஷங்களுக்கு முன்னே பல சிறிய ராஜ்யங்களாகப் பிரிந்து இருந்தது. பிரஷியா என்பது அவற்றுள் ஒன்று. அப்பொழுது பிரெடெரிக் என்பவர் பிரஷியா நாட்டுக்கு மன்னராக இருந்தார்.

சண்டைகள் மலிந்த காலம் அது. பிரெடெரிக்கும் மண்ணாசை தலைக்கேறியவர். அதனால் அவர் எத்தனையோ தடவை சண்டைகளை நடத்தினார். எத்தனையோ சண்டைகளில் வெற்றியடைந்து, எத்தனையோ ராஜ்யதந்திரங்களில் ஜயம் அடைந்து பிரஷியா நாட்டை மிகவும் உயர்ந்த நிலைமைக்குக் கொண்டுவந்தார்.

அவருடைய ஆயுளின் பெரும்பகுதியானது பாசறைகளில் செலவிடப்பட்டது. பாசறையானது மிகவும் அபாயகரமான இடம். எப்பொழுது சமயம் வாய்க்கும் என்று எதிரிகள் பார்த்துக்கொண்டேயிருப்பார்கள். தம்முடைய ஆட்களையும் கூட முற்றிலும் நம்புவதற்கில்லை. கலகமும் குழப்பமும் எப்பொழுது உண்டாகும் என்று சொல்ல முடியாது. எதிரியின் ஆட்களும், ஒற்றர்களும், சிநேகிதர்களைப்போல்

---

ஓர் ஆங்கிலக்கதையைத் தழுவி எழுதியது.

நடித்துச் சமயம் பார்த்துக் கெடுக்கமுயலுவார்கள். ஆகையால் பகலிலேகூடப் பாசறையிலே ஒவ்வோர் அடியையும் பார்த்துப் பார்த்தே வைக்கவேண்டும். ஒவ்வொரு நிமிஷமும் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

பகலிலேயே இப்படியானால் இருள் சூழ்ந்த இரவைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். சைனியமானது என்ன செய்கிறது? விழித்துக் கொண்டிருக்கிறதா? தூங்குகிறதா? வேலை செய்கிறதா? திடீரென்று தாக்கப்போகிறதா? இவைகளுள் ஒன்றும் எதிரிக்குத் தெரியலாகாது. பாசறை எங்கே இருக்கிறது என்கிற அடையாளங் கூட எதிரிக்குத் தெரியாமல் இருந்தால் நல்லது.

ஆகையால், போர்களிலே மிக்க அநுபவமுள்ள பிரெடெரிக் தம் சைனியத்திற்கு மிகவும் கண்டிப்பான உத்தரவு ஒன்று போட்டிருந்தார். இரவிலே ஒரு நேரத்தைக் குறிப்பிட்டு, "இரவில் இந்த நேரத்துக்குப் பிறகு பாசறையிலே ஒரு விளக்குக்கூட எரியவிடக்கூடாது. கட்டளையை மீறி நடப்பவர்களுக்குத் தண்டனை மரணம்" என்ற உத்தரவைப் பிறப்பித்திருந்தார். தம்முடைய ஆணையை யாராவது மீறி நடக்கிறார்களா என்று மேற்பார்ப்பதைத் தம்முடைய வேலையாகவே வைத்துக்கொண்டார். அந்த உத்தரவுப்படி நடப்பது எவ்வளவு முக்கியம் என்பதை அவர் அநுபவத்தில் நன்கு அறிந்தவர். ஆகையால் அடிக்கடி பாசறையைச் சுற்றிப் பார்த்துப் பாதுகாத்து வந்தார்.

ஒரு நாள் அவர் அப்படிச் சுற்றிக்கொண்டு வரும்போது, குறித்த நேரத்துக்குப் பிறகு, கூடாரம் ஒன்றில் ஒரு விளக்கு எரியக் கண்டார். ஆச்சரியமடைந்து கூடாரத்துக்குள் போனார். அங்கே அவருடைய தளகர்த்தர்களுள் ஒருவர் கடிதம் ஒன்றை எழுதி முடித்து அதை ஒட்டப் போகும் சமயமாயிருந்தது.

"சற்று இரு" என்றார் பிரெடெரிக். மேஜையின் மேல் வைத்து எழுதிக் கொண்டிருந்த தளகர்த்தருக்குத் திடுக்கிட்டது. தலையை நிமிர்ந்து பார்த்தார். கோபம் ஜொலிக்கும் கண்களோடு கூடிய அரசர் எதிரே நிற்கக் கண்டார்.

"விளக்கு எரியக்கூடாது என்று நான் உத்தரவு போட்டிருக்கிறேன், தெரியுமா?"

"தெரியும்" என்று தீனக்குரலில் பதில் வந்தது.

"பின்னே ஏன் என் உத்தரவை மீறி நடந்தாய்?" என்று மிகவும் கடுமையாய்க் கேட்டார் பிரெடெரிக்.

"என் மனைவிக்கு எழுதிக்கொண்டிருந்தேன்."

தளகர்த்தரின் கண்கள் மன்னிக்கவேண்டுமென்று கெஞ்சுபவைபோல் தோன்றின.

"அப்படியா? கடிதத்தை ஒட்டுவதற்குமுன் இன்னும் இரண்டுவரி எழுது" என்றார் பிரெடெரிக். தளகர்த்தர் தயங்கினார்.

"பேனாவை எடு. நான் சொல்லுகிறபடி எழுது" என்றார் பிரெடெரிக். தளகர்த்தர் பேனாவைக் கையில் எடுத்தார்.

பிரெடெரிக், "சரி. எழுது: 'இந்தக் கடிதம் உன் கைக்கு வந்து சேருவதற்கு முன், அரசருடைய ஆணையை மீறி நடந்ததற்காக, எனக்கு மரண தண்டனை ஏற்பட்டு என்னைச் சுட்டுக்கொன்றிருப்பார்கள்' என்று எழுது! எழுதியாய் விட்டதா?—சரி. கடிதத்தை ஒட்டு! இங்கே கொடு. நான் அனுப்பிவிடுகிறேன்" என்றார்.

அரசனுடைய ஆணை நிறைவேறியது. உத்தரவைப் பார்த்தால் மிகவும் கொடிய உத்தரவாகத் தோன்றுகிறது அல்லவா? வாஸ்தவந்தான். ஆனால் உத்தரவை மீறிய தளகர்த்தர் ஒருவருடைய அஜாக்கிரதையினால் அந்தப் பாசறையிலுள்ள சைனியம் முழுவதுக்குமே பிராணாபாயம் வந்திருக்கலாம் அல்லவா?

---

# "கணையாழியின் கனவு"

## —ஒரு விமர்சனம்—

கே. ஸாவித்ரி அம்மாள்

---

ஒரு புஸ்தகம் புதிதாய் அச்சிடப்பெற்று வெளியாகும் பொழுது வாசகர்களுக்கு அதை அறிமுகப்படுத்துவதற்காகப் பிறர் அதை விமர்சனம் செய்வது நூதன முறையல்ல. இத்துறையில் தங்கள் எழுத்துத் திறமையையும் மனோதர்மத்தின் சக்தியையும் முற்றிலும் காட்டிப் புகழ் பெற்றிருப்பவர்கள் மேனாட்டில் அநேகர் இருக்கின்றனர். அவர்கள், தாம் விமர்சனம் செய்யும் புஸ்தகங்களின் குணகுணங்களை யெடுத்துக் காட்டுவதுடன், அதன் வாயிலாக அவற்றைப் பற்றித் தாம் கொண்டுள்ள ஆழ்ந்த கருத்துக்களையும் விசாரங்களையும் கதாசிரியர்கள் நன்குணரும்படி எடுத்துக் கூறுகிறார்கள். இவ்வாறாகப் புஸ்தக விமர்சனம் செய்வதும் புஸ்தகம் எழுதுவதைப் போலவே ஒரு சிறந்த கலையாக அங்கே வளர்ச்சி பெற்று இலங்குகிறது.

ஆனால், இப்பொழுது இக் "கணையாழியின் கனவு" என்னும் சிறுகதைக் கொத்திற்கு, மேற்கூறியவாறு வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தும் முறையில் ஒரு விமர்சனம் அவசியமா என்பது தான் பெரிய சந்தேகம். ஏனெனில், இக்கதைகள் யாவும் தமிழ் நாட்டில் பிரசித்தமாகவுள்ள பத்திரிகையாகிய ஆனந்தவிகடனில் ஏற்கெனவே வெளியாகி யிருக்கின்றன. ஒவ்வொரு கதையையும் எவ்வளவு ருசியுடனும் உற்சாகத்துடனும் வாசகர்கள் படித்து ஆனந்தம் எய்தினர் என்பது யாவரும் அறிந்த விஷயம். இக்கதைகளை இயற்றியவரோ ஸ்ரீமான் கல்கி. அவரைப்பற்றிக் கூறுவது பிறந்தகத்துப் பெருமையை உடன்பிறந்தவனிடம் குலாவிக்கொள்வது போன்றதல்லவா?

ஆகவே ஸ்ரீமான் கல்கி அவர்களின் கட்டுரைகளையும் கதைகளையும் படிப்பதில் என்றும் உற்சாகம் கொண்டவர்களுக்கு அவைகளைப்பற்றிப் புகழ்ச்சியாகக் கூறுவது மிகையேயாகும். குறைகளை எடுத்துக் கூறுவது என்பதோ வீண் பிரயாசையே. ஏனெனில் அக்குறைகள் வாசகர்கள் காதில் விழுந்து அவர்கள் ஏற்றுக்கொள்ளுவார்களோ வென்பது சந்தேகம். இவ்வாறு வாசகர்களுடைய பக்கபலத்தைப் பூர்ணமாய்ப் பெற்றிருக்கும் ஓர் ஆசிரியரை யார் என்ன செய்ய முடியும்?

புதிதாய் அச்சிடப்பெற்று அழகான சித்திரப்படங்களுடன் வெளிவந்திருக்கும் ஒரு புஸ்தகத்தைக் கடையில் காணும்பொழுது அதை விலை கொடுத்து வாங்கி அது தம் சொந்த அலமாரியையோ மேஜையையோ அலங்கரிப்பதைக் கண்டு ஆனந்திக்க வேண்டு மென்று எல்லோரும் ஆவல் கொள்வது சாத்தியமன்று. பண முடையான இந்நாளில் அது சீமான்களுக்கே லகுவாய்க் கிடைக் கக்கூடிய ஒரு சந்தோஷம். முன்பு ஒருதரம் கல்கி அவர்கள் ஒரு நாவலுக்கு மதிப்புரை எழுதும்பொழுது "இப்பணமுடைநாளில் யார் கையிலாவது ஒன்றரை ரூபாயிருந்தால் அதை முன்பின் யோசியாமல் கொடுத்து இந்நாவலை வாங்கிவிடலாம். அதனால் அவர்களுக்கு நஷ்டமேயில்லையென்று நான் உறுதியாய்க் கூறு வேன்" என்று எழுதினர். அவர் சொற்களையே நாம் அவர் புஸ் தகத்திற்கும் கூறுவது முற்றிலும் பொருத்தமாகும். அது மட்டு மல்ல; இரண்டு முழு ரூபாய்கள் நம் கையில் இல்லாவிட்டால் பிறரிடம் கடனைக் கேட்டுவாங்கிக் கொடுத்தாவது "கணையாழி யின் கனவை" நாம் சொந்தத்திற்கு வாங்கிக்கொள்ளலாம் என்றும் நாம் உறுதியாய்க் கூறலாம்.

மேனாட்டில் சிறு கதைகள் எழுதுவது இலக்கியத்தின் ஒரு சிறந்த அம்சமென்றே கருதப்படுகிறது. சிறு கதையின் அமைப்பு, லக்ஷணம் இவைகளைப் பற்றியே நுட்பமாய் ஆராய்ந்து ஆசிரியர் கள் எவ்வளவோ எழுதியிருக்கிறார்கள். 500 பக்கங்களுக்குக் குறையாமல் எழுதினல் நாவலென்றும், 50 பக்கங்களுக்குக் குறை வாய் எழுதினல் சிறு கதையென்றும் எண்ணுவது பிசகு. சிறு கதையின் லக்ஷணமே வேறு. அது தனிக்கலை. 500 பக்கங்கள் கொண்ட ஒரு நாவலை இயற்றும் ஆசிரியரிடம் எவ்வளவு உல கானுபவமும் கற்பனசக்தியும் இருக்கவேண்டுமோ அவ்வளவும் சிறுகதை எழுதுபவரிடமும் அமைந்திருக்க வேண்டுமென்பது இலக்கிய நிபுணர்களின் கொள்கை. நாவலில் வரும் மனிதர்கள், சம்பவங்கள் எவ்வாறு உண்மைக்கு மாறுபடாமல் இருக்கவேண்டி யது அவசியமோ அவ்வாறே சிறுகதையில் வரும் மனிதர்களும் உயிருள்ளவர்களாயும், சம்பவம் இயற்கைக்கு ஒட்டியதாயும் இருக்கவேண்டும். சிறுகதை எழுதும் கலை நூறுகஜ தூர ஓட்டப் பந்தயத்திற்கு ஒப்பானது என்று மேனாட்டுப் பிரசித்த ஆசிரியர் ஒருவர் கூறுகிறார். முதல்வரியிலேயே வாசகரின் உள்ளத்தைக் கவர்ந்து ருசியைக் கிளப்பிவிட வேண்டுமாம்; பிறகு கதை முடி யும் வரை அச்சுவை குன்றாமல் இருக்கவேண்டும். இது, சிறந்த மனோதர்மம் பெற்ற எழுத்தாளர்களால் முடியுமே அல்லாது வேறு யாராலாவது சாத்தியமா?

இலக்கியத்தின் சீரிய அம்சம் எது இருப்பினும் இல்லாவிடினும் சுவாரஸ்யம் பொருந்தியதாயிருப்பதே முக்கியமென்று வைத்துக் கொண்டால், ஸ்ரீமான் கல்கி அவர்களின் கதைகள் மிகவும் உயர்ந்த வகையைச் சேர்ந்தவை என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இக்குணத்தினால்அவர் எழுதுபவை யாவும், படித்தவர்கள் படியாதவர்கள், பெரியவர்கள் சிறியவர்கள் என்ற பேதமின்றி அனைவரும் படித்து இன்புறக்கூடியவையாயிருக்கின்றன. இங்கிலீஷில் உயர்தர ஆசிரியர்களின் ரசம் பொருந்திய கதைகளைப் படிக்கும்பொழுது 'தமிழில் இப்படிப்பட்ட கதைகளில்லையே!' என்று நாம் கொண்ட வருத்தத்தை, கல்கியின் "கணையாழியின் கனவு" நம் மனதினின்றும் ஓரளவு அகற்றிவிடுகின்றதென்பது உண்மையே.

இப்புஸ்தகத்தில் பதினைந்து கதைகள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் ஏற்கெனவே ஆனந்தவிகடனில் நாம் படித்ததாகவே இருப்பினும், இங்கே சேர்ந்து பார்க்கும்பொழுது அவை புஸ்தகரூபமாய் வெளி வருவதற்குரிய ஒரு விசேஷகுணம் நமக்கு எளிதில் புலப்படுகிறது. அது என்னவெனில், கதைகள் அனைத்தும் ஒன்றுபோல் மற்றொன்று இராமல் இருப்பதே. மேலெழுந்தவாரியாயும் உள்ளாழ்ந்த விதமாயும் உள்ள ஹாஸ்ய ரசம் ததும்பும் நடையைக் கையாளுவதில் கல்கி அதிக சாமர்த்தியம் படைத்தவரென்பதை நாம் இங்கே புதிதாய்க் கூறவேண்டியதில்லை. இக்கதைகளில் அது மிகவும் முக்கிய அம்சமாகவே விளங்குகிறது. ஆயினும் அதற்காக மற்ற ரசங்களை நன்றாகக் கையாளும் திறமை அவரிடமில்லையோவென்றும் நாம் சந்தேகிக்க வேண்டியதில்லை. எல்லா உணர்ச்சிகளையும் இயல்பிற்கு மாறுபடாமல் அனுபவித்து எழுதும் சக்தி வேண்டிய அளவு அவரிடம் அமைந்திருக்கிறதென்பது இக்கதைகளிலிருந்து நமக்கு நன்கு தெரியவருகிறது.

"கணையாழியின் கனவு" என்னும் கதை முற்றிலும் நகைச்சுவை பொருந்தியதாகவே யிருக்கிறது. "அந்த ஊரில் இருபது வயதுக்கு மேற்பட்ட இளைஞர்கள் எல்லாரும் அநேகமாய் எம். ஏ. க்கள். எம். ஏ. அல்லாதவர்கள் பீ. ஏ. க்கள். அதுவும் இல்லாதவர் பாதி பீ. ஏ.க்கள். எல்லோரும் பணக்காரர்கள். ஆதலால் உத்தியோகத்தைத் தேடி அலையாமல், வேண்டுமானால் உத்தியோகம் தங்களைத் தேடிவரட்டும் என்று ஊரில் தங்கிவிட்டவர்கள்." மேற்படி வாக்கியங்களிலுள்ள பரிகாசத்துவனி ஆசிரியரின் நடையில் சகஜமாயுள்ளது. கதாநாயகி சகுந்தலையோ, தற்காலம் தேசத்திற்கும் சமூகத்திற்கும் இன்றியமையாத குணங்களுடன் கல்வியறிவும் விவேகமும் பொருந்திய ஓர் இளம்பெண்மணி

என்ருல் அவள் எவ்வாறிருக்க வேண்டுமென்பதற்கு ஒரு நிதர்சன மாய் விளங்குபவள். சலனமற்று உறக்கம் குடிகொண்டிருக்கும் ஒரு கிராமத்தில் சகுந்தலையைப்போல் உற்சாகமும் இளமை யும் பொருந்திய ஒரு பெண்மணியின் வரவானது எத்தகைய கிளர்ச்சியைத்தான் உண்டாக்க முடியாது? அதை நகைச்சுவை யுடன் வாசகரின் உள்ளத்திற் படுமாறு ஆசிரியர் வெகு அழகாய் விவரித்துக் காட்டுகிருர். "கேதாரியின் தாயார்" முற்றிலும் சோக ரசம் ததும்பும் ஒரு கதை. ஹிந்து சமூகத்தில் கைம்பெண்களின் விஷயத்தில் நடக்கும் கொடுமை இக்கதையின் மூலம் நம் ஹிரு தயத்தில் ஊடுருவிப் பாய்கின்றது. அந்த அநியாயத்தைக் காணச் சகியாமல் கேதாரி தன் உயிரையே விட்டுவிட்டான். இது போதா மல் கேதாரி இறந்த பிறகு "கிளி" போன்ற அவன் இளம் மனைவிக்குச் செய்த அலங்கோலத்தையும் ஆசிரியர் தயக்கமின்றி எழுதுகிருர். ஆயினும் வாசகர் அதைக் கூசாமற் படித்து முடிப் பதுமட்டும் அவ்வாறு சுலபமான காரியமாயில்லை.

"சிரஞ்சீவிக் கதை"யைப் படிக்குங்கால் ஹாஸ்யரசத்தினூடே சோகரசம் தோய்ந்து வாசகர்களின் உள்ளத்தைக் கலக்கும் அரிய திறம்பொருந்திய சில ஆங்கிலக்கதைகள் நம் நினைவிற்கு வருகின்றன. "மனிதன் சாகவேண்டுமா? ஏன் சிரஞ்சீவியா யிருக்கலாகாது?" என்ற விசாரணையிலாழ்ந்த மார்க்கண்ட முதலி யார், ஆறுமாதம் ஒழுங்கான வாழ்க்கை நடத்தித் தம் தேகநிலைமை யைச் சரிப்படுத்திக் கொள்ளுவதென்று தீர்மானித்தார்; ஆனல் அன்றே அவர் வாழ்நாள் முடிவடைந்து சிரஞ்சீவியாக வேண்டு மென்ற அவருடைய ஆவல் எவ்வாறு நிறைவேறியது என்பதை எண்ணும்பொழுது விதியின் வலிமையின்முன் மனிதனின் தீர்மா னத்தின் சிறுமையை நன்கு உணருகின்ருேம்.

கதைப்போக்கின் சுவாரஸ்யத்திற்கு "மிஸ் பவானி பி.ஏ. பி.எல்.", "தந்தையும் மகனும்", "பாழடைந்த பங்களா" இவை களைச் சிறந்த உதாரணங்களாகக் காணலாம். இப்புத்தகத்திலுள்ள கதைகள் யாவும் ஏறக்குறைய ஆங்கிலக்கதைகளின் மாதிரியையே தழுவி எழுதப் பெற்றிருக்கின்றன வென்று கூறலாம். ஆயினும் அதற்காக நமது பழக்கவழக்கங்களுக்கு ஒட்டாமலாவது, இயல் பிற்கு விரோதமாகவாவது அவை இருப்பதாக ஒருவரும் குறை கூறமுடியாது. புஸ்தகத்தின் முன்னுரையில் ஸ்ரீமான் டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் கூறியிருப்பதுபோல, சித்திரம் முக்கியமே யொழிய சுவர் முக்கியமாகாதல்லவா?

"போலீஸ் விருந்தி"ல் கந்தசாமியைப் பற்றிப் படிக்கும்பொ ழுது மனிதர்களைப் படம் பிடிப்பதுபோல் நம் மனக் கண்முன்

நிறுத்தும் ஆசிரியரின் திறமை வியக்கத்தக்கதாயிருக்கிறது. "பாழடைந்த பங்களா"வை வர்ணிக்கும்பொழுது,"பக்கத்திலிருந்த ஒரு தொட்டியில் கொஞ்சம் ஜலம் தேங்கியிருந்தது. அது வெகுகாலத்துத் தண்ணீராயிருக்க வேண்டுமென்பதிற் சந்தேகமில்லை. எனவே அதைப் புண்ணியதீர்த்த மென்றுகூடச் சொல்லலாம்" என்ற சொற்களின் விஷமப்பரிகாசத்தை நாம் பாராட்டாமல் இருக்கமுடியாது. அப்புறம், "பொதுவாக, அந்த பங்களா நமது ஹிந்து சமூகத்துக்கும் சனாதன தர்மத்துக்கும் சிறந்த உதாரணமாயிருப்பதாக எனக்குத் தோன்றிற்று. பலமான அஸ்திவாரத்தின்மேல் கட்டப்பட்டது. விசாலமானது. பழமையானது. அழகு பொருந்தியது. கொஞ்சம் பெருக்கிச் சுத்தம் செய்யவேண்டும்; தரைக்குப் புதிய தளவரிசை போடவேண்டும்; சுவர்களின் உளுத்துப்போன மேற்பூச்சைச் சுரண்டிவிட்டுச் சிமிண்டுபூசி வெள்ளை அடிக்கவேண்டும். தோட்டத்தையும் சுத்தம் செய்து சில புதிய புஷ்பச் செடிகளை வைத்துவிடவேண்டும். இதெல்லாம் செய்துவிட்டால் வீடு எவ்வளவு நன்றாக ஆகிவிடும்?" என்ற வாக்கியங்களின் உண்மையும் பொருத்தமும் நம் உள்ளத்தில் ஆணியறைந்தாற்போல் பதிகின்றன.

"மயிலைக் காளை" யைப் படிக்குங்கால் கிராமாந்தரத்தில் கிராமாந்தர ஜனங்களின் மத்தியில் இருப்பது போன்ற உணர்ச்சியே நமக்கு ஏற்படுகின்றது. கிருஷ்ணன் பூங்கொடி இவர்களுடைய காதற்பேச்சு எவ்வளவு உண்மைக்கு ஒத்ததாக விளங்குகின்றது! நாகரிகம் பொருந்திய ஒரு வாலிபனும் ஓரிளமங்கையும் எவ்வாறு காதலுணர்ச்சி ததும்புமாறு பேசுவார்களென்று நாம் கருதுகிறோமோ அவ்வாறு கிருஷ்ணன் பூங்கொடியைச் சந்திக்கும் பொழுது பேசவில்லை. ஆயினும் அவர்கள் உள்ளத்திலுள்ள காதலின் வேகம் நமக்கு வெளிப்படையாகவே யிருக்கிறது. எழுதும் திறமை குறைவாக இருப்பின் இத்தகைய நுட்பமான ரஸங்களைப் புகுத்துவது ஒருகாலும் இயலாது.

இவ்வாறு எடுத்துக் காட்டுவதற்குரிய விஷயங்கள் இன்னும் அநேகம் இருக்கின்றன. ஆனால் அவை யாவும் வாசகர்கள் தாமே படித்து உணரக்கூடியவையே. முடிவாக, இக்கதைகளின் உயர்வைக் குறைப்பதற்கு என்ன குற்றங்கள் கண்டுபிடிக்கப்பட்டபோதிலும் முதலிலிருந்து கடைசிவரையிலும் படித்து முடிப்பதற்கு வேண்டிய சுவாரஸ்யம் நிறைந்த புஸ்தகம் தமிழில் ஏதாயினும் உண்டோவெனில் அது ஸ்ரீமான் கல்கி அவர்கள் எழுதியிருக்கும் "கணையாழியின் கனவு" என்னும் புஸ்தகமே என்று நாம் உறுதியாய்க் கூறலாம்.




## புது வருஷம்

'கலைமகளு'க்கு ஏழாவது ஆண்டு தொடங்கியிருக்கின்றது. தமிழ்நாட்டில் இருக்கும் பத்திரிகைகளுக்குள் இதற்கு ஒரு தனிச் சிறப்பு இருப்பதை யாவரும் அறிவர். பர்லினிருந்து ஸமீபத்தில் வந்த ஒரு கடிதத்தில் ஒரு பாதிரியார் இப் பத்திரிகையை மிகப்பாராட்டி எழுதியிருக்கின்றார். இலக்கியம், சாஸ்திரம், கதை என்னும் துறைகளில் 'கலைமகள்' தனிச்சிறப்போடு விளங்குகின்றதென்று அன்பர்கள் கூறி ஆதரவு காட்டுகிறார்கள். இவ்வளவுக்குங் காரணம், அவ்வப்போது இப்பத்திரிகையின்பால் அன்புபூண்டு கட்டுரைகளை எழுதியுதவும் அறிஞர்களுடைய உபகாரச் செயலேயாகும். நம் நாட்டில் உண்டாகி யிருக்கும் புத்துணர்ச்சியினால் இலக்கியச் சுவையை அநுபவிப்பவர்களும், கதையின்பத்தை நுகர்பவர்களும் அதிகரித்து வருகிறார்கள். பொதுஜனங்களுக்கு விஷயங்களை அறியவேண்டுமென்ற பசியும் அதிகரித்து வருகின்றது. ஆதலின் அவர்களுடைய விருப்பத்திற் கேற்றபடி விஷயங்களை வெளியிட வேண்டுமென்று முயன்று வருகிறோம்.

ஒவ்வொரு துறையிலும் இன்னும் சிறந்த கட்டுரைகளை வெளியிட வேண்டு மென்பதே நம் ஆவல். 'கலைமகள்' அன்பர்கள் இப்பொழுது காட்டிவரும் ஆதரவு போதாது. பலர் தங்கள் சந்தாத் தொகையைப் பாக்கிவைத்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அவற்றை விரைவிலே அனுப்பி, மேலும் சந்தாதார்களைச் சேர்த்து அனுப்பியுதவினால் 'கலைமகள்' இன்னும் சீரிய முறையில் வெளிவருவதற்கு அநுகூலமாகும்.

அன்பர்கள் இப்பத்திரிகையில் எந்த விதமான திருத்தங்கள் அமையவேண்டுமென்று விரும்புகிறார்களோ அவற்றை எழுதியனுப்பினால் கவனித்து வேண்டியவற்றைச் செய்வதாக எண்ணியிருக்கிறோம்.

## திருவாவடுதுறை ஆதீனத் தலைவர்

ஸ்ரீ மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதிவரும் இன்சுவைப் பிழம்பாகிய கட்டுரைகளுள் சிலவற்றில் இடையிடையே திருவாவடுதுறை யாதீன மடத்தைப் பற்றிய பிரஸ்தாபங்கள் வருவதை, "கலைமகள்" அன்பர்கள் அறிந்திருப்பார்கள். பழங்கால முதல் தமிழையும் சைவத்தையும் பாதுகாத்துப் போற்றுவதில்



அவ்வாதீனம் சிறப்படைந்து விளங்குகின்றது. ஸ்ரீ ஐயரவர்கள் இளமையில் படித்த இடம் அவ்வாதீனம் என்பதைக் காட்டிலும் வேறொரு சிறப்பு அதற்கு வேண்டுவதே இல்லை. சிவஞானமுனிவர், கச்சியப்ப முனிவர், ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் முதலிய மகாவித்துவான்கள் தமிழ் நூல்களை இயற்றி விளங்கியதற்குக் காரணம் அவ்வாதீனத்தின் ஆதரவேயாகும். ஷை ஆதீனத்தில் இப்பொழுது நூதனமாக 20-ஆம் பட்டத்தில் தலைவராக வந்திருப்பவர்கள் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள். இவர்கள் ஆதீனத்தின் பழம் பெருமையை நிலைநிறுத்திச் சைவநன்மக்களுக்கும் தமிழ் மக்களுக்கும் பயன்படும் காரியங்களைச் செய்து நீடூழி வாழ வேண்டுமென்று வாழ்த்துகிறோம்.

---



ஸ்ரீ ஸுபாஷ் சந்திர வஸு

[இவர் கட்டுரையும் சரித்திரமும் இவ்விதழில் வெளியாகின்றன.]

Courtesy: Alliance Co., Mylapore.




# ராமதாஸர்

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

## 1

திருவிடைமருதூரில் மகாராஷ்டிர அரச பரம்பரையைச் சேர்ந்த அமரசிம்மர் என்னும் அரசர் இருந்துவந்தார். அவர் சிவ பக்தியும், ஸங்கீதத்தில் அபிமானமும், பெரியோர்களிடத்தில் அன்பும் உடையவர். தினந்தோறும் காலையில் எழுந்து சென்று காவிரியில் நீராடி விட்டு அங்கே கோவிந்ததீக்ஷிதரவர்களாற் கட்டப் பெற்றுள்ள புஷ்யமண்டபத்தில் அநுஷ்டானங்களைச் செய்து கொண்டிருக்கும் பெரியோர்களை வலம்வந்து வணங்கி ஸ்ரீ மகாலிங்க மூர்த்தியைத் தரிசனம் செய்து பிறகு அரண்மனை வந்து சேர்வார். அவர் வாழ்ந்திருந்த அரண்மனை இன்னும் திருவிடைமருதூர் வடக்கு வீதியில் இருக்கிறது.

ஸ்ரீமகாலிங்கமூர்த்தியிடம் அவருக்கு அளவிறந்த பக்தி உண்டு. அம் மூர்த்திக்கு வெள்ளி ரதமும், மகாரதத்தின் முன்பு கட்டுவதற்குரியனவும் மிக்க அழகியனவுமாகிய நான்கு குதிரையுருவங்களும் அவரால் செய்வித்து அளிக்கப்பெற்றன. பெரியோர்களுடைய கூட்டுறவும், ஸங்கீத வித்துவான்களுடைய பழக்கமும் ஸ்ரீ மகாலிங்க மூர்த்தியின் தரிசனமும் அவருடைய தினசரிவாழ்க்கையில் தவறாமல் இருந்து வந்தன. அவருடன் ஸம்ஸ்கிருத வித்துவான்கள் சிலரும் மகாராஷ்டிர பாஷையில் தேர்ச்சிபெற்றவர்கள் சிலரும் இருந்தார்கள்.

அரண்மனையின் கிழக்கே உள்ள இந்திரசபை மாடியில் அவர் ஒருநாள் காலையில் உலாவிக்கொண்டிருந்தார். மணி ஒன்பதுக்கு

மேல் இருக்கும். அப்பொழுது அவருடைய செவியில் மிக்கமதுர மான கீத ஒலி ஒன்று கேட்டது. அதுகாறும் அத்தகைய ஒலியை அவர் கேட்டிலர். அந்த ஒலியில் ஒரு தனியான கம்பீரமும் பக்தியும் இனிமையும் ஒருங்கே கலந்திருந்தன. அந்தக் கானத்திலே அரசர் ஈடுபட்டார். அது வடநாட்டு ஸங்கீத முறையிலே அமைந்த தாகத் தெரிந்தது.

'இவ்வளவு நாட்களாக இத்தகைய மதுரமான தொனியை நாம் கேட்டோமில்லையே! இந்த அமுதமயமான கீதம் எங்கிருந்து வருகின்றது? இந்த ஒலி நம் உடம்பு முழுவதும் சிலிர்க்கச் செய் கிறதே!' என்று அவர் எண்ணினர். அவர் கேட்ட ஸங்கீத நாதம் வரவரத் தெளிவாகக் கேட்டது. 'யாரோ தெருவில் பாடிக் கொண்டு வருவது போலல்லவா தோற்றுகிறது? இவ்வளவு அருமையான ஸங்கீதம் தெருவிலே இறைபடும்படி அந்த வித்துவானுக்கு என்ன துரதிர்ஷ்டம் வந்து விட்டது?' என்று சிந்தித்தார்.

அருகிலிருந்தவர்களை அவர் விசாரித்தார்; அவர்கள், "இந்த ஊரிலே சிலகாலமாக ஒரு பெரியவர் வந்திருக்கிறார். அவர் பரம பக்தராகக் காணப்படுகின்றார். அவருடைய கீத ஒலி எப்படி உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகிறதோ அப்படியே அவருடைய திருமுக ஒளியும் மனத்தைக் கவரும்" என்றார்கள்.

"அப்படியா? அவர் எதற்காக இப்படி வீதியிலே பாடிக் கொண்டு வருகிறார்?"

"அவர் தினந்தோறும் காலையில் காவிரியில் ஸ்நானம் செய்து ஜபதபங்களையும் ஸ்ரீ மகாலிங்கமூர்த்தியின் தரிசனத்தையும் முடித் துக்கொண்டு தோளில் உஞ்சவிருத்திச் செம்பை மாட்டிக்கொண்டு வீதி வழியே போகிறார். போகும்போது ஸ்ரீ ராமன்மீதும் கிருஷ் ணன்மீதும் பரமசிவன்மீதும் பலகீர்த்தனங்களையும் சுலோகங்களை யும் பாடுகிறார். அவருடைய ஸங்கீதம் காலைவேளையில் எல்லோ ருடைய உள்ளத்திற்கும் ஊக்கத்தை அளிக்கிறது. அவர் போகும் போக்கிலே ஊரிலுள்ளவர்கள் அவர் செம்பை அரிசியால் நிறைத்து விடுகிறார்கள். சிலர் அவர் வீட்டிற்குப் பருப்பு, வெல்லம், கறிகாய், தயிர், பால் முதலியவற்றை அவருக்குத் தெரியாமலே கொடுத்து அனுப்பிவிடுகிறார்கள். அவருக்கு இந்த உலகஞாபகமே இரா தென்று தோற்றுகிறது. ஜபதபங்களும் சிவதரிசனமும் உஞ்ச விருத்தியுமே அவருடைய பொழுது போக்கு. அவரைப் பற்றி ஊரினர் யாவரும் பாராட்டிப் பேசிக்கொண்டிருக்கிறார்கள்."

"என்ன ஆச்சரியம்! இத்தகைய மகான் இவ்வூரில் இருப்பது எனக்கு இதுவரையில் தெரியாமற் போயிற்றே. யாரோ ஸங்கீத

வித்துவான் பாடுகிறுரென்றல்லவோ நினைத்தேன்? நீங்கள் சொல்வதைப் பார்த்தால் இவருடைய அனுக்கிரகத்தைப் பெறவேண்டுவது அவசியமென்ற விருப்பம் எனக்கு உண்டாகிறது. ஸங்கீதம், பக்தி இரண்டும் பொருந்தி யிருப்பவர்களைக் காண்பது இக்காலத்தில் எவ்வளவோ அரிது.”

“ஆமாம்! இவருடைய ஸங்கீதமும் பக்தியும் ஒன்றையொன்று விஞ்சி விளங்குகின்றன.”

“அப்படியானுல், எப்படியாவது அந்த மகானை இங்கே அழைத்து வந்து எனக்குப் பழக்கம் செய்து வைக்கவேண்டியது உங்கள் கடமை.”

## 2

வீதியிலே பாடிக்கொண்டு வந்தவரே ராமதாஸ் என்னும் பெரியார். அவர் வடமப்பிராமணர். இளமைமுதலே ஸங்கீதம் பயின்றவர். ஸங்கீத அறிவோடு தெய்வபக்தியும் சேர்ந்தே அவர்பால் முதிர்ந்து வந்தது. அப்பால் அவருக்குக் காசியாத்திரை செய்து வரவேண்டுமென்ற அவா உண்டாயிற்று. யாத்திரை புறப்பட்டு வடநாட்டிலுள்ள பல திவ்யஸ்தலங்களைத் தரிசித்தார்; பல பெரியோர்களோடு பழகினுர்; ஸங்கீத அறிவு மிக்கவராதலின் வடநாட்டு ஸங்கீதத்தையும் அப்பியாஸம் செய்தார்; அந்த நாட்டில் வழங்கும் பல உருப்படிகளையும் பாடம்பண்ணினுர்; பிறகு தம்முடைய ஜன்மதேசம் வந்தார். அவருக்கு விவாகமாயிற்று.

தஞ்சை முதலிய இடங்களுக்குச் சென்று அரசர்களுடைய ஸம்மானத்தை அவர் அடைந்தார். அங்கே பல வித்துவான்களுடைய பழக்கமும் உண்டாயிற்று. வெறும் ஸங்கீத அறிவு மாத்திரம் இருந்தால் அவர் ஒரு ஸம்ஸ்தானத்தில் வித்துவானுக இருந்து விளங்கியிருப்பார். ஸங்கீதமாகிய சாதனத்தால் அடையப்படும் சாத்தியமாகிய பரம்பொருளினிடத்தே அவர் தீவிரமான பக்தி பூண்டவராதலால் அவருக்கு அரசர்களுடைய ஸேவையும் வித்துவான்களுடைய பழக்கமும் நகரவாஸமும் பிடிக்கவில்லை. நல்ல நதி தீரத்தில் அமைந்த சிறந்த ஸ்தலமொன்றில் இருந்து தம்முடைய பக்திக்கு இடையூறின்றி வாழ்ந்து வரவேண்டுமென்று அவர் விரும்பினுர். உஞ்சவிருத்தியினுல் ஜீவனம் செய்யலாம் என்ற தைரியம் அவருக்கு இருந்தது. தம்முடைய ஸங்கீதத்தை அரசர்களுக்கும் பிரபுக்களுக்கும் அர்ப்பணம் செய்வதைவிடப் பரம்பொருளுக்கு அர்ப்பணமாக்குவதே தக்கதென்ற கொள்கையை அவர் கொண்டார்.

திருவிடைமருதூர் ராமதாஸருடைய உள்ளத்திற்கு உவந்த இடமாயிற்று. காவிரியும், ஸ்ரீ மஹாலிங்க மூர்த்தியின் திருக் கோயிலும், பக்தர்களுடையகூட்டமும், நல்லோர்களுடைய இருக் கையும் அந்தத் தலத்தில் அமைந்திருப்பதைப்போல வேறு எங்கே இருக்கின்றன? "இனி நமக்குப் பூசத் துறையும் மகாலிங்கமூர்த் தியுமே கதி" என்ற தீர்மானத்தோடு திருவிடைமருதூருக்கே வந்துவிட்டார்.

அவர் வந்த நாள்முதல் திருவிடைமருதூருக்கு ஒரு புதிய பெருமை உண்டாயிற்று.

"எவ்வழி நல்லர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே"

என்று புறநானூறு கூறுகின்றது. இயல்பாகவே பல திறத்திலும் நன்மையைப் பெற்ற அத்திருத்தலம் நல்லந்தணராகிய ராமதாஸர் உவந்த வாசஸ்தலமானபோது பின்னும் அதனுடைய நன்மை பெருகியது. திருவிடைமருதூர்த் திருவீதியில் நாள்தோறும் காலை யில் இனிய கானம் பரவியது. அந்த இன்னிசையிலே மனிதர் புகழ் காணப்படவில்லை; பரம்பொருளின் மெய்ப்புகழ் அதில் விளங் கியது. அந்தக் கீதவொலியின் கவர்ச்சியும், அதன் உள்ளடங்கிய பக்திச்சுவையும், அதைப் பாடும் பெரியாருடைய தோற்றமும் எல் லாம் சேர்ந்து நாஸ்திகரையும் அவரது திருவடியிலே வீழ்ந்து அடைக்கலம் புகச் செய்யுமாயின், பெரிய பக்தரும் ஸங்கீத ரஸிகரு மாகிய அமரசிம்மரை உருக்கியது ஒரு வியப்பாகுமோ?

## 3

அமரசிம்மருடைய விருப்பத்தின்படியே சில முதியோர்கள், ராமதாஸர் அரண்மனை வாயிலுக்கு நேரேவரும்போது அவர்பாற் சென்று அவரை வணங்கினார்கள். காலைக் கதிரவனுடைய ஒளிக்கு எதிரே அப்பெரியாருடைய திருமுக மண்டலமும் பாலசூரியனைப் போலவே இலங்கியது. சூரியன் வீசும் வெம்மையாகிய கதிர்களைக் காட்டிலும் அந்தத் திருமுகத்திலிருந்து உண்டாகிய தண்ணிய கருணைக் கிரணங்கள் உயர்வுடையன அல்லவா?

"ஸ்வாமீ! ஒரு விஞ்ஞாபனம். கேட்டருளவேண்டும்" என்று அவர்கள் பணிவோடு சொன்னார்கள்.

"என்ன விசேஷம்?" என்று கேட்டார் ராமதாஸர்.

"இங்கே உள்ள அமரசிம்ம மகாராஜா, ஸ்வாமிகளுடைய திவ்யதரிசனமும் ஸல்லாபமும் பெறவேண்டுமென்று காத்திருக் கிறார். கிருபை செய்யவேண்டும்."

"மகாராஜாவா! நான் ஒரு பிக்ஷுகன். எனக்கு மகாராஜா விடத்திலே என்ன வேலை? நான் ராஜஸேவையையே வேண்டா மென்று எண்ணி வந்தவன். அகிலலோக சக்கரவர்த்தியாகிய ஸ்ரீ மகாலிங்க மூர்த்தியிடத்திலே வந்த பிறகு வேறொரு ராஜாவை எதற்காகப் பார்க்கவேண்டும்?"

"அப்படிச் சொல்லக் கூடாது. தங்களுக்கு மகாராஜாவால் ஆகவேண்டிய காரியம் ஒன்றுமில்லையென்பது வாஸ்தவந்தான். ஆனாலும் மகாராஜா ஒரு பெரிய பக்தர். அவர் தங்களைத் தரிசிக்க வேண்டுமென்று ஏங்கி நிற்கின்றார்."

"சரி, நாழிகையாயிற்று. நாளைக்குப் பார்க்கலாம்" என்று சொல்லி ராமதாஸர் தம்முடைய பஜனையை மீட்டும் ஆரம்பித்து மேலே செல்லலானார்.

மறுநாள் ராமதாஸர் வீதி வழியே வரும்போது மீட்டும் அரசருடைய நண்பர்கள் அவரிடம் வந்து வணங்கி நின்றார்கள். "மகாராஜா தங்கள் வாசஸ்தலத்துக்கே வந்து தரிசிக்கலாமென்று எண்ணியிருக்கிறார். தங்களுடைய சம்மதத்தை எதிர்பார்க்கிறோம். மகாராஜா வேறு இடங்களுக்குச் செல்வது வழக்கமன்று. ஆனாலும் பரம பக்த சிரோமணியாகிய தங்களுடைய இருப்பிடம் ஆலயத்துக்கு ஸமானம். ஆதலின் அங்கே வரலாமென்றே இருக்கிறார்" என்று அவர்கள் சொன்னார்கள்.

ராமதாஸர் சிறிது யோசித்தார். 'அரசர் உண்மையிலேயே சிவபக்தராக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் தம்முடைய கௌரவத்தையும் நினையாமல் இப்படிச் செய்யத் துணியமாட்டார். அத்தகைய பக்தரைப் போய்ப் பார்ப்பதில் தடையென்ன?' என்ற எண்ணம் அவருக்கு உண்டாயிற்று.

"உங்கள் அரசர் பக்தராக இருக்கிறாரென்று தெரிகிறது. அவரை ஓர் அரசராக எண்ணிப் பார்க்க எனக்கு விருப்பமில்லை; பக்தராகவே எண்ணிப் பார்க்க விரும்புகிறேன். அவர் பிக்ஷுகனாகிய என்னுடைய குடிசைக்கு வருவது முறையன்று. நானே என் நியமத்தை முடித்துக்கொண்டு வருகிறேன்" என்றார். பிறகு வழக்கப்படி உஞ்சவிருத்தியை முடித்துக்கொண்டு வீடு சென்று பூஜையை முடித்துப் போஜனம் செய்தார். செய்த பின்பு அரண்மனையை நோக்கி வந்தார். அவருடைய வரவை ஒவ்வொரு கணமும் எதிர்பார்த்துக்கொண்டு அங்கே சிலர் நின்றிருந்தனர். அவர்கள் அவரை மரியாதையோடு உள்ளே அழைத்துச் சென்றார்கள். ராமதாஸர் அரண்மனையுட் புகுந்தார்.

அமரசிம்மருடைய உவகைக்கு அளவு ஏது? "பாக்கியம்! பாக்கியம்!!" என்று உடல் பூரித்தார். கண்ணில் தாரை தாரையாக ஆனந்தபாஷ்பம் உண்டாயிற்று. ராமதாஸரை அஞ்சலி செய்து தக்க ஆஸனத்தில் இருக்கச் செய்தார். விநயத்தோடு ஸம்பாஷணை செய்தார். ஸம்பாஷணை செய்யச் செய்ய அரசருக்கு அப் பெரியாருடைய சிறந்தகுணங்கள் புலப்பட்டுக்கொண்டே வந்தன. ராமதாஸரோ, 'இவர் அரசராக இருந்தாலும் பக்தர்களுக்குத் தாஸராக இருக்கும் அடக்கமுடையவர். மிக்க குணசாலி. பழகு வதற்குத் தகுதியுடையவர். மகாலிங்கமூர்த்திதான் இப்படி ஒரு பக்தருடைய பழக்கத்தை உண்டாக்கி வைக்கிறாரென்று தோற்று கிறது' என்று எண்ணினார். இருவரும் நெடுநேரம் ஸல்லாபம் செய்தார்கள்.

அரசர் ஸ்ரீ ராமதாஸரைத் தம்முடைய ஆஸ்தான வித்து வானாக இருக்கவேண்டு மென்று பிரார்த்தித்தார். அவர் அதற்கு இணங்கவில்லை. "எனக்கு இனிமேல் உத்தியோக நிர்ப்பந்தம் எதற்கு?" என்று அவர் கூறினார்.

**அரசர்:** இதை நிர்ப்பந்தமாக எண்ணக்கூடாது. தினந்தோ றும் பாதகமலம் நோவ உஞ்சவிருத்தி செய்யும் சிரமம் இல்லாமல், இங்கிருந்தபடியே பஜனை செய்துவரலாம் என்பதுதான் என் எண்ணம்.

**ராம:** சிரமம் என்ன? உஞ்சவிருத்தி செய்வதில் இழிவு ஏதா வது உண்டா? மகான்களெல்லாம் இந்தக் காரியத்தைச் செய்து தம் வாழ்நாளைக் கழித்திருக்கிறார்களே. திருவிசைநல்லூர், கோவிந்தபுரமென்னும் இடங்களில் சில பெரியோர்கள் இப் பொழுதும் இதைச் செய்து வருகிறார்களே.

**அரசர்:** நான் இழிவென்று சொல்லவில்லையே! சிரமமில்லா மல் ஓரிடத்திலே இருக்கலாமே என்று எனக்குத் தோற்றுகிறது.

**ராம:** எனக்கு இந்தக் காரியமே சிரமபரிகாரமாக இருக் கிறது.

அரசர் பலமுறை வேண்டிக்கொண்டபிறகு, அப்பெரியார் நேர்ந்த காலங்களில் அரண்மனைக்கு வந்துபோவதாக வாக் களித்தார். உஞ்சவிருத்தியை அவர் நிறுத்தவேயில்லை.

அக்காலமுதல் அவ்விருவருக்கும் நட்பு முதிர்ச்சியடையலா யிற்று. ராமதாஸரை ஆஸ்தானவித்துவானென்றே யாவரும் வழங்கலாயினர். அரசர் அவருடைய பழக்கத்தினால் பலவகை நன்மைகளை அடைந்தார். வடநாட்டு ஸங்கீதச் சுவையை நன்றாக அனுபவித்தார்.

அப்பொழுது அங்கே ஆஸ்தானவித்துவாளுக இருந்த கனம் கிருஷ்ணையர் ராமதாஸரோடு பழகிப் பல புதிய விஷயங்களை அறிந்து கொண்டார். நந்தன் சரித்திரக் கீர்த்தனத்தை இயற்றிய ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியார் திருவிடைமருதூருக்கு வந்து சில வருஷங்கள் இருந்து ராமதாஸரிடம் ஹிந்துஸ்தானி மார்க்கங்களைக் கற்றுக்கொண்டு சென்ருர். வேறு சிலரும் கற்றுக்கொண்டனர்.

அமரசிம்மர் ராமதாஸருடைய குடும்பத்திற்கு ஏதேனும் உதவிசெய்ய வேண்டுமென்று எண்ணினுர். அவர் அறியாதபடி கும்பகோணத்தில் அவர்பெயருக்கு ஒரு வீட்டை வாங்கிச் சில நிலங்களையும் அவர் பெயருக்கு எழுதிவைத்தார். ராமதாஸர் தம்முடைய முதிர்ந்த பருவத்தில் அரசருடைய வேண்டுகோளின் படி அந்த இல்லத்திலே சென்று வாழ்ந்துவந்தார். அந்தவீடும் நிலங்களும் பிற்காலத்தில் ராமதாஸருடைய பரம்பரையினருக்கே உரிமையாயின. அவ்வீடு பக்தபுரி அக்கிரகாரத்தில் மேல்சிறகில் பல்லவி கோபாலையருடைய வீட்டிற்கு வடபுறத்தில் இருக்கின்றது. அவ்வீட்டில் சிலமாதங்கள் குடியிருக்கும் பாக்கியம் எனக்கு வாய்த்திருந்தது.

ராமதாஸருடைய பேரரை நான் பார்த்துப் பழகியிருக்கின்றேன். ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியார் பலமுறை அப்பெரியாரைக் குறித்துப் பாராட்டிப் பேசுவார். மேலே உள்ள வரலாற்றிற் பெரும்பகுதி அவர் சொல்லக் கேட்டதேயாகும்.

ராமதாஸருடைய ஸாஹித்தியங்கள் கூடச் சில இருந்தன. கோபாலகிருஷ்ண பாரதியார் அவற்றைப் பாடுவதுண்டு. அவை இப்பொழுது மறைந்தன. பாரதியார் துறவுள்ளம் உடையவராதலின் அவர் ராமதாஸரைப் பற்றிப் பேசும்போதெல்லாம், அம்மகானுடைய நிராசையைக் குறித்தே அதிகமாகப் பாராட்டுவார்.



# நவபாரதம்

ஸுபாஷ் சந்திர வஸு

[வங்கமொழி மூலத்திலிருந்து த. நா. ஸேனுபதி மொழிபெயர்த்தது]

---

மானிட வாழ்க்கையில் இளமைப் பருவம், நடுப்பிராயம், முதுமை முதலியவை இருப்பதுபோல் தேசிய வாழ்விலும் இம்மாதிரி நிலைகள் இருப்பதைக் காணலாம். மனிதன் மரித்தபின் இன்னதென்று தெரியாத ஏதோ ஒரு நிலையை அடைகிருன். அதுபோலவே ஒரு நாடும் அழிவடைகிறது. ஆனுல் அந்த அழிவிலிருந்தே மறுபடியும் அதற்கு ஒரு புதிய ஜீவன் வந்து தழைத்துவிடுகிறது. எல்லா நாடுகளும் இவ்வாறு புது உணர்ச்சி பெற்று எழுவதில்லை. எந்த நாட்டினரால் இனி உலகிற்கு யாதொரு பயனும் இல்லையோ, எந்த நாட்டினரின் ஆத்ம ஒளி மங்கிவிட்டதோ அவர்கள் இந்த உலகத்தில் வசிப்பதற்குத் தகுதியற்றவர்களாகி நசித்து விடுவார்கள்; அல்லது வெறும் புழு பூச்சிக்குச் சமானமாக மடமை இருளில் உழலுவார்கள்; உலக சரித்திரத்தில் அவர்களுக்கு இடம் இல்லாது போய்விடும்.

நம் பாரத தேசம் எத்தனையோ தடவை உயிரற்று உணர்ச்சியற்றுப் போயிருக்கின்றது. ஆனுல் ஒவ்வொருதரம் அழியும் நிலையை அடைந்ததும் புத்துயிர் பெற்று விழித்தெழுந்திருக்கிறது. ஏதோ ஒரு நல்ல காரணத்தை உத்தேசித்துத்தான் நம் நாடு இன்னும் அழியாமல் இருக்கிறது என்று தோன்றுகிறது. உலகத்திலுள்ள ஜனசமூகத்தார் அறியும்படி பாரதநாடு நல்ல செய்தி விடுக்கப்போகிறது! நம்நாட்டின் நற்பயிற்சி உலகத்தவர் அனைவர்க்கும் உபயோகமாவதற்குரியது. அதை அறிந்துகொள்ளாமல் உலகம் ஒருகாலும் அபிவிருத்தி அடைய முடியாது. அது மட்டு மன்று. விஞ்ஞானம், சிற்பம், கலைகள், இலக்கியம், வியவசாயம், வாணிகம் இந்தத் துறைகளிலும் பாரத தேசம் உலகிற்குச் சிறிதளவு அளித்து உலகத்தினிடமிருந்தும் சிறிதளவு பெற வேண்டி யிருக்கிறது.

---

'முக்கியமான சில வார்த்தைகள்' என்ற கட்டுரையிலிருந்து எடுத்த சில பகுதிகள்.

அதனால்தான் பாரதநாட்டு மஹான்கள் சென்ற எத்தனையோ இருண்ட பழைய யுகங்களிலும் அடிக்கடி ஞானச்சுடரைத் தூண்டிக் கொண்டு வந்தனர். அவர்களுடைய சந்ததிகளாகிய நாம் கொண்ட லக்ஷ்யம் நிறைவேறாமல் மரிப்போமா?

மனுஷ்ய தேகம் அழிந்து பஞ்சபூதங்களாக மாறிவிட்டபோதிலும் ஜீவாத்மாவுக்கு மட்டும் அழிவென்பதே இல்லை. அதுபோலவே, ஒரு நாடானது நாசத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்த போதிலும் அதன் நற்பயிற்சி, ஸாதனை, மேன்மை இவைகளே அதனுடைய ஆத்மாவாக அழிவற்று நிற்கின்றன. ஒரு நாட்டின் சிருஷ்டிசக்தி குன்றிவிட்டால் அஃது அழிந்து விடுவது திண்ணம். சாப்பிடுவது, தூங்குவது, குழந்தைகளைப் பெறுவது இவை போன்ற மாறுதலற்ற நிலையைக் கடைபிடித்தலே அந்நாட்டின் இயல்பாக ஆகிவிடுகிறது. இம்மாதிரி ஆனபின்னரும் சில தேசங்கள் புதிய ஊக்கம் பெற்று விழித்துக் கொள்கின்றன. ஏனென்றால், அவற்றால் உலகிற்கு ஏதாவது பயன் ஏற்படக்கூடும். கேடுகாலம் சூழ்ந்தபோதும், தம்முடைய மேன்மை, நற்பயிற்சி இவற்றைக் காப்பாற்றிக்கொள்ளும் தேசத்தவர் அன்னியருடன் கலந்து இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோகமாட்டார்கள். அதிருஷ்ட வசத்தினாலோ, பகவத் கிருபையினாலோ அவர்கள் மீண்டும் உணர்ச்சி பெற்று விடுகின்றனர். அந்நாடு மீண்டும் செழிக்கின்றது. ஆயிரம் இதழ்களுடைய கமலமலர் விரிவதுபோல் அவர்கள் ஆத்மசக்தியானது நவநவரூபங்களில், புதுவிதமான பாவங்களில், புதிய புதிய துறைகளில் வெளிவருகிறது. இவ்விதம் பலதடவை உயிரற்றுப் போய் மீண்டும் மீண்டும் நவீனசக்தி பெற்று விழித்தெழுந்திருக்கிறது பாரதநாடு. உலகிற்கு ஒரு நல்ல உபதேசம் விடுக்க இந்தியா ஸித்தமாயிருக்கிறது!

இந்த உண்மையை நம்பும் பாரதவாஸிகளே உயிருடன் இருப்பவர்கள் என்று சொல்லவேண்டும்.

வெளிநாட்டில் சிறையில் கிடந்தபோது பின்வரும் கேள்வி என் மனத்தில் எழும்: 'எதற்காக, எதன் தூண்டுதலினால், நாம் இன்று சிறைவாசத்தை அனுபவித்து வந்த போதிலும் மனம் சோர்வடையாமல் மேலும் மேலும் சக்திபெற்றுத் திடமாக இருக்கிறோம்?'

என் உள்ளத்தில் எழுந்த பிரதித்வனியின் சாராம்சம் வருமாறு:

'வருங்காலத்தில் பாரததேசம் உலகில் கௌரவம் பொருந்திய மகத்தான நாடாக விளங்கப் போகின்றது. நாமே வருங்கால

பாரதத்தின் பெருமையில் பங்கெடுத்துக்கொள்ள உரிமை பெற்றவர்கள். நாமே பாரத விடுதலையின் சரித்திரத்தை எழுதப்போகிறோம். இந்த நம்பிக்கையினால்தான் நாம் எல்லாத் துக்கங்களையும் கஷ்டங்களையும் சகிக்க முடிகிறது; இருள் சூழ்ந்த நிகழ் காலத்தை வெறுக்கிறோம். நம்முடைய லக்ஷ்யத்தினின்றும் வழுவாமல் அதை உறுதியுடன் கடைப்பிடித்து, கண்ணெதிரில் காணும் கோரமான உண்மைகளை மனத்தினின்று அகற்ற முயல்கிறோம்.'

இந்த அசைக்க முடியாத நம்பிக்கையினால்தான் நம் நாட்டின் இளமை இன்னும் குன்றாமல் இருக்கிறது. இந்தத் திடசங்கற்பம் கொண்டவனே புதியவற்றைச் சிருஷ்டி செய்விப்பதற்குத் தகுதியுள்ளவன். அவனே தேசசேவை செய்வதற்கு அதிகாரம் படைத்தவன்.

தன்னிடம் அவநம்பிக்கையும், நாட்டினிடம் அசிரத்தையும் கொண்டவன் இத்தொழிலுக்குத் தகுதியற்றவன்.

* * *

தாங்கள் கொண்ட லக்ஷ்யம் ஒன்றையே கண்ணும் கருத்துமாகப் போற்றிப் பின்பற்றுபவர்கள் துன்பத்தைக் கூட இன்பத்துடன் சகித்துக்கொள்வார்கள். பலர், "துன்பப்படுவது வீண் கஷ்டமாயிற்றே" என்று நினைக்கின்றனர். அது தவறு. துன்பப்படுவதில் எவ்வளவு கஷ்டமிருக்கின்றதோ, அவ்வளவு இன்பமும் இருக்கின்றது. இந்த ஆனந்தத்தை அறிந்து அனுபவியாதவருக்கு எல்லாம் கஷ்டமாகத்தான் தோன்றும்.

இத்தகைய இன்பத்தின் உற்பத்தி ஸ்தானம் எது? இருண்ட வானிலும் மின்னொளி துடிப்பது ஏன்? இந்த ஆனந்தமானது உயிரினும் இனிதெனப் போற்றும் ஒரு லக்ஷ்யத்தைக் கடைப்பிடிப்பதினின்று எழுவதாகும். இன்ஸீன் சிறைச்சாலையில் இருக்கையில், பிரபல ருஷிய ஆசிரியர் ஒருவர் எழுதிய நாவல் ஒன்றைப் படிக்கும்போது இதே எண்ணம் என் உள்ளத்தில் தோன்றியது. ஆசிரியர் கதாநாயகனின் வாயிலாக, "ஜனங்கள் இன்னும் எவ்வளவோ துன்பங்களை அனுபவிக்க வேண்டி யிருக்கின்றது. பேராசை என்னும் கரத்தால் பிழியப்பட்டு மக்களின் ரத்தம் ஆறாக ஓடப்போகிறது. என் ஹ்ருதயத்திலும் எலும்புக்குள்ளும் ஒவ்வொரு நாடியிலும் உலவும் ஒருவித உணர்ச்சிக்கு முன், நான் படும் கஷ்டம் எல்லாம் ஒரு பொருட்டல்ல; என்னுடைய ரத்தத்தைச் சிந்துவது ஒரு பிரமாதமல்ல. என் உள்ளத்தில் உதித்து யாராலும் அடக்க முடியாததாகவுள்ள இன்பமே இதற்கெல்லாம் காரணமாகும். இத்தகைய ஆனந்தம் எனக்குப் பலத்தை அளிக்கிறது"

என்று கூறியிருக்கிறார். நஞ்சையுண்ட பரமசிவனை ஆதர்சமாகக் கொண்டு, "என் அகத்தில் ஆனந்த ஊற்றானது பொங்கி எழுகிறது. நான் இனி இந்த உலகத்துன்பங்களைச் சகித்துக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஏனெனில் துன்பத்தை அனுபவிப்பதன் மூலமாகத்தான் சத்தியத்தை அறிய முடியும்" என்று கூறுபவனே தன்னுடைய ஸாதனையின் பயனை அடைந்தவனாவான்.

நாமும் இதில் ஸித்தி பெறவேண்டும். நவ பாரதத்தைச் சிருஷ்டிக்க முயலுபவர்கள் தம்முடைய வாழ்வையே அர்ப்பணம் செய்யவேண்டும். தம்மை மறந்துவிட்டுப் பிச்சைக்காரரைப்போல் ஆகிவிடவேண்டும். இந்த மகத்தான ஸாதனையில் பிரதிபலனை விரும்புவதென்பதே கூடாது. முடிவில் உயிரைக் கூடப் பலியாகக் கொடுத்துப் புதிய ஜீவனைப் பிரதிஷ்டை செய்யவேண்டும். இப்படிப்பட்டவர்களின் உடைமை என்ன? தன்னம்பிக்கை, லக்ஷ்யத்தைக் கடைப்பிடித்தல், துன்பத்தைப் பொருட்படுத்தாமல் ஆனந்தத்துடன் இருத்தல், என்னும் மூன்றுமே.

சில தினங்களுக்கு முன் என்னைவிட வயதில் மிகவும் சிறிய நண்பன் ஒருவனைச் சந்திக்க நேர்ந்தது. அவனுக்கு எதற்கெடுத்தாலும் சந்தேகந்தான்; எதன்பேரிலும் அவநம்பிக்கை. அவன் என்னைச் சில கேள்விகள் கேட்டான். 'நம்முடைய தேசத்தில் என்ன செய்தாலும் நிலைமை சரிப்படாது' என்பதே அவனுடைய கேள்வியின் முக்கிய கருத்து. சில கேள்விகளுக்குப் பதில் சொன்ன பின் அவன் என்னை நோக்கி, "சட்ட சபையில் சென்று முட்டுக்கட்டை போடுவதனால் என்ன பிரயோஜனம்?" என்று கேட்டான். நான், "பின் வேறு என்னதான் செய்யவேண்டும் என்கிறாய்?" என்றேன்.

அவனுடைய அவநம்பிக்கையையும் அசிரத்தையையும் கண்டு நான், "இதோ பார்! நீ என்னைவிட வயதில் எவ்வளவோ சிறியவன். ஒரு லக்ஷ்யத்தைக் கடைப்பிடித்து நீங்களெல்லாம் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்தீர்கள். எனக்கு வயது முதிர முதிர நான் கொண்ட லக்ஷ்யத்தின் மீது அதிகமான சிரத்தை ஏற்பட்டுவருகிறது. ஆனால் உனக்கோ நாளுக்கு நாள் அதன்மீது பற்றுதல் குறைந்து வருகிறது" என்றேன்.

அவனும் அது வாஸ்தவந்தான் என்று ஒப்புக்கொண்டு, கடந்த சில வருஷங்களில் நேர்ந்த கஷ்டங்களே இதற்குக்காரணம் என்று தெரிவித்தான்.

இவ்வித அவநம்பிக்கையினால் சில வருஷங்களாக ஆக்க வேலையில் ஊக்கம் குன்றிவிட்டது. ஆயினும் இந்த மாயவலையை

அறுத்தெறிவதற்கு இப்போது சமயம் வந்துவிட்டது. நம் மனத்தினுள் பதுங்கி இருக்கும் சத்துருவை விட வேறு கொடிய பகைஞன் வெளியில் இல்லை என்று சொல்லலாம். அதனால் நம் அகத்தில் குடிகொண்டிருக்கும் அவநம்பிக்கை என்ற விரோதியை முதன் முதலில் ஜயித்தால்தான் வெளியிலிருக்கும் சத்துருவை வெல்ல முடியும்.

நம் நாட்டு இளைஞர்கள் தன்னம்பிக்கை உடையவர்களாக இருக்கவேண்டும். வெளியுதவியை எதிர் பாராமல் தம் சொந்த மனோபலத்தையே மதித்து நிற்கவேண்டும். நவபாரதத்தைச் சிருஷ்டி செய்யும் பொறுப்பு நம் தேசத்து இளைஞர்களின் தலை மீது இருக்கிறது.

இந்த மகத்தான ஸேவையில் ஈடுபடுபவர்கள் தம் வாழ்க்கையையே பணயமாக வைக்கவேண்டியது அவசியம்.

ஆகையால் வாருங்கள்; என் இளந்தோழர்களே! மாதாவின் பலிபீடத்தின் முன்னின்று,

"மந்த்ராம் வா ஸாதயேயம்,
சரீரம் வா பாதயேயம்" *

என்று கோஷிப்போம்!



---

* 'மந்திரத்தையாவது ஸாதனை செய்வோம்
இன்றேல் உடலையாவது துறப்போம்.'

# சில பாண்டிய ஓவியங்கள்

'சிவராகவமூர்த்தி'

புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்திலுள்ள சிற்றன்னவாசலிலும் காஞ்சீபுரத்திலும் பல்லவர் காலத்தில் அமைக்கப்பட்ட அரிய ஓவியங்கள் இருப்பது பலருக்குத் தெரியும். தஞ்சை ஸ்ரீ பிருகதீசுவரர் ஆலயத்தில் சோழர் காலத்து ஓவியங்கள் இருக்கின்றன. அவற்றைப் பற்றிய கட்டுரை ஒன்று கலைமகளின் இதழ் ஒன்றில் முன்பு வெளியாகி யிருக்கிறது.

இரண்டு வருஷங்களுக்கு முன் ஆசிரியர் தூப்ராய் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள திருமலைபுரம் என்ற இடத்தில் சில ஓவியங்களைக் கண்டார். அவற்றைப்பற்றி அறிந்தவுடன் சென்னைப் பழம்பொருட் காட்சிச்சாலையின் சார்பில் சிலர் அவ்விடத்திற்குச் சென்று அவ்வோவியங்களின் பிரதிகளை எழுதிக்கொண்டு வந்தனர்.

திருமலைபுரத்திலுள்ள ஒரு குகைக் கோவிலில் இவ் வோவியங்கள் உள்ளன. இவற்றில் பின் உள்ளது ஒன்று.



இந்தச் சித்திரத்தில் நர்த்தனம் செய்யும் நிலையிலுள்ள உருவம் ஒன்றும், மத்தளம் வாசிக்கும் நிலையிலமைந்த உருவம் ஒன்றும் காணப்படுகின்றன. இக் கோயிலில் காணப்படும் சித்திரங்களில் இதுவே முதல்தரமான அழகு வாய்ந்தது. இதைப் பார்த்

தால் சோழ பல்லவ ஓவியங்களும், அஜந்தாவிலுள்ள ஓவியங்களும் சிறிது ஞாபகத்துக்கு வருகின்றன.





மேலே உள்ள ஓவியத்தில் தாடியுள்ள ஆணுருவங்களும், ஒவ்வோர் ஆணுருவத்துக் கருகிலும் ஒவ்வொரு பெண்ணுருவமும் இருக்கின்றன. இந்தச் சித்திரத்தாற் புலப்படுத்தப்பட்டிருக்கும் விஷயம் இன்னதென்று விளங்கவில்லை.



இங்கே உள்ள வேறு ஓவியங்களில் பூவேலையுள்ள அலங்கார ஓவியங்களும் ஒரு வாத்தின் ஓவியம் ஒன்றும் பிரதி யெடுக்க முடிந்தன.





எழுதிக்கொண்டு வரமுடியாதபடி பாசி யேறிப்போன மற்றோர் ஓவியமும் இங்கே இருக்கின்றது. அதில் பயங்கரமான சிங்கத்தின் மேல் வீற்றிருக்கும் தேவதையின் உருவமொன்று வரையப்பட்டுளது. அதில் சித்திரங்கள் எழுதிய ஓவியப்புலவனுடைய ரேகா நைபுண்யம் நன்றாகப் புலப்படுகின்றது.

---




# அகல்யாபாய்

டாக்டர் ஸி. மீனாக்ஷி, எம். ஏ., பிஎச். டி.

---

**பா**ரதமாதா அணியும் இந்திய சரித்திரமென்கிற ஒரு சுவர்ண ஆபரணத்தில் பதித்த விலையற்ற மரகதக்கற்கள் போன்ற சில பெண்மணிகளின் ஜீவிதங்களில் ஒன்று அகல்யாபாயினுடையது.

பதினேழாவது நூற்றாண்டில் சிவாஜி என்னும் பெயர் பெற்ற வீர புருஷனால் மொகலாய அரசாட்சி தாக்கப்பட்டு மிக்க தளர்ச்சி அடைந்ததென்று சரித்திர மூலமாய் அறிகிறோம்.



அகல்யாபாய்

அத்தகைய மஹாராஷ்டிர அரசனாகிய சிவாஜி காலம் சென்றபின் அவருடைய புத்திர பௌத்திரர்களால் அவரைப் போல் பராக்கிரமத்துடன் சத்துருக்களை எதிர்க்க முடியவில்லை. ஆகவே சிவாஜியினுடைய பிராம்மண மந்திரிகள் முன்வந்து தலைமைவகித்துப் பேஷ்வா என்னும் நாமத்தை அடைந்து அரசை ஆள ஆரம்பித்தார்கள். மற்ற ராஜ்யங்களைக் கைப்பற்றித் தங்கள் ஸ்வாதீனமாக்கிக் கொள்ளும் அவா, அவர்களுக்கு அதிகரித்தது. சிலகாலத்திற்கெல்லாம் மஹாராஷ்டிர ராஜ்யம் அதிக விரிவை அடைந்தது. அவர்கள் மால்வா என்கிற தேசத்தையும் கைப்பற்றிச் சொந்தமாக்கிக் கொண்டார்கள். ராஜ்யம் அதிகரித்ததனால் அரசாட்சி

---

* படம் ஸ்ரீ பண்டாரியவர்கள் எழுதிய ஒரு புத்தகத்திலிருந்து எடுத்தது.

யை நடத்துவது பேஷ்வாவுக்குப் பிரயாசமாக இருந்தது. ஆகை யினால் கைப்பற்றிய இராஜதானியைச் சிறிய மாகாணங்களாகப் பகுத்து ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு தலைவரை நியமித்தார். இப்படி ஏற்படுத்தப்பட்ட தலைவர்கள் யாவரும் எளிய குலத் தோராயினும் தங்கள் வீரத்தன்மையினாலேயே அப்பதவிகளை அடைந்தார்கள் என்பதற்குச் சந்தேகமே இல்லை. பின்வரும் ஹோல்கர் வம்சத்தவர்கள் யாதவர்களென்று அறிகிறோம். இவ்விதம் அப்பொழுது ஏற்படுத்தப்பட்ட சிறிய மாகாணங்களில் முக்கியமான மூன்று இப்பொழுதும் நிலைத்திருக்கின்றன. அவை இந்தோர், குவாலியர், பரோடா என்பனவாம்.

இந்தோர் மாகாணம் ஹோல்கர் வம்சத்தைச் சேர்ந்த மல்ஹார்ராவ் என்பவரிடத்தில் ஒப்பிக்கப்பட்டது. இந்த மல்ஹார் ராவ் என்பவர் முன்பே பேஷ்வாவினிடம் ஊழியம்புரிந்து அவரால் மெச்சப்பட்டவர். மல்ஹார் ராவ் சிலகாலம் ஆண்டபின் கி. பி. 1765-ஆம் வருஷம் காலம் சென்றார்.

மல்ஹார் ராவினுடைய ஏகபுத்திரராகிய கந்தேராவ் பானிப் பட்டு யுத்தத்திற்குச் சிலவருஷங்களுக்கு முன்பு கம்பேர் என்னும் பட்டணத்தை முற்றுகையிட்டபொழுது அடிபட்டு இறந்தார். பானிப்பட்டு யுத்தம் கி. பி. 1761-ஆம் வருஷம் நடைபெற்றது. ஆகவே கந்தேராவ் தம் தகப்பனாருக்குப் பத்து வருஷங்களுக்கு முன்பே காலம் சென்றார்.

கந்தேராவினுடைய தர்மபத்தினி, சிந்திய வம்சத்தைச் சேர்ந்த அகல்யாபாய் என்பவள். அவள் ஒரு புத்திரனையும் ஒரு புத்திரியையும் பெற்றுச் சிறுவயதிலேயே கணவரை இழந்தாள். அவளுடைய புத்திரன் மாலீராவென்பவனும், தன் தகப்பனா ருடைய அரசுரிமையைப் பெற்றும் துரதிர்ஷ்ட வசத்தினால் ஒன்பது மாதத்திற்கெல்லாம் இறந்துவிட்டான்.

மாலீராவ் இளம் வயதிலிருந்தே சிறிது புத்தி சரியில்லாதவ னாக இருந்தான். தகப்பனார் காலம்சென்றபின்பு ஒன்பது மாத காலம் மாலீராவ் ராஜ்யத்திற்குத் தலைமை வகித்தபொழுது செய்த ஒவ்வொரு காரியமும் அவனுடைய பேதைமையை வெளிப் படுத்தியது.

அவன் தாயாரான அகல்யாபாய் தர்மகைங்கரியத்தில் அதிக ஊக்கம் கொண்டவள். பிராம்மணர்களிடத்தில் மிக்க அன்பு பாராட்டினாள். ஆனால் அவள் புத்திரன் மாலீராவோ அவ்வந்தணர் களைத் தன் கேலிக்கூத்துக்கு ஈடாக்கினான். பிராம்மணர்களுக்குத் தானம் கொடுக்கும் வேஷ்டிகளிலும் பாதரக்ஷைகளிலும் மாலீ

ராவ் தேள்களை ஒளித்துவைத்தும், கும்பங்களில் பணத்தை நிரப்பி அதனுடன் விஷப்பாம்புகளைப் பிடித்துப் போட்டும் அந்தணர்களை அழைத்து அவர்களிடத்தில் இவைகளைக் கொடுக்கும் பொழுது அவர்கள் இவ் விஷஜந்துக்களால் தீண்டப்பட்டுத் தவிப்பதைக் கண்டு களிப்புறுவான். இம்மாதிரியான கெட்ட செயல்கள் மாலீராவுக்கு எவ்வளவுக் கெவ்வளவு மகிழ்ச்சியை உண்டாக்கினவோ அவ்வளவுக்கவ்வளவு அகல்யாபாய்க்குத் துக்கத்தை விளைவித்தன. தனக்கு இம்மாதிரியான பேய்ப்பிள்ளை பிறந்திருப்பதை நினைத்து நினைத்து அவள் வருந்துவாள்.

இத்தகைய துஷ்டப்பிள்ளை இறப்பதே நலமென்று யோசனை செய்து அகல்யாபாய் தன் பிள்ளையினுடைய உயிரைத் தானே முடித்துவிட்டதாகச் சிலர் கூறுவதும் உண்டு. ஆனால் அகல்யாபாயினுடைய சரித்திரத்தைப் பூர்த்தியாக எழுதிய மால்கம் துரையென்பவர் மேலே சொல்லப்பட்ட கதை அறியாதார் வார்த்தையே தவிர அச்செய்திக்கு ஆதாரம் யாதுமில்லை என்கிறார். இதுமட்டுமல்ல; அகல்யாபாயைப்பற்றிய வரலாற்றை ஆராய்ந்து பார்த்தால், அவ்வுத்தம ஸ்திரீ இக்கொடூரமான பாவச்செயலில் ஈடுபட்டிருக்கவே மாட்டாளென்ற முடிவுக்கு வருவது திண்ணம்.

மாலீராவினுடைய அகாலமரணத்திற்கு வேறு காரணம் சொல்லப்படுகிறது. அதாவது: அரண்மனையிலிருந்த ஒரு தையற்காரன்பேரில் அகாரணமாய் ஏதோ ஒரு குற்றத்தைச் சாட்டி விசாரணை செய்யாமல் உடனே அவனை மாலீராவ் கொலை செய்ததாகவும், சில தினங்களுக்கெல்லாம் தையற்காரன் குற்றவாளியல்லன் என்பதை அறிந்த மாலீராவ் திடுக்கிட்டுப் பயந்து பயித்தியம் அதிகரித்துத் தையற்காரனையே நினைத்து நினைத்துக் கதறி உயிரை விட்டானென்றும் தெரியவருகிறது. இப்படி மாலீராவ் உயிருக்காக மன்றாடும் தருணத்தில், அகல்யாபாய் கொலையுற்ற அந்தத் தையல் வேலைக்காரனுடைய ஆத்மா சாந்தியடையட்டும், தன்பிள்ளை பிழைக்கட்டுமென்று இரவும் பகலும் பகவானை வேண்டியும் ஒன்றும் பயன்படவில்லை.

அகல்யாபாயினுடைய ஏகபுத்திரன் மாலீராவ் காலம் சென்றான். அவள் புத்திரி மணம்புரிந்து வேறு குடும்பத்திற்குச் சென்றபடியால் ஹிந்து சட்டத்தின்படி அவள் பட்டத்திற்கு வரமுடியவில்லை.

இச்சந்தர்ப்பத்தில், அகல்யாபாயின் மாமனாரிடத்தில் முன்பு மந்திரியாக இருந்த கங்காதர் என்பவன் தன்னுடைய பதவி ஓங்கவேண்டுமென்ற பேராசையினாலும், ஸ்திரீயானபடியால்

அகல்யாபாய் ராஜரிகம் செய்யத் தகுதியற்றவளென்ற எண்ணத்தினுலும், அகல்யாபாய் அதிகாரத்துக்கு வராமலிருக்கும்படி எவ்வளவு முயற்சிகள் செய்ய வேண்டுமோ அவ்வளவும் செய்துபார்த்தான். அகல்யாபாயோ மிக்க தைரியசாலி; நியாயம் சட்டம் இரண்டையும் நன்ருக அறிந்தவள். தன் புருஷன், பிள்ளை இவர்களுக்குப் பிற்காலம் ராஜ்யம் தனக்குத்தான் சேரவேண்டுமென்று நன்ருகத்தெரியும் அவளுக்கு. இவ்விஷயத்தை, தனக்கு ஆப்தமுள்ள உறவினரோடும் மஹாராஷ்டிர சேனபதிகளோடும் கலந்து யோசித்து உறுதிப்படுத்திக் கொண்டாள். இந்தத் தீர்மானத்தைப் பூனவிலிருந்த பேஷ்வாவுக்கும் தெரிவித்து அவருடைய உடன்பாட்டையும் பெற்ருள். இதற்குள் கங்காதர், அகல்யாபாயோடு போர்புரிவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தான். இதையறிந்த அகல்யாபாய் தன்னுடைய யானையின் மேல் ஏறித் தானே நேரில் போய் யுத்தம் செய்யத் தயாராக இருப்பதைத் தன் எதிரிக்குத் தெரிவித்தாள். ஆனல் அதற்குள் பேஷ்வா முன்வந்து கங்காதர் ராவைப் போர்புரியாமல் தடுத்துவிட்டு அகல்யாபாயின் அரசாட்சியையும் ஒப்புக்கொள்வதாக அவனிடமிருந்து உறுதி மொழி வாங்கிவிட்டார். ஆகவே கங்காதரின் சூழ்ச்சிகளெல்லாம் பலனில்லாமல் போய்விட்டன. பெருந்தன்மை வாய்ந்த அகல்யாபாய் தான் அதிகாரத்தைப் பெற்றபின் கங்காதர் ராவினுடைய தப்பையெல்லாம் மறந்து விட்டு அவனுக்கு மறுபடியும் மந்திரிப் பதவியை அளித்தாள்.

அகல்யாபாய் 30 வருஷ காலம் (கி.பி. 1765-1795) அரசாட்சி செய்தாள். அரசாட்சியை ஒப்புக்கொண்ட அவள் முதல் காரியமாகத் துகாஜி என்கிற மஹாவீரபுருஷனை முக்கிய சேனதிபதியாக நியமித்து, அவனிடத்தில் முழு நம்பிக்கை வைத்துப் படை சம்பந்தமான எல்லா வியவகாரங்களையும் அவன் கையில் ஒப்பித்து ராஜ்யத்தின் தென்பாகத்தையும் அவன் அதிகாரத்துக்குள்ளாக்கி வைத்தாள். துகாஜீயும் அகல்யாபாயினிடத்தில் பேரன்பு பூண்டு, தனக்கு அப்பதவியை அளித்த அகல்யாபாயைத் தன் தாயாகவே பாவித்து அவள் அரசாட்சிக்கு எவ்வளவு துணை புரியலாமோ அவ்வளவும் புரிந்துவந்தான்.

தினந்தோறும் அகல்யாபாய் நெடுநேரம் தர்பாரில் அமர்ந்து அரசியல் விஷயங்களைப்பற்றிக் கவனிப்பாள். அவள் அரசாட்சி செய்யுங் காலத்தில் சில முக்கியமான துறைகளில் தன் கவனத்தைச் செலுத்தி வந்தாள். அவையாவன:—

1. மிதமான இறைமதிப்பு (*moderate land assessement.*)

2. பரம்பரையாய் வருகிற கிராம உத்தியோகஸ்தர்கள், மிராசுதாரர்கள் இவர்களுடைய அதிகாரத்தைக் காப்பாற்றுதல்.

3. சரியான நியாய விசாரணை.

நியாய விசாரணையைப் பெரும்பாலும் மந்திரிகளைக்கொண்டு நடத்திய போதிலும், சில சமயங்களில் அகல்யாபாய் தானே நேராக நியாய ஸ்தலங்களுக்குப்போய் வழக்குகளைத் தீர்ப்பாள்.

அகல்யாபாயினது ஆட்சிக்காலத்தில் அவளுடைய ராஜதானி யில் எப்பொழுதும் சமாதானமே நிலவியது. பிற தேசத்தரசர்களும் அவளுக்கு ஒருவிதமான இடையூறும் செய்யாமல் அதிக மரியாதை செலுத்தி வந்தார்கள்.

அகல்யாபாயின் அரசாட்சியை மால்கம் துரை பின்வருமாறு பாராட்டுகின்றார்:—

"இந்தியாவில் எந்த ராஜாங்கத்தில் மந்திரிகள் அடிக்கடி மாறாமல் நிலையாக இருந்து சிறப்பாக ராஜ்யபரிபாலனம் செய்கிறார்களோ அந்த ராஜாங்கமே உத்தம ராஜாங்கமாகும். இவ்வுண்மை அகல்யாபாய் அரசாட்சியினால் விளங்குகிறது. கோவிந்தபண்டு குன்னூ என்கிற சிரேஷ்டகுணம் பொருந்திய ஒரு பிராம்மணர் பிரதம மந்திரியாகி அகல்யாபாயினுடைய அரசாட்சிக்காலம் முழுமையும் அப்பதவியை வகித்து அதிகத் திறமையுடன் காரியங்களை நடத்தி வந்தார். இவரைப் போலவே மற்றப் பெரிய உத்தியோகஸ்தர்களும் நிலையாக இருந்து வேலை செய்தார்கள்."

எல்லாவிதத்திலும் அகல்யாபாயினுடைய அரசாட்சி பெருமை வாய்ந்தது. அவளுடைய சிறந்த கொள்கை என்னவென்றால், தன்னைச் சுற்றியிருக்கும் பிரஜைகள் யாவரும் எப்பொழுதும் செழிப்புற்று இருக்கவேண்டுமென்பதே. சௌகார்கள், வர்த்தகர்கள், குடியானவர்கள் எல்லோரும் தனவான்களாவதைக் கண்டு களிப்புறுவாள். அவர்களின்மேல் வரிகளைச் சுமத்தித் துன்பப் படுத்தமாட்டாள். அவளுடைய அரசாட்சியின் பலனாக இந்தோர் ராஜ்யம் ஒரு சிறிய கிராமத்திலிருந்து ஒரு பெரிய செல்வாக்கு நிறைந்த ராஜதானியாகிவிட்டது.

இத்தகைய ராஜதானியிலிருந்து வரும் வரும்படிகளிற் பெரும் பகுதி ஒன்றை அகல்யாபாய் தர்மகைங்கர்யங்களில் செலவு செய்தாள். பல கோட்டைகளைக் கட்டினாள். விந்தியமலைச் சார்பில் சாலைகளை அமைத்தாள். பல கோயில்களையும், பிரயாணிகள் தங்குவதற்குரிய தர்மசாலைகளையும் கட்டிக் கிணறுகளை வெட்டி வைத்தாள். அவள் புதுப்பித்த கோயில்களில் காசியிலுள்ள தேவாலயமும் ஒன்று. அவளுடைய தர்மம் அவளுடைய ராஜதானி

யோடு நிற்கவில்லை. இந்தியாவில் முக்கியமான புண்ணிய க்ஷேத்திரங்கள் எங்கெங்கே உண்டோ அங்கெல்லாம் அவள் கட்டிடங்களைக் கட்டிவைத்து அவை உபயோகப்படுவதற்கேற்றபடி பணமும் அனுப்பி வந்தாள். இராமேசுவரத்தில் அவள் நிறுவிய தர்மசாலை ஒன்றிருக்கிறது. வடக்கே கயாவில் ஒரு சிவாலயத்தில் தெய்வ ஆராதனை செய்கிற மாதிரியுள்ள அவளுடைய உருவச்சிலையொன்றைக் காணலாம்.

அகல்யாபாய் அங்கஹீனமுடையவர்களிடத்தில் மிகவும் இரக்கம் கொண்டவள். கீழ் ஜாதியர்களை, முக்கியமான தினங்களில் வரவழைத்து, ஸங்கீதம் பிரசங்கம் முதலியவற்றால் அவர்களைச் சந்தோஷப்படுத்துவாள்.

அகல்யாபாயினுடைய தினசரி ஒழுக்கங்கள் கவனிக்கத் தக்கவை. தினந்தோறும் அவள் காலையில் வெகு சீக்கிரம் படுக்கையிலிருந்து எழுந்து சூரியோதயத்திற்கு ஒருமணி முந்தியே ஸ்நானம் ஜபம் இரண்டையும் முடித்துக் கொள்வாள். பிறகு சில அந்தணர்களை அழைத்து மதஸம்பந்தமான பல புஸ்தகங்களைப் பாராயணம் செய்யும்படி சொல்லுவாள். இதற்குப்பிறகு சில தானங்களைச் செய்து, பல பிராம்மணர்களுக்கு அன்னமளிப்பாள். அவர்கள் உண்ட பின்புதான் உண்ணத்தொடங்குவாள். ஊனுணவு கொள்ளும் குலத்தில் பிறந்தவளாயினும் மாமிசத்தை விலக்கிவிட்டுக் காய்கறியையே அகல்யாபாய் உட்கொண்டுவந்தாள். உண்டபிறகு மறுபடியும் ஜபம் பண்ணிவிட்டுக் கொஞ்சநேரம் சிரமபரிஹாரம் செய்வாள். பிறகு அரசியின் கோலத்துக்கேற்ற உடை தரித்து மத்தியானம் சுமார் இரண்டு மணியளவில் தர்பாருக்குச் செல்லுவாள். அங்கே ஆறுமணி வரையில் இருப்பாள். ஆறு மணியிலிருந்து ஒன்பதுமணிவரையில் சில யோக அப்பியாசங்களைச் செய்து, பிறகு பத்தியமான ஆகாரத்தை உண்டு ஒன்பது மணியிலிருந்து பதினொருமணிவரையில் அரசியல் விஷயங்களைக் கவனிப்பாள். மேலே சொல்லப்பட்ட ஒழுக்கங்களைத் தினந்தோறும் கூடியமட்டில் தவறாமல் அகல்யாபாய் செய்துவந்தாள்.

குணத்தில் சிறந்த பெண்மணியான அகல்யாபாய் உருவத்தில் ரூபவதியென்று எங்கும் வர்ணிக்கப்படவில்லை. ஆனாலும் அவளுடைய சாந்த நடவடிக்கைகளும் புன்சிரிப்புள்ள முகமும் பார்ப்பவர்களுக்கு அதிக திருப்தியை உண்டாக்கின. அவள் நடுத்தர உயரம் வாய்ந்தவள்; அதிகப் பருமனுமில்லை. மலர்ந்த கண்களையுடையவள்.

சாதாரண ஸ்திரீயின் புத்தியைவிட அவளுடைய அறிவு அதிக தீவிரத்தை அடைந்திருந்தது. அவள் வேதபுராணங்களைப்

படித்து அவைகளின் கருத்தை அறிந்தவள். அரசியல் விஷயங்களில் மிக்க சுறுசுறுப்புள்ளவள். புருஷன் இறந்தபிறகு அவள் அலங்காரமான உடைகளைத் தரிக்காமல் எப்பொழுதும் வெள்ளை வஸ்திரத்தையே தரித்தாள். கழுத்தில் ஒரு சிறிய தங்கமாலையைத் தவிர வேறோர் ஆபாணத்தையும் அவள் அணியவில்லை.

அகல்யாபாய் காலமாகுமுன்னமே அவள் அருமையான புத்திரி சதி என்கிற வழக்கத்தை மேற்கொண்டு அக்கினிக்கு இரையானாள். புத்திரியைமட்டுமல்லாமல் பேரனையும் இழந்த அகல்யாபாய் தன் துக்கங்களெல்லாவற்றையும் ஒரு பக்கத்தில் ஒதுக்கிவைத்து, பிரஜைகளுடைய நன்மையையே எண்ணி அறுபதுவயது வரையில் சோர்வின்றி அரசாட்சி செய்தது வியக்கத் தக்கதே. அவள் 1795-ஆம் வருஷம் சிவபதவியை அடைந்தாள்.

ஒரு பெண் அரசாட்சிபுரிதல் தகுதியல்ல வென்று சிலர் அகல்யாபாயைத் தள்ளி வைக்கப் பல வகையில் முயற்சிகள் செய்தனர்; அவள் அரசாட்சி எந்நாட்டிலும் எக்காலத்திலும் கொண்டாடத் தக்கதே யென்று உறுதியாகச் சொல்லலாம்.

தான்செய்த ஒவ்வொரு காரியமும் பகவானுக்கே அர்ப்பணம் என்ற மனஉறுதி கொண்டவள் அகல்யாபாய்.

துறவுமனப்பான்மையை மிகுதியாகக் கொண்ட ஒருத்தனேனும், ஒருத்தியேனும் அரசாங்கபாரத்தை வகித்துக் காலத்திற்குத் தக்கபடி குடிகளைப் பாதுகாத்துச் செங்கோல் செலுத்துவது அரிய செயலன்றென்பதை அகல்யாபாயின் வரலாறு நன்றாக விளக்குகின்றது.






## காற்றினும் கடிய வேகம்

பே. நா. அப்புஸ்வாமி ஐயர், பி.ஏ., பி.எல்.

---

"கோபாலையங்காரவர்களா? வாருங்கள், வாருங்கள்! தாங்கள் இந்த ஊரில்தான் இருக்கிறதோ? வேறு எங்கேயாவது விஜயம் செய்திருந்ததோ?" என்று போலி வணக்கத்துடன் கிருஷ்ணையர் கோபாலையங்காரை வரவேற்றார்.

"போடா, கிட்டு; வேடிக்கை பண்ணாதே! எனக்கு நாலைந்து நாளாய் உடம்பு சரியாயில்லை. கொசுக்கடியினால் தூக்கம் வரவில்லை. ஏன்? உன் உடம்பும் ஒரு மாதிரியாகத்தான் இருக்கிறது" என்றார் கோபாலையங்கார்.

"அப்படிச் சொல்லு; கோபாலா, நம்முடைய ஊருக்கும் மாம்பலத்துக்கும் பஸ் ஏற்பட்டதிலிருந்து நம் ஊர்க் கொசுக்கள் சில, பஸ்ஸில் கூலி கொடுக்காமல் ஏறி, மாம்பலத்துக்குப் போய் அங்கே உள்ள கொசு வித்துவான்களிடம் பாடம் கேட்டுக் கொண்டு வந்திருப்பதாகக் கேள்வி. அதுதான் காரணமோ, அல்லது உன்னைக் கொஞ்சநாளாகப் பார்க்காததுதான் காரணமோ தெரியவில்லை: எனக்கும் நாலைந்து நாளாக—ஏன் ஒருவாரமாகத்தான்—தூக்கமே இல்லை. நம்முடைய சினேகிதன் ராகவன் உனக்குத் தெரியுமே; அவன் அரை குறை ஆயுர்வேதம் படித்தவன்; பரம்பரை வைத்தியகுடும்பத்தைச் சேர்ந்தவன். அவன் இதைக் கேள்விப்பட்டதும் தூக்கத்துக்குத் தன்னிடம் ஒரு திவ்யமான லேகியம் இருக்கிறது என்று சொல்லி அதை என்னிடம் கொண்டு வந்து ஒரு மிளகத்தனை சாப்பிடும்படி செய்துவிட்டான். நீ படுத்துக்கொள்ளுமுன் ஏதாவது பழைய பத்திரிகையை லேசாகப் படித்துவிட்டுக் கண்ணை மூடிக்கொள். தூக்கம் எப்படி வருகிறது? பார், கிட்டு" என்றான்.

"அவன் சொன்னபடியே பழைய பத்திரிகை ஒன்றைத் தேடிப் பிடித்து லேசாகப் படித்தேன். 'லண்டன்—மெல்போர்ன் விமானப்போட்டி. லண்டனிலிருந்து புறப்பட்ட விமானம் ஒரேநாளில் இந்தியாவுக்கு வந்து விட்டது. சிங்கப்பூர் போவதற்கு நாற்பது மணிக்கு மேல் ஆகவில்லை. ஆஸ்திரேலியாவின் மேற்கெல்லையை அடைவதற்கு 52½ மணி. ஆஸ்திரேலியாவின் கீழ்க் கடைசியிலுள்ள மெல்போர்னுக்குப் போய்ச் சேருவதற்குச் சரியாக மூன்று நாள் ஆகவில்லை' என்று படித்துக் கொண்டிருக்கும் போதே கண் கிறுகிறுவென்று வந்தது. தூங்கிவிட்டேன். ஓர் அற்புதக் கனவு கண்டேன். அதைக் கேள்."

* * *

சென்னையிலே ஒரு பெரிய மைதானம். அதிலே பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் கூடியிருந்தார்கள். எங்கே பார்த்தாலும் பெரிய விளம்பரங்கள் போடப்பட்டிருந்தன.

> வேகவாகினி
> அதிசயவினோத விமானம்
> செய்வதற்குப் பத்துலக்ஷ ரூபாய் செலவு
> சென்னையிலிருந்து லண்டனுக்குப் போகிறது
> 1½ மணியில் போய்ச் சேரும்
> பிரபல மனிதர் பலர் ஏறிச்செல்லுகிறார்கள்
> **சரியாக 4 மணிக்குப் புறப்படும்**
> **நீங்கள் ஏறவேண்டாமா?**

இப்படி அந்த விளம்பரங்களில் கண்டிருந்தது. அந்த வேடிக்கையைப் பார்க்கத்தான் அவ்வளவு கூட்டமும் கூடியிருந்தது. கூட்டமென்றால் சாமானியக் கூட்டம் அல்ல; எள்ளுப்போட்டால் எள்ளு விழாது.

அந்த மைதானத்தின் நடுவிலே சாய்வாக ஒரு சிமென்டுக் கட்டடம் இருந்தது. அதிலே பெரிய திமிங்கிலம் மாதிரியாக ஏதோ ஒன்று வைக்கப்பட்டிருந்தது. அதேமாதிரி உருண்டை மூஞ்சி; பக்கத்தில் குட்டையான இரக்கை; நீண்ட வால். அதைக் கவனித்துப் பார்த்ததில் அதன் விலாப்புறத்தில் 'வேகவாகினி'

என்று பொன் எழுத்தில் எழுதப்பட்டிருந்தது. அப்பொழுது தான் அது ஆகாயவிமானம் என்பது தெரியவந்தது.

மூன்றே முக்கால் மணிக்கு அங்கே ஒரு பரபரப்பு ஏற்பட்டது. நீரில் முழுகும் குளிகாரர் போட்டுக்கொள்ளும் கவசத்தைப் போல் கவசம் அணிந்த சிலர் விமானத்தின் அருகில் வந்தார்கள். நாலைந்துபேர்களாக அவர்களைத் தூக்கித் தூக்கி விமானத்துக்குள் ஏற்றினார்கள். விமானத்தின் கதவு மூடப்பட்டது. திருப்புளிகளையும் வில்லை முறுக்கிகளையும் வைத்துக்கொண்டு கதவை நன்றாக இறுக்கி விட்டார்கள். அங்கே உள்ள கோபுரத்துக் கடியாரத்திலே நாலுமணி அடிக்க மூன்று நிமிஷங்கள் இருந்தன. ஒருவன் ஊதுகுழலை வாயில் வைத்துக் கொண்டு ஊதினான். மைதானத்தின் நடுவிலிருந்து சொய்யென்ற ஓசை உண்டாயிற்று. நாலடிக்க இரண்டு நிமிஷம்! இன்னோர் ஊதல்: ஓசை பலத்தது. ஒரு நிமிஷம்! இன்னும் ஓர் ஊதல்: வேகவாகினியின் வால்புறத்தினின்று நெருப்பு ஜ்வாலை வரத்தொடங்கிற்று. சரியாக நாலு மணி: குண்டுபோட்டது. உடனே அங்குள்ளோர்களுடைய காதுகள் செவிடுபடும்படியாக ஒரு பெரிய ஓசை! மைதானமே தீப்பற்றிக் கொண்டாற்போலக் கண்ணைப் பறிக்கும் காந்தியோடு கூடிய ஓர் அக்கினிஜ்வாலை! மைதானம் முழுவதும் க்ஷணத்தில் பரவிய புகைக்கூட்டம்! ஓரே நெருப்பு மழை! அதிர்ச்சியாலும் ஒளியின் மிகுதியாலும் கண்ணை மூடிக்கொண்டார்கள் அங்குள்ளவர்கள். கண்ணைத் திறந்தபோது ஓரே புகையாயிருந்தது. ஒன்றும் தெரியவில்லை. மறுக்ஷணம் காற்றில் புகை தெளிந்துவிட்டது. அங்குள்ளோர் சிலர் அண்ணாந்து பார்த்து, "அதோ!", "அதோ!" என்று உயரக் காட்டினார்கள். மிகவும் உயரத்திலே அந்த விமானம் போய்க்கொண்டிருந்தது. அதன் வால்புறத்திலிருந்து நெருப்புச் சரம்போல் பொழிந்து கொண்டிருந்தது. மறுபடியும் குப்பென்று அதன் வால்புறத்திலிருந்து ஒரு ஜ்வாலை; புகை; ஒரு பெரிய ஓசை. அந்தப்புகை விமானத்தை மறைத்தது. மறுபடியும் புகை தெளிந்ததும், விமானம் சிறுபக்ஷிபோல் முன்னிலும் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. மறுபடியும் ஒரு ஜ்வாலை; புகை; வெடிக்கும் ஓசை. விமானம் கண்ணுக்கெட்டாமல் மறைந்து விட்டது. இவ்வளவு காரியமும் நடப்பதற்கு அரைநிமிஷத்துக்குமேல் ஆகவில்லை. முப்பது விநாடிதான். அங்கே கூடி வேடிக்கை பார்த்தவர்கள் இதைப்பற்றிக் கொஞ்சநேரம் பேசிவிட்டு வீடுசென்றார்கள்.

அதற்குள்ளே ஏறியவர்கள் என் கண்முன்னே தோன்றினார்கள். அவர்கள் உள்ளே ஏறிவந்ததும் கதவுகள் நன்றாகப் பூட்டப்




பட்டன. துளி காற்றுக்கூட உள்ளே வருவதற்கு வழியில்லாமல் நன்ருகப் பொருத்தப்பட்ட அந்தக் கதவுகளை வெளிப்புறத்திலே ஆணியிட்டு முடுக்கியது போதாதென்று உள்புறத்திலும் திருகாணிகளையும் வில்லைகளையும் முறுக்கி இறுக மூடினுர்கள். பிறகு ஒவ்வொருவரும் தம் தம் படுக்கையில் நீட்டிப் படுத்துக் கொண்டார்கள்.

உள்ளேயும் சொய்யென்ற ஓசை கேட்டது; பின்பு அதிகமாயிற்று. எல்லோரும் பலமாகத் தங்கள் படுக்கைகளைப் பிடித்துக் கொண்டார்கள். ஆ! அண்டமே வெடிப்பதுபோல் ஒரு சத்தம் உண்டாயிற்று. விமானம் கிளம்பிவிட்டது என்று அறிந்தார்கள். அவர்கள் படும்பாடும் எனக்குத் தெரிந்தது. அவர்கள் நெஞ்சின் மேல் என்ன அழுத்தம்! ஓர் இருப்புப்பெட்டியைத் தூக்கிவைத்த மாதிரி இருக்கிறது. உடல்தான் என்ன கனம் கனக்கிறது! கைதான் என்ன கனம்! அவர்களால் கையைத் தூக்கவே முடியவில்லை. கை படுக்கையில் ஒட்டிக்கொண்டுவிட்ட மாதிரியாக இருக்கிறது. நெஞ்சின்மேலுள்ள அழுத்தம் இன்னும் அதிகமாகிறது. இரண்டு இருப்புப்பெட்டிகள் நெஞ்சின்மேல் விழுந்து அழுத்துகிற மாதிரி இருக்கிறது. ஏதாவது மிகப் பெரிய பாறை ஒன்று மேலே உருண்டு விழுந்து அழுத்துகிறதோ என்று அவர்கள் எண்ணுகிருர்கள். அவர்களால் மூச்சு விடவே முடியவில்லை.


லண்டனுக்கு

சிறிதுசிறிதாக இந்த உணர்ச்சி குறைகிறது. பெரும் பாறை சிறு பாறையாகிறது. கையை அசைக்க முடிகிறது. திணறித் திணறியாவது மூச்சுவிட முடிகிறது. பிறகு இந்தக் கஷ்டமும் நீங்கிவிடுகிறது. சாதாரணமாய்ப் படுக்கையில் படுத்துக் கொண்டிருப்பது போலவே தோன்றுகிறது. பிறகு சற்று எழுந்திருந்து நடமாடலாமென்று தோன்றுகிறது. நடமாடவும் செய்கிருர்கள்.




மணி நாலேகால். ஆகா! என்ன வேகமாகப் போகிறது அந்த விமானம்! விநாடிக்கு நாலுமைல், அதாவது மணிக்கு 14400 மைல், என்று அதிலுள்ள வேகம் காட்டும் கருவியில் தெரிகிறது.

"உயர ஏறவேண்டியதற்கு உள்ள எண்ணெய் எல்லாம் தீர்ந்துபோயிற்று" என்றான் ஓர் ஆள். மணியையும் வேகத்தைக் காட்டும் கருவிகளையும் கவனித்துக் கொண்டிருந்த எஞ்ஜினியர் "சரி" என்று தலையை அசைத்தான். 'எல்லாம் நினைத்தபடி நடந்து வருகிறது' என்று எண்ணி உள்ளேயிருந்தவர்கள் தைரியமடைந்தார்கள்.

ஏறுவதற்குள்ள எண்ணெயை உபயோகப் படுத்தியாய் விட்டது. வாய்ப்புறத்து ஓசையும் குறைந்துவிட்டது. ஆனாலும் வேகவாகினி உயரப் பார்த்துப் போய்க்கொண்டேயிருக்கிறது. அது வந்த வேகம் தீரவில்லை. தடுப்பதற்கு எதிரே வாயுமண்டலமும் இல்லை. ஏனெனில் வாயுமண்டலத்தை அப்பொழுதே கடந்து, வெட்ட வெளிக்கு வந்தாய் விட்டது. பூமியிலிருந்து இருநூறுமைல் வரைதானே வாயுமண்டலம்? ஆயினும் பூமியின் ஆகர்ஷண சக்தி அதை இழுத்து அதன் வேகத்தைக் குறைத்துக்கொண்டே வருகிறது.

புறப்பட்டு முக்கால்மணி நேரம் ஆயிற்று; வேகவாகினி கிட்டத்தட்ட எண்ணூறு மைல் உயரம் ஏறியாய்விட்டது. இதற்குமேல் ஏறாது. ஆகர்ஷணசக்தியின் பலம் அதைத் தடுத்து விட்டது. இனி அது இறங்கவேண்டியதுதான். இப்பொழுது பாதிவழி வந்தாய்விட்டது. இராக் மாகாணத்திலே யூப்ரடீஸ் நதிக்குமேலே கண்ணுக்கு எட்டாத உயரத்திலே, கண்ணால் தொடரமுடியாத வேகத்தோடு வேகவாகினி போய்க்கொண்டிருக்கிறது. இனிமேல் லண்டனில்போய் விழவேண்டியதுதான் பாக்கி. ஆகர்ஷண சக்தியின் வேகத்தால் அது கீழே இறங்க இறங்க அதன் வேகம் மிகுந்துகொண்டே வருகிறது.



சென்னையிலிருந்து

இனிமேல் வேகத்தைக் குறைக்காவிட்டால் விமானம் வெகு வேகமாகப் பூமி

யில் மோதித் தூள்தூளாகிவிடும். அதனால் இப்பொழுது அதன் முன்புறத்திலுள்ள சில குழாய்களின் வழியே வாணம் வருகிற மாதிரி நெருப்பும் புகையும் வருகின்றன. பட், பட் என்று வெடிப்பு உண்டாகிறது. இவற்றின் சக்தியால் அதன்வேகம் தடைபடுகிறது; வேகம் வரவரக் குறைகிறது.

“ஆகா! இதோ வந்துவிட்டோம்! லண்டன் இங்கிருந்து இன்னும் இருநூறு மைல் இல்லை” என்கிறான் விமானத்தை ஓட்டும் எஞ்ஜினியர். அவன் ஏதோ சில யந்திரங்களைத் திருகுகிறான். மொட்டைச் சிறகுள்ள விமானத்தின் விலாப்புறத்திலிருந்து பெரிய சிறகுகள் முளைக்கின்றன. இப்பொழுது பார்ப்பதற்கு அது திமிங்கிலத்தைப்போல் இல்லை; மிகப்பெரிய தட்டாரப் பூச்சியைப்போல் இருக்கிறது.

‘ஆகா! இத்தனைநேரம் சௌகரியமாக இருந்தோமே; இப்பொழுது எங்கிருந்து மறுபடியும் வந்தது இந்தக் கஷ்டம்?’ என்று பிரயாணிகள் எண்ணுகிறார்கள். அவர்களுடைய உடல் மறுபடியும் ஈயத்தினால் செய்தமாதிரி ஆகிவிடுகிறது. என்ன கனம்! என்ன கனம்!! மறுபடியும் மூச்சே நின்றுபோய் விடுமோ என்று தோன்றுகிறது. ‘நெஞ்சில் பூதமா நின்று அழுத்துகிறது?’ என்று அவர்கள் எண்ணிக்கொண்டிருக்கும்போதே ஓர் அதிர்ச்சி உண்டாகிறது. பூமியில் இறங்கியாய்விட்டது. “சரியாய் ஒன்றரை மணிநேரம்” என்று மாலுமி சொல்லுகிறான். அவசர அவசரமாகக் கதவுகளைத் திறக்கிறார்கள்.

என்ன கூட்டம்! என்ன ஆரவாரம்! லண்டன்மாநகருக்கு அருகிலுள்ள பெரியமைதானத்தில் வேகவாகினி இறங்கிவிட்டது. லண்டன் நகரத்துக் கட்டடங்களும், அதன் புகையும் மூடுபனியும் கூடப் பிரயாணிகளுக்குப் பெருமகிழ்ச்சியையே தருகின்றன. ‘பத்திரமாய்ப் பூமி வந்து சேர்ந்துவிட்டோம், கவலை விட்டது’ என்று அவர்கள் பெருமூச்சு விடுகிறார்கள். எல்லோரும் இறங்குகிறார்கள்.

* * * *

“விழித்துக் கொண்டேன். எனக்குக் கனவுதான் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் மேல் நாட்டு விஞ்ஞானிகளில் சிலர் இது உண்மையாக நிகழக்கூடிய நிகழ்ச்சி என்று எண்ணுகிறார்கள்.”

“பலே! நல்ல புளுகு புளுகுகிறாய். நீ இப்பொழுது சொன்ன விஷயத்தையே நான் ஓர் இங்கிலீஷ் புஸ்தகத்தில் படித்தேன்.

நீயும் அதைப் படித்துவிட்டுக் கனவு கண்டேன் என்று ஒரே யடியாய்ப் பொய் சொல்லுகிறாயே?"

"அந்தப் புஸ்தகத்தை நீயும் படித்துத் தொலேத்தாயா? அதைக் கேட்டுத் தெரிந்துகொள்ளாமல் உன்னிடம் சொல்லி விட்டேன். ஆனல் எப்படி இவ்வளவு நேரம் கேட்டுக்கொண்டி ருந்தாய்?"

"புஸ்தகத்தில் உள்ளபடி சொல்லப்போகிறாயா? வேறு சொந் தக் கைச்சரக்கும் ஏதாவது சேர்க்கப்போகிறாயா? என்று பார்த் தேன். கைச்சரக்கும் நிறையக் கலந்திருந்தது. அதனல் கேட்டுக் கொண்டிருந்தேன்."

"சரி, சும்மா இரு. அதோ ராகவனே வருகிறான்; அவனிடம் சொல்லிப் பார்க்கலாம். அவன் நிச்சயமாக அந்தப் புஸ்தகத்தைப் படித்திருக்க மாட்டான்."

"நீ பாதிக் கதை சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவன் புஷ்பக விமானத்தைப் பற்றித் தொடங்கி விடுவான். அப்புறம் நீதான் கதை கேட்கவேண்டிவரும்."

"பார்க்கலாமே."

கோபாலன் சொன்னபடிதான் நடந்தது.






## குமாரஸம்பவமும் சாகுந்தலமும்

ஸ்ரீ ரவீந்த்ரநாத் டாகுர்

[ஆசிரியரின் அனுமதிபெற்றுக் 'குமுதினி' மொழிபெயர்த்தது.]

### 1

காளிதாஸர் மிகவும் ஸௌந்தர்யத்தில் ஈடுபட்டவரென்பது பிரசித்தமானதே. அதனுல்தான் அவருடைய லௌகிக நடவடிக்கைகளைப் பற்றிக்கூடச் சில களங்கங்கள் கூறப்படுகின்றன. இவ்விதக் கதைகளே அக்கவியின் காவியங்களைப் பற்றிச் சாதாரண ஜனங்கள் கூறும் மதிப்புரையாகும். இவ்வித மதிப்புரையிலிருந்து, சாதாரண ஜனங்கள் மற்ற விஷயங்களைப்பற்றிக் கூறுவதில் நாம் எவ்வித நம்பிக்கைவைத்த போதிலும், இலக்கிய விஷயங்களைப் பற்றி அவர்கள் கூறுவதை நம்பினுல் குருடனை நம்பிச்செல்லும் குருடனைப்போல் ஒவ்வோர் அடியிலும் வீழ்ச்சியே ஏற்படும் என்பது தெரிகிறது.

மகாபாரதத்தில் இகலோக கர்மங்களைப் பற்றின வர்ணனைகளில் உள்ளூற ஒரு வைராக்கியத்தின் தோற்றம் தென்படுகிறது. மகாபாரதத்தின் நோக்கம், கர்மத்தின் முடிவு கர்மமே என்பதல்ல. அதிலிருக்கும் வீர்ய சௌர்யச் செயல்கள், விருப்பு வெறுப்பு, ஹிம்ஸை பிரதிஹிம்ஸை, முயற்சி பலன், ஆகிய எல்லாவற்றிற்கும் நடுவில் ஸ்மசான பூமியிலிருந்து மனிதன் புறப்படும் பெரிய யாத்திரையின் பயங்கர ஸங்கீதம் கேட்டுக்கொண்டே இருக்கிறது. அதாவது கர்மத்தின் முடிவு தியாகமே என்பது அதில் நன்ருக விளங்குகிறது. ராமாயணத்திலும் இதுவே காணப்படுகிறது. பரிபூர்ணமான முயற்சியும் இறுதியில் வியர்த்தமாகிறது.

இந்தத் தியாகத்திலும் துக்கத்திலும் நிஷ்பலத்திலுமே கர்மத்தின் மகத்துவமும், புருஷனின் பௌருஷப்பிரதாபமும் ஓர் சுவர்ண பர்வதம்போல்பிரகாசித்து ஆகாயபரியந்தம் தலைதூக்கிநிற்கின்றன.

இவ்வாறே காளிதாஸருடைய சஞ்சலமான ஸௌந்தர்யத்திற்குள் ஒரு போகவைராக்கியம் இருந்துகொண்டே யிருக்கிறது. மனிதரின் கர்மவழி, வைராக்கியம் இரண்டையும் எடுத்துக்காட்டும் இலக்கியம் என்று மகாபாரதத்தைச் சொல்லலாம்; அதைப் போலவே, காளிதாஸரையும் ஸௌந்தர்யத்தில் ஈடுபட்டவரென்றும் சொல்லலாம்; போகத்தில் பற்றிழந்தவரென்றும் சொல்லலாம். அழகை அனுபவிப்பதிலேயே இவருடைய காரியங்கள் முடிவடைவதில்லை. அவ்வித அனுபவத்தைத் தாண்டி, ஒரு சாந்தியை அடைந்தபின்பே கவி தமது காவியத்தை முடித்திருக்கிறார்.

செம்படவனிடமிருந்து துஷ்யந்தனுக்குத் தன்னுடையமோதிரம் கிடைத்ததும் அவன் தன்னுடைய மறதியை உணர்ந்து, ஆழ்ந்த பச்சாத்தாபமென்னும் துயரத்தில் மூழ்கி விடுகிறான். ஒரு மேல்நாட்டுக் கவிஞராக இருந்தால் அதோடு சாகுந்தல நாடகத்தின் திரை விழுந்திருக்குமாறு செய்திருப்பார்.

அவ்விதமே தற்காலத்திய கவிஞர் ஒருவர் குமாரஸம்பவம் எழுதுவதென்றால் பார்வதி தன்னுடைய மனோரதம் கைகூடாமல் துக்கத்திலும் லஜ்ஜையிலும் ஆழ்ந்திருக்கும் காலத்துடன் அக்காவியத்தை முடித்துவிடுவார். அகாலத்தில் ஏற்பட்ட வஸந்தருதுவில், ரத்தவர்ண புஷ்பங்கள் நிறைந்த அசோகமரத்தடியில் மன்மதனைக் கொளுத்திய பரமசிவனின் கொழுந்து விட்டெரியும் கோபத் தீயைக் கண்டு வெட்கிச் சிவந்து தலைகுனிந்தவளாய், விருதாவான அவ்வபார புஷ்ப ஆபரணங்களைத் தரித்தவளான பர்வத ராஜ குமாரியானவள் வாசகர்களின் உருக்கங்கொண்ட இதயத்தில் தோன்றி நிற்கிறாள். நிறைவேறாத அந்த அன்பின் வேதனை வெகுநாட்கள்வரை வாசகர்களை வாதிக்கும். தற்காலத்து நீதிப் படி இதுவே காவியத்தினுடைய உஜ்வலமான சூர்யாஸ்தமனத்திற்கு ஏற்ற இடமாகும். அதற்கு மேற்பட்ட விவாக இரவு மிக ஒளி குன்றியதாகும். விவாகமென்பது வாழ்க்கையில் தினமும் நடக்கும் ஒரு சாதாரண சம்பவம். இது சமூகத்தின் ஒரு கட்டுப் பாடு. விவாகத்தைப் பின்பற்றும் வழி ஓரிடத்தில்தான் கொண்டு போய்விடும். அதில் மனிதனுடைய தீவிரமான சக்தியைக் காண்பிக்க அதிக இடம் இல்லை. ஆகையாலேயே இக்காலத்திய கவிகள் தங்களுடைய காவியங்களில் விவாக சம்பந்தமான விஷயங்களுக்கு அதிக மேன்மை அளிப்பதில்லை. ஆண்பெண்களின் மனத்தில்

உண்டாகி நாலுபுறமும் அவர்களுக்கு இருக்கும் பல பாசங்களை யும் அறுத்துக்கொள்ளும்படி எந்த அன்பு செய்கிறதோ, எவ் வித அன்பு அவர்களுடைய வாழ்க்கையில் பல நாட்களாய்ப் பழகி வழக்கமான ஒரு வழியைவிட்டுச் செல்லும்படிச் செய்கிறதோ, எவ்வித அன்பு 'நாமிருவரும் கூடியிருந்தால் போதும். உலகமுழு வதும் நம்மை நிராகரித்தாலும் நமக்கு அச்சமுமில்லை; குறைவு மில்லை' என்று ஸ்திரீ புருஷர்களை எண்ணும்படிச் செய்கிறதோ, எவ்வித அன்பினல் தூண்டப்பட்டுக் காதலர்களிருவரும் சுதந்திரம் பெற்றுத் தனிப்பட்ட கிரஹங்கள் (நக்ஷத்திரங்கள்) போலச் சுற்றி வரமுடிகிறதோ, அவ்விதக் காதலே காவியத்தில் முக்கிய விஷய மாகக் கருதப்படுகிறது.

காளிதாஸர் அவ்வினிமையான காதலின் மோகத்தை விலக்கி விடவில்லை, அதை இளமையழகினுடைய பிரகாசவர்ணங்களைக் கொண்டு வரைந்திருக்கிறார். ஆனல் இந்தப் பிரகாசத்தோடே அவர் தமது காவியத்தை முடிக்கவில்லை. மகாபாரதத்தில் எல்லாக் காரியங்களுக்கும் முடிவு மகாயாத்திரையில் இருப்பதுபோல, குமாரஸம்பவத்திலும் எல்லாக் காதலின் வேகமும் மங்களமாய்க் கூடுவதில் முடிகிறது.

குமாரஸம்பவத்தையும் சாகுந்தலத்தையும் ஒப்பிட்டுப் பார்க் காமல் இருக்கமுடியாது. இரண்டு காவியங்களிலும் உள்ளடங்கி யிருக்கும் விஷயம் ஒன்றே. இரண்டு காவியங்களிலும் மன்மதன் எவ்விதக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்கிருனே அதற்குத் தெய்வ சாபத்தினல் விக்கினம் ஏற்படுகிறது. அந்தக் கூட்டம் நேரிடா மலும், பரிபூரணமாகாமலும், அக்காதலர்கள் கூடும் மிகவும் அழகிய மண்டபத்திலேயே தெய்வசாபம் பெற்று மரித்துவிடு கிறது. அதற்குமேல் கடுமையான துக்கத்தையும் தாங்கொணு விரகதாபத்தையும் அனுபவித்த பிறகு, இருவருக்கும் ஏற்படும் சேர்க்கையானது முற்றிலும் வேறுபட்ட குணமுடையதாகின்றது. இந்தக்கூட்டமானது ஸௌந்தர்யத்தின் வெளி ஆடம்பரங்களை யெல்லாம் விட்டுத் தூய்மையான ஒரு மங்களதீபக் கொழுந்துடன் பிரகாசிக்கிறது.

தேவர்களால் தூண்டப்பட்ட காமதேவன், பரமசிவனும் பார்வதியும் ஒன்றுபடுவதற்காகச் செய்த முயற்சிகள் மிக அதிக மானவை. ஜன சமூகத்தைவிட்டு இவ்விருவரும் ஒரு தபோ வனத்தில் அகாரணமாகவும் தற்செயலாகவும் சந்திக்கின்றனர்; அதனுல் புதுக்காதல் வெளிப்படுவதைக் கவி வர்ணித்திருப் பதில் எவ்வளவு சாதுர்யமும் அழகும்கூடி விளங்குகின்றனவோ, அவ்வளவு ஆடம்பரமும் இருக்கிறது.

எல்லாம் துறந்த சந்நியாசியான பரமசிவன் ஹிமாலயத்தின் ஒரு பாரிசத்தில் உட்கார்ந்து தவம் செய்துகொண்டிருக்கிறன். குளிர்ந்த காற்றனது கஸ்தூரியின் வாசனையையும், கின்னரர்களின் கீதத்துவனியையும் வகித்துவந்து ஹிமசிகரத்திலிருந்து அருவியாகக் கொட்டிக்கொண்டிருக்கும் கங்கையின் நீர்த்திவலைகளால் நனைந்திருக்கும் தேவதாரு விருக்ஷங்களை மெதுவாக அசைத்துக் கொண்டிருக்கிறது. திடீரென்று அகாலத்தில் ஏற்பட்ட வஸந்த ருதுவால் அப்போதே தளிர்த்த அசோக மரத்தினுடைய இளந் தளிர்களைச் சலசலவென்று அசைத்துத் தெற்கிலிருக்கும் திக்வதூவானவள் மந்தமாருதமாகிய பெருமூச்சை விடுகிறள். வண்டுகளின் தம்பதிகள் ஒரே புஷ்பத்தின்மீது அமர்ந்து மது பானம் செய்கின்றன. கருநிறமான ஆண்மான், தன்னுடைய ஸ்பர்ச சுகத்தினல் கண்களை மூடிக்கொள்ளும் பெண் மானின் சரீரத்தைத் தனது கொம்புகளால் தடவிக்கொடுக்க ஆரம்பிக்கிறது.

ஒரு தபோவனத்தில் வஸந்தனின் வருகை ஏற்படுகிறது. தவத்தின் கடுமையான நியமங்களின் திடபந்தனங்களுக்கு நடுவிலும் திடீரென்று இயற்கையின் தோற்றம் தலைதூக்கிப் பரவுகிறது. நகரத்தின் உத்தியான வனங்களிலேகூட வஸந்தனின் இவ்விதத் தோற்றம் ஒருநாளும் காணப்பட்டதில்லை.

மாலினி நதிக்கரையிலிருக்கும் கண்வருடைய ஆச்ரமத்திலும் இத்தகைய நிகழ்ச்சியே நடக்கிறது. அங்கே ஹோமங்களின் புகையினல் தபோவன விருக்ஷங்கள் வர்ணமிழந்து இருக்கின்றன. நதிக்குச்செல்லும் வழிமுழுவதும் ரிஷிகளின் மரவுரியிலிருந்து சொட்டும் நீர்க்குறிகள் இருக்கின்றன. வேட்டையாடுபவர்களது தேர்ச் சக்கரங்களின் ஓசையினுலும், வில்லை நாணேற்றும் சப்தத்தினுலும் அந்த ஆச்ரமம் ஒரு பயமற்ற இடமாய் விளங்குகிறது. இருந்தும் அங்கேயும் இயற்கை அதிக தூரத்தில் சென்று மறைந்துவிடவில்லை. ஒவ்வொரு சமயம் முரட்டுத்தனமான மரவுரியில் சுற்றப்பட்ட சகுந்தலையின் யௌவனம் தன்னைச் சுற்றியிருக்கும் பந்தனத்தை மிக எளிதில் விலக்கிவிட்டுத் தானக வெளித் தெரிகிறது. அங்கேயும் தென்றலில் அசையும் மாந்தளிர்கள் செய்யும் சமிக்ஞை எல்லா அம்சத்திலும் ஸாமவேதத்திற்கு ஏற்றது என்று சொல்ல முடியாது. புதிதாகப் புஷ்பித்திருக்கும் நவமல்லிகைக் கொடியானது தனது அருகிலிருக்கும் மாமரத்தை ஆலிங்கனம் செய்து, காதலர் கூடும் சஞ்சலத்தையே வெளிப்படுத்துகிறது.

நான்குபுறமும் புதிதாக ஏற்பட்டிருக்கும் அந்த வஸந்தருதுவின் எல்லையில்லா ஆடம்பரங்களுக்கிடையில் பர்வத ராஜகுமாரி தோன்றுகிறள். அச்சமயம் அவளுடைய அழகு அதிக

மனோகரமானது. அவள் அசோகபுஷ்பங்களால் அலங்கரிக்கப் பட்டிருக்கிறாள். இடையில் இளஞ்சூர்யனை ஒத்த வர்ண ஆடை. கேஸரமலர்களால் செய்த மேகலை அடிக்கடி நழுவிக்கொண்டிருக் கிறது. அவள் பயத்தினால் சஞ்சலமான கண்களுடன் பார்த்துக் கொண்டு, கணத்திற்குக் கணம் யௌவன லீலைகளைக் கமல புஷ்பங்களைப்போல் உதிர்த்து நிற்கின்றாள்.

மற்றொருபுறம் தேவதாரு மரத்தடியில் மேடைமேல் புலித் தோல் ஆஸனத்தின்மீது அமர்ந்து, பாம்புகளால் பிணைக்கப்பட்டு, ஜடாதாரியாய், மான்தோல் தரித்துத் தியானத்தில் கண்களை மூடிக் கொண்டு, கரைகடந்த கடல்போல், தன்னையே தன்னிடம் கண்டு கொண்டு பரமசிவன் விளங்குகிறான்.

அந்த அகால வஸந்தருதுவில், இவ்விதம் வெவ்வேறு தனிப் பட்ட இயற்கையுள்ள ஸ்திரீ புருஷர்களை ஒன்று சேர்க்கக் காம தேவன் முயன்றான்.

கண்வாச்ரமத்திலும் இதுவே நடந்தது. மரவுரி தரித்த தாபஸ குமாரி எங்கே! கடல் சூழ்ந்த இப்பூவுலகிற்கே அதிபதியான சக்கர வர்த்தி எங்கே! இவ்விதம் தேசம், காலம், பாத்திரம் எல்லாவற்றை யும் ஒரு கணத்தில் மாற்றக்கூடிய காமதேவனுடைய சக்தி எவ் வளவு என்று காண்பிப்பதே காளிதாஸருடைய நோக்கமாகும்.

ஆனால் கவிஞர் இதனுடன் நின்றுவிடவில்லை; இந்தக் காம தேவனின் சக்தியைக் காட்டுவதோடு தமது காவியத்தை முடித்துவிடவில்லை. இந்தச் சக்தியை எவ்விதம் எடுத்துக் காண் பித்திருக்கிறாரோ, அதேவிதம் மற்றொன்றும், வெல்ல முடியாதது மான ஒருசக்தியின்மூலம் பரிபூரணமான கடைசிக் கூட்டத்தை வர்ணித்துத் தமது காவியத்தைப் பூர்த்திசெய்திருக்கிறார். சுவர்க் கத்திலுள்ள தேவர்களால் தூண்டப்பட்டவனும் வஸந்தனின் மோகன சக்தியைத் தனக்குத் துணையாகக் கொண்டவனுமான அக் காமதேவனைத் தோல்வியுறுமாறுசெய்து, அவனுடைய ஸ்தானத் தில் அலங்கார ஆபரணங்களில்லாதவளும் துணையற்றவளும் தவத்தி னால் துர்ப்பலமும், துக்கத்தினால் மலினதசையையும் அடைந்தவளு மான பார்வதியை ஜயமடைந்தவளாய் ஸ்தாபித்த பின்பே கவிஞர் தமது காவியத்தை முடித்திருக்கிறார்.

---



# நீல மணி

"கும்பன்"

## 1

அன்று நவராத்திரி ஆரம்பம். ராஜராஜேசுவரதீக்ஷிதர் விடியற்காலையில் இரண்டு மணிக்கே எழுந்து விட்டார். முதல்நாள் இரவு முழுவதும் தூக்கமில்லை. அவருடைய மனத்தில் உண்டான துக்கம் அவர் முகத்தின் சோபையை உறிஞ்சிவிட்டது. "தரித்திரம்! தரித்திரம்!!" என்று எதையோ வைதுகொண்டு பெருமூச்சு விட்டார். வாஸ்தவத்தில் அவர் சாக்ஷாத் தரித்திரத்தையே வைதார். வறுமைப் பிணியை வைவதற்கு அவருக்கு வேறு சிறந்த பதம் கிடைக்கவில்லை; "இப்படியா இந்த வீடு நாசமாய்ப் போகவேண்டும்! நம்முடைய பரம்பரைக்கே ஜீவகளை தருவது நவராத்திரி பூஜை அல்லவா? அட தரித்திரமே!" மறுபடியும் பெருமூச்சு.

விடிந்துவிட்டது! இரவுதான் விடிந்தது; ராஜராஜேசுவரருடைய தரித்திரமல்ல. காலங்கண்ட தாமிரச் செம்பும், பஞ்சபாத்திரமும், வால் ஒடிந்த உத்தரணியும் தீக்ஷிதருக்கு முன்பு இருந்தன. பெயருக்கு மான்தோலென்ற ஒன்று அவருடைய ஆஸனமாக இருந்தது. அதன்மேல் இருந்த ரோமமெல்லாம் போய்விட்டன. வற்றின ஆற்றுமணலிலே அங்கும் இங்கும் இரண்டு சதுர அங்குலத்திற்கு முளைத்திருக்கும் புல்லைப் போலச் சில சில இடங்களில் மான் தோலுக்கு அடையாளமாகச் சில ரோமங்கள் இருந்தன. மாங்காய் வற்றலைப்போல ஓரங்களெல்லாம் பிய்ந்து கொஞ்ச நஞ்சம் ஒட்டிக் கொண்டிருந்தன.

ஜபம் பண்ணுகிறார் தீக்ஷிதரென்றுதான் எல்லோரும் நினைத்தார்கள். கண்ணை மூடியபடியே அவர் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். என்ன தியானம்? அவருடைய உள்ளமாகிய ஓடம் தரித்திர சாகரத்தின் கரையைக் காணமுடியாமல் தத்தளித்தது.

மணி ஒன்பது. ராஜராஜேசுவரிபூஜை ஆரம்பிக்கப்பட்டது. ஆடம்பரம் ஒன்றும் இல்லாமல் அரைமணியில் முடிந்தது. அந்தக் காலத்தில் நவராத்திரி என்றால் அவர்கள் வீடு பெரிய கோவிலாக

இருக்குமாம். ஊர்முழுவதும் பூஜையைத் தரிசிக்க வருவார்களாம். ராஜராஜேசுவருடைய பிதாமகருக்குத் தகப்பனார் அம்பிகாபதி தீக்ஷிதர் பெரிய மஹானும். ராஜாக்களெல்லாம் நவராத்திரி பூஜைக்கு வேண்டிய திரவியங்களை அனுப்புவார்களாம். ஒவ்வொரு நாளும் பிராம்மண ஸந்தர்ப்பணை நடக்குமாம். ஹூம்! இந்தப் புராணமெல்லாம் இப்பொழுது எதற்கு? இந்த நவராத்திரி, மாமுண்டியா பிள்ளை வாக்களித்த ஒரு சீப்புப் பழத்திலும் இரண்டணா கற்பூரத்திலும் நடக்கவேண்டியிருந்தது. ஐந்து சம்புடங்கள் நிறைய உள்ள சாளக்ராமாதிகளுக்கும், பத்துப்பன்னிரண்டு செப்பு விக்கிரகங்களுக்கும், இருபது செப்புத்தகடுகளுக்கும்—அவைகளை அந்தக்காலத்தில் யந்திரங்களென்று சொல்லி வந்தார்கள்—ஸ்ரீ ராஜராஜேசுவரிக்கும் இவை எம்மாத்திரம்! தீக்ஷிதருக்குத்தான் திருப்தி உண்டாகப்போகிறதா?

ஸ்ரீ ராஜராஜேசுவரி ஒரு பழைய சுண்ணந்தீற்றிய விக்கிரகம். அந்தக் காலத்தில் அந்தத் தேவிக்குத்தான் மகிமை அதிகம். தேவியினுடைய திருமேனி வண்ணங்களெல்லாம் இப்பொழுது மங்கிவிட்டாலும், திருவிழிகளிலுள்ள ஒளி மங்கவில்லை. அந்த விழிகளில் விலைவரம்பற்ற நீல மணிகள் புதைக்கப்பட்டிருந்தன. இராத்திரி வேளையில் ஒரு சிறிய விளக்கு வெளிச்சத்தில் கூட அவ்விழிகளில் உண்டாகும் ஜோதி அந்த வீட்டிற்கே பிரதிபையைத் தந்தது.

## 2

தீபாவளி நெருங்கிவிட்டது. கையில் பைசாவுக்கு வழியில்லை. கால் கஞ்சிக்குக் கொடுத்துக் கொண்டிருந்த பூமி, வெள்ளத்தால் மேடிட்டுவிட்டது. பழைய பூமியைக் காண்பதற்கு ஐந்தடி மணலை வெட்டிப் பார்க்கவேண்டும். வெட்டினால் புதையலைப்போலப் பூமியைக் காணலாம். மிச்சம் இருக்கிற புன்செய்யில் என்ன வரப்போகிறது? ராஜராஜேசுவர தீக்ஷிதர் கன்னத்தில் கையை வைத்துக்கொண்டு சிந்தையில் ஆழ்ந்திருந்தார்.

அந்த வழியே ரத்தினவியாபாரி சோடாதாஸ் சென்றார். எங்கேயோ அவசரமாகப் போகிறவர் தீக்ஷிதரைப் பார்த்து விட்டு நின்றார். "என்ன தீக்ஷிதர்? யோசனை பண்ணினீரோ?" என்று கேட்டுக்கொண்டே அருகில் வந்தார்.

தீக்ஷிதர் "அதுவா?" என்று சொல்லிக் கொண்டே மேலே பேசமுயன்றார். அவருக்கு வாக்கு வரவில்லை அவர் உள்ளத்துள் ஒரு போராட்டம் நிகழ்ந்தது. சிறிதுநேரம் சென்றது. "அந்த விக்கிரகத்தையே நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள். நீங்கள் சொல்லுகிறபடி ஏன் செய்யவேண்டும்?" என்றார் தீக்ஷிதர்.

"ஓய்! நீர் பரம்பரையைக் காப்பாற்றவேண்டாமா? விக்கிரகம் எனக்கு எதற்கு? பேசாமல் நான் சொன்னபடி செய்யும். இரண்டாயிரமென்றால் லேசான காரியமா?"

"அது சரிதான். என் மனம் என்னவோ அப்படிச் செய்யத் துணியவில்லை. தவிர, யாராவது பார்த்தாலும்—"

"யாரையா உம்மைத் தடுப்பவர்? உம்முடைய சொத்துக்கு நீர் உரியவர் அல்லவா? அந்த இரண்டுக்கும் பதிலாக வேறு வைத்து விடலாம். இன்னும் பிரகாசமான மணிகள் தருகிறேன்."

"பார்க்கிறேன்."

சோடாதாஸ் திருப்தியோடு சென்றார்.

## 3

இரவு சரியாகப் பன்னிரண்டு மணி. தீக்ஷிதர் தூங்கவில்லை. முணுக்கு முணுக்கென்று சிறிதாக எரிந்து கொண்டிருக்கும் கை விளக்கின் ஒளியில் ராஜராஜேசுவரியின் விழிமணிகளின் சோதி அலையோடிக்கொண்டிருந்தது. தீக்ஷிதருடைய மனத்திலும் எண்ண அலைகள் மேலும் கீழும் புரண்டு ஒன்றை ஒன்று அமிழ்த்தியும் எழுந்தும் குமுறிக்கொண்டிருந்தன. ஜகத்து முழுவதும் சாந்தி மயம். தீக்ஷிதர் மனத்தில் மட்டும் அந்த வஸ்துவைக் காணவில்லை.

"தேவி! நீயே கதி. பரதேவதே! க்ஷமிக்க வேண்டும்" என்றது ஓர் அலை.

"சீ தரித்திரமே! ஓடு. நீ தேவியின் அருளுக்குமுன் எம்மாத்திரம்?" என்றது அதை அழுத்திய அலை.

"மணலின் கீழே புதையுண்ட நிலத்தில் மணல்தான் கிடைக்கும். மணலைச் சமைக்கலாம்!" இது அடுத்த அலை.

"ஸரி; துணியத்தான் வேண்டும். தாயே! ரக்ஷி, ரக்ஷி, ரக்ஷி; க்ஷமி, க்ஷமி, க்ஷமி; காப்பாற்று, காப்பாற்று, காப்பாற்று." இந்த ஜபம் தீக்ஷிதரைக் கிளப்பிவிட்டது. அப்புறம் அவருடைய செய்கை மனோவேகத்தில் நிகழ்ந்தது. ஓர் ஆவேசத்தில் அவர் தாம் எண்ணிய காரியத்தை முடித்தார். தம் கந்தைத் துணியில் முடிந்து கொண்ட மணிகளோடு ஓடினார். பாதிராத்திரி என்றுகூடப் பார்க்கவில்லை.

சோடாதாஸ் வீட்டிற்குச் சென்று தடதடவென்று கதவைத் தட்டினார். உள்ளே படுத்திருந்தவர்கள் பயந்துவிட்டார்கள். அவர்களுக்குச் சமாதானம் சொல்வதற்குள் முதலாளியே வந்துவிட்டார். அவருக்கு விஷயம் விளங்கிவிட்டது. தீக்ஷிதரைக் காட்டிலும் அவருக்கு ஆயிரம் மடங்கு வேகம் உண்டாயிற்று.

"மேலே போகலாம்" என்றார் சோடாதாஸ்.

ஓரே தாவல்தான். "இதோ, உங்கள் விருப்பப்படியே செய்து விட்டேன். நான் ஏழை. எங்கள் பரம்பரைச்சொத்து இது. துணிந்து செய்துவிட்டேன். கொஞ்சம் தயை வைக்கவேண்டும்" என்று சொல்லிக்கொண்டே தம் துணியில் முடிந்திருந்த வஸ்துவைத் தீக்ஷிதர் கொடுத்தார்.

ரத்தின வியாபாரி அந்த இரண்டு மணிகளையும் எழுந்து நின்று வாங்கிக் கண்ணில் ஒற்றிக் கொண்டார்.

"தீக்ஷிதர்வாள்! ஸந்தோஷம்! நான் இரண்டாயிரமென்று சொன்னாலும், மூவாயிரம் தருவதாகவே எண்ணி வைத்திருக்கிறேன். இதோ தருகிறேன்" என்று சொல்லிப் பெட்டியைத் திறந்து மூன்று கட்டு நோட்டுக்களை எடுத்துப் போட்டார். முப்பது நூறுரூபா நோட்டுக்கள்!

கூட இரண்டு துணையாட்களோடு தீக்ஷிதர் வீட்டிற்கு விரைந்து வந்தார். அவருடைய ஹிருதயம் என்றும் இல்லாத வேகத்தில் அடித்தது. வந்து கைப்பெட்டியில் பணத்தை வைத்துப் பூட்டினார். வேகம் அடங்கவில்லை. மங்கி எரிந்த வெளிச்சத்தைத் தூண்டினார். ராஜராஜேசுவரி விக்கிரகத்தைப் பார்த்தார். அங்கே என்ன இருக்கிறது? ஜோதி போய்விட்டது! ஜீவன் மறைந்தது!

"ஹா!" என்று ஒருமுறை வீரிட்டுக் கத்தினார் தீக்ஷிதர். எல்லோரும் எழுந்து விட்டார்கள். தீக்ஷிதர் மூர்ச்சை போட்டுக் கிடக்கிறார். விசிறிக் குளிர்ந்த நீரைத் தெளித்துப் பரிகாரங்களைச் செய்து தெளிவிக்கையில் சரியாக ஸூர்யோதய காலம்; கண்ணைத் திறந்தார் தீக்ஷிதர். வாசலுக்கு நேரே உதயஸூர்யனுடைய பொன்னிறமான ஜோதியைப் பார்த்தார். திடீரென்று துள்ளி எழுந்தார்; "அதோ, அதோ! நீலம் ரத்னமாக மாறிவிட்டது" என்று ஓடினார். பாவம்! அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது!



# உயிர் அளித்த காய்

'தண்டபாணி'

---

இராஜேந்திர சோழன் தன் கொலுமண்டபத்தில் தினசரி வழக்கப்படி நியாயவிசாரணை செய்துகொண்டிருந்தான். பாணர்களும், புலவர்களும், பிரபுக்களும் அவனைச் சுற்றி அமர்ந்திருந்தனர். விசாரணை முடிந்ததும், பாணர்களெல்லோரும் அரசனைக் களிப்பிக்கப் பலவகையான பண்களைப் பாடிக்கொண்டிருந்தனர். அச்சமயம் அரண்மனைச் சேவகன் ஒருவன் மண்டபத்தினுள் நுழைந்து, கைகட்டி வணங்கி, "மகாராஜா! வெளிநாட்டிற்குச் சென்று திரும்பிய வணிகர் ஒருவர் ஏதோ அவசிய காரியமாகத் தங்களைக் காண விரும்புகிறார்" என்றான்.

மன்னன், "அழைத்து வா" என்று உத்தரவிட்டான். சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த வணிகனுடன் அரசனது கொலுவை அடைந்தான் சேவகன். வணிகனைக் கண்டதும் இராஜேந்திரன் ஆச்சரியத்துடன், "என்ன தனபால செட்டி, எப்பொழுது கடாரத்திலிருந்து திரும்பி வந்தாய்? விசேஷம் என்ன? ஏன் இத்தனை பரபரப்பு?" என்று வினவினான். அந்த வணிகன் இராஜேந்திரனுடைய இளமை நண்பன்.

தனபால செட்டி மன்னனை வணங்கி, "சக்கரவர்த்தி! பெரிய ஆபத்து ஸமாசாரம். கடாரத்து அரசன் நம்நாட்டு வியாபாரிகள் பலரை இம்சித்துச் சிறையில் வைத்துவிட்டான், நாம் வர்த்தகம் செய்து ஏதோ பொன்னும் வெள்ளியுமாக வாரிக்கொண்டு போய் விடுகிறோம் என்றெண்ணி. நானும் அவன்கையில் சிக்கி இருப்பேன். ஆனால் என் மரக்கலம் புறப்படச் சித்தமாக இருந்தது. நான் உடனே ஏறி, இந்த அக்கிரமத்திற்குப் பரிகாரம் செய்ய வேண்டுமென்று தங்களிடம் முறையிட்டுக்கொள்ள வந்தேன்; பிரபோ!" என்று மேல்மூச்சு வாங்கக் கூறி முடித்தான்.

அரசனுடைய கண்கள் சிவந்தன. அவன் வணிகனை ஓர் ஆசனத்தில் அமரச் சொல்லி மந்திரிகளை நோக்கி, "அமைச்சர்களே, நாம் இனிமேல் சும்மா இருப்பது சரியல்ல. அந்தக் கடாரத்துக் கொடுங்கோலனுக்குத் தக்க புத்தி கற்பிக்கவேண்டும். அவனைச் சிரச்சேதம் செய்து அவனுடைய நாட்டை வென்றாலொழிய

நமக்கு மன அமைதி ஏற்படாது. நாமே சீக்கிரமாகப் புறப் பட்டுக் கடாரத்திற்குச் செல்லப் போகிறோம். நம்முடைய துரக பதாதி சைனியங்களில் ஒரு பகுதி புறப்படச் சித்தமாக இருக் கட்டும்; நம்முடைய குமாரன் இளவரசன் வீரராஜேந்திரனை நாம் திரும்பி வரும்வரையில் ராஜ்ய காரியங்களைக் கவனித்துக்கொள் ளச் சொல்லிவிட்டுப் போகிறோம்'' என்றான்.

* * *

இரண்டொரு வாரங்களுக்குள் பெரிய பெரிய மரக்கலங்கள் நாகபட்டினத் துறைமுகத்தில் காத்திருந்தன. சோழன் புதிதாக ஸ்தாபித்த தலைநகரான கங்கைகொண்டசோழபுரத்தை விட்டுக் குதிரைப்படைகளும் காலாட்படைகளும் தொடர, புலிக்கொடி கம்பீரமாக முன்னே பறந்து செல்லப் புறப்பட்டு நாகபட்டினத் துறைமுகத்தை அடைந்தான். மரக்கலங்களிலும் முன்னதாகவே ஜயத்தை அறிவிப்பது போலப் புலிக்கொடிகள் பறந்துகொண் டிருந்தன. படைகளுக்கு வேண்டிய உணவுப்பொருள்களும், அவர் களுக்குச் சமைத்துப் போடத் தவசிப் பிள்ளைகளும், பணியாட்க ளும் எல்லோருக்கும் முன்னால் கப்பலில் ஏறிவிட்டனர். இராஜேந் திர சோழன் வீரியத்தில் சிறந்தவன்; ரஸிகன்; ராக நுட்பங்களை யும் சுவையையும் அனுபவித்தவன். ஆதலால் ருசிகரமான உணவு களையே விரும்புபவன். அவன் தன்னுடைய விசுவாஸத்திற்குப் பாத்திரனான பத்திரன் என்ற அரண்மனைப் பாகநிபுணனையும் கூட அழைத்துச் சென்றான். மறுதினம் நல்ல சுபமுகூர்த்தத்தில் மரக் கலங்கள் துறைமுகத்தை விட்டுப் புறப்பட்டன.

மாநக்கவாரத்துக்கு அருகில் வரும்போது ஒரு பெரும்புயல் அடிக்க ஆரம்பித்தது; விடாமல் மழை பொழிந்தது. இதனாலும், கடலின் உப்புக்காற்றுப் பட்டதாலும் அரசனுக்கென்று பிரத்தி யேகமாகக் கொண்டுவந்த நாரத்தை ஊறுகாயில்—இராஜேந்திர சோழனுக்கு உயிர்போன்ற தின்பண்டத்தில்—பாதிபாகம் கெட் டுப்போய்விடவே, பத்திரன் அந்தப் பாகத்தைக் கடலில் கொட்டி விட்டான். 'கடாரம் வரும்வரைக்கும் மிகுதியை வைத்துக் கொண்டு அரசனைத் திருப்தி செய்யலாம்; அங்கே நாரத்தங்காய் அகப்படாதா?' என்று எண்ணினான் அவன்.

* * *

நாட்டைவிட்டுப் புறப்பட்டு ஒரு மாதம் கழித்து இராஜேந் திரன் தன் சைனியத்துடன் கடாரத்தை அடைந்தான். இவர்கள் இறங்குவதற்கு முன்னரே கடாரத்து மன்னனின் சேனைகள் சண்டை செய்ய ஆயத்தமாக இருந்தன. இருதரத்தாருக்கும் இடையே கடும்போர் மூண்டது. நான்கு மாதங்கள் ஓய்வில்லா

மல் சண்டை. இருபுறமும் உயிர்ச்சேதம். சற்று ஓய்வு. மீண்டும் மும்முரமான யுத்தம். இப்படியாக ஒரு வருஷம் கழிந்தது. கடைசியில் கடாரத்தரசனுக்கும் அவன் சைனியத்திற்கும் உணவுப் பொருள்கள் வராமல் தடுத்துவிட்டனர், இராஜேந்திரனுடைய படைவீரர்கள். சீக்கிரத்தில் சோழன் வெற்றியடைந்து கடாரத்தரசனைச் சிறைபிடித்தான். தன் ஜயக்கொடியை நட்டான். சோழன் படைவீரர்கள் கடாரத்து மன்னனின் அரண்மனையிலும் உத்தியான வனத்திலும் புகுந்து துவம்ஸம் செய்தனர். ஊரெல்லாம் ஜயபேரிகையின் முழக்கம்.

வெற்றியைக் கொண்டாட, யுத்தம் முடிந்த மறுதினம் பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தான் இராஜேந்திரன். அன்றே கடாரத்து மன்னனையும் சிரச்சேதம் செய்யப் போவதாக அறிவித்துவிட்டான். சோழன் இத்தனை நாட்களாகப் போரில் ஈடுபட்டிருந்ததால் உணவில் அக்கரை கொள்ளவில்லை. அன்று தனக்கு மிகவும் பிடித்த பண்டங்களைச் சமைக்கும்படியாகப் பத்திரனுக்குக் கட்டளையிட்டிருந்தான். அறுசுவை உணவு செய்வதற்கு வேண்டிய பொருள்கள் எல்லாம் இருந்தன. ஆனால் அரசனுக்கு மிகவும் பிரியமான அந்த நாரத்தங்காய் ஊறுகாய்தான் இல்லை. என்ன செய்வது என்று தெரியவில்லை பத்திரனுக்கு. அதனால் தன் தலை போய்விடாது, அரசன் தன்மீது வெறுப்புக்கொள்ளமாட்டான் என்று சமையற்காரனுக்குத் தெரிந்திருந்தாலும், மன்னனிடத்தில் தனக்குள்ள அன்பினாலும் பக்தியினாலும் எவ்விதமாவது அவனைப் பூர்ணதிருப்தி யடையச்செய்யவேண்டும் என்று எண்ணினான்.

அன்று முழுவதும் அந்த ஊரிலுள்ள தோட்டம் காடு ஒன்று விடாமல் நாரத்தைமரம் இருக்கிறதாவென்று தேடினான். எங்கும் அகப்படவில்லை. கடைசியாகச் சாயங்காலம் ஓர் ஆசை பார்க்கலாமென்று துவம்ஸம் செய்யப்பட்ட அரண்மனை உத்தியானவனத்தில் நுழைந்தான். அங்கே ஒரு மரத்தின்கீழ் அந்நாட்டைச் சேர்ந்த ஓர் அழகிய பெண்மணி தலைவிரிகோலமாய் அழுதவண்ணம் உட்கார்ந்திருந்தாள்.

பத்திரன் அந்தத் தேசத்திற்கு வந்து சீக்கிரத்திலேயே அவர்கள் பாஷையைப் பேசப் பழகிக்கொண்டான். அந்த ஸ்திரீயை நோக்கி, "நீ யார், அம்மா? உன்னைப்பார்த்தால் உயர்குலத்தைச் சேர்ந்தவளாகத் தோன்றுகின்றதே; ஏன் அழுதுகொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான்.

அந்தப் பெண்மணியின் கண்கள் ஆச்சரியத்தினால் மலர்ந்தன. அழுகையை நிறுத்தி, "எங்கள் மொழி உங்களுக்குத் தெரியுமா?"

என்று வினவினாள். "ஆம்" என்றான் பத்திரன். பிறகு அவள், தான் கடாரத்து ராணி என்றும், தன் கணவனைச் சோழவரசன் சிரச்சேதம் செய்யப் போவதாகக் கேள்வியுற்றுத் தான் துக்கப் படுவதாகவும் தெரிவித்தாள். அப்புறம் சமையற்காரன் தான் இன்னானென்றும் தான் எதற்காக அவ்விடம் வந்தானென்றும் அவ ளிடம் தெரிவித்தான். அவள், "இதோ, இந்த மரத்தில் காய்த் திருக்கும் பழங்களையும் காய்களையும் நாங்கள் பறித்து ஊறுகாய் போடுவது வழக்கம். என் கணவருக்கு இது மிகவும் பிடித்த வஸ்து. தித்திப்பும் புளிப்பும் கலந்து மிகவும் ருசியாக இருக்கும்" என்று மேலே தொங்கும் காய்களைச் சுட்டிக்காட்டினாள். இத்தனை நேர மாக அவளோடு பேசிக்கொண்டிருந்ததால் பத்திரன் அந்த மரத் தைக் கவனிக்கவில்லை. அதைப் பார்த்ததும் அவன் கண்கள் ஆனந்தத்தினால் விரிந்தன. நாரத்தை இலைகள் போலவேதான் அதன் இலைகளும் இருந்தன; ஆனால் அதன் காய்கள் பெரிது பெரிதாக இருந்தன. கடாரத்து ராணி அவனைக் கெஞ்சும் பாவனை யாகப் பார்த்து, "தாங்கள் சோழ அரசருக்கு மிகவும் வேண்டிய வராயிருப்பீர்கள் என்று தோன்றுகிறது. என் புருஷரைச் சிரச் சேதம் செய்யவொட்டாமற் காப்பாற்றவேண்டும்" என்று அவன் காலில் விழுந்து வேண்டினாள்.

பத்திரன் மிகவும் இளகிய மனமுள்ளவன்; "சரிதான். என் னால் ஆனதைச் செய்கிறேன், அம்மா" என்று பதில் அளித்தான். பிறகு அந்த மரத்திலிருந்து நிறையக் காய்களும் பழங்களும் பறித்துக்கொண்டு சமையல் கூடாரத்தை நோக்கிச் சென்றான். வந்தவுடனே அந்தக் காய்களை நறுக்கி வதக்கி ஊறுகாய்போட்டு ருசிபார்த்தான். மிகவும் நன்றாகவும் புதுவிதமாகவும் இருந்தது.

* * *

விருந்து தினம். இராஜேந்திரன் தன் முக்கிய தளகர்த்தர் களுடன் விருந்து உண்ண அமர்ந்தான். எல்லாம் பரிமாறி ஆனதும் முதலில் நாரத்தங்காய் போன்ற, ஆனால் இன்னும் பெரி தாக இருந்த ஊறுகாய்த்தளரை எடுத்துக் கடித்தான். அதைப் போன்ற ருசியை அரசன் அதுவரையில் அனுபவித்ததில்லை. அது அறுசுவைகளும் பொருந்தியதாக இருந்தது. சமையற்காரனை அழைத்து, "என்ன இது? மிகவும் ருசியாக இருக்கிறதே! நாரத் தங்காய் ஊறுகாயா?" என்று ஆச்சரியத்துடன் வினவினான்.

சமையற்காரன் கைகட்டிய வண்ணம், "இல்லை, மகாராஜா!" என்று கூறி, ஆதியோடந்தம் முந்திய தினம் நடந்த சம்பவத்தைச் சொல்லி, "பாவம்! கடாரத்து ராணியின் பரிதாபமான வேண்டு கோளுக்கு இரங்கியாவது அந்த மன்னனைச் சிரச்சேதம் செய்யா

திருக்கும்படி வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன்'' என்று அரசனடி பணிந்தான்.

இராஜேந்திரனது மனம் இளகிவிட்டது. விருந்து முடிந்ததும் பிரதான அமைச்சனைக் கூப்பிட்டு, சிறைப்பட்ட கடாரத்து அரசனை, அவன் கைத்தளைகளை நீக்கி அழைத்து வரும்படி கட்டளையிட்டான். கொஞ்ச நேரத்தில் அம்மன்னன் இராஜேந்திரன் முன் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான். அவன் முகத்திலிருந்த பழைய திமிர் எங்கே? சோழன் அவனை விளித்து, "உன்னை விடுதலை செய்தோம்! இனி நம் நாட்டு வணிகரிடம் முன்போல் நடந்துகொள்ளாதே'' என்று கம்பீரமான குரலில் மொழிந்தான்.

தமிழ்வேந்தனின் பெருங்கருணையைக் கண்டு கடாரத்து மன்னன் உள்ள முருகி விழிநீர் பெருக்கி, "என்னுடைய பிழையை உணர்ந்தேன், ராஜாதி ராஜனே....'' என்றான். அதற்கு மேல் அவனால் பேசமுடியவில்லை. இந்த உருக்கமான காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்த அங்குள்ளவர்களின் கண்களினின்றும் இரு நீர்த்துளிகள் கீழே சிந்தின. ஒன்று, தங்கள் மன்னனுடைய பெருந்தன்மையை வியந்து சிந்தின ஆனந்தக் கண்ணீர்த் துளி; மற்றொன்று கைதி அரசனின் மீது அவர்களுக்கு உண்டான அனுதாபத்தைத் தெரிவிக்கும் நீர்த்துளி.

இராஜேந்திரன் கடாரத்தரசனை நோக்கி, "இனி உன்னை இந்தப் பிரதேசத்துக்கு நம்கீழ்ச் சிற்றரசனாக நியமித்து விடுகிறோம். நம் நாட்டு வியாபாரிகளுக்கு நீ அதிகச் சலுகை காட்டவேண்டும். வருஷந்தோறும் நமக்குக் கப்பம் கட்ட நீயோ உன் தூதனோ வரும்போது உன் உத்தியானவனத்தில் காய்த்திருக்கும் இது போன்ற (அப்பொழுது, இங்கிதத்தை அறிந்து வேலை செய்பவனான பத்திரன் மன்னனிடம் அந்தக் காய் ஒன்றைக் கொடுத்தான்) காயும் பழமும் ஒரு கப்பல் நிறையக் கொண்டுவரவேண்டும். தெரிகிறதா?'' என்றான்.

அன்று இராஜேந்திரன் மேற்பார்வையிலேயே கடாரத்தரசனுக்கு விருந்து நடந்தது.

* * *

பிறகு சோழன் சுற்றிலுமுள்ள ஸ்ரீவிஜயம், இலங்காசோகம், இலாமுரிதேசம், மாப்பப்பாளம், மாயிருடிங்கம், மேவிலிம்பங்கம், வளைப்பந்தூறு முதலிய (வாயைப் பிளக்கும் உச்சரிப்புகளையுடைய) இடங்களுக்கு விஜயம் செய்து சிரமமில்லாமல் தன் வெற்றிக் கொடியை நாட்டிவிட்டுத் தன் பரிவாரங்களுடனும் பின்னும் இரண்டு மரக்கலங்கள் நிறைய அந்தக் காய்கள் பழங்கள் இவற்றுடனும் தன் நாடு திரும்பினான்.

அவன் திரும்பிவந்த தினத்தன்று நாகபட்டினத் துறைமுகத்திற்கு வேடிக்கை பார்க்க வந்தவர்கள், மரக்கலங்களிலிருந்து வண்டி வண்டியாக நாரத்தை போன்ற பெரிய பெரிய காய்கள் இறங்குவதைக் கண்டு பிரமிக்காதிருந்திருக்கமாட்டார்கள்!

*　　　*　　　*

இராஜேந்திரனுடைய அந்தப்புரத்தில்: வெகு நாட்களாகப் பிரிந்திருந்த இராஜேந்திரனும் அவன் ராணியும் கூடினர். இராஜேந்திரன் அவளுக்கு எல்லா ஸமாசாரங்களையும் விவரமாகச் சொல்லிக்கொண்டிருந்தான். ராணி, "எனக்கென்று ஏதாவது கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்று ஆவலுடன் கேட்டாள்.

"சற்றுப் பொறு" என்றான் அரசன்.

அதேசமயம் பத்திரன் ஒரு தட்டு நிறைய அந்தக் காய்களையும் பழங்களையும் எடுத்து வந்து ராணியருகில் வைத்தான். அவள் ஆச்சரியத்துடன், "இது என்ன கனி?" என்று வினவினாள்.

"மகாராணி! இதுதான் கடாரத்துக் காய். இந்தக் காயால்தான் உம்மைப் போன்ற ஒரு கற்புக்கரசியின் புருஷன் உயிர் மீண்டது. இதனால்தான் ஒரு கொடுங்கோலனின் குற்றத்தைக் கூடப் பொறுத்தருளினர் பெருந்தன்மை படைத்த நமது சக்கரவர்த்தி" என்று தன்னைப் பற்றிப் பெருமையொன்றும் அடித்துக்கொள்ளாமலே மிகவும் பணிவுடன் கூறினான் பத்திரன்.



# கபோதி

ந. பிச்சமூர்த்தி

---

உணர்ச்சியைக் குதிரையாகக் கொண்டு நாட்களை ஓட்டு வோருக்குப் பல விபத்துகளும் துன்பங்களும் எதிர்ப்படும். அறிவும் சிறுநலமும் சாலைமரத்து நிழல்கள்போல அடுத்தடுத்துக் குறுக் கிட்டுத் திகைப்பை விளைவிக்கும்.

சிவநாத சர்மா அந்த நிலையில் இருந்தார். மனசிலே பெருத்த குழப்பம். இரண்டாம் கட்டை நோக்கிக்கொண்டு முற்றத்தின் ஓரத்தில் உட்கார்ந்திருந்தார். அவர் அந்த வீட்டின் சொந்தக் காரர்.

இரண்டாம் கட்டிலிருந்து ஸேதுஸ்வாமி பிடரியைத் தடவிக்கொண்டே முன் கட்டிற்கு வந்தான். அவன் அந்த வீட்டில் குடியிருப்பவன். சர்மாவண்டை வந்ததும் ஓர் உள்ளங் கையை மற்றோர் உள்ளங்கையோடு தேய்த்துக் கொண்டே பேச ஆரம்பித்தான், தன் சங்கற்பத்தைத் தெரிவித்து விடுவதென்று:

"நாளைப்போக மறுநாள் ஜாகை மாத்தலாம்னு இருக்கேன்."

சிவநாத சர்மாவின் காதில் அந்தப் பேச்சு விழாமல் இருந் திருக்கமுடியாது. ஆனால் மனசு அதை வாங்காததால் அது வெறும் ஓசையாகவே நின்றுவிட்டது. இருந்தாலும் மனிதர்களுக்குள் ஒரு மரியாதை இருக்கிறதல்லவா?—பேசுபவர் என்ன சொல்லு கிறார் என்று புரியாவிட்டாலும் ஏதோ ஒரு பதில் சொல்ல வேண்டுமென்று. சிவநாத சர்மா பதில் சொன்னார்.

"இனிமேல் என்ன பண்றதுன்னு தெரியல்லே."

ஸேதுஸ்வாமி ஒன்றும் புரியாமல், "எதுக்கு?" என்றான்.

"இந்தக் குட்டி இருக்கிறாளோ இல்லியோ? அவளுக்காகத் தான்."

"அவளுக்கா? வாஸ்தவமா இவ்வளவு பணக்காரர்களும், ஆஸ்திகர்களும் நிறைஞ்ச ஊரிலே இந்தப் பொட்டைப் பொண்ணை வச்சுக்கிண்டு நீங்க தவிக்கிற தவிப்பைப் பார்த்தா ரொம்பப் பரிதாபமாயிருக்கு."

"என்னபண்றது? பொண்ணோ ரெண்டுகண்ணும் பொட்டை. அப்பா அம்மா இல்லே. இவ பாட்டி ஒத்தி இருந்தா. அவளும் இந்த வீட்டுக்குக் குடிவந்த ரெண்டு மாசத்துக்கெல்லாம் போயிட்டா. இவாளைக் குடிவச்சிக்கிண்டதற்குப் பலன் இவ பாட்டிபோனப்பறம் இந்தப் பொட்டையைக் காப்பாத்தற பாரம் என்தலையிலே விழுந்திருக்கு. நல்லமனசு படைச்சிருந்தா அதுக்கு தண்டனை உண்டு போலிருக்கு."

தான் ஆரம்பித்த பேச்சைத் துவக்க இடைவெளி ஏற்பட்டதாக நினைத்துக்கொண்டு மறுபடியும் ஆரம்பித்தான் ஸேதுஸ்வாமி.

"நல்ல மனசு படைச்சிருந்தால் நல்ல தண்டனை உண்டு. நான் கூட நாளைப்போக மறுநாள்......"

"ஏன்? ஊரிலேயும் அதான் சொல்றா. ஒரு நாளா ரெண்டு நாளா, ஒரு வருஷமா இரண்டு வருஷமா, ஜன்மம் பூறவும் இந்தப் பொண்ணுக்குச் சாப்பாட்டுக்கு வழிசெய்யறதுன்னு யாராலே முடியுங்கறா?"

"ஆனால் எனக்கொண்ணு தெரியறது: ஓங்களைப்போல ஈரமிருக்கிறவாளைப் பாக்கறப்போத்தான் சுவாமி ஒத்தர் இருக்கலாம்னு தோண்றது."

"இதிலே இன்னொரு தமாஷ் என்ன தெரியுமா? அந்தப் பொண்ணுக்குச் சாப்பாட்டுக்குக்கூட ஏற்பாடு பண்ணிடுவாளாம். ஆனால் அவளுக்கு இப்பவே பனிரெண்டு வயசாச்சே, கல்யாணத்துக்கு என்ன பண்றதுன்னு யோசிக்கிறப்பொ தான் ஒண்ணுமே தோணுமே போறதாம்."

"ஒரு சத்திரம் சாவடிக்கு எழுதிவைக்கறது, ஒரு அம்மனுக்கு வைர அட்டிகை இழச்சுப் போடறது, இந்த தர்மத்தையெல்லாம்விட இந்தப்பொட்டை அனாதையைக் காப்பாத்த ஒரு ஏற்பாடு பண்ணினால் அவாளுக்குக் கோடி புண்யமுண்டு. இதையெல்லாம் விட்டுட்டு ஸநாதனம்னு வெறுமனே கூச்சல் போடறான்களே."

"நீங்க சொல்றது ரொம்ப நியாயம். ஆனால் நம்ப தேசத்து ஜனங்களுக்குத்தான் நெஞ்சு காஞ்சு தீஞ்சுச் சரகாப்போயிட்டுதே. இல்லாத போனால் இந்த தேசம் இப்படிப் படுகிடையாய்க் கிடக்குமா? ஒரு பணக்கார ஆஸ்திகன் ஒண்டியாய் இந்தப் பொண்ணை ஸவரக்ஷிக்கப்படாதா? இன்னிக்கி ஒரு பணக்கார ஸநாதனி பொறுப்பைத்தட்டிக் கழிக்கிறதற்காக ஒரு போக்குக் காட்டினார். அப்படியே செஞ்சால் என்னன்னு பார்க்கிறேன். கிறிஸ்தவப் பாதிரிகிட்டே சேர்த்தூடலாம்னார். நல்ல யோசனைதான். பொண்

பொழைச்சுப்போயிடும். எனக்கும் இந்த ஊரெல்லாம் சுத்தி இந்தப் பொண்ணின் சாப்பாட்டுக்காக மூணு நாலு வசூல் பண்ற தொல்லேயும் விட்டுப்போகும்.''

''ஒரு வார்த்தை சொல்றேன். என்ன கஷ்டமிருந்தாலும் கிறிஸ்தவ மதத்திலே சேரவிட்டோதிங்கோ. என்ன அந்தரங்க சுத்தியாக் காரியம்செஞ்சாலும் நாலுபேர் நாலுதினுசாச் சொல்லத்தான் சொல்லுவான்கள். அதுக்காகப் பின்வாங்கப்படாது. உலகம் பலவிதமோ இல்லியோ?....நான்வந்து...நாளேப்போக மறுநாள்....''

சிவநாத சர்மா மனசிலே அந்தக் கடைசிவார்த்தைகள் விழவே மறுத்தன. மனத்தின் குழப்பம் நிலேகொள்ள அலேயும் ஸ்திதியில் தம் எண்ணங்களேயெல்லாம் வாரி மேலே கொட்டிக் கொண்டே போனர்.

''அதுக்காக எல்லாம் நான் பயப்படல்லே. இப்பொ எல்லாம் வரவர மாசாமாசம் அந்தப் பொண்ணின் சாப்பாட்டுச் செலவுக்குக்கூட வசூல் ஆகறதில்லே. நானே வெறும் தரித்திரன். நீங்க குடுக்கறேளே மாசம் மூணு ரூபாய் வாடகை; அதையும் என் கடைச்சம்பளம் பத்து ரூபாயையும் வச்சுக்கிண்டு காலத்தைக் கடத்தறேன். ஒடம்பாலே நானும் என் ஆம்படையாளும் இந்தப் பொண்ணுக்காக ஒழைக்கலாம். மேலே என்ன பண்ண முடியும்?''

''அப்பொ என்ன முடிவு?''

''எங்கேயோ ஒரு அனுதாச்ரமம் மாளவியா ஏற்படுத்தி இருக்கிருராம். அவாளுக்கு எழுதிப்போட்டிருக்கேன். இந்த ராஜதானியிலே இனுமா ஒரு பொட்டையை வச்சு ரக்ஷிக்கறதற்கு ஒரு ஸ்தாபனமும் இல்லே பாருங்கோ? அது பலிச்சால் உண்டு; இல்லாதபோனு சிவனேன்னு கிறிஸ்தவப் பாதிரி கிட்டே ஒப்படைச்சூடப்போறேன்.''

தன் தீர்மானத்தைத் திரும்ப வெளியிடக் கூடிய சந்தர்ப்பம் அதுவே என்று நினேத்தான் ஸேதுஸ்வாமி.

''ஆமாம், ஆமாம். இவ்வளவு கஷ்டப்பட்டுக்கொண்டு ஒரு நல்ல காரியத்தைக்கூட எத்தனேநாள் தான் செய்யமுடியும்?.... நான்கூட நாளேப்போக மறுநாள் ஜாகை மாத்தலாம்னு இருக்கேன்.''

பேச்சின் கடைசிப் பாகத்தைக் கேட்டுக்கொண்டே பொட்டைப்பெண் நண்டைப்போன்று நகர்ந்து வந்ததை அவர்கள் இருவரும் பார்க்கவில்லே. அவர்கள் கிட்டத்தில் வந்ததும், ''மாமா, தப்பு செஞ்சிருக்கேன். ஆனு வேணும்னு செய்யல்லே, மாமா''

என்று அவள் ஆரம்பித்ததும் ஸேதுஸ்வாமி கொஞ்சம் திடுக் கிட்டுப் போனான்.

"மாமா, ரெண்டு மூணு நாளா ராத்திரி எழுந்து கொல்லைப் பக்கம்போனேன். அத்தையை எழுப்பாமெ நான்மாத்திரம் போனேன். கொல்லைத்தாப்பாளைத் திறக்கமுடியல்லே. யாரைக் கூப்பிடறதுன்னுட்டு இருந்தூட்டேன். அப்பறம் முந்தாநாள் மத்யானம் வேறே ஒரு பிசகு செஞ்சுப்பிட்டேன். இரண்டாம் கட்டு முத்தத்திலே வழியிலே ஒரு பொம்மை கடந்திருக்காப்போல இருக்கு; அவா குழந்தையினுடையது. நடந்துபோறப்போ தெரியாமே மிதுச்சுப்பிட்டேன். அது பொதக்கின்னு நசுங்கிப்போச்சு. அதுக்குப் பேர் செல்லுலாயிட் பொம்மைங்கறு...."

ஸேதுஸ்வாமி திருடனைப்போல் விழித்தான். கண் இல்லாத குழந்தை அவன் கள்ளத்தனத்தை உடைத்துக் காட்டி விட்டாளல்லவா?

"அசடு ஒளறது; அதெல்லாம் ஒண்ணும் காரணமில்லே.... எங்களுக்கு இடம் கொஞ்சம் கிகடமாயிருக்கு; அதான்."

அதற்குச் சிவநாத சர்மா பதில் சொல்ல ஆரம்பிப்பதற்குள் வீட்டிற்குள் பெருங்காயக் கடைச் சேட்டும் வேறு ஒரு வடக்கத்தியாரும் வந்து சேர்ந்தார்கள். இருவருக்கும் கை சேர்த்து நமஸ்கரித்துவிட்டுச் சேட்டை எதிர் நோக்கி நின்றார் சர்மா.

"இவருதான் அந்த அனாதாச்ரமத்திலேயிருந்து இன்கி வந்திருக்கிறுங்க. உங்க கடுதாசெல்லாம் காம்பிச்சாரு. நான் அல்லாம் அவருக்குச் சொல்லிப்போட்டேன். பொண்ணெ அழச்சுக்கினு போய் பந்தோபஸ்தா பாத்துக்குவாரு" என்றார் சேட்.

சிவநாத சர்மாவுக்கு ஓர் ஆறுதல். கிறிஸ்தவப் பாதிரியிடம் இனிப் போக வேண்டாமல்லவா?

"என்ன குழந்தே, அவர் கூடப் போறயா?" என்றார்.

பெண் சேட் பேசிய ஓசையின் மூலம் அந்தத்திக்கை நிதானம் செய்துகொண்டு அவர்களைப் பார்த்துத் திரும்பினாள். பாப்பா தெரியாத, கறுப்பே இல்லாத இரு விழிகள்! ஒரு நிமிஷம் ஏதோ யோசனை. பிறகு, "போறேன் மாமா" என்றாள்.

மரத்தின் ஆணிவேரை அறுத்தது போன்ற ஓர் உணர்ச்சி பிறந்தது அந்த வார்த்தையின் விளைவாய். சர்மா தம் மனநெகிழ்ச்சியை மறைக்க முயன்றார்.

சேட் எல்லோருக்கும் தைரியம் சொன்னார்: "ரொம்ப ரொம்ப நல்லா அங்கே பாத்துக்குவாங்க. இதிலே அவங்களுக்கெல்லாம்

இருக்கிற சிரத்தா பக்தி நமக்கு ஸ்வாமி கிட்டேகூட இருக்காது. இதைத்தான் அவங்க அகண்ட பூஜை என்றுங்கோ."

"நான் இனிமே என்ன பண்ணணும்?" என்றூர் சர்மா தம் மார்பை அமுக்கிக்கொண்டு.

"பொண்ணெ அனுப்பிக்க ஸம்மதம்னு நீங்க அவர்கிட்டெ ஒரு கடுதாசி எழுதிக் குடுங்கோ. அவர் கொளந்தையை அழச்சிக் கிண்டு போறேன் இன்னு உங்களுக்கு ஒரு கடுதாசி தருவார். அவ்வளவு தான்."

"என்ன குழந்தே, போறயா?" என்று இரண்டாம் தரம் கேட்டார் சர்மா.

"எவ்வளவு நாள்தான் ஒங்களே யெல்லாம் கஷ்டப்படுத்திக் கிண்டு இருக்கிறது....போறேன் மாமா."

அரை மனதோடு சர்மா கடிதத்தை எழுதிப் பூர்த்திசெய்தார். வந்தவரும் எதிர் நடையை எழுதி முடித்தார். சர்மாவுக்குத் திடீ ரென்று இரண்டு கடுதாசியிலும் சாட்சி வாங்கவேண்டுமென்று தோன்றிற்று. சேட் சாட்சி போட்டார்.

"ஸேதுஸ்வாமி, நீயும் சாட்சி போடேன்" என்றூர் சர்மா.

சர்மா எவ்வித மறைமுகமான எண்ணமுமில்லாமல் சாட்சி போடச் சொன்னர். ஆனல் ஏனே ஸேதுஸ்வாமியின் நெஞ்சிலே அது ஒரு முள்ளாய்த் தைத்தது. அதற்காக அவர் தயங்கவுமில்லை. இரண்டு கடிதத்திலும் சாட்சி போட்டார். பிறகு சர்மாவும் வந்த வரும் ஆளுக்கொரு கடிதத்தை எடுத்துக்கொண்டார்கள்.

"அவ்வளவுதானே? எப்போ அழைச்சுக்கிண்டு போகணும், சேட்ஜீ?"

"இப்பவே. அவரு ராத்திரி ஊருக்குப் போருரு."

மனது அலைபடாதவரைப் போல் சர்மா உள்ளே போய் இரண்டு பாவாடைகளையும் கிழிந்த சட்டை ஒன்றையும் சுருட்டிக் கொண்டுவந்து பெண் அருகில் வைத்தார்.

"ஏன் மாமா? அந்தக் கிழிஞ்ச சட்டையைக்கூட வச்சிருக் கேளா?"

"ஆஹா."

"ஏன்? மாமா, என்னை அழைச்சிக்கிண்டு போறவருக்குத் தமிழ் தெரியுமோ?"

"அவருக்குத் தெரிஞ்சிருக்காது."

இதற்குள் சேட்டும் மற்றவரும் எழுந்து விட்டார்கள். அந்த விஷயத்தை அந்தப் பெண் ஊகித்தறிந்துவிட்ட போதிலும்

இடத்தை விட்டு அவளால் எழுந்திருக்க முடியவில்லை. நெஞ்சிலே அவ்வளவு பெரிய சுமை. ஆனால் சர்மா அதை ஊகிக்கவில்லை.

"என்ன குழந்தே! அவாள் எழுந்திருந்துட்டாளே போக. நீ போறயோ?"

"போறேன் மாமா" என்று எழுந்திருந்தாள். திரும்பக் குனிந்து பாவாடையை எடுத்தாள். இரண்டு துளி கண்ணீர் தரையில் விழுந்தது.

அதை நான்குபேரும் பார்த்துவிட்டார்கள். "சேட்ஜீ! அந்தக் கடுதாசைக் கிழிச்சூடச் சொல்லுங்கோ; நான் அனுப்பல்லே."

"நான் கிளம்பிட்டேன், மாமா" என்றாள் குழந்தை, கண்ணைத் துடைத்துப் பாவாடையைச் சீர்செய்துகொண்டு. "குழந்தே! உன் வாய் போறேன்னு சொல்றது; மனசு சொல்லலே" என்று சொல்லிக்கொண்டே கடுதாசைக் கிழித்தெறிந்தார் சர்மா.

சேட் விடை பெற்றுக்கொண்டு, "என்ன குழந்தே! நாங்க போகட்டுமா?" என்றார். குழந்தை ஒலிவந்த திக்கை நோக்கினாளே யொழியப் பதில் சொல்லவில்லை.

இருவரும் போய்விடவே சர்மாவின் மனதிலே ஏதோ பொங்கிற்று. பெண்ணை அணைத்து அவள் தலைமயிரைத் தடவினார். அவ்வுணர்ச்சி தணிந்தது.

"ஜாகை மாத்தறதுன்னு சொன்னேன் பாருங்கோ. அதை அப்பறம் பாத்துக்கலாம்னு விட்டுட்டேன்" என்றார் ஸேதுஸ்வாமி காதைத் தடவிக்கொண்டே.

"செய்யுங்கோ."





# மாயா விநோதினி

## ஸ்ரீ ரவீந்த்ரநாத் டாகுர்

[ஆசிரியர் அனுமதியுடன் ஸ்ரீமதி தஞ்சைநாயகி அம்மாள் மொழிபெயர்த்தது.]

---

### முதல் அத்தியாயம்

ஒரு நாள் விநோதினியின் அன்னை ஹரிமதி மஹேந்திரனின் அன்னை ராஜலக்ஷ்மியிடம் குசலப் பிரச்னம் செய்துகொண்டு வந்து உட்கார்ந்தாள். இருவரும் ஒரே கிராமத்தில் பிறந்தவர்கள்; இளமையிலிருந்தே தோழிகள்.

மறுதினம் ராஜலக்ஷ்மி மஹேந்திரனிடம் பெரிய பூர்வ பீடிகையுடன், "மஹேன், எப்படியாவது ஏழைகளின் மானத்தைக் காப்பாற்றவேண்டும். பெண் மிகவும் அழகுடையவள்; இங்கிலீஷிலும் தேர்ச்சிபெற்றவள் என்று கேள்விப்பட்டேன். தற்கால நாகரிகப் போக்குக்கு ஏற்றபடியே பெண்ணும் வாய்த்திருக்கிறாள்" என்று சொன்னாள்.

மஹேந்: அம்மா, தற்கால யுவர்கள் என்னைத் தவிர எத்தனையோ பேர் இருக்கின்றனர்.

ராஜலக்ஷ்மி: மஹேன், இதுதான் உனது கெட்ட குணம். உன் எதிரில் விவாகப் பேச்சை எடுப்பதே கஷ்டமாயிருக்கிறது.

மஹேந்: அம்மா, இதை விட்டால் உலகத்தில் பேச வேறு விஷயமே கிடையாதா? அது எப்படி எனது கெட்ட குணமாகும்?

மஹேந்திரனின் தகப்பனார் சிறு வயதிலேயே இறந்துவிட்டார். தாயின் செல்வப் பிள்ளையாய் மஹேந்திரன் வளர்ந்தான். இப்போது அவனுக்கு வயது இருபத்திரண்டு. எம். ஏ. பரீக்ஷையில் தேர்ச்சிபெற்று, டாக்டர் வேலைக்குப் படித்துக்கொண்டிருந்தான். ஆனால் இப்பொழுதும் சிறு குழந்தைபோல் தாயிடம் கோபித்துக் கொள்ளுவது, பிடிவாதம் செய்வது, சுயேச்சையாய்

நடப்பது முதலிய குணங்களை அவன் விடவில்லை. கங்காரு என்னும் பிராணி தனது கர்ப்பத்திலிருந்து குழந்தை வெளியில் வந்துவிட்ட போதிலும் அதை எப்படிக் கீழே விடாது வயிற்றி லேயே சதா கட்டிக்கொண்டு திரியுமோ அதுபோல் எவ்வளவு வயதான போதிலும் தனது ஒவ்வொரு காரியத்திற்கும் தாயைத் தொத்திக் கொண்டிருப்பதே மஹேந்திரனுக்கு வழக்கமாகி விட்டது. குளிப்பது, சாப்பிடுவது, படுப்பது முதலிய யாவும் ராஜலக்ஷ்மியின் உதவியின்றி நடைபெறுவதில்லை.

விநோதினியைக் கலியாணம் செய்துகொள்ளும்படி ராஜ லக்ஷ்மி மிகவும் வற்புறுத்தவே மஹேந்திரனும் பெண்ணை ஒரு நாள் பார்த்துவர ஒப்புக்கொண்டான்.

பார்க்க நிச்சயித்திருந்த நாள் வந்ததும் அவன், "அம்மா, பெண்ணைப் பார்த்துத்தான் என்ன ஆகவேண்டும்? உன்னைத் திருப்திசெய்யத்தானே நான் கலியாணமே செய்துகொள்கிறேன்? பின் அதனால் வரும் நன்மை தீமையைப்பற்றி யோசிப்பது வீண்" என்றான்.

அவன் குரலில் கோபமும் விரக்தியும் கலந்திருப்பதைத் தாய் அறிந்துகொண்டபோதிலும், பெண்ணைப் பார்த்தால் அவன் நிச்சயம் விவாகத்திற்குச் சம்மதிப்பான், அவனது மனமும் மாறும் என்று நினைத்து அவள் தன்னைச் சமாதானம் செய்துகொண்டாள்.

இந்த நம்பிக்கையின் பேரில் பெண் வீட்டாருக்குச் சம்மதம் தெரிவிக்கப்பட்டது. விவாகத்திற்கு நாளும் நிச்சயிக்கப்பட்டது. கலியாண நாள் நெருங்க நெருங்க மஹேந்திரனின் மனத்தில் ஓர் எண்ணம் உதிக்கலாயிற்று. கடைசியில் கலியாணத்திற்கு இரண் டொரு நாள் இருக்கும்போது அவன் தாயிடம், "அம்மா, என்னால் விவாகம் செய்துகொள்ள முடியவே முடியாது" என்று சொல்லி விட்டான்.

சிறு வயதிலிருந்தே அவனுக்கு வாழ்க்கையில் எல்லாவித மான ஸம்பத்தும் குறைவின்றி நிறைந்து இருந்தது. அவன் சுயேச் சையாக வளர்ந்தவன். பிறருக்கு அடங்கி நடக்கும் சுபாவம் உள் ளவனல்லன். தன் இஷ்டத்திற்கு விரோதமாகப் பிறர் தன்னை விவாகம் செய்துகொள்ளும்படி வேண்ட, தான் சம்மதிப்பதா வென்னும் அகங்காரத்தில், கடைசியில் கலியாணமே வேண்டா மென்று மறுத்துவிட்டான்.

விஹாரி மஹேந்திரனின் ஆப்த நண்பன். அவன் மஹேந் திரனைத் தன் உடன்பிறந்த சகோதரன்போலவும், ராஜலக்ஷ்மியைத் தன் தாயாகவும் கருதிப் போற்றி வந்தான். மஹேந்திரனுக்கு

எல்லாவிதத்திலும் அவன் உதவியாக இருந்ததால் ராஜலக்ஷ்மியும் விஹாரியினிடம் பிரியமாகவே இருந்துவந்தாள். அவள் அவனிடம், "அப்பா, இப்பொழுது உன்னால்தான் காரியம் நடக்க வேண்டும். இல்லாவிட்டால் அந்த ஏழைப்பெண்ணின் கதி—" என்பதற்குள் விஹாரி கைகூப்பி, "அம்மா! இந்தக் காரியம் மட்டும் என்னால் பண்ணமுடியாது. சிறுவயதில் மஹேந்திரனுக்குப்பிடிக்காமல் எறிந்துவிட்ட மிட்டாய்களை நீங்கள் எனக்குக் கொடுத்துச் சாப்பிடச் சொல்வதுண்டு. நானும் மறுக்காமல் தின்பதுண்டு. ஆனால் அதுபோல் அவன் மாட்டேனென்று மறுத்த கன்னிகையை நான் கலியாணம் செய்துகொள்ளுவதென்பது முடியாத காரியம்" என்றான்.

ராஜலக்ஷ்மியும் மனத்திற்குள், 'விஹாரி விவாகம் எங்கே செய்துகொள்ளப் போகிறான்? பாவம்! மஹேந்திரனின் நட்பைத் தவிர வேறு நட்பு அறியாதவன். கலியாணம் செய்துகொண்டு மனைவி வீட்டிற்கு வரவேண்டுமென்ற கவலையே இவனுக்கு இல்லை' என்று எண்ணி அவனிடம் முன்னிலும் வாஞ்சையுடன் இருக்கலானாள்.

விநோதினியின் தந்தையார் பணக்காரரல்ல. இருந்தாலும் தம் ஒரே புத்திரிக்கு ஒரு மிஷனரி மாதை அமர்த்தி, படிப்பு, தையல் முதலியன நன்கு கற்பித்திருந்தார். பெண்ணிற்கு வயதாகி வந்த போதிலும் கலியாணத்தைப்பற்றிச் சிந்திக்காமலே இருந்து கடைசியில் திடீரென்று இறந்துவிட்டார். பெண்ணுக்குத் தகுந்த வரன் தேடும் பாரம் விதவையான தாயின் தலையில் விழுந்தது. பெண்ணோ பெரியவளாகிவிட்டாள். கையிலோ பணமில்லை.

ராஜலக்ஷ்மி அப்பெண்ணின் ஸ்திதியைக் கண்டு மனமிரங்கினாள். மஹேந்திரன் விஹாரி இருவரும் மறுத்துவிடவே, கடைசியில் தன் பெரியப்பாவின் பிள்ளை ஒருவனுக்கு அப்பெண்ணைக் கொடுத்து மணம் செய்வித்தாள்.

விநோதினியின் துரதிருஷ்டம், சில நாட்களுக்கெல்லாம் அவள் கணவன் இறந்தான். அவள் விதவையானாள். இந்தச் செய்தியைக் கேட்டதும் மஹேந்திரன் தன் தாயிடம் வேடிக்கையாக, "நல்ல வேளை; நான் அவளைக் கலியாணம் செய்துகொள்ளாமல் தப்பினேன். செய்து கொண்டிருந்தால் நான் இன்று இவ்வுலகத்தில் இருந்திருக்கமாட்டேன்" என்று சொன்னான்.

இச்சம்பவம் நடந்து மூன்று வருஷங்கள் ஆகிவிட்டன. ஒரு நாள் தாயும் மகனும் பின்வருமாறு சம்பாஷித்துக் கொண்டிருந்தனர்:

ராஜலக்ஷ்மி: மஹேன், ஜனங்கள் என்னைத்தான் நிந்திக்கிறார்கள்.

மஹேந்: ஏன் அம்மா? நீ யாரை, என்ன கெடுத்தாய்?

ராஜலக்ஷ்மி: நாட்டுப்பெண் வந்துவிட்டால் பிள்ளை தன் வசத்தில் இருக்கமாட்டானென்று பயந்துதான் இன்னும் உனக்கு விவாகம் செய்துவைக்கவில்லை யென்று எல்லோரும் என்னை ஏசுகிறார்கள்.

மஹேந்: உனக்கு அப்படிப் பயமிருக்குமானால் அது நியாயந்தான். நான் மாத்திரம் தாயாக இருந்தால் நான் உயிருடனிருக்கும் வரையில் என் பிள்ளைக்குக் கலியாணமே பண்ணிவைக்க மாட்டேன். ஊரார் பேச்சை நாம் ஏன் பொருட்படுத்த வேண்டும்?

ராஜலக்ஷ்மி: (சிரித்துக்கொண்டு) நன்றாயிருக்கிறது! பிள்ளையின் பேச்சைக் கேட்டாயோடி, அம்மா!

மஹேந்: ஆமாம்; நாட்டுப்பெண் வந்து பிள்ளையை வசப்படுத்திக்கொண்டு விடுவது, பத்துமாதம் சுமந்தெடுத்துப் பெற்று அன்புடன் வளர்த்த தாய் அன்னியளாகி விடுவது, தாயையும் மகனையும் வேற்றுமைப்படுத்தி மூன்றுமவள் ஒருத்தி வருவது: அம்மா, இதெல்லாம் ஒருவேளை உனக்குப் பிடித்திருக்கலாம்; ஆனால் என் மனம் ஒப்பவில்லை.

அவனுடைய பேச்சைக்கேட்டு ராஜலக்ஷ்மி பூரித்துப்போனாள். தன் ஓரகத்தியிடம், "கேட்டாயோ மஹேந்திரன் சொல்வதை? விவாகம் செய்துகொண்டால் தாயிடமிருந்து பிரிய நேரிடுமே என்பதற்காக அவன் விவாகம் செய்து கொள்ளவில்லையாம்! இந்த விசித்திரம் எங்கேயாவது உண்டோ?" என்றாள்.

மஹேந்திரனின் பெரியம்மாவாகிய அன்னபூரணி அவனிடம், "அப்பா, இது நீ அறியாமையினால் சொல்வது. வயதுக்கேற்ற பேச்சும் எண்ணமுந்தான் அறிவுடைமை. இது தாயின் மடியில் உட்கார்ந்து விளையாடும் வயதல்ல. வீட்டை நிர்வகிக்க வேண்டிய வயது. இப்படிக் குழந்தையைப்போல் நீ பேசுவதைக் கேட்க எனக்கு வெட்கமாயிருக்கிறது, அப்பா" என்றாள்.

ஓரகத்தியின் பேச்சு ராஜலக்ஷ்மியின் மனத்தில் சுறுக்கென்று தைத்தது. அவை நியாயமா யிருக்கலாம்; ஆனால் அவள் செவிக்கு இனிமையாக இருக்கவில்லை. அவள் அன்னபூரணியிடம், "அக்கா, என் பிள்ளை ஊரார் பிள்ளைகளைக் காட்டிலும் தாயிடம் அதிக அன்புடன் இருக்கிறான். அதனால் உனக்கென்ன வெட்கம்? உன் சொந்தக் குழந்தையா யிருந்தால் அன்பின் அருமை உனக்குத் தெரியும்!" என்று குத்திச் சொன்னாள்.

அன்ன: நீ விவாகப் பேச்சை எடுத்ததனால் நான் இவ்வளவா வது சொன்னேன். இல்லாவிடில் எனக்கு இதைப்பற்றிப் பேச அதிகாரம் என்ன இருக்கிறது?

ராஜலக்ஷ்மி: என் பிள்ளை கலியாணம் செய்துகொள்ளவில்லை யென்றால் உனக்கு ஏன் இவ்வளவு பொறாமை? ஏதோ இவ்வளவு காலமும் அவனுக்கு நான்தானே சுசுருஷை செய்து வளர்த்தேன். அப்படியே இன்னமும் செய்கிறேன். இதற்காக எனக்கு வேறு யாருடைய உதவியும் தேவையில்லை.

அன்னபூரணியின் கண்களில் நீர் துளித்தது. பேசாது அங் கிருந்து எழுந்து போய்விட்டாள். இதனால் மஹேந்திரனின் மனம் சஞ்சலம் அடைந்தது. அன்று அவன் காலேஜிலிருந்து சீக்கிரமே திரும்பிவிட்டான். வந்ததும் நேராகத் தன் பெரியம்மாவின் அறைக்குள் போனான். பெரியம்மா எது சொன்னபோதிலும் தன்மேலுள்ள அன்பினால்தான் சொல்வாளென்பது அவனுக்கு நன்றாய்த் தெரியும். அவளுடைய தங்கை பெண் ஒருத்தி தாய் தந்தையற்று இருந்தாள். அவளை மஹேந்திரனுக்கு மணம் செய் வித்துத் தன்வீட்டில் சுகமாக இருக்கப் பார்க்கவேண்டுமென்பது அன்னபூரணியின் நீண்டகால விருப்பம்; இது மஹேந்திரனுக்கும் நன்றாகத் தெரியும். தனக்குக் கலியாணத்தில் விருப்பமில்லாவிட் டாலும், தன் பெரியம்மாவின் எண்ணம் மிகவும் நியாயமான தென்று அவனுக்குப் பட்டது.

அன்னபூரணியின் அறைக்குள் மஹேந்திரன் நுழைந்தபோது அந்திநேரம். அன்று அடுக்களையில் அவளுடைய சாப்பாடு அப்படியே கிடந்தது. அவள் அதைத் தொடக்கூட இல்லை. வாடிய முகத்துடன் கட்டிலடியில் தரையில் உட்கார்ந்திருந்தாள். மஹேந்திரனுக்குக் கோழைமனது. பெரியம்மாவின் நிலையைப் பார்த்ததும் அவனுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது. அருகில் போய் உட்கார்ந்து அன்பு ததும்ப, "பெரியம்மா!" என்றான். அவள் சட்டென்று தனது துக்கத்தை மறைத்துக்கொண்டு நகை முகத்துடன், "குழந்தாய், வா அப்பா! வந்து உட்கார்" என்றாள்.

மஹேந்: பெரியம்மா! மிகவும் பசியாயிருக்கிறது. சாப் பிடவேண்டும்போல் இருக்கிறது.

அன்னபூரணிக்கு அவனது நோக்கம் புரிந்துவிட்டது. பெருகி யோடும் கண்ணீரை மிகவும் கஷ்டத்துடன் அடக்கிக்கொண்டு எழுந்திருந்தாள். தானும் சாப்பிட்டு அவனையும் சாப்பிடச் செய்தாள்.

அவன் மனத்தில் அன்னபூரணியின்பால் அன்பும் தயையும் ஒருங்கே ததும்பி எழுந்தன. எப்படியாவது அவளை உற்சாகப் படுத்த விரும்பினான். உடனே அவன், "பெரியம்மா, அன்றொரு நாள் உன் தங்கை பெண்ணைப்பற்றிச் சொன்னாயல்லவா? என்னை அழைத்துப்போய் ஒருநாள் அவளைக் காட்டு; பார்க்கலாம்" என்றான்.

சொல்வது என்னவோ சொல்லிவிட்டான். பிறகு ஏன் இப் படிச் சொன்னோமென்று அவனுக்கு மனத்துக்குள் பயமே.

அன்னபூரணி சிரித்துக்கொண்டே, "என்ன, கலியாண விசாரம் வந்துவிட்டதா?" என்றாள்.

மஹேந்திரன் உடனே பேச்சை மாற்றிக்கொண்டு, "எனக் காக இல்லை; பெரியம்மா, விஹாரியைச் சம்மதிக்குமாறு செய் திருக்கிறேன். இப்பொழுது நீ கலியாணத்திற்கு நாள் நிச்சயித்து விடு" என்றான்.

அன்ன: ஆஹா! அந்த அநாதைப் பெண்ணிற்கு அவ்வளவு அதிருஷ்டம் ஏது? விஹாரியைப் போன்ற கணவன் கிடைப் பதற்கு அவள் தலையெழுத்து நன்றாயிருக்க வேண்டுமே?

அன்னபூரணியின் அறையைவிட்டு வரும்போது வாசற்படியி லேயே மஹேந்திரன் ராஜலக்ஷ்மியைப் பார்த்தான். அவள் உடனே, "மஹேன், உங்களுக்குள் என்ன யோசனை நடக்கிறது?" என்று ஆத்திரத்துடன் கேட்டாள்.

மஹேந்: யோசனை என்ன இருக்கிறது? இரண்டு வெற்றிலை எடுத்துப் போகலாமென்று வந்தேன்.

ராஜலக்ஷ்மி: உனக்காக வெற்றிலை மடித்து என் அறையில் நான் தயாராக வைத்திருக்கிறேனே!

மஹேந்திரன் பதில் ஒன்றும் பேசாது வெளியே போய்விட் டான். ராஜலக்ஷ்மி அன்னபூரணியின் அறைக்குள் எட்டிப்பார்த் தாள். அழுது அழுது அவள் கண்கள் சிவந்திருந்தன. அதன் கார ணத்தை ராஜலக்ஷ்மியினால் ஊகிக்கமுடியவில்லை. "ஏன்? பிள்ளை யுடன் கூடிக் கூடி ரொம்பப் பேசிக்கொண்டிருந்தாய் போலிருக் கிறது!" என்று சொல்லிவிட்டுப் பதிலிற்குக்கூடக் காத்திராமல் ராஜலக்ஷ்மி 'விர்' என்று போய்விட்டாள்.

---

## இரண்டாம் அத்தியாயம்

பெண்ணைப் பார்க்கப்போகும் விஷயத்தை மஹேந்திரன் அறவே மறந்துவிட்டான். ஆனால் அன்னபூரணி மறக்கவில்லை.

பெண்ணைப்போய்ப் பார்க்கவேண்டிய நாளையும் அவள் நிச்சயித்து விட்டாள். மஹேந்திரனும் கல்கத்தாவிலேயே வசித்துவந்தான்; பெண்ணும் அதே ஊரில் பெரிய கடைத்தெருவில் வசித்து வந்தாள்.

கன்னிகையைப் போய்ப் பார்க்கவேண்டிய நாள் நிச்சயித்தாகி விட்டது என்று கேட்டவுடன் மஹேந்திரன் பெரியம்மாவிடம், "இத்தனை சீக்கிரம் ஏன் ஏற்பாடு செய்தாய்? நான் இன்னும் விஹாரியிடம் இதைப்பற்றிப் பேசக்கூட இல்லையே" என்றான்.

அன்ன: இது என்னடா, மஹேன்? நீயேதான் விஹாரி சம்மதித்துவிட்டதாகச் சொன்னாய்! பார்க்க வருவதாகச் சொல்லி விட்டு இப்பொழுது போகாவிட்டால் அவர்கள் நம்மைப்பற்றி என்ன நினைப்பார்கள்?

மஹேந்திரன் விஹாரியை வரவழைத்து நடந்தவற்றை விளக்கிச் சொன்னான். "போய்த்தான் பெண்ணைப் பார்ப்போமே. பிடிக்காவிட்டால் கட்டாயப்படுத்தி உன் கழுத்தில் கட்டிவிட முடியுமா என்ன?" என்றான்.

விஹாரி: இது என்னால் முடியாது. பெரியம்மாவின் தங்கை பெண்ணைப் பார்த்து 'இவள் எனக்குப் பிடிக்கவில்லை' என்று சொல்ல என்னால் முடியவே முடியாது!

மஹேந்: இது இன்னும் வேடிக்கையாய்த்தான் இருக்கிறது!

விஹாரி: ஹரி, நீ மிகவும் அநியாயம் செய்துவிட்டாய். பொறுப்பை என்மேல் ஏற்றிவிட்டு நீ தப்பித்துக்கொள்வது அழ கல்ல. இப்பொழுது நான் அப்பெண்ணை விவாகம் செய்துகொள்ள மறுத்தால் பெரியம்மாவுக்கு எவ்வளவு மனவருத்தம் ஏற்படும்; பார்!

மஹேந்: (வெட்கத்துடனும் ஆத்திரத்துடனும்) ஆனால் இப் பொழுது என்ன செய்யவேண்டும் என்கிறாய்?

விஹாரி: எப்பொழுது நீ என் சார்பாக அவளுக்கு வாக் களித்துவிட்டாயோ அப்பொழுது நான் அவசியம் விவாகம் செய்து கொள்ளத்தான் வேண்டும். பெண்ணைப் போய்ப் பார்க்க வேண் டிய அவசியமில்லை.

விஹாரி அன்னபூரணியிடம் பக்தியும் சிரத்தையும் கொண்டி ருந்தான்.

அவள் நடந்த வரலாற்றை அறிந்துகொண்டு விஹாரியைக் கூப்பிட்டு, "குழந்தாய், அப்படிச் செய்யக்கூடாது. பெண்ணைப் போய் நீ அவசியம் பார்க்கவேண்டும். உன் மனத்திற்குப் பிடிக்கா விடில் விவாகம் நடக்கவே நான் விடமாட்டேன்" என்றாள்.

நிச்சயிக்கப்பட்டிருந்த தினத்தன்று மஹேந்திரன் காலேஜி லிருந்து வந்ததும் தாயிடம் தனது பட்டுச் சட்டையையும் ஜரிகை வேஷ்டியையும் எடுத்துத் தருமாறு கேட்டான்.

ராஜலக்ஷ்மி: ஏன்? எங்கே போகிறாய்?

மஹேந்: ஓர் இடத்திற்குப் போகவேண்டும். எடு; வந்து சொல்லுகிறேன்.

நண்பனுக்காகப் பெண் பார்க்கப் போனபோதிலும் தானும் மாப்பிள்ளைக் கோலம் பூணவேண்டுமென்ற ஆவல் அவனுக்கு எழுந்தது. தலையை வாரிவிட்டுக்கொண்டு, கைக்குட்டையில் 'ஸெண்ட்' போட்டுக்கொண்டு போவது அவனுக்கு உசிதமாகவே தோன்றியது. பிறகு இருதோழர்களுமே கன்னிகையைப் பார்த்து வரப் புறப்பட்டனர்.

கன்னிகையின் பெரியப்பா அநுகூலபாபு என்பவர் நல்ல போஜனப்பிரியர். தமது சொந்தச் சம்பாத்தியத்தைக் கொண்டு ஒரு மாடிவீடும் அதைச்சுற்றிச் சிறுதோட்டமும் வைத்திருந்தார். அக்கம்பக்கத்திலெல்லாம் அவருடைய வீடே சற்றுப் பெரிதாய் அவருடைய கௌரவத்தின் சின்னமாய் விளங்கியது.

தம்முடைய ஏழைத் தம்பி இறந்ததும், அவருடைய ஒரே பெண்ணை அநுகூலபாபு தம்மிடம் அழைத்துக்கொண்டார். தாய்தந்தையற்ற அப்பெண்ணைத் தன்னிடம் வைத்துக்கொள்ள அன்னபூரணி விரும்பியபோதிலும் அவர் சம்மதிக்கவில்லை. தம்பி யின் பெண்ணைப் பிறரிடம் விடுவது தமக்கு மரியாதைக் குறை வென அவர் எண்ணினர். அப்பெண் கலியாண வயதடைந்ததும் அவருக்குக் கவலை உண்டாயிற்று. வரதக்ஷிணை, சீர் என்ற பிரஸ்தா பம் ஏற்பட்டபோதெல்லாம் அவர், "எனக்கு இன்னும் வேறு பெண் இருக்கிறாள். நான் ஒண்டிக்காரன்; தம்பியின் பெண் ணுக்கு எப்படி அதிகம் செலவழிப்பது?" என்று சொல்லிக் கொண்டே வந்தார். இப்படி விவாகம் சிறிதுகாலம்வரை தடை பட்டுக்கொண்டே வந்தது. இந்தச் சமயந்தான் மஹேந்திரனும் விஹாரியும் நன்கு அலங்கரித்துக்கொண்டு மாப்பிள்ளைக் கோலத் துடன் அவ்வீட்டில் பிரவேசித்தனர்.

சித்திரைமாதம் அந்திப்பொழுது. சூரியாஸ்தமனம் ஆகிவிட் டது. அநுகூல் பாபுவின் வீட்டு மாடியின் தெற்குப் பார்த்த தாழ் வாரத்தில் ஒரு சலவைக்கல் மேஜையின்மீது வெள்ளித் தட்டில், பழம் பக்ஷணம் எல்லாம் வைக்கப்பட்டிருந்தன. இரண்டு வெள்ளி டம்ளர்களில் ஐஸ்போட்ட சர்பத்தும் வைக்கப்பட்டிருந்தது. மஹேந்திரனும் விஹாரியும் சற்று வெட்கத்துடனேயே சாப்பிட உட்கார்ந்தனர். கீழே தோட்டக்காரன் புஷ்பச் செடிகளுக்குத்

தண்ணீர் விட்டுக்கொண்டிருந்தான். மண்ணில் நீர் பட்டதும் கம்மென்ற மணம் எழுந்தது. பூமணத்துடன் கூடிய தென்றற்காற்று மஹேந்திரனின் மடித்த அங்கவஸ்திரத்தை அப்படியும் இப்படியும் கலைத்து விளையாடிக் கொண்டிருந்தது. பக்கத்து ஜன்னலிலிருந்து



யாரோ மெதுவாகப் பேசுவது, சிரிப்பது, கை வளையல்களின் 'ஜல்' என்ற சப்தம் இவை செவியிற்பட்டன்.

பலகாரம் அருந்தியானதும் அனுகூல பாபு கதவின்புறம் பார்த்து, "ஆசா! வெற்றிலை பாக்குக் கொண்டு வா" என்றார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் கதவைத் திறந்துகொண்டு ஒரு பெண் உலகத்திலுள்ள நாணமெல்லாம் ஓர் உருவெடுத்தது போல் வெட்கித் தலைகுனிந்து வெற்றிலைத்தட்டைக் கையிலேந்திய வண்ணம் பெரியப்பாவின் பக்கத்தில் வந்து நின்றாள். "குழந்தாய்! வெட்கம் ஏன்? தட்டை அவர்கள் முன்னே கொண்டுபோய் வை!" என்று அவர் சொன்னார்.

அப்பெண் கைநடுங்க வெற்றிலைத்தட்டை விருந்தாளிகளின் எதிரில் வைத்தாள். சூரியன் மேற்கே மறைந்துகொண்டிருக்க, அந்திப்பொழுதின் மஞ்சள் வெயில் அச்சிறுமியின் முகத்தில் பட்டு அதை ஸ்வர்ணமயமாக்கியது. அச்சமயம் நாணிய அந் நங்கையின் முக காந்தியை மஹேந்திரன் நன்றாகப் பார்த்தான்.

சிறுமி தட்டை வைத்துவிட்டு உள்ளேபோகும் சமயம் அனுகூல பாபு அவளைக் கூப்பிட்டுச் சற்று நிற்கச்சொல்லி, விஹாரியைப் பார்த்து, "இவள்தான் என் தம்பி அபூர்வனின் புத்திரி. அவர்களெல்லாம் காலஞ்சென்று விட்டனர். இப்பொழுது என்னைத் தவிர இக்குழந்தைக்குக் கதி யாருமில்லை" என்று சொல்லிப் பெருமூச்செறிந்தார்.

மஹேந்திரனின் இருதயத்தில் கருணைவெள்ளம் பொங்கி எழுந்தது. தாய் தந்தையற்ற அக்கன்னிகையைக் கருணை ததும்ப ஒருதரம் உற்று நோக்கினான்.

பெண்ணின் வயதை நிதானிப்பது கடினமாயிருந்தது. உறவினர் அவளுக்குப் பன்னிரண்டு என்றனர். பார்த்தால் பதினன்கு என்று சொல்லலாம். ஆனல் அநாதையாய்ப் பிறர் ஆதரவில் வளர்ந்துவந்ததால் அடக்கமும் பயமும் அவளுடைய யௌவன சௌந்தரியத்தை மறைத்தன.

தயையும் ஆதரவும் நிறைந்த குரலில் மஹேந்திரன் அச் சிறுமியை நோக்கி, "உன் பெயர் என்ன?" என்று கேட்டான்.

அனுகூல பாபுவும் சிறுமியை உற்சாகப்படுத்தி, "உன் பெயரை அவர்களுக்குச் சொல்லம்மா" என்றார்.

கன்னிகை மிகவும் பணிவுடன் தலை குனிந்தவாறே, "ஆசாலதா" என்றாள்.

ஆசாலதா!—இப்பெயர் மிகப் பொருத்தமானதாகவும், குரல் மிகவும் இனிமையானதாகவும் மஹேந்திரனுக்குத் தோன்றின. மனத்திற்குள் ஒரு குரல், 'ஆமாம். அநாதைப்பெண் ஆசாதான்!' என்று கூறியது. இரு நண்பர்களும் வெளியே வந்து வண்டியில் ஏற, வண்டியும் புறப்பட்டது.

மஹேந்: விஹாரி! நீ இப்பெண்ணைக் கைவிட்டு நழுவ விடாதே.

விஹாரி அதற்குநேரான பதிலொன்றும் அளியாமல்; "பெண்ணின்சாயல் அவளுடைய பெரியம்மாவைப் போன்றே இருக்கிறது. குணமும் அப்படியே நிறைந்திருக்குமென்று தெரிகிறது" என்ருன்.

மஹேறந்: நான் உன் தலைமேல் ஏற்றிய பளு இப்பொழுது உனக்குப் பாரமாக இல்லையென்று தெரிகிறது.

விஹாரி: இல்லை. என்னுல் அப்பாரத்தை இப்பொழுது தாங்கமுடியுமென்றே நம்புகிறேன்.

மஹேறந்: ஆனல் இத்தனை கஷ்டந்தான் எதற்கு? வேண்டுமானல் அப்பாரத்தை உன்னிடமிருந்து நானே மாற்றிக்கொள்ளுகிறேன். என்ன சொல்லுகிருய்?

விஹாரி மஹேறந்திரனைக் கூர்ந்து நோக்கி, "நண்பா! உண்மைதானு? இப்பொழுதும் சரியாய்ச் சொல். நீ விவாகம் செய்துகொள்ளுவதானல் பெரியம்மாவுக்கு ஆனந்தமாயிருக்கும். பெண்ணை எப்பொழுதும் அருகிலேயே வைத்துக்கொள்ளவும் அவளுக்கு முடியும்.

மஹேறந்: போடா பைத்தியமே! அப்படியானல் எப்பொழுதோ கலியாணமாகி யிருக்காதா?

விஹாரி இதற்குமேல் வற்புறுத்தவில்லை. அவனை வீட்டில் விட்டுவிட்டு மஹேறந்திரன் நேர்வழியைவிட்டுத் தெருத்தெருவாய்ச் சுற்றிக்கொண்டு வெகுநேரம் கழித்துத் தன் வீடு போய்ச் சேர்ந்தான்.

அச்சமயம் ராஜலக்ஷ்மி கறிகாய் நறுக்கிக்கொண்டிருந்தாள். அன்னபூரணி இன்னும் அனுகூல பாபுவின் வீட்டிலிருந்து திரும்பி வரவில்லை. மஹேறந்திரன் மாடியில் ஒரு சாய்வு நாற்காலியில் படுத்துக்கொண்டான். கல்கத்தாவின் பெரிய பெரிய கட்டிடங்களின்மேல் சந்திரன் தனது ஒளியைச் நிச்சப்தமாகப் பரப்பிக்கொண்டிருந்தான். ராஜலக்ஷ்மி வந்து மஹேறந்திரனைச் சாப்பிட அழைத்தாள். அவன் உற்சாகமின்றி, "எனக்கு இப்பொழுது எழுந்திருக்கவே மனமில்லை" என்ருன்.

ராஜலக்ஷ்மி: நான் வேண்டுமானல் இங்கேயே கொண்டுவருகிறேன்.

மஹேறந்: இல்லை! எனக்கு இன்று சாப்பாடு வேண்டாம். சாப்பிட்டு வந்திருக்கிறேன்.

ராஜலக்ஷ்மி: எங்கே சாப்பிடப் போயிருந்தாய்?

மஹேறந்: பிறகு சொல்லுகிறேன். எனக்கு இப்பொழுது உடம்பு சரியாயில்லை.

வழக்கத்திற்கு விரோதமான இப்பதிலைக் கேட்டுத் தாயின் மனம் வருந்தியது. ஆனாலும் அவள் எதுவும் பேசாமல் அப்புறம் சென்றாள்.

இதற்குள் மஹேந்திரன் தன்னைச் சமாளித்துக்கொண்டு, தான் செய்ததற்காக வெட்கி, "அம்மா! சாப்பாட்டை இங்கேயே கொண்டு வா" என்றான்.

ராஜலக்ஷ்மி: பசியில்லாவிட்டால் சாப்பிடுவானேன்?

தாயும் மகனும் சிறிது நேரம்வரை தத்தம் மரியாதையை விட்டுக்கொடுக்காமலே பேசினர். கடைசியில் மஹேன் மறுபடியும் சாப்பாட்டிற்கு உட்காரவேண்டி வந்தது.

---

## மூன்றும் அத்தியாயம்

மஹேந்திரன் அன்று இரவு முழுதும் தூக்கமின்றியே கழித்தான். மறுநாள் அதிகாலையிலேயே எழுந்திருந்து விஹாரியினிடம் சென்று, "நண்பா! இரவுமுழுவதும் யோசனைசெய்ததில் நான் அக்கன்னிகையை விவாகம் செய்துகொள்ளாவிடில் பெரியம்மாவுக்கு மிகவும் வருத்தமாயிருக்குமென்ற முடிவுக்கு வந்தேன். தன் சகோதரியின் பெண்ணை எனக்கு மணம் செய்வித்துத் தன்னிடமே வைத்துக்கொள்ள வேண்டுமென்பதுதான் அவளுக்கு உள்ளூற இச்சை" என்றான்.

விஹாரி: மஹேன்! இதற்காகத் திடீரென்று புதிதாய் யோசிக்கவேண்டியது ஒன்றுமில்லையே. பெரியம்மாதான் தன் இஷ்டத்தை உனக்குப் பலதடவை தெரியப்படுத்தியிருக்கிறாளே.

மஹேந்: அதுதான் நானும் சொல்லுகிறேன். இப்பெண்ணை நான் கலியாணம் செய்துகொள்ளாவிடில் பெரியம்மா ஆயுள் முழுவதும் அதையே நினைத்து வருந்துவாள்.

விஹாரி பராமுகமாய் எங்கோ பார்த்துக்கொண்டு, "வருந்தக் கூடும்" என்றான்.

மஹேந்: நான் கமலாவைக் கலியாணம் செய்துகொள்ளாவிடில் நன்றாயிராது; அது அநியாயமுமாகும்.

விஹாரி தனது ஏமாற்றத்தை மறைத்துக்கொண்டு உற்சாகமாயிருக்க யத்தனித்துக்கொண்டே, "நல்லதாயிற்று; உனக்குச் சம்மதமானால் பிறகு கேட்பானேன்? ஆனால் இந்தக் கடமையை நிறைவேற்றும் புத்தி உனக்கு நேற்றே—அந்தப் பெண்ணைப் பார்ப்பதற்கு முன்னமேயே—இருந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும்" என்றான்.

மஹேந்: இப்பொழுதுதான் என்ன? ஒருநாள் பிந்தித் தோன்றியதால் என்ன முழுகிப்போய்விட்டது?

மஹேந்திரன், இனித் தாமதியாது எப்படியாவது கலியாணத்தைச் சீக்கிரம் முடித்துக்கொண்டுவிடத் துடித்தான். அன்னையிடம் சென்று, "அம்மா! உன் வார்த்தையைத் தட்ட நான் விரும்பவில்லை. விவாகத்திற்கு எனக்குச் சம்மதந்தான்" என்றான்.

ராஜலக்ஷ்மிக்குக் குட்டு வெளிப்பட்டுவிட்டது. அன்று ஏன் தன் ஓரகத்தி பெண்ணைப் பார்த்துவரப் போனாள், கூடவே மஹேந்திரனும் தன்னை அலங்கரித்துக்கொண்டு வெளியே கிளம்பினான் என்பவை யாவும் அவளுக்கு இப்பொழுது விளங்கிவிட்டன.

மகன் தனது பேச்சை அலட்சியம் செய்துவிட்டு அன்னபூரணியின் இஷ்டப்படி நடப்பது அவளது பொறுமைத் தீயைக் கொழுந்துவிட்டு எரியச் செய்தது. 'இருக்கட்டும். எப்படியாவது அன்னபூரணியின் எண்ணம் நிறைவேறாமற் செய்வது' என்று பிரதிக்ஞை செய்துகொண்டாள். மகனிடம், "நல்லது; உனக்கேற்ற நல்ல கன்னிகையாக நான் தேடுகிறேன்" என்றாள். மஹேந்திரன் ஆசாலதையின் பெயரைக் குறிப்பிட்டு, "வேறு பெண் தேடுவானேன்?" என்றான்.

ராஜலக்ஷ்மி: அப்பா! அந்தப் பெண் சரியில்லை. நீ அவளை விவாகம் செய்துகொள்ள நான் சம்மதிக்கவே மாட்டேன்.

மஹேந்திரன் தனது ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு சாந்தமாய், "ஏன் அம்மா? பெண்ணுக்கு என்ன குறை?" என்றான்.

ராஜலக்ஷ்மி எரிச்சலுடன், "பெண்ணுக்கு ஏனென்று கேட்க நாதியில்லை? அதைக் கட்டிக்கொண்டால் குடும்பத்தில் நமக்கு என்ன சுகம் ஏற்படும்?" என்றாள்.

மஹேந்: குடும்பத்தில் சுகமோ, இல்லையோ எனக்கு அதைப் பற்றிக் கவலையில்லை. பெண் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறாள்.

மஹேந்திரனின் பிடிவாதம் ராஜலக்ஷ்மிக்கு ஏற்கனவே அன்னபூரணியிடம் இருந்த வெறுப்பை அதிகரிக்கச் செய்தது. நேரே அன்னபூரணியின்முன் போய், "ஓர் அநாதைப் பெண்ணை என் ஒரே செல்வப் பிள்ளையின் கழுத்தில் கட்டி என்னையும் அவனையும் வேறாக்கச் சதிசெய்கிறாயா? உனக்கு ஏன் இந்தத் துர்ப்புத்தி?" என்று இரைந்தாள்.

அன்னபூரணி அழுதுகொண்டே, "மஹேந்திரனின் கலியாணப்பேச்சையே நான் எடுக்கவில்லையே. அவனாக உன்னிடம் வந்து என்ன சொன்னானோ, அதுவும் தெரியாதே" என்றாள்.

ராஜலக்ஷ்மி அவளது பேச்சை நம்பவில்லை. அன்னபூரணி விஹாரியை அழைத்துவரச் சொல்லி அவனிடம், "கலியாணம் உனக்கன்றோ நிச்சயித்தேன்? இது என்ன அமர்க்களம்! நீ அப் பெண்ணை மணம் செய்துகொண்டு என்னை இந்தச் சங்கடத்தி னின்றும் காப்பாற்ற மாட்டாயா? தங்கமான பெண். உனக்கேற் றவள்" என்று கண்ணீர் வழிந்தோடக் கெஞ்சினாள்.

விஹாரி: பெரியம்மா! உங்கள் சகோதரி புத்திரியை மணம் செய்துகொள்ள நான் எப்பொழுதாவது மறுப்பேனா? நீங்கள் அதற்காக என்னை வேண்டவும் வேறு வேண்டுமா? நான் எப்பொ ழுதும் தயார். ஆனால் மஹேந்—

அன்னபூரணி குறுக்கிட்டு, "விஹாரி, மஹேந்திரன் அவளை விவாகம் செய்துகொள்ளவே கூடாது. நான் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். நீ அவளை மணந்தால்தான் என் மனம் நிம்மதி அடையும். அப்பெண்ணை மஹேந்திரனுக்குக் கொடுப்பதை நான் விரும்பவேயில்லை" என்றாள்.

விஹாரி இதற்குப் பிறகு ராஜலக்ஷ்மியிடம்போய், "அம்மா! நான் ஆசாலதையை மணப்பதென்று நிச்சயமாகிவிட்டது. எனக்கு வேறு யாரும் இல்லாததால் வெட்கத்தைவிட்டு நானே இதை உங்களிடம் தெரிவிக்கவேண்டி வந்தது. மன்னிக்கவேணும்" என்று பணிவாக உரைத்தான்.

ராஜலக்ஷ்மி ஆச்சரியத்துடன், "என்ன சொல்லுகிறாய்! இதைக் கேட்க எனக்குக் கரைகடந்த சந்தோஷம். பெண் சாக்ஷாத் லக்ஷ்மியின் அவதாரந்தான். உனக்கேற்றவள். கன்னி கையை நழுவவிடாதே, அப்பா!" என்றாள்.

விஹாரி: எப்படி நழுவவிட முடியும்? மஹேந்திரன் தானே தேடி எனக்காக இவளை நிச்சயித்திருக்கிறான்?

தன் மனோரதம் நிறைவேறாது ஒன்றன் பின் ஒன்றாக இடை யூறு ஏற்படுவதை மஹேந்திரன் பார்த்தான். கோபம் பொங்கி எழுந்தது அவனுக்கு. அன்னை, பெரியன்னை இருவரிடமும் கோபித்துக்கொண்டு வீட்டைவிட்டு 'ஹாஸ்டலி'ல் போய் இருக்க லானான்.

ராஜலக்ஷ்மியினால் மகனது பிரிவு தாங்கமுடியவில்லை. அன்ன பூரணியைப்போய் வேண்டினாள். "பையன் கோபித்துக்கொண்டு போய்விட்டான். அவனைச் சமாதானப்படுத்தி அழைத்து வர உன்னால்தான் முடியும்" என்றாள்.

அன்ன: தைரியமாயிரு. இரண்டுநாள் போனால் தானே கோபம் தணிந்து வருவான்.

ராஜலக்ஷ்மி: உனக்கு அவன் சுபாவம் தெரியாது. தான் பிடித்ததை எப்படியாவது நிறைவேற்றியே தீருவான். எப்படியோ உன் தங்கை பெண்ணைக் கொடுத்து—

அன்ன: அழகுதான்! அது எப்படி முடியும்? விஹாரிக்குக் கொடுப்பதென்று நிச்சயித்தாகிவிட்டது.

ராஜலக்ஷ்மி: ஆனல் என்ன? இப்பொழுதுதான் அதைத் தவிர்க்க முடியாதோ? நீ மனம் வைத்தால் எல்லாம் முடியும்.

ராஜலக்ஷ்மி உடனே விஹாரிக்குச் சொல்லி அனுப்பினுள். அவன் வந்ததும் அவனிடம், "அப்பா! உனக்கு ஏற்றவளாக நான் வேறு பெண் தேடித் தருகிறேன். இவளை விட்டுவிடு. இவள் உனக்குத் தகுதியில்லை" என்ருள்.

விஹாரி: அம்மா, முடியாது. எல்லாம் நிச்சயமாகிவிட்டது.

ராஜலக்ஷ்மி அன்னபூரணியிடம் வந்து, "அக்கா, நான் உன் காலில் விழுந்து கேட்டுக்கொள்கிறேன். எப்படியாவது நீ விஹாரிக்குப் புத்திசொல்லி அவன் மனத்தை மாற்று" என்ருள்.

அன்னபூரணி வேறு வழியின்றி விஹாரியைத் தனியாய்க் கூப்பிட்டு, "குழந்தாய், உன்னை நான் எந்த வாயால் இப்பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளாதே என்று சொல்லுவேன்! ஆனல் நான் என்ன செய்வது? நீயே சொல். ஆசாவை நீ மணந்து கொண்டால் எனக்கு எவ்வளவோ சந்தோஷமாயிருக்கும். ஆனல் விஷயமனைத்தும் நீயே அறிவாய்" என்ருள்.

விஹாரி: பெரியம்மா, நான் நிலைமையை நன்கு உணருகிறேன். நீ சொல்வதுபோல் நடக்க நான் சித்தமாயிருக்கிறேன். ஆனல் ஒரு பிரார்த்தனை: இனி என்றைக்கும் என்னை நீ கலியாணம் செய்துகொள்ளும்படி வற்புறுத்தக் கூடாது.

இதைச் சொல்லி முடித்ததும் விஹாரி வெளியே போய்விட்டான். அன்னபூரணிக்குத் துக்கம் நெஞ்சைப் பிளந்தது. கண்களில் நீர் ததும்பியது. மஹேந்திரனின் நன்மையை உத்தேசித்துத் தன்னைத் தானே சமாதானப்படுத்திக்கொண்டாள்; எல்லாம் நன்மைக்கே என்று தேற்றிக்கொண்டாள்.

இடையில் தாய்க்கும் மகனுக்கும் வாதப்பிரதிவாதங்கள் நடந்துகொண்டேயிருந்தன. கலியாண லக்கினமும் நெருங்கிவிட்டது. எங்கும் தோரணமும் தீபமும் துலங்கின. மங்கள வாத்தியம் வானைப் பிளந்தது. ஏராளமான பூரி தக்ஷிணையுடன் விவாகம் யாதொரு குறைவுமின்றி நடந்தேறியது.

ரூபவதியான புதுநாட்டுப்பெண், நாணத்தை அணிகலனுகக் கொண்டு முதன்முதலாகக் கணவன் வீட்டில் கிருகப்பிரவேசம்

செய்தாள். வாழ்வில் துன்பமுண்டென்பதை அக்கன்னிகை அறியாள். தன்னிடம் அன்புபூண்ட சிற்றன்னையிடம் வசிக்கப்போகும் ஆனந்தத்தில் சமுசயம், பயம் யாவும் மறைந்து போயின.

சிலநாட் கழித்து ராஜலக்ஷ்மி மஹேந்திரனிடம், "ஆசா கொஞ்சநாள் பெரியப்பாவிடம் போயிருந்து வரட்டும்" என்றாள்.

மஹேந்: ஏன்? எதற்காக?

ராஜலக்ஷ்மி: உனக்குப் பரீக்ஷை சமயம். படிப்பதற்கு இடையூறின்றி இருக்கட்டும்.

மஹேந்: நான் என்ன குழந்தையா? என் நன்மை தீமையை அறிந்துகொள்ள எனக்குச் சக்தியில்லையா?

ராஜலக்ஷ்மி: (மெதுவாய்) இப்பொழுதுதான் கலியாணமாகி ஒரு வருஷமாயிற்று. அதற்குள்—

மஹேந்: (சற்று அதிகாரத்துடன்) அவளுக்குத் தாய்தந்தையிருந்தால் எனக்கும் அனுப்பத் தடையொன்றும் இராது. ஆனால் பெரியப்பாவின் வீட்டில் அவளைக் கொண்டுபோய்விட நான் விரும்பவில்லை.

ராஜலக்ஷ்மி: (மனத்திற்குள்ளே) அடேயப்பா! இப்பொழுதே இந்தப் பாடு! அவள்தான் ஸர்வமும்; நான் ஒன்றுமேயில்லை! நேற்றுக் கலியாணமாயிற்று. இதற்குள் அவளுக்காக இவ்வளவு அநுதாபமா? நன்றாயிருக்கிறது! எனக்குந்தான் கலியாணம் ஒரு காலத்தில் ஆயிற்று. ஆனால் இப்படி வெட்கமின்றிப் பெண்சாதிக்குப் பரிந்து பேசியவரைக் காணேன்.

அதற்குள் மஹேந்திரன், "அம்மா, கவலைப்படாதே; பரீக்ஷைக்கு ஒரு விக்கினமும் நேராது" என்று சொல்லிப் போய் விட்டான்.

---

## நான்காம் அத்தியாயம்

ராஜலக்ஷ்மி நாட்டுப் பெண்ணிற்கு வீட்டு வேலைகள் யாவும் கற்பிப்பதில் தீவிரமாய் முனைந்தாள். ஆசாவிற்கு நாள் முழுவதும் சமயலறை, சாமான் அறை, சுவாமியறை இவற்றிற்குள்ளாகவே வேலை சரியாயிருக்கும். போதாக்குறைக்கு அவள் தனிமையை உணராமல் இருக்க வேண்டி ராஜலக்ஷ்மி அவளை இரவிலேயும் தன் பக்கத்திலேயே படுக்க வைத்துக்கொண்டாள்.

அன்னபூரணி முன்யோசனையுடன், தான் ஆசாவிடம் அதிகம் நெருங்காமல் சற்றுத் தூரத்திலேயே இருந்துவந்தாள். பசியால் வருந்துபவன்முன் நல்ல போஜனம் பரிமாறப்பட்டும் அவன்

அதைத் தொடாமல் பார்த்திருக்க வேண்டுமென்றால் எப்படியிருக்குமோ அதே நிலையில் இருந்தான் மஹேந்திரனும். தன் புது மனைவியின் மென்மையான தேகம் வீட்டு வேலைகளினால் வாட்டப்படுவதைப் பார்த்துச் சகிக்க எப்படி அவனால் முடியும்?

அவன் மெதுவாய் அன்னபூரணியிடம் போய், "பெரியம்மா, இம்மாதிரி நாட்டுப்பெண்ணிடம் வேலை வாங்கினால் அவள் தேகாரோக்கியம் கெட்டுவிடுமே. இதை என்னால் பார்க்கச் சகிக்கவில்லையே" என்றான்.

ராஜலக்ஷ்மி மருமகளிடம் சற்று அளவுக்கு மீறியே வேலை வாங்குகிறாளென்பது அன்னபூரணிக்கும் தெரியும். ஆனாலும் அதைக் காட்டிக்கொள்ளாது அவனிடம், "ஏண்டா, வீட்டு வேலைகளைக் கற்பிப்பதில் கெடுதல் என்ன இருக்கிறது? வேலை செய்தால் தேகாரோக்கியம் கெட்டுவிடுமா? இந்தக் காலத்துப் பெண்களைப் போல் நாவல் வாசிப்பதும், தையல் தைப்பதும், மேல் நாட்டாரைப் போல் நாற்காலியில் வீற்றிருப்பதும் என்ன அழகாகவா இருக்கின்றன?" என்றாள்.

மஹேந்திரன் சற்று ஆத்திரத்துடன், "அழகோ, அழகில்லையோ, காலத்திற்கேற்றவாறு இருப்பதுதான் சரி. இப்பொழுது நான் நாவல் படித்து அதன் சுவையை அறிந்து அனுபவிப்பது போல், அவளும் செய்தால் அதில் கேலிக்கோ, வருந்துவதற்கோ என்ன இருக்கிறது?" என்றான்.

அன்னபூரணியின் அறையில் பேச்சுக்குரல் கேட்டவுடன் ராஜலக்ஷ்மி தனது கை வேலையையும் அப்படியே விட்டுவிட்டு அங்கே ஓடிவந்தாள். வந்ததுமே கடுங்குரலுடன், "நீங்கள் இருவரும் என்ன கூடிக் கூடிப் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?" என்று கூப்பாடு போட்டாள்.

மஹேந்திரன் சற்று ஆத்திரத்துடன், "கூடிப் பேச ஒன்றுமில்லை. என் மனைவியை வேலைக்காரிபோல நடத்துவது எனக்குப் பிடிக்கவில்லை" என்றான்.

ராஜலக்ஷ்மி பொங்கிவரும் கோபத்தைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு, "பின் அவள் என்ன செய்யவேண்டும்?" என்றாள்.

மஹேந்: நான் அவளுக்கு எழுதப்படிக்கக் கற்றுக்கொடுக்கப் போகிறேன்.

ராஜலக்ஷ்மி பதிலொன்றும் உரையாது சரேலென்று உள்ளே போய், நாட்டுப்பெண்ணைக் கையைப்பிடித்து அழைத்து வந்து மஹேந்திரனுக்கு முன் நிறுத்தி, "இதோ உன் மனைவி. எழுதப் படிக்கக் கற்றுக்கொடு!" என்றாள்.

இதைச் சொல்லி முடித்ததும் தன் ஓரகத்தியிடம் போய் இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு, "அக்கா! என்னை மன்னிக்க வேணும். எனக்கு உன் பெண்ணின் யோக்கியதை தெரியவில்லை. புஷ்பம்போன்ற அவள் கரங்களை வீட்டு வேலை செய்யச்சொல்லி மாசுபடியச் செய்துவிட்டேன். இப்பொழுது நீ அவளைச் சுத்த மாக்கி, துரைசானிபோல் மஹேந்திரனிடம் ஒப்பித்துவிடு. கால் மேல் கால்போட்டுக்கொண்டு அவள் எழுதப்படிக்கக் கற்றுக் கொள்ளட்டும். நான் வீட்டில் அடிமைத்தொழில் புரிகிறேன்" என்றாள்.

இதற்குமேல் ராஜலக்ஷ்மியால் அங்கே நிற்கமுடியவில்லை. தனது அறையில் போய்த் தடாலென்று கதவை அறைந்து மூடி உள்ளே படுத்துக்கொண்டாள்.

அன்னபூரணி மனங்கலங்கி அப்படியே யோசனையில் ஆழ்ந் தாள். திடீரென்று ஏற்பட்ட இக்கலகத்திற்குக் காரணம் என்ன வென்று ஆசாலதாவுக்குப் புரியவில்லை. அவளை வெட்கம், பயம், துக்கம் எல்லாம் ஒருமிக்கச் சூழ்ந்தன. மஹேந்திரன் மனத்திற் குள்ளேயே, 'சரி, இனி நானே என் மனைவியைக் கவனித்துக் கொள்ளுகிறேன். அதுதான் நேர்மையானது' என்று எண்ணிக் கொண்டான்.

எப்பொழுது கடமையும், விருப்பமும் ஒருங்கே சேர்ந் தனவோ அப்பொழுது தீயும் காற்றும் சேர்ந்ததுபோலத்தான். காலேஜ், பரீக்ஷை, சினேகம், ஊரார் அவச்சொல் யாவும் காற்றில் பறக்கவிடப்பட்டன. மனைவியைச் சீர்திருத்துவதுதான் மஹேந் திரனின் முக்கிய நோக்கமாய்விட்டது. இதில் வீட்டு வேலையை யும் ஊரார் பழிப்பையும் அவன் லட்சியமே செய்யவில்லை.

இங்கே, ராஜலக்ஷ்மி மமதையுடன் அறைக்குள் உட்கார்ந்து கொண்டு தானே மனத்திற்குள், 'வரட்டும் மஹேன்; மனைவியும் தானுமாய் வந்து கதவைத் திறக்கும்படி வேண்டிக் கொள்ளட்டும். நான் திரும்பிப் பார்ப்பேனா? பார்க்கலாம், எவ்வளவு நாள் தாயை விட்டு மனைவியுடன் இருக்கிறானென்று' என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள்.

ஆனால் பகல் கழிந்தது. இரவும்போய் மறுதினமும் வந்தது. பிள்ளை மன்னிப்புக்கேட்க வரும் வழியாகக் காணோம். 'ஆகட்டும்; இன்று அவன் வந்தால் சற்று முரணுவது; கோபித்துக்கொண்டு விட்டுப் பிறகு அவனை மன்னித்தே விடுகிறேன்' என்று அவள் நிச்சயித்துக் கொண்டாள்.

அன்று பகல் முழுவதும் காத்திருந்தும் மஹேந்திரன் வரக் காணோம். தாயின் மனது இளகிவிட்டது. 'சீ, பையன் கோபித்

துக் கொண்டால் நாமும் அதற்காகக் கோபித்துக்கொள்வதா? நானே அவன் அறைக்குப் போய் அவனுக்கு மன்னிப்பளித்து வருகிறேன்' என்று எழுந்தாள்.

மாடியில் முன்புற ஓரமாய் ஒரு சிறு அறை. அங்கேதான் மஹேந்திரன் படிப்பது, தூங்குவது எல்லாம். தினமும் மகனது அறையைச் சுத்தம் செய்து, துணிமணிகளை ஒழுங்காய் எடுத்து மடித்துவைத்துப் படுக்கையை உதறிப்போட்டு ஸகல பணிவிடையும் செய்தால்தான் ராஜலக்ஷ்மிக்குத் தூக்கம் வரும். இதில் அவள் ஒருநாளேனும் தவறியது இல்லை. இரண்டு தினங்களாய் இவைகளைச் செய்யாமல் இருந்தது சிசுவிற்குப் பாலூட்டத் தவறிய தாயின் மனத்தைப்போல் அவளை வருத்தியது. 'பகல் நேரமானதால் மஹேந்திரன் காலேஜிற்குப் போயிருப்பான். நான் அவன் வருவதற்குமுன் அவன் அறையில் எல்லாவற்றையும் சரியாக வைத்து வந்தேனானால், வந்து பார்த்ததும் தாயின் மனது இரங்கிவிட்டது என்பது நன்றாகத் தெரிந்துவிடும்' என்று ராஜலக்ஷ்மி எண்ணினாள்.

அவள் மெள்ளப் படியேறி மேலே சென்றாள். மஹேந்திரனின் அறைக் கதவு ஒன்று திறந்தபடி இருந்தது. எதிரே பார்த்த காட்சி சர்ப்பம் தீண்டியதுபோல் ராஜலக்ஷ்மியைத் திடுக்கிடச் செய்தது. கட்டிலின்மேல் மஹேந்திரன் படுத்துக்கொண்டிருக்கிறான். கதவுப் புறம் முதுகைத் திருப்பிக்கொண்டு ஆசா கட்டிலில் அவனருகில் உட்கார்ந்துகொண்டு மெல்ல அவன் கால்களை வருடிக்கொண்டிருக்கிறாள். பட்டப்பகலில், திறந்த உள்ளில் யௌவன தம்பதிகளின் இந்த லீலையைக் கண்டு ராஜலக்ஷ்மி வெட்கி உடல் குன்றிப் பேசாது அப்படியே கீழே இறங்கி வந்துவிட்டாள்.



# மாதவி

[ஒரு சிறு நாடகம்]

"ஆண்டாள்"

—·—

[பூம்புகாரில் மாதவியின் மாளிகை. மேன் மாடத்தில் அந்திப் பொழுதில் சந்திரோதயத்தை எதிர்நோக்கி உட்கார்ந்திருக்கிறாள் மாதவி. மாதவிக்கருகில் கையில் யாழுடன் அவள் தோழி வசந்தமாலை உட்கார்ந்திருக்கிறாள்; அவள் விரல்கள் யாழில் விட்டு விட்டுத் திடீர் திடீரென்று பலவிதமான குரல்களை எழுப்பிக் கொண்டிருக்கின்றன.]

மாதவி:—வஸந்தா!

[வஸந்தமாலை பதிலளிக்காமல் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருக்கிறாள்.]

மாதவி:—வஸந்தா! ஏன் இன்று கூப்பிட்டால் கூடப் பதிலளிக்காமல்....

வஸந்தா:—என்னையா கூப்பிடுகிறாய்? கவனிக்கவில்லை. வஸந்தத்தைத்தான் அழைக்கிறாயாக்கும் என்று எண்ணி....

மாதவி:—வஸந்தத்தை நான் வருந்தி அழைக்கவும் வேணுமோ? அதுவாகத்தான் வந்து என்னைத் துன்புறுத்துகிறதே; ஏன் வருகிறது இக்கொடிய வஸந்தகாலம்?

வஸந்தா:—உன் கோவலரின் பிழைக்கு நீ வஸந்தகாலத்தைக் கடிவதில் என்ன பயன்?

மாதவி:—யாரைக் கடிந்துதான் என்ன பயன்? என் வினை என்னைச் சூழ்ந்ததற்கு நான் யாரைச் சுட்டிச் சொல்லுவது? ஆனால் இந்த வஸந்தகாலம் இப்படி அழையா விருந்தாக வந்து என்னை வதைக்க வேண்டாம் என்றுதான் சொன்னேன். ஆனால் நான் அழைத்தால் வருமா? போவென்றால் போகுமா?

வஸந்தா:—நீ அழைத்தால் வராதவர்களும் உண்டோ? மனிதனை கட்டும் தேவனைகட்டும்....

மாதவி:—எனக்கு ஒரு தேவனும் வேண்டாம். இனி ஒரு மனிதனும் வேண்டாம்.

வஸந்தா:—அந்தக் கோவலரைத் தவிர வேறு யாரும் வேண்டாமாக்கும்?

மாதவி:—என்னைத் துன்புறுத்தாதே, வஸந்தா! அவர் கண்கள் திறந்துகொண்டன. நான் கேவலம் கணிகை மாது என்பதை உணர்ந்துவிட்டார். அவர் என்னைவிட்டுப் பிரிந்து அந்தப்பூஜிதையான கண்ணகியின் கோயிலைச் சென்று அடைந்துவிட்டார். நான் அவரை எண்ணி ஏங்கி என்ன பயன்? சொல்.

வஸந்தா:—நீயாகவேதான் இதையும் சொல்லுகிறாய். ஆனால் நீ எண்ணி எண்ணி ஏங்குவதில் மட்டும் குறைவேயில்லையே! நீ பழைய மாதவியாகவா இருக்கிறாய்?

மாதவி:—எப்படி நான் பழைய மாதவியாகவே இருக்கமுடியும்?

வஸந்தா:—பூம்புகாரின் புகழ் மலராக இருந்த நீ இன்று வாடி வதங்கி மணமிழந்து விட்டாய். நீ மாதவியா? ஸன்யாஸினியாக வன்றோ தோன்றுகிறாய்?

மாதவி:—என் வாழ்விலே துறவியாவதைத் தவிர வேறு என்ன பாக்கி? சொல்.

வஸந்தா:—அதுவும் பாக்கியில்லை யென்றே சொல்லுகிறேன். உன் துக்கம் என்னையும் துறவியாக்கி விட்டதே!

மாதவி:—(துக்கம் நிறைந்த புன்சிரிப்புடன்) ஏன்? இன்று இன்னும் உன் புருஷோத்தமர் வரவில்லையே யென்றா?

வஸந்தா:—(நாணத்துடன்) அவர் தாமே வருவார். நான் அதற்காகச் சொல்லவில்லை. மாதவி, உன் துக்கம் ததும்பும் வதனம் கண்டு....

மாதவி:—எனக்கு இனிமேல் சுகமேது? துக்கமேது? அவர் என்னைத் துறந்த அன்றே நான் துறவியாய் விட்டேன்!

வஸந்தா:—இப்படி....

மாதவி:—நான் உன் காலத்தை இப்படி ஸ்வீகரிப்பது தவறு. கீழே புருஷோத்தமர் வந்து காத்திருந்தாலும் காத்திருப்பார். போ நீ.

வஸந்தா:—நீ உண்மையில் உன் கண்ணீரை என்னிடமிருந்து மறைக்க முயலுகிறாய். ஆனால் உன் துக்கம் என் மார்பை உருவிச் செல்லுகிறது.

மாதவி:—வேண்டாம், வஸந்தா! இனி அதைப்பற்றிப் பேசாதே! அந்த யாழை இனி என் கண்முன் கொண்டு வராதே; அதை உடைத்து அடுப்பில் போடு; அதுதான் அன்று எனக்கும் அவருக்கும் குறுக்கே வந்தது.

வஸந்தா:—வருந்தாதே, மாதவி! கோவலர் வருவார். அவர் கூடல் சென்றிருக்கிறாராம்: வியாபாரஞ் செய்து மிக்க பொருளீட்டி

வரப்போகிறார்; உன் மனம் அவருக்குத் தெரியுமா? நீ கைம் மாறு கருதாமல் உன் உயிரை அவருக்கு அர்ப்பணஞ் செய்யச் சித்தமாயிருக்கிறாயென்று அவருக்குத் தெரியுமா? கையில் பொருளில்லாமல் உன்னைக் காண அவருக்கு இஷ்டமில்லை போலும்! அவ்வளவு தான். அவர் திரும்பி வருவார்; நிச்சய மாய் வருவார். வருந்தாதே மாதவி!

மாதவி:—வஸந்தா! அவர் திரும்பி வருவார் என்று உண்மையாக நம்புகிறாயா என்ன? வருபவராயிருந்தால் நான் மூன்றுதரம் சொல்லி யனுப்பியும் பதில் கூடத் தராமல் இருந்திருப்பாரா என்ன? அவர் என்னை மறந்துவிட்டார்.

[வஸந்தா பதில் ஒன்றும் சொல்லாமல் யாழைக் கீழே வைத்துவிட்டு எழுந்து, உதயசந்திரனை நோக்குகிறாள். மாதவி வழக்கவேகத்தில் யாழைக் கையில் எடுத்துத் தந்திகளை மீட்டுகிறாள். கானம்எழும்போது, சுயஞாபகம் வர, சுடுதழலைக் கையில் எடுத்து விட்டதுபோல மாதவி யாழைக் கீழே போட்டு விட்டுத் தானும் எழுந்திருக்கிறாள்.]

மாதவி:—ஏன் வஸந்தா! இன்று உன்பேச்சுக் குறைந்து விட்டது? புருஷோத்தமர் வரவில்லையே யென்றா? வந்துவிடுவார்; கவலைப் படாதே!

வஸந்தா:—(இந்தக் கடைசி வாக்கியத்தைக் காதில் வாங்காமல்) கோவலர் மறுபடியும் உன்னை நாடி வரும்படி வழி செய்யலாம்; நான் செய்கிறேன்....

மாதவி:—(பெருமூச்சுடன்) வஸந்தா; நீ பார்த்திருக்கிறாய் அல்லவா அவளை? அக்கண்ணகி எப்படியிருப்பாள்? சொல் கேட்கலாம்.

வஸந்தா:—(உத்ஸாகத்துடன்) பேசும் பொற்சித்திரம் அவள்; உயிர் ஓவியம்; தெய்வச் சாயல். மனித உருவெடுத்த....ஏன் நீயுந்தான் அவளைப் பார்த்திருக்கிறாயே!

மாதவி:—பார்த்திருக்கிறேன். இருந்தாலும் கேட்டேன். ஆமாம், எனக்கு வஸந்தா என்று ஒரு தோழி இருப்பது போல் அவளுக்கும் ஒரு தோழி இருப்பாளல்லவா?

வஸந்தா:—உம்.....இருப்பாள்....(கல கல வென்று சிரித்துக் கொண்டு) இருக்கிறாள் அவளுக்கும் ஒரு தோழி. ஆனால் அவள் என்னைப்போல் இருக்கமாட்டாள். நான் அவளையும் பார்த்திருக் கிறேன்: அவள் ஒரு கிழவி; தேவந்தி யென்றொரு பார்ப்பனக் கிழம்.

மாதவி:—ஓ! அவளா?

வஸந்தா:—ஆம். சாக்ஷாத் அந்த......

மாதவி:—அதிருக்கட்டும். வஸந்தா, நீ எனக்கு இன்று ஆறுதல் கூறுவதுபோலத்தானே கண்ணகியை விட்டு அவள் கணவன் பிரிந்திருந்தபோது இந்தத் தேவந்தியும் அவளுக்கு ஆறுதல் கூறித் தேற்ற முயன்றிருப்பாள்? பாவம்! பிறர் பாவத்தைக் கொட்டிக்கொண்ட பாவி நான். (கண்ணில் நீர் துளிக்கிறது.)

வஸந்தா:—என்ன இது, மாதவி? கண்ணகி கிடக்கட்டும்..

மாதவி:—அவள் பத்தினி; நான் கணிகை. அவள் புண்ணியவதி; நான் மஹாபாவி. அவள் வாழ்க்கையைக் குலைத்த சண்டாளி நான்!

வஸந்தா:—மாதவி!

மாதவி:—இதெல்லாம் தெரிந்திருந்தும் ஏனோ என் மனம் இன்னமும் அவரையே நாடுகிறது?....(கீழேயிருந்து "அம்மா! அம்மா!" என்று ஒரு சிறுமியின் குரல் கேட்கிறது. அதையும் கவனிக்காமல்) உன் புருஷோத்தமரை நீ மணஞ் செய்துகொண்டு விடு. நம் குலதர்மம் கிடக்கட்டும்..... (மறுபடியும் "அம்மா! அம்மா!" என்று கூப்பிட்டுக்கொண்டு யாரோ மாடிப்படியேறி வருவது காதில் விழுகிறது. அவசரமாய்க் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு) மேகலா, மேலே வா; வஸந்தாவும் இங்கேதான் இருக்கிறாள்.

[மணிமேகலை மேல் முற்றத்தை அடைகிறாள். பூர்ணசந்திரன் உதயமாகி விட்டான். பால் நிலவில் தெய்வக் காட்சி அளிக்கிறாள் மணிமேகலை.]

மணிமேகலை:—அம்மா!

வஸந்தா:—(வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டு) அவர் வந்துவிட்டார். நான் போய்விட்டு இதோ வருகிறேன். (கீழே இறங்கி மறைகிறாள்.)

மாதவி:—இங்கே அருகில் வா, மேகலா! ஏன் இப்படி நடுங்குகிறாய்? பதறாதே. யார் உன்னை அச்சுறுத்தியது? சொல்.

மணிமேகலை:—(சற்று நிதானமாக) அம்மா! இன்று என் தகப்பனார் என்னை அழைத்தார். போக விடைகொடு அம்மா.

மாதவி:—என்ன இது? அவர் மதுரையிலன்றோ இருக்கிறார்!

மணிமே:—சற்று முன் வந்து என்னை அழைத்தார். நான் போகிறேன், அம்மா!

மாதவி:—தூங்கினாயா? கனவு கண்டாயா?

மணிமே:—இல்லை அம்மா இல்லை. நான் இப்போது உன்னைக் காண்பது போல அவரையும் கண்டேன்; நீ பரிவாகப் பேசுவதுபோல அவரும் பரிவாக அழைத்துப் பேசினார்; ஆதரவுடன் ஓரே ஒரு வார்த்தைதான் சொன்னார்.

மாதவி:—என்ன?

மணிமே:—“துறந்து விடு” என்று சொன்னார். அவ்வளவு தான்; உடனே மறைந்து விட்டார்.

மாதவி:—நீ எதைத் துறப்பது? இவ்வயதில்?

[யாரோ தடதடவென்று மாடிப் படியேறி வருவது காதில் விழுகிறது. வஸந்தமாலை கண்களினின்று நீர் வழிந்தோடப் பரபரப்புடன் வருகிறாள். அவள் நாக்கில் வார்த்தைகள் துடித்து நடுங்குகின்றன.]

வஸந்தா:—ஐயோ! என் மாதவி! கோவலர் மோசம் பண்ணி விட்டார்! நான் உனக்கு ஆதரவாகச் சொன்னதையெல்லாம் வீண் வார்த்தைகள் ஆக்கிவிட்டார். இம்மண்ணுலகை நீத்துவிட்டார்.

மாதவி: (சாந்தமாய்) பதறாதே, வஸந்தா! என்ன ஸமாசாரம்; முழுவதும் சொல். புருஷோத்தமர் என்ன சொன்னார்?

வஸந்தா:—மாதவி, உன் கோவலர் பாண்டிய ராஜனால் திருடனென்று கொலையுண்டாராம். வீரபத்தினி அதற்கு வஞ்சமாக மதுரையை எரித்துவிட்டாள். அவளும்எரிந்து . . (பேசமுடியாமல் திணறுகிறாள்.)

மணிமே:—என்னைத் துறக்கச் சொன்னார், அம்மா. நான் அவர் இஷ்டப்படியே நடக்க விரும்புகிறேன். நான் போகிறேன், அம்மா.

மாதவி:—சரி! நீ போ. நீயே எனக்கு வழிகாட்டுகிறாய். நானும் உன்னைப் பின்பற்றித் துறப்பதே நலம். (மதுரை இருக்கும் திக்கு நோக்கி வணங்குகிறாள்.)

(திரை)



# சிவராத்திரி

ஆர். ரங்கநாயகி

---

ஒரு விசாலமான; வனம் இருபது, முப்பது மைல் வரைக்கும் மனிதர்களின் குடிசையாவது, வழிப்போக்கர்கள் வந்துபோய்க் கொண்டிருக்கிற அடையாளமாவது காணப்படவில்லை. மரங்கள் அடர்ந்த அவ்வனத்தில் ஒரு ரமணீயமான தடாகத்தருகில் அநேக மான்கள் வசித்துக்கொண்டிருந்தன. தடாகத்தின் கரையில் வில்வ மரம் ஒன்று இருந்தது. அந்த மரத்திடையில் லிங்கஸ்வரூபத்தில் மஹாதேவர் வீற்றிருந்தார். மான்கள் தினந்தோறும் குளத்தில் ஸ்நானம் செய்து மஹாதேவரைத் தரிசித்துவிட்டுப் பிறகு மேயச் செல்லும். மத்தியானவேளையில் வில்வமரத்தடியில் இளைப்பாறும். சாயந்திரம் மறுபடியும் சிவபெருமானைத் தரிசித்து, குளத்தில் தண்ணீர் அருந்தித் தூங்கச் செல்லும். இவ்வாறு நடந்துவந்த மான்களுக்கு, யாதொரு சாஸ்திரத்தையும் கற்காமலே தர்மஞானம் உண்டாயிற்று. அதனால் அவை ஸந்தோஷமாகத் தங்கள் தோஷமற்ற வாழ்க்கையை நடத்தி வந்தன.

மாசிமாதம்; கிருஷ்ண பக்ஷத்துச் சதுர்த்தசி. ஒரு வேடன் அவ்வனத்துள் நுழைந்தான். அந்திவேளையில் சூரியன் அஸ்தமிக்கும் சமயம். வேடன் பசியுள்ளவனாக இருந்தான். வேடர்களின் பசி சாதாரணப் பசியாக இருப்பதில்லை. ஒன்றும் கிடைக்காவிட்டால், அவர்கள் பச்சை மாமிசத்தையாவது சாப்பிட்டு பசியை ஆற்றுவார்கள். ஆனால் அந்த வேடனுக்கு அப்பொழுது தன்னுடைய பசியைப்பற்றின நினைவில்லை; வருத்தமும் இல்லை.

'வீட்டில் குழந்தை குட்டிகள் பட்டினியாயிருக்கிறார்கள். அவர்களுக்குப் பசி ஆற எதைக்கொடுப்பாள் என் மனைவி? வேட்டையில்லாமல் வீட்டிற்கு எப்படிச் செல்வது? வெறுங்கையோடு வீடுபோய்ச் சேருவதைவிட இரவுமுழுவதும் இவ்வனத்தில் இருப்பதுதான் நல்லது. இரவில் ஒருவேளை ஏதாகிலும் அகப்பட்டாலும் அகப்படும்' என்ற யோசனையுடன் அவன் குளத்தின் கரையிலுள்ள அந்த வில்வ மரத்தின் மேல் ஏறி உட்கார்ந்துகொண்டான்.

தன் குழந்தைகளைக் காப்பாற்றவேண்டும். அதற்காக என்ன கஷ்டப் பட்டாலும், என்ன ஆபத்துக்கு உள்ளானாலும் சரி; அது

---

ஹிந்தியிலிருந்து மொழிபெயர்த்தது.

தான் தன் கடமை என்று அவன் நினைத்திருந்தான். இதைவிட மேலான சிந்தனையாவது ஞானமாவது அவனுக்கு இல்லை. இரவு வந்தது. கிருஷ்ணபக்ஷத்து இரவு. பயங்கரமாய் இருண்ட இரவு. சுற்றிலுமுள்ள பொருள் ஒன்றும் கண்ணுக்குத் தென்படவில்லை. பக்கத்திலுள்ள குளக்கரை கூட நன்றாகத் தெரியவில்லை. மேலும், மரத்தின் கிளைகளும் மறைத்துத் தடை செய்தன. அவ்வாறு தடை செய்த அம்மரத்தின் சிறு கிளைகளை வேடன் அரிந்து கீழே தள்ளினான்.

இதற்குள் இரண்டு மூன்று மான்கள் தண்ணீர் குடிக்க அங்கே வந்தன. மரத்தில் ஏறி உட்கார்ந்திருந்த வேடனைப் பார்த்ததும் அவை நடுங்கின.

பிறகு பயந்த குரலில், "ஏ! வேடா! உன் வில்லில் அம்பை ஏற்றாதே. நாங்கள் சாவதற்குத் தயாராக இருக்கிறோம். ஆனால் எங்கள் வீட்டிற்குச் சென்று எங்கள் குழந்தைகளையும் உறவினர்களையும் ஒருதரம் பார்த்துவிட்டு வருவதற்கு மாத்திரம் உத்தரவு கொடு. அருணோதயமாவதற்கு முன்பே நாங்கள் உன்னிடம் வந்துவிடுகிறோம்" என்றன. வேடன் உரக்கச் சிரித்து, "நீங்கள் என்னை முட்டாளாக்குகிறீர்களா? என் குழந்தைகளெல்லாம் பசியுடன் இருக்கும்பொழுது கையில் அகப்பட்ட வேட்டையை நான் விடுவேனா?" என்றான்.

"நாங்களும் உன் மாதிரியே குழந்தைகளுக்காகத்தான் கேட்கிறோம். நாங்கள் எங்கள் வார்த்தையை நிறைவேற்றுகிறவர்களா அல்லவா என்பதை நீ சோதித்துப் பார்க்கலாம்" என்று மான்கள் மறுபடியும் கெஞ்சின.

வேடனுடைய மனத்தில் நம்பிக்கையும் குதூகலமும் உண்டாயின. சரியாய்ச் சூரியோதயத்திற்கு முன் வரும்படியாய் மான்களுக்கு விடைகொடுத்தனுப்பினான். பிறகு பொழுது போகும் பொருட்டு அம்மரத்தின் இலைகளை ஒவ்வொன்றாகக் கிள்ளிக்கிள்ளிக் கீழே போட்டுக்கொண்டு இரவு முழுவதும் கழித்தான்.

சூரியன் உதயமாவதற்குமுன் திரும்பி வருவதாக மான்கள் பிரதிக்ஞை செய்திருந்தன. ஆகையால் அவை வீட்டிற்குச் சென்று தம்முடைய குழந்தைகள் பந்துமித்திரர்கள் முதலியோரை அன்போடு சந்தித்து, வேடனுடைய ஸமாசாரத்தைச் சொல்லி அவைகளிடம் விடை கேட்டன.

"துஷ்டனுக்குக் கொடுத்த வாக்கை எதற்காகக் காப்பாற்ற வேண்டும்? இங்கிருந்து சத்தம் செய்யாமல் மெதுவாகப் போய் விடலாம். நமக்குச் சக்தி இருக்கிறவரையில் பல்லைக் கடித்துக்

கொண்டு ஓடிவிடலாம்" என்று புத்தி சொல்பவர்கள் அங்கு ஒருவரும் இல்லை.

"அப்படியா! பின்னே வாருங்கள். நாங்களும் உங்களுடன்கூட வருகிறோம். பூரண சம்மதத்துடன் சாவை ஏற்றுக் கொள்பவர்களுக்கு மோக்ஷம் கிடைக்கும். உங்களுடைய அபூர்வமான ஆத்மத்தியாகத்தைப் பார்த்து நாங்களும் புனிதர்களாவோம்" என்றன அம்மான்களின் உறவினர்கள்.

குழந்தை குட்டிகளை எல்லாம் அழைத்துக்கொண்டு வேடனின் குரூரத்தன்மையைப் பரீக்ஷை செய்யப் புறப்படுபவை போல எல்லாம் கிளம்பின.

சூரியோதயத்திற்கு முன் அந்தப் பெரிய மான்கூட்டம் குளத்தங்கரை வந்து சேர்ந்தது. இரவிலே வேடனைச் சந்தித்த மான்கள் முன்சென்று, "வேடா! நாங்கள் கொல்லப்படுவதற்குச் சித்தமாக இருக்கிறோம்" என்றன. கூட இருந்த மற்றமான்களும், "எங்களையும் கொன்றுவிடு. இதனால் உன் குழந்தைகளின் பசி ஆறுமென்றால் இது எவ்வளவு உயர்ந்த காரியம்?" என்று சொல்லி முன்வந்தன.

இம்மொழிகளைக் கேட்டதும் வேடனின் குரூரத் தன்மையும் இரவைப்போல் மறைந்து விட்டது. பகல் முழுவதும் உபவாசம் கிடந்ததாலும் இரவு முழுவதும் விழித்திருந்ததாலும் அவன் மனோபாவனைகளெல்லாம் மாறி மறைந்துவிட்டன. தன் சொற்படி நடந்துகொண்ட மான்களின் நன்னடத்தையைப் பார்த்து அவன் பிரமித்துப்போய்விட்டான். அவன் ஹிருதயத்தில் புதிய ஒளி ஒன்று உதயமாயிற்று. அன்பின் உண்மையை அவன் கற்றுக் கொண்டான். மரத்திலிருந்து கீழே இறங்கி இரண்டு கால்களால் நிமிர்ந்து இறுமாந்து நிற்கும் அந்த மனிதன் நான்கு கால்களோடு குறுகி நிற்கும் பேதை மிருகங்களுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தான். அதேசமயம் ஆகாசத்திலிருந்து வெண்மையான புஷ்பவர்ஷம் உண்டாயிற்று. கைலாஸத்திலிருந்து பெரியவிமானம் ஒன்று வந்து இறங்கிற்று. வேடனும் மான்களும் அதன்மீது ஏறி உட்கார்ந்துகொண்டு இத்தனை மங்களங்களையும் உண்டாக்கிய சிவராத்திரியின் மாஹாத்மியத்தைப் பாடிக்கொண்டே ஆகாயத்தின் வழியாகச் சிவலோகத்திற்குச் சென்றார்கள். இன்று கூட அவர்கள் ஆகாயத்திலே பிரகாசித்துக்கொண்டிருக்கிறார்கள். தர்மத்திலும் சத்தியத்திலும் தவறாத இந்த மான்களை நாம் ஸ்மரிப்பதற்கென்றே மஹா சிவராத்திரியானது உலகில் பிரசித்தமாக இருக்கிறதுபோலும்!

---

# ஆண்மகன் அடைகாத்தல்

எஸ். சோமசுந்தர தேசிகர்

---

'குறத்தி பிள்ளை பெறக் குறவன் காயந் தின்ன' என்பது ஒரு பழமொழி. இப்பழமொழி இந்தத் தமிழ்நாட்டிலே வழங்கு கிறது. இதன்பொருள் யாதென்று எவரையாவது கேட்டால் பின் வருமாறு கூறுவர்: "குறவனுக்கு மனைவியர் பலர் இருப்பர். அவர்களுள் யாரேனும் கருவுற்றுப் பிள்ளை பெற்றால் பெற்றதாய்க் குச் சக்களத்தியாக இருப்பவள் மருந்து வைத்துக் கொல்லாதபடி முதலில் அவளுக்குக் கொடுக்கும் மருந்தை, கணவனான குறவன் உண்டு பார்ப்பான். அதனிற் குற்றமில்லையென்று கண்டபின்னரே பிள்ளைபெற்றவளுக்கு அம்மருந்தைக் கொடுப்பது வழக்கம்" என் பர். அவ்வாறு ஒரு வழக்கமும் உண்டோ என்பது ஐயத்திற்கு இடமாக இருக்கிறது.

மேலே கூறிய பழமொழியேயன்றி மற்றுஞ் சில பழமொழி கள் இந்தப் பழமொழியைப்போன்ற பொருளுடையனவாக வழங் குகின்றன. அவையாவன: 'அவள் முட்டையிடுகிறாள். அவன் அடை காக்கின்றான்' என்பன. இவற்றின் உண்மைப் பொருள் இவையெனத் தெரியவில்லை. பலர் பலவிதம் கூறுவர். ஆயினும் இந்தப் பழமொழிகளைக் கூறினால் பழமொழி கொண்டான் வேலையின்றி வீட்டில் வீண்காலங் கழிக்கின்றான் என்று பொது வாகக் கொள்ளப்படுதல் உண்டு. இந்தப் பழமொழிகளின் உண் மைப் பொருள் காணவேண்டுமாயின் பின்வருஞ் செய்திகளை நாம் அறிதல் வேண்டும்.

இமயமலைச் சாரலில் இப்பொழுது ஷான் நாடுகள் என்று வழங்கும் நாடுகளின் வடக்கே ஒரு தேசம் இருக்கிறது. அதனை ஸார்டண்டன் என்று கூறுவர். இந்தச் சொல் பாரஸீகச் சொல். இந்தச் சொல்லுக்குப் பொற்பல் (தங்கப்பல்) என்பது பொருள். இந்த நாட்டிலுள்ளோர் எல்லோரும் பல்லுக்குப் பொன் மூடி யிட்டிருப்பர். அதனாலே இந்த நாட்டுக்கே பொற்பல் என்று பிற நாட்டார் பேரிட்டனர் போலும்! இந்த நாட்டுக்குச் சென்று வந்த மார்க்கோ போலோ என்ற வெனிஷிய வர்த்தகர் ஒருவர் இந்த நாட்டில் மனைவி பிரசவிக்கக் கணவன் பிள்ளையோடு அறையில் இருப்பதாகக் கூறுகிறார். அவர் கூறுவன வருமாறு: ஒருவ

னுடைய மனைவி கருவுயிர்த்தபோது குழந்தையை முழுக்காட்டிக் கீழே போடுவார்கள். பின்னர், பிரசவித்தவள் எழுந்து தன் வீட்டுக் காரியங்களைக் கவனிப்பாள். கணவன் குழந்தையோடு 40 நாள்வரையில் பாயிற் படுத்திருப்பான். அவனுடைய உற்றார் உறவினர் அவன்பால் வந்து பிள்ளையைக் குறித்து விசாரித்து மகிழ்ச்சியடைவதோடு விழாக் கொண்டாடுவர். இவர்கள் அவ்வாறு செய்வதற்குக் காரணம், மனைவி கருவுயிர்த்ததனுல் மிக்க வேதனையடைந்தாளாதலின் அந்த வேதனைக்காகக் கணவன் அவ்வாறு செய்யவேண்டுவது அவசியமெனக் கூறுகின்றனர்.

அமெரிக்கா தேசத்திலுள்ள கயானு என்ற பகுதியிலுள்ள நாட்டுவாசிகளின் வழக்கங்களைக் கூறும்பொழுது தர்ண்* என்பார் பின்வருமாறு கூறுகிருர்:

"முதலாவதாகப் பிள்ளைப் பேற்றை ஆராய்வோம். அதனில் இதுவரை நாம்கேட்டிராத வழக்கமொன்று அந்த நாட்டினரிடையே இருப்பதாக அறிவோம். அது குவாது என்ற 'ஆடவர் பிள்ளைப் பேறு' என்பதே. உலகத்திலே பல பாகங்களுள் நாகரிகமற்ற மக்களிடையே இந்த ஆண்பிள்ளைப்பேறு இயற்கையாகக் காணப்படினும் அது நமக்கு வியப்பைத் தருகிறது. குழந்தையை உயிர்ப்பதற்குச் சில மாதங்கள் முன்னரே தகப்பன் சிலவகைப் புலாலுணவை நீக்குவான். மனைவி பிள்ளைபெறும்வரையில் வேலை செய்வாள். பிரசவ வேதனை கண்டவுடன் சில பெண்டிரோடு காட்டில் தனியிடத்திற்குச் செல்வாள். அங்கே தொட்டிலிடுவாள். பிள்ளை பிறக்கும். அன்றோ மறுநாளோ மற்றைய பெண்டிரைப் போலக் கருவுயிர்த்தவளும் ஒன்றும் நடவாததுபோல வீட்டுக் காரியங்களைக் கவனிப்பாள். கணவன் உடனே தனது தொட்டிலைக் கட்டிக்கொண்டு படுத்துக்கொள்வான். அவன் குளிப்பதில்லை, குடிப்பதில்லை; ஊன் தின்பதில்லை; இலேசான கஞ்சியும் கஸவா உணவும் கொண்டு படுத்திருப்பான். அவனை மற்றைய ஸ்திரீகளும் போஷிப்பர். முதலில் இச்செய்தியை நான் நம்பாவிடினும் என்னுடைய வேடர்களும், ஓடக்காரர்களும் திடீர் திடீரென நின்ற பிறகே இதன் உண்மை எனக்கு விளக்கமாயிற்று. இந்த வழக்கம் எவ்வாறு உண்டாயிற்று என்று அறிவதற்கில்லை. தாயைவிடப் பிள்ளைக்குத் தகப்பனிடம் அதிக உறவு இருப்பதாகக் கருதுவதால் இந்த வழக்கத்தை மேற்கொள்வதில் எந்தத் தகப்பனேனும் சிறிதளவு தவறுவானுயின், குழந்தை துன்பமுறுமென அச்சாதியினர் கருதுகின்றனர். தகப்பன் பெரிய பல்லுடைய நீர்ப்பறவையொன்

---

* *Among the Indians of Guiana* by Edward Thurn.

றின் மாமிசத்தைத் தின்றால் குழந்தைக்கும் பல் பெரியதாகும் என அந்நாட்டினர் கருதுகின்றனர். அவன் புள்ளிச் சுறையைத் தின்றால் குழந்தையின்மேலும் புள்ளி உண்டாகுமெனக் கருதுகின்றனர். தகப்பன் குளித்துக் குடித்து வேட்டை முதலியன ஆடினால் குழந்தைகளும் அவைகளைச் செய்ததாகப் பாவிக்கப்படுமாம்!"

ஐரோப்பாவிலே பிரான்ஸின் தெற்கிலும் ஸ்பெயின் தேசத்திலும் இந்த வழக்கம் இருந்ததாகச் சரித்திர ஆசிரியர் பலரும் கூறுவர். பாஸ்க்கியரின் அடைகாத்தல் (*Couvade*) என்ற தலைப் பின்கீழ் 1877-ஆம் ஆண்டு ஜனவரிமாதம் 19-ஆம் தேதியில் ரிபப்ளிக் பிரான்ஸேஸ் (*Republique Francaise*) என்ற பத்திரிகையில் ஒரு கட்டுரை வெளிவந்தது. 1878-ஆம் ஆண்டில் ஜூலியன் வான்ஸோன் (*Julien Vinson*) அதனைக் குறித்து எழுதும்போது லூஸிநியதே* என்ற நூலிலிருந்து ஒரு செய்யுளைக் காட்டி யிருக்கின்றார். அதனில் 'அமெரிக்கர், கார்ஸிகர், இபேரியர், பிரான்ஸிலுள்ள வேனரனியர் இவர்களிடத்திலும் நாவேரிலும் ஒரு மனைவி பிரசவிக்கும்போது கணவன் படுக்கையைவிட்டு எழுந்திருக்க மனைவி கருவுயிர்ப்பாள். பின்னர், கணவன் அடைகாப்பான்' என்று காணப்படுகிறது. ஆனால் வான்ஸோன், பாஸ்க்கியர் இந்த வழக்கமுடையவரல்லர் என்று எழுதுகிறார். ஆயினும் அவர்களுக்குள் இதனைப்போன்ற வழக்கமொன்று இருந்திருக்கவேண்டுமென்று தோற்றுகிறது. டயடோரஸ், கார்ஸிகாவில் இந்த வழக்கமுண்டென்பர். அபோலனியஸ் ரோடியஸ் போன்டாஸிலுள்ள டிபோனி ஜாதியரிடம் இந்த வழக்கம் உண்டென்பர்.

சீனாவின் ஒரு பகுதியிலே இந்த வழக்கம் இருந்து வருகிறதாகத் தெரிகிறது. இஃதன்றி ஆப்பிரிக்காவிலும் போர்னியோ மொலுக்காஸ் தீவுகளிலும் இந்த வழக்கமுண்டெனத் தெரிகிறது என்று அவரே கூறுகிறார்.

ஆகவே ஆண்பிள்ளை அடைகாத்தல் என்பது பழமையானதொரு வழக்கம் என்று ஏற்படுகிறது.

---

* லூஸிநியதே (Luciniade) என்ற நூல் ஸாகோம்ப் என்பவரால் எழுதப்பட்டு 1790-ஆம் ஆண்டு பாரிஸில் வெளியிடப்பட்டது.




## சுத்தியின் கர்வம்

எஸ். கிருஷ்ணமூர்த்தி

---

ஒருநாள் ஒரு சுத்தி அதிகமான கர்வம் கொண்டு விட்டது. அதற்குத் தலைகால் தெரியவில்லை. அதைப் பார்க்கச் சில ஆணிகள் வந்தன. உடனே சுத்தி தலை நிமிர்ந்துகொண்டு எங்கேயோ பார்க்க ஆரம்பித்து விட்டது. "சுத்தியாரே, சுத்தியாரே" என்று ஆணிகள் கூப்பிட்



டதையும் அது மதிக்கவில்லை. ஆணிகளுள் ஒன்று சிறிது தைரியமுள்ளது. அது சுத்தியின் பக்கத்தில் போய் நின்று, "சுத்தியாரே, ஒரு விசேஷம் கேட்டீரோ?" என்று சப்தம் போட்டுக் கேட்ட பிறகுதான் சுத்தி தன் தலையைத் தாழ்த்தி ஆணிகளைப் பார்த்து, "அடே பயல்களா! கொஞ்சங்கூட மரியாதை இல்லாமல் என்னிடம் வந்து பேசுகிறீர்களா? ஹூம்! தூர நில்லுங்களடா! அடே, இன்றைக்கு ஆசாரி என்ன செய்யப் போகிறான் தெரியுமா? அதோ பாருங்கள்! பலகைகள், பெட்டி செய்வதற்கு. உங்களை ஒரு கை பார்க்கிறேன். இன்றைக்குத் தலை ஜாக்ரதை" என்று பெருமையுடன் சொல்லிக் கொண்டு ஆணிகளை விட்டுச் சென்றது.

---

ஓர் ஆங்கிலக்கதையைத் தழுவி எழுதியது.

"அடேயப்பா! இந்தக் கர்வம் ஆகாது சுத்தியாருக்கு" என்றது ஓர் ஆணி. "சுத்தியார் என்னவேண்டியிருக்கிறது; சுத்தி என்று சொல்லு" என்றது மற்றோர் ஆணி. "அதன் கர்வம் எப்போதுதான் போகுமோ!" என்று பெருமூச்சு விட்டது மற்றொன்று. "அதன் கர்வத்தை அடக்க முடியாவிட்டால் நாமும் ஆணிகளா!" என்று முதல்ஆணி ஆத்திரத்துடன் சொல்லியது. இப்படிச் சிறிது நேரம் பேசிவிட்டுக் கடைசியில் அவை ஒரு யுக்தி செய்தன.

பலகைகளெல்லாம் சரியான அளவுக்கு வெட்டியாயின. ஆசாரி கையில் சுத்தியை எடுத்துக்கொண்டு தன் மடியில் பார்த்தான்; வீடெங்கும், இடம் இடமாய்ப் பார்த்தான்; தொட்டிலில் கூடப் பார்த்தான். ஆணிகளைக் காணவில்லை. அவனுக்கோ மிகவும் அவசரம். பெட்டியைச் செய்துவிட்டு ஒரு கலியாணத்திற்குப் போகவேண்டும். தேடித் தேடிப் பார்த்தான், ஆணிப் பெட்டியை. கடைசியில் தற்செயலாய்க் கட்டிலுக்கு அடியிலே கண்டான். ஆணிகள் அங்கே இருந்தன. "அடேடே! இங்கேயா இருக்கின்றன சனியன்கள்?" என்றான் ஆத்திரத்துடன். எடுத்தான் சட்டென்று சுத்தியை. பலகைகளை ஒழுங்காகப் பிடித்தான். அடித்தான் அவசரமாய் ஆணிகளை. ஆனால் அவனுடைய அவசரத்தில் சில ஆணிகள் வளைந்தன; சில ஆணிகள் கீழே விழுந்தன; சில ஆணிகள் கோணலாய் உள்ளே போயின. ஆசாரிக்குக் கோபம் வந்துவிட்டது. "இந்தப் பழைய ஆணிகளே இப்படித்தான்" என்று ஒருபுது ஆணியை எடுத்து நேராகப் பிடித்துக்கொண்டு ஆத்திரத்துடன் சுத்தியால் ஓங்கி அடித்தான். அவன்



கைவிரல்மேல் விழுந்தது அந்த அடி! அப்பொழுது வந்த கோபத்தில் அவன் சுத்தியைக் கீழே விட்டெறிந்தான். சுத்தியின் கை ஒடிந்து விழுந்தது. ஆசாரி பெருமூச்சு விட்டான். "நாளைக்குத் தான் பெட்டி வேலை! இந்த உதவாப் பயல் சுத்தியைத் தலையைச் சுற்றித்தான் போட வேண்டும். அடே, புதுச்சுத்தி ஞாபகமே இல்லையே!" என்று எழுந்திருந்து போனான்.



"சுத்தியாரே, சுத்தியாரே; ஒரு கை பாருங்களேன்? இன்னும் தயவில்லையா?" என்றது ஓர் ஆணி. "சுத்தியார் தூங்குகிறார்; அவரை ஏனடா எழுப்புகிறாய்?" என்றது மற்றொன்று. கை ஒடிந்த சுத்தி பதில் பேசவேண்டுமே! ஆணிகள் சொல்வதையெல்லாம் தெய்வமே என்றுதான் கேட்டுக்கொண்டிருந்தது. காதைப் பொத்திக் கொள்ளலாம் என்றாலோ கை இல்லையே!

---



## கழல் பாட்டு

ஸரோஜினி

---

1. ஓரி உலகெலாம்,
   உலகெலாம் சூரியன்;

   சூரியன் தங்கைக்கும்
   சுந்தர வல்லிக்கும்
   மாயக் கழச்சிக்கும்
   நாளைக் கலியாணம்.

2. ஈரி இலைசிறிது,
   ரத்தங் கொடிபறக்க
   பாண்டி தலைவிரிக்கப்
   பட்டத்து ராஜா ஓடிவர.

3. முச்சைக்குக் கச்சைகட்டி,
   மூந்திரிக்குக் கால்நாட்டி.

4. நான்கு சுமங்கிலி ஆடவே
   நாங்களும் மத்தளம் கொட்டவே.

5. அஞ்சும் பிஞ்சும் கைதட்ட
   ஆத்துக் குள்ளே தீவட்டி.

6. ஆறவளே போறவளே
   அரும்பி நடப்பவளே
   திரும்பிப் பார்த்தால் திட்டிவிளே.

7. ஏழம்பூ சீனிப்பூ
   இருகரையும் பிச்சிப்பூ
   கோதி முடிப்பார்க்குக்
   கொண்டை யெல்லாம் தாழம்பூ.

8. எட்டுத் தட்டும் கூட்டமாம்
   கலிங்க ராஜா ஓட்டமாம்
   கயிறு சுத்தி ஆட்டமாம்.

9. ஒன்பது குத்தி உலைபோட்டுச்
   சம்பா குத்திச் சமைத்திறக்கி.

10. பதிபதி நிலமே
    பதிஞ்சுக்கோ நிலமே
    செண்பக வனமே
    சிவகாமித் தாயே!



# குறுந்தொகை

மு. இராகவையங்கார்

---

நிலவுலகில் வழங்கும் பழைய பாஷைகளின் அழகும் வளமும் அவ்வக்காலத்துத் தோன்றிய புலவர் பெருமக்களாற் போற்றப்பட்டுச் செழித்தன என்பதையும் அவர்கள் புகழுடம்பு இன்றுவரை நின்று நிலவுதற்கு அன்னோரியற்றிய காவியாதி நூல்களே காரணம் என்பதையும் அறியாதார் யாவர்? காளிதாசர் கம்பர்போன்ற கவிச்சக்கரவர்த்திகள் அறிஞர்கள் கண்முன் அழகிய உருக்கொண்டு தோன்றும்படி செய்துவருவன அவர்கள் பெருநூல்களே யன்றோ? ஆனல், அந்நூல்களைக் கற்றறிந்தவர்களாலே யன்றி அவற்றைக் கற்குந் திறமில்லாராலும் அம்மகாகவிகளின் அருமை பெருமைகள் அறிந்து பாராட்டப்படுதலை நாம் எங்கும் காண்கின்றோம். அதனல், அறிஞர்கள்மட்டும் அறிந்து சுவைத்தற்குரிய அவர்கள் பெருநூல்கள் தவிர ஏனையோரையும் கவர்தற்குரிய ஏதுவொன்று உண்டென்பது தெரியலாம். இவ்வாறு எல்லாவுள்ளங்களையும் ஒப்பக் கொள்ளை கொண்டு வருவன எவையென்று ஆராயுமிடத்து, அக்கவிவேந்தருடைய கிரந்தங்களோடு, பற்பல சந்தர்ப்பங்களில் அவர்களாற் பாடப்பெற்ற தனிப்பாசுரங்களுமாம் என்பது தெரியலாகும். அம் மகாகவிகள் இயற்றிய நூல்களின் பெருமைபற்றிக் கற்றோர்வாயினின்று பொதுமக்கள் கேட்டறிந்திருத்தல் கூடும். ஆனல், அவ்வாறறிந்ததினும் தாமே பல்வழியாகவும் அறிந்துகொண்ட தனிப்பாடல்களால் பன்மடங்கு அதிகமான இன்பத்தை அன்னோர் அடையத் தடையில்லை. நல்லிசைப் புலவராகிய ஔவையார் இன்றும் நம் உள்ளத்தும் இல்லத்தும் வாழ்வதுபோல விளங்குவது அவரது அரிய பாடல்களாலும் பழமொழிகளாலுமே யன்றோ? ஔவைப்பிராட்டியார் இயற்றிய பெருநூல்களொன்றுமே கிடையாதிருப்பவும் அவரை ஏனையோரெல்லாரினும் அதிகமாக நாம் பாராட்டி வருவதும் அவற்றாலேயாம். இத்தகைய தனிப்பாடல்கள் அவை பாடிய பெருமக்களின் வாழ்க்கை வைபவங்களோடு கலப்புற்றவையாதலால், அவை யாவும் அவரது வரலாறுகளை அறிதற்குக் கருவிகளாகவும் உள்ளன. சில இடங்களில் இப்பாடல்களின் உண்மையுருவும் சரித்திரக்கூறும் மாறுபட வழங்கியனவும் உண்டு. ஒப்பிலாமணிப்புலவரென்பார் குமணனைப்பற்றிப் பாடியதாக வழங்கும் "ஆடெரி பரந்த கோடுயே ரடுப்பில்" என்ற தனிப்பாடலை நாட்டார் பலரும் நன்கறிவர். இப்பாட்டின் ஆதியுருவம் எவ்வாறு சிதைந்து போயிற்றென்பதும், இதுபாடிய புலவரது பெயர்மாறுபாடும் இப்போது

---

குறுந்தொகை: மூலமும், மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதிய உரையும்; விலை ரூ. 7—8—0.

வெளிவந்துள்ள புறநானூற்றுப் பதிப்பால் அறியலாம். இங்ஙனந் திரிந்து பிறழ்ந்தாயினும் பழம்பாடல்களிற் சில இன்றும் வழங்கிவருதலை நோக்கு மிடத்துக் கற்றோரன்றிக் கல்லாதாருள்ளங்களையும் தம் வசப்படுத்தும் அழகும் அமைதியும் அவற்றிற் பொதிந்துள்ளமை வெளியாகின்றது. இம் மட்டோ! இத்தனிப்பாக்கள் சந்தர்ப்பத்துக்கேற்ற சரிதப்பகுதியோடு கலந்து சொற்பொருள் வளங்கொண்டு திகழ்வதால், முன்னோர் பெருமையினும் பாஷையின் அழகினும் தமிழறியாதாரையும் ஈடுபடச்செய்து அவர் நெஞ்சில் பாஷாஞானச் சுடர் கொளுவுதற்குத் தூண்டுகோல் போலவும் நின்றுதவு கின்றன. "நாராய் நாராய் செங்கால் நாராய்" என்ற கதையோடு அமைந்த பாடலாற் கவரப்படாதவர் நம்மில் யாவர்? தமிழறியாத வேற்று நாட் டாசனையும் தன் பொருள்வளத்தால் வசப்படுத்தியது கபிலரது குறிஞ்சிப் பாட்டன்றோ?

இங்ஙனமாய பழந்தனிப்பாடல்களிலே பொய்யாமொழியார், கூத்தர், கம்பர் முதலிய கவியரசர்கள் பாடியவை எத்தனையோ அறிந்திலம். அவை யெல்லாம் அடைவுபெறத் திரட்டப்பெற்றுப் பின்புள்ளார் பெற்று மகிழும் வண்ணஞ் செய்வதில் நமக்கு முன்னிருந்தோர் தவறிவிட்டனர் என்றே சொல்லவேண்டும். ஆனால், இத்தகைய திரட்டுக்களின் இன்றியமையாமை யைப் பிற்காலத்தவரைப்போலப் பழங்காலத்துச் சான்றோர் சிறிதும் மறந்து சென்றவரல்லர். அங்ஙனம் அவர்கள் மறந்திருப்பின், தமிழ்மொழி யின் பழமை பெருமைகளைப்பற்றி மேடை முன்னின்று திடமாகப் பேசு தற்கு நமக்கு வாயில்லா திருந்திருக்கும். அவ்வாறு ஆகாவண்ணம் முன்னோ ரின் அரியபாடல்களைப் பண்டைத் தமிழ்மக்கள் முறைப்படக் கோத்துவைத் திருப்பது நம்மனோர் செய்த பாக்கியமே எனலாம். அன்றியும் முன்னூல் களுள்ளே 'பழந்தனிப்பாடற்றிரட்டு' என்று சொல்லத்தக்க தொகைநூல் களே மிகுதியாகக் காணப்படுதல் தமிழின் ஒரு தனிச் சிறப்பாகும். சங்கநாளில் தோன்றிய சிலப்பதிகாரம் மணிமேகலைபோலும் இலக்கியங் களும் திருக்குறளாதிக் கீழ்க்கணக்கு நூல்களும் ஒழிய ஒழிந்தவை பெரும் பாலவும் இத்தொகைநூல்களே. இதனை நோக்குமிடத்துத் தம் காலத்துக்கு முன் விளங்கிய புலவர் பெருமக்களின் பாடல்களில் முன்னோர்க்கு இருந்த அவாவும் மதிப்பும் நன்கு வெளியாகின்றன. இங்ஙனம் தொகுக்கப்பட்ட நூல்கள் எட்டென்பதும் அவற்றின் அருமை பெருமைகளும் தமிழறிஞா நன்கு தெரிந்தவை. இவற்றுட் புறநானூறு பதிற்றுப்பத்து இரண்டும் புறத் திணைபற்றியும் ஏனை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பரிபாடல், கலித் தொகை, அகநானூறு என்ற ஆறும் அகத்திணைபற்றியும் அமைந்தவை.

இவை யாவும் பண்டைத் தமிழ்நாட்டாரின் வாழ்க்கை வரலாறுகளையும், நடையுடை பாவனைகளையும், நாட்டின் அமைதிகளையும், பிற பெருமைகளையும் தெளிய விளக்குவன. இச்செய்யுட்களைப் பாடிய புலவர்களின் தொகை ஐஞ் ஞூற்றுக்கு மேற்பட்டதாம். சங்ககாலத்துப் புலவர்களுள் சாத்தனார் கபிலர் போலத் தனிநூல்கள் இயற்றியவர் எத்தனையோ பேர் இருந்திருத்தல் வேண்டும். அந்நூல்களில் ஒன்றும் இப்போது அகப்பட்டிலது. ஆனால், அன்னோர் இயற்றிய தனிப்பாடல்களாக நமக்குக் கிடைத்துள்ளனவோ

பலவாம். இப்பாடல்களினின்று, தாம் கொண்டிருந்த மனோபாவங்களை இயற்கைநலம் பெருக உள்ளதுள்ளபடியே எடுத்துரைப்பதில் பண்டைப் புலவர்கட்கு இருந்த தூய்மையும் ஊக்கமும் சுதந்திரமும் நன்கு விளங்குவதோடு, இத்தகைய கவித்திறத்தைப் பின்பிருந்தோர் பெற்றிருந்தவரல்லர் என்பதும் விசதமாகும். புறப்பாட்டுக்கள் மட்டுமன்றி அகப்பாடல்களும் அத்தரத்தனவே. ஒவ்வொரு திணைதுறை விகற்பத்தைச் சிறப்பித்து, தம்மை அபிமானித்த அரசன் முதலியவர்களைப் பாட்டுடைத்தலைவராக்கிப் பாடும் வழக்கு முன்னாளில் தமிழ்மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டு வந்தது. அவ்வத் திணைதுறைகளிலே, முதல்கருவுரிப்பொருள்களின் இயற்கைச் சிறப்புகளைத் தம் மனோதர்மங்களுடன் எடுத்து விளக்கிய அருமைபற்றி, அத்திணை துறைகளாற் பெயர்பெற்ற புலவர்களும் உளர்.

இங்ஙனமாக அமைந்த தொகைகளிலே தலைசிறந்து நிற்பது குறுந்தொகையாம். செய்யுளமைதி நோக்கி "நற்றிணை நல்ல குறுந்தொகை" என இரண்டாவதாக இந்நூலை முன்னோர் கூறினும் இதுவே தலைமையும் பெருமையுமுடையதென்பதற்குப் பல காரணங்கள் கூறலாம். தெய்வ சரித்திரத்தாற் பிரசித்தி பெற்ற பாடலைத் தன்முகப்பிற் கொண்டுள்ள பெருமை இந்நூற்கே உரிய தலைமைச் சிறப்பாகும்.

"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்"

எனத் திருநாவுக்கரசுநாயனாரால் வரலாற்றுடன் பாராட்டப்பட்டதன்றோ அத்தெய்வப்பாடல்? நன்பாட்டுப் புலவனாய் என்றது, நல்லபாட்டைப் பாடிக் கொண்டு சென்ற புலவனாய் என்றபடி. இப்பாட்டு, 'கொங்கு தேர்வாழ்க்கை' என்பதும், அது பாடிய சரிதமும் யாவரும் அறிந்தவை.

"பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக்
கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப்
பொற்குவை தருமிக் கற்புட னளித்த
. . . கருணையெம் பெருமான்" (கல்லாடம்)

என்றார் முன்னோரும். குறுந்தொகையுள் இப்பாடல் இரண்டாவதாக அது தொகுத்த பூரிக்கோவால் அமைக்கப்பட்டுளது. ஆயின், இறையனார் பாசுரமாகிய இதனை முதற்செய்யுளாக என் அவர் தொகுத்தனரில்லையெனின், அப்பூரிக்கோ முருகக்கடவுள்பத்திமை உடையாரென்பது அக்கடவுளைப்பற்றிய பாட்டை முதற்கண் வைத்துப் போந்ததினின்றும், அஃதறிந்து பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்தினின்றும் அறியப்படுதலின், காப்புப்போன்ற அச்செய்யுளை நீக்கி நோக்குமிடத்து இறையனாரதே முதன்மைவாய்ந்ததென்பது போதரும். இனி இரண்டாவதாகக் கூறற்குரிய சிறப்பு, அரிய தொடரொன்றை வழங்கிய புலவர்க்கு அத்தொடர்மொழியே இயற்பெயர்போல வழங்கியதில் இந்நூலே முற்பட்டிருத்தலாம்.* மூன்றாவது, கீழ்க்கணக்குநூல்களுள் குறள்போல, இக்குறுந்

*இதன் விரிவை இக்குறுந்தொகை வெளியீட்டின் முகவுரையிலுள்ள 3-4-ஆம் பக்கத்துக் காண்க.

தொகையும், சில்வகை யடிகளிற் பல்வகைப் பொருள்களைச் செறித்துக் காட்டும் சிறப்பாகும். இதுபற்றியன்றோ நல்லறிவுடைய தொல்பேராசானும் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியரும் ஆகிய பெரியாரிருவருரையும் இந்நூல் வேண்டுவதாயிற்று.

இவ்வாறு அடியளவாற் குறுமையும், ஆழத்தால் நெடுமையும் கொண்டு தொகைநூல்களுள் தலைசிறந்து நிற்கும் இந்நூலை அலங்கரித்து நின்ற அவ் வழகிய உரைகள் எக்காரணத்தானோ வழக்கு வீழ்ந்தன. அதனால், 'எழுதினர் பிழைப்பும் எழுத்துரு வொக்கும் பகுதியின்வந்த பாடகர் பிழைப்பும்' இதன் கட் பல்லிடங்களினும் மலிந்து பொருள் செவ்வனே புலப்படற் கிடனின்றி அமைவதாயிற்று. நூலின் அருமைபற்றி இந்நூலைப் பதிப்பிக்கச் சிலர் முற்பட்டனரேனும், தமிழறிஞர்க்கு இந்நூலில் இருந்த ஆர்வத்தைத் திருத் தம் பெறாத அப்பதிப்புக்கள் தணித்தனவல்ல. பேராசிரியரும் நச்சினார்க்கினி யரும் ஆராய்ந்து அளவிட்ட இந்நூல், கல்வியுங் காட்சியுமுடைய அத்தகைப் பெரியாராலன்றிச் செப்பம்பெறவும் கூடியதோ? அப்பெரியார் யாவர் என் பதை நம்காலத்துத் தமிழுலகம் நன்கு அறியுமாதலின், அத்தகையாரையே அஃது எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. எதிர்நோக்கியபடியே, குறுந்தொகை பற்றி யமைந்த நெடுங்குறை இப்போது நீங்கிவிட்டது. சங்கச்செய்யுட்களின் அருமை பெருமைகளைத் தமிழ்மக்கள் நன்கறிந்து உவக்கும்படியும், பிறநாட்டு மக்கள் தமிழின் தொன்மை பெருமைகளைத் தெரிந்து வியக்கும்படியும்செய்து, தமிழாராய்ச்சித் துறைக்கே புத்துயிரும் புதுயுகமும் உண்டாக்கிவைத்த மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்களது அரியபெரிய ஆராய்ச்சிக்குட் பட்டுத் தன் இயற்கை யழகோடு செயற்கை நலமெலாந் திகழ இந்நூல் இப் போது வெளிவந்திருப்பது நம்மனோர் பெரும்பேறேயாகும். ஐயரவர்களைக் கொண்டு இப் பேருபகாரத்தைப் புரிவித்த சென்னைச் சருவகலாசங்கத் தாரை நாம் முதலில் வாழ்த்துவோமாக. அரிதிற் பெற்ற பிரதிகள் பல வற்றைக் கொண்டு பன்னெடுங்காலமாக ஆராய்ந்து ஆராய்ந்து பாட சுத்தங் களைக் கண்டு எண்ணற்ற பொருட்குறிப்புக்களுடன் உரையிட்டு வெளியிட் டுள்ள இந்நூற்பதிப்பினைத் 'தமிழ்ப்பொருட் களஞ்சியம்' என்றே நாம் கூறலாம்.

முன்பு வெளிவந்தவற்றுடன் இவ்வெளியீட்டினை ஒப்பிட்டு நோக்கு மிடத்து இதன் அருமைபெருமைகள் மலையிலக்காக விளங்கும்.

'அதவத் தேழுகளிறு மிதித்த வொருபழம் போல'

என முற்பதிப்புக்களிற் கண்ட தொடரிலே களிறு என்பது துளிறு எனவும்,

'யாமெங் கூழைக் கேர்மணங் கொணர்கம்'

என்று அதனுட் காணப்படும் தொடரிலே ஏர்மணம் என்பது எருமண் எனவும்,

'அண்டர், கயிறரி பெருந்திறத் தழுந்துந் துறைவன்'

என அப்பதிப்புக்களில் உள்ள தொடரிலே 'பெருந்திறத்தழுந்தும்' என்பது 'எருத்திற் கதழும்' எனவும் இப்போது திருத்தம் பெற்றுள்ளமை அறிஞர்க் கெல்லாம் பெருமகிழ்ச்சி விளைப்பனவாகும். இத்திருத்தங்களின் பொருத்

தங்களும் நயமும் அவ்வவ்விடங்களில் தரப்பட்டுள்ள குறிப்புக்களாலும் உய்த்தறிவாலும் தெளிவாகக் கூடியன. இவைபோல, எழுத்துரு வொக்கும் பகுதியின் வந்த பாடகர்பிழைப்புக்கள் எத்தனையோ பல இப்பதிப்பினுட் செப்பஞ் செய்யப்பெற்றுள்ளன. அடிப்பிரிப்புக்களை அறியாது மயங்கி அமைக்கப்பட்டவை பாட்டமைதிபெற ஒழுங்குபடுத்தப்பெற்றன. உதாரணமாக, 'வாரா ராயினும்' என்ற பாட்டை நோக்குக. விடுபட்ட சீர் தொடர்களின் குறைகள் நிரம்பியவிடங்கள் பல. அறிதற்கரிய பழைய வழக்காறுகளைத் தெளியவைத்த பகுதிகளைப் பல்லிடங்களினும் காணலாகும். 'சிலம்புகழி நோன்பு' என்பதற்கு ஐயரவர்கள் எழுதிய குறிப்பு அறிந்து போற்றத்தக்கது. இதுபோன்றவை பலவாம். நூற்பாடற்கு அமைத்த கூற்று விளக்கமும் பதவுரையும் முடிபும் கருத்தும் கற்றோரேயன்றி மற்றோரும் இவ்வரிய நூலை எளிதில் அறியும்படி செய்யவல்லன. இவற்றையடுத்துத் தரப்பட்டுள்ள மேற்கோளாட்சி ஒப்புமைப்பகுதிகள் ஐயரவர்களது ஆண்டு பலவான ஆராய்ச்சியின் விளைவாதலால், தமிழ்மக்கட்கெல்லாம் கிடைத்தற்கரிய சங்கநிதி என்றே சொல்லுந் தரத்தன. இவற்றினின்று அரிய செய்திகள் பல வெளியாவதுடன், இவை ஏனைச் சங்கச்செய்யுள் பலவற்றின் குறைப்பகுதிகளையும் சுத்த பாடங்களையும் உண்மைப்பொருள்களையும் தெளிந்துணர்தற்குச் சீரிய கருவிகளாகவும் உள்ளன. நூன்முகப்பில் அமைத்த நூலாராய்ச்சி, தமிழ்மக்களொவ்வொருவரும் தவறாது படித்து இன்புறுதற்குரியது. அகத்திணைபற்றிய இந்நூல் வழக்காறுகளையெல்லாம் பாகுபடுத்திக்கொண்டு தேனொழுக்கான நடையில் தெளிய விளக்கியுள்ள இப்பகுதி படிக்கப் படிக்கத் தெவிட்டாததாகும். முகவுரையினின்று நூலைப்பற்றிய அரிய பல செய்திகளைத் தெரியலாகும். வழக்கம்போல ஈற்றில் அமைத்த அரும்பத முதலியவற்றின் அகராதி ஆராய்ச்சியாளர்க்கும் பிறர்க்கும் இன்றியமையாக்கருவி என்பது சொல்ல வேண்டா.

இங்ஙனமாகக் கிடைத்தற்கரிய நன்மணிகளெல்லாம் மாசறக் கழுவி ஒருங்கு கோக்கப்பெற்று ஒளிர்கின்றது இக்குறுந்தொகைப் பொன்னூல். பழம்பேரணிகளையெல்லாம் செப்பனிட்டுத் தமிழ்த்தெய்வத்துக்கு அணிந்து மகிழ்ந்துவரும் ஐயரவர்கள் இப்புதியவணியையும் இப்போது அத்தேவதைக்குப் புனைந்திருப்பது கண்களுக்கு இனிய நல் விழவாய்க் களிப்பை விளைக்கின்றது. இம்முதிர்பருவத்தும் 'இனிநினைந் திரக்கமாகின்று' என்னாது 'இனிமுனைந் தூக்கமாகின்று' என்று உள்ளங் கிளர்ந்து தமிழ்வளர்ச்சி புரியும் நம் பெரும்பேராசிரியரது இத்தகைய மாரியன்ன பேருதவிகள் தமிழுலகுள்ளவரை யாவரானும் போற்றிப் புகழ்தற்கு உரியனவாகும்.

---




**குறள்—இரண்டாம் புத்தகம்:** [சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரின் ஆங்கில மொழிபெயர்ப்பு; குறிப்புக்களுடன். ராக்ஹவுஸ் அண்டு ஸன் பதிப்பு. பக்கம் 132; விலை ரூ. 1.]

'உபநிஷதப்பலகணி'யைத் திறந்துவிட்டு வேதகாலக் காற்று வீசவைத்தார் ஆச்சாரியார். இப்பொழுது தமிழ்மறையில் மூழ்கியிருக்கிறார். அரசியல் அரங்கத்தில் இருந்தாலும் சரி, சிறையில் இருந்தாலும் சரி, கருமமே கண்ணாயிருப்பவர் ராஜாஜி. குறளில் இரண்டாவது பாகமான பொருட்பாலின் ஆங்கில மொழிபெயர்ப்பு இப்புத்தகம். ஆழ்ந்த இந்த அரசியல் நீதிகளை, அரசியல் துறவிகளில் ஒருவர் விளக்க வருவது சிலாகிக்கத் தகுந்தது. சிறையிலிருந்த போது எழுதியதாகவும் அதற்குப் பிறகு அரசாங்கம் ஏற்றபின் சிறிதும் மாற்றவில்லை யென்றும் ஒரு குறிப்புச் சொல்லுகிறது. சில குறள்கள் தற்கால அரசியலுக்காக எழுதப்பட்டவை போலவே இருக்கின்றன. ஆகையால்தான் அக்குறிப்புப் போட நேர்ந்ததோ என்னவோ?

"தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்."

இம்மாதிரி அங்கங்கே, அனுபவம், யுக்தி, சாதுர்யம் நிறைந்த குறள்கள் எக்காலத்திற்கும் பொதுப்படையான நீதிகளைப் போதிக்கின்றன.

தமிழன் போற்றும் நூல்களில் முக்கியமானது குறள். அதை ஆங்கிலப் படுத்துவதில் ஆச்சாரியாருக்குள்ள ஆர்வம் போற்றத் தகுந்ததுதான்.

—ந. சி. சு.

**விஷ விருக்ஷம்:** [ஸ்ரீ பங்கிம் சந்திர சட்டர்ஜீ எழுதியதை ஸ்ரீமான் டி. என். குமாரஸ்வாமி மொழிபெயர்த்தது; கிடைக்குமிடம்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர்; விலை ரூ 1—8—0.]

'கலைமகள்' பத்திரிகையில் முன்பு தொடர்ச்சியாக வெளிவந்த 'விஷ விருக்ஷம்' இப்பொழுது புத்தக உருவத்தில் வெளிவந்திருக்கின்றது. பங்கிம் சந்திருடைய கதையமைப்பைப் பற்றி நாம் புகழ்வதைக் காட்டிலும் அதன் ரஸத்தை நமக்கு எடுத்துக்காட்டும் ஸ்ரீமான் குமாரஸ்வாமி அவர்களது மொழி பெயர்ப்பைத்தான் புகழவேண்டும். நல்ல எளிய லாகவமானநடையில் அவருடைய மொழிபெயர்ப்பு அமைந்திருக்கிறது. இது முன்பே நம் அன்பர்கள் அறிந்து அனுபவித்ததே. இந்தப் புஸ்தக ரூபத்தில் பதிப்பு முறை, படங்கள்,

காகிதம் எல்லாம் அழகாகவே அமைந்திருக்கும்போது தமிழ்நாட்டு நாவல் இலக்கியவரிசையிலே இந்தப் புஸ்தகத்துக்கும் ஓர் இடம் கொடுப்பதிலே என்ன தடையிருக்கிறது?

**மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரம்:** [ஸ்ரீமான் ம. வே. திருஞான சம்பந்தப்பிள்ளை அவர்கள் எழுதியது; கிடைக்குமிடம்: தமிழாசிரியர், இந்துக் கல்லூரி, யாழ்ப்பாணம்; விலை சதம் 50 அல்லது அணா எட்டு.]

எளியநடையில் எழுதப்பட்டுள்ள இப்புத்தகம் பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு உபயோகமானது. இதன் பின்னே திருவாசகத்திலிருந்து சில பகுதிகள் சேர்த்துப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன.

**மயூரகிரிப் புராணம்** (மூலமும் உரையும்): [மதுரையைச் சார்ந்த சிவகங்கை வித்துவான் வேதாந்த சுப்ரமணிய பிள்ளை இயற்றியது; ஸ்ரீ ந. ச. பொன்னம்பலபிள்ளையவர்கள் எழுதிய பொழிப்புரையுடன் ஸ்ரீமான் ம. வே. திருஞானசம்பந்தப் பிள்ளையால் விசேடவுரை உரையாசிரியர் வரலாறு முதலியவற்றோடு வெளியிடப்பட்டது; கிடைக்குமிடம்: ம. வே. திருஞான சம்பந்தப் பிள்ளை, இந்து சாதனப் பத்திராசிரியர், யாழ்ப்பாணம்; ரூபா 1, சதம் 50 அல்லது ரூபா 1-8-0.]

குன்றக்குடி என்னும் சுப்பிரமணிய ஸ்தலத்துக்குரிய புராணமாகிய இது பதின்மூன்று சருக்கங்களும் 589 விருத்தங்களும் அடங்கியது. ஸ்தலபுராணங்களில் ஸ்தலஸம்பந்தமான மாஹாத்மியங்களையே பெரும்பாலும் அறிந்து கொள்ளலாம். பிரஸித்தி பெற்ற சில நூலாசிரியர்களே ஸ்தலபுராணங்களாயினும் காவியச் சுவையை அவற்றினூடே அமைத்துக் காட்டியிருக்கின்றனர். சிவப்பிரகாச சுவாமிகள் முதலியோர் அந்த வரிசையிலே சேர்க்கத் தக்கவர்கள். இந்தப் புராணம் தமிழ்ச் செய்யுளுருவத்தில் ஸம்பிரதாயமான சில அமைப்புக்களோடு இருத்தலையன்றி உயர்ந்த கவித்வத்துக்கு உதாரணம் ஆகாது. ஆயினும் ஸ்தல சம்பந்தமான விஷயங்களில் பக்தியுள்ளவர்களுக்கு இது பயன்படும்.

—ஜக.

**சாமளா அல்லது இன்பத்தில் துன்பம்:** [எழுதியவர் கண்டி. சு. செல்வநாயகம். கிடைக்குமிடம்: நெ. 44, போதனை வீதி, கண்டி.]

இது ஒரு சமூகநாடகம். புதுமை ஏதாவது இருக்கும் என்று எதிர்பார்த்தோம். ஆனல் பெரும்பாலும் படித்துப் படித்துச் சலித்துப்போன பழைய விஷயங்களேதான் இருக்கின்றன. ஆயினும் "கெடுவான் கேடு நினைப்பான்" என்ற நீதியை இச்சிறு நாடகத்தின் மூலமாக இதன் ஆசிரியர் அறிவுறுத்தியிருப்பது பாராட்டத்தக்கதே.

—ஸே.

## புத்தகக் குறிப்பு

**சுத்த தர்ம மண்டலம்:** இது சுத்ததர்மமண்டலம் என்னும் சித்த மஹா புருஷர் திருக்கூட்டத்தைப் பற்றியும் அதன் நோக்கங்களையும் எடுத்துக்கூறும் புஸ்தகம். எழுதியவர்: ஸ்ரீலஸ்ரீ அருளம்பலஸ்வாமி; கிடைக்குமிடம்: சுத்த தர்ம ஆபீஸ், மயிலாப்பூர்; விலை அணா 4.

ஹோமியோபத்தி—குடும்ப வைத்திய சிகிச்சை: ஸ்ரீமான் எம். பால், ஹெச். எம். பி. அவர்கள் இயற்றியது. ஹோமியோபத்தி என்றால் என்ன வென்பதைப்பற்றியும் சிகிச்சைமுறை, மருந்து வகைகள், அளவு முதலியவற்றைப் பற்றியும் கூறுவது: கிடைக்குமிடம்: டாக்டர் எம். பால். ஹெச். எம். பி. பண்டுலா மெடிகல்ஹால், 73-ஆம் வீதி, மாண்டலே (பர்மா); விலை ரூ 1-4-0.

நீதிநாற்பது: ஸ்ரீமான் எம். எஸ். சுந்தரேசையரவர்கள் இயற்றியது; நீதிகளடங்கிய 40 வெண்பாக்களுள்ள நூல்; கிடைக்குமிடம்: ஆசிரியர் ஆர். வி. போதனாமுறைப் பாடசாலை, திண்டிவனம்; விலை அணா இரண்டு.

1. நடன கோபாலஸ்வாமி சரித்திரம்: ஸௌராஷ்டிர விப்ரபந்து கு. வெ. பத்மநாபையர் இயற்றியது; விலை அணா 4. சிலவருஷங்களுக்கு முன் மதுரையில் ஸௌராஷ்டிர வம்சத்திற் பிறந்து ஸௌராஷ்டிர பாஷையில் கீர்த்தனைகள் இயற்றிய நடன கோபாலஸ்வாமிகள் என்பவருடைய சரித்திரம் எளிய நடையிலே எழுதப்பட்டிருக்கிறது. விலை அணா 4.

2. நவீன ஸௌராஷ்டிர பாலபோதினி: ஸௌராஷ்டிர பாஷையின் எழுத்துக்களும் பல வார்த்தைகளும் விளக்கமாக வெளியிடப்பட்டிருக்கின்றன. விலை அணா 1.

3. ஸ்ரீமத் பகவத்கீதை பதினேண் அத்தியாய ஸங்கிரஹம்: திரு. அ. சிவானந்தஸாகர யோகீசுவரர் எழுதியது. பகவத்கீதையின் சுருக்கம்; விலை அணா 4.

மேற்கண்ட மூன்று புஸ்தகங்களும் மதுரை, ஸௌராஷ்டிர விப்ரபந்து ஸ்ரீமான் கு. வெ. பத்மநாபையர் அவர்களாற் பிரசுரிக்கப்பட்டவை.

தேசீய ஒற்றுமை: ஸ்ரீமான் என். வெங்கடரமணன் எழுதியது. கிடைக்குமிடம்: சுதந்திர முரசு காரியாலயம், இராசீபுரம். நம்நாட்டின் தற்கால நிலையையும் அதற்குரிய காரணங்களையும் இனி நாட்டினர் செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றியும் ஆராயும் ஒரு கட்டுரை. எளியநடையில் அமைந்திருக்கின்றது; விலை அணா. 1.

நியூ ஹெல்த் வருஷ மலர் [*New Health Annual*]: கிடைக்குமிடம்: மானேஜர், நியூஹெல்த், சுசீந்திரம். வைத்திய சம்பந்தமான கட்டுரைகள் ஆங்கிலம், மலையாளம், தமிழ் என்னும் மூன்று பாஷைகளில் இதில் உள்ளன.

1. ஆதித்யஹ்ருதய ஸ்தோத்திரம்: தமிழெழுத்தில் மூலமும் தமிழுரையும் அடங்கியது; விலை அணா 2.

2. யஜுர்வேத ஸந்தியாவந்தன பாஷ்யம்: தமிழெழுத்தில் மந்திரங்களும் தமிழுரையும் அடங்கியது; விலை அணா 5.

3. ஸ்ரீ மார்க்கபந்து ஸ்தோத்திரம், ஸ்ரீ அம்பா நவமணி மாலை: மூலமும் தமிழுரையும் பொருந்தியவை; விலை அணா 2.

4. புருஷஸூக்தம், சாந்திபஞ்சகம், ஸ்ரீஸூக்தம், பூஸூக்தம், துர்க்காஸூக்தம், ருத்திரகவசம், மந்த்ரபுஷ்பம்: விலை அணா 2.

5. இந்திராக்ஷி ஸ்தோத்திரம்: விலை அணா 2.

6. நவக்கிரக ஸ்தோத்திரம்: விலை அணா 2.

இவை யாவும் தமிழெழுத்தில் அச்சிடப்பட்டவை. மேலேகண்ட ஆறு புஸ்தகங்களும் ஜெனரல் டிரேடிங் கம்பெனி, 565, பைகிராப்ட்ஸ் ரோட், திருவல்லிக்கேணி என்னும் விலாசத்திற் கிடைக்கும்.

1. ஜான்ஸி ராணி இலட்சுமிபாய்: ஸ்ரீமான் எம். எஸ். ஸுப்ரமணிய ஐயர் எழுதியது; விலை அணா 3.

2. சுவாமி ராம தீர்த்தர்: ஷையார் எழுதியது; விலை. அணா 3.

3. லோகமான்ய பால கங்காதர திலகர்: ஸ்ரீமான் என். ஆர். கேதாரி ராவ், எம். ஏ., எல். டி. எழுதியது; விலை அணா $2\frac{1}{2}$.

இவை மூன்றும் மயிலாப்பூர் அல்லயன்ஸ் கம்பெனியார் நல்ல காகிதத்தில் அழகாக அச்சிட்டு வெளிப்படுத்தி யிருக்கின்றனர். இத்தகைய ஜீவிய சரித்திரங்கள் நம் நாட்டினருக்கு இக்காலத்தில் மிகவும் இன்றியமையாதவை.

## புத்தக வரவு

நல்லுரைக்கோவை (இரண்டு பாகங்கள்): ஸ்ரீ மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதியவை.

பாரி காதை (மூலமும் உரையும்): ஸ்ரீ பாஷா கவிசேகர மகா வித்வான் ரா. ராகவையங்காரவர்கள் இயற்றியது.

கங்கைகொண்ட சோழன்: ஸ்ரீமான் தி. நா. சுப்பிரமணிய ஐயர் எழுதியது.

அழகர் கிள்ளைவிடு தூது: பதிப்பாசிரியர்: மகாமகோபாத்தியாயர் டாக்டர் உ. வே. சாமிநாதையர்.

## அங்கீகாரம்

ஐக்கியமாகாணத்தில் மதுராவிலுள்ள ஸுகஸஞ்சாரக் கம்பெனியாரிடமிருந்து நமக்கு, (1) பாலஸுதா, (2) ச்யவனப்ராஷ் லேகியம், (3) யௌவன சக்தி மாத்திரைகள், (4) ஸுதா ஸிந்து (5) திராக்ஷாஸவம் ஆகிய மருந்துகள் கிடைத்துள்ளன. இவை மிகவும் சிரமப்பட்டு அரிய மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டவை என்று தெரிகிறது. ஷை மருந்துகள் கிடைக்குமிடம்: *Sukh Sancharak Co; Muttra (U. P.)*

---




## இந்த இதழ்

இந்த இதழைப் பார்த்தவுடன் நண்பர்கள், "ஏது? கலைமகள் பெண்களுக்கு அதிக உரிமைகொடுக்கும் பத்திரிகையாய் விட்டதுபோல் இருக்கிறது!" என்று நினைக்கக் கூடும். சரித்திரப் பகுதியில், சமீபத்தில் இந்திய சர்க்காரால் காஞ்சீபுரத்துச் சிலா சாஸனங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்ய நியமிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீமதி டாக்டர் ஸி. மீனாட்சியவர்கள் அஹல்யாபாயைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். இலக்கியப் பகுதியில் 'குமுதினி' செய்த மொழிபெயர்ப்பு வெளியாகின்றது. இந்த மாதத்திலிருந்து 'மாயா விநோதினி' என்ற தொடர்கதை வெளியாகிறது. இது ரவீந்திரநாத் டாகுரவர்கள் இயற்றிய நாவல்; ஸ்ரீமதி தஞ்சைநாயகியவர்கள் ஆசிரியரின் அனுமதி பெற்றுத் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார்கள். 'ஆண்டாள்' எழுதிய மாதவியென்ற ஒற்றையங்க நாடகமும் ஸ்ரீமதி ஆர். ரங்கநாயகியவர்கள் மொழிபெயர்த்திருக்கும் 'சிவராத்திரி'யும் கதைப் பகுதியில் விளங்குகின்றன. சிறுவர் பகுதியிலே 'ஸரோஜினி' கழல்பாட்டைப் பாடுகிறார். "பெண் மணிகளுக்கு இவ்வளவு இடம் கொடுக்கலாமா?" என்று கேட்காதீர்கள். 'கலைமகள்' பெண்தெய்வமல்லவா? அவளுக்குப் பெண்கள் விஷயத்தில் பக்ஷபாதம் இருப்பது நியாயந்தானே?

ஆனாலும் முழுக்க முழுக்கப் பெண்கள் கட்டுரைகளே இதில் வரவில்லை; புருஷர்களும் எழுதியிருக்கிறார்கள். அடுத்த ராஷ்டிரபதியாக வரப்போகும் ஸுபாஷ் சந்திர போஸ் எழுதிய 'நவபாரதம்' இதில் மலர்கின்றது. அவருடைய அனுமதி பெற்று மொழிபெயர்க்கப்பட்ட கட்டுரை இது. 'தமிழ்த்தாதா' எழுதிய ராமதாஸர் சப்ளாக்கட்டையோடு நம் கண்முன் நிற்கிறார். ஸ்ரீமான் அப்புஸ்வாமி ஐயரவர்கள் நம்மைக் கனவுலகத்திலுள்ள விமானம் ஒன்றில் ஏற்றிச் செல்கிறார். இந்த மாதத்தோடு 'சிவசிவ வெண்பா' முடிகிறது. இனிமேல் ஒரு குறவஞ்சியை வெளியிடுவதாக ஐயரவர்கள் சொல்லியிருக்கிறார்கள். 'கலைமகள்' நண்பர்கள் இந்த இதழை ரஸிப்பதோடு தங்கள் கருத்தையும் எழுதி அனுப்பினால் அவர்கள் யோசனையை ஆராய்ந்து வேண்டியது செய்வோம். இல்லாவிட்டால் ஒரு 'ஸபாஷ்!' ஆவது போடலாமல்லவா?

## ராஷ்டிரபதி ஸுபாஷ்

இவ்வருஷம் ஹரிபுராவில் நடைபெறப் போகும் காங்கிரஸ் மகா சபைக்குத் தலைவராக ஸ்ரீயுத ஸுபாஷ் சந்திர வஸுவை இந்திய மக்கள் தேர்ந்தெடுத்திருக்கின்றனர்.

ஸுபாஷ் பாபு கட்டக் என்ற ஊரில் 1897-ஆம் வருஷம் ஜனவரி மாதம் 23-ஆம் தேதி பிறந்தார். அவருடைய தகப்பனார் ராய்பகதூர் ஜானகிநாத் வஸு அவ்வூரில் சர்க்கார் வக்கீலாக வேலை பார்த்துவந்தார். ஸுபாஷ் பாபுவின் தாயார் பகவத் பக்தி மிகுந்தவர். இவருடைய குண விசேஷங்களே ஸுபாஷ் பாபுவின் வாழ்க்கையில் பிரதிபலிப்பதை நாம் இன்று காணலாம்.

ஸுபாஷ், சிறுவயதில் கட்டக்கில் படித்து வந்தார். அப்போதே மிக மேதாவி என்று பெயர் எடுத்தார். 1913-இல் கல்கத்தாவிலுள்ள பிரஸி டென்ஸி கல்லூரியில் சேர்ந்து ஸம்ஸ்கிருதம், கணிதம், தர்க்க சாஸ்திரம் இவைகளைப் பாடங்களாக எடுத்துக்கொண்டார். 1914-இல் தாயார் தகப்பனார் இவர்களிடம் சொல்லிக்கொள்ளாமல் தம்மைப்போன்ற சில மாணவர்களு டன் ஸன்யாஸி ஆகிவிடுவதற்கு ஒரு குருவைத் தேடி அலைந்தார். கடைசி யில் எங்கும் போலிக் காஷாய வேஷதாரிகளும், மோசக்காரர்களும் நிரம்பி யிருப்பதைக் கண்டு வெறுப்புற்று வீடு திரும்பினார். ஆனாலும் விவேகானந்த ஸ்வாமியைத் தம் ஆதர்ச குருவாகக்கொண்டு நைஷ்டிகப் பிரம்மசாரியாக இருப்பதென்றும் ஏழை எளியவர்களுக்காகப் பாடுபடுவதென்றும் உறுதி கொண்டார்.

1919-இல் பி. ஏ., ஆனர்ஸ் பாஸ் செய்துவிட்டு எம். ஏ., பரீக்ஷைக்குப் படிக்க ஆரம்பித்தார். இரண்டு மாதங்கள் கழித்து, தமக்குப் பிடிக்காவிட் டாலும் தகப்பனாரின் விருப்பத்திற்கு இணங்கி, ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்குப் படிக்க இங்கிலாந்து சென்றார்; அதில் நான்காமவராகத் தேர்ச்சி பெற்றார். பிறகு 1921-இல் கேம்பிரிட்ஜில் பி. ஏ., பரீக்ஷையில் தேறினார். அதேசமயம் மகாத்மாகாந்தியின் தலைமையில் தேசபந்து சித்தரஞ்ஜன் தாஸின் பக்க பலத்துடன் ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பமாயிற்று. ஸுபாஷின் இளைய மனதை அது கவர்ந்துவிட்டது. உடனே இந்தியா மந்திரி எவ்வளவு சொல் லியும் கேளாமல், ஐ. ஸி. எஸ். பதவியை விட்டுவிட்டு இயக்கத்தில் சேர்ந்து தேசபந்துவின் வலதுகையாக விளங்கினார். 1921-ஆம் வருஷம் டிஸம்பர் மாதம் தேசபந்துவுடன் ஸுபாஷ் பாபுவும் கைது செய்யப்பட்டு ஆறுமாதம் வெறுங் காவல் தண்டனை அடைந்தார். இதைக் கேட்டதும் அவர் தகப்ப னார் "ஸுபாஷைப் பார்த்து நான் பெருமை கொள்கிறேன்" என்றாராம்.

விடுதலையானதும் தேசபந்துவுடன் 1922-இல் கயையில் நடந்த காங்கிர ஸுக்குச் சென்று சட்டசபைப் பிரவேசத்தின் சார்பாக நின்றார். ஆனா லும் பின்னால் நடந்த சட்டசபைத் தேர்தலில் அவர் அபேக்ஷகராக நிற்கவும் இல்லை; வோட் அளிக்கவும் இல்லை. ஏனென்றால் அவர் பெயர் அந்த ஜாபி தாவில் பதிவு செய்யப்படவில்லையாம்! பிறகு அவர் ஆக்கவேலையில் தீவிரமாக ஈடுபட்டார். 1923-இல் பூர்ணசுயேச்சையே தமது லக்ஷ்யம் என்பதையும்

தொழிலாளிகளுக்கும் உழவர்களுக்கும் நன்மை புரிவதே தம் நோக்கம் என்பதையும் தெளிவாக்கினார். மறு வருஷம் கல்கத்தா கார்ப்போரேஷன் அங்கத்தினராகி இரண்டொரு மாதங்களுக்குள் நிர்வாக உத்தியோகஸ்தராக நியமிக்கப்பட்டார். அந்த ஸ்தானத்திற்கு 3000 ரூபாய் சம்பளம் இருந்த போதிலும் மிகக் கொஞ்சமான சம்பளமே வாங்கிக்கொண்டு திறமையுடன் வேலை பார்த்து வந்தார். ஆனால், அதே வருஷம் அக்டோபர் மாதம் 21-ஆம் தேதி அவர் விசாரணையின்றிக் கைது செய்யப்பட்டுவிடவே அப்பதவியை ராஜிநாமாச் செய்ய நேர்ந்தது. அரசாங்கத்தார் அவரைப் பல சிறைச்சாலை களுக்கு மாற்றிப் பின்பு பர்மாவில் உள்ள மந்தாலைச் (மாண்டலே) சிறைச் சாலையில் ஸ்திரமாக வைத்துவிட்டனர். பர்மாவில் அவர் உடல்நிலை கெட்டு அஜீர்ணரோகம் அவரைப் பீடித்தது. ஸ்விட்ஜர்லாந்துக்கு அழைத்துச் செல் வது என்று அரசாங்கத்தார் ஆலோசித்துக் கொண்டிருந்தனர். ஆனால் ஸுபாஷ் அதற்கு இணங்கவில்லை. கடைசியாகக் கல்கத்தா மார்க்கமாக ஹிமாலய மலையின் அடிவாரத்திலுள்ள ஆல்மோராவுக்கு அழைத்துச் செல் வது என்று அரசாங்கத்தார் தீர்மானித்தனர். கல்கத்தாவில் அவர் உடல்நிலை யை டாக்டர்கள் பரீக்ஷித்தார்கள். உடனே, அச்சமயம் வங்காள கவர்னராக இருந்த ஸர் ஸ்டான்லி ஜாக்ஸன் என்பவர் ஸுபாஷை நிபந்தனையின்றி விடு தலை செய்ய உத்தரவிட்டுவிட்டார். உடம்பு சற்றுக் குணமானதும் ஸுபாஷ் மீண்டும் அரசியலில் தீவிரமாகக் கலந்துகொண்டார். 1930-இல் ஸத்தியாக்கிரக இயக்கத்தில் சேர்ந்து சிறைவாஸம் அனுபவித்தார். மறு வருஷம் அதிகாரி களிடம் அடிபட்டார். அந்தச் செய்தியைக் கேட்டு அவருடைய தகப்பனார் தம்முடைய ராய்பகதூர் பதவியை விட்டுவிட்டார். இவ்வாறு பல வருஷங்கள் சிறைபடுத்தப்பட்டுப் பின்னர் ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்டார். அங்கே அவருக்கு ரணசிகித்ஸை நடந்தது. ஆனாலும் அவர் உடம்பு குணமாயிற்று என்று சொல்ல முடியாது. அதே சமயத்தில் இந்திய மத்திய சட்டசபை யின் தலைவராக இருந்த வித்தல்பாய் படேல் தேகாரோக்கியத்தை முன்னிட்டு ஸ்விட்ஜர்லாந்துக்கு வந்திருந்தார். அவரும் ஸுபாஷும் அங்கே தந்தையும் மகனும்போல் பரஸ்பரம் அன்புடன் இருந்தனர். படேல் சாகுந்தருவாயில் இருக்கையில், ஸுபாஷ் தம் உடல் நலத்தையும் கருதாமல் அவருக்குச் சுச்ருஷை செய்தார். ராஷ்டிரபதி ஜவஹர்லாலின் தர்மபத்தினி கமலாநேரு ஐரோப்பாவில் இறக்கும்போது கூட ஸுபாஷ்தான் அவ்வம்மையின் அரு கில் இருந்தார். அவர் அச்சமயம் எழுதிய ஒரு புத்தகம் இந்தியாவிற்குள் நுழையவொட்டாமல் தடையுத்தரவு போட்டு விட்டனர் பிரிட்டிஷ் அதிகாரிகள். அவரையும இந்தியாவிற்கு வர அனுமதிக்கவில்லை. ஆனால் அவருடைய தகப்பனார் நாலைந்து வருஷங்களுக்குமுன் இறக்குந் தருவாயி லிருந்தபோது ஒருவாறு அனுமதி கொடுக்கப்பட்டது.

ஸுபாஷ் இந்தியாவில் மீண்டும் சிறைப்படுத்தப்பட்டார். முடிவில் அவரது உடல்நிலை அபாயகரமாக இருப்பதை அறிந்து வைஸ்ராய் அவரை யாதொரு நிபந்தனையுமின்றி 1937-ஆம் வருஷம் விடுதலை செய்துவிட்டார். சமீபத்தில் அவர் ஐரோப்பாவுக்குச் சென்றிருந்தபோது அவர் இங்கிலாந் திற்கு வரக்கூடாது என்று இருந்த ஒரு தடையுத்தரவும் ரத்து செய்யப்

படவே இங்கிலாந்து சென்றார். அங்கே, ஆங்கிலேயரும் இந்தியரும் ஸ்நேக பாவத்துடன் இருப்பது நலம் என்றும், இந்தியர் விரும்பும் ஓர் அரசியல் முறையைப் பிரிட்டிஷார் ஏற்றால்தான் இந்தச் சமரஸ மனப்பான்மை உதய மாகும் என்றும் கூறியிருக்கிறார். அவரையே அடுத்த காங்கிரஸின் தலைவ ராக - ராஷ்டிரபதியாக-மிக்க விருப்பத்தோடு இந்திய மக்கள் நியமித்திருப் பது மிகவும் பொருத்தமானதே. இதுவரையிலும் காங்கிரஸ் அக்கிராசனாதி பதிகளாக இருந்தவர்களைக் காட்டிலும் ஸுபாஷ் வயதில் மிகச் சிறியவரானா லும் அவர்களைவிடத் துன்பம் அதிகம் அனுபவித்தவராதலால் அவருக்கு இந்த மகத்தான பதவி கிடைத்ததைப் பற்றி நாம் மகிழ்ச்சி அடைவோம்.

—ஸே.

---

## முடக்கொற்றன்

தமிழ் நாட்டில் முடக்கொற்றான் என்னும் கொடியின் கீரையைப் பற்றி அறியாதார் எவருமிலர். இது எங்கும் கிடைக்கக் கூடியது. சகல வித வாதரோகங்களுக்கும் குணந்தர வல்லது; சினைப்பு, கிரந்தி, கரப்பான், மலக்கட்டு, கீல்வாயு, கைகால் பிடிப்பு, இடுப்புவலி, சூலை, பக்கவலி, வயிற்று வலி, வயிற்று உப்புசம், வாதகுன்மம் முதலிய ரோகங்களைத் தீர்க்க வல்லது. ஸ்திரீகளுக்கு மாதாந்த ருதுக் காலத்தில் ஏற்படும் வயிற்று வலியையும் விலக்கி, கருப்பப் பையையும் சுத்தமாக்கி, தேகாரோக்கியத்தையும் உண் டாக்கவல்லது. ஆகவின் சூதக வாய்வுடைய பெண்கள் இதனை வாரத்திற்கு ஒரு முறையேனும் உபயோகித்து வந்தால் சூதக சம்பந்தமான வியாதிகள் தீர்ந்து சுகமடைவர். வாயுவினால் கஷ்டப்படும் மக்கள் முடக்கொற்றான் சாற்றோடு வெள்ளைப்பூண்டு சேர்த்து $1\frac{1}{2}$ அல்லது 2 அவுன்ஸ் சிற்றாமணக் கெண்ணெயில் தாளிதஞ்செய்து காலையில் வெறும் வயிற்றில் சாப்பிட்டால் நான்கு ஐந்து முறை பேதியாகும்; வாயுவைக் கண்டிக்கும். அவரவருக்குத் தகுந்தபடி எண்ணெயையும் சாற்றையும் குறைத்தோ மிகுதிப்படுத்தியோ சேர்க்கலாம்.

இளங் கீரையை நல்லெண்ணெயிலாவது விளக்கெண்ணெயிலாவது வதக்கி அதனோடு இஞ்சி, பச்சைமிளகாய், கொத்துமல்லிக் கீரை, உப்பு இவை சேர்த்து, எலுமிச்சம்பழச் சாறுவிட்டு அரைத்துத் துவையல் செய்ய லாம். பச்சைமிளகாய் பிடிக்காதவர்கள் மிளகாய் வற்றலை உபயோகிக்கலாம். பொரித்த காயமும் கொஞ்சம் சேர்க்கலாம். முடக்கொற்றானை வதக்கும் போதும் தாளிதம் செய்யும்போதும் நெய் சேர்க்கவே கூடாது. நெய் சேர்த் தால் அதன் குணம் கெட்டுப்போகும்.

எண்ணெயில் வதக்கிய முடக்கொற்றானைப் பருப்புடன் கூட்டிச் சாம் பார் செய்யலாம். வதக்கிய கீரையை அரைக்காமல், அகத்திக்கீரை பருப்புச் சாம்பார் செய்வதுபோலச் செய்யலாம். மிளகு, பூண்டு, சீரகம், புளி இவற்றைச் சேர்த்துக் கீரையை ரசம் வைத்துக்கொள்ளலாம். முருங்கைக் கீரையும் பருப்பும் தேங்காயும் சேர்த்துப் பொரியல் செய்வதுபோல இதனை யும் செய்து உண்ணலாம்; கூட்டும் செய்யலாம்.

சூலைப் பிடிப்பு சொறிசிரங்கு வன்கரப்பான்
காலைத் தொடும்வாதம் கன்மலமுஞ்—சாலக்
கடக்கத்தா னேவிடுங் காசினியை விட்டு
முடக்கத்தான் றன்னை மொழி.

—ஸி. எஸ். ஜகதீச சுந்தரம் பிள்ளை

---

## ஸக்கர் (SUKKUR) அணைக்கட்டு

சிந்து நதிக்குக் குறுக்காகக் கட்டப்பட்டுள்ள இந்த அணைக்கட்டு அறுபத்தைந்து மதகுகள் கொண்டதாகும். இவை ஒவ்வொன்றும் அறுபது அடி அகலமுடையன. இந்தத் திட்டத்தில் 6457 மைல்கள் கொண்ட கால் வாய்களும் 47773 மைல்கள் கொண்ட கிளைக் கால்வாய்கள் முதலியனவும் அடங்கியுள்ளன. இந்த அணையைக் கட்டினதால் சுமார் 75 லக்ஷம் நிலங் களுக்குப் போதுமான நீர்ப்பாசன வசதி ஏற்பட்டிருக்கிறது. இங்கே சுமார் $62\frac{1}{2}$ லக்ஷம் ஏக்கர் விளை நிலங்கள் உள்ளன. இந்த அணையைக் கட்டி முடித் ததும் சுமார் $52\frac{1}{2}$ லக்ஷம் ஏக்கர் நிலங்கள் உடனே இதனால் பலனடையக் கூடும். இந்தத் திட்டத்தைப் பூர்த்தி செய்ய ஏறக்குறைய 20 கோடி ரூபாய் பிடித்தது. பிரத்தியேகக் கருவிகளுக்கும் யந்திரங்களுக்குமே 165 லக்ஷம் ரூபாய் பிடித்தது. அணைபோடவும் கால்வாய்களின் ஆரம்பத்தில் கட்டடங் கள் நிர்மாணம் செய்யவும் நான்குகோடியே நான்குலக்ஷம் ரூபாய் பிடித்தது. பத்து வருஷங்கழித்து-அதாவது 1942-43-இல் செலவு செய்த தொகையில் மகசூல் மூலமாக நூற்றுக்கு $3\frac{3}{4}$ வீதம் திரும்பப் பெற முடியும் என்றும், அதற்கு மேலும் பத்துவருஷங்கள் கழித்து நூற்றுக்கு $7\frac{7}{8}$ வீதம் திரும்பப் பெறமுடியும் என்றும் தெரிகிறது.

லாபம் ஒன்றையே கருதி இந்தத் திட்டம் நிறைவேற்றப்பட்டது என்று எண்ணக்கூடாது. முன்னெல்லாம் ஆற்றுத் தண்ணீர் பெருக்கெடுத்து மேலெழும்பும்போதுதான் மேல்மட்டத்திலுள்ள பழைய சிறு கால்வாய்கள் மூலமாக நீர் பாய்ச்ச முடிந்தது. அதுவுமன்றிச் சரியான சமயத்தில் பிரவாகம் வரும் என்ற நிச்சயமில்லை. ஆனால் இன்றோ நிலைமை வேறுவித மாக மாறியிருக்கிறது. எச்சமயத்திலும் போதிய அளவு தண்ணீர் விளை நிலங்களுக்குக் கிடைக்கிறது. பாலைநிலமெல்லாம் பயிர் நிலங்களாக மாறி விட்டன. அவற்றைச் சுற்றி வீடுவாசல்களும் திருப்தியுள்ள குடிஜனங் களும் இருப்பதைக் காண்கிறோம்.

இந்த அணை வேலை பூர்த்தியானதும் சாகுபடி நிலங்கள் மும்மடங்கு அதிகமாகும். இப்பொழுது சற்றேறக்குறைய 5 லக்ஷம் ஏக்கர் நிலங்களில் கோதுமை விளைகின்றது. இனிமேல் இருபது லக்ஷம் ஏக்கர் நிலங்களில் கோதுமை பயிர் செய்யலாம். தற்போதைக்கு 3 லக்ஷம் ஏக்கர் நிலங்களில் பருத்தியும் மூன்று லக்ஷத்து அறுபதினாயிரம் ஏக்கர்களில் நெல்லும் விளை கின்றன. இனி எட்டு லக்ஷத்து இருபத்திரண்டாயிரம் ஏக்கர்களில் பருத் யும், ஆறுலக்ஷத்து எண்பத்திரண்டாயிரம் ஏக்கர்களில் நெல்லும் உற்

பத்தி செய்யலாம் என்று தோன்றுகிறது. பருத்தி சாகுபடியாகும் நிலங்கள் பத்து லக்ஷம்வரையில் ஆனாலும் ஆகலாம். அப்படி அதிகமாவதுமட்டுமன்றி விளைபொருள்களும் பின்னும் சிறப்புடையனவாக இருக்கும்.

கோதுமையிலும் பருத்தியிலும் உயர்ந்த ரகங்கள் உண்டுபண்ணுவதற்குரிய ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. அரசாங்கத்தாரின் கைவசத்திலுள்ள நிலங்களையன்றி 45000 ஏக்கர் நிலங்கள் இந்த அணைக்காக வாங்கப்பட்டன. இதில் 30000 தொழிலாளிகள் முதல் 50000 வரை வேலை செய்திருக்கிறார்கள். ஒருசமயம் 60000 பேர்கள் கூட வேலை செய்ததுண்டு. இங்கே, வேலை செய்கின்ற ஜனங்கள் தங்குவதற்காக நதியின் இரண்டுகரைகளிலும் இரண்டு ஊர்கள் அமைக்கப்பட்டன. அங்கே காரியாலயங்களும், தொழிற்சாலைகளும், மண்டிகளும், வாகனப்பட்டரைகளும், எண்ணெய்க் கிடங்குகளும், ரஸ்தாக்களும், ஜலக்குழாய்களும், மின்சார விளக்குகளும், வைத்திய சுகாதார அனுகூலங்களும் ஏற்பட்டன. 7,520,000,000 கனஅடி அளவுள்ள மண் வெளிப்படுத்தப்பட்டது. யந்திரங்களால் இயக்கப்படும் தோண்டு கருவிகள் 46 இங்கே உபயோகப்பட்டன.

62 சுண்ணும்புக் காளவாய்கள் வேலை செய்தன. அவற்றில் 7500 கன அடி அளவுள்ள சுண்ணும்பு ஒவ்வொரு தினமும் உண்டாக்கப்பட்டது. 23000 டன் நிறையுள்ள எஃகுத் தகடுகள் இந்த அணை வேலையில் 17 யந்திரங்களால் செருகப்பட்டன. யந்திரங்களில் பெரும்பாலானவை மின்சார விசையால் இயக்கப்பட்டன. அதற்காகத் தனியே மின்சாரக் கூடம் ஒன்றை நியமித்தார்கள்.

இந்தப் பக்கங்களிலுள்ள சீதோஷ்ண நிலையினாலும், பூமியின் அமைப்பினாலும், பாலைநிலப் பிரதேசங்களாலும் இந்த அணையைக் கட்டுவதற்கு மிகவும் சிரமசாத்தியமாக இருந்தது.

1918-ஆம் வருஷத்தில் வெள்ளம் வரவேண்டிய காலத்தில் சரியான வெள்ளம் வரவில்லை. அதனால் அவ்வருஷம் கால்வாய்களுக்கு ஜலமில்லாமல் சாகுபடி மிகவும் குறைந்தது. அதனால் சிந்து தேசத்தில் அந்த வருஷம் என்றைக்குமில்லாதபடி முதன்முதலாகப் பிற மாகாணங்களிலிருந்து தானியங்களை வரவழைக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. இதனால் நீர்ப்பாசன முறை சீர்திருத்தப்படவேண்டிய தேவை வற்புறுத்தப்பட்டது. பஞ்சாப் தேசத்தில் சாகுபடிக்காகச் செய்யப்பட்ட அபிவிருத்திகளாலும் சிந்துதேசக் கால்வாய்களுக்குப் பாதகம் நேர்ந்தது. அதனால் இந்த அணைக்கட்டைப் பற்றிய யோசனை உண்டாகி 1923-ஆம் வருஷம் உறுதியாயிற்று. அவ்வருஷம் ஜூலை மாதத்திலே ஆரம்பவேலை தொடங்கப்பட்டது. ஆனாலும் 1925-26 வருஷங்களிலேயே அணை வாஸ்தவமாகக் கட்டப்பட்டது. 1932 மே மாதம் தொடங்கியே புதியகால்வாயின்மூலம் சாகுபடிசெய்ய ஆரம்பித்தார்கள். அவ்வருஷத்தில் நல்ல விளைச்சல். இப்பொழுது இப்பேரணையினால் உண்டாகும் உபயோகம் மிகப் பெரியது.

---



பாண்டித்துரைத் தேவர்

[இவர் சரித்திரத்தை உள்ளே காண்க.]




## தாசில் அனந்தராம ஐயர்

மகாமஹோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

1

ஏறக்குறைய ஐம்பது வருஷங்களுக்குமுன் கும்பகோணம், சீகாழி, நன்னிலம் முதலிய தாலூகாக்களில் தாசில் உத்தியோகத்தில் அனந்தராம ஐயரென்ற ஒரு பெரியவர் இருந்தார். அவர் பிராமணர்களுள் மழநாட்டுப் பிரகசரணவகுப்பிற் பிறந்தவர்; வைதிக ஆசாரமுடையவர்; சிவபக்திச் செல்வர்; நாள்தோறும் விடியற் காலையில் எழுந்து ஸ்நானம் செய்து நித்தியகர்மானுஷ்டானங்களையும் பஞ்சாட்சரஜபம் முதலியவற்றையும் முடித்து விட்டுச் சிவபூஜை செய்வார்; ஸ்ரீருத்திரம் சொல்லி அபிஷேகமும், மகாகைலாஸ அஷ்டோத்திர மந்திரம் சொல்லிச் சிவார்ச்சனையும் தவறாமற் செய்வார்.

அவர் எப்பொழுதும் வைதிகக்கோலத்தோடேயே இருப்பார்; உத்தியோகநேரத்தில்மட்டும் சட்டையை அணிந்துகொள்வார். அவர் நெற்றியில் விபூதி எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிருக்கும்; கழுத்தில் ருத்திராட்சவடம் விளங்கும்.

அனந்தராம ஐயருக்கு அக்காலத்தில் 'மாஜிஸ்திரேட்' அதிகாரமும் இருந்தது. யாருக்கும் துன்பம் உண்டாகாதபடி அவர் உத்தியோகம் பார்த்து வந்தார். தம்மிடம் வரும் வழக்குகளில் சமாதானம் செய்யக்கூடியவற்றை முயன்று சமாதானம் செய்வார். இதனால் கட்சிக்காரர்களுக்கு வீண்செலவுகள் நேராமற் போகும். மேலதிகாரிகளுக்கும் குடிகளுக்கும் திருப்தியுண்டாகும்படி அவர் தம் உத்தியோகத்தைப் பார்த்துவந்தார்.

அவர் தாம் உத்தியோகம் பார்த்த இடங்களில் உள்ள ஆலயங்களையும் தர்மஸ்தாபனங்களையும் உரியவர்களைக் கொண்டு நன்ருக நடத்திவரும்படி ஏற்பாடு செய்தார்; பூஜை முதலியன ஒழுங்காகவும் சிறப்பாகவும் நடக்கும்வண்ணம் செய்தார். அவருடைய தெய்வபக்தியும், தூய ஒழுக்கமும் அவருடைய உத்தியோக மதிப்பை மிகுதிப்படுத்தின. அவர்பால் உத்தியோகம் பார்ப்பவர்களும் அவரைப்போல இருக்கவேண்டுமென்று முயன்று வந்தார்கள்.

கும்பகோணத்தில் அவர் வேலைபார்த்தபோது முதலில் பக்தபுரி அக்கிரகாரத்தில் ஒரு வீட்டில் இருந்துவந்தார். அந் நகருக்கு வந்த இரண்டு மூன்று நாட்களுக்குப் பின் அமாவாசை வந்தது. அன்று அவர் வழக்கம்போலக் காவிரியாற்றுக்குச் சென்று ஊற்றில் ஸ்நானம் செய்துவிட்டு ஆற்றின் நடுவிலிருந்த பந்தலில் ஜபம் செய்து கொண்டிருந்தார். அமாவாசைத் தர்ப்பணத்துக் குரிய தர்ப்பைகள், கூர்ச்சம், பவித்திரம் முதலியவை அடங்கிய சிறு கட்டு ஒன்றும், மடிவஸ்திரங்களை வைத்துக்கொள்ளும் மடி சஞ்சியும், தீர்த்தபாத்திரமும் அவரருகில் இருந்தன.

அப்பொழுது 'பட்டா' கொடுக்கவேண்டிய காலமாதலின் வெளியூர்களிலிருந்து கணக்குப்பிள்ளைகள் பலர் வந்திருந்தனர். அவர்களுள் அந்தணராகிய ஒருவர் ஸ்நானம் செய்து தர்ப்பணம் பண்ணுவதற்காகக் காவிரிக்கு வந்தார்; ஸ்நானம் செய்தார். பின்பு தர்ப்பணம் செய்ய எண்ணி, மந்திரம் சொல்வதற்கு யாரேனும் சாஸ்திரிகள் அகப்படுவாரா வென்று பார்த்தார். அங்கிருந்த வைதிகர்களுள் ஒவ்வொருவரும் ஒவ்வொருவருக்குத் தர்ப்பணம் பண்ணிவைத்துக்கொண்டிருந்தனர்.

கணக்குப்பிள்ளை, ஜபம் பண்ணிக்கொண்டிருந்த தாசில் தாரைப் பார்த்தார். அவர் நூதனமாக வந்தவராதலின் அவர் தாசில்தாரென்பது கணக்குப்பிள்ளைக்குத் தெரியாது. தோற்றத் தினுல், அவரை ஒரு நல்ல வைதிகப் பிராமணரென்று எண்ணினுர். அவருக்கருகில் தர்ப்பை முதலியன வைத்திருப்பதைப் பார்த்தபோது அவர் வேறு எவ்விதம் எண்ணுவார்?

தாசில்தாரிடம் கணக்குப்பிள்ளை சென்ருர்; "சாஸ்திரிகளே! தர்ப்பணம் பண்ணிவைக்கிறீரா?" என்று கேட்டார். அனந்தராம ஐயரோ சிறிதும் வேறுபாடின்றி அமைதியாக, "ஆஹா, பண்ணிவைக்கிறேன்" என்ருர். தாசில்தார் மந்திரங்களை நிறுத்திச் சொல்லக் கணக்குப்பிள்ளை தர்ப்பணம் செய்தார்; "சாஸ்திரிகளே! நீர் நன்ருகப் பண்ணிவைக்கிறீர். எல்லோரும்

மனோவேகத்தில் மந்திரத்தைச் சொல்வார்கள். நீர் நிதானமாக வும் ஸ்பஷ்டமாகவும் சொல்லுகிறீர்" என்று கணக்குப்பிள்ளை பாராட்டிவிட்டு, எப்பொழுதும் கொடுக்கும் தக்ஷிணைக்கு இரட் டைப்படியாக இரண்டணாவைக் கொடுத்தார். சாஸ்திரிகளாக இருந்த தாசில்தார் அதை வாங்கிக்கொள்ளவில்லை; "நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லிவிட்டார். 'நம்முடைய தோற்றத்திலிருந்து ஏழையென்று தெரிந்து சாஸ்திரிகள் வேண் டாமென்கிறார் போலும்' என்று நினைத்தார் கணக்குப்பிள்ளை.

தர்ப்பணம் முடிந்தபிறகு கணக்குப்பிள்ளை தாசில்தாரை நோக்கி, "இன்று அமாவாசையாதலால் கண்ட இடத்தில் சாப் பிடக்கூடாது. இந்தப்பக்கத்தில் யாராவது அன்னம் போடுவார் களா?" என்று கேட்டார். சாஸ்திரிகளுக்குப் போஜனம் கிடைக் கும் இடங்களெல்லாம் தெரிந்திருக்குமென்பது கணக்குப்பிள்ளை யின் எண்ணம்.

அனந்தராம ஐயர், பக்தபுரி அக்கிரகாரத்தில் இன்ன விடத்திலுள்ள வீட்டில் போடுகிறார்களென்று தம் வீட்டையே குறிப்பிட்டார்; ஆனால் அது தம் வீடென்பதை வெளியிடவில்லை.

கணக்குப்பிள்ளை அந்த வீட்டிற்குச் சென்று திண்ணையில் இருந்தார். வேறு சிலரும் சாப்பிடும்பொருட்டு வந்து அங்கே காத்திருந்தனர். தாசில்தார் தர்ப்பணமுதலியவற்றை முடித்துக் கொண்டு, மடிசஞ்சியுடன் தீர்த்தபாத்திரத்தை ஏந்தியவராய் வீட்டுக்கு வந்து பூஜை செய்தார். கணக்குப்பிள்ளை, அவர் அந்த வீட்டிற் பூஜைசெய்யும் சாஸ்திரிகளென்று தீர்மானம் செய்து கொண்டார். அவ்வீட்டுத் தலைவர் யாரென்பதை அவர் தெரிந்து கொள்ளவில்லை; விசாரிக்கவுமில்லை. அவருடைய ஞாபகம் முழு வதும் விரைவிலே போஜனம் செய்துவிட்டுக் கச்சேரிக்குப் போக வேண்டுமென்பதிற் படிந்திருந்தது.

பூஜையானவுடன் இலை போட்டுவிட்டு வேலைக்காரர் திண்ணையிலிருந்தவர்களையெல்லாம் போஜனத்துக்கு அழைத்தார் கள். கணக்குப்பிள்ளையும் சென்றார். சிறந்த, வியஞ்சனங்களுடன் ஆகாரம் அளிக்கப்பட்டது. சாப்பிடும்போது தாசில்தார் அங்கே பந்திவிசாரணை செய்துகொண்டிருந்தார். யாவரும் மௌனமாகப் போஜனம் செய்தனர். கணக்குப்பிள்ளை இடையிலே வியஞ்சன மொன்றை விரும்பினார். தாசில்தாரைப் பார்த்து, "ஓய் சாஸ்திரி களே! இந்தப் பொரித்த கூட்டை இன்னும் கொஞ்சம் கொண்டு வரச்சொல்லும்" என்றார். அவர் தமக்குப் பழக்கமானவரென்ற நினைவினால் சிறிது கம்பீரமாகவே பேசினார். "ஆஹா, அப்

படியே'' என்று தாசில்தார் உள்ளே சென்று அங்ஙனமே பரிமாறச் செய்தார். கணக்குப்பிள்ளைக்கு அருகில் அமர்ந்து சாப்பிட்டவர்கள் தாசில்தாரை அவர் "சாஸ்திரிகளே" என்று கூப்பிட்டதைக் கேட்டுத் திடுக்கிட்டனர். தாசில்தார் உள்ளே சென்றபொழுது கணக்குப்பிள்ளையிடம் ஒருவர், "ஓய் பிராம்மணா, என்ன பைத்தியக்கார மனுஷ்யராயிருக்கிறீர்? தாசில்தாரவர்களைச் சாஸ்திரிகளேயென்று கூப்பிடுகிறீரே! இல்லாத அதிகாரமெல்லாம் பண்ணுகிறீரே!'' என்றார்.

கணக்குப்பிள்ளை பிரமித்துப்போனார்; அவருக்கு விஷயம் விளங்கிவிட்டது. தமக்குத் தர்ப்பணம் செய்துவைத்த சாஸ்திரியும், போஜனம் செய்துவைக்கும் அன்னதானப் பிரபுவும், கச்சேரியில் பட்டாக்கொடுக்கப் போகும் தாசில்தாரும் ஒருவரே என்பதை அப்போதுதான் உணர்ந்தார். அவருடைய மனம் குழம்பியது. அவர் உடம்பெல்லாம் வேர்த்தது. அந்த அருமையான போஜனத்தை ருசியறிந்து உண்டுகொண்டிருந்த அவருடைய உள்ளத்தில் அச்சம் புகுந்துகொண்டது. உணவில் ஞாபகமே இல்லாமல் தலை குனிந்துகொண்டே ஒருவகையாகச் சாப்பிட்டார்.

யாவரும் உண்டதும் தாம்பூலம் அளித்து நமஸ்காரம் செய்தபின்பே தாசில்தார் உண்பது வழக்கம். அப்படியே அவர் தாம்பூலம் கொடுத்தார். வந்தவர்கள் விடைபெற்றுக்கொண்டு சென்றனர். கணக்குப்பிள்ளையோ மேல்வஸ்திரத்தை இடையிலே கட்டிக்கொண்டு, பரவசராய்த் தாசில்தார்காலிலே விழுந்து வணங்கினார்; அவருடைய கண்களில் நீர் ததும்பியது; "நான் பெரிய அபசாரம் செய்துவிட்டேன். க்ஷமிக்கவேண்டும். தங்களைத் தெரிந்துகொள்ளாமல் இருந்தது பெரிய பிழை'' என்று இரக்கம் தோன்றக் கூறினார்.

"நீர் ஒன்றும் குற்றம் செய்யவில்லையே. தர்ப்பணம் செய்வதில் உமக்கிருந்த சிரத்தையை நான் அறிந்து சந்தோஷித்தேன். என்னை வேதவித்துக்களுள் ஒருவராக எண்ணியது ஒரு பெரிய பாக்கியந்தான். அப்படி உம்முடைய மனத்தில் படும்படி நான் இருந்தது எனக்குப் பெருமையாகத் தோற்றியதேயல்லாமல் சிறுமையாகத் தோற்றவில்லை. உம்முடைய வைதிக சிரத்தையை நான் பாராட்டுகிறேன். இனி இந்த ஊருக்கு வந்தால் இங்கேயே ஆகாரம் செய்துகொள்ளலாம்'' என்று தாசில்தார் சொல்லிக் கணக்குப்பிள்ளைக்கு விடைகொடுத்தனுப்பினார்.

தாசில்தாருடைய குணங்களை நினைந்து கணக்குப்பிள்ளை உருகிக்கொண்டே சென்றார்.

## 2

அனந்தராம ஐயர் சில காலம் கும்பகோணத்தில் மேட்டுத் தெருவில் குடியிருந்தார். அவர் குடியிருந்த வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்கொல்லையில் ஒரு முருங்கை மரம் இருந்தது. அது தாசில் தாருடைய வீட்டுப் பக்கம் சாய்ந்திருந்தது. தாசில்தாருடைய தாயார் அங்ஙனம் சாய்ந்திருந்த பக்கத்திலுள்ள சில காய்களைப் பறித்துச் சமையல் செய்தனர். அதனை யறிந்த அயல் வீட்டுக் காரர் அனந்தராம ஐயருடைய நடுநிலைமையைப் பரிசோதிக்க எண்ணி அதைக்குறித்து ஒரு பிராது எழுதி அனுப்பினர்.

தம் தாயார் இங்ஙனம் செய்தது அனந்தராம ஐயருக்குத் தெரியாது. ஆதலின் இந்தப் பிராதைக் கண்டவுடன் அவர் திடுக் கிட்டார். உடனே விசாரித்து அந்தக் குற்றத்திற்காகக் கால் ரூபாய் அபராதம் போட்டுத் தம் கையிலிருந்தே அதைச் செலுத்தி விட்டார்.

பிராது செய்தவர் தாம் இங்ஙனம் செய்தது குறித்து மிகவும் வருந்தினர். அனந்தராம ஐயர் நியாயம் வழங்கும் சிறப்பு இந்நிகழ்ச்சியால் எங்கும் பரவியது.



# தோழி மார்க்கண்டி

ஆசார்ய காகா காலேல்கர்

---

[ஹிந்தியிலிருந்து மொழிபெயர்த்தவர்: கா. ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசாரியார்]

ஒவ்வொரு நதியும் நம் தாய்தானா? அல்ல. மார்க்கண்டி என் குழந்தைப்பருவத்துத் தோழி. 'அக்கா' என்றுகூட அழைக்க முடியாது; அவ்வளவு சிறியவள் அவள். என் வயலில், பகலில் அந்த அத்திமரத்தின் கீழே, நிழலில்போய் உட்காரும்போது, மார்க்கண்டியின் குளிர்ந்த, மிக மெல்லென்ற காற்று என்னைத் தவறாமல் அழைக்கும். எத்தனையோ தடவைகள் நான் கரையிலே உட்கார்ந்து, காற்றின் அலைகளிலே அசைவுறும் அழகிய புல்லை மணிக்கணக்காகப் பார்த்துக்கொண்டிருப்பேன். மார்க்கண்டியின் கரையில் அப்படி ஒன்றும் விசேஷமோ, அற்புதமோ இல்லை. அதிசயமான பூக்களும், நிறநிறமான வண்டுகளும் கவர்ச்சியுடைய அழகிய கற்களும் அங்கே இல்லை. கலகலவென்னும் ஓசையினால் மனதைச் சஞ்சலப்படுத்தும் சிறிய பெரிய நீர்வீழ்ச்சிகளும் இல்லை. அமைதிதான் அங்கே நிலவி இருக்கிறது.

மார்க்கண்டி பைஜநாத் மலைகளிலிருந்து வருகிறாளென்று இடையர் கூறுகின்றனர். ஆனால், அவளுடைய உற்பத்திஸ்தானத்தைக் கண்டுபிடிக்கவேண்டுமென்ற எண்ணம் எனக்கு எப்போதும் உண்டானதில்லை. என் கையில் என் தாலூகாவின் படம் கிடைத்தால், அதில் நான் மார்க்கண்டியைக் குறிக்கும் சிறிய கோட்டைத் தேடமாட்டேன். ஏனெனில், அவ்வாறு செய்வதால் அவள் 'என் தோழி' என்ற நினைவு மாறி ஒரு நதிமாத்திர மாகிவிடுவாள். மார்க்கண்டியின் நீரில் என் கால்களை அமிழும்படி வைத்துவிட்டு உட்காருவதிலே எனக்கு மிகுந்த ஆவல். அதில் கால்வைத்தவுடனே சலசலவென்ற ஒலி எழும்பும். சிறுவயதிலே நாங்கள் அதிகமாகப் பேசுவோம். ஒருவரோடு ஒருவர் பழகுவதே போதும்; அதில் எங்களுக்கு ஓர் இன்பம் இருந்தது. மார்க்கண்டி என்ன சொல்லுகிறாள் என்று அறியும் கவலை எனக்குக் கிடையாது; என் மொழி

---

களைப் புரிந்துகொள்ளவேண்டுமென்று அவள் முயலுவதும் இல்லை. ஒருவரைக் குறித்து ஒருவர் பேசிக்கொள்வதே எங்கள் இருவருக்கும் போதுமாயிருந்தது. அண்ணனும் தங்கையும் பல வருஷங்களுக்குப் பின் சந்திக்கும்போது பல்லாயிரம் கேள்விகள் கேட்கிறோம். ஆனால் இந்தக் கேள்விகளில் ஒரு கருத்தும் இராது. இது, அன்பை வெளிக்காட்டும் முறைகளிலே தனிமையானதொன்று. அந்த அன்பின் சந்திப்பிலே, 'கேள்வியென்ன? அதற்குக் கிடைத்த விடை என்ன?' என்பதைப் பற்றிக் கவனிக்க ஒழிவுதான் ஏது? நான் மார்க்கண்டியின் கரையில் உலாவி வருவேன். மார்க்கண்டி என் குழந்தைப் பாட்டுக்களைக் கேட்டுக்கொண்டிருப்பாள்.

பதினாறுவது வயதில் தன்னை யமன் அழைத்துச்செல்ல வரும்போது, சங்கரர்பாலுள்ள பக்தியின் வன்மையினால் அவனைப் பின்னே பிடித்துத் தள்ளிய மார்க்கண்டேய ரிஷியின் உபாக்கியானத்தைப் பாடும்போது, அந்நாட்களிலே எனக்கு எவ்வளவு இன்பமுண்டாகும்!

> "நல்ல அழகிய கெட்டிக்காரப் பிள்ளை; பதினாறு வயது ஜீவித்திருப்பான். மற்றொருவன் முட்டாளும் குரூபியுமான பிள்ளை; நூறு வருஷங்கள் வரை அப்படியே இருப்பான். இவ்விருவரில் உனக்கு யார் வேண்டுமோ சொல்."

என்று மகாதேவர் மிருகண்டுவுக்கு வரமளித்தார். ரிஷி தம் தர்மபத்தினியை நோக்கி, "இவ் விரண்டில் எந்த வரம் கேட்கலாம்?" என்று வினவினார். இருவரும், "பதினாறு வயது வாழ்ந்தாலும் நற்குணமுள்ள மகனே நமக்கு வேண்டும்; அவனாலே நம் குலம் கடைத்தேறும்" என்று நிச்சயித்து, முதல் வரத்தைக் கோரினர். மார்க்கண்டேயன் பெரியவனாகி வளர வளர, பெற்றோர்களின் முகம் வெளுக்க ஆரம்பித்தது. கடைசியில் பதினாறு வருஷங்கள் முடிந்துவிட்டன.

இளைஞன் மார்க்கண்டேயன் பூஜையிலே அமர்ந்திருக்கிறான். யமதேவன் எருமைக் கடாவின்மேல் ஏறி வந்துவிட்டான். ஆனால், சிவலிங்கத்தோடு பொருந்தியிருக்கும் இளைஞனான பக்தனைப் பிடிக்க அவனுக்குத் தைரியம் எப்படி வரும்! ஆயினும் பாசத்தை வீசினான்; சிவலிங்கத்திலிருந்து திரிசூலமேந்திய சிவபிரான் தோன்றினார். இந்த அநீதத்துக்காக யமனுக்குப் பல சாபங்கள் கிடைத்தன. மிருத்தியுஞ்ஜயரான மஹாதேவரைக் கண்ட பின்பு மார்க்கண்டேயனுக்கு மரண பயமேது? அவனுடைய ஆயுள் தாரையே இன்றும் ஓடிக்கொண்டிருக்கிறது.

நான் கலாசாலையில் படித்துக்கொண்டிருக்கும்போது, பரீக்ஷைக்குப் பின்பு 'ப்ராத்ரு த்விதீயை'* வரும். வயலில் பயிர் அறுவடைக்குத் தயாராய் இருக்கும். வயலிலேயே இரண்டு நாட்கள் கழிக்கவேண்டிவரும். அப்போது மார்க்கண்டி எனக்கு இனிய வள்ளிக்கிழங்குகளை உண்ணக் கொடுத்துத் தன் அமுத நீரைப் பருகவைப்பாள். இரவில் அவள் குளிரால் நடுங்குகிறளோ வென்று நான் பார்க்கப் போகும்போது, அவள் தன் மாசற்ற கண்ணுடியிலே எனக்கு மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தின் காட்சியைக் காட்டுவாள்.

இன்றும், நான் என் வீட்டுக்குப் போகும்போதெல்லாம் தோழி மார்க்கண்டியைப் பாராமல் இருக்கமாட்டேன். ஆனல் அவள் என்னேடு முன்போல விளையாடுவதில்லை; சிறிது புன்சிரிப்புடன் சும்மா இருந்து விடுகிருள். அவளுடைய கோமள முகத்தில் முன்போன்ற லாவண்யத்தை நான் இப்போது காண்பதில்லை; அவளுடைய சினேகத்தின் ஆழம் அதிகரித்திருப்பதையே நான் இப்போது காண்கிறேன்.



—M. K. R.

*வட இந்தியாவிலே ஒரு பண்டிகை; இந்நாளில் ஸஹோதரன் ஸஹோதரியின் வீட்டுக்கு விருந்தாளியாக வருவது வழக்கம்.




# ஆதித்தசோழனது கண்ணனூர்ப் பால சுப்பிரமணியர் கோயில்

— 9-ஆம் நூற்றண்டு —

எஸ். ஆர். பாலசுப்பிரமணிய ஐயர், எம். ஏ., எல் டி.

விஜயாலய சோழ வம்சத்தை ஸ்தாபித்தவனுன விஜயாலயனின் மகன் இராஜகேஸரி யென்ற முதலாம் ஆதித்தன் ஆவான். இதுவரை மிகப் பழைய சோழர்களுடைய தாமிரசாஸனமான அன்பில் செப்பேடுகளில் இவன் பெயர் ராஜகேஸரி என்றே காணப்படுகிறது. இவன், காவிரிநதியின் இருகரையிலும் ஸஹ்யாத்ரி (மேல் மலைத்தொடர்) முதல் கீழ்சமுத்திரம்வரையில் சிவபிரானுக்குத் தன் வெற்றிகளின் ஞாபகார்த்தமாகப் பல கோயில்களைக் கட்டி வைத்தான் என்றும் சாஸனம் கூறும். திருவாலங்காட்டுச் செப்பேடுகளில் பல்லவ அரசனுன அபராஜிதனை வென்று தொண்டை நாட்டை இவன் கைக்கொண்டானென்பதும், கன்னியாகுமாரிக் கல்வெட்டில் இவனுக்குக் கோதண்டராமன் என்ற வேறு பெயர் ஒன்றுண்டென்பதும், யானைமேல் வீற்றிருந்த பல்லவ அரசன்மேற் பாய்ந்து கொன்ருனென்பதும் விவரித்துக் கூறப்பட்டுள்ளன. திருக்கழுக்குன்றத்து இராஜகேஸரியின் 27-ஆம் ஆண்டுச் சாஸனம் இவ்வாதித்தனையே குறிக்கும். முற்காலத்து ஸ்கந்தசிஷ்யனுல் ஏற்படுத்தப்பட்டு வாதாபி கொண்ட நரசிங்கப்போத்தரையனுல் ஆதரிக்கப்பட்டு வந்த தர்மத்தை ஆதித்தன் ஊர்ஜிதப்படுத்தினுன். தக்கோலத்தில் உள்ளதாகிய இராஜகேஸரியின் 24-ஆம் ஆண்டுக் கல்வெட்டில், "திருவூறல் மாதேவற்கு மாற மறையர் மகனர் பிரிதிவீபதியார் ஆனித்தலைப்பிறையில் தீண்டின சூரியகிரணத்தன்று நிறை முந்நூற்று ஒருபத்தேழு கழஞ்சுடைய வெள்ளிக் கெண்டியைக் கொடுத்தார்" என்று குறிக்கப்பட்டுள்ளது. இது சுமார் கி. பி. 894 அல்லது 895-இல் ஏற்பட்ட சூரியகிரஹணத்தைக் குறிக்கும். இதிலிருந்து ஆதித்தனது ஆட்சியின் ஆரம்ப காலம், கி. பி. 870 அல்லது 871-ஆக இருக்க வேண்டுமென்று கொள்ளலாம். இவன் கி.பி. 907-ஆம் ஆண்டுவரையில் ஆண்டான். இவன் காலத்தில் சோழ ராஜ்யம் கொங்கு, தொண்டை மண்டலங்கள் வரையில் பரவியது.

இக்கட்டுரையில் கண்ணனூரிலுள்ள ஆதித்த சோழனது சுப்பிரமணிய தேவரின் கோயிலைப்பற்றி விவரிப்போம். இக்கோயில் அநேகவிதங்களில் ஒப்பற்றது. எக்கோயிலையும் நிச்சயமாய் ஆதித்தன் கோயில் என்று சொல்வதற்கு இடங்கொடாத நிலையில் இதை ஒருவாறு இவன் காலத்தது என்று துணியலாம். இது முழுவதும் கருங் கற்களால் அமைக்கப்பட்டுள்ளது; மணி



கண்ணனூர்க் கோயிலின் தோற்றம்

யின் உருவத்தைக்கொண்ட சிகரம் வாய்ந்தது. மற்றச் சிவாலயங்களைப் போல் கருப்பக்கிருஹத்தின் வெளிச்சுவர்களின் புரைகளில் தேவகோஷ்டங்களும் தக்ஷிணாமூர்த்தி முதலிய மூர்த்திகளின் சிலைகளும் உள. இக்காரணங்களால் இது சிறப்பு வாய்ந்தது.

கண்ணனூர் என்பது புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தில் திருமெய்யம் தாலூகாவிலுள்ள ஒரு சிறு கிராமம். புதுக்கோட்டையென்ற தலைநகரின் தென்மேற்கே 23 மைல் தூரத்தில் இருக்கிறது. இக்கிராமத்திலுள்ள ஊருணியின் கீழ்கரையில் இரண்டு கோயில்கள் இருக்கின்றன. சுப்பிரமணியர் கோயில் ஒன்று. விருதராஜ பயங்கர விண்ணகர எம்பெருமான் என்ற திருநாமமுடைய திருமாலின் கோயில் மற்றொன்று.

சுப்பிரமணியர் கோயில் ஒரு கற்றளி. முழுவதும் சுண்ணாம்புச் சம்பந்தமில்லாமல் செவ்வையாய்ப் பொருந்தும்படி இணைக்கப்பட்ட கற்களால் அமைக்கப்பட்டுளது. இம்மாதிரியான கோயில்கள் சில பல்லவர்காலத்தும், பழைய சோழர் காலத்தும் கட்டப்பட்டன. இது கருப்பக்கிருகம், அந்தராளம், மூடப்

பட்டுள்ள முகமண்டபம், பிராகாரம் என்ற பாகங்கள் அடங்கியது. கோபுரவாயிலின் நடுவிலுள்ள இரு கல்ஸ்தம்பங்களே தற்காலம் மிஞ்சியுள்ளன. அஸ்திவாரத்தைத் தவிர மற்றைச் சுற்றுச் சுவரின் பாகங்கள் அழிந்து போயின.

சர்க்கார் வெளியீட்டில் பிரசுரம் செய்திருக்கும் ஒன்பது கல்வெட்டுக்களும் முகமண்டபத்துச் சுவர்களிலேயே காணப்படு கின்றன. அவைகள் எல்லாம் பாண்டியசாஸனங்கள். இவ்வொன் பதில் பழமையானது மாறவர்மன் சுந்தரபாண்டியனது (பட்டம். கி. பி. 1216). இதிலிருந்தும், கட்டட அமைப்பு, சுவரிலுள்ள அரைத்தூண்களின் (*pilaster*) உருவம் இவைகளைக் கொண்டும் இம்முகமண்டபம் பதின்மூன்ளும் நூற்ளுண்டைச் சார்ந்தது என்று சொல்வதற்கு ஐயமில்லை.

ஆனல் கருப்பக்கிருகமும் அந்தராளமும் பழமையானவை. பழைய கோயில் இத்துடன் இருந்திருக்கவேண்டும். இதற்குச் சான்ளுக முன்சொன்ன கட்டடவமைப்பு அல்லாமல் புதியதொரு ஆதாரமும் கிடைத்தது. அந்தராளத்திலுள்ள வாசலின் இருபுறத் தும் இரண்டு புதிய கல்வெட்டுக்கள் கிடைத்தன. பிற்காலத்திற் கட்டிய கட்டடத் தூண்களிலே மறைபட்டிருப்பதால் அவைகள் முழுவதும் நமக்குக் கிடைப்பது அரியதாயிருக்கிறது. ஆனபோதி லும் கிடைத்திருக்கும் பாகத்திலிருந்து அரிய விஷயங்கள் தெரிய வருகின்றன. கோவிலின் நேர் வலப்பக்கத்திலுள்ள கல்வெட்டி லிருந்து 'கோவிராசகேஸரிபன்மர் காலத்துத் துருமாநாட்டு இவ் வூர்ச் சுப்பிரமணியதேவர்க்கு' ஒரு நிலப்பரிசு கொடுத்ததாகவும், இடப்பக்கத்துக் கல்வெட்டிலிருந்து (*Proper left*) 'சுப்பிரமணிய தேவர்க்கு ஊரோம் திருநந்தாவிளக்கு' எரிக்க ஏற்பாடுசெய்த தர்மத்தையும் அறிகிறோம். லிபியின் உருவத்திலிருந்தும் மற்றைக் கட்டட அமைப்பிலிருந்தும் இந்தச் சுப்பிரமணியர்கோயில் ஆதித் தன் என்ற ராஜகேஸரி காலத்ததென்று நிச்சயமாகச் சொல்லலாம். பாலசுப்பிரமணியர் கோயில் என்பது பிற்காலப் பெயராகும்; முன்பு சுப்பிரமணியர்கோயில் என்றே வழங்கியிருக்கவேண்டும்.

இங்கே கவனிக்கவேண்டியது ஒன்றுண்டு. இதுவரையில் ஆதித்தன் கட்டியதோ அல்லது அவன் காலத்ததோ வென்று நிச்சயமாய்ச் சொல்வதற்கில்லை என்ற நிலையில், இக்கோயில் இவன் காலத்தது என்று துணிந்து ஸ்தாபிப்பதற் கேற்றபடி அமைந்தி ருக்கிறது. சோழர் (கோயில்) களின் சரித்திரத்தில் இது ஒரு முக்கியமான ஸ்தானத்தை வகிப்பது என்னலாம். இது நிற்க; தென்னிந்திய சரித்திரச்சின்னங்களின் (கட்டடங்கள், சிலைகள் முதலியன) வரலாறுகளை முதல் முதல் சாங்கோபாங்கமாய் சாஸ் திரமுறைப்படி மிக நேர்த்தியாக எழுதியுள்ள துப்பிராய் (*G. J. Dubreuil's Indian Iconography*) என்ற பிரஞ்சுக்கலைஞர் பின் வருமாறு எழுதியிருக்கிறார்: "தென்னிந்தியாவில் மயிலோ மற்றச் சின்னமோ பொருந்தியுள்ள சுப்பிரமணியர் சிலை பல்லவ சோழர்

கோயில்களில் காணப்படுவதில்லை.'' சுப்பிரமணியர் சிலையும் கோயி லும் ஆதித்தன்காலத்தே ஒன்பதாம் நூற்றாண்டில் இருந்தனவென் பதற்கு இக்கோயிலே சான்றாகும். சில மாத்திரமல்லாமல் சுப்பிரமணியதேவருக்கே யானைவாகனத்துடன் தனிக்கோயிலாக இருந்ததென்றால் இது பெருமை வாய்ந்த தல்லவா?

சுப்பிரமணியக் கடவுளைத் தென்னாட்டில் முருகன் என்று வழங்கிவந்தனர். சங்கநூலான பத்துப்பாட்டிலுள்ள திருமுருகாற் றுப்படையில் முருகனது பெருமையையும் அவருடைய கோயில் களைப்பற்றியும் விரிவாகச் சொல்லியுள்ளனர். திருச்செந்தூர்,



கண்ணனூர்ச் சுப்பிரமணியர் கோயில் விமானம்

பழநி, மயிலம் முதலிய ஸ்தலங்களில் இன்னும் முருகன் வேலன் சுப்பிரமணியன் என்ற திருநாமங்களோடு இக்கடவுள் எழுந்தருளி யிருக்கின்றனர். திருநெல்வேலியைச் சேர்ந்த திருச்செந்தூரிலுள்ள சுப்பிரமணிய தேவருக்குப் பாண்டிய அரசனான வரகுண மகாராஜா 1400 நிறை குறையாப் பழங்காசுகளை உதவி அவைகளைப் பதினாறு ஊர், நகரம், சபையார்களுக்குப் பிரித்து 'முதல்கெடாமைப் பொலியூட்டாக'க் கொடுத்து அம்முதலின் வட்டியிலிருந்து பட்டாரருக்குப் பல நிவந்தங்கள் நடத்தும்படி ஏற்பாடு செய்தார். இது சுமார் எண்ணூற்று எழுபத்துநான்காமாண்டில் நடந்தது.

இக்கண்ணனூர்க் கோயில் கிழக்கு மேற்கில் நாற்பத்தொன்பதடி நீளம் உள்ளது. கருப்பக்கிருகம் சதுரமானது. ஒவ்வொரு பக்கமும் $12\frac{1}{2}$ அடி நீளம் உள்ளது. கிழக்குத்திக்கைப் பார்த்த கோயில். கர்ப்பக்கிருகத்தைச் சுற்றிக் கனமான சுவர்களும் இடையில் பதித்த அரைத்தூண்களும் (*pilasters*) இருக்கின்றன. ஒவ்வொரு தூணும் திருக்கட்டளைச் சுந்தரேசுவரர்கோவில் தூண்களைப் போல் நேர்த்தியான கால், கலசம், கும்பம், பலகை என்ற முக்கிய பாகங்கள் அடங்கியவை. நார்த்தாமலை விஜயாலயசோளீசுவரத்துக் கோயிற் போதிகையைப்போல், பக்கத்தில் சாய்வு வாய்ந்தது (*Angular profile of the corbel*). காளியாபட்டி, திருப்பூர்க் கோயிற் போதிகைகளும் இத்தகையனவே. போதிகைக்கும் கபோதத்திற்கும் இடையில் விஜயாலய சோளீசுவரத்தைப்போல் ஒரு பூதகணவரி யுளது. கபோதத்தின் மூலையில் அழகிய சித்திரங்கள் வரையப்பட்டுள்ளன. மேலே யாளிவரிமானமும் கிரீவமும் விளங்குகின்றன. கிரீவத்தில் நான்கு தேவ கோஷ்டங்கள் இருக்கின்றன. தற்காலம் இரண்டில்தான் சிலைகள் உள. இத்திருவுருவங்கள் என்னவென்று தெரியவில்லை; அவ்வளவு தேய்ந்து போயிருக்கின்றன. இதைச்சுற்றி நான்கு திக்கிலும் நான்கு யானைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு யானையும் இரண்டடி மூன்றங்குல நீளமும், ஓர் அடி எட்டு அங்குல உயரமும் உடையது. இதேமாதிரி மற்றொரு யானை முகமண்டபத்தில் இருக்கிறது. இதனுல் யானை இக்கடவுளின் வாகனம் என்று தெரிய வருகிறது. பத்துப்பாட்டு, பரிபாடல், புறநானூறு என்ற சங்க நூல்களில் பிணிமுகமென்னும் பெயருடைய யானையொன்று முருகக்கடவுளின் ஊர்தியாகச் சொல்லப்படுகிறது.

> "பிணிமுகம் வாழ்த்தி." (திருமுருகாற்றுப்படை)
> "சேயுயர் பிணிமுக மூர்ந்து."
> "பிணிமுகமூர்ந்த வெல்போ ரிறைவ." (பரிபாடல்)
> "பிணிமுகவூர் தி யொண்செய் யோனும்." (புறநானூறு)

மேலும்,

> "வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
> வாடா மாலை யோடையொடு துயல்வரப்
> படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக்
> கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்
> கால்கிளர்ந் தன்ன வேழமேல் கொண்டு"
> (திருமுருகாற்றுப்படை, 68-82)

என்று முருகக்கடவுளை வாழ்த்தியுள்ளார்.

நார்த்தாமலையிலுள்ள கடம்பூர்க் கோயிற் சிகரத்தைப்போல் இக்கோயிலின் சிகரமும் மணிவடிவுடையது. சிகரத்தின் தலைப்பில் மகாபத்மம், பட்டிகா என்ற பத்ம இதழ்களும், அவற்றிற்கு மேல் அழகுவாய்ந்த கல்ஸ்தூபியும் இருக்கின்றன. விமானத்தின்மேல் முற்காலத்தில் சுண்ணும்பு பூசி வர்ணம் கொடுத்திருக்கவேண்டும்.

கருப்பக்கிருகத்தின், வெளிச்சுவர்களிலுள்ள மூன்று புரைகளிலும் தேவகோஷ்டங்களில் விக்கிரகங்கள் அமைக்கப்பட்



இடதுபக்கத்திலுள்ள சாஸனத்தின் ஒரு பகுதி



வலதுபக்கத்திலுள்ள சாஸனத்தின் ஒரு பகுதி

டிருக்கவேண்டும். இவைகளில் தெற்கேயுள்ள கோஷ்டத்தில் தக்ஷிணாமூர்த்தி உருவமாத்திரமே தற்காலம் மிஞ்சி நிற்பது. மற்றை யிரண்டு கோஷ்டங்களில் சிலைகளைக் காணோம். இது ஞான தக்ஷிணாமூர்த்தி சிலையாகும். சடாமகுடமும் நான்கு கைகளும்உள. முன்வலதுகை சின்முத்திரை யுடையது. இடதுகை தொடைமேல் வைக்கப்பட்டிருக்கிறது. பின் வலது கையில் இருக்கும் பொருள் தெரியவில்லை. ஒரு வேளை அக்கமாலையா யிருக்கலாம். இடதுகையில் பாம்பு. வடவிருக்ஷத்தினடியில் அபஸ்மாரனின்மேல் மிதித்துக்கொண்டிருக்கும் அவசரம்.

கருப்பக்கிருகத்தில் புதிய சிலையொன்றை வைத்துப் பூசை செய்து வருகிறார்கள். பழைய உடைந்த சிலையை இப்பொழுது முகமண்டபத்தில் வைத்திருக்கிறார்கள். இது நின்ற கோலத்திலமைந்ததொரு விக்கிரகம். இவ்வுருவம், மூன்றடி ஆறங்குல உயரமும், ஓர் அடி ஆறங்குலக் குறுக்களவும், அரையடிகனமுமுள்ளது. நான்கு கைகள் உடையது. மேற்கைகளில் சக்தியும் அக்கமாலையும் இருக்கின்றன. கீழ்வலதுகை அபயஹஸ்தமும் இடதுகை தொங்கும் நிலையுமுடையன. மார்பில் இரண்டு அக்கமாலைகளைக் குறுக்காக அணிந்துள்ளார். கரண்டமகுடமும் தரித்துள்ளார். இது மிகப் பழமையான சிலை. ஆனால் பின்னப்பட்டுள்ளது.

ஆகவே இக்கண்ணனூர்ச் சுப்பிரமணியர் கோயில் ஆதித்தன் காலத்து ஒன்பதாம் நூற்றாண்டிற்குரிய பழையகோயிலென்றும், சுப்பிரமணிய தேவருக்குப் பிரத்தியேகமாக அமைக்கப்பட்ட தனிக் கற்றளி யென்றும், மற்றைச் சிவன் கோயில்கள் போல இதுவும் தேவகோஷ்டங்கள் வாய்ந்ததென்றும், தெற்குக் கோஷ்டத்து அழகிய தக்ஷிணாமூர்த்தியுருவத்தையுடையதென்றும், மணியுருவத்தை யொத்த சிகரத்தை யுடைய தென்றும் பலவிதத்திலும் பெருமைவாய்ந்த கோயில் என்றும் அறிகிறோம்.

வலப்பக்கத்துள்ள சாஸனம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோவி......
2. கேஸரி பன்மா......
3. ஆவது துருமாநாட்டு
4. ......... நிலம்
5. ன இவ்வூர் சுப்ரம (கிரந்தத்தில்)

இடப்பக்கம்

1. .... ஆவது கானனாட்டு
2. ....ப்ரமண்ய ஷேவற்கு
3. ....து ஊரோம் குடுத்த

......................

......................

6. ....திருநந்தா விளக்கு..

---

# பாண்டித்துரைத் தேவர்

மே. சு. இராமசுவாமி

---

இராமநாதபுரத்தை ஆண்டுவரும் சேதுபதிமன்னர்கள், தொன்றுதொட்டே வீரர்களாகவும் வள்ளல்களாகவும் விளங்கி வருகின்றனர். அவர்கள் ஆதரவில் வாழ்ந்த தமிழ்ப்புலவர்கள் பலர்; பரிசுபெற்ற வித்துவான்களோ கணக்கில் அடங்கார். இப்பொழுது இருக்கும் சேதுபதி அரசரின் கொள்பாட்டனர் முத்து ராமலிங்க சேதுபதியாவர். அவருக்கு முன்னிருந்த மன்னருக்குக் குழந்தை இல்லாததால் அவரைத் தத்து எடுக்க நேர்ந்தது. அவர் சிறுவராயிருந்தபொழுது இராமநாதபுரஞ் சீமையை மேற்பார்த்து ஆட்சிபுரிந்து வந்தவர் அவருடையமூத்தசகோதரரான பொன்னுச்சாமித்தேவர் ஆவர். இந்தச் சம்ஸ்தானத்திற்கு அவர் செய்திருக்கும் நன்மைகள் கூறுந் தரத்தனவல்ல. நாடு செழித்தது; குடிகள் பசியும் பிணியுமின்றி வசியும் வளனும் சிறந்தோங்க வாழ்ந்தனர்.

இவ்வரிய செய்கைக்குக் கைம்மாருக வேண்டிய பூமிகள் சேதுபதியால் தம் சகோதரருக்கு அளிக்கப்பட்டன. அவற்றுள் பாலவனத்தம், பாலயம்பட்டி என்ற சிறுஜமீன்கள் சிறந்தவை. இது முதல் பொன்னுச்சாமித் தேவர் ஜமீன்தார் ஆனர். அவரது தமிழ்ப் புலமையும், அபிமானமும் மிக உயர்ந்தவை. திருக்குறள் (பரிமேலழகர் உரையுடன்), திருக்கோவையார் (பேராசிரியருரையுடன்), தர்க்கசங்கிரகம், அன்னம்பட்டீயம், சேதுபுராணம் முதலிய நூல்களை, யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுக நாவலரைக் கொண்டு முதல் முதல் அச்சிற் பதிப்பித்ததற்கு அவரே காரணம். அன்றியும், பல சந்தர்ப்பங்களில் பல புலவர்கள் பாடிய தனிப்பாடல்களை ஒருங்கு திரட்டிச் சந்திரசேகர கவிராஜ பண்டிதர் அவர்களைக்கொண்டு 'தனிப்பாடற்றிரட்டு' என்னும் நூலை வெளியிட்டார். மற்றும் இலக்கியம், இலக்கணம், சங்கீதம், வைத்தியம் முதலியவற்றில் தேர்ச்சியுள்ள பண்டிதர்கட்கு மிக்க பொருளுதவி செய்தும் பல நூல்களை வெளியிடச்செய்தும் வந்தார். அவரது குணத்தைக் குறித்து அக்காலத்தில் இருந்த திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் அவர்களும், மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்களும் முறையே கூறிய கீழ்வரும் செய்யுள் தொடர்கள் கருதத்தக்கன:

"திருமலியுந் தென்முகவைப் பதியினிலெங் கண்மணியில்
திகழ்ந்து நாமுன்
புரிதவத்திற் கேபயனுப் பெற்றபொன்னுச்
சாமிமன்னன்."

"இலனெனும் எவ்வம் எனுந்திருக் குறட்குப்
பலர்பல விதமாப் பகர்ந்தபே ருரையுள்
இரப்பவன் இரக்கப் படுவோ னாகச்
சுரக்குங் கொடையே சொல்லின் முதற்றால்
அக்கொடை யிவன்பா லமைந்த தியல்பென்
றெக்கொடை வள்ளலும் இயம்பப் பொலிவோன்."

இவ்வாறு திருவினரும், தெள்ளியருமாய் விளங்கிய பொன்னுச்சாமித்தேவருக்குத் தமிழ்நாடு செய்த தவப்பயனாக 1865-ஆம் ஆண்டு மூன்றாம்புத்திரராகப் பாண்டித்துரைத் தேவர் தோன்றினார். இவருடைய மூத்த சகோதரர்கள் பாலயம்பட்டி ஜமீன்தார் கோட்டைச்சாமித் தேவரும் சீமைச்சாமித் தேவருமாவர். இவர்களின் இளம்பிராயத்திலேயே தந்தையார் காலஞ்செல்ல நேர்ந்தது. அதன் பின் அத்தந்தையாரின் நம்பிக்கையும் அபிமானமும் உடையவராகவும் வக்கீலாகவும் இருந்த சேஷாத்திரி ஐயங்கார் என்பாரால் இவர்கள் ஜமீன்களும் பிறவும் மேற்பார்க்கப்பட்டுவந்ததோடு, இப்பிள்ளைகளின் கல்வித்தேர்ச்சி முதலியனவும் பெரிதும் கவனிக்கப்பட்டுவந்தன. ஐயங்காரவர்களின் புத்திரரே, நம்நாட்டில் இணையற்ற அட்வொகேட்டாக விளங்கும் ஸ்ரீமான் எஸ். ஸ்ரீனிவாஸ ஐயங்கார் அவர்கள்.

இராமநாதபுரத்திலிருந்த பள்ளிக்கூடத்திலேயே இம் மைந்தர்களுக்கு முதல்முதல் பாடம் சொல்லிவைக்கப்பட்டது. இவர் இயற்கையிலேயே கூரிய மதிவாய்ந்தவர். ஆதலால் 'செவிவாயாக, நெஞ்சு களனாகக் கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்து' வந்ததனால் சிறந்த கல்விமானாய்ச் சிறிது காலத்திற்குள் விளங்கினார். தமிழ்ப்பயிற்சிக்காக ஆதியில் இவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் மாணாக்கர் ஒருவரிடம் பாடம் கேட்டார். பின்பு, இராமநாதபுர ஸம்ஸ்தான வித்துவான் சதாவதானம் முத்துசாமி ஐயங்கார் அவர்களிடம் இராமாயணம் முதலிய தமிழ்இலக்கியங்களும், மதுரைவித்துவான் இராமசாமிப் பிள்ளையவர்களிடம் பெரிய புராணம் தணிகைப் புராணம் முதலிய சைவபுராணங்களும், திருவாவடுதுறைப் பழநிக் குமாரத் தம்பிரானிடம் சைவசித்தாந்த சாஸ்திரங்களும் கற்றுத் தேர்ந்தார். இதனால் இவர் ஞானம் மிக விரிவுற்றது; செய்யுள் இயற்றும் வன்மையும் இவருக்கு நன்கு அமைந்தது.

இங்ஙனம் கல்விச் சிறப்பு அமைந்த இவர் தமிழ்மொழியைப் பலவழிகளில் ஆதரித்து வரலானர். தாமே ஆசிரியராயிருந்து மாணவர் பலர்க்குக் கல்வி கற்பித்தார். தம் ஆசிரியரின் குமாரரான ஸ்ரீமான் மு. இராகவ ஐயங்கார் அவர்களைத் தமிழ்த் துறையில் இவர் ஊக்கியுதவினர். இவரது அவையில் வடமொழி தென் மொழி வல்ல வித்துவான்கள் பலர் இருந்தனர். அவருட் சிறந்தோர் எட்டையபுரம் ஸம்ஸ்தான வித்துவான் வீராசாமி ஐயங்கார், வித்துவான் அரங்கசாமி ஐயங்கார், திரு நாராயண ஐயங்கார் முதலியோராவார். வடமொழி, தென்மொழிகளில் வல்லவர்களான பண்டிதர்கட்குத் தகுதியறிந்து இவர் பரிசு அளித்து வந்தார். பல மாணவர்கட்குப் பேருதவிகள் புரிந்து உயர்தரக் கல்வி பயிற்றுவித்தார். மதுரையிற் பிரபல வக்கீலாகவும் தமிழ்ச் சங்கத்தின் உப அக்கிராசனுதிபதியாகவும் விளங்கும் ஸ்ரீமான் டி. வி. ஸ்ரீநிவாஸையங்கார் அவர்கள் இவர்களுள் ஒருவர்.

பலநூல்களில் உள்ள சிறந்த விஷயங்களை யாவரும் எளிதில் உணரும்பொருட்டுப் 'பன்னூற்றிரட்டு' என்னும் அரிய தொகை நூலை இவர் வெளியிட்டார். ஐம்பத்து மூன்று சிறந்த தமிழ்நூல்களினின்றும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆயிரத்தறுநூற்று நாற்பத்தேழு செய்யுட்களை உடையது அந்நூல். சைவசமயத்தில் இவருக்கிருந்த அன்பு சிவஞான சுவாமிகள்மீது இவர் பாடிய இரட்டை மணிமாலையால் நன்கு புலப்படும். வித்துவான் இராமசாமிப் பிள்ளையவர்களைக் கொண்டு சிவஞான சுவாமிகள் பிரபந்தத்திரட்டைப் பதிப்பித்தார். மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் புறப்பொருள் வெண்பா மாலையையும், மணிமேகலையையும், திருவாலவாயுடையவர் திருவிளையாடற் புராணத்தையும் வெளியிடுவதற்கு இவர் பொருளுதவி செய்தார்.

1901-ஆம் வருடம் சென்னை மாகாண மகாநாடு மதுரையில் கூடியபோது பாண்டித்துரைத்தேவர் வரவேற்புக்கழகத் தலைவராயிருந்தார். இந்தச் சமயத்தில்தான் தமிழ்ச்சங்க ஸ்தாபனத்தின் அவசியம் அவர் மனத்தில் தோற்றியது. மகாநாடு முடிந்த மறுதினமே, மேமாதம் இருபத்துநாலாம் தேதியன்று இவர் ஒரு பொதுக்கூட்டத்தைக் கூட்ட, மகாநாட்டிற்கு வந்திருந்த பெரியாரனைவரும் இதற்கு வந்து தமிழ்ச்சங்க ஸ்தாபனத்தை இனிது நடைபெறச் செய்தனர். இவர் அச்சங்கத்தின் தலைவராகத் தமது இறுதிநாள்வரை இருந்துவந்தார். சங்கமூலமாகச் 'செந்தமிழ்' என்னும் பத்திரிகை ஒன்றை வெளியிட்டு அதை அரிய பெரிய விஷயங்கள் பொதிந்த ஓர் பொக்கிஷமாய்ச் செய்தார். சங்கத்தோடு பாண்டியன் புத்தகசாலை என்று ஒன்று நிறுவினர். ஆண்டுதோறும் தக்க

புலவர்களைக் கொண்டு பிரசங்கங்கள் புரியவும், ஆங்கிலம் கற்பவர் கட்கும் தமிழ்த்தேர்ச்சி பெறுபவர்கட்கும் தனித்தனியே பரீக்ஷை கள் ஏற்படுத்திப் பரிசுகள் வழங்கவும் ஏற்பாடுகள் செய்தார். அச் சங்கம் ஒன்றே இவரது தமிழ் அன்பிற்குச் சான்றாய் மிளிரு கின்றது.

மதுரையில் சேதுபதியரசர் பெயரால் தமிழ்க் கலாசாலை ஒன்றை இவர் ஸ்தாபித்தார். இராமநாதபுரத்தில் பாண்டியன் 'ஸெகண்டரி ஸ்கூல்' ஒன்றை ஏற்படுத்தி, அதற்கு வேண்டிய பொருள் உதவிசெய்தார்.

'செந்தமிழ்'ப் பத்திரிகையில் அடிக்கடி நூலாராய்ச்சி விஷய மாகவும், சரித்திர சம்பந்தமாகவும், பல அரிய கட்டுரைகளை இவர் எழுதிவந்தார். இவர் கம்பராமாயணச்செய்யுள் சிலவற்றிற்கு எழுதிய விளக்கவுரையும் தனியே எழுதிய தமிழ்ப் பழஞ்சரிதம் என்னும் விஷயமும் கற்றோர் காமுறுவனவாய்த் திகழ்கின்றன. தனிச்செய்யுட்கோவை, திருக்குறளைப்பற்றிய கதைகள், இந்திய வீரமாதர் முதலிய வியாசங்களும் இவர் எழுதினார். திருவாலவா யுடையார் கோயில் திருப்பணிமாலை, தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் இயற்றிய இலக்குமி தோத்திரப்பதிகம், நம்பியகப் பொரு ளுரை ஆகியவை செந்தமிழ்ப் பிரசுரங்களாக இவரால் வெளியிடப் பட்டன. இவர் இயற்றிய காவடிச்சிந்து ஒன்றும் உண்டு. சங்கம் நிறுவுவதற்கு முன்னரே வெளியிடப்பட்ட 'பன்னூற்றிரட்டு' என்னும் நூலை நூற்றுக்கணக்கான புதிய செய்யுட்களைச் சேர்த் துத் திருத்தமாக இரண்டாம்பதிப்பொன்று சங்கப்பிரசுரமாக இவர் வெளியிட்டார். சைவர்கட்குப் பெரிதும் பயன்படுமாறு சைவ சித்தாந்த நூல்கள் பலவற்றிலிருந்து சிறந்த செய்யுட்களைப் பொறுக்கி, 'சைவ மஞ்சரி' என்னும் பேரால் ஒரு தொகை நூல் பதிப்பித்தார். இங்ஙனமே பல தோத்திரப் பாக்களைத் திரட்டித் 'தோத்திரத் திரட்டு' என்று ஒரு நூல் வெளியிட்டார்.

வியாசம், செய்யுள் ஆகிய இவற்றை வரைவதில்மாத்திரம் வல்லமையுள்ள சிலர்போல் ஆகாமல் இவர், வித்துவான்கள் கூடிய பெரிய சபையில் திருத்தமாக இனிய குரலில் நீண்டநேரம் கேட் போர் மகிழும்வண்ணம் பிரசங்கம்புரியும் ஆற்றலும் மிக வாய்ந்த வர். இவரது சொற்பொழிவுகள் கற்பனை நயமும், சொற்பொருள் நயமும் மிகுந்து கேட்கக் கேட்கத் தெவிட்டாதிருக்கும். இவர், சைவசமய விஷயமாகவும், தமிழ்விஷயமாகவும், சென்னை, சேலம், தஞ்சை, நாகபட்டினம், சிதம்பரம், திருவாரூர், கும்பகோணம், மதுரை, தூத்துக்குடி, திருநெல்வேலி முதலிய இடங்களில் பிரசங் கம் செய்திருக்கிறார்.

"வண்மைமிகு கம்பரா மாயணநுட் பங்களெல்லாம்
வயதோ ரேழில்
தெளிவுபெறப் பலர்மகிழப் பிரசங்கஞ் செய்திடுநற்
றிறமை வாய்ந்து"

என்று ம. கோபாலகிருஷ்ணையர் அவர்கள் கூறுவதுபோல் இளமையிலேயே கம்பராமாயணத்தில் உள்ள விசேஷங்களை நயம்பட விரித்துரைக்கும் ஆற்றல் இவரிடம் இருந்தது. இராமாயணத்தில் அருமையான பாடல்களுக்கு இவர் பொருள்சொல்வது அழகாகவும் உருக்கமாகவும் இருக்கும்.

தமிழ்மொழியின் முன்னேற்றத்திற்காக இவர் செய்துவந்த ஆதரவு ஒருபுறமிருக்க, பிற சங்கீத வித்துவான்களும் இவரிடம் சிறந்த பரிசு பெற்றனர். சங்கீதமணிகளான மகாவைத்தியநாத ஐயர், பட்டணம் சுப்பிரமணிய ஐயர், திருக்கோடிகாவல் கிருஷ்ணையர் ஆகியோரிடம் இவருக்கு மிகுந்த அன்பு உண்டு. இணையற்ற சங்கீதவித்துவானாக விளங்கிய பூச்சி ஐயங்கார் என்ற இராமநாதபுரம் ஸ்ரீநிவாஸ ஐயங்கார் இவரிடம் அபிமான புத்திரர் போல் வாழ்ந்து வந்தார். ஐயங்காருக்குச் சங்கீதத்தில் இருந்த ஆர்வத்தையும் திறமையையும் தெரிந்து, அவரை உடனே பட்டணம் சுப்பிரமணிய ஐயரிடம் அனுப்பி வேண்டியன உதவி, சங்கீதப் பயிற்சி யடையும்படி செய்தார். எத்தனையோ வித்துவான்கள் இவர் சபையில் பாடுவதற்காகப் போட்டியிட்டு வந்தனர்.

இத்தகைய அருஞ்சேவை செய்துவந்த பாண்டித்துரைத் தேவர் 1911-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 2-ஆம் தேதியன்று இராமநாதபுரத்தில் உள்ள தமது சோமசுந்தரவிலாசத்தில் சிவபதம் அடைந்தார். இவர் வியோகத்தால் தமிழ்நாடு அடைந்த நஷ்டம் சிறிதன்று; சீவகசிந்தாமணியில் சச்சந்தன் என்னும் அரசனைக் குறித்துத் திருத்தக்கதேவர்,

"நாவீற் றிருந்த புலமாமக ளோடு நன்பொற்
பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல நாளும்
பாவீற் றிருந்த கலைபாராச் சென்ற கேள்விக், கோ"

எனக் கூறுவது பாண்டித்துரைத் தேவர்க்கும் பொருந்தும்.

"அந்நாள் அருந்தமிழை ஆதரித்த பாண்டியர்போல்
இந்நாள் இனிதுதித்த எந்தலென—எந்நாளும்
பாரோர் புகழ்ந்திடுமெப் பாண்டித் துரையையலால்
ஆரோ புலவர்க் காண்."

———




# விண்மீன் கட்டிகள்

மு. அருணசலம், பி. ஏ.

---

ஆகாயத்திலிருந்து நட்சத்திரங்கள் விழுவதை நம்மில் பலர் நேரில் பார்த்திருக்கிறோம். அவை பெரும்பாலும் நாம் பார்த்துக்கொண்டிருக்கும்போதே ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குச் சிறு நட்சத்திர வெளிச்சம் பாய்வதுபோல ஆகாய வழியே சென்று மறைந்து விடுகின்றன. இவ்வாறு விழும் நட்சத்திரங்கள் சில சமயங்களில் நாம் வசிக்கும் கிரகமாகிய இப்பூமியைச் சுற்றியுள்ள வாயுமண்டலத்தைக் கடந்து பூமியை அடைகின்றன. இத்தகைய நட்சத்திரத்தை ஆங்கிலத்தில் 'மீட்டியார்' (*Meteor*) என்று சொல்வார்கள்.

இந்த விண்மீன் கட்டிகள் பூமியில் விழுவதும், இவை விழுவது தெரிந்து கிடைப்பதும் மிக அருமை. அவற்றில் செறிந்துள்ள பொருள்களின் தன்மையையும் இந்தக் கட்டிகளையும் பற்றி ஆராய்ச்சியாளர் அறிந்தவை மிகவும் சொற்பம். ஆகையால் இவை விஞ்ஞானசாஸ்திர ஆராய்ச்சியில் மிக முக்கியமானவை. பிரபஞ்சத்தில் இப்பூவுலகைச் சுற்றி இன்னும் பல உலகங்கள் இருக்கின்றன. இவைகளைப்பற்றி நாம் அறிந்திருப்பதெல்லாம் வெறும்கற்பனையேயொழிய உண்மையாகவே தெரிந்தது ஒன்றுமில்லை. இவைகளைப் பற்றி அறிவதற்கு நமக்குக் கிடைத்துள்ள ஓரே ஆதாரம் இவ்விண்மீன் கட்டிகளே.

இக்கட்டிகள் பூமியைப் போன்ற அமைப்புள்ள வேறு உலகங்களிலிருந்து சிதறுண்ட பாகங்களே. அவ்வுலகங்கள் நம்மால் அணுகுதற்கரிய தூரத்திலுள்ளவை. விண்மீன்கட்டிகள் கடினமான அமைப்புள்ளவை. பல நிறப்பட்ட தன்மைகளையுடைய பொருள்களாலானவை. இவைகளின் உருவமும் பருமனும் ஒரேமாதிரியா

---

டாக்டர் ஏ. எல். கூல்ஸன் என்பவர் ஆங்கிலத்தில் எழுதிய கட்டுரையைத் தழுவி எழுதப்பட்டது.

யிருப்பதில்லை. பூமியின் மீது இவை விழும் இயற்கை நிகழ்ச்சி ஏற்படும்போது ஒளி, ஒலி ஆகிய இவற்றின் அபூர்வமான சம்பவம் ஒன்றும் கூடவே நிகழ்கிறது.

ஸைபீரியாப் பிரதேசத்தில் ஒரு பெரிய இரும்புக்கட்டி பல்லாஸ் (*Pallas*) என்பவரால் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டது. ஜெர்மன் தத்துவ சாஸ்திரியான க்ளாடினி (*Chladni*) என்பவர் இதைக் குறித்து ஆராய்ச்சி செய்து 1794-ஆம் ஆண்டில் தம் முடிவை வெளியிட்டார். இந்த உலோகக் கட்டியானது ஆகாயத்திலிருந்தே விழுந்திருக்கவேண்டுமென்ற கொள்கையை அவர் நிலைநாட்ட முயன்றார். அவருடைய ஆராய்ச்சியானது விண்மீன் கட்டிகளைப்பற்றி ஆராயும்படி விஞ்ஞான சாஸ்திரிகளை மேன்மேலும் ஊக்கியது. க்ளாடினியின் ஆராய்ச்சியிற் கண்ட முடிபுகளை ஸ்திரப்படுத்துவதற்காக ஏற்பட்ட நிகழ்ச்சியைப் போல, அவர் நூல் பிரசுரிக்கப்பட்ட இரண்டு மாதங்களுக்கெல்லாம் இத்தாலியிலுள்ள ஸியன்னா என்னுமிடத்தில் பல விண்மீன் கட்டிகள் விழுந்தன. இவை விசித்திரப் பொருள்களாகக் கருதப்பட்டமையால், இக்கட்டிகளிலொன்று லண்டன் நகரிலுள்ள ஸர் ஜோஸப் பாங்க்ஸ்(*Sir Joseph Banks*) என்பவருக்கு அனுப்பப்பட்டது. சீமையிலுள்ள யார்க்ஷயர் என்னும் பிரதேசத்தில் விழுந்த புதுமாதிரிக் கல்லொன்று 1796-ஆம் ஆண்டில் லண்டனில் காட்டப்பட்டது. இது வெளித்தோற்றத்தில் ஸர் ஜோஸப் பாங்க்ஸுக்கு அனுப்பப்பட்ட ஸியன்னாக் கல்லை ஒத்திருந்தது. 1798-ஆம் ஆண்டில் காசியில் விண்மீன் கட்டிகள் விழுந்ததைச் சிலர் நேரில் கண்டார்கள். இவற்றில் சில அடுத்த ஆண்டில் ஸர் ஜோஸபுக்கு அனுப்பப்பட்டன. இவைகளும் யார்க்ஷயர்க் கல்லை ஒத்திருந்தன; இம்மூன்றிடத்துக் கற்களையும் வேறு சிலவற்றையும் குறித்து ஹோவார்ட்(*Howard*)என்பார் 1802-ஆம் ஆண்டில் ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி வெளியிட்டார். வானத்திலிருந்துதான் இக்கட்டிகள் விழுந்தன என்பதைப் பல அறிஞர் நம்பவில்லை. அவர்களில் சீமையிலிருந்த பலருக்குள்ள சந்தேகங்களை இக்கட்டுரை ஒருவாறு நீக்கியதென்னலாம். ஆயினும் பிரான்ஸிலும் பிற நாடுகளிலும் உள்ள விஞ்ஞான ஆராய்ச்சியாளர் பலர் இவ்விஷயத்தில் திருப்தியடைந்த பாடில்லை.

விண்மீன் கட்டிகள் மனிதர் மீது விழுவதுண்டா என்பது ஒரு ருசிகரமான கேள்வி. அவை மனிதர்மேல் விழுந்து மனிதர் இறந்திருப்பதாகத் திட்டமாய்த் தெரியவில்லை. ஆனல் இதில் ஆச்சரியமொன்றுமில்லை. பூமியின் மேற்பரப்பில், நீர்ப்பரப்பைவிட நிலப்பரப்பு மிகச் சிறியது. இதிலும் மனிதர் வாழ்ந்து

வரும் இடமோ மிகவும் குறைந்தது. விண்மீன் கட்டிகள் விழுவ தும் அபூர்வம். வருஷத்தில் சராசரி நான்கு கட்டிகள் விழுவதா கக் கணக்கிடப்பட்டிருக்கிறது. பத்திரிகைகள் வாயிலாக விண்மீன் கட்டிகளைக் குறித்த ஆராய்ச்சி முதலியனவற்றைப் பலரும் இக்கா லத்தில் அறிந்து வருவதால் அக்கட்டிகள் விழுவது வரவர அதிக மாகத் தெரியவருகிறது. மேற்சொன்ன சராசரி எண்ணிக்கை யானது நமக்குத் தெரியவந்த விண்மீன் கட்டி வீழ்ச்சிகளை மாத் திரமே குறிப்பது; ஆகையால், தெரியாமற் போய்விடுபவையும் பல இருக்கின்றன; மனிதர் வாசம் செய்யாத இடங்களில் விழுபவை யும் பலவுள்ளன. இவற்றை யெல்லாம் சேர்த்துக் கணக்கிடுகை யில், உத்தேசமாய்த் தினமொன்றுக்கு ஒரு கட்டி வீதம் விழுவ தாகக் கொள்ளலாம்.

சாதாரணமாய் இக்கட்டிகள் பூமியின் மேற்பரப்பை அடைந்த வுடன், வந்த வேகத்தினாலும் விழுந்த அதிர்ச்சியினாலும் பூமியில் சிறு துவாரங்களை உண்டாக்குகின்றன. சில பெரிய கட்டிகள் விழுந்த இடங்களில் பெரிய பள்ளங்கள் உண்டாகியிருக்கின்றன. அவற்றிற்கு வீழ்கொள்ளிப் பள்ளங்கள் (*Meteorite Craters*) எனப் பெயரிட்டிருக்கிறார்கள். அரிஸோனாவிலுள்ள கானன் டயபோலோ (*Canon Diabolo*) என்னுமிடத்தில் இத்தகைய பள்ளமொன்று உண்டு. அது 4,000 அடி குறுக்களவும் 570 அடி ஆழமும் உடையது. மிகப் பெரிய கட்டிகளாயுள்ளவை பூமியில் தாக்கியவுடன் வெடிக்கின்றனவென்றும், அவை வெடிப்பதனாலே யே இத்தகைய பெரியபள்ளங்கள் உண்டாயிருக்கின்றன வென்றும் ஊகிக்க வேண்டியிருக்கிறது. ஆயினும், சில கட்டிகள் அதிக கன மில்லாத பனிப்பாறைகளின் மீது விழுந்துங் கூட அவை அப் பனிக்கட்டிகளை உடைத்துக்கொண்டு உட்செல்லவில்லை யென் பதைக் கண்டிருக்கிறார்கள்.

விண்மீன் கட்டிகள் கற்கட்டிகளாகவும் இரும்புக் கட்டிகளாக வும் இருவகையில் கிடைக்கின்றன. கற்கட்டிகள் விழுந்தவுடனே எடுத்துப் பார்த்தால் சாதாரணமாய் அவை சூடாயிருக்கின்றன; இரும்புக்கட்டிகள் கற்கட்டிகளைவிட அதிகச் சூடாயுள்ளன. இருப் பினும், அக்கட்டிகள் சுலபமாய்த் தீப்பற்றத்தக்க வஸ்துக்களான வைக்கோல் முதலியவற்றின் மீது விழுந்துங் கூட அந்த வஸ்துக் கள் பற்றியெரியவில்லை. வடிவத்தில் பெரியனவாயுள்ள கட்டிகள் யாவும் இரும்புக் கட்டிகளே. இரும்பாலாகிய மிகப் பெரிய கட் டியானது தென்மேற்கு ஆப்பிரிக்காவிலுள்ள ஹோபா (*Hoba*) என்னுமிடத்திலுள்ளது. அதன் எடை 60 மெட்ரிக் டன் (*Metric ton*). கற்கட்டிகளில் பெரியது அமெரிக்காவிலுள்ள

அர்கன்ஸாஸ் என்னுமிடத்தில் விழுந்தது. அதன் எடை 820 பவுண்டு.

இந்தியாவில் விண்மீன்கட்டி வீழ்ச்சிகள் பெரும்பான்மையும் ஜனவரி, ஏப்ரல் மாதங்களில் காணப்படுகின்றன. மே, ஜூன் மாதங்களில் அதிகத் தொகை காணப்படுகிறது; அடுத்த மாத மாகிய ஜூலையில் மிகக் குறைவு.

விண்மீன் கட்டிகள் ஏதேனுமொரு விண்மீனினின்றும் பிரிந்து வான்வீதியில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும்போது, அவைகளின் பாதை வழியே பூமியும் சில சமயங்களில் ஸஞ்சரிக்க நேரிடுகிறது. அக்கட்டிகள் பூமியின் மீது விழும் காலமானது அவைகளின் வேகத்திற்கும் பூமியின் வேகத்திற்குமுள்ள தாரதம்மியத்தைப் பொறுத்திருக்கிறது. சில சமயங்களில் பூமி அக்கட்டிகளைக் கடந்து செல்கிறது. அங்ஙனம் செல்கையில் அவை பூமியின்மீது மோதுகின்றன. இத்தகைய வீழ்ச்சி பகல் 12 மணிக்கும் இரவு 12 மணிக்கும் இடையில் நிகழ்கிறது. அக்கட்டிகள் பூமியைக் கடந்துசெல்ல முற்படுகையில் சில சமயங்களில் பூமியின் மீது விழுகின்றன. இவ்வீழ்ச்சி இரவு 12 மணிக்கும் பகல் 12 மணிக்கும் இடையில் நிகழ்கின்றது. பூமியின் வேகத்திற்கும் விண்மீன் கட்டிகளின் வேகத்திற்குமுள்ள வித்தியாசத்தில் குறைந்த அளவு விநாடிக்கு 8 மைல் ஆகவும், மிக அதிகமான அளவு விநாடிக்கு 47 மைல் ஆகவும் கணக்கிடப்பட்டிருக்கின்றன. பூமியைச் சுற்றியுள்ள வாயுமண்டலத்தின் மீது ஒரு விண்மீன்கட்டி தாக்கியவுடன் அது வெடிக்கிறது. மேற்கூறிய வேகத்தில் காணப்படும் தாரதம்மியமே வெடிப்பது போன்ற நிகழ்ச்சிகளுக்குக் காரணமென்று கருதுகிறார்கள்.

சில சமயங்களில் ஓரிடத்தில் விண்மீன் கட்டிகள் அதிகமாய்ப் பொழிகின்றன. ஒரு பெரிய கட்டியானது வாயு மண்டலத்தில் தாக்கியதும் எண்ணிறந்த சிறு கட்டிகளாகச் சிதறி இவ்வாறு பொழிகிறது. இவை பெரும்பாலும் கற்கட்டிகளே. இரும்புக் கட்டிகள் பெருத்த அளவில் பொழிவது மிக அருமை. 1921-ஆம் ஆண்டில் இராஜபுதனத்திலுள்ள ஸாமேலியா என்னுமிடத்தில் இரும்புக் கட்டிகள் பொழிந்தன. 1873-ஆம் ஆண்டில் பஞ்சாபிலுள்ள கெயிர்ப்பூர் என்னுமிடத்தில் 16 மைல் நீளமும் 3 மைல் அகலமுமுள்ள விஸ்தீர்ணத்தில் கற்கட்டிகள் பொழிந்தன. இவ்வளவு அகன்ற விஸ்தீர்ணத்தில் இக்கட்டிகள் எங்குமே விழுந்ததில்லை.

இரும்பு விண்மீன் கட்டிகள் பெரும்பான்மையும் நிக்கல் இரும்பு என்னும் கலப்பு உலோகத்தாலானவை. கற்கட்டிகள்

உலோகங்களுடன் சேர்ந்த 'ஸிலிகேட்' என்னும் பொருளால் அமைந்தவை. ரஸாயன பரிபாஷையில் களிமண்ணுக்கு அலுமினியம் ஸிலிகேட் என்று பெயர். அதாவது அலுமினியம், ஸிலிகன் என்னும் ஒரு தாதுப்பொருள், பிராணவாயு ஆகிய இவற்றில் குறித்த ஒரளவுச் சேர்க்கையாலானது களிமண் என்பதே கருத்து. இரும்புக்கும் கல்லுக்கும் இடைப்பட்ட பாகுபாடுகளையுடைய பல வகைக் கட்டிகளும் உண்டு. இத்தகைய கட்டியொன்று 1935-ஆம் ஆண்டில் திப்பேரா ஜில்லாவில் விழுந்தது. விண்மீன் கட்டிகளிலுள்ள தாதுப்பொருள்கள் பெரும்பாலும் எடையில் குறைந்தவைகளாகவே உள்ளன. அவற்றில் மிக அதிக எடையுள்ளது இரும்பு. அதனோடு முறையே பிராணவாயு, ஸிலிகன், மக்னிஷியம், அலுமினியம், கால்ஸியம், நிக்கல்,சோடியம், கந்தகம் ஆகியவைகள் ஒன்றைவிட ஒன்று குறைந்த அளவில் பொருந்தியுள்ளன. ஆண்டிமொனி, ஆர்ஸனிக், பொன், காரீயம், ஈயம், டங்ஸ்டன், யூரேனியம், துத்தநாகம் ஆகிய இவைகளும் இன்னும் பல உலோகங்களும் இருப்பதாகக் கண்டு பிடிக்கப்பட்டிருந்தபோதிலும் இவ்விஷயம் இன்னும் சந்தேகத்துக்கிடமாகவே இருந்து வருகிறது. ஸர் வில்லியம் ஹக்கின்ஸ் (*Sir William Huggins*) என்னும் வான சாஸ்திரி ஜலவாயுவும், கரியமில வாயுவும், நைட்ரொஜன் என்னும் வாயுவும் இரண்டுவிதக் கட்டிகளிலும் இருப்பதாகக் கண்டறிந்தார்.

சென்ற சில ஆண்டுகளில் பலவித ஆராய்ச்சிகளின் மூலம் மேற்சொன்ன இரும்புக் கட்டிகளின் வயதையும் அதைக்கொண்டு கற்கட்டிகளின் வயதையும் கணக்கிடக்கூடிய சாதனங்கள் கிடைத்திருக்கின்றன. சூரியமண்டலத்தின் வயதானது அதிகமாகப் போனால் மூந்நூறு கோடி ஆண்டுகளாகும் என்று சொல்லுகிறார்கள். இதுவரை ஆராயப்பட்ட இரும்புக்கட்டிகளில் எதுவும் பூமியைவிட அதிக வயதுள்ளதாகத் தெரியவில்லை. அவற்றுள் அதிக வயதுடையது, சுமார் இருநூற்றுத் தொண்ணூறு கோடி ஆண்டுகளாயிருக்கக்கூடுமென்று தோன்றுகிறது. இதனால் இக் கட்டிகள் சூரியமண்டலத்திலுள்ள கிரகங்கள் அல்லது நட்சத்திரங்களிலிருந்து பிரிந்து வந்த பாகங்களே என்றும், சூரியமண்டலமல்லாத வேறொரு மண்டலத்திலிருந்து இவை வந்திருக்க முடியாதென்றும் நிச்சயிக்கப்படுகிறது. நாம் வாழும் இந்தப் பூமியானது மனிதர் வசிக்கத் தகுந்த நிலையையுடையதாக மாறிய காலத்தே அதேபோன்ற மாறுதலைப் பெற்ற வேறு கிரகங்களினின்றுமே இக் கட்டிகள் பிரிந்து வந்துள்ளன.

இந்தியாவிலுள்ள பூமி சாஸ்திர ஆராய்ச்சி இலாகாக்காரர் இக் கட்டிகளைக் கிடைத்தவரை தொகுத்து வைத்துள்ளனர். இத்

தொகுப்பு ஆசியாக் கண்டத்திலுள்ளவை யெல்லாவற்றிலும் மிகச் சிறந்தது; உலகத்திலுள்ள தொகுப்புகளில் நான்காவது அல்லது ஐந்தாவது ஸ்தானம் பெறக்கூடியது. இத்தொகுப்பு கல்கத்தாவிலுள்ள இந்திய மியூஸியத்தில் மூன்று பெட்டிகளில் வைக்கப்பட்டிருக்கிறது. இதனுள் 299 கற்கட்டிகளும் 176 இரும்புக் கட்டிகளும் ஆக 475 கட்டிகள் காணப்படுகின்றன. பிரிட்டிஷ் இந்தியாவில் விழும் கட்டிகள் எல்லாவற்றையும் துரைத்தனத்தார் பெற்று அவற்றை இந்தியமியூஸியத்தில் வைத்துக் காப்பாற்றுகிறார்கள்; அவை, சம்பந்தமாய் ஆராய்ச்சியும் நடத்தி வருகிறார்கள். இங்குள்ளவற்றைப் பிற நாடுகளுக்கு அனுப்பி அங்கங்குள்ளவைகளில் அபூர்வமானவற்றைப் பெற முயற்சிக்கிறார்கள்.

இக்கட்டிகள் விழுவதை நேரிற் காண்போர் அவற்றைப் பற்றிய விஷயங்கள் யாவற்றையும் துரைத்தனத்தாருக்குத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

---

## ஒரு பிரம்மாண்டமான நக்ஷத்திரம்

அமெரிக்காக் கண்டத்தில் விஸ்கான்ஸின் என்னும் இடத்தில் உள்ள எர்க்ஸ் வான ஆராய்ச்சி சாலையில் இருக்கும் டாக்டர் ஓட்டோ ஸ்ட்ரூவ் (*Otto Struve*) என்பவர் ஒரு பிரம்மாண்டமான நக்ஷத்திரத்தைக் கண்டு பிடித்திருக்கிறார். அதன் விட்ட அளவு சுமார் நானூறுகோடி மைல் என்று கருதுகிறார்கள். சூரியனைக்காட்டிலும் மூவாயிரம் மடங்கு பெரிய கோளமாக இருக்கிறதாம். அந்தக் கோளம் இரண்டு நக்ஷத்திரங்களாலானதென்று தெரிவதாகச் சொல்லுகிறார்கள். விஞ்ஞானசாஸ்திரிகள் அதற்கு 'எப்ஸிலன் ஔரிகே' (*Epsilon Aurigae*) என்று நாம கரணம் செய்திருக்கிறார்கள். எர்க்ஸ் ஆராய்ச்சிசாலையில் சென்ற 40 வருஷங்களாகக் கண்டுபிடிக்கப்பட்ட புதுமைகளில் இதைப் போன்றது வேறொன்றும் இல்லையாம்.

# குமாரஸம்பவமும் சாகுந்தலமும்

ஸ்ரீ ரவீந்த்ரநாத் டாகூர்

[ஆசிரியரின் அனுமதிபெற்றுக் 'குமுதினி' மொழிபெயர்த்தது.]

## 2

கட்டுப்பாடு இல்லாததும் ஒருவித நியமத்திற்கும் உட்படாததுமான காதலையும், ஆண் பெண்களை மயக்கி ஸம்பிரதாயம் என்னும் கோட்டையைத் தகர்த்தெறிந்து அதன்மேல் தன்னுடைய வெற்றிக்கொடியை நாட்டும் அக் காதலின் சக்தியையும் காளிதாஸரும் பாராட்டுகிறார். ஆனால் அதுவே மிகப் பெரியதெனக் கருதி அதற்குத் தம்மையே சமர்ப்பணம் செய்துகொண்டு விடவில்லை. அவ்விதம் தன்னுடைய சக்தியினால் மோகிக்கச்செய்து, கடமையைக் கைவிடும்படிச் செய்யும் அக்காதலானது ரிஷி சாபம்பெற்று நாசமடைந்து, தெய்வகோபத்தினால் சாம்பராகிறது. சகுந்தலைக்கு அதிதிகளை உபசரிக்கும் ஞாபகமில்லை. அவள் துஷ்யந்தனின் நினைவிலேயே மூழ்கியிருந்தாள். அச்சமயம் சகுந்தலையின் காதல் மங்களம் குறைந்ததாயிற்று. எவ்வித மோகமானது தன்னுடைய காதலுக்குப் பாத்திரமானவரைத் தவிர மற்ற எதனையும் பொருட்படுத்தாமலிருக்கிறதோ அதற்கு ஜகமுழுவதுமே சத்துருவாகி விடுகிறது. ஆகையாலேயே அவ்விதக்காதல் சிறிது நாட்களிலேயே அழிந்து விடுகிறது. உலகத்தையே எதிரியாகக் கொண்ட அக் காதல் தன்னை ஸ்தாபித்துக்கொள்ளும் சக்தி இல்லாததாகி விடுகிறது. ஜகத்துடன் ஒற்றுமையாக இருக்கும் அன்பிற்கு, தனக்கு நாலுபுறமும் இருக்கும் பெரியவை சிறியவை, தன்னுடையவை பிறருடையவை ஆகியவற்றில் ஒன்றையும்மறவாமலிருக்கும் அன்பிற்கு, தன்னுடைய பிரியத்திற்குப் பாத்திரமானவர்களை நடுவில்வைத்துச் சம்சாரத்திற்குரிய நியமனங்களைப் பரிபாலித்து வருவதே தனக்கு மங்களமென நினைக்கும் அன்பிற்கு மனிதராலும் தேவராலும் ஒருவிதத் தீங்கும் செய்யமுடியாது. யாராகிலும் தீங்குசெய்ய முயன்றாலும் அவ்வன்பில் ஒருவித மாறுதலும் ஏற்படாது. ஆனால் தபோவனத்தில் துறவியின் தவத்திற்குத் தீங்கு செய்ய முயலும் காதல், கிருகஸ்தனின் வீட்டு இல்லறதர்மத்தைத் தற்செயலாக மறக்கச்செய்யும் காதல், பிறருக்குத் தீங்கு செய்வதுமல்லாமல் தனக்கே நாசத்தையும் தேடிக்கொள்கிறது.

யௌவனாவஸ்தையின் பாரத்தினால் தலை குனிந்தவளாய் முற்றாத பூங்கொடிபோன்ற பார்வதி, பர்வதராஜனின் பாரிசத்தில் தவம்செய்யும் துறவியை நமஸ்கரித்தாள். அவளுடைய செவிகளி லிருந்து அலங்காரமாக அணியப்பட்ட இளந்தளிர்கள் உதிர்ந்தன. கூந்தலிலிருந்து நவகர்ணிகைப் புஷ்பங்கள் விழுந்தன. மந்தாகினி யில் புஷ்பித்த தாமரை விதைகளைக் கொண்டு கட்டின மாலையைக் கௌரி சங்கரனின் கைகளில் சமர்ப்பித்தாள். கையோடு கை பட்டது. மனதில் சஞ்சலமடைந்த துறவி உமையின் முகத்தையும் கோவைப்பழம் போன்ற இதழ்களையும் மூன்று கண்களினாலும் நோக்கினான். அச்சமயம் உமையின் சரீரம் புளகிதமடைந்தது. இரண்டு கண்களும் விரிந்தன. முகத்தில் நாணமேற்பட்டது.

ஆனால் இந்த அபூர்வமான அழகைக் காண்பதனால் ஏற்படும் இன்பத்தில் தெய்வம் நம்பிக்கை கொள்ளவில்லை. கோபித்து அதைப் புறக்கணித்துவிட்டது. தன்னுடைய மென்மையான லாவண்யத்திற்கு ஏற்பட்ட அவமானத்தைக் கண்டு வெட்கிச் சுண்டினவளாய்ப் பார்வதி எவ்விதமோ வீடுவந்து சேர்ந்தாள்.

கண்வரின் பெண் சகுந்தலையும் ஒரு தினம் தன்னுடைய யௌவன வனப்பு முழுவதற்கும் ஏற்பட்ட அவமானத்தைச் சகித் துக்கொண்டு திரும்பிச் செல்ல நேரிட்டது. துர்வாஸரின் சாபம் என்பது கேவலம் கவியின் கற்பனையே. துஷ்யந்தனுக்கும் சகுந் தலைக்கும் ஏற்பட்ட களவுக்காதல் வெகு காலம்வரைக்கும் சாப மென்னும் இருளிலேயே ஒளித்திருந்தது. மோகத்தின் தீவிரமான பிரகாசம் சிறிதுகாலமே இருக்கிறது; பிறகு அதை க்ஷயம், அவ மானம், மறதி என்ற இருள்கள் சூழ்ந்து மறைத்துவிடுகின்றன. இது என்றும் உள்ள விதி. ஒவ்வொரு தேசத்திலும் ஒரு சமய மில்லாவிடில் ஒரு சமயம் திரஸ்கரிக்கப்பட்ட பெண்மணி ("வ்யர்த் தம் ஸமர்த்ய லலிதம் வபுராத் மனஸ்ச") தன்னுடைய யௌவன வனப்பு வாய்ந்த தேகத்தை வீண் என்று உணர்ந்து, ("சூந்யா ஜகாம பவநாபி முகீ கதஞ்சித்") வெறுங்கையுடன் எவ்விதமோ வீடுதிரும்பி யிருக்கிறாள். சரீர சௌந்தரியமே பெண்களுக்கு மிகக் கௌரவத்தையளிப்பதும் முக்கியமானதுமான சௌந்தரியமன்று.

ஆகையாலேயே ("நிநிந்த ரூபம் ஹ்ருதயேன பார்வதி") பார்வதி தன்னுடைய மனதில் தனது ரூபத்தினழகை நிந்தித்துக் கொண்டாள். மேலும் ("இயேஷ ஸா கர்த்தும் அவந்த்ய ரூப தாம்") அவள் தன்னுடைய ரூபத்தைப் பலனடைந்ததாகச் செய்ய இச்சித்தாள். ஆனால் ரூபம் எவ்விதம் பலனடைந்ததாகும்? அலங் காரத்தினாலா? ஆடையாபரணங்களினாலா? இல்லை. அந்தப் பரீக்ஷைதான் வீணாகிவிட்டதே!

"இயேஷஸா கர்த்தும் அவந்த்ய ரூபதாம்
ஸமாதி மாஸ்தாய தபோபி ராத்மன:"

அவள் தவத்தினாலேயே தன்னுடைய ரூபத்தைச் சித்தி பெற்றுப் பலனடைந்ததாகச் செய்ய விரும்பினாள். இச்சமயம் பார்வதி இளஞ்சூரியனையொத்த சிவந்த வர்ண ஆடையினால் தனது சரீரத்தை அலங்கரித்துக் கொள்ளவில்லை. செவிகளில் மாந்தளிர் களைச் செருகிக்கொள்ளவில்லை. கூந்தலில் புஷ்பத்தைச் சூட வில்லை. அவள் மிகவும் முரட்டுத்தனமான முஞ்ஜியினால் மரவுரி யை இடையில் பிணைத்து, தியானத்தில் அமர்ந்து கண்களை மூடிக் கொண்டாள்; வஸந்தனின் நண்பனான காமதேவனைப் புறக் கணித்துக் கஷ்டமான துயரத்தையே தனது அன்பிற்குத் துணை யாக்கிக் கொண்டாள்.

சகுந்தலையும் துயரமென்னும் தவத்தினால் மதன வேதனை யைக் கொளுத்திவிட்டு மங்களமான துறவிவேடம் தரித்து ஸத்திய மான அன்பை எதிர்பார்த்து இருந்தாள்.

வஸந்த புஷ்பங்களைத் தரித்து மனோகரமாக விளங்கின அப் பார்வதியைத் திரஸ்கரித்த அப்பரமசிவனே, பகல்வேளைச் சந்திரன் போன்ற இளைத்த சரீரமுடையவளும் நீண்டு தொங்கும் ஜடை களுடையவளுமான தபஸ்வினியின் அருகில் வந்து, தனது மனதி லுண்டான சந்தேகம் முற்றும் நீங்கினவனாய்த் தன்னை அர்ப்பணம் செய்துகொண்டான். வனப்பு நிறைந்த யௌவனத்தின் அழகைப் புறக்கணித்துவிட்டு, ஆபரணங்களற்றவளாய் இருந்த பார்வதியின் காந்தி நிர்மலமான மின்னற்கொடிபோல் பிரகாசித்தது. யாசித்து வந்தவனின் மனதில் அந்தக் காந்தி சஞ்சலமுண்டாக்கவில்லை; மங்களத்தைச் செய்யுமாறே உதவிற்று. அதில் கவலை, வெட்கம், ஆழ்ந்த துடிப்பு ஆகியவை இல்லை. அந்த அழகினால் ஏற்படும் பந்தனத்தை ஆத்மாவானது ஆதரவுடன் வரவேற்றது. ஏனெனில் அதில் தனக்கு அநாதரவை அது காணவில்லை.

இவ்வளவு நாட்கள் கழித்துத் தர்மமானது பரமசிவனைப் பார்வதியின் பக்கம் இழுத்துச் செல்லவே, முன்பு தான் செய்த அபராதத்தினால் பயந்திருந்த காமதேவனின் மனமானது ஆறுத லால் ஒரு பெருமூச்சு விட்டது. தர்மத்தின்மூலம் இரண்டு இத யங்கள் ஒன்று கூடும் சமயம் காமதேவனுடன் ஒருவருக்கும் விரோதமில்லை. தர்மத்தினிடையில் காமதேவனுக்குக் கிடைத்தி ருக்கும் ஸ்தானத்தில் அந்தத் தர்மம் பரிபூரண மடைவதற்கு அவ னும் ஓர் அம்சமாவான். அவ்விதம் தர்மத்திற்குக் கட்டுப்பட்ட காமன் தர்மத்தினிடையில் வசித்தும் அவனால் அழகைக் குறைக்க முடியாது. ஏனெனில் தர்மத்தின் அர்த்தமே நேர்மை. இந்த நேர்

மையே அழகைக் காப்பாற்றுகிறது; மங்களத்தைக் காப்பாற்று கிறது. சௌந்தரியமானது கேவலம் இந்திரியங்களோடு சேராமல், உள்ளத்தின் உணர்ச்சியுடன் கலக்க ஆரம்பித்தபின், வெளி அழகும் ஆபரணங்களும் எதற்கு? அன்பின் மந்திரசக்தியினால் மனதில் உண்டாகும் சௌந்தரியத்தின் காந்தியைப்போன்ற வேறொன்று வெளித்தோற்றத்தின் அழகைக்கொண்டு செய்யமுடியாது. சிவ பெருமானே கபடவேஷம் தரித்துவந்து, இவ்வார்த்தைகளைத் தவத்தில் முனைந்திருக்கும் பார்வதியிடம் கூறுகிறான். அதற்குப் பார்வதி, ("மமாத்ர பாவைகரஸம் மன: ஸ்திரம்") "என்மனம் அவரிடமே ஒரே பாவரஸத்துடன் படிந்திருக்கிறது" என்கிறாள். இங்கே இருக்கும் ரஸமானது பாவரஸம். இதில் வேறு பேச்சைக் கலக்க முடியாது. இதில் மனமானது வெளிவிஷயத்தை வென்று விட்டது. அது தன்னுடைய ஆனந்தத்தைத் தானே சிருஷ்டித்துக் கொள்கிறது. சிவபிரானும் முன்பு ஒருநாள் வெளி அழகைத் திரஸ்கரித்தான். ஆனால் அன்பு, தர்மம், மங்களம் இவற்றின் மூலம் அவன்கண்ட அழகானது, தவத்தினால் இளைத்து ஆபரணமற்றதாக இருந்தும் அவனை வென்று விட்டது. இவ்வித அழகிற்குத் தோல்வியுறுவதில் அவனுடைய மனச்சாக்ஷிக்கு ஒருவித விரோதமும் உண்டாகவில்லை.

தவம் புரியும் பார்வதியும் துறவியான சிவபெருமானும் கூடும் நிலை தர்மத்தின்மூலம் ஏற்பட்ட சமயத்தில் விண்ணும் மண்ணும் இவ்வன்பிற்கு உதவிபுரிந்து துணைநின்றன; இந்த அன்பினால் அழைக்கப்பட்டு ஸப்தரிஷிகளும் எழுந்தருளினர்; இந்த அன்பின் உற்சவம் லோகலோகாந்தரங்களிலும் கொண்டாடப்பட்டது. இதில் ரகசியமான சதியாலோசனை ஏதுமில்லை. இது ஏற்பட வஸந்தன் அகாலத்தில் வரவேண்டியதில்லை; இதன் நிமித்தம் காமதேவன் ஒளித்திருந்து தனது சரங்களைப் பொழியவேண்டியதில்லை. இந்த உற்சவத்திலிருந்த களங்கமற்ற மங்களத்தின் சோபையைக் கண்டு ஜகமுழுவதும் ஆனந்திக்கக்கூடும். உலக முழுவதும் இந்தச் சுபகாரியத்தில் கலந்துகொண்டு இதை வாழ்த்திற்று.

ஏழாவது ஸர்க்கத்தில் இந்தப் பெரிய உற்சவமே கொண்டாடப்படுகிறது. இந்த விவாக மகோற்சவத்திலேயே குமாரஸம்பவத்தின் முடிவு இருக்கிறது.

---

# தமிழ்ப் புராணங்கள்

எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை, எம். ஏ., எல். டி.

## 1

'புராணம்' என்னும் சொல் பழமை என்னும் பொருள்படும். திருவாசகத்தில் முதல் அகவல் 'சிவபுராணம்' என்னும் பெயரினது. அப் பெயர்க்குக் கருத்து எழுதியோர் 'சிவனது அநாதி முறைமையான பழமை' என்று எழுதினர். 'புராணன் காண்க' என்பதும் 'பழையோன் காண்க' என்றே பொருள்படும். ஆயினும் புராணமென்னுஞ் சொல்லைக் கேட்ட மாத்திரையில் இப்பொருள் ஒருவர் மனத்தினும் செனிப்பதில்லை; கந்தபுராணம் முதலிய புராணங்களின் ஞாபகமே வருகிறது. அப்புராணங்களைக் குறிக்குமிடத்து, பஞ்ச லக்ஷணங்களை யுடைய வடமொழிப் புராணங்களே விசேஷமாக நினைவுக்கு வரும். புராணம் பஞ்ச லக்ஷணமென்று சொல்லுங்கால் ஸர்க்கம், ப்ரதிஸர்க்கம், வம்சம், மங்வந்தரங்கள், வம்சாநுசரிதம் என்னும் ஐந்து விஷயங்கள் குறிக்கப்படும். புராணமென்று சொல்லப்படுவன வெல்லாம் இவ்வைந்திலக்கணங்களையும் உடையனவல்ல. வியாசராற் செய்யப்பட்டவை யென்று கருதப்படும் மஹாபுராணங்களாகிய பதினெண் புராணங்களே அவ்விலக்கணங்கள் அமைந்தன.

திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி நிகண்டு என்னும் மூன்று முக்கிய நிகண்டுகளும் பதினெண் புராணங்களின் பெயரையும் உரைக்கின்றன. மச்சம், கூர்மம், வராகம், வாமனம், பிரமம், வைணவம், பாகவதம், சைவம், இலிங்கம், பௌடிகம், நாரதீயம், காருடம், பிரமகைவர்த்தம், மார்க்கண்டேயம், காந்தம், பிரமாண்டம், ஆக்கினேயம், பதுமம் என்பன அவற்றின் பெயராம் (திவா. XII, 165.) பிங்கலந்தையும், சூடாமணிநிகண்டும், இப்பெயர்களையே முறை சிறிது மாற்றியுரைக்கும்.

தமிழ்க் கூர்மபுராணம் இந்திரத்துய்ம்மன் முத்திபெற்றவத்தியாயத்திலே,

"பிரமநற் பதுமம் வைணவஞ் சைவம் பேருல கேத்துபா கவதம்
அருமறை தெளித்த பவுடிக நார தீயமார்க் கண்டமாக் கினேயம்
கருதரும் பொருள்சேர் பிரமகை வர்த்த மிலிங்கநல் வராகமெய்க் காந்தம்
மருவுவா மனஞ்சொற் கூர்மநீண் மச்சங் காருடஞ் சிறந்தவா யவியம்"

எனப் புராணங்களின் பெயரை உரைத்து, "எனவீ ரென்பான் புராணமுள பிரமாண் டப்பே ரியைந்தோங்கும், பனிதோய் விசும்பு தனிபுரக்கும் புத்தேண் முதலோர் பயின்றேதுந், தனியோர் புரா முளது" எனப் பிரமாண்டமென வேறொரு புராண முளதாகக் கூறி மஹாபுராணங்களைப் பத்தொன்பதாக்கும். வடமொழிக் கூர்ம புராணமும் இவ்வாறே உரைத்தது.

தமிழ் மச்ச புராணம் புராணவநுக்கிரமணியத்தியாயத்திலே புராணங்கள் பதினெட்டன் கிரந்த அளவையும் அவற்றைச் சொல்லிய முறைப்படி தானமீந்தோர் பெறும் பேறும் விரிவாகக் கூறிற்று. அங்கு வாயவியத்தைப் பற்றிய பிரஸ்தாவமில்லை. வடமொழி மச்சபுராணத்தும் அவ்வாறே.

சைவபுராணமும் வாயுஸம்ஹிதையில் அவ்வாறே வாயவியத்தை யொழித்துப் பதினெட்டன் பெயரை உரைத்தது.

இப்புராணங்களின் பெயர் வடமொழி முறைப்படி ப்ராஹ்மம், பாத்மம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்நேயம், பவிஷ்யம், ப்ரஹ்மவைவர்த்தம், லைங்கம், வாராஹம், ஸ்காந்தம், வாமநம், கௌர்மம், மாத்ஸ்யம், காருடம், ப்ரஹ்மாண்டம் என்பனவாம். இவற்றுள் சைவம், மார்க்கண்டேயம், பவிஷ்யம், லைங்கம், வாராஹம், ஸ்காந்தம், வாமநம், கௌர்மம், மாத்ஸ்யம், ப்ரஹ்மாண்டம் இப் பத்தும் சிவபுராணங்கள்; வைஷ்ணவம், பாகவதம், நாரதீயம், காருடம் இந் நான்கும் விஷ்ணு புராணங்கள். ப்ராஹ்மம், பாத்மம் இவ்விரண்டும் ப்ரஹ்ம புராணங்கள்; ஆக்நேய மொன்றும் அக்கினிபுராணம். ப்ரஹ்ம வைவர்த்த மொன்றும் ஸூர்யபுராணம்.

சிவபுராணங்களுள் சிவமஹாபுராணமும், மார்க்கண்டேயத்தில் சிறிது பாகமும், இலிங்கபுராணமும், ஸ்காந்தத்தில் சில பாகங்களும், கூர்ம புராணமும் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன.

விஷ்ணு புராணங்களுள் விஷ்ணுபுராணமும், பாகவதமும், காருடபுராணமும் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன.

ஸாஹித்ய வாங்முக பூஷணம் ஸ்ரீவத்ஸ வே. ஸோமதேவ சர்மா சிறிது காலமாக மஹாபுராணங்களின் சுருக்கத்தைத் தமிழில் வெளியிட்டு வருகின்றனர். ஸ்ரீ மார்க்கண்டேய புராணம் ஸ்ரீ ப்ரஹ்மபுராணம் முதலியவை வெளிவந்துள்ளன.

### சிவமஹாபுராணம்

சிவமஹாபுராணத்தையே சைவமென்பர். ஈக்காடு இரத்தின வேலு முதலியார் வடமொழியிலுள்ள இதனைத் தமிழில் மொழிபெயர்த்து 1900-இல் வெளியிட்டார். வாயு ஸம்ஹிதைத்

தொடக்கத்தில் நான்காவதாகிய சைவம் வித்யேசுவர ஸம்ஹிதை, ருத்ர ஸம்ஹிதை, விநாயக ஸம்ஹிதை, உமா ஸம்ஹிதை, மாத்ரு ஸம்ஹிதை, ஏகாதச ருத்ர ஸம்ஹிதை, கைலாஸ ஸம்ஹிதை, சதருத்ர ஸம்ஹிதை, கோடிருத்ர ஸம்ஹிதை, ஸஹஸ்ர கோடி ருத்ர ஸம்ஹிதை, வாயு ஸம்ஹிதை, தர்ம ஸம்ஹிதை யென்னும் பன்னிரண்டு பாதங்களை யுடையதென்றும், அவற்றின் அளவை லக்ஷங்கிரந்த மென்றுங் கூறப்பட்டுள்ளது. ஆயினும் மும்பை வடமொழிப் பதிப்பில் வித்தியேசுவர ஸம்ஹிதை, ஸ்ருஷ்டி கண்டம் ஸதீகண்டம் பார்வதீகண்டம் குமார கண்டம் யுத்த கண்டம் என்னும் ஐந்து பிரிவினையுடைய ருத்ர ஸம்ஹிதை, சதருத்ர ஸம்ஹிதை, கோடி ருத்ர ஸம்ஹிதை, உமா ஸம்ஹிதை, கைலாஸ ஸம்ஹிதை, பூர்வபாகம் உத்தர பாகமென்னும் இரண்டு பாகங்களையுடைய வாயவீய ஸம்ஹிதை யென்னும் ஏழு ஸம் ஹிதைகளே காணப்படுகின்றன. தமிழ் மொழிபெயர்ப்பில் ஞான ஸம்ஹிதை, தர்ம ஸம்ஹிதை, கைலாய ஸம்ஹிதை, ஸநத்குமார ஸம்ஹிதை, வாயு ஸம்ஹிதை, வித்யேசுவர ஸம்ஹிதை யென் னும் ஆறு ஸம்ஹிதைகள் காணப்படுகின்றன. தமிழ் மொழி பெயர்ப்பு தென்னாட்டுப் பிரதிகளையே மூலமாகக் கொண்டு மும்பைப் பிரதியையும் சிறுபான்மை தழுவிச் செய்யப்பட்ட தாகத் தோன்றுகிறது.

வித்யேசுவர ஸம்ஹிதை, கைலாஸ ஸம்ஹிதை, வாயவீய ஸம்ஹிதை மும்பை மூலத்திற்கும் தமிழ்மொழிபெயர்ப்புக்கும் பொதுவாயுள்ளன. தமிழ் ஞான ஸம்ஹிதையிலே ருத்ரஸம்ஹிதை, சதருத்ர ஸம்ஹிதை, கோடிருத்ர ஸம்ஹிதை யென்றிவற்றின் விஷயங்களே வந்துள்ளன. மற்ற ஸம்ஹிதை விஷயங்களும் அவ் வாறே பேதப்பட்டுக் காணப்படுகின்றன. தமிழ் மொழிபெயர்ப் பாளர் வடதேசத்துப் பிரதியில் ஆங்காங்குச் சிவோத்க்ருஷ்ட மல்லாத கதா பேதங்கள் விரவியிருந்தனவென்று கூறினர். தென் னாட்டுப் பிரதிகள் அச்சுக்கு வந்ததாகத் தெரியவில்லை.

சிவமஹா புராணத்தைச் செய்யுள் வடிவமாக இயற்றினார் கோயமுத்தூர் வேலாயுத பண்டிதர். 1857 செய்யுள் கொண்ட ஞானசங்கிதையும், தர்மசங்கிதையில் 1174 செய்யுள் கொண்ட 21 அத்தியாயங்களும் 1909-இல் அச்சாகி வெளிவந்தன [Printers' Association Ltd.]. நூலுள் ஆதாரம் காணப்படவில்லை யாயினும் இஃது ஈக்காடு இரத்தினவேலு முதலியார் வசனத்தைச் செய்யுள் வடிவாக்கினதென்று எண்ணவேண்டியிருக்கிறது.

சிவமஹாபுராணத்தில் சைவர்கள் தெரிந்துகொள்ளவேண்டிய சிவசம்பந்தமான சரிதங்கள், சிவபூஜாவிதி, தீக்ஷாக்கிரமங்கள்,

பாசுபதவிரதம், பஞ்சாக்ஷரம் முதலிய மந்திரங்கள், ஞானயோகம் முதலிய பல விஷயங்கள் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

### வாயு சங்கிதை

சிவமஹா புராணத்தில் ஒருபகுதியாகிய வாயுஸம்ஹிதையைக் குலசேகர வரகுணராம பாண்டியர் தமிழில் செய்யுள் ரூபமாக மொழிபெயர்த்தனர். இவர் பெயரை, 'தெய்வீகம் பெற்ற' என்னும் விசேஷணத்தோடு எழுதியுள்ளனர், நூலை [1889] விரோதி ௵ ஆவணி மாதத்திலே பதிப்பித்த சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள். அந்நூல் முகப்பில்,

“ திருவளர் கமலத் திறைவனுங் காணுச்
செஞ்சடைத் தனிமுதல் புராண
அருமறைத் தெளிவாம் வாயுசங் கிதையின்
அமுதகு தமிழினு லுரைத்தான்
பரிதிவாட் டடக்கைப் பாண்டிய குலசே
கரனணி பனிமலர்ப் பசுந்தார்
வரகுண ராமன் புவியெலா நிகழற்று
மாலைவெண் கவிகைமீ னவனே”

என்னுஞ் சிறப்புப் பாயிரம் காணப்படுகின்றது. நூலாசிரியர் குருவணக்கங் கூறுமிடத்து,

“ முன்னைவினை யிருளகல முரிதிரைப்பாற் கடலகட்டின் முளைத்த திங்கள்
நன்னிலவு பரந்தெறிக்கு நலத்தகுவெண் ணீறணிந்து நளின வீட்டில்
அன்னமுயர்த் தவனறியா வஞ்செழுத்தின் றன்மையினை யறியக் கூறித்
தன்னருள்பூத் தாண்டுகொண்ட சுவாமிதே வன்றிருத்தா டலைமேற்
[கொள்வாம்”

எனச் சுவாமிதேவரை வணங்கியுள்ளார். சிவமஹா புராணத்துச் சைவர் அறியவேண்டிய விஷயங்கள் பல உளவென்று முன்பு உரைக்கப்பட்டது. வாயு சங்கிதையில் அன்னார்க்கு இன்றியமையாத விஷயங்கள் திரட்டிக் கூறப்பட்டுள்ளன. இந்நூலில் பூர்வ காண்டத்தில் 537 திருவிருத்தங் கொண்ட முப்பது அத்தியாயங்களும், உத்தர காண்டத்தில் 797 திருவிருத்தங்கொண்ட முப்பது அத்தியாயங்களும் உள்ளன. இவ்விரண்டிலும் பாயிரச் செய்யுட்கள் 15. அவை போகப் புராணச் செய்யுட்கள் 1319. பிரதிகள் அகப்படுவது அருமை.

---



# மாயா விநோதினி

ஸ்ரீ ரவீந்த்ரநாத் டாகுர்

[ஆசிரியர் அனுமதியுடன் ஸ்ரீமதி தஞ்சம் மொழிபெயர்த்தது.]

---

(சென்ற இதழ் 165-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## ஐந்தாம் அத்தியாயம்

மழையின்றிக் களத்தில் நட்ட பயிர் உலர்ந்து கருகும் சமயம் மழை பெய்யவே, அப்பயிர் இழந்த ஜீவ சக்தியைப் பெற்றுத் தழைத்துப் பசுமை யோங்குகிறது; தலை தூக்கிக் கம்பீரமாய் நிமிர்ந்து நிற்கிறது. ஆசாவின் நிலையும் இதை ஒத்ததுதான். பிறந்தகத்தில் அவளை மனதார நேசிப்பார் யாருமில்லை. அநாதைப் பாலிகையான அவள்மேல் இன்று பகவான் கருணை கூர்ந்து அன்பென்னும் முகுடத்தை அவள் சிரசில் அணிவித்ததைப் பூர்ண மனத்துடன் அவள் அங்கீகரிப்பதிற் பின்வாங்கவில்லை. சிறிதும் தயக்கமோ வெட்கமோ இன்றித் தன் கணவனின் ஹிருதய சிம்மாசனத்தைத் தனதாக்கிக் கொண்டாள். பிறகு பதியின் பாதங்களை வருட அவளுக்கு நாணம் ஏன்?

. நூதனமாக வந்த பிறர்வீட்டுப் பெண், தன் மகனிடம் வெகு காலம் பழகியவள்போல் துணிச்சலுடன் பட்டப்பகலில் ஒரு கட்டிலில் வீற்றிருப்பதைக் காண ராஜலக்ஷ்மியால் சகிக்க முடியவில்லை. அவள் மனம் அனலிலிட்ட மெழுகுபோல் உருகியது. தான் மனமெரிவது போதாதென்று அன்னபூரணியிடமும் சென்று, "அக்கா, போய்ப்பார், அந்த அநியாயத்தை! உனது நவாப்வம்சத்துப் பெண் என்ன வித்தை கற்று வந்திருக்கிறாளென்று வந்து பார்! வீட்டில் இன்னும் உற்றார் பெரியோர் மாத்திரம் இன்று இருந்திருந்தால்—" என்பதற்குள் அன்னபூரணி மிகவும் வியாகுலத்துடன், "அம்மா, நீ என்னிடம் ஏன் முறையிடுகிறாய்? உன் மருமகள் தானே? அவளைத் தண்டிக்கவோ சீர்திருத்தவோ உனக்கும் அதிகாரம் இருக்கிறது" என்றாள்.

ராஜலக்ஷ்மி ஆவேசத்துடன், "என் மருமகள்! உன்னைப் போன்ற துர்மந்திரி இருக்கும்போது அவள் ஏன் என் சொற்படி நடப்பாள்!" என்று கர்ஜித்தாள்.

அன்னபூரணி தடதட வென்று தனது வருகையைத் தெரிவித்துக்கொண்டே மஹேந்திரனின் அறையிற் புகுந்தாள். அங்கே ஆசாவிடம், "ஏண்டீ, நீ என்ன என் மானத்தைப் போக்குகிறாயே இப்படி? உனக்கோ வெட்கமுமில்லை. வேளையில்லை, பொழுதில்லை. கிழட்டுமாமியாரின் தலையில் வீட்டுப் பொறுப்பையெல்லாம் கட்டிவிட்டு நாள் முழுவதும் அறையில் குசாலாய் உட்கார்ந்திருக்கவா நான் உன்னை இங்கே கொண்டுவந்தது? ஐயோ! என் தலையிலெழுத்து இப்படியா ஆகவேண்டும்?" என்றாள்.

மேலே பேச முடியாது தன் தலைவிதியை நொந்துகொண்டு அழலானாள் அன்னபூரணி. ஆசாவும் எழுந்து ஒரு மூலையில் நின்றுகொண்டு அழ ஆரம்பித்தாள்.

மஹேந்: பெரியம்மா, வீணாக ஆசாவை ஏன் நீ மிரட்டுகிறாய்? நான்தான் அவளை இங்கேயே இருக்கும்படி தடுத்து நிறுத்தி வைத்துக் கொண்டேன்.

அன்ன: அதனால் நீ மிகவும் நன்மை செய்துவிட்டாயாக்கும்! அவள்தான் தாய் தந்தையற்ற அறியாச் சிறுமி. தாயிடமிருந்து குடும்பவேலைகளைக் கற்கத்தான் அவளுக்கு முடியாது போயிற்று. எது நல்லது, எது கெட்டது என்பதைக் கூட அவள் அறியாள். நீ அவளுக்கு என்ன கற்பித்துக்கொண்டிருக்கிறாய்?

மஹேந்: இதோ பார்: நான் அவளுக்காகச் சிலேட், நோட்டு, முதல் பாட புத்தகம் எல்லாம் வாங்கிவந்து எழுதப் படிக்கக் கற்றுக்கொடுத்து வருகிறேன். நீங்கள் என்னவேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளுங்கள். நான் அவசியம் அவளுக்குப் பாடம் கற்பிக்கத்தான் போகிறேன்.

அன்ன: என்ன! ஒருநாள் முழுவதுமா பாடமும் படிப்பும்? ஏதோ சாயங்காலம் ஒழிந்த நேரத்தில் ஒன்றிரண்டு மணி நேரம் படித்தால் போதாதோ?

மஹேந்: படிப்பு ஒன்றும் நீ நினைப்பதுபோல் லேசில் வந்துவிடாது, பெரியம்மா. அதற்கு வெகுநேரம் வேண்டும்.

அன்னபூரணி சினத்துடன் வெளியேறினாள். ஆசாவும் மெதுவாய் அவள் பின்னேயே கிளம்பினாள். மஹேந்திரன் உடனே அவளைக் கையைப்பற்றி இழுத்து நிறுத்தினான். அழுத கண்ணுடன் அவள் ஏங்கி நிற்பதை அவன் பொருட்படுத்தவில்லை. "நில், என்ன அவசரம்? வெகுநேரம் தூங்கிப் பொழுதை வீணாக்கி

விட்டேன். இப்பொழுது பாடத்தை ஆரம்பித்து அதை ஈடு செய்யவேண்டும்'' என்றான்.

மஹேந்திரனின் மேற்பார்வையில் ஆசாவின் படிப்பு எம்மாதிரி விருத்தியடைகிறதென்று சற்றுக் கவனிப்போம்: அம்மாதிரி, உண்மையில் ஒரு பள்ளிக்கூட இன்ஸ்பெக்டரால் கூடச் செய்யச் சாத்தியப்படாது.

ஆசாவிற்குத் தன் கணவனிடத்தில் அபார நம்பிக்கை. தனக்குச் சகஜமாய்ப் படிப்பு வருமென்று அவளே நம்பவில்லையானாலும், பதியினிடம் பாடம் கற்று அவன் விருப்பத்தை நிறைவேற்றுவது தனது கடமையென்று கருதினாள். இதனால் அவள் மிகவும் ஊக்கத்துடன் மனத்தை இருத்திக் கவனத்துடன் படிக்கவேண்டுமென்று கட்டிலின்மேல் ஒரு மூலையில் உட்கார்ந்து கொள்வாள். புத்தகத்தைப் பிரித்து வைத்துக்கொண்டு தலையை அசைத்துக் கொண்டே ஒவ்வொரு வரியாய் நெட்டுருப் பண்ண ஆரம்பிப்பாள்.

இன்னொருபுறம் மஹேந்திரன் எதிரில் மேஜையின்மீது வைத்திய புத்தகங்களை மூடிவிட்டு, "ஆசா! எங்கே, கொண்டு வா இங்கே புத்தகத்தை. எதுவரை படித்திருக்கிறாய் பார்க்கலாம்?'' என்பான்.

ஆசா 'உபாத்தியாயர்' தன்னை எங்கே பரீக்ஷிக்கப் போகிறாரோவென்று பயப்படுவாள். ஏனெனில் பரீக்ஷையில் தேறுவோம் என்ற நம்பிக்கையே அவளுக்கு இல்லை. எவ்வளவோ தலைகீழாக முயன்றும் முதற்பாட புத்தகத்தின் பாடமே மனத்தில் ஏறவில்லை. பாடத்தைத் தெரிந்துகொள்ள அவள் அதிகமாக முயல முயல ஒவ்வோர் அக்ஷரமும் ஒரு மலைபோல் தோன்றி அவள் அறிவை முன்னிலும் அதிகமாகக் குழப்பிவிடும்.

'உபாத்தியாயர்' கூப்பிடவே குற்றவாளியைப்போல் புத்தகத்துடன் மஹேந்திரனின் நாற்காலியருகில் போய் நிற்பாள். அவன் தன் ஒரு கையை அவளது இடுப்பைச்சுற்றிப் போட்டுக் கட்டி அவள் ஓடாதபடி பிடித்துக்கொண்டு, இன்னொரு கையால் புத்தகத்தை வாங்கிக்கொண்டு, "எங்கே, எதுவரை இன்று படித்தாய்? காண்பி பார்க்கலாம்'' என்பான். ஆசா ஏதாவது ஒரு வரியைக் காண்பித்து, "இது வரைதான்'' என்பாள். "ஓஹோ! இவ்வளவு படித்துவிட்டாயா? என்னால் இத்தனை படிக்கவே முடியாது!'' என்று ஆச்சரியத்துடன் கூறிக்கொண்டே தனது புத்தகத்தில் முதல் இரண்டு பக்கங்களைக் காண்பித்து, "நான் பார், இவ்வளவுதான் படித்தேன்'' என்பான். அபலை ஆசா, "பின் இத்தனை

நேரம் என்னசெய்துகொண்டிருந்தீர்கள்?'' என்பாள். மஹேந்திரன் அவளது மோவாய்க் கட்டையைப் பிடித்துக்கொண்டு, "என்ன செய்துகொண்டிருந்தேனா? ஒருத்தியைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அந்தக் கல்நெஞ்சினளோ என்னைத் திரும்பிக்கூடப் பாராது தன் பொன் வண்டுப் பாடத்திலேயே முழுக்கவனமும் செலுத்திக்கொண்டிருந்தாள்'' என்பான். ஆசா அன்பினாலும் நாணத்தினாலும் இதற்குப் பதில் ஒன்றும் உரையாது வெட்கி நிற்பாள்.

மஹேந்திரனின் இந்தப் 'பள்ளிக்கூட'த்தில் கவர்ன்மெண்டு ஸ்கூல் பாட விதிமுறை எதுவும் நடக்காது.

எப்பொழுதாவது அவன் வெளியே போகும் சமயம் பார்த்து ஆசா மறுபடி படிக்க ஆரம்பிப்பாள். அவன் எங்கிருந்தோ பின்புறமாக வந்து அவள் கண்களை இறுகப் பொத்திக்கொண்டு, "என்ன கல்நெஞ்சு! நான் கண்மறைந்ததும் என்னை அறவே மறந்து படிக்க ஆரம்பித்துவிடுகிறாய்'' என்பான்.

ஆசா: என்னை நீங்கள் அசடாயடிக்க விரும்புகிறீர்கள்.

மஹேந்: நீ கல்வியற்ற பேதை, நான் மாத்திரம் கல்வியில் கரைகண்ட பண்டிதனோ?

ஆசா உடனே எதையோ நினைத்துக்கொண்டவளாய், "நானென்ன உங்கள் படிப்பிற்கு இடையூறாயிருக்கிறேனா?'' என்றாள்.

மஹேந்திரன் அவள் கையைப் பிடித்துக்கொண்டு, "இதன் மர்மம் உனக்கு எப்படித் தெரியும்? நீ என்னவோ நான் எதிரில் இல்லாவிட்டாலும் சுலபமாய்ப் படிக்கிறாய். ஆனால் எனக்கோ நீ இல்லாவிடில் படிப்பே ஓடுவதில்லை'' என்றான்.

எத்தனை பெரிய குற்றச்சாட்டு! ஆசாவின் கண்களில் மளமளவென்று நீர்த்துளி. உடனே கணவனின் அன்பெனும் சூரியனைக் கண்டதும் பனித்துளிபோல் அது மறைந்துவிடும்.

'மாணவி'யின் பாடத்தில் 'உபாத்தியாய'ரே இப்படிக் குறுக்கிட்டால் அபிவிருத்தி எப்படிஏற்படும்? சிலசமயம் சித்தி கோபிப்பாளே என்ற பயத்தினால் மனம் கலங்கும். படிப்பதாகச் சாக்குப்போக்குச் சொல்லிக்கொண்டிருப்பதெல்லாம் அவர்களை ஏமாற்ற ஒரு ஹேதுவென்று அவளுக்குத் தோன்றும். மாமியார் எதிரில் வர நேரிட்டால் வெட்கம் தலையெடுக்க முடியாது. மாமியாரோ அவளை வேலைசெய்யச் சொல்வதுமில்லை. புத்திமதியும் சொல்வதில்லை. 'சொல்லாவிட்டால் என்ன? நாமே போய்ச் செய்யலாம்' என்று எதையாவது செய்ய ஆரம்பித்துவிட்டாலோ, கோபத்

துடன் ராஜலக்ஷ்மி ஓடிவந்து, "என்னடீ செய்ய வந்துவிட்டாய்? மேலே அறைக்குப் போ! பாடத்திற்கு எங்காவது குந்தகம் ஏற்படப்போகிறது!" என்பாள்.

ஒருநாள் அன்னபூரணி ஆசாவிடம், "உன் படிப்பையும் வாசிப்பையும் பார்த்தால் நீ அவனைக்கூடப் பரீக்ஷையில் தேறவிட மாட்டாயென்று தோன்றுகிறது" என்றாள். ஆசா மனத்தைத் திடப்படுத்திக் கொண்டாள். மஹேந்திரனிடம் போய், "நான் உங்கள்கூட இருப்பதால் உங்கள் படிப்பில் தடை ஏற்படுகிறது. இன்றைய தினத்திலிருந்து நான் கீழே சித்தியிடமே படுத்துக் கொள்ளுகிறேன்" என்றாள். இதைச் சொல்லி முடிக்குமுன் கண்ணீர்பெருக்கெடுத்தோட, அவளது மெல்லியதேகம் பதறியது.

மஹேந்: நல்லது! நீ அங்கே போ; நானும் வருகிறேன்! பெரியம்மா இந்த அறைக்கு வந்துவிடட்டும்.

இம்மாதிரிக் கேலியான பதிலைக் கேட்டு ஆசா சினந்தாள்.

மஹேந்: ஆசா, இதைவிட நாள் முழுவதும் நீயே நான் சரிவரப் படிக்கிறேனா இல்லையா என்று மேற்பார்வையிட என்னெதிரிலேயே ஏன் இருந்துவிடக்கூடாது? நான் படிக்கிறேனா இல்லையா என்பதை அப்பொழுது பார்!

சிக்கலான விஷயம் சுலபமாய்த் தீர்ந்துபோயிற்று! ஆசாவின் மேற்பார்வையில் மஹேந்திரனின் கல்வி எவ்வளவு முன்னேற்றம் அடைந்தது என்பதற்கு அவ்வருஷம் அவன் பரீக்ஷையில் 'கோட்' அடித்ததே தக்க சான்று. ஆசாவுக்கோ முதற்பாட புத்தகம் முடியமுடியத் தனது பெயர்கூடத் தப்பில்லாமல் எழுத வரவில்லை; அவ்வளவு அபிவிருத்தி!

இவ்வளவு அழகான படிப்பிற்குத் தடையும் ஒன்றிருந்தது. எதிர்பாராதபோதெல்லாம் மஹேந்திரனைக் கூப்பிட்டுக்கொண்டே விஹாரி வந்து தொலைவான். அறையை விட்டு வெளியே வந்தாலொழிய விடவும் மாட்டான். "படிப்பை இப்படி அலக்ஷியம் செய்துவிட்டு இருக்கலாமா?" என்று குத்தலாகச் சொல்வான். ஆசாவிடம், "ஏனம்மா, எதிலும் மிதம் வேண்டும். போஜனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சுவைத்து அருந்தினால்தான் அதன் ருசி தெரியும். ஒரே விழுங்காய் விழுங்கிவிட்டால் அஜீரணந்தான் ஏற்பட்டுப் பிறகு அதற்கு வைத்தியம் செய்ய நேரிடும்" என்று கேலியாகப் பேசுவான்.

மஹேந்: ஆசா, நீ விஹாரி சொல்வதைப் பொருட்படுத்தாதே! நமது சுகம் அவனுக்கு விஷம்போல் இருக்கிறது.

விஹாரி: அந்தச் சுகம் உன் வசத்திலேயே இருக்கும்போது அதைப் பிறர் அசூயைப் படாதவாறு கொஞ்சங் கொஞ்சமாய் அனுபவியேன்.

மஹேந்: உனக்கு இது தெரியாது போலும்: அசூயைப்படுகிறவர்களை இன்னும் அதிக அசூயை கொள்ளச் செய்வதில் ஒரு சுகம் இருக்கிறது.

மனைவியிடம் இவ்வாறு சொல்லிவிட்டு மஹேந்திரன், "ஆசா, ஈசுவர கிருபையால் நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிடில் இந்த விஹாரியின் கையிலல்லவா உன்னைக் கொடுக்க இருந்தேன்?" என்றான்.

விஹாரி முகம் சிவக்கக் கோபத்துடன், "போதும்! வாயை மூடிக்கொள்!" என்றான்.

இவ்விதமான சம்பாஷணை ஆசாவுக்கு விஹாரியின்பால் வெறுப்பை உண்டாக்கியது. முதலில் அவனைத் தனக்கு விவாகம் செய்ய நிச்சயம் ஆகியிருந்தது என்ற காரணத்தாலேயே அவள் அவனிடம் பராமுகமாக இருந்துவந்தாள். அவனும் இதை அறியாமலில்லை. அவன் மனத்தைப் புண்படுத்தியதில் மஹேந்திரனுக்குச் சந்தோஷம்.

ராஜலக்ஷ்மி விஹாரியினிடம் தன் துக்கத்தை வெளியிட்டு அழுதாள்.

விஹாரி, "அம்மா, பட்டுப்பூச்சி உள்ளேயிருக்கும் வரை அது தன்னைச் சுற்றிக் கூடு கட்டிக்கொண்டு பட்டு உற்பத்தி செய்து கொண்டேயிருக்கும். ஆனால் அது தன் பந்தத்தை அறுத்துக் கொண்டு ஒருமுறை வெளியே பறந்துவிட்டதோ, அதைத் திருப்பிக் கூண்டிற்குள் அடைப்பது முடியாத காரியம். அதுபோலத் தான் இருக்கிறது மஹேந்திரனின் நிலையும். தாய்க்கும் மகனுக்கும் உள்ள பாசம் இப்படி அறுபடுமென்று யார் கண்டார்கள்?" என்று துக்கித்தான்.

மஹேந்திரன் பரீக்ஷையில் தவறினான் என்ற செய்திகேட்டதும் ராஜலக்ஷ்மி கோபாக்கினி பொங்கியெழ ஆர்ப்பரித்தாள். அக் கோபத்தீ அன்னபூரணியையும் பொசுக்கத் தவறவில்லை. அவள் மனமுடைந்து அன்ன ஆகாரம் நித்திரை யாவும் துறந்தாள்.

---

## ஆறும் அத்தியாயம்

**ம**ழைக்கால ஆரம்பம். அந்திப்பொழுது. சற்றுமுன்தான் மழைபெய்து ஓய்ந்திருந்தது. இன்னமும்வானத்தில் மேகங்கள் சூழ

இருண்டிருந்தது. மஹேந்திரன் பட்டுச்சட்டையும் தூய்மையான ஜரிகை அங்கவஸ்திரமும் தரித்து மிகச் சந்தோஷசித்தனாய்த் தனது அறைக்குள் நுழைந்தான். திடீரென்று பிரவேசித்து ஆசாவைத் திடுக்கிடச் செய்யவேண்டுமென்பதற்காகச் சப்தமின்றி நடந்து வந்தான். கிழக்குப் புற ஜன்னற் கதவு திறந்திருந்தது. வெளியிலிருந்து காற்றும் தூற்றலும் உள்ளே அடித்துக் கொண்டிருந்தன. காற்றில் விளக்கும் அணைந்திருந்தது. ஆசாவோ கட்டிலின்கீழ்த் தரையில் படுத்து விம்மி விம்மி அழுதுகொண்டிருந்தாள்.

மஹேந்திரன் பரபரப்புடன் அருகில் போய், "ஏன்? என்ன சங்கதி? ஆசா!" என்றான். ஆசாவின் அழுகை அதிகரித்தது. கடைசியாக விக்கிக்கொண்டே, தன் சித்தி, வீட்டில் சச்சரவு பொறுக்கமாட்டாமல் வீட்டை விட்டுத் தன் அத்தான் அகத்திற்குச் சென்றுவிட்டதைத் தெரிவித்து மேலும் அழலானாள்.

தனது அன்றைய சுகவாழ்வில் மண் விழுந்ததை நினைத்து மஹேந்திரன் வெகுண்டான். அவனது கோபம் முழுவதும் தாயின் மீது திரும்பியது. அவள்தான் இவ்வளவிற்கும் காரணமென்று நம்பினான். "இருக்கட்டும். இவளுக்குப் புத்தி கற்பிக்கிறேன். பெரியம்மா போன இடத்திற்கே நானும் மனைவியுடன் போய்விடுகிறேன். இவள் யாருடன் பிறகு சண்டை பிடிப்பாள் பார்க்கலாம்" என்று சொல்லிக்கொண்டே வீட்டில் சப்தம்போட்டு ஆர்ப்பரித்தான். ஆட்களை அழைத்துச் சாமான்களையெல்லாம் எடுத்துக் கட்டச்சொல்லி ஆர்ப்பாட்டம் செய்தான். ராஜலக்ஷ்மிக்கு எல்லாம் புரிந்தது. மிகவும் சாந்தமாய் மஹேந்திரனிடம் போய், "ஏன், எங்கே போகிறாய்?" என்று கேட்டாள்.

அவன் பதிலே சொல்லவில்லை. அடுத்தடுத்துக் கேட்டதன் பிறகு, "பெரியம்மாவிடம் போகிறேன்" என்றான்.

ராஜலக்ஷ்மி: நீ போகவேண்டாம். நானே உன் பெரியம்மாவை இங்கே அழைத்து வருகிறேன்.

அவள் ஒருவண்டி கொண்டுவரச் செய்து அன்னபூரணியிடம் மறுவினாடியே சென்றாள். அன்னபூரணியின் முன் நமஸ்கரித்தபடியே ராஜலக்ஷ்மி, "அக்கா, திருப்தியடை. என்னை மன்னிக்க வேண்டும்" என்று வேண்டினாள்.

அன்னபூரணி ராஜலக்ஷ்மியின் காலை இறுகப் பிடித்துக் கொண்டு ஈனக்குரலில், "அம்மா, என்னை ஏன் நரகவேதனைக்கு ஆளாக்குகிறாய்? உன் ஆக்ஞைக்குக் கீழ்ப்படிய நான் காத்திருக்கிறேன்" என்றாள்.

ராஜலக்ஷ்மி: நீ போய்விட்டாயாம்; உன் பின்னாலேயே மஹேந்திரனும் மனைவியை அழைத்துக்கொண்டு வீட்டைவிட்டுப் போய்விடுகிறானும்!

மமதையும் கோபமும் மேலே பேசவொட்டாது தடுக்க, ராஜலக்ஷ்மி அழுதுவிட்டாள். அன்னபூரணி ராஜலக்ஷ்மியுடன் வீட்டிற்குத் திரும்பினாள். வெளியில் இன்னும் தூறிக்கொண்டிருந்தது. ஆசாவின் அழுகை ஓய்ந்து மஹேந்திரன் அவளைச் சந்தோஷப்படுத்த முயன்று கொண்டிருந்தான். சுகமய வாழ்க்கையில் அன்றைய இரவு துக்கமாகக் கழிய அவன் விரும்பவில்லை. இச்சமயம் அன்னபூரணியும் ராஜலக்ஷ்மியும் உள்ளே வந்தனர்.

அன்னபூரணி ஆசாவிடம், "ஆசா, உன் தொல்லை பொறுக்க மாட்டாது வீட்டை விட்டு வெளியேறினாலும், அங்கும் பின் தொடருகிறாய். எனக்கு மனவமைதி எங்கும் கிடையாதா?" என்றாள்.

ஆசா அடியுண்ட மான்போல் மருண்டாள்.

மஹேந்திரன் ஆத்திரத்துடன், "ஏன் பெரியம்மா? அவள் உன்னை என்ன செய்துவிட்டாள்?" என்றான். அன்னபூரணி மறுபடி ஆசாவிடம், "புதிய நாட்டுப்பெண்ணுக்கு இவ்வளவு வெட்கங்கெட்ட தனம் இருந்து நான் பார்த்ததேயில்லை. உன் முகத்திலே விழிக்கக் கூடாதென்று வீட்டைவிட்டு ஒழிந்தேன். மாமியாரை அழவைத்து என்னைக் கூட்டிவரச் செய்தாயே நீ!" எனப் புலம்பினாள்.

தனது ஆனந்தமய வாழ்க்கைக்குக் கேடாகத் தாயும் பெரியன்னையும் இப்படி வந்து முளைப்பார்களென்று மஹேந்திரன் சொப்பனத்திலும் நினைக்கவில்லை.

மறுதினம் ராஜலக்ஷ்மி விஹாரியை வரவழைத்து அவனிடம், "அப்பா, நான் என் பிறந்தகம்போய் எவ்வளவோ வருஷங்களாயின. இப்பொழுது போய்ச் சில தினங்கள் தங்கிவரவேண்டுமென்று ஆசையாயிருக்கிறது. இதை நீ உன் சிநேகிதனிடம் சற்றுத் தெரிவி" என்றாள்.

விஹாரி: இவ்வளவு வருஷங்களாய் இல்லாமல் இப்பொழுது மாத்திரம் போக என்ன அவசியம் நேர்ந்துவிட்டது? நல்லது; அவனிடம் சொல்கிறேன். ஆனால் அவன் உங்களைப் போகவிடுவானென்று நான் நினைக்கவில்லை.

விஷயத்தைத் தெரிவித்ததும் மஹேந்திரன் விஹாரியினிடம், "அம்மா தன் ஊரைப் பார்த்துவிட்டு வரவேண்டுமென்று விரும்பினால் யார்தான் தடுக்கமுடியும்? ஆனால் மழைக் காலத்தில் அந்தப்

பாழடைந்த கிராமத்தில் அதிகநாள் தங்குவது உசிதமென்று எனக்குத் தோன்றவில்லை" என்றான்.

இவ்வளவு லகுவில் மஹேந்திரன் தன் தாயை அனுப்பச் சம்மதித்தது விஹாரிக்குப் பிடிக்கவில்லை. அவன் மஹேந்திரனிடம், "அம்மா தனியாய்ப் போகிறாள். அவளுக்கு வேண்டிய கைங்கரியம் செய்ய அங்கே யார் இருக்கிறார்கள்? உன் மனைவியையும் அவளுடன் அனுப்பி வைப்பது நல்லது" என்று சிரித்துக் கொண்டே சொன்னான்.

நண்பனின் பரிஹாசம் மஹேந்திரனுக்குச் சுறுக்கென்று தைத்தது; "அது ஒருநாளும் முடியாது" என்றான்.

விஷயம் இதனுடன் நின்றது.

விஹாரியின் கேலிப்பேச்சுக்கள் ஆசாவின் மனத்தை அறுத்தன.

உண்மையில் ராஜலக்ஷ்மிக்குப் பிறந்தகம் போகவேண்டுமென்ற ஆவலொன்றும் இல்லை. மகனுக்குத் தன்மீதுள்ள அன்பின் ஆழத்தை அளவிட்டறிய இதை ஒரு கருவியாகக் கொண்டாள். தான் போவதற்கு இத்தனை லேசில் சம்மதித்து விடுவானென்று அவள் கனவிலும் நினைக்கவில்லை. தான் வீட்டைவிட்டுப் போவதற்கும் தன் ஓரகத்தி போவதற்குமுள்ள வித்தியாசத்தை அவள் அறிந்து மனம் பொருமினாள். 'வசியப்படுத்துவதில் தேர்ந்த மாயாவினி அவள்; நான் வெறும் தாய்தானே! நான் இருப்பதைக் காட்டிலும் போவதே நலம்போலும்!' என்று எண்ணி வருந்தினாள்.

உள்ளூறப் புகையும் விஷயங்களை அன்னபூரணி ஒருவாறு அறிந்துகொண்டு மஹேந்திரனிடம், "ராஜலக்ஷ்மி போனால் நான் இந்த வீட்டில் தங்கமாட்டேன்" என்று சொன்னாள்.

மஹேந்திரன் தன் தாயிடம், "கேட்டாயா, அம்மா? நீ போனால் பெரியம்மாவும் போய்விடுவாளாம். பிறகு வீட்டுவேலை எப்படி நடைபெறும்?" என்றான்.

அசூயையினால் ராஜலக்ஷ்மிக்கு மனம் வெடித்தது. அவள் அன்னபூரணியிடம், "நன்றாயிருக்கிறது. நீ போகவாவது! அது எப்படி முடியும்? நீ இங்கேயேதான் இருக்கவேண்டும்" என்றாள். ராஜலக்ஷ்மிக்கு அவ்வீட்டிலிருக்கும் ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு யுகமாய்க் கழிந்தது. மறுதினம் ஊருக்குப்போக மூட்டையைக் கட்டினாள். தாயை மஹேந்திரனே அழைத்துப்போய் விட்டுவிட்டு வருவான் என்று யாவரும் நினைத்திருந்தனர். ஆனால் புறப்படும் சமயம் நெருங்கியதும் அவன் தன் ஆட்களில் ஒருவனை அவளுடன் அனுப்ப ஏற்பாடு செய்தான்,

விஹாரி: மஹேன், என்ன நீ இன்னும் புறப்படத் தயாராக வில்லையா?

மஹேந்: (சற்றுச் சங்கோசத்துடன்) எனக்குக் காலேஜ்—

விஹாரி: நல்லது. நீ இரு. நான் அம்மாவைக் கொண்டு விட்டு வருகிறேன்.

இது மஹேந்திரனின் மனத்தைத் தாக்கியது. ஆசாவிடம் தனிமையாய், "வரவர விஹாரியின் நடத்தை சகிக்கமுடியாததா யிருக்கிறது. என்னைவிட என் தாயைப்பற்றிய கவலை இவனுக்குத் தான் அதிகமாக்கும்!" என்றான்.

அன்னபூரணி வேறு விதியின்றி வீட்டிலேயே தங்க நேர்ந்தது. துக்கத்தினால் மனம் வெறுத்துத் தம்பதிகளிடம் அவள் நெருங் கவேயில்லை. இவர்களுக்கும் அவள் அப்படி நடந்துகொள்வது பிடிக்கவேயில்லை.

---

## ஏழாம் அத்தியாயம்

ராஜலக்ஷ்மி பிறந்தகம் வந்து சேர்ந்தாள். முதலில் அவளை அங்கே கொண்டுவந்துவிட்டுத் திரும்பிவிடலாமென்று விஹாரி எண்ணியிருந்தான். ஆனால் அங்குள்ள நிலையைக் கண்டதும் அவனால் திரும்பிப்போக முடியவில்லை.

ராஜலக்ஷ்மியின் பிறந்தகத்தில் ஒன்றிரண்டு கிழ விதவைகளைத் தவிர வேறு யாரும் திக்கில்லை. அவ்வூர் ஒரு பாழடைந்த கிரா மம். சுற்றுமுற்றும் மூங்கில்தோப்புகளும் அடர்ந்த காடுந்தான். வீட்டிற்கெதிரில் ஒரு பாசி நிறைந்த குளம். பகலிலேயே நரிகள் ஊளையிடும் சப்தம் கேட்கப் பயங்கரமா யிருந்தது.

விஹாரி: அம்மா, இது உங்களுக்குப் பிறந்த இடமாதலால் அருமையாயிருக்கலாம். ஆனால் இது வாசத்திற்கு யோக்கியமான இடமென்று நான் சொல்லவேமாட்டேன். போதும்; கல்கத்தா வுக்குத் திரும்பிப் போவோம்; வாருங்கள். உங்களை இங்கே தனியாய் விட்டுவிட்டுப் போனால் எனக்குத்தான் பாவம் சம்பவிக் கும்; உங்களுக்கும் இங்கிருக்க மனம் வராது.

ராஜலக்ஷ்மிக்கும் அலுப்பேற்பட்டது. இதற்குள் விநோதினி (ராஜலக்ஷ்மியின் ஒன்றுவிட்ட சகோதரனின் மனைவி; பாலிய விதவை) அவளுக்குத் துணையாக வந்து அவளோடு வசிக்கலானாள்.

விநோதினி யாரென்பது முதலிலேயே சொல்லப்பட்டிருக் கிறது. முதலில் மஹேந்திரனுக்கு அந்தப் பெண் நிச்சயிக்கப்பட்டு அவனால் நிராகரிக்கப்பட்டுப் பிறகு விஹாரியும் மறுக்கவே அந்த

அபாக்கியவதி வேறொருவனுக்கு வாழ்க்கைப்பட்டுச் சில தினங் களிலேயே விதவையானாள்.

கணவன் இறக்கவே, விநோதினி ஆதரவின்றித் தவிக்கும் இளங்கொடிபோல், கவனிப்பாரற்று அந்தப் பாழுங்கிராமத்தில் தனிமையாக வாழ்க்கை நடத்திவந்தாள். அநாதையான அப் பெண் தன் ஒன்றுவிட்ட நாத்தியை நமஸ்கரித்து முழுமனத் துடன் அவளுக்கு ஸேவை செய்வதில் முனைந்தாள்.

ஸேவையென்றால் அற்ப சொற்பமான ஸேவையன்று. ஒரு நிமிஷம் உட்காருவதில்லை. ஒவ்வொரு வேலையையும் தானே அறிந்து செய்வது, வாய்க்கு வேண்டியபடி அறுசுவையுடன் சமைப் பது, இனிமையான வார்த்தைகளைப் பேசிச் சந்தோஷப்படுத்து வது, இவை யாவும் அவள் செய்தாள்.

"அம்மா, நாழிகையாயிற்று. போய்ச் சாப்பிட்டுவிட்டு வா" என்று ராஜலக்ஷ்மி சொல்வாள். ஆனால் விநோதினி தன் நாத்த னார் தூங்கினாலொழிய அவளுக்கு விசிறுவதையும் கால்பிடிப்பதை யும் விட்டு எழுந்து போகமாட்டாள்.

"குழந்தாய், இப்படி ஓய்வின்றி உழைத்தால் தேகசுகம் கெட்டுவிடும்" என்று ராஜலக்ஷ்மி சொல்லும்போதெல்லாம் அப் பெண், "அம்மா, என்னைப்போன்ற துர்ப்பாக்கியவதியைக் கண் டாலே வியாதிகூடப் பயந்து கிட்ட அண்டாது. இத்தனை நாட் களுக்குப் பிறகு உங்களைப் பார்க்கும் பாக்கியம் கிடைத்திருக் கிறது. இந்த அற்ப ஸேவையைத் தவிர உங்களுக்குச் செய்ய என்னிடம் வேறு என்ன இருக்கிறது?" என்று தன்னையே நொந்து கொள்வாள்.

சில தினங்களிலேயே விஹாரியின் செல்வாக்குக் கிராமம் முழுதும் பரவிவிட்டது. சிலர் அவனிடம் வியாதிக்கு வைத்தியம் கேட்க வருவது, கோர்ட்டு விண்ணப்பம் அல்லது குத்தகைப் பத் திரங்கள் எழுதிக்கொள்ள வருவது, பட்டணவாசத்தில் பிள்ளைக் குச் சிறு உத்தியோகம் தேடித் தருமாறு கேட்பது—இப்படிச் சிறி யோர் பெரியோர் யாவருடைய மனத்தையும் அவன் தனது அன் பினால் கவர்ந்தான். அவனுடைய எளிய மாசற்ற சுபாவம் யாவ ரையும் வசீகரித்தது.

நகரத்தில் வாசம்செய்த விஹாரிக்குக் கிராமவாசத்தில் அலுப்புத் தோன்றாதிருக்குமாறு செய்ய, விநோதினி தன்னால் இயன்றவரையில் முயன்றாள். அவன் வெளியிலிருந்து திரும்பு முன்னரே அவனது அறையைச் சுத்தம் செய்வது, அறையின் ஒரு புறத்தில் கண்ணாடி டம்ளரில் இரண்டோர் அழகிய காட்டுப்

புஷ்பங்களை ஜோடித்து வைப்பது, படுக்கையண்டை பங்கிம் பாபு தீனபந்து மித்ரர் முதலிய பிரசித்த ஆசிரியர்கள் எழுதிய சில புத்தகங்களும் ஒன்றிரண்டு மாதப்பத்திரிகைகளும் அடுக்கி வைப்பது, இவை யாவும் அவள் விஹாரிக்காகச் செய்துவந்தாள். புத்தகத்தைத் திறந்து பார்த்தால் முத்துப்போன்ற அக்ஷரங்களில் தேர்ச்சிபெற்ற கையெழுத்தில் 'விநோதினி' என்று வரையப்பட்டிருக்கும்.

நாட்டுப்புறத்தில் இவ்வளவு சௌகரியங்களைச் செய்துவரும் விநோதினியின் சாமர்த்தியத்தைச் சிலாகித்து விஹாரி ராஜலக்ஷ்மியிடம் பேசுவான். அப்பொழுதெல்லாம் ராஜலக்ஷ்மி, "இப்படிப்பட்ட தங்கமான பெண்ணைத்தான் நீங்கள் விவாகம் செய்து கொள்ள மறுத்தீர்களே!" என்று சுட்டிக் காட்டுவாள்.

விஹாரி சிரித்துக்கொண்டே, "அம்மா, நல்லதாகப் போயிற்று. விவாகம் செய்துகொண்டு ஏமாறுவதைவிடச் செய்து கொள்ளாமலே ஏமாறுவது மேல்தான்" என்றான்.

'இம்மாதிரிப் பெண்ணை மருமகளாயடைய நான் கொடுத்து வைக்கவில்லையே!' என்று உள்ளூற வருந்தினாள் ராஜலக்ஷ்மி.

கல்கத்தா திரும்பும் பிரஸ்தாபமெடுத்தாலே விநோதினி, கண்களில் நீர் ததும்ப, பரிதபித்த குரலில், "அம்மா, நீங்கள் வருவதற்குமுன் நான் தனிமையை உணராமல் எவ்விதமோ காலத்தைக் கழித்துவந்தேன். இரண்டு தினங்களுக்கு நீங்கள் வந்து போவது என் கஷ்டத்தை அதிகரிக்கச் செய்கிறது. உங்களைப் பிரிந்து நான் எப்படி ஒண்டியாய் இருப்பேன்?" என்றாள்.

ராஜலக்ஷ்மி தழுதழுத்த குரலில், "அம்மா, உன்னை ஏன் நான் என் நாட்டுப்பெண்ணாக அடையவில்லை! உன்னைக் கட்டி முத்தமிட்டு வளர்ப்பேனே!" என்றாள்.

விநோதினி வெட்கித் தலைகுனிந்து வேலையைக் கவனிக்க உள்ளே சென்றாள்.

ராஜலக்ஷ்மி தன் மகனிடமிருந்து அன்பான கடிதம் ஏதாவது கிடைக்குமென்று தினமும் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தாள். அவன் பிறந்ததுமுதல் இதுவரை தாயைவிட்டு இவ்வளவு நாள் பிரிந்திருந்ததே இல்லை. தனது பிரிவை மகன் அவசியம் உணர்ந்திருப்பான், தன்னை உடனே புறப்பட்டு வருமாறு வேண்டிக் கடிதம் எழுதுவான் என்று அவள் எதிர்நோக்கியிருந்தாள்.

விஹாரிக்கு மஹேந்திரனிடமிருந்து ஒரு கடிதம் கிடைத்தது. அதில், "அம்மா வெகு நாட்களுக்குப் பிறகு பிறந்த ஊரைப்

பார்க்கப் போயிருக்கிருள். நன்ருய்ப் பார்த்துத் திருப்தி யடை யட்டும்'' என்று எழுதியிருந்தான்.

இதைக்கேட்ட ராஜலக்ஷ்மி, "ஓஹோ! மஹேந்திரன் கோபத் தினல் அப்படி எழுதியிருக்கிருன். அவனைப் பிரிந்து நான் சந் தோஷமும் திருப்தியும் எங்கிருந்து அடைவது? அவன் இன்னும் என்ன எழுதியிருக்கிருன்? சொல்லப்பா'' என்று ஆர்வத்துடன் வினவினுள்.

"இன்னும் ஒன்றுமில்லை, அம்மா'' என்று வெறுப்புடன் அக் கடிதத்தைக் கசக்கி ஒரு புத்தகத்தில் வைத்து மூலையில் எறிந்து விட்டான் விஹாரி.

கடிதத்தில், தன்மேல் கோபித்து மஹேந்திரன் ஏதோ எழுதி யிருக்கிருன், அதைச் சொல்ல விஹாரிக்கு இஷ்டமில்லையென்று ராஜலக்ஷ்மி ஊகித்தாள்.

இவ்வளவுநாள் தடைப்படுத்தி வைத்திருந்த புத்திரவாஞ்சை இப்பொழுது பெருக்கெடுத்து ஓடியது. ராஜலக்ஷ்மி தன் மகனின் சகல தவறுகளையும் உடனே மறந்து அவனை மன்னித்துவிட்டாள். 'அவன் மனைவியுடன் எப்படியிருந்தால்தான் என்ன? எப்படி யாவது சந்தோஷமாயிருக்கட்டும். அவர்கள் சுகத்தில் இனி நான் குறுக்கிட மாட்டேன். என்றும் அவனை விட்டுப் பிரியாத நான், இப்பொழுது இங்கே வந்து இவ்வளவு நாள் தங்கினுல் அவனுக்கு என்மேல் கோபம் வருவது சகஜந்தானே?' என்று சமாதானம் செய்துகொண்டாள்.

அன்பின் அறிகுறியாக அவள் கண்களில் நீர் துளித்தது. அன்று ராஜலக்ஷ்மி விஹாரியினிடம், "போய்க் குளித்துவிட்டு வாடா, அப்பா. வெகு நேரமாயிற்று'' என்று அடிக்கடி சொன் ளுள். ஆனல் விஹாரிக்கு அன்று ஸ்நானம், போஜனம் எதன் பேரிலும் நாட்டமில்லை. "இன்னும் நாழிகையாகவில்லை, அம்மா'' என்றே சொல்லிக்கொண்டிருந்தான்.

ராஜலக்ஷ்மி சற்றுப் பிடிவாதமாகவே, "இல்லை, நீ போய் ஸ்நானம் செய்துவிட்டு வா!'' என்ருள்.

இவ்வளவு வற்புறுத்தியபின் அவன் குளிக்க எழுந்து சென் ருன். அவன் தலை மறைந்ததுதான் தாமதம். ராஜலக்ஷ்மி புத்தகத் திற்குள்ளிருந்து கசங்கிக்கிடந்த கடிதத்தை எடுத்து விநோதினி யின் கையில் கொடுத்து, "இதைக் கொஞ்சம் படித்துக் காண்பி யம்மா'' என்ருள்.

விநோதினி உரத்துப் படிக்க ஆரம்பித்தாள். முதலில் தாயைப் பற்றிக் கொஞ்சம்; அதுவும் விஹாரி சொன்னதற்கு மேல் இல்லை.

பிறகு ஆசாவைப்பற்றி; தாம்பத்திய வாழ்க்கையின் ஆனந்த வெள் ளத்தில் மூழ்கியிருந்த மஹேந்திரன் தன்னையும் மறந்து ஏதேதோ பிதற்றி எழுதியிருந்தான். இரண்டொரு வரிகள் படித்து மேலே படிக்க முடியாது விநோதினி நிறுத்திவிட்டு, "அம்மா! இதையெல் லாம் கேட்டு உங்களுக்கு ஆகவேண்டியதென்ன?" என்றாள். புத்திரவாஞ்சையினால் இளகியிருந்த தாயின் இருதயம் கல்லாக உறைந்தது. "சரி! விட்டுவிடு" என்று சொல்லிக் கடிதத்தைத் திரும்பவும் வாங்கிக் கொள்ளாமல் அப்படியே வாயிற்புறம் போய் விட்டாள்.

விநோதினி அக்கடிதத்தை எடுத்துக்கொண்டு தனது அறைக் குள்போய் உட்புறம் கதவைத் தாளிட்டுவிட்டு அதை நிதானமாய்ப் படிக்க ஆரம்பித்தாள்.

அக்கடிதத்தில் அவளுக்கு ஏன் அவ்வளவு ருசியோ தெரியாது. ஆனால் ஒன்றுமாத்திரம் நிச்சயம்: அது அவளுக்குச் சந் தோஷத்தை அளிக்கக்கூடியதாக இல்லை. ஒருவரி விடாது கடிதத் தைப் பன்முறை படித்தாள். படிக்கப் படிக்கக் கண்களும் முகமும் சிவந்தன; பெருமூச்செறிந்தாள்.

அவள் மனத்தில் ஒரே வேட்கை. 'மஹேந்திரன் எப்படி யிருப்பான்? ஆசா எப்படிப்பட்டவள்? அவர்கள்காதல் எத்தன் மையது?'—இப்படிப் பலவாறான சிந்தனைகளில் அவள்மனம் உழன்றது. வெகுநேரம் வரை அக்கடிதத்தை மார்போடு அணைத்த வாறு ஆகாயத்தைப் பார்த்தவண்ணம் மல்லாந்து படுத்திருந்தாள்.

விஹாரி வந்தபிறகு அக்கடிதத்தை எங்கும் தேடிப் பார்த் தான்; அகப்படவே யில்லை.

அன்று திடீரென்று அன்னபூரணி வந்துசேர்ந்தாள். இப்படி எதிர்பாராது அவள் வந்தது ராஜலக்ஷ்மியின் மனத்தில் பல சந்தேகங்களை எழுப்பியது. வீட்டில் என்ன சங்கதியோ வென்று தவித்தாள்.

அன்னபூரணி அவள் முகம் வெளுத்ததிலிருந்து இதை அறிந்துகொண்டு, "ராஜலக்ஷ்மி, கல்கத்தாவில் எல்லாரும் க்ஷேமந் தான்" என்றாள்.

ராஜலக்ஷ்மி சற்றுத் தைரியமடைந்து, "பின் நீ ஏன் இங்கே வந்தாய்?" என்றாள்.

அன்னபூரணி: "ராஜலக்ஷ்மி, வீட்டுப்பொறுப்பை நீயே வந்து ஏற்றுக்கொள். எனக்கு உலகப்பற்றே அற்றுவிட்டது. என் கடைசி நாட்களை நான் காசியில் போய்க் கழிக்க நிச்சயித்து விட்டேன். உன்னைப் பார்த்து விடைபெற்றுப் போகவே நான்

இங்கே வந்தேன். தெரிந்தும் தெரியாமலும் நான் எவ்வளவோ குற்றங்கள் செய்திருக்கக்கூடும். அவைகளில் ஒன்றையும் நீ மனத்தில் வையாது மன்னித்துவிடும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன். உன் நாட்டுப்பெண் (அப்பொழுது அவள் கண்களில் நீர்நிரம்பி வழிந்தது) இன்னும் அறியாச் சிறுமி. தாய் தந்தையற்ற குழந்தை. அவள் தெரியாத்தனமாய் என்னதான் தப்பிழைத்தபோதிலும் உன் குழந்தை.

இதற்குமேல் அவளால் பேசமுடியவில்லை. குரல் தழுதழுத்தது.

ராஜலக்ஷ்மி சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்ய எழுந்து போய்விட்டாள். அன்னபூரணி வந்த சங்கதி கேட்டதும் கோவிலுக்குச் சென்றிருந்த விஹாரி ஓடோடியும் வந்து அவளை நமஸ்கரித்து, "பெரியம்மா, இது என்ன யோசனை? எங்களையெல்லாம் மறந்து இப்படி விட்டுப்போகவா எண்ணினாய்?" என்று கேட்டான்.

அன்னபூரணி கண்ணீரைத் துடைத்துக்கொண்டே, "அப்பா விஹாரி, என்னைத் தடுக்காதே. நான் எங்கிருந்தால் என்ன? நீங்கள் எல்லோரும் சுகமாக இருக்கவேண்டுமென்றுதான் நான் பிரார்த்திக்கிறேன்" என்றாள்.

விஹாரி சற்றுப் பேசாதிருந்தான். பிறகு, "பெரியம்மா, மஹேந்திரனின் புத்தியே மாறிவிட்டது. அவன் உங்களையும் வீட்டை விட்டு வெளியேறும்படிச் செய்துவிட்டான்" என்றான்.

அன்னபூரணி சட்டென்று, "அப்படிச் சொல்லாதே, விஹாரி. அவன் என்னை ஒன்றும் சொல்லவில்லை. நான் காசிக்குப் போவதால் இந்தக் குடும்பத்திற்கு நன்மையே ஏற்படும்" என்றாள்.

விஹாரி தூரத்தில் தெரியும் பரந்தவெளியைப் பார்த்தவாறு சிந்தனையில் ஆழ்ந்தான். அன்னபூரணி தனது புடைவைத்தலைப்பில் முடிந்து வைத்திருந்த ஒரு ஜோடித் தங்க வளையல்களை எடுத்து அவன் கையில் கொடுத்து, "விஹாரி, இந்தா! இவைகளை உன்னிடமே வைத்துக்கொள். உனக்குக் கலியாணமானபிறகு வரும் மனைவியின் கைகளில் இவற்றை அணிவித்து என் ஆசீர்வாதத்தைத் தெரிவி" என்றாள்.

விஹாரி அவ்வளையல்களைப் பக்தியுடன் கண்களில் ஒற்றிக்கொண்டான். கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருக, அவன் சட்டென்று வெளியில் எழுந்துபோய்விட்டான்.

விடை பெற்றுக்கொள்ளும் சமயம் அவனிடம் அன்னபூரணி வந்து, "அப்பா விஹாரி! என் மஹேந்திரனையும் ஆசாவையும் மறக்காதே" என்றாள்.

பிறகு அவள் ராஜலக்ஷ்மியின் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்து, "இதில் என் சொத்து முழுவதும் மஹேந்திரன் பெயருக்கு உயில் எழுதி வைத்துவிட்டேன். நான் ஜீவித்திருக்கும் வரை எனக்கு மாதம் பதினைந்துரூபாய் மாத்திரம் அனுப்பினுயானல் போதுமானது" என்று சொல்லி அவளை நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு அன்னபூரணி காசிக்குப் பிரயாணமானுள்.

---

## எட்டாம் அத்தியாயம்

இது என்ன! முதலில் மாமியார், பிறகு சித்தி, இப்படி ஒவ்வொருவராய் வீட்டை விட்டுப் போய்விட்டனர். மஹேந்திரனுக்கோ இவர்கள் போனதில் சற்றும் கவலையில்லை. சந்தோஷமாகவே இருக்கிறுன். அடுத்த முறை தன்னுடையதுதானே என்னவோ? வெறிச்சென்று பாழடைந்து காணப்படும் இவ்வீட்டில் புதுமணம் புரிந்த தம்பதிகளின் வாழ்க்கை என்னதான் அன்புமயமாயிருந்த போதிலும் அது பயத்தையும் திகிலையும் உண்டு பண்ணுவதாக ஆசாவுக்குத் தோன்றியது.

உலகில் கடமையும் அன்பும் ஒன்று சேரும்போதுதான் அவ்வன்பு வேரூன்றி நிற்கும். கடமை என்னும் செடியிலிருந்து அன்பு என்னும் பூவைப் பறித்துவிட்டால், அது இரண்டொருநாள் வேண்டுமானுல் தனது மணத்தையும் நிறத்தையும் இழவாதிருக்கும்; எப்பொழுதும் அப்படியே இருக்க முடியாது. சிறுகச் சிறுக வாடித்தான் போகும். ஆசாவுக்குத் தனது காதல் வாழ்க்கையும் அவ்வாறே தோற்றியது. சதா ஏற்பட்ட சேர்க்கையினுல் சற்று அலுப்பு உண்டாயிற்று. கடமையினின்றும் வேருக்கப்பட்ட காதல் வேரற்ற செடிபோல் ஸ்திரமற்றுக் காணப்பட்டது.

மஹேந்திரனே வீட்டில் யாருமில்லாத இச்சமயத்தைப் பூரணமாய்ப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினுன். புதிய காதல் வாழ்க்கையின் பூரண இன்பரஸத்தையும் முடிந்தமட்டில் ஒரேசமயத்தில் அருந்திக் களித்திட அவன் இச்சைகொண்டான். ஆசாவின் திகிலை நீக்க அவன் அவளிடம், "ஆசா, ஏன் இப்படி ஒருமாதிரியாக இருக்கிறுய்? வீட்டில் இருந்தவர்கள் எல்லோரும் போய் விட்டால்தான் என்ன? நீ எதற்காக வருந்தவேண்டும்? நம்மிருவருடைய அன்பைக் காட்டிலுமா இது பெரிது? நம் காதலில் பிரும்மாண்டமும் அடங்கியில்லையா?" என்று தேற்றினுன்.

ஆசாவின் மனம் என்னவோ சாந்தி அடையவில்லை. வீட்டை விட்டு ஒவ்வொருவராய் வெளியேறியது அவளுக்குக் கலக்கத்தையே உண்டுபண்ணியது. தங்கள் காதல் வாழ்க்கையில் எங்

கேயோ குறை அவசியம் இருக்கவேண்டும், இல்லாவிடில் இப்படி நேரிடாதென்று அவள் நினைத்தாள். அக் குறையைக் கண்டு பிடித்து நீக்கும் வகை அவளுக்குத் தெரியவில்லை. சந்தோஷமா யிருக்க எவ்வளவோ முயன்றும் அவளால் முடியவில்லை.

வீட்டிலோ ஒரு வேலையும் சரியாய் நடக்கவில்லை. வேலையாட் கள் எதையும் முன்போல் சரியாய்க் கவனிப்பதில்லை. ஒரு நாள் வேலைக்காரி தனக்கு உடம்பு சுகமில்லை யென்று தெரிவித்துவிட்டு வீட்டிலேயே இருந்துவிடுவாள். சமையற்காரன் புகையிலையும் கஞ்சாவும் போட்டுக்கொண்டு மயங்கி ஒருபுறம் படுத்துக் கிடந் தான். மறுநாள் வீட்டிலேயே அவனைக்காணோம். "நல்லதாயிற்று; வேடிக்கைதான்! நீயும் நானும் சேர்ந்து சமைப்போம் வா!" என்று மஹேந்திரன் ஆசாவைப் பார்த்துக் கூறினான். அவன் வண்டியி லேறிக்கொண்டு சமையலுக்குக் கறிகாய் வாங்கிவரப் புதியகடை வீதிக்குப் போனான். எதை வாங்குவது, எவ்வளவு வாங்கவேண்டு மென்பதே அவனுக்குப் புரியவில்லை. வேண்டும்வேண்டாதது எல் லாவற்றையும் கூடை நிறைய வாங்கி நிரப்பிக்கொண்டு குதூகல மாய் வீடுவந்து சேர்ந்தான். கொண்டுவந்தவற்றை என்ன செய்வ தென்று ஆசா அறியாள். இருவரும் சேர்ந்து சமையல் ஆராய்ச்சி செய்வதற்குள் மூன்றுமணி ஆகிவிட்டது. என்றும் காணாத விசித் திரவிதமாய்ப் பலவித ருசியுடன் கூடிய பதார்த்தங்களைப் பார்க்கும் போது மஹேந்திரனுக்குத் தமாஷாக இருந்தது. ஆனால் ஆசா வுக்கு அவ்விதமாகத் தோன்றவில்லை; தனது அறியாமையை நினைக்கும்போது வெட்கமும் துக்கமும் எழுந்து ஒருங்கே அவளை வதைத்தன.

வீட்டில் சாமான்கள் மூலைக்கொன்றாய்ச் சிதறி அலங்கோல மாய்க் கிடந்தன. மஹேந்திரனின் வைத்திய ஆயுதங்கள் கறிகாய் நறுக்க உதவின! பிறகு அவை குப்பையுடன் மூலையில் அஞ்ஞாத வாசம் செய்யலாயின. அவனது வைத்தியப் புத்தகங்கள் அடுப்புத் தீயை விசிறப் பயன்படுத்தப்பட்டுக் கடைசியில் சாம்பற் குவியலில் இளைப்பாறின. வீட்டில் எந்தச் சாமான் வேண்டுமானாலும், தேடி னாலும் அகப்படாத நிலையிலிருந்தது. இவ்வளவு சீரான குடும்ப நிர்வாகத்தைக் கண்டு மஹேந்திரன் ஆனந்தக் கூத்தாடினான். இவ்வித அமர்க்களத்தினிடையே அழுவதா சிரிப்பதா என்று தெரியாமல் ஆசா கலவரப்பட்டாள்.

பலத்த மழையானது பெய்து கல்கத்தாவின் வானத்தை ளாவிய கட்டிடங்களின் மேலுள்ள தூசியையெல்லாம் போக்கி நன்றாகச் சுத்தம் செய்துவிட்டது. அன்று இரவு நிலவொளியில் அவை பளிச்சென்று பிரகாசித்தன. வீட்டைச் சுற்றிய சிறு

தோட்டத்தில் பூத்து நனைந்த மகிழ மலர்களைப் பறித்துக்கொண்டு வந்து ஆசா மாடி வராந்தாவில் உட்கார்ந்து மாலை கட்டிக்கொண்டிருந்தாள். மஹேந்திரனும் அங்கு இருந்தான். அவள் பேசாது மாலை கட்டிக்கொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டே எவ்வளவு நேரந்தான் பொறுத்திருப்பான்! அவள் தொடுத்துக்கொண்டிருந்த மாலையை நடுவில் பிடுங்கி அவளை வலுவில் சண்டைக்கு இழுத்தான். இப்படி அகாரணமாய்த் தன்னைத் தொந்தரவு படுத்து



வதற்காகக் கோபித்துக்கொண்டு ஏதோ சொல்ல வாய்திறக்குமுன், அவன் அவள் வாயைப் பொத்திக்கொண்டு பேசமாட்டாமற் செய்துவிட்டான்.

இச்சமயம் அண்டை வீட்டார் வளர்க்கும் கிளி, "ராம ராம" என்று பேசும் சத்தம் கேட்டது. பக்கத்து வீட்டுக் கிளி பேசும் சமயமெல்லாம் இவர்கள் வீட்டுக் கிளியும் கூடவே கத்தும். இன்றோ வழக்கத்திற்கு விரோதமாக அக்கிளியின் சப்தத்தையே

காணேம். தம்பதிகள் இருவரும் மேலே தொங்கும் கூண்டைத் திரும்பிப் பார்த்தனர்.

ஆசா: (கலவரத்துடன்) இன்று கிளிக்கு என்ன வந்து விட்டது?

மஹேந்: உன் குரலுக்கெதிரில் தன் குரலைக் காட்ட அதற்கு வெட்கம் போலும்!

ஆசா நிமிர்ந்து, "வேடிக்கையில்லை இது; சற்று எழுந்திருந்து அது என்னவாயிற்று என்று பாருங்களேன்?" என்ருள்.

அவன் கூண்டை இறக்கிப் பார்த்தபோதோ, கிளி அதற்குள் இறந்துகிடந்தது; அன்னபூரணி வீட்டை விட்டுப் போனதும் வேலையாட்களும் வேலைக்கு வரவில்லை. கிளியைக் கவனிப்பார் யாருமில்லை.

தயை, துக்கம், கவலை இவற்ருல் ஆசாவின் முகம் மலினமடைந்தது. அவளால் மேலே மாலை தொடுக்க முடியவில்லை. அதை அப்படியே கீழே நழுவவிட்டாள். மஹேந்திரனின் மனத்தையும் இது உறுத்தியதானுலும், தங்கள் சந்தோஷத்திற்கு எங்கே பாதகம் நேரிடுமோவென்று அஞ்சி, அவன் அதை வெளிக்குக் காட்டிக்கொள்ளவில்லை. அதைப் பற்றி வேடிக்கையாகப் பேசி ஆசாவை உற்சாகப்படுத்த முயன்ருன்; "ஆசா, அது தொலைந்தது நல்லதாயிற்று. நான் காலேஜுக்குப் போயிருக்கும் சமயமெல்லாம் அது கத்திக் கத்தி உன்னை விரகவேதனையில் ஆழ்த்தி வந்தது" என்று சொல்லி அன்புடன் அவளைத் தன்னருகில் இழுத்து இரு கைகளாலும் அணைத்துக் கொண்டான். அவள் அவன் பிடியிலிருந்து திமிறிக்கொண்டு, மடியில் பாக்கியிருந்த பூக்களையும் கீழே உதறிவிட்டுக் கோபத்துடன், "போதும் நமது லீலை! நீங்கள் இன்றேபோய் அம்மாவை முதலில் அழைத்து வாருங்கள்" என்ருள்.

(தொடரும்)



# அன்னையின் அன்பு

## தனிராம்ஜீ பிரேம்

[ஹிந்தியிலிருந்து ஸ்ரீமதி யோகநாயகி மொழிபெயர்த்தது.]

### 1

அந்தப் பெரிய மாளிகையில் சம்பகத்தின் புக்ககத்தார் - மாமியார், மைத்துனர், ஓர்ப்படிகள் - யாவரும் இருந்தபோதிலும் சம்பகம் என்னவோ, தான் ஏகாங்கியாயும் ஒதுக்கப்பட்ட பிராணியாயும் இருப்பதை அறிந்தாள். அவள், விவாகமான சில வருஷங்களுக்குள்ளேயே, புருஷனை இழந்தவள். குழந்தைகளும் இல்லை; அவள் ஏகாங்கியல்லாமல் எப்படி இருக்கமுடியும்! கணவனை இழந்தது முதல் உலகமே அவளுக்கு ஸ்மசானமாயிருந்தது. நல்ல வஸ்திரம், சாப்பாடு, பூஷணம் ஒன்றும் இல்லை. எப்பொழுதும் வேலை. அதிகாலை முதல் அர்த்தராத்திரிவரையில், இயந்திரம் மாதிரி வேலையில் ஈடுபட்டிருப்பாள். காலையில் எழுந்து வீடுகூட்டித் துணி துவைத்துப் பாத்திரங்கள் விளக்கி மூன்று தடவை சமையல் செய்வாள். எட்டு மணிக்கு ஆபீசுக்குப் போகிறவர்களுக்கும், பத்து மணிக்குப் பள்ளிக்கூடம் போகிறவர்களுக்கும், பன்னிரண்டு மணிக்குப் பள்ளிக்கூடம் போகிறவர்களுக்கும் சமையல் செய்து போடவேண்டும். மாலைவேளையிலும் இப்படியே. சில சமயங்களில் நடுப்பகலில் சிறிது ஓய்வு கிடைக்கும். அப்போது தாழ்வாரத்தில் ஒருபக்கம் உட்கார்ந்து தன் வாழ்நாளைப்பற்றிச் சிந்திப்பாள். அப்போதும் அவளுடைய சாந்தியைக் குலைக்க ஓர்ப்படி, நாத்தனார்கள் முதலியோர் அவ்விடம் வந்து உட்கார்ந்து விடுவார்கள். அவர்களுக்குச் சம்பகத்தினுடைய நிலைமை பரிகாசமாயும் ஆனந்தமாயும் இருந்தது. சம்பகத்தின் துக்கம் நிறைந்த பெருமூச்சு அவர்களுக்குக் குதூகலமாய் இருந்தது. மாமியாருடைய பரிவு அவர்களுக்கு இருந்தபடியால் அவர்களை ஒன்றும் சொல்ல முடியவில்லை.

ஒரு நாள் சம்பகம் அவர்களுடைய பரிகாசத்தைச் சகிக்க முடியாமல் நாத்தனாரிடம், "அக்கா! நான் எத்தனை துக்கத்தில் ஆழ்ந்து கிடக்கிறேன்! என்னை நீங்கள் பரிகாசம் செய்வது அழகா?" என்று சொல்லிவிட்டாள். உடனே மாமியார் வேட்டைநாய் மாதிரியாகக் கிளம்பிவிட்டாள்; நாத்தனாரும் கூட ஒத்துப்பாட ஆரம்பித்துவிட்டாள்; "எண்டி! சாப்பாட்டில் குறைவா? உடுப்பதில் குறைவா? துக்கப்படுகிறாளாம்! நன்றாய்ச் சொன்னாய்? என்ன துக்கம்! போன ஜன்மத்தில் சண்டாளத்தனம் செய்திருக்கிறாய்; அனுபவிக்கிறாய்! பிறத்தியாரைப் பார்த்துப் பொறாமைப்பட்டு என்ன செய்கிறது? கடவுள் உன் தலையில் எழுதியிருக்கிறதற்கு யார் என்ன செய்கிறது?" என்று சரமாரியாய் இடித்துரைத்தார்கள்.

சம்பகம் அதுமுதல் யாருடனும் பேசுவதை விடுத்தாள். புருஷனை எவ்வாறு துர்ப்பாக்கியத்தால் இழந்து சகிக்கிறளோ, அம்மாதிரி, இவைகளை யும் சகிக்க வேண்டியதுதான் என்று பொறுமையோடு இருந்தாள். வீட்டை விட்டு ஓர் அடி எடுத்து வைக்கக்கூட ஸ்வாதீனமில்லாது சிறைச்சாலைக் கைதிபோல் நாளைக் கடத்தினுள்.

## 2

ஆவணி மாதத்தில் ஒரு நாள் மாலை. ஆடவர்கள் வெளியே உலாவச் சென்றிருந்தனர். மாமியார் பக்கத்துவீட்டுக்கு வம்பளக்கப் போயிருந்தாள். ஓர்ப்படிகள் தோட்டத்தில் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தார்கள். சம்பகம் தனியே வீட்டில் மாவு அரைத்துக் கொண்டிருந்தாள். தோட்டத்திலிருந்து மற்றவர்கள் பாடும் உல்லாசப் பாட்டு, சம்பகத்தின் காதில் வந்து ஒலித்தது. அப்பாட்டைத் தன் வாயில் மெதுவாக முணு முணுத்துக் கொண்டாள். அவள் விசாலமான நேத்திரங்களிலிருந்து நீர்த்திவலைகள் வழிந்தன. பகவானே, அவள் எல்லா ஸ்திரீகளுடனும் கலந்து சுகிக்கும் பாக்கியம் பெற வில்லையா!—சம்பகம் சட்டென்று கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். யாராவது பார்த்துவிட்டால் என்ன செய்வது? அழுவதற்குக்கூட அவளுக்குச் சுதந்திரமில்லை போலும்! தினசரி அதே அழுகை; அதே காரியம்; அதே அவமானங்கள். பெருமூச்சுடன் நாளைக் கழித்துவந்தாள். அவளுக்காகப் பரிதாபப்படும் சிறு ஜீவன் கூட அவ்விடமில்லை.

சம்பகத்தின் நாத்தனர் ஒருத்திக்குச் சில மாதங்களுக்கு முன்புதான் விவாகமாகியிருந்தது. விவாகத்திற்குப் பிறகு முதல்தடவையாக இப்பொழுது தான் மாப்பிள்ளை மாமியார் வீட்டிற்கு வந்தார். மாப்பிள்ளையின் வருகைக் காகப் பலமான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அவற்றின் சுமை சம்பகத்தின் தலையில் வீழ்ந்தது. குடும்பத்தின் பொறுப்பான ஸ்திரீ என்ற ஹோதாவில் அவள் சேவைசெய்ய உத்தரவிடப்படவில்லை; வீட்டின் வேலைக்காரிபோல வே மாப்பிள்ளைக்குப் பணி செய்ய ஆக்ஞை இடப்பட்டிருந்தாள். மாப் பிள்ளை சிறிது சிடுசிடுப்பான சுபாவமுடையவரா யிருந்தார். வரும்பொழுதே தம் தலைவலியின் பெருமையைக் காண்பித்தார். மாப்பிள்ளையின் தலைவலிக் காக வருந்தி, அவருக்குப் படுக்கை போட்டுத் தலையை அழுத்தச் சம்பகத் திற்கு உத்தரவிட்டாள் மாமியார்.

சம்பகம் என்றும் இம்மாதிரியான சேவை செய்ததில்லையாதலால் மிகவும் சங்கடப்பட்டாள். பரபுருஷனுக்குப் பணிவிடை செய்யாதவளாகிய அவள் நடுக்கத்துடனே மாமியார் உத்தரவை மீறமுடியாமல், மாப்பிள்ளை யின் அறைக்குச்சென்று அவர் தலையைப் பிடிக்கஆரம்பித்தாள். மாப்பிள்ளை பாபு அவளை ஒரு வேலைக்காரி என்று நினைத்து, "நௌகராணி! (வேலைக் காரி) கொஞ்சம் காலையும் பிடி" என்ருர்.

சம்பகம் தான் மாப்பிள்ளையின் முன்னிலையில் ஒரு வேலைக்காரியாக இருப்பதை அறிந்தாள். வேலைக்காரியின் தொழில்செய்வது அவளுக்கு இழி வாகத் தோன்றவில்லை. பரபுருஷனுக்குப் பணி செய்வதுதான் அவளுடைய மனதைப் புண் படுத்தியது. பாபுவின் கால்களைப் பிடித்துக்கொண்டே

நெஞ்சம் கரைந்தாள். அவளுடைய கண்களிலிருந்து அவளை அறியாமல் இரண்டு சொட்டுக் கண்ணீர் மாப்பிள்ளையின் காலில் வீழ்ந்தது.

மாப்பிள்ளை திடுக்கிட்டு, "இது என்ன ?" என்று கூவினர். சம்பகம் மௌனமாக இருந்தாள். "நௌகராணி!" என்று அவர் கூப்பிட்டார். சம்பகம் புடைவைத்தலைப்பால் அவர் காலில் வீழ்ந்த கண்ணீரைத் துடைத்தாளேயன்றிப் பதில் பேசவில்லை. மாப்பிள்ளை மறுபடியும், "நௌகராணி!" என்று கூப்பிட்டார். "ஏன்?" என்று ஈனஸ்வரத்தில் அழுகை கலந்த குரலில் பதில் வந்தது. அந்தக் குரல் ஒரு வேலைக்காரியினுடைய குரலாயில்லை; அவளுடைய கண்ணீரும் வேலைக்காரியினுடைய கண்ணீராயில்லை.

பாபு எழுந்து சம்பகத்தைப் பார்த்தார். முட்டாக்கில் மறைந்து இருந்த அவளுடைய மதிமுகத்திலிருந்து கண்ணீர் பெருகுவதைக் கண்டார்; "நீ வேலைக்காரியல்லவா ?" என்றார்.

"என்னைத் தங்களுக்குத் தெரியாதா?" என்று பதில் சொல்லும்போது மறுபடி கண்ணீர்த்துளிகள் மாப்பிள்ளையின் காலில் வீழ்ந்தன.

"இல்லை; என் விவாக சமயத்தில் உன்னைப் பார்த்த ஞாபகம் இல்லை. நீ யார்?" என்றார் மாப்பிள்ளை. சம்பகம், "நான் இந்த வீட்டின் வேலைக்காரி" என்றாள்.

"இல்லை; இருக்க முடியாது."

"ஏன் முடியாது?"

"உன் முகத்தோற்றத்திலிருந்து நீ வேலைக்காரியாய் இருக்கமுடியாது என்று நினைக்கிறேன்."

"பின் நான் யார் என்று உங்களுக்குத் தெரியுமா?"

"நீயா? ஒரு குடும்பஸ்திரீயாக இருக்கலாம்!"

"சரி, பாபு! வார்த்தையாடினது போதும். காலைப் பிடிக்கிறேன். மாமியார் பார்த்தாரானல்—"

"மாமியாரா? யாருக்கு? யாருடைய—?"

"இல்லை, ஞாபகப் பிசகு. என் வேலையைச் செய்ய வேண்டியது கடமை" என்று தன் ஞாபகப் பிசகான வார்த்தையைத் திருப்பிக்கொண்டு அவர் காலைப் பிடிக்கலானள் சம்பகம்.

பாபு தம் காலை அவளிடமிருந்து விடுவித்துக்கொண்டு, "நீ என் காலைப் பிடிக்கவேண்டாம்!" என்றார்.

"ஏன், பாபு?" என்றாள் சம்பகம்.

"அது என்னுடைய இஷ்டம்."

"எனக்குத் தண்டனை கிடைக்குமே!"

"உனக்குத் தண்டனை யார் அளிப்பது?"

"உங்களுக்கு இன்னமும் தெரியவில்லையா?"

"ஆம்! தெரிந்து விட்டது. நீ என் மைத்துனன் மனைவியல்லவா?"

"பாபு! நீங்கள் என் விஷயத்தில் பிரவேசிக்காதீர்கள். தாங்கள் நாலு நாள் தமாஷாய் இருந்துவிட்டுப் போக வந்திருக்கிறீர்கள். நான் என் ஆயுள்

முழுவதும் இங்கே இருக்க வேண்டியவள். என்கடன் பணி செய்து கிடப் பதே" என்றாள்.

"இது கடனு! உன் விஷயங்களை அதிகமாகக்கேட்டிருக்கிறேன். ஆனால் உன்னைப் பார்த்ததில்லை" என்றார். "பாபு, என்மேல் தாங்கள் கருணை காட்டு கிறீர்கள்: ஏனோ எனக்குத் தெரியாது!" என்றாள் சம்பகம்.

"உன்னுடைய துக்கத்தை என்னுடையதாகப் பாவிக்கிறேன்."

இதற்குள்ளாக மாமியார் சம்பகத்தைக் காரியமாகக் கூப்பிட்டாள். சம்பகம் போகும்பொழுது பாபுவை நன்றியறிதல் மிகுந்த பார்வையுடன் நோக்கி, "பாபு! தாங்கள் ரொம்ப தயாளு" என்றாள்.

"நீ தயைக்குப் பாத்திரமானவள்" என்று பாபு பதிலளித்தார்.

சம்பகம் மனக்கிளர்ச்சியுடன் வேலைக்குப் போய்விட்டாள். அன்று அவளுடைய மனத்தில் பெரிய மாறுதல் ஏற்பட்டிருந்தது. அவள் நேத்திரங் களிலும் ஹிருதயத்திலும் எல்லா அங்கங்களிலும் மாறுதல் ஏற்பட்டு விட்டது; ஸ்வாசத்தில் கூட மாறுதல். அவள் வாழ்வில் கருணைகாட் டும் ஒரு தனி மனிதன் அன்று அவளுக்குக் கிடைத்தான். அன்றுதான் ஆத் மார்த்த அன்பின் தரிசனம் கிடைத்தது. அவள் ஆத்மா விழித்துக் கொண் டது. இதைத்தான் அவளும் எதிர்பார்த்து விரும்பினாள். இந்த உல்லாசமய எண்ணத்தினால் அவளுக்கு அன்று உலகமே புதியதாய்த் தோன்றியது. அவள் வீட்டுப் புறக்கடையில் உட்கார்ந்து 'சஹ்ரு' என்று கூவிக்கொண் டிருந்த புள்ளினங்களின் ஒலி இன்று புதிய துவனியாய்த் தோன்றியது. சிறிய மாத்தின் புஷ்பங்களை முன்பு அவள் திரும்பிக்கூடப் பார்ப்பதில்லை. அவை இப்போது மலர்ந்து தன்னைப் பார்த்துப் புன்முறுவல் பூப்பவைபோல் காணப்பட்டன. ஆவணி மாதத்துக் கீதம் முன்பு விஷமாயிருந்தது; இப்போதோ இன்பமாயிருந்தது. அவள் நடமாடும்போது மெதுவாகப் பாடிக்கொண்டேயிருந்தாள்.

## 3

மாப்பிள்ளை பாபு நாலு தினங்கள் இருந்துவிட்டுப் புறப்பட்டுப் போய் விட்டார். ஆனால் தனியாய்ப் போகவில்லை. சம்பகத்தினிடமுள்ள சர்வத்தை யும் அபகரித்துக்கொண்டு போய்விட்டார். மனம், மானம் எல்லாம் அவருடன் சென்றன. சம்பகம் சிலதினங்களில் தன் நிலைமையை நன்றாக அறிந்து கொண்டாள். பாபுவின் சேர்க்கையால் இனி அவ்வீட்டில் தான் அதிக நாள் இருக்கமுடியாது என்பதை உணர்ந்தாள்.

ஒரு நாள் இரவில் அவள் வீட்டை விட்டுப் புறப்பட்டாள். அவளுக்குப் பாபுவிடத்தில் மிக்க காதல் இருந்தது. அவருடைய அன்பால் சற்று உன் னதஸ்திதியில் இருந்தாள். பாபு போகும் சமயத்தில் தைரியம் சொல்லி விட்டுப் போயிருந்தார்.

சம்பகம் பாபுவினுடைய கடிதத்தை ஆவலுடன் எதிர்பார்த்தாள். ஒரு தகவலும் அவளுக்குக் கிடைக்கவில்லை. ஆனாலும் அவளுக்கு அவர் காட்டிய ஆசைமொழிகளின் மீதுள்ள நம்பிக்கை குறையவில்லை.

ஒருவேளை அவர் கடிதம் போட்டு, அது வழியில் தவறியிருக்கலாம் என்று நினைத்து, மாப்பிள்ளை பாபுவின் வீட்டை அடைந்தாள். ஆனால் முன்பு ஆசையும் தயையும் காட்டிய பாபுவாயில்லை அவர். கடின சித்தமும் மோகம் தணிந்த கண்களும் உடையவராய்க் கொடூரமான பார்வையோடு பார்த்து, "சம்பகம், எங்கே வந்தாய்? சொல்!" என்றார்.

"உங்களை அடையத்தான் வந்தேன்" என்றாள் சம்பகம்.

"உன் நாத்தனார் மனது கலக்கமடையவா வந்தாய்?"

"இல்லை! அம்மாதிரியில்லை."

"இல்லாவிட்டால்?"

"பாபு! உங்கள் ஆசை வார்த்தைகளை நம்பினேன். குற்றம் யாருடையது முதலில்?"

"நீ தான் சொல்லேன்!"

சம்பகம் பிரமித்து நின்றாள்.

"சொல்லு சீக்கிரம்!" என்று பாபு அதிகாரத்துடன் கூறினார்.

"தெரியாது" என்றாள் சம்பகம்.

"தெரியாவிட்டால் என் கேட்கிறாய்?" என்றார் பாபு.

"என்ன! ஆனந்த ஸம்பூர்ணமான அந்த நாலு தினங்களையும் மறந்து விட்டீர்களா?"

"என்ன, நானா?"

"ஆம்! நீரே!"

"சீ! பொய் சொல்லுகிறாய்! பொய்க்கதை!"

"ஐயோ! நான் அபலை. கொஞ்சங்கூடச் சகிக்கமுடியாது. இம்மை மறுமை வாழ்வை உதறிவிட்டு வந்துவிட்டேன்; இப்போது என்ன செய்வேன்?"

"இங்கே என்ன இருக்கிறது? வீட்டுக்குப் போ!" என்றார் பாபு.

"எரிகிற அவ்வீட்டிற்குப் போகமாட்டேன்."

"செய்ததை அனுபவித்துத்தானே தீரவேண்டும்? போ!" என்று இரக்கமில்லாமல் கூவினார் பாபு.

"என், நான் மட்டுமோ?" என்றாள் சம்பகம்.

"ஆம்! நீ தான் அனுபவிக்கவேணும்" என்றார் அந்தக் கொடியவர்.

"ஆனால் நீ எங்கே போவாய்?" என்றாள் அந்த ஏழைப்பெண்.

"நானா! சமூகத்தில் கலந்து கொள்வேன்."

சம்பகம் கலக்கத்துடன் யோசிக்கலானாள். அவர் வார்த்தை உண்மைதான். அம்மாதிரி ஆடவர்களுக்குச் சமூகம் இடம் கொடுக்கிறது! அவளைப் போன்ற அபலைகட்கு ஸ்தானம் எது? அவள் குறைபாடுகளை யார் கேட்கிறார்கள்?

மாப்பிள்ளை பாபு அவளது முன்னிலையில்—கண்ணீர் பெருகப் பரிதாபக் கோலத்துடன் நிற்கும் அவ்வபலையின் முன்—ராக்ஷஸன் மாதிரி நிர்த்தயாளனாய் நின்றிருந்தார். சம்பகம் மௌனமாய் வாசலை நோக்கித் திரும்

பினள். பாபு தம் சட்டைப் பையிலிருந்து 250 ரூபாய் நோட்டுகள் எடுத்து, “இந்த ரூபாய்கள்தான் என்னல் கொடுக்க முடியும். இதைக்கொண்டு எப்படி யாவது பிழைத்துப் போ!” என்று நீட்டினர். சம்பகம் வெடுக்கென்று மாப் பிள்ளை பாபு கையிலிருந்து அவைகளைப் பிடுங்கி அவர் முகத்திலேயே வீசி எறிந்து, “ராக்ஷஸா! இந்த ரூபாய்களை உன்னுடைய ராக்ஷஸ தாபத்தைத் தணித்துக் கொள்ள வைத்துக்கொள். நான் என் பலத்தால் பிழைத்துக் கொள்கிறேன்” என்று சப்தமிட்டு அங்கிருந்து மறைந்தாள்.

## 4

சம்பகம் தன் வயிற்றிற்குள் இருக்கும் சிசுவுக்காகத்தான் ஆத்மஹத்தி செய்துகொள்ள முடியாதவளானுள். பிச்சைக்காரியைப்போல் அலேந்தாள். பசி தாகம், வெயில் குளிர் எல்லாவற்றையும் சகித்தாள். அவளது எண்ணம் ஈடேறும் நாள் வந்தது. அவள் கோரிக்கையின்படியே ஒரு தினம் ஆண் குழந்தை ஒன்று ஜனனமாயிற்று. அக்குழந்தை மிகவும் அழகாயும் சிவந்த மேனியுடையதாயும் இருந்தது. சிறிது குழந்தையைப் பார்ப்பாள். பின் தன் நிலேயை நினைத்து வருந்துவாள். குழந்தையைப் பார்த்ததும் அவள்கண்களில் ஓர் அபூர்வஜோதி உண்டாகியது. ஆனல் குழந்தைபிறக்காதவரையில் அதைப் பற்றிச் சிந்தனையே இல்லே. இப்போதோ அதற்காக அநேக காரியங்கள் செய்யவேண்டியிருக்கிறதே! அவைகளை எங்கிருந்து எப்படிச் செய்வாள்? அச்சிசுவுக்கு ஆகாரம், வஸ்திரம், படுக்கை இவைகளை எப்படிச் சம்பாதிப் பாள்? தன் புடைவையை ஒருபுறம் கிழித்துப் போட்டுச் சிறிது வைக்கோலே அடியிற் பரப்பி, மெத்தென அக்குழவியைப் படுக்கவைத்தாள். ஹா! குழந் தை பிறப்பதும் அதைப் பாதுகாப்பதும் எத்தனை கடினம்! தன்னைப் பற்றிச் சிந்திப்பாள். தன்னை இக்குழந்தைக்குத் தாய் என்று எப்படிச் சொல்கிறது? இக்குழந்தையின் எதிர்காலம் எப்படி நடக்கிறது? பிச்சைக்காரியின் மகன் என்று பிச்சை எடுத்து உண்பதா?

தாயின் பாசம் அவள் இருதயத்தில் கொழுந்துவிட்டு எரிந்தது. திடீ ரென்று அவள் குழந்தையை எடுத்துத் தோளில் சார்த்திக்கொண்டு போனுள். அவள் உள்ளம் அலேந்தது. ‘நான் பாபிதான். ஆனல் இது என் அரிய குழந்தை அல்லவா? உலகத்தோர் இதை உபேக்ஷை செய்ய என்ன நியாயம்? இதை என் மடிமீதிருந்து பிடுங்குவதற்கு என்ன அதிகாரம்? இல்லே, நானே என்மடிமீது தனியாய் வைத்து வளர்ப்பேன். இக்குழந்தை யில்லாமல் என் நேத்திரங்களுக்கு ஜோதி ஏது? இதில்லாமல் என் உயிர் உடலில் இருந்து என்ன பயன்?’ என்று பலவாறு அவள் உள்ளத்தில் எண்ணங்கள் ஊசலாடின.

இரண்டு மூன்று தினங்கள் குழந்தையைத் தன் உடம்பிலேயே அவள் அணைத்துக்கொண்டிருந்தாள். ஆனல் பச்சைக்குழந்தையை வைத்துக்கொள் வது மிகவும் கடினமான காரியமாயிருந்தது. குழந்தையின் எதிர்காலத்துக்கும் தாயின் பாசத்துக்கும் நடுவில் மனது கிடந்து போராடியது. குழந்தையின் நன்மைக்காகத் தன்பாசத்தை விடவேண்டியதா?—‘என்னசெய்வது?’ என்று கலங்கினள். முடிவில் குழந்தையை ஒரு நல்ல இடத்தில் சேர்ப்பதே

அதற்கு க்ஷேமம் என்று நிச்சயப்படுத்திக்கொண்டு அதைத் தோளில் அணைத்துக்கொண்டு பக்கத்திலுள்ள ஒரு நகரத்திற்குப் போய்ச் சேர்ந்தாள்.

அங்கே ஒரு தெருவில் சிலர் ஒரு யாகம் செய்துகொண்டிருந்தார்கள். சம்பகம் அங்கிருந்தவர்களை விசாரித்ததில் ஒரு தனவந்தனான சேட்ஜீக்குப் பிள்ளையில்லை யென்றும் அதற்காக யாகம் செய்வதாகவும் பதில் கிடைத்தது. சம்பகம் சற்றே யோசித்துவிட்டு, ஒரு புறமாய்ப் போய்விட்டாள்.

இராத்திரியின் முடிவு நெருங்கியது. கோழிகள் கூவத்தொடங்கின. சில ஸ்திரீகள் திரிகையில் அரைக்கும் சப்தமும் தயிர் கடையும் சப்தமும் கேட்டன. ஜன நடமாட்டம் அதிகமாக ஆரம்பிக்கவில்லை. சம்பகம் தன் புடைவைத்துணியால் குழந்தையை நன்றாகச் சுற்றி எடுத்துக்கொண்டு, சேட்ஜீயின் வீட்டுப் பக்கமாய்ச் சென்றாள். வீட்டின் வாயிலில் ஒருவரும் இல்லை. இராத்திரி யாகம் செய்த அலுப்பால் யாவரும் தூங்கிக்கொண்டிருந்தனர். சம்பகம் வாசல் திண்ணையில் ஒரு புறம் குழந்தையை வைத்தாள். குழந்தை சலனமற்று உறங்கிக் கொண்டிருந்தது. குழந்தையை ஆசைமிகுந்த பார்வையுடன் நோக்கினாள். அவள் நேத்திரங்களிலிருந்து கண்ணீர் தாரைதாரையாய் வழிந்தது. அவளுடைய குழந்தை சில மணி நேரத்தில் பிறத்தியாருடையவனாய்ப் போய்விடுவான். அவனுக்காக அவள் மகத்தான தியாகம் செய்ய வேண்டியவளாயிருந்தாள். அவனைப் ‘பிச்சைக்காரியின் மகன்’ என்று சொல்ல விரும்பாது அவன் சமூகத்தில் நல்ல பெயர்பெற்று விளங்கவேண்டுமென்று விரும்பினாள். சில நிமிஷம் வாத்ஸல்யத்தோடு, எண்ணங்கள் நிறைந்த பார்வையுடன் குழந்தையைப் பார்த்தாள். அதன் கன்னத்தில் தன் அன்பின் முத்திரையான முத்தத்தை ஈந்தாள். கண்ணீர் உகுத்துக்கொண்டே அவ்விடமிருந்து அகன்றாள் அவ்வேழைப்பெண்.

## 5

சம்பகத்தின் குழந்தை ஸேட்ஜீயின் வீட்டில் நல்ல போஷணையைப் பெற்று வளர்ந்து வந்தான். சேட்ஜீயும் அவர் பத்தினியும் அக்குழந்தையை யாகத்தின் பிரசாதமென்றே நினைத்தார்கள். குழந்தையின் க்ஷேமத்தைப் பற்றி ரொம்பக் கவலை எடுத்துக்கொண்டார்கள்.

சம்பகம் அடிக்கடி வந்து தூரத்திலிருந்து பார்த்துவிட்டுப் போவாள். குழந்தைக்கு ஒரு வயதாயிற்று. அந்நாளைத் திருநாளாகக் கொண்டாடினார்கள். அன்று சம்பகம் பிச்சையெடுத்த காசைக்கொண்டு சில விளையாட்டுப் பொருள்களும் தின்பண்டமும் வாங்கி, சேட்ஜீயின் வீட்டு வாசலில் வைத்து விட்டுப் போய்விட்டாள். இப்படியே ஒவ்வொரு வருஷமும் செய்துவந்தாள். சேட்ஜீயும் அவர் வீட்டு மனிதர்களும் இவ்வாறு யார் இவ்வஸ்துக்களைக் கொண்டுவந்து வைக்கிறாரென்று யோசித்தார்கள். ஆனால் தகவல் ஒன்றும் தெரியவில்லை.

குழந்தை கொஞ்சம் பெரியவனான பிறகு சேட்ஜீயின் வேலைக்காரன் அவனைச் சிறிய கைவண்டியில் வைத்துத் தோட்டத்திற்கு விளையாட அழைத்துப் போவான். சம்பகம் இதுவரை தூரத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்தாள்; விளையாட்டு வஸ்துக்களையும் தூரத்திலிருந்தே அனுப்பினாள். குழந்தை

பேசவும் சாப்பிடவும் விளையாடவும் தொடங்கிப் பெரியவனான பின்பு சம்பகத்திற்கு அவனைத் தன் மடிமேல் வைத்து விளையாடித் தின்பண்டம் கொடுக்கவேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று.

ஒருநாள் மிட்டாய் வாங்கிக்கொண்டு தோட்டத்திற்குச் சென்றாள். ஒரு மரத்தடியில் குழந்தை விளையாடிக் கொண்டிருந்தான். வேலைக்காரன் அருகில் இல்லை. சம்பகம் குழந்தையைப் பார்த்து, "குழந்தாய்!" என்று அன்பொழுகக் கூப்பிட்டாள். குழந்தையும் அவளை அறிந்தவன்போல் அருகில் வந்தான்.

"நீ ராஜா குழந்தையல்லவா?" என்றாள்.

"ஆமாம்" என்றது குழந்தை.

"உன் பேர் என்ன? அப்பா!"

"என் பேர் அர்ஜுன்."

"என்னைத் தெரியுமா உனக்கு?"

"தெரியாது" என்று கபடற்றுப் பதிலளித்தது குழந்தை.

ஆனால் சம்பகத்தின் இருதயத்தில் 'ஏதோ மூழ்கிப்போய்விட்டது!' என்று யாரோ கூறிய மாதிரி இருந்தது. அவள் குழந்தை அவளை அறிந்து கொள்ளவில்லை. விதியின் வலிமை என்னே!

"உனக்கு அம்மா இருக்கிறாளா?" என்று கேட்டாள் சம்பகம்.

"இருக்காளே!"

"அம்மா நல்லவளாயிருக்கிறாளா? உன்னைப் பிரியமாய்ப் பார்த்துக் கொள்கிறாளா?" என்று கேட்டாள்.

"உம்! பிரியமாயிருக்காளே!"

"சரி, அப்பா இருக்கிறாரா?"

"உம்!"

"இன்னும் யார் இருக்கிறார்கள்?"

"ஒத்தருமில்லையே!..."

"நான் நன்றாயிருக்கிறேனா! என் மடியில் உட்கார்ந்துகொள்கிறாயா?" என்று சம்பகம் ஆசை பொங்கக் கேட்டாள்.

"உம்!" என்றது குழந்தை.

கையை நீட்டிக் குழந்தையைத் தூக்கித் தன் மடிமேல் உட்கார்த்திக் கொண்டு உச்சி மோந்து முத்தமிட்டாள்; க்ஷணநேரம் தன்னை மறந்து ஆனந்தநிலையில் இருந்தாள்.

"அர்ஜுன்! என்மீது பிரியமாய் இருப்பாயா?"

"மாட்டேன்."

"என் அப்பா மாட்டாய்?"

"அம்மா கூடாது என்று சொல்லியிருக்காள்."

"சரி! நான் உன் அம்மாவாயிருந்தால் பிரியமாய் இருப்பாயா?"

"இருப்பேன்."

சம்பகம் மறுபடி உச்சி மோந்து முத்தமிட்டு மடியிலிருந்து மிட்டாய் களை எடுத்து, "அர்ஜுன், மிட்டாய் தின்பாயா?" என்றாள்.

"மாட்டேன்"

"ஏன் அப்பா?"

"அம்மா கூடாது என்று சொல்லியிருக்காள்."

"நான் அம்மாவானால் தின்பாயல்லவா?"

"ஆமாம், தின்பேன்."

சம்பகத்தின் இருதயம் அடித்துக்கொண்டது. அப்பிச்சைக்காரிக்கு இவ்வார்த்தைகள் மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தன. தாயின் பிரேமை அதிகரித்தது. ஒரு துண்டு மிட்டாயைக் கொடுத்தாள். அர்ஜுன் பதில் சொல்லாமல் தின்ன ஆரம்பித்தான். திடீரென்று அதட்டும் குரல் ஒன்று பின்புறத்திலிருந்து கேட்டது.

"என்ன செய்கிறாய்? அர்ஜுன்! மிட்டாய் தின்னாதே!" என்று சேட்ஜீ கத்தினார். சேட்ஜீயைப் பார்த்து அர்ஜுன் மிட்டாயை எறிந்துவிட்டான்.

அவரைப் பார்த்ததும் சம்பகம் அர்ஜுனை மடியிலிருந்து கீழேவிட்டு வணக்கமான குரலில், "பாபு ஸாஹேப்! நான்தான் மிட்டாய் கொடுத்தேன். குழந்தை மீது தப்பு ஒன்றுமில்லை" என்றாள்.

"நீ யார்?" என்று சேட்ஜீ கேட்டார்.

"ஒரு பிச்சைக்காரி."

"இங்கே என்ன செய்கிறாய்?"

"குழந்தையுடன் விளையாடிக் கொண்டிருந்தேன்."

"குழந்தையுடன் விளையாடிக்கொண்டிருந்தாயா? ஏதாவது திருட வந்திருப்பாய்!"

"இல்லை ஸாஹேப்! குழந்தையைப் பார்க்கப் பிரியமாயிருந்தது."

"சீ! பிச்சைக்காரிக்குக் குழந்தைப் பிரியமா? இது ஸ்வப்னம். இனி குழந்தை கிட்ட வராதே! அவனைத் தொட்டாயோ பத்திரம்!" என்றார்.

"இல்லை. தொடாமல் கண்ணால் பார்த்துப் போகிறேன்" என்றாள்.

"பேசாதே, போ! அதிகமாய்ப் பேசினால் விரட்டியடிப்பேன்" என்றார் சேட்ஜீ.

சம்பகம் ஒருபுறமாய்ப் போய்விட்டாள். அவள் போவதைத் துக்கத் துடன் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு அர்ஜுன் அழ ஆரம்பித்தான்.

"பிச்சைக்காரியோடுதான் விளையாடுவேன்" என்று பிடிவாதம் செய் தான். சேட்ஜீ அவன் வார்த்தையைச் சட்டை செய்யாமல் மிரட்டி வீட்டுக்கு அழைத்துப்போய்விட்டார்.

வீட்டுக்குப்போன இரண்டுமணி நேரத்திற்கெல்லாம் அர்ஜுனுக்குப் பலமான ஜ்வரம் வந்துவிட்டது. இரவெல்லாம் பிதற்றினான். அடிக்கடி "பிச்சைக்காரி" என்று கூப்பிட்டான். சேட்ஜீ மனைவியைப் பார்த்து, "அந்தப் பிச்சைக்காரி யார்?" என்று கேட்டார்.

“யாருக்குத் தெரியும் அவளை? இங்கே எப்போதாவது பார்த்திருப் பான்” என்றாள் சேட் பத்தினி.

“அர்ஜுன் ஏன் அவள்மேல் இத்தனை ஞாபகம் வைத்திருக்கிறான்? அவளைக் கூப்பிடலாமா?” என்று கேட்டார் சேட்ஜீ.

“பிச்சைக்காரியையா கூப்பிடுவது!”

“பின் என்ன செய்வது? குழந்தையின் இஷ்டத்தைப் பூர்த்திசெய்தால் தான் உடம்பு தேறும் என்று வைத்தியர் சொல்லிவிட்டாரே!” என்றார் சேட்ஜீ.

“குழந்தை காச்சல்வெறியில் உளறுகிறான். ஜுரம் தணிந்தால் எல்லாம் சரியாகிவிடும்” என்று சொன்னாள் சேட்பத்தினி.

ஆனால் குழந்தை வாய் ஓயாமல் பிச்சைக்காரியின் தியானமாகவே இருந் தான். அவன் உடம்பு மிகவும் மெலிந்துவிட்டது. குழந்தையின் மீதுள்ள பாசத்தால் பிச்சைக்காரியைத் தேட வேண்டியதாயிற்று. பிச்சைக்காரி பணத்திற்காக ஆசைப்பட்டுத் தம் வீட்டுக்கு வந்து குழந்தையைப் பார்ப் பாள் என்று சேட்ஜீ எண்ணினார். ஆனால் பிச்சைக்காரி, அர்ஜுன் உடம்பு சமாசாரத்தைச் சேட்ஜீ சொன்னவுடனேயே ஓடோடியும் அவருடன் வந்து விட்டாள். “அர்ஜுன்!” என்று சம்பகம் மெதுவாகக் கூப்பிட்டாள். குழந்தை கண்களைத் திறந்து, “பிச்சைக்காரி” என்று கூவி அவளைக் கட்டிக்கொண் டான். சம்பகமும் அவனை மார்புறத் தழுவிக்கொண்டு அழுதாள்.

## ௬

சம்பகத்தின் சேவையால் அர்ஜுன் உடம்பு ஸ்வஸ்தமாகிவிட்டது. சம்பகம் அவ்விடத்தைவிட்டுப் போக உத்தேசித்தாள். தாயின் பாசத்தால் ஒருவேளை அர்ஜுன் தன் மகன் என்பதை வெளியிட்டுவிட்டால் என்ன செய்வது என்று பயந்து அவள் அவ்விடத்தில் இருக்க விரும்பவில்லை. அவள் அதைமறந்து தூரப் போய்விட விரும்பினாள். ஆனால் சேட்ஜீ அவளைப் போகவிடவில்லை. அவள் ஒரு வேலைக்காரி மாதிரி அங்கு இருக்கவேண்டி நேர்ந்தது. எப்போதாவது அர்ஜுனுடன் சேட்பத்தினி கொஞ்சும்பொழுது சம்பகத்தின் மனம் சிறிது பொறாமையுற்றுத் துடிக்கும். சேட்பத்தினி ஸ்தா னத்தில் தான் இருந்து தன்னை அர்ஜுன் “அம்மா” என்று அழைக்கவில் லையே என்று ஏங்குவாள். ஆனால் அவள் தன் தைரியத்தாலும் குழந்தையின் க்ஷேமத்தைக் கோரியும் மனதை அடக்கிக்கொண்டு வந்தாள்.

ஒருநாள் இரவு சேட்ஜீயின் வீட்டில் திருடர்கள் புகுந்துவிட்டார்கள். அர்ஜுன் சம்பகத்தின் மேற்பார்வையில் ஓர் அறையில் இருந்தான். சேட்ஜீ சம்பகத்தினிடம் வந்து, “எஜமானியம்மாள் மூர்ச்சையாகிவிட் டாள். இந்தச் சமயத்தில் நீதான் அர்ஜுனைக் காப்பாற்றுவதில் கெட்டிக் காரத்தனத்தைக் காண்பிக்கவேண்டும். அரைமணி நேரம் அர்ஜுனையும் அவன் தாயையும் பாதுகாத்துக்கொள். நான் வெளியே போய் உதவிக்கு மனுஷர்களை அழைத்து வருகிறேன்” என்றார்.

"என் பிராணனைக் கொடுத்தாகிலும் காப்பாற்றுவேன். விசாரப்படாமல் போய்வாருங்கள்" என்றாள் சம்பகம்.

"இந்தச் சமயத்தில் அர்ஜுனை நீதான் தாய்போலப் பார்த்துக்கொள்ள வேண்டும்" என்றார் சேட்ஜீ.

"தாயைவிட அதிகமாகவே கவனிப்பேன். அவனுக்காக உயிரைத் தானம்கூடச் செய்வேன்" என்றாள். சேட்ஜீ போய்விட்டார்.

அர்ஜுனை ஓர் அறையில் வைத்துப் பூட்டித் திருடர்வரும் வழியை நோக்கி வாசற்படியில் உட்கார்ந்திருந்தாள் சம்பகம். திருடர்கள் வந்து சம்பகத்தைப் பார்த்து, "சேட்ஜீயின் குமாரன் எங்கே?" என்றார்கள்.

"அவனை என்ன செய்யப்போகிறீர்கள்?" என்று சம்பகம் கேட்டாள்.

"கொல்லப் போகிறோம்" என்றார்கள்.

"கொலையா!" என்று சம்பகம் திடுக்கிட்டாள்.

"ஆமாம்! அவன் சேட்ஜீயின் ஆஸ்திகளை அநுபவிக்கக்கூடாது. நாங்கள் திருடர்கள் இல்லை; சேட்ஜீயின் வாரிசுதார்கள். குமாரன் எங்கே சொல்" என்றார்கள்.

"எனக்குத் தெரியாது" என்றாள் சேட் பத்தினி.

"சொல்லாவிட்டால் தலையில் எண்ணெயைக் கொட்டி எரியவிடுவேன்" என்று திருடர்கள் பயமுறுத்தினார்கள்.

"என்னைக் கேட்காதே! அவளைக் கேள்" என்று சேட் பத்தினி சம்பகத்தைச் சுட்டிக் காட்டினாள். சம்பகத்துக்குச் சேட்பத்தினியின் மீதிருந்த இரக்கம் போய்விட்டது. அர்ஜுனுக்குத் தாயார் என்று உலகத்தார் எவளை மதிக்கிறார்களோ அந்தத் தாயாருக்குத் தன் உயிர் வெல்லமாய்ப் போய்விட்டது. சம்பகம் திருடர்களைப் பார்த்தாள். அவள் முகத்தில் பயங்கரமான ஜ்வாலை கிளம்பியது. முகம் பளபளவெனப் பிரகாசித்தது.

"எனக்குத் தெரியும். நான் சொல்லமாட்டேன்" என்றாள்.

திருடர்கள் தலைவன் யோசித்தான், 'ஒரு ஸ்திரீயிடம் தோல்வியடைவதா?' என்று. "சொல்வாயா! மாட்டாயா!" என்று அதட்டினான்.

"இல்லை. சாகும்வரையில் சொல்லமாட்டேன்" என்றாள் சம்பகம்.

திருடர்கள் தலைவன் சாட்டையால் ஓங்கி அடித்தான். ஆனாலும் அவள் அசையவில்லை. மறுபடி நாலு அடி கொடுத்தான். கற்சிலை மாதிரி நின்றிருந்தாள். அவள் சரீரத்திலிருந்து ரத்தம் பெருக ஆரம்பித்தது. அவள் முகம் வெளிறடைந்தது. கீழே விழப்போகும் சமயம் கீழிருந்து துப்பாக்கி சுடும் சப்தம் கேட்டது. சேட்ஜீ உதவி ஆட்களுடன் வந்ததைக் கண்ட திருடர்கள் ஓடிவிட்டார்கள்.

சேட்ஜீ சம்பகம் கீழே விழுந்ததைப் பார்த்தார். அவள் தலையை அசைத்துப் பார்த்தார். "அர்ஜுன்!" என்று அவள் வாயிலிருந்து வார்த்தை புறப்பட்டது. சேட்பத்தினி வந்து சம்பகத்தினுடைய கையைப் பிடித்துக்கொண்டு, "பிச்சைக்காரி! அர்ஜுனிடத்தில் இத்தனை பிரேமை என்?" என்றாள்.

"அதை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது" என்றாள் சம்பகம்.

"என் மனதில் ஓர் எண்ணம் இருக்கிறது. அதைக் கேட்கிறாயா?" என்றாள் சேட்பத்தினி. "என்ன?" என்றாள் சம்பகம். "நீ அவனுக்குத் தாய்தானே?" என்றாள் சேட்பத்தினி.

சம்பகத்தின் இருதயத்தில் ஒரு போராட்டம் ஆரம்பித்தது. அவள் அர்ஜுனைத் தன் புத்திரனென்று, தன் மரணசமயத்தில் சொன்னால் திருப்தியோடு இறப்பாள். ஆனால் அர்ஜுனுக்கு அது கெடுதல் என்று நினைத்து, "அம்மா! அவன் என் புத்திரன் இல்லை" என்றாள்.

"பின் ஏன் இத்தனை அன்பு?" என்றாள் சேட் பத்தினி.

"எனக்கு இவன் மாதிரியே ஒரு பையன் இருந்தான். இதே முகம்; இதே பேச்சு" என்றாள்.

"அவனுக்கு என்ன ஆயிற்று?"

"அவன் போய்விட்டான்."

"எங்கே? இறந்தா...?"

"இல்லை மறைந்துபோய்விட்டான். தெரியாத தேசத்தில்—அறியாத திசையில்" என்று பெருமூச்செறிந்தாள் சம்பகம்.

"ஐயோ, அபாக்கியவதி!" என்று சேட்பத்தினி தன் கண்ணீரையும் அவள் கண்ணீரையும் துடைத்தாள்.

இதற்குள் அர்ஜுன் அவ்விடம் வந்து சேர்ந்தான். அவன் இப்போது சிறிது அறிவடைந்தவனாய் இருந்தான். சம்பகத்தின் தலையை மடியில் வைத்துக்கொண்டான். அர்ஜுன், "நீ சௌக்கியமாய் இருக்கிறாயா?" என்றான்.

"உனக்காக, உன்னை ரக்ஷிக்கத்தான் இறந்துபோகிறேன்" என்றாள் சம்பகம்.

"நீ சாகக்கூடாது, பிச்சைக்காரி!" என்றான் அவன்.

"நான் இனி ஜீவிக்க முடியாதே!"

"இதெல்லாம் எனக்காகவா? என்னால்தான் நீ செத்துப் போகிறாயா?" என்று கேட்டான் அர்ஜுன்.

சம்பகம் தலையசைத்தாள். "மறுபடி எப்போது வருவாய்?" என்றான் அறியாப் பாலகன்.

"வரமாட்டேன் அர்ஜுன்! என்னை ஞாபகம் வைத்துக் கொள்வாயா?"

"நான் அழுதுகொண்டே இருப்பேன்."

"நான் சந்தோஷமாய் இறப்பேன்."

"இன்னும் ஏதாவது வேண்டுமா, பிச்சைக்காரி?"

"நீ செய்வாயா? அர்ஜுன்!"

"ஒருதடவை யில்லை; அநேகம் தடவை செய்வேன்."

"ஒருதடவை, என் வாழ்நாளின் கடைசித் தடவையாக என்னை 'அம்மா' என்று கூப்பிடுகிறாயா?" என்று ஹீனஸ்வரத்தில் கேட்டாள் சம்பா.

அர்ஜுன் கண்களிலிருந்து அவனை அறியாமல் நீர் பெருகியது. அவன் சம்பகத்தைச் சேர்த்துஅணைத்துக்கொண்டு, "அம்மா" என்று கத்தினான். சம்பகமும் அவன்தலையைப் பரிவுடன் தடவி, "என்மகனே!" என்று மனங் குளிரக் கத்தினாள். அன்னையென்றும் குமாரனென்றும் பிறர் அறியாத நிலையில் அவர்கள் சேர்ந்திருந்த அப்போது, அங்கிருந்தவர்களுடைய கண் களிலிருந்து நீர் பெருகியது.



# கட்டாத வீடு

ரா. ஸ்ரீ. தேசிகன், எம். ஏ.

---

என் தகப்பனைப் பெற்ற பாட்டிக்கு வயது எழுபத்தைந்து. முதுகு கூனல். தலை வெள்ளிநரை. எலும்பெல்லாம் தெரிகின்றன. முகத்தில் ஆழமான குழிகள், வரிகள். ஒவ்வொரு வரியிலும் ஓர் அனுபவம்; ஒவ்வொரு சுருக்கத்திலும் ஒரு சோகம். எவ்வளவோ கஷ்ட நிஷ்டூரங்களில் அடிபட்டவள் என் பாட்டி. உடன் பிறந்தவர்கள் இலைகள் போல் உதிர்ந்த துக்கம், பிள்ளையை இழந்த துக்கம், என் மனைவி இறந்த துக்கம், என் பிள்ளைகள் சிலரின் அகால மரண துக்கம்; இன்னும் உலகிலுள்ள துக்கங்கள்யாவும் அலை அலையாக இடைவிடாது அவள்மேல் வந்து மோதின. சூழ்ந்துள்ள ஒரு துக்கக்கடலில் ஒரு பெரும் பாறைபோல் அவள் நின்றாள்.

என் பாட்டி பல புயல்களுக்கு எதிர் நின்ற ஒரு வைரம் பாய்ந்த மரம். அதுவெளியிலே காய்ந்து, உலர்ந்திருக்கிறது; ஆனால் உள்ளே அதன்பசுமை மாறவில்லை. அநேக ஆசைகள், அநேக எண்ணங்கள், அநேக கனவுகள் அவள் மனக்கண்ணிற்கு முன் மிதந்து வரும்.

அவளிடத்தில் நான் அடிக்கடி, "பாட்டி, உனக்கு அநேக ஆசைகள்; 'பிள்ளைக்குக் கலியாணம் பண்ணிப் பார்த்தால்தான் என் மனத்தாங்கல் தீரும்' என்பாய். கலியாணமானால், 'அந்தப் பெண்ணின் வயிற்றில் ஒரு குழந்தைபிறந்து, பார்த்துக் கண் மூடினால்தான் நெஞ்சு வேகும்' என்று சொல்வாய். இப்படி ஆசைக்கு மேல் ஆசை வளர்ந்துகொண்டே போகும். நீ வீணாய் ஆசைப்படுவதில் என்ன லாபம்? உலகத்தில் இருக்க இருக்கக் கஷ்டங்களைத் தவிர வேறு என்ன அனுபவிக்கப் போகிறாய்?" என்று கேட்பேன்.

அவள் என்ன சொன்னாலும் கவனிக்கமாட்டாள். "நீ சொல்லுகிறதெல்லாம் சரியே. அஞ்ஞானம் கேட்க மாட்டேங்கிறதே அப்பா, சுப்பு" என்று சிரித்துக்கொண்டு பதிலுரைப்பாள்.

ஒருநாள் காலையில், என் அறையில் ஏதோ வாசித்துக்கொண்டிருந்தேன். என் பாட்டி உள்ளே வரலாமா, வேண்டாமா என்று யோசித்துக்கொண்டே வெளியிலே தடியை ஊன்றிக்கொண்டு நின்றாள்.

"பாட்டி, என்ன சமாசாரம்?" என்று கேட்டேன்.

"இல்லையப்பா, எனக்கென்ன சமாசாரம் வெச்சிருக்கு? நீங்களெல்லாம் சரியா இருக்கச்சே கண்ணை மூடினால் அது எனக்குப் போரும். ஆனால் எனக்கொரு கொறை. கொழந்தைக்குத்தான் இந்த வருஷம் கலியாணம் பண்ணினையே; ஏதோ பணங்காசு வந்திருக்கே. சின்னஞ் சிறுசா ஒருவீட்டைவாங்கி, கிருஹப்பிரவேசம் பண்ணி, உன் நாட்டுப்பெண் கையாலே ஒரு விளக்கேற்றும்படி செய்யப்படாதா? நமக்குன்னு ஒரு 'ஆம்' இருந்தால்தான் தேவலை. எத்தனை நாள் ஒண்டிக் குடி இருக்கிறது. நம்மாத்தில் பசங்களுக்கு விளையாட்டுப்புத்தி அதிகம். அங்கே தாவறது, இங்கே குதிக்கறது. வீட்டுக்காரர்கூட, 'சுவரிலே கரியைத் தீத்திப்பிட்டான்கள்', 'தொட்டி ஜலத்தைக் கெடுத்தூட்டான்கள்' என்று ஓயாமல் முணு முணுக்கறா. மனையெல்லாம் மலிவாகக் கிடைக்கிறதாமே. நீ ஒண்ணு வாங்கிப்போடேன். அவதான் இருந்து பார்க்கக் குடுத்துவைக்கல்லே" என்று சொல்லிக்கொண்டே மளமளவென்று கண்ணீர்சொரிந்தாள்.

"அதற்கென்ன பாட்டி, ஒரு வீடு வாங்கிக் கிருஹப்பிரவேசம் பண்ணிவிட்டால் போச்சு" என்றேன்.

அவள் சுருங்கிய முகத்தில் ஒரு சிரிப்பு வந்தது. ஒரு மேகத்தினிடையே தோன்றுகின்ற ஒளிபோல் அது எனக்குப் பட்டது.

"அவள் இருந்து பார்க்கவில்லையே" என்று என் பாட்டி சொன்ன வார்த்தை என் மனைவியின் உருவத்தை என் அகக்கண் முன் கொணர்ந்தது. சரியான வீடுகள் கிடைக்காமல் நாங்கள் இருவரும் கஷ்டப்பட்ட நாட்கள் ஞாபகத்திற்கு வந்தன: இடமிருக்கும்; காற்றிராது. காற்றிருந்தால், ஏகாந்தமாய் மனதிலுள்ள அந்தரங்கங்களைப் பேச ஓர் அறை அகப்படாது. ஆனால் அவள் இருந்தவரையில் கஷ்டங்கள் கஷ்டங்களாகத் தோன்றவில்லை. அவளுடைய பொறுமையும் இன்சொல்லும் ஆயிரம் கவலைகளை விரட்டிவிடும். இப்பொழுது என் மனதில் என்றும் தூராத ஒரு பாழ். வாழ்வில் ஓர் அழகும் ஒரு சாரமும் இல்லை. அவள் போன பிறகு வீடென்ன, வாசலென்ன என்று நினைத்தேன். மனை வாங்குவதாக இருந்தால் என் பாட்டியைத் திருப்தி பண்ணுவதற்காகவே வாங்க வேண்டும்.

"வாங்கிவிட்டேன் ஒரு மனையை" என்று என் பாட்டியிடம் சொன்னதும் அவளுக்கிருந்த சந்தோஷத்திற்கு அளவேயில்லை. வீடெல்லாம் கட்டி முடிந்து கிருஹப்ரவேசம்கூடப் பண்ணிவிட்டதாகப் பூரிப்பாள்; தன் பேரனின் நாட்டுப் பெண் புதுப் புடவை

அணிந்து தன்னை நமஸ்காரம் செய்வதாகக்கூடக் கனவு கண்டிருப்பாள் என்பதில் சந்தேகமில்லை. அவ்வளவு ஆசை.

மனை வாங்கி மாதங்கள் இரண்டாயின. என் பக்கத்தில் பூமி வாங்கினவர்கள் மனை முகூர்த்தம் செய்து கட்டிடங்கள் கட்ட ஆரம்பித்து விட்டார்கள். நிலம் வாங்கினதுகூட எனக்கு மறந்து போய்விட்டது. அதைப்பற்றி ஏதாவது சிரத்தை இருந்தால் தானே ஞாபகம் இருக்கப்போகிறது?

“ஏண்டா, சுப்பு, மாசம் இரண்டாயும் கட்டிடத்துக்கு ஏற்பாடு பண்ணலே?” என்று பாட்டி ஒரு நாள் மத்தியானம் என்னைக் கேட்டாள்.

“அதற்கென்ன? ஆரம்பித்து விடுகிறேன் நாளையே” என்றேன்.

ஒரு நாள் கிழக்கு வெளுப்பதற்குச் சுமார் ஒருமணி இருக்கும். கடற்கரை மணல்போல் எண்ணிறந்த நக்ஷத்திரங்கள் ஆகாயத்தில் பிரகாசித்தன. தூரத்தில் தோன்றுகின்ற பொழில்கள் ஓர் இருட் பிழம்புபோல் காணப்பட்டன. எங்கும் அமைதி, அமைதி, அமைதி. எல்லாம் சித்திரத்தில் எழுதப்பட்டவைபோல் அசைவற்றிருந்தன. இளங்காற்று வாசனை வீசுகிற ஒரு புன்னைக் காட்டின் மத்தியில், வளைந்து வளைந்து போகிற பாதை வழியே நான் என் மனையைப் பார்க்கப் போனேன். இயற்கை அழகைச் சொல்லி முடியாது. பவள இதழ்களில் ஒரு முறுவல் இடைபிடை விளையாடச் சாந்தமும் சௌந்தரியமும் முகத்தில் ததும்ப ஓர் இன்பக்கனவு கண்டு துயிலும் ஒரு தூய மங்கையின் தோற்றம்போலிருந்தது, என்னைச் சூழ்ந்துள்ள அத்தெய்விகக் காட்சி. அங்கு, ஒரு கொடியாகவோ மரமாகவோ இருந்து அழகை அள்ளி அள்ளிப் பருகும் பாக்கியம் பெற்றிலனே என்று எண்ணினேன். கொஞ்ச தூரம் போவேன்; சுற்றிப் பார்ப்பேன். மேலே போக மனம் இடந்தராது. இயற்கை அன்னை என் உள்ளத்தைச் சிறை செய்துவிட்டாள். திரும்பித் திரும்பி நோக்கிபவண்ணமே மதுவுண்டு மயங்கிய ஒரு மதுகரம் போல் மெள்ள ஊர்ந்தேன்.

இதற்குள் நன்றாய்ப் பொழுது புலர்ந்தது. என்முன் கடல் போல் பரந்து நின்றது அப்பெருந் தோப்பு. அது கொஞ்சங் கொஞ்சமாக அழியக் கண்ட என் மனம் கசிந்துருகிற்று. எவ்வளவோ பறவைகள் கூடுகட்டிக் குஞ்சும் குளுவானுமாக வாழ்ந்த இடம் கண்முன் அழிந்தால் யார்தான் விசனிக்கமாட்டார்கள்?

தோப்புக்கு முன்பக்கத்தில் கட்டிடங்களுக்கு வேண்டிய பிரயத்தனங்கள் நடந்துவந்தன. ஒரு பக்கத்தில் அடுக்காய்ச் செங்கல்; மற்றொரு பக்கத்தில் குவியல் குவியலாக மணலும், சுண்ணாம்பும், சமீபத்தில் ஒரு சுண்ணாம்புச் செக்கும் காணப்பட்டன.

மூலை மூலையாய் மரங்கள் வெட்டிக் கீழே தள்ளப்பட்டிருந்தன. மேடு பள்ளம் இல்லாமல் சமமாய்த் திருத்தப்பட்ட புலன்களும் எதிர்ப்பட்டன.

தோப்பின் மத்தியில் முன்னிருந்த யஜமானனின் மாளிகை. அது ஒரு பாழடைந்த கட்டிடம். லக்ஷ்மீகரமில்லை. வெறிப்பான தோற்றம்; வெளியிலே சுவர்களில் பாசி படர்ந்திருந்தது.

அம்மாளிகைக்கு முன் ஒரு பெரிய மரம். அதைச் சுற்றிக் கொஞ்ச தூரம்வரை மங்கின சுண்ணும்புக்கோடு. கோட்டிற்கு வெளியே சிதைந்துகிடந்த சில கல்லாஸனங்கள். ஒரு காலத்தில் இம்மரத்தைச் சுற்றிப் பழுத்த நிலவில் எவ்வளவோ சிறுவர்கள், சிறுமியர்கள் கலகலவெனச் சிரித்து விளையாடி இருப்பார்கள். இக்கல்லாஸனங்களில் அமர்ந்து எத்தனையோ விருத்தர்கள் மகிழ்ச்சியுடன் அக்குழந்தைகளின் விளையாட்டை நோக்கி இருந்திருக்கக்கூடும். இப்பொழுது இவைகளெல்லாம் ஊமையின் கனவாய்ப் போயின.

கொஞ்சநேரம் அம்மரத்தடியில் தங்கி என் நிலத்திற்குப் போனேன். என் மனையில் தென்னை, பலா முதலிய விருக்ஷங்கள் உண்டு. அதில் ஒரு குடிசை. சில பூச்செடிகளும் அங்கங்கே காணப்பட்டன. அவைகளுக்குத் தண்ணீர் ஊற்றுவாரில்லை. சில வண்டுகள் பூக்களின் நடுவே முனகிக்கொண்டிருந்தன. 'புஷ்பங்களின் விசனங்களை அவை வெளியிடுகின்றனவா? அல்லது தோப்பின் பிறப்பு வளர்ப்பு அழிவு அடங்கிய பாரதக்கதையைச் சொல்லுகின்றனவா?' என்று எண்ணினேன்.

கொஞ்ச தூரத்தில் ஓர் இளங்கொடி ஒரு முதிர்ந்தமரத்தை அன்புடன் தழுவிக்கொண்டிருந்தது. வேற்றுமுகங் கண்டு அன்னை மடியில் ஒளியும் குழந்தையைப்போல என்னைக்கண்டு அது பதுங்கியது. தோட்டத்தை அழிக்கவந்த பாதகர்களில் நான் ஒருவன் என்று ஓடி ஒளிந்தது போலும்!

காற்றில் மரங்கள் அசைந்தன. 'எங்களை அழித்து நீங்கள் வாழ வேண்டுமோ? நாங்கள் வடிக்கும் கண்ணீரின்மீதா நீங்கள் கட்டிடங்களை எழுப்பவேண்டும்? எவ்வளவோ வருஷமாய்ச் சந்ததி சந்ததியாய் வாழ்ந்து வருகின்றோம். எங்கள் குலத்தை அழிப்பதில் உங்களுக்கு என்ன இன்பம்?' என்று தங்கள் கஷ்டங்களை ஆயிரம் வாய்களால் ஓலமிடுவது போலிருந்தது இலைகளின் இரைச்சல்.

என் மனையிலுள்ள குடிசையில் மூவர் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களின் ஒருவன் கிழவன்; தள்ளாதவன். மற்ற இருவர் அவன் மனைவியும், மகனும். கிழவன் சுமார் ஐம்பது வருஷமாய் அந்தக்குடிசையில் வாழ்ந்து வந்திருக்கிறான். அந்தத்தோட்டத்தில்

ஒவ்வொரு மூலையும் அவனுக்கு ஒரு ஞாபகத்தை உண்டு பண்ணும். 'நாம் பண்ணின பாவமில்லே, ராதா ஐயரைச் சுத்துது. வீடு வாசலெல்லாம் போச்சு. அவுக செயல்லே இருந்தா நமக்கு இப்படி கஷ்டமிருக்குமா? எப்பேர்ப்பட்ட தோப்புத்துறவு! என்ன மாளிகை! கண்டவங்க துண்டு துண்டாய் வாங்கி அவுங்க இஷ்டப் பிரகாரம் வீடு கட்டறாங்க. நம்ம ஐயருக்குக் குந்தக்கூட இடமில்லாமே எங்கோ போயிட்டாரே! நான் இருக்கிறது சாமி புண்ணியத்திலே ஒரு வருசமோ, ஆறுமாதமோ. இங்கேயே என் காலத்தைக் கழிச்சுட்டாத்தான் என் மனசு கேட்கும். ஏதானும் செங்கச் சுண்ணும்பு வண்டி வந்தால் மனசு 'திக்' எங்குது. அச்சமாவே இருக்குது. ஆண்டவன் என்ன வழிவிடப் போறானோ!'' என்று இடையிடை இருமிக்கொண்டே அந்தத் தொண்டுகிழவன் தளர்ந்த குரலில் பேசினான்.

இதைக் கேட்ட எனக்குக் கண்களில் நீர் வந்துவிட்டது. 'பிறர் துக்கத்திலும் அழிவிலுமா நம் சுகத்தை நாடவேண்டும்? உலகில் எவ்வளவோ கஷ்டங்கள் உண்டு. அவைகளை நீக்குவது அசாத்தியம். ஆனால் நாம் அறிய ஒரு துன்பத்தையும் நாம் உண்டாக்கினதாக இருக்கக்கூடாது' என்ற எண்ணங்கள் என் மனதில் உதயமாயின.

ஒவ்வொரு நாளும் போவேன்; ஒவ்வொரு நாளும் திரும்புவேன். ஆயிரம் எண்ணங்கள் என்னைப் பாதிக்கும். பாட்டியின் ஆசையை நிறைவேற்ற எண்ணுவேன். ஆனால் குடிசையிலுள்ள ஏழைக்கிழவனின் நிலை என்முன் நிற்கும்; மனது போராடும்.

நாட்கள் பல சென்றன. பாட்டியும் என்னைக் கேட்பதைவிட்டுவிட்டாள். ஊரில் எல்லோரும் என்னைக் கண்டு நகைத்தனர். "சுப்பராமன் காரியமெல்லாம் இப்படித்தான். எல்லாம் ஆரம்ப சூரத்தனம்" என்பர் சிலர். "இவனுக்குப் பிறகு நிலம் வாங்கினவர்களெல்லாம் வீடுகட்டிக் குடிபோய்விட்டார்கள். இவன் இந்த ஜன்மத்தில் வீடுகட்டப் போவதில்லை. நிலத்தைக் கேட்டாலும் கொடுக்க மாட்டேன் என்று பிடிவாதம் செய்கிறான்'' என்பார் மற்றும் சிலர்.

பக்கத்தில் வானளாவப் பெருங்கட்டிடங்கள் கிளம்பின. இன்னும் என் தோட்டம் தோட்டமாய்த்தான் நிற்கிறது. மரங்களைவெட்டித் தோப்பை அழித்துப் பறவைகளை விரட்டி, கல்லும் சுண்ணச் சாந்தும் கலந்து கட்டிடம் கட்டிக் காந்த விளக்கு ஏற்றிவிட்டால்தானே கௌரவம்? தோட்டத்தினுள்ளே கிழவன் குடிசையில் ஒரு சிறு மண் விளக்கு எரிந்தால் அது என் மருமகளுக்குரிய சீரும் சிறப்புமாகாதா?

---

# ஆந்தைப் பதக்கம்

எஸ். ஜி. எஸ்.

---

ஏழு என்பது ஒரு சாதாரண எண்ணல்ல. ஏழு வாரம் ஏழு தலைமுறை, ஏழு உலகம், ஸப்தஸ்வரம், ஸப்தரிஷி மண்டலம்— இவ்விதம் நம்முடைய கொள்கைகளில் அது பலவிதத்திலும் விசேஷமானது. ஏழாவது மாதமாகிற சென்ற ஐப்பசிமாதம் ஏழாந் தேதி நான் ஏழுதினசரிப் பத்திரிகைகளை (இங்கிலீஷில் நான்கு, தமிழில் மூன்று) ஒரே மூச்சாகப் படித்துவிட்டுச் சோர்ந்துபோய் உறங்கின சமயத்தில், கண்ட கனவை இவ்விடம் எழுதத் துணிந் தேன். ஏழு பத்திரிகைகளிலும் அன்று காணப்பட்ட விவேகம் சேர்ந்து ஒன்றாகத் திரண்டு இக்கனவின் இடையில் ஒளிந்துகொண் டிருப்பதை வித்துவான்கள் சுலபத்தில் கண்டுபிடித்து விடுவார் களாகையால் நான் அதிகம் பிழையேற்றுக்கொள்ள வேண்டிய தில்லையே!

* * * *

ஜனங்கள் நிறைந்த ஒரு விசாலமான சபை. (என்னுடைய கனவில் கண்டதைச் சொல்லுகிறேன்.) அச்சபையின் ஒரு பக்கத் தில், நியாயஸ்தலங்களில் காணப்படுகிறமாதிரி ஒரு மேடை. அதன் மேலுள்ள நாற்காலியில் கம்பீர முகத்துடன் ஒரு விருத்தர் அக் கிராசனாதிபதியாக வீற்றிருந்தார். மேடைக்கு அடுத்துத் தரை யின்மேலுள்ள குருச்சிகளில் சட்டையும் தலைப்பாகையும் அணிந்த சிலர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருவர் எழுந்து பிரசங்கம் செய்யலானார்:

"நாம் இன்று இவ்விடம் கூடியிருக்கும் காரணம் கனம் அக் கிராசனாதிபதி அவர்களும் இச்சபையோரும் அறிந்திருக்கும் விஷயமே. காலஞ் சென்ற உலூகபட்ட மகாராஜாவின் ஆக்ஞைப்படி, வருஷந்தோறும் விவேகத்தில் ஆந்தையைப்போல் சிறந்த ஒருவருக்குத் தங்கத்தில் ஒரு பதக்கம் பரிசளிக்கப்பட்டு வருகிறது. ஆந்தையின் மகிமையை நாம் அனைவரும் அறிவோம்; இரு கண்களையும் உருட்டி விழித்து, ஒரு மரப்பொந்தில் அது வீற்றிருப்பதை நாம் அண்ணாந்து பார்க்கும்போது, இதுவே ஒப்பற்ற விவேக மூர்த்தி என்று நமக்குத் தோன்றுகிறது. ஆனால்

சில பண்டிதர்கள், 'உலக முழுவதும் இருள் சூழ்ந்து ஆவலுடன் பார்ப்பதற்கு ஒன்றும் இல்லாதசமயத்தில் ஆந்தைக்குக் கண்தெரிந் தாலும், பட்டப் பகலில் தனக்கு அடுத்து உள்ளதைக் கூடப் பார்த்து அறிந்துகொள்வதற்கு வேண்டிய திருஷ்டியும் அதற்கு இல்லை; அறிவும் இல்லை' என்று தர்க்கிக்கிறார்கள். ஆகையால் கனம் அக்கிராசனாதிபதியவர்கள் இவ்வருஷம் இப்பதக்கத்தைப் பெற யார் மிகவும் அருகர் என்று பொறுக்கி எடுக்கும் விஷயத்தில், ஆந்தையைக் குறித்து உள்ள அபிப்பிராயங்களையும் மனதில் வைத்துக்கொண்டே தீர்மானிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. அவ்விதம் தீர்மானித்தால் இந்தப் பரிசைப் பெறுவதற்கு என்னு டைய கக்ஷிக்காரரே எவ்விதத்திலும் தகுதியானவர் என்பதில் ஐயமில்லை.

"இவர் மகாவிற்பன்னர். த்விபாஷி. காலை முதல் உச்சிவேளை வரையில் ஸம்ஸ்கிருத நூல்களையும் அதற்குமேல் சயனிக்கும் வரை தமிழ்இலக்கியங்களையும் படிப்பதிலேயே தம்முடைய வாழ் நாட்களைச் செலுத்தியிருக்கிறார். எங்களைப் போன்ற சாதாரண மனிதர்கள், 'சமுத்திரக் கரை எவ்வளவு அழகாயிருக்கிறது. காவேரி தீர்த்தம் எவ்விதம் மனதைக் கவர்கிறது!' என்றெல்லாம் எண்ணி, அதைப் போய்ப் பார்ப்பதிலும் இதில் போய் ஸ்நானம் செய்வதிலும் காலத்தை வீணாகக் கழித்துவிடுகிறார்கள். இவரோ சமுத்திரத்தையும் கண்டதில்லை; நதியையும் கண்டதில்லை. இவ ருக்கு அவைகளைப் பார்க்கவேண்டிய ஆசையுமில்லை; அவசியமு மில்லை; அவகாசமுமில்லை. ஆனால் 'கடல் காண் படல'த்தில் கம்பர் எவ்விதம் சமுத்திரத்தை வர்ணிக்கிறார் என்றாவது, 'திரு மாலை'யில் தொண்டரடிப்பொடி யாழ்வார் எவ்விதம் காவேரியை ஸ்துதி செய்கிறார் என்றாவது ஒரு கேள்வியைக் கேட்டுவிட்டால் இவர் இப்பொழுது முதல் இன்று சாயங்காலம் இக்கூட்டம் கலைகிற வரையில் மூச்சுவிடாமல் அப்பாடல்களை ஒப்பிப்பதற்குச் சித்தமாக இருக்கிறார்.

"மேலும் இவரே பல கவிதைகளை உண்டாக்கி இருக்கிறார். அவைகளில் 121 இடங்களில் ஹம்ஸத்தைக் குறித்து எழுதியிருக் கிறார். அவற்றுள் 44 தடவைகள் ஜலம் கலந்த பாலிலிருந்து பாலை மாத்திரம் பிரித்து எடுக்கிற ஹம்ஸத்தின் சக்தியை உபமானமாகக் கூறியிருக்கிறார். மிகுதியான 77 இடங்களிலும், ஒரு ஹம்ஸத்தின் நடையும் ஒரு கட்டழகியின் நடையும் ஒக்கும் என்பதையே எடுத் துக் காட்டியிருக்கிறார். இது சம்பந்தமாக நான் க்ஷணநேரத்தில் சொல்லப்போகும் ஒரு சங்கதியிலிருந்தே இவருடைய பாண்டித் தியத்தின் சிறப்பு, கனம் அக்கிராசனாதிபதி யவர்களுக்கு

நன்கு விளங்கும்: அதாவது இவருடைய ஆயுளில் இவர் ஒரு ஹம்ஸத்தையாவது ஒரு கட்டழகியையாவது கண்டதில்லை. கண்காட்சிச் சாலையில் அன்னம் என்ற பெயருடன் ஒரு ஹம்ஸம் இருக்கிறதென்று இவர் கேள்விப்பட்டிருக்கிறார். ஆனால் இது வரையில் அதை நேரில்சென்று காணுவதற்கோ, பாலையும் ஜலத்தையும் கலந்து அதன் முன்பு வைத்து அதைப் பரீக்ஷிப்பதற்கோ, கல்வியின் முடையால் இவருக்குச் சாவகாசம் ஏற்படவில்லை. மற்ற விஷயத்திலோ 'பார்யா ரூபவதீ சத்ரு:' என்ற நீதியை ஆதாரமாகக்கொண்டு பார்த்தால் இவருடைய தேவியைப் போன்ற மித்திரை உலகத்தில் கிடைப்பது அரிதே என்று எண்ண வேண்டும். இவரோ புண்யாத்மா. பரஸ்திரீயைக் கண்ணெடுத்தும் பாரார். அப்படித் தற்செயலாய்ப் பார்த்தாலும் இவருடைய திருஷ்டி குன்றியதால் அவளுடைய உருவமே இவருக்குத் தெரியவராது. ஆகையால் உலகத்தில் கட்டழகிகள் உண்டென்பதும் அவர்களுக்கு நடை உண்டென்பதும் ஹம்ஸத்தின் விஷயம்மாதிரி இவர் படிப்பினால் கிரகித்தவற்றிலிருந்தே மேற்சொன்னபடி 121 தடவைகளிலும் அழகாய் வர்ணித்திருக்கிறார்.

"தம்முடைய குழந்தைகளை மடியில் எடுத்துவைத்துச் சீராட்டி இவர் வீண்போது போக்கினது இல்லை. ஆனால் அவ்விதம் சீராட்டுவதால் ஒரு தகப்பனுக்குக் கிடைக்கக் கூடிய ஆனந்தத்தை வர்ணிக்கும் 'ஆலக்ஷ்ய தந்த முகுளான் அநிமித்த ஹாஸை' என்ற சாகுந்தலத்தில் வரும் சுலோகத்திற்கு எத்தனை பாட பேதங்கள் உண்டென்றும் அவைகளினால் என்ன அர்த்தவித்தியாசங்கள் ஏற்படுமென்றும் ஓர் பிரசங்கம் செய்திருக்கிறார்.

"சுருக்கிச் சொல்லி விடுகிறேன்: மனிதர்களுடைய இருதயத்தின் ரகசியங்களை அறிவதிலும் இயற்கை அழகுகளை ரஸிப்பதிலும் கவிகளால் பெறக்கூடிய உதவியைக் கிரகிப்பதிலேயே வாழ்நாளைக் கடத்திவிட்டார். இப்பொழுது புதிதாகத் தம்முடைய அறையை விட்டு வெளியே வந்து மனிதரைச் சந்திப்பதென்றால் இவருக்கு மனம் கூசுகிறது. இயற்கை அழகுகளைக் காண்பதற்குத் திருஷ்டிபோதவில்லை. ஆகையால் கனம் அக்கிராசனாதிபதி அவர்கள் கருணைபுரிந்து இவருடைய அபூர்வகுணங்களை ரஸித்து இவருக்கே அந்தத் தங்கப் பதக்கத்தை அளித்தால், இவர் அதனுடைய ஒருபக்கத்தில் செதுக்கியிருக்கும் ஆந்தையின் உருவத்தை அடிக்கடி கையால் தடவிப் பார்த்துக் கொண்டாவது சுகித்து வாழ்வார்."

"என்னுடைய கக்ஷிக்காரரின் குணவிசேஷங்களை, நான் சற்று எடுத்துரைப்பதற்கு அனுமதியைக் கோருகிறேன்" என்று மற்

ஞெரு வக்கீல் எழுந்துபேசினர்: "இவர் மிகவும் மரியாதையுடைய வர். அரசியல் விஷயங்களில் தீர்க்க ஆலோசனையின் பேரிலும் உண்மையான நம்பிக்கையின் மேலும் தாம் சேரவேண்டிய கக்ஷியைத் தெரிந்தெடுத்து அதில் சேர்ந்தார். பரலோகத்தைக் குறித்து மதத் தலைவர்கள் பேசும் ஆசைவார்த்தைகளுக்கு இணங்கி ஏமாந்து போவதில்லை என்றும், தம்முடைய சுதந்தரங்களையாவது தனத்தையாவது பிறர்வசம் ஒப்பித்து இழந்து விடுவதில்லை என்றும் தீர்மானித்தார்.

"உலகத்தில் முக்கியமான விஷயம் எது? அரசியல் முறையே. உயர்ந்த அரசு எது? குடியரசே. அதை எப்படி நடத்துவது? பெரும்பான்மையோரின் அபிப்பிராயப்படியே. இவ்விதம் சுருக்க மாக மூன்று வினவிடைகளின் மூலமாய்த் தம்முடைய வருங்கால வேலையைக் குறித்துத் திட்டஞ் செய்துகொண்டார். 'எலெக்ஷனி'ல் எல்லோரும் தங்களுடைய மனச்சாக்ஷியின் பிரகாரம் 'வோட்டை' அளிக்க வேண்டுமென்று பிரசங்கித்தார். தாமும் அப்படியே அளித்தார். தேர்தல் முடிந்தது. சட்டசபைகள் கூடின. மந்திரி மார்கள் நிச்சயிக்கப்பட்டார்கள். அவர்களுடைய உபதேசப் பிரகாரம் சபையோரால் நிர்ணயிக்கப்பட்ட முதல் சட்டமே இவ ருக்கு இடிவிழுந்தாற் போல் இருந்தது. இவர் பாடுபட்டுத் தேடிய ஆஸ்தியை மூளியாக்கிற்று. அச்சோகம் தெளிந்தவுடன் தம்மு டைய மூன்று வினவிடைகளின் தத்துவத்தை மறுபடி ஒருதடவை சோதிக்கத் தொடங்கினர்.

"கையில் கடிதத்தையும் பென்ஸிலையும் எடுத்துக் கணக்குப் போட்டார். ஐந்தில் மூன்று இருந்தால் அது 'மெஜாரிடி' யாகி விடுகிறது. நாட்டில் 50 லக்ஷம் ஜனங்கள் இருந்தால், அந்த விகி தத்தில், 30 லக்ஷம் ஜனங்கள் 'பெரும்பான்மையோர்' ஆவார்கள். இவர்களால் அனுப்பப்பட்ட பிரதிநிதிகளே சட்டசபைகளில் இருப்பார்கள். ஆகையால் இவர்களுக்குள்ளே மறுபடியும் ஐந்தில் மூன்று பேரின் அபிப்பிராயப்படி மந்திரிமார்கள் பொறுக் கப்பட்டால், 30 லக்ஷத்தில் 'மெஜாரிடி' யாகிய 18 லக்ஷம் ஜனங் களின் பிரதிநிதிகள் அல்லவா மந்திரிகளை ஏற்படுத்துகிறர்கள்? இம்மந்திரிமார்கள் சொல்லுகிறபடியே சபைகள் நடை பெறுகின் றன. ஆகா! 50 லக்ஷம் ஜனங்களை 18 லக்ஷம் ஜனங்களல்லவா தங்களுக்கு இஷ்டப்பட்ட மந்திரிமார்கள் மூலமாக ஆளுகிறர்கள்! இதில், 'பெரும்பான்மையோரின் அபிப்பிராயப்படி' என்கிற நியாயமே அழிந்துவிட்டதே!—இவ்வித மெல்லாம் எண்ணினர். இந்த அதிசயத்தைத் தம்முடைய ஊரின் பிரதிநிதியிடம் சொல்லி, இதைச் சபையில் எடுத்துப்பேசி இந்த அக்கிரமத்தை ஒழிக்க

வேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்பிரதிநிதியோ 'தற்காலத்தில் பவிசிலிருக்கும் கக்ஷியோடு இணங்கிப்போவதால் கிடைக்கக்கூடிய லாபத்தை அடையவேண்டுமே யொழிய அதனோடு விரோதித்துக் கொள்ளக்கூடாது' என்று அந்தரங்கத்தில் அபிப்பிராயப்பட்டார். ஆகையால், அவர் 'உங்களுடைய கணக்கில் ஏதோ தவறு நேர்ந்து விட்டதே யொழிய, மெஜாரிடி மெஜாரிடிதான். அதைப்பற்றிச் சந்தேகிக்க இடமில்லை' என்றார்.

"என்னுடைய கக்ஷிக்காரர் இதனால் சமாதானம் அடைய வில்லை. அவர் மேன்மேலும் சிந்திக்கலானார். வாஸ்தவத்தில் ஒரு மெஜாரிடியாரின் அபிப்பிராயத்தில் என்ன மகிமை இருக்கிறது என்று ஆலோசித்தார். ஒரு வீட்டில் முதலாளியோ, மற்ற எவரோ வியாதியாய்க் கிடந்தால், தொழிலாளியான ஒரு வைத்தியனை அழைத்து அவனுடைய அறிவுக்கு யுக்தமாகத் தோன்றும் மருந்தைக் கொடுக்கும்படிச் செய்வதா, அல்லது வீட்டிலிருக்கும் எல்லோரும்—அதாவது ஆண், பெண், குழந்தை, விருத்தர், வண்டிக்காரன், சமையற்காரன், தோட்டக்காரன், வீடு பெருக்குபவள் இவர்கள் யாவரும் சேர்ந்து, வீரமா, பூரமா, பாஷாணமா இந்த வியாதிக்கேற்றது என்று 'வோட்டு' எடுத்துத் தங்களில் 'மெஜாரிடி' யாரின் அபிப்பிராயப்படி மருந்தை வாங்கிக் கொடுப்பதா? மனிதனுடைய பிணிகளைக்காட்டிலும் கஷ்டமும் கொரேமுமானவைகள் தாமே ராஜ்யத்தின் பிணிகளும்!—இவ்விதம் தமக்குத்தோன்றிய தர்க்கங்களையெல்லாம் தம் ஊரின் பிரதிநிதியிடம் எடுத்துரைத்தார். அவர் இந்தத்தடவை நன்றாகச் செவி கொடுத்துக்கூடக் கேட்கவில்லை. 'ஆமாம்! நீங்கள் சொல்லுவது மிகவும் சரி! எல்லாவற்றையும் அடுத்த எலெக்ஷனில் சரிப்படுத்தி விடலாம்' என்று சொல்லிவிட்டுத் தம்முடைய மைத்துனருக்கு ஓர் உத்தியோகத்தைச் சம்பாதிப்பதில் மறுபடியும் முனைந்தார்.

"அப்பொழுது என்னுடைய கக்ஷிக்காரர் தம்முடைய உண்மை ஸ்திதியைக் குறித்து இவ்விதம் எண்ணலானார்: 'பரலோகத்தில் நீ சுகம் அடையும்படி செய்கிறோம் என்று மதத்தலைவர்கள் சொன்னார்கள். அவர்களைத் திரஸ்கரித்தேன். அவர்கள் கேட்ட தக்ஷிணையைக் கொடுக்காமல் மறுத்தேன். இந்த உலகத்திலேயே உனக்குச் சுவர்க்கத்தின் சுகத்தைச் சம்பாதித்துக் கொடுப்போம் என்று அரசியல் நிபுணர்கள் பிரசங்கித்தார்கள். இவர்களை நம்பினேன். எனக்கு உரிமையாயிருந்த வோட்டைக் கொடுத்தேன். அதன் மூலமாகத் தங்களுக்குக் கிடைத்த அதிகாரத்தையே உபயோகித்து, இவர்கள் எனக்கு விரோதமான சட்டங்

களை நிர்ணயித்தது மல்லாமல், அவைகள் மூலமாகவும், வரிகள் மூலமாகவும், நானாவிதத்திலும் என்னுடைய தனத்தைப் பலாத்காரமாக எடுத்துக் கொள்ளுகிறார்கள். இவ்விதம், வோட்டைக் கொடுத்துவிட்டு ஆந்தை மாதிரி விழிப்பவர்களுக்கு ஆந்தைக் கக்ஷி என்கிற பெயர்தான் தகும்.'—இப்படி எல்லாம் எண்ணிச் சஞ்சலப்பட்டார். அதுமுதல், யார் எந்த விஷயத்தைக் குறித்துத் தம்மிடம் பேசினாலும், தாம் ஓர் ஆந்தை என்றும் தமக்கே இந்த வருஷத்திய பதக்கம் கிடைக்கவேண்டுமென்றும் கூறுகிறார். இதையெல்லாம் ஆலோசித்து, கனம் அக்கிராசனாதிபதி அவர்கள் என்னுடைய கக்ஷிக்காரருக்கே பரிசு அளிப்பார்கள் என்ற நம்பிக்கையுடன் உட்காருகிறேன்."

மூன்றாம் வக்கீல் ஒருவர், வெகு கண்ணியத்துடன் எழுந்து நிதானமாக வார்த்தைகளைத் தொடுத்தார்:

"என்னுடைய இரு நண்பர்களின் வாதங்களைக் கேட்ட பிறகு, அவர்களுடைய கக்ஷிக்காரர்களைச் சாதாரணமான மனிதர்கள் என்று எண்ணுவதோ, ஆந்தைப் பதக்கத்தைப் பெறுவதற்கு அவர்களுக்குள்ள உரிமைகளை அலக்ஷியம் செய்வதோ சுலபமானதல்ல என்று நான் ஒப்புக்கொள்ளுகிறேன். எனினும், என் கக்ஷிக்காருடைய குணங்களைக் கேட்டபிறகு, கனம் அக்கிராசனாதிபதி அவர்களின் மனது இவர் பக்கமே கவர்ந்து இழுக்கப்படும் என்பதில் எனக்குச் சிறிதேனும் ஐயமில்லை.

"இவர் பிறவி, கல்வி, ஒழுக்கம் இம்மூன்றிலும் சிறந்தவர். ஐசுவரியத்தில் குறைவில்லை. வாள்போல் கூர்மையான புத்தி உள்ளவர். பஞ்சாங்கம் மாதிரியே, இதரபுத்தகங்களையும், அவை வெளியாகும் வருஷத்திலேயே வாசித்துவிடுவார். சென்ற ஏழு வருஷங்களாகப் பத்திரிகைகளில் காணப்படும் விளம்பரங்களின் உண்மையை ஆராய்ச்சி செய்வதில் இவர் முனைந்திருக்கிறார். 'பணத்தை ஜோசியர்களுக்குக் கொடுப்பதை விடச் சமுத்திரத்தில் எறியலாம்' என்று இவர் அடிக்கடிச் சொல்லுவதுண்டு. இருந்தாலும் இக்காலத்தில் தென்னிந்தியா, வட இந்தியா, உலாந்தா ஆகிய இம்மூன்று பிரதேசங்களிலுமுள்ள ஜோசியர்களுக்குச் சம்மானம் செய்வதில் ஆயிரம் ரூபாய்க்குமேல் செலவு செய்திருக்கிறார். இதன் மூலமாக இவருக்கு விவாகம் ஆகாதென்றும், இவருக்கு இரண்டு களத்திரம் உண்டென்றும், இவருடைய ஜாதகம் பிள்ளையில்லா ஜாதகமென்றும், இவருக்கு ஐந்து புத்திரர்களும் நான்கு புதல்விகளும் தீர்க்காயுளாயிருப்பார்கள் என்றும், இவருக்கு 24, 27, 32, 33, 41, 45, 48, 49, 54, 63, 78, இந்த வயதுகளில் மரணம் தவறாமல் சம்பவிக்குமென்றும் அறிந்திருக்

கிறார். ஆகவே, ஆயிரம் ரூபாய் செலவு செய்தாலும் தமக்கு மரணம் உண்டாவது நிச்சயம் என்னும் விஷயத்தை மாத்திரம், சிறிதும் சந்தேகமில்லாமல் முடிவு செய்து கொண்டுவிட்டார்.

"சினிமாக்களுக்குத் தவறாமல் போய்விட்டு வந்து, ஒவ்வொரு முறையும் தம்மை நொந்துகொள்ளுவார். 'வீட்டில் சௌக்கியமாகப் பங்காவுக்கடியில், மெத்தைபோட்ட சோபாவில் இருப்பதற்குப் பதிலாக, அங்கேபோய்க் காசைக் கொடுத்துவிட்டுக் கையில்லாத மரநாற்காலியில் இம்சையுடன் உட்கார்ந்திருந்து, அந்தக்கூட்டத்தின் துர்க்கந்தத்தையும் அனுபவித்துவிட்டு வந்தேன். முதுகு வலிக்கிறது. அது போதாதென்று, பக்கத்து நாற்காலிக்குப் போகிறவர்களெல்லாம் என்னுடைய பாதங்களை மிதிகம்பளமாக உபயோகித்து விட்டார்கள். பத்து விரல்களும் நோகின்றன' என்பார். 'பாட்டு நன்றாயிருந்ததோ?' என்று கேட்டால் 'பாட்டா! அங்கே நடிப்பவர்கள் பவுடரைச் சிரமப்பட்டுப் பூசிக்கொள்ளுவதற்குப் பதிலாகச் சங்கீதத்தைக் கொஞ்சம் சாதகம் செய்திருந்தால், பாட்டு நன்றாகத்தானிருக்கும்' என்பார். அப்படியானால் கதையின் அமைப்புத்தான் இவரை இழுத்திருக்கவேண்டுமென்று எண்ணினாலோ, 'இந்த நாட்களில் நல்லநாவல்களில் வாசிக்கக்கூடிய ப்ளாட்டுகளைச் சினிமாக்களில் உள்ள ப்ளாட்டுகளுடன் ஒப்பிட்டுப்பார்த்தால், பாகசாஸ்திரத்தில் சொல்லப்பட்ட எல்லா உணவுகளையும் அனுபவித்த ஒருவன் குழந்தைகளுக்குக் கொடுக்கும் கஞ்சிமாவைப் பாலடையின் மூலம் பெற்றுக்கொள்ளுகிற மாதிரி யிருக்கிறது' என்று முறையிடுவார். இவ்வளவெல்லாம் சொல்லிவிட்டு அடுத்தபடி ஒரு விளம்பரத்தில் 'கண்ணுக்கினிய காட்சிகள், காதிற்கினிய கானங்கள்' என்று படித்தவுடனே, அதன் உண்மையை ஆராய்ச்சி செய்யப் போய்விடுவார்!

"மருந்துகளைக் குறித்து வெளியாகும் பிரசுரங்களில்தான் இவர் அதிகமான அநுபவம் அடைந்திருக்கிறார். அநேகமாய் எல்லா விதமான 'பேடெண்டு' மருந்துகளையும் பரீக்ஷை செய்திருக்கிறார். விளம்பரத்தில் கண்டபடி இருமலை நீக்கும் ஸஞ்சீவிகளில் ஒன்றைத் தொடர்ந்து உட்கொண்டு, ஸ்திரமான காசத்தையும் மார்புத் துடிப்பையும் சம்பாதித்திருக்கிறார். யௌவனத்தை மீளச்செய்யும் மருந்துகளில் ஒன்றுக்கு இரண்டா யிருந்தால் பலன் நிச்சயம் என்று எண்ணி, இரண்டை உபயோகித்ததிலிருந்துதான் இவருக்கு முப்பது வயதிலேயே நரைதிரை ஏற்படத் தொடங்கின. அதற்குப் பரிகாரமாக, சிங்கத்தின் பலத்தை அளிக்கும் ஹல்வாவை இருவேளையும் உட்கொண்டதன்மேல், இவர் இப்பொழுது ஒரு மகிஷத்தைப் போன்ற வயிற்றின் அமைப்பையும் சுறுசுறுப்பையும் அடைந்திருக்கிறார்—"

"உம்முடைய கக்ஷிக்காரர் எங்கே? சற்றுப் பார்க்கலாம்" என்று அக்கிராசனதிபதி கேட்டார்.

உடனே அந்த வக்கீல் திரும்பி, அவருக்கு அருகில் அவருடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு நிரபராதியாய் நின்றிருந்த என்னைச் சுட்டிக்காட்டினர்!

"நானு! நான் ஒரு பரிசையும் கேட்கவில்லையே! உம்மை இதற்குமுன் கண்டதே இல்லையே!" என்று அந்த வக்கீலிடம் சொன்னேன்.

"சும்மா இரும் ஐயா!" என்று அவர் என்னுடைய காதில் உறுமினர். "உம்மைப் பார்த்தால்தான் என்னுடைய வர்ணனைக்குப் பொருத்தமாகத் தோற்றுகிறது. நீர் கேட்காமலே உமக்குத் தங்கப் பதக்கம் கிடைக்கப்போகிறது. அதனல் எனக்கும் கீர்த்தி வரும். இரண்டையும் கெடுத்துவிடாதேயும்."

"நான் சும்மா இருக்கமாட்டேன்! அந்த ஆந்தையை என் கழுத்தில் தொங்கவிட்டுக் கொண்டு திரியமாட்டேன்!" என்று கதறிக்கொண்டே கண்விழித்தேன். கனவு முடிந்தது.

* * *

ஒரு வார்த்தை. அவர் சொன்னது பொய். 'பேடெண்டு' மருந்துகள், சினிமாக்கள், ஜோஸியம் இவைகளுக்குப் பக்கத்திலேயே நான் போகமாட்டேன். என்னைப் பார்த்தால் ஈர்க்குக் குச்சிமாதிரி ஒல்லியாக இருப்பேன். இதைப் பிரமாணமாகச் சொல்லுகிறேன்.



# கனகாம்பரம்

கு. ப. ராஜகோபாலன், பி. ஏ.

## 1

"மணி!" என்று ராமு வாசலில் நின்றுகொண்டே கூப்பிட்டான். நண்பன் வீட்டில் இருக்கிறானோ இல்லையோ என்று அவனுக்குச் சந்தேகம்.

"எங்கேயோ வெளியிலே போயிருக்கா. நீங்க யாரு?" என்று மணியின் மனைவி கதவண்டை நின்றுகொண்டு மெல்லிய குரலில் கேட்டாள்.

ராமுவுக்குக் கொஞ்சம் தூக்கி வாரிப்போட்டுவிட்டது.

மணியும் அவனும் கலாசாலையில் சேர்ந்து படித்தவர்கள். மணியின் மனைவியைப்பற்றி அவனுக்கு அதிகமாகத் தெரியாது. அவளை அவன் அதுவரையில் பார்த்ததுகூடக் கிடையாது. புதுக் குடித்தனம் நடத்த அவள் சென்னைக்கு வந்து ஒரு மாதந்தான் ஆகியிருந்தது. அந்த மாதம் முழுதும் ராமு சென்னையில் இல்லை. அதற்கு முன் சாரதாவும் அவனைப் பார்த்ததில்லை.

ராமுவும் மணியைப்போல மிகவும் முற்போக்கான கொள்கைகள் உடையவன்தான். கலாசாலை விவாதங்களிலும் சர்ச்சைகளிலும் பேசியபொழுது ஸ்திரீ புருஷர்கள் சமானஸ்கந்தர்களாகப் பழகவேண்டுமென்றும் பெண் முன்னேற்றம் மிகவும் அவசியமான சீர்திருத்தமென்றும் ஆவேசத்துடன் கர்ஜித்து வந்தான். ஆனால் நடை முதலில் அந்தக் கொள்கைகள் சோதனைக்கு வந்தபொழுது அவன் கலவரமடைந்துவிட்டான். முன்பின் பரிசயமின்றி மணியின் மனைவி தன்னுடன் பேசியது அவனுக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. அவன் அதை சிறிதும் எதிர்பார்க்கவே இல்லை. மணி வீட்டில் இல்லாவிட்டால் பதில் வராது, கொஞ்ச நேரம் நின்று பார்த்துவிட்டுப் போய் விடுவோம் என்றே அவன் ஒரு குரல் கூப்பிட்டுப் பார்த்தான்.

மணியின் மனைவி சாரதா 'படித்த பெண்'ணும் அல்ல; அசல் கிராமாந்திரம். எந்தப் பக்கத்திலும் ரெயில்பாதைக்கே இருபது மைல் தூரத்திலுள்ள ஒரு சோழதேசக் கிராமத்துப் பெரிய பண்ணையின் பெண். அவளுடைய நடை உடை பாவனையி

லும், அந்தச் சில நிமிஷங்களில் அவன் கண்களில் பட்ட மட்டில் ஒரு விதமான 'புதுமாதிரி'ச் சின்னமும் காணும்.

விலையுயர்ந்த பெங்களூர்ப் பட்டுச் சேலையை நேர்த்தியாகக் 'கொசாம்' விட்டுக் கட்டிக்கொண்டிருந்தாள். அதற்கேற்ற வர்ணம் கொண்ட பழைய ரவிக்கைதான் அணிந்திருந்தாள். நடுவே வகிரெடுத்துத்தான் பின்னிக்கொண்டிருந்தாள். பின்னல் கூட நவ நாகரிகப் போக்குப்படி 'தொள தொள' வென்று காதை மூடிக் கொண்டு இருக்கவில்லை. பின்னலை எடுத்துக் கட்டிக்கொண்டிருந் தாள். நெற்றியில் பூர்ணசந்திரன்போலப் பெரிய குங்குமப்பொட்டு இருந்தது. உடம்பின் மேலிருந்த வைரங்கள் பூத்துக் கொண் டிருந்தன. மூக்கில் புலாக்கு இருந்தது. கைக்காரியமாக இருந் தவள், அவசரமாக யாரென்று பார்த்துப் பதில் சொல்ல வந்தாள் என்பது தெரிந்தது. அப்பேர்ப்பட்டவள் தன்னுடன் வந்து பேசினதும் ராமு மனம் தடுமாறிப்போனுன்.

ஒரு பெண் வந்து தன்னுடன் பேசிவிட்டாள் என்பதால் அவன் கூச்சமடையவில்லை. கலாசாலையிலும் வெளியிலும் படித்த பெண் கள் பலருடன் பேசிப் பழகினவன்தான். அது அவனுக்குச் சகஜ மாயிருந்தது. இந்தப் படிக்காத பெண் தன்னுடன் பேசினதுதான் அவனுக்குக் குழப்பத்தை உண்டாக்கிவிட்டது. படித்த பெண்கள் கூடப் புது மனிதர்களிடம் பேசுவது கஷ்டமாயிற்றே; அப்படி யிருக்க நவநாகரிக முறையில் ஆண்களுடன் பழகுவது என்பதே அறியாத பிரதேசத்தில் பிறந்து வளர்ந்த பெண் பிற புருஷனுடன் பேசுவதென்றால், அது ராமுவுக்கு விபரீதமாகப் பட்டது. ஆனுல் அவள் சொன்ன வார்த்தைகள் மெல்லிய தொனியுடன்தான் வெளி வந்தன. அவன் முகத்தைப் பார்த்துக் கூடப் பேசவில்லை அவள். தலை குனிந்தவண்ணந்தான் இருந்தாள். இருந்தாலும் அவன் மனம் என்னவோ சமாதானப்படவில்லை.

"நான்—நான்—மணியின் சிநேகிதன்—" என்று மேலே என்ன சொல்லுவது என்பது தெரியாமல் தத்தளித்தான்.

".இதோ வந்தூடுவா. ரூம்லே வந்து உக்காருங்கோ" என்றுள் சாரதா.

ராமு உண்மையிலேயே திகைத்துப் போனுன். தலை கிர் ரென்று சுற்றிற்று. ஏதோ தப்புச் செய்து விட்டவன்போலச் சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு சிறு தனி வீட்டில் தனியாக இருக்கும் இளம்பெண் தன்னை உள்ளே வந்து உட்காரச் சொல்லு கிறுள்!—அவனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

"இல்லை அப்பறம் வரேன்" என்று அரைகுறையாகக் கூறித் தலையெடுத்துப் பார்க்காமல் வெகுவேகமாய்ப் போய்விட்டான்.

## 2

ஐந்து நிமிஷத்திற்கெல்லாம் இலையும் காய்கறியும் வாங்கிக் கொண்டு மணி உள்ளே நுழைந்தான்.

"உங்க சிநேகிதராமே?—வந்து தேடினர்" என்று சாரதா குதூகலமாகக் குதித்துக்கொண்டு அவனை எதிர்கொண்டுபோய்ச் சொன்னாள். அவள் மேனியும் குரலும் ஒரு படையெடுப்புப்போல அவனைத் தாக்கின. மணி புதுக் குடித்தனத்தின் தொல்லைகளிலும் தன்னை வந்து தாக்கிய அந்த இன்ப அலையை அனுபவித்து ஆறுதல் அடைந்தான்.

"யார் அது?" என்று அவளுடைய கன்னத்தைக் கிள்ளிக் கொண்டு கேட்டான்.

"யார்னு கேக்கல்லே" என்று சொல்லிக்கொண்டு வலிகொண்டவள்போலப் பாசாங்கு செய்து, "ஹா!" என்றாள்.

திடீரென்று மணியின் முகம் சிவந்தது; கோபம் பொங்கி எழுந்தது.

"எவ்வளவு தரம் சொல்றது உனக்கு? யார் என்று கேட்கிறதுக்கு என்ன கேடு உனக்கு? ஒரு வார்த்தை கேட்டுட்டா என்ன மோசம்? உன் கையைப் பிடிச்சு இழுத்துடுவாளோ?" என்று வார்த்தைகளை வீசினான்.

ஒரு வாரத்திற்கு முன்புதான் இப்படி ஒரு சம்பவம் நடந்து மணி சாரதாவைத் தாறுமாறாகக் கோபித்துக்கொண்டான். 'பட்டணத்தில் நண்பர்கள் அடிக்கடி வந்து தேடுவார்கள்; பதில் சொல்லாமல் உள்ளே நுழைந்துகொண்டு கதவைச் சாத்திக் கொள்ளக்கூடாது; பட்டணத்தின் நாகரிகத்திற்கு ஏற்றவாறு நடந்து கொள்ளவேண்டும்.' இந்தமாதிரி உபதேசங்கள் செய்து முடித்தான். அதன் காரணமாக இருவரும் இரண்டு நாள் பேசாமல் கூட இருந்தார்கள்.

இந்தத் தடவை தான் சொல்லப்போகிற பதில் மணிக்கு மிகவும் சந்தோஷத்தை உண்டாக்கப் போகிறது என்ற எண்ணத்தில், 'மணி வேண்டிய மட்டும் பேசட்டும்' என்று சாரதா வாயை மூடிக்கொண்டிருந்தாள். பிறகு அவன் ஓய்ந்ததும், சாவதானமாகப் பதில் சொன்னாள்:

"யாருன்னு கேட்டேன். சிநேகிதன்னு சொன்னார். பேர் சொல்லல்லே. 'உள்ளே வந்து உட்காருங்கோ; வந்துடுவா'ன்னேன். அப்பறம் வரேன்னு போய்ட்டார்."

சாரதா ஆவலுடன் மணியின் முகத்தைக் கவனித்தாள். அதில் எவ்விதமான சந்தோஷக்குறியும் தோன்றாததைக் கண்டு

அவள் முகம் சுண்டிப்போய்விட்டது. சடக்கென்று திரும்பி உள்ளே போய்விட்டாள்.

மணியோ அந்தமாதிரிப் பதிலை அவளிடமிருந்து எதிர்பார்க்கவே இல்லை. முதலில் அவனுக்கு முகத்தில் அடித்தாற்போல் இருந்தது அவள் பதில்; பிறகு தான் சொன்னதற்கு மேலாக, அவள் அதியாக நடந்துகொண்டு விட்டது அவனுக்கு அதிருப்தியை உண்டாக்கிற்று. அதன் பிறகு, 'ஏன் அப்படிச் செய்தாள்? நாம் சொன்னதற்காகக் கீழ்ப்படிந்து நடந்த மாதிரியா அது? அல்லது ....' என்று கொஞ்சம் மனம் தடுமாற ஆரம்பித்தது. எல்லாம் சேர்ந்து அவன் வாயை அடக்கிவிட்டன. சாரதாவும் அவனைச் சாந்தப்படுத்தவோ பேச்சில் இழுக்கவோ முயலவில்லை. அவளுக்கும் கோபம்.

சாப்பாடு முடிந்து மணி வெளியே போகும்வரை ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. தெருவழியாகப் போய்க்கொண்டே என்னென்னவோ யோசித்தான். அவன் மனது நரகவேதனைபட்டது. சாரதா அவ்வளவு தூரம் போய்விடுவாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. படித்த பெண் அம்மாதிரி செய்திருந்தால் அதில் ஒன்றும் விசேஷம் இராது. ஒரு கிராமாந்தரப் பெண், சிநேகிதனை உள்ளே வந்து உட்காரச் சொன்னது மிகவும் அநாகரிகம். சிநேகிதன் என்ன நினைத்திருப்பான்? 'என்ன தைரியம் இந்தப் பெண்ணிற்கு?' என்றோ, அல்லது 'சுத்த அசடு!' என்றோ நினைத்திருப்பான். அல்லது......

இம்மாதிரி யோசித்துக் கொண்டே போய்க்கொண்டிருந்தான்.

ராமு எங்கோ போய்விட்டுத் திரும்பிவந்துகொண்டிருந்தவன் தெருவில் மணி எதிரே வருவதைக் கண்டு மிகவும் சங்கடமடைந்தான். அப்பொழுது மணியைக் கண்டு பேசுவதா வேண்டாமா என்றுகூட அவனுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. வீட்டுக்கு வந்திருந்ததாகச் சொல்வதா வேண்டாமா? அவன் மனைவி சொன்னதைச் சொல்வதா வேண்டாமா? இப்பேர்ப்பட்ட பிரச்னைகள் கிளம்பின. ஒருவேளை மணியின் அனுமதியின் பேரில் அவள் அவ்வளவு சகஜமாகப் பேசியிருந்தால் சரியாய்ப் போய்விடும். இல்லாவிட்டால் தான் சொல்லுவதால் அந்தப் பெண்ணின் அசட்டுத்தனமோ அல்லது தெரியாமையோ மணிக்குக் கோபத்தை உண்டாக்கினால்? அவர்களிடையே பெருத்த மனத்தாங்கல் ஏற்பட்டால்? யார் கண்டார்கள்? மனித சுபாவம் எது வேண்டுமானாலும் நினைக்கும். அந்த மாதிரி மனஸ்தாபத்திற்குத் தான் காரணமாகக்கூடாது. அவள் தானாக மணியிடம் முழுவதும் சொல்லி

யிருக்கிறாள் என்பது என்ன நிச்சயம்? சொல்லியிரா விட்டால் அசட்டுத்தனம் ஆபத்தாகவல்லவோ முடியும்?—சடக்கென்று ஒரு சந்தில் திரும்பி மணியின் கண்ணில் படாமல் தப்பினான். ஆனால் அன்று காலையில் நடந்த சம்பவத்தைத் தன் மனதை விட்டு அகற்ற அவனால் முடியவில்லை. அந்தப் பால் வடியும் முகத்தின் களங்கமற்ற பார்வை; தடங்கல், திகைப்பு, பயம் இவையற்ற அந்தத் தெளிவான சொற்கள்! "இதோ வந்துடுவா!" என்றாள் அவள். அதில் என்ன நேர்மை! என்ன மரியாதை! இன்னும், தன்னை உள்ளே வரும்படி அழைத்ததில் என்ன நம்பிக்கை! தன் புருஷனின் நண்பன் என்றதால் ஏற்பட்டது. 'சே, சே அந்த நாலு வார்த்தைகளில் அவள் எவ்வளவு அர்த்தத்தை வைத்து விட்டாள். தன்னையும் நம்பினாள். அவளா அசடு? அவள்தான் உண்மையான பெண்! நான் சந்தித்த முதல் பெண்! அதனால்தான் எனக்கு அந்தக் கலவரம் ஏற்பட்டது. மணியை மாலையில் கண்டு அவனிடம் சொல்ல வேண்டும்.' இந்தமாதிரி எண்ணிக்கொண்டு ராமு நடந்தான். ஆனால், தான் முதலில் அந்தப் பேச்சை எடுப்பதற்கு முன்பு நிலைமை எவ்வாறிருக்கிறது என்று அறிந்துகொள்ளவேண்டுமென்று தீர்மானித்தான். மாலை ஏழு மணிக்குச் சென்றால் அவன் நிச்சயம் வீட்டிலிருப்பான் என்று எண்ணினான்.

## 3

மாலை ஆறு மணி இருக்கும். சாரதா வீட்டுக் காரியங்களைச் செய்துமுடித்துவிட்டு அறையில் தலையை வாரிப் பின்னிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். பக்கத்தில் ஒரு தட்டில் தொடுக்கப்படாத கனகாம்பர புஷ்பங்கள் இருந்தன. எதிரே முகம் பார்க்கும் கண்ணாடியும், ரிப்பன், சீப்பு, வாசனைத் தைலம் முதலியவைகளும் இருந்தன.

உள்ளே நுழைந்த மணிக்கு இதையெல்லாம் பார்த்ததும் ஏதோ ஓர் ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது.

"இது என்ன பூவென்று இதை நித்தியம் வாங்கித் தலையில் வைத்துக்கொள்ளுகிறாய்?" என்று மணி அவளை நினைத்துக் கொண்டு உரலை இடித்தான்.

ஆனால் கனகாம்பரத்தைத்தான் அவன் சொல்லுகிறான் என்று நினைத்துச் சாரதா, அந்தச் சந்தர்ப்பத்தில் அவனது பட்டண நாகரிகத்தை இடித்துக் காட்டவேண்டுமென்று தீர்மானித்தாள்.

"பட்ணத்துலே எல்லாரும் இதைத்தானே வச்சுக்கரா? சங்கீத வித்வத்சபைலே கூட இதைத்தானே தலைதாங்காமெ வச்சுண்டு வந்தா?"

"பட்டணத்துலே செய்பறுப்பலே செய்யணும்னு யார் சொன்னது? அடிபிடி கட்டாயமா? பட்டணத்துப் பெண்கள் மாதிரிதான் இருக்கு, அவர்கள் வைத்துக்கொள்ளுகிற கனகாம்பரமும். வாசனையில்லாத பூவை எங்காவது தலையில் வைத்துக்கொள்வதுண்டோ? காக்கரட்டான் பூவைத் தலையில் வச்சுக்கற பெண்கள் வாழ்க்கை ரஸனையும் அப்படித்தான் இருக்கும்."

"நீங்கதானே நான் பட்ணத்துப் பெண் மாதிரி இருக்கணும்னேள். இல்லாட்டா ஒங்களுக்கு வெக்கமாயிருக்கும்னேளே" என்று சாரதா மணியின் முகக்குறியை ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொண்டு கூறினாள்.

"அதுக்காக மூணும் மனுஷனைப்போய் ஆத்துக்குள்ளே வந்து உக்காருங்கரதோ?" என்று மணி ஆத்திரத்தில் கொட்டிவிட்டான்.

சாரதாவின் முகம் சடக்கென்று மாறுதல் அடைந்தது. என்ன கிராமாந்தரமானாலும் அவள் அளவற்ற கோபத்துடன் மணியின் முகத்தை ஒரு நிமிஷம் ஏறிட்டுப் பார்த்தாள். அவன் எண்ணங்கள் முகத்தில் அவளுக்குப் பட்டவர்த்தனமாகத் தெரிந்தன. தனக்கு—தன் பெண்மைக்கு—அவன் செய்த அவமரியாதையை அறிந்தவள்போல அவளுடைய முகத்தில் ஒரு வெறுப்புப் பார்வை தோன்றிற்று. பாதி போட்டிருந்த பின்னலை அவிழ்த்து முடிந்துகொண்டாள். கனகாம்பரப்பூவைத் தட்டுடன் அப்படியே எடுத்து அலமாரியில் வைத்துவிட்டுச் சமையலறைக்குள் போய்விட்டாள்.

இந்த மகத்தான கோபத்தின்முன்பு மணி அயர்ந்துபோனான். அடிபட்ட நாய்போல மௌனமாக நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஏதோ ஒரு புத்தகத்தைப் படிப்பதாகப் பாசாங்கு செய்தான். சாரதா பொருமிப் பொருமி அழும் சத்தம் கேட்டது.

ஏழு அடிக்கும் சமயத்தில் ராமு வந்தான். மணி கலகலப்புடன் பேச முயற்சி செய்தான். ராமு வந்ததும் வராததுமாய், "மணி, நான் காலையில் வந்திருந்தேன். நீ எங்கே போயிருந்தாய்?" என்றான்.

"நீயா வந்திருந்தாய்?" என்று கேட்டுவிட்டு மணி மௌனமாகிவிட்டான்.

"மணி, எனக்கேற்பட்ட ஆச்சரியத்தில் என் பெயரைக்கூடச் சொல்ல மறந்துபோனேன்."

ராமுவின் தொண்டை அடைபட்டது. மணி தலைகுனிந்து கொண்டான்; அவனால் பேசவே முடியவில்லை. நண்பர்கள் இரு

வரும் சில நிமிஷநேரம் மௌனமாக உட்கார்ந்திருந்தார்கள். ராமு நிலைமையை ஊகித்துவிட்டான். திடீரென்று எழுந்தான்.

"மணி, நான் போய்விட்டு வருகிறேன். இதைச் சொல்லத்தான் வந்தேன்."

"இங்கேயே சாப்பிடேன், ராமு?"

"இல்லை. இன்று வேண்டாம்!"

## 4

இரவு சாப்பாடு முடிந்தது. ஜன்னல் வழியே வந்த நிலவைக் கவனிப்பதுபோல மணி ஏங்கிப்போய் உட்கார்ந்து கொண்டிருந்தான். சாரதா பால் டம்ளரை எடுத்துக்கொண்டு வந்து மௌனமாக நீட்டினாள்.

அதுவரையில் அவளுடைய முகத்தைப் பார்க்கக்கூட அவனுக்குத் தைரியம் வரவில்லை. அப்பொழுது மெள்ளத் தலையெடுத்துப் பார்த்தான். அவள் முகத்தில் தோன்றிய துக்கக் குறியைக் கண்டு பதுங்கிப் போனான்; எழுந்து அவள் தோளைப் பிடித்துக் கொண்டான்.

"சாரதா!" என்று சொல்லி மளமள வென்று கண்ணீர் விட்டான்.

"வேண்டாம்; ஒன்றுமில்லை" என்று சாரதா அவன் முகத்தைத் தடவினாள்.

"நான் சொன்னது தவறு—"என்று மணி தன் மனதை வெளியிட ஆரம்பித்தான்.

"கனகாம்பரம் எனக்குப் பிடிக்காதே!" என்று சாரதா, பெண்களுக்கென்றே ஏற்பட்ட சாதுரியத்துடன் பேச்சை மாற்றினாள்.



# திரையும் காட்சியும்

"தீபன்"

## 1

நாடகம் 9-30 மணிக்கு ஆரம்பம். கூட்டம் இமைக்க முடியாது. 9-மணிக்கே கொட்டகை நிறைந்து விட்டது. திரை தொங்கிக் கொண்டிருக்கிறது. அடிக்கடி காற்றில் அலேயடிப்பதுபோல் இலேசாக அசைந்தாடுகிறது. ஜனங்கள், "எப்படா திரையைத் தூக்குவான்! உள்ளே ஜோடித்து வைக்கப் பட்டிருக்கும் காட்சியைப் பார்க்கலாம்!" என்றிருக்கிருர்கள். அதாவது திரை தூக்கப்படும் நேரத்தை ஆவலுடன் எதிர்பார்த்தவண்ணம் இருக்கிருர்கள். இந்தஆத்திரம் காரணமாக ஜனங்களுக்குள் ஒருவிதமான பரபரப்பு ஏற்பட்டு நேரமாக ஆக அதிகப்பட்டுக்கொண்டே வருகிறது. கடைசியில் திரைதூக்கப் படுகிறது. மயில் வாகனத்தில் வேலாயுதத்துடன் சுப்ரமண்யர் வீற்றிருக்கும் திருக்கோலக் காட்சி. ஜனங்களுடைய கைகள் தாமாகவே தொழும் பாவனே யில் குவிகின்றன. அப்படி லயித்துப்போய் விடுகிருர்கள் அந்தக் காட்சியில்.

காட்சி முடிந்ததும் திரை விடப்படுகிறது. மறுபடியும் திரை தொங்கிக் கொண்டிருக்கிறது. காற்றில் ஊசலாடுகிறது. கொஞ்ச நேரத்துக்கு ஜனங் கள் திரையால் மறைக்கப்பட்ட காட்சியைப் பற்றிப் பேசிக் கொண்டிருக் கிருர்கள். பிற்பாடு இனி வரும் காட்சியைப் பற்றிய சிந்தனே. அது அப்படி யிருக்கும், இப்படியிருக்கும் என்றெல்லாம் மனேதர்மத்தில் சித்திரித்துக் கொள்ளுகிருர்கள். அந்தக் காட்சியைப் பார்க்க ஆவல் உண்டாகிறது. அதைக் கண்டுகளிப்பதற்கு இடையூருகத் தொங்கிக்கொண்டிருக்கும் திரையைச் சபிக் கிருர்கள். இவர்களுடைய சாபத்துக்குப் பயந்தோ என்னவோ திரையும் தூக்கப்படுகிறது. வள்ளியம்மை "சோ! சோ!" என்று கூவிப் பறவைகளே விரட்டிக்கொண்டு தினேப்புனம் காக்கும் காட்சி; இதுவும் ஜனங்களுடைய மனதைப் பரவசமாக்குகிறது. இந்தக் காட்சி முடிந்ததும் மறுபடியும் திரை விடப்படுகிறது.

இந்த விதமாக, காட்சிகளுக்கிடையில் திரைபோட்டுத் தூக்கும் வழக்கம் நம்முடைய நாடகமேடையில் வெகு காலமாக இருந்து வந்திருக் கிறது. திரைபோட்டுத் தூக்கும் இந்தச் சம்பிரதாயம் காரணமாக ஒரு காட் சிக்கு இல்லாத ஒரு மதிப்பு ஏற்பட்டுவிடுகிறது. எந்தப் பொருளேயும் கொஞ்ச நேரம் மறைத்து வைத்துப் பார்க்கப் போகிறவர்களே ஆவலுடன் எதிர்பார்க்க வைத்துப் பின்பு காண்பித்தால் அது நன்கு சோபிக்கும். இது ஒரு மனே தத்துவ உண்மை. இந்த உண்மையை அடிப்படையாகக் கொண்டதுதான் மேலேசொன்ன நாடகமேடைச்சம்பிரதாயமும். ஒரு ரகஸியத்தைத்தெரிந்து கொள்வதற்கு மனம் துடியாய்த் துடிக்கிறது. நாளுக்கு நாள் அதுபற்றி

ஆத்திரம் அதிகமாகிக் கொண்டே வருகிறது. கடைசியில் ரகஸியம் வெளி யானதும், நாம் அளவிலா ஆனந்தம் அடைகிறோம். இந்த ஆனந்தத்துக்கு ஒரு முக்கியமான காரணம், நாம் எப்பொழுது ரகஸியம் வெளியாகும் என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்ததுதான். இது மனித சுபாவம். குழந்தைமுதல் கிழவன் வரையில் எல்லாருக்கும் இந்தமாதிரி மனப்பான்மை இருக்கிறது என்ற உண்மையை யாரும் அனுபவத்தில் கண்டறியலாம்; உணரலாம்.

## 2

ஒரு நாள் பாலா அடுப்பங்கரையில் ஒரு மூலையில் ஒரு சின்னஞ்சிறு சிங்காரத் தொட்டில் கட்டி, அதில் படுக்கை விரித்துத் தலையணைகளும் போட்டு, அதன் மேல் மரப்பாச்சி ஒன்றைப் படுக்கவைத்து, "ஆராரோ ஆரா ரோ" என்று தாலாட்டுப் பாடி அதைத் தூங்கப் பண்ணிக்கொண்டிருந்தாள். அப்பொழுது வாசல் பக்கமிருந்து யாரோ, "பாலா! பாலா!" என்று கூப் பிடும் சத்தம் கேட்டது. "சரி, மாமாதான் இன்றைக்கும் ஏதாவது வாங்கிக் கொண்டு வந்திருப்பார்' என்று எண்ணிக்கொண்டு வாசல் பக்கம் ஓடோடி யும் வந்தாள். மாமாவைக் காணவில்லை. வீடு முழுவதும் அறை அறையாகத் தேடிப் பார்த்தாள். மாமாவைக் காணவில்லை. அப்படியே வீட்டுக்குப் பின்புற முள்ள தோட்டத்துக்குப் போனாள். அங்குமிங்கும் தேடிக் கொண்டிருக்கும் பொழுது ஒரு புதருக்குள் மாமா பதுங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து விட்டாள். உடனே "மாமா! மாமா! உன்னைக் கண்டு பிடிச்சிட்டண்டோ!" என்று கத்திக் கொண்டே மாமா இருக்கும் புதாண்டை போனாள். ஆனால் மாமா மாயமாய் மறைந்துவிட்டார்; இன்னொரு புதருக்குள் நுழைந்துவிட்டார். பாலா அந்தப் புதாண்டை போனதும் மாமா அதை விட்டு அப்புறம் போய் விட்டார்.

இப்பொழுது மாமா வெட்டவெளிக்கு வந்துவிட்டார். பாலா அவர் பக்கத்தில் போனதும் அவர் இரண்டு கைகளையும் பின்னால் சேர்த்து வைத் துக் கொண்டு கொஞ்ச நேரம் ஓட்டம் காண்பித்தார். பாலாவுக்கு ஓடி ஓடி மூசு மூசு என்று இளைக்க ஆரம்பித்துவிட்டது. பன்னீர் தெளித்தது போல் பாலாவின் நெற்றியில் வியர்வைத் துளிகள் முத்துப்போலிருந்தன. இந்தக் காட்சியைப் பார்த்துத்தான் மாமாவுக்கு மனம் கொஞ்சம் இளகிற்று. அப்படியே அவர் நின்று கொண்டு, "இங்கே வா பாலா! இனிமேல் ஓட்டம் காண்பிக்கவில்லை" என்றார். பாலா மாமா பக்கம் வந்தாள். வந்ததும் மாமா, "நான் ஒரு சாமான் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறேன்" என்றார். "அது தான் எனக்குத் தெரியுமே. அது என்ன சாமான்னு சொல்லு" என்று பாலா கேட்டாள். "ஒரு மரப்பாச்சி" என்று மாமா சொன்னதும் "மரப்பாச்சியா? எங்கே பார்ப்போம்; காண்பி" என்று பரபரப்புடன் கெஞ்சினாள் பாலா.

மாமா அந்த மரப்பாச்சியை லகுவில் காண்பித்து விடுவாரா? அதை வலதுகையில் வைத்துக் கொண்டு, "இதோ பார்" என்று சிக்கென்று மூடி யிருந்த அந்தக் கையைப் பாலா பக்கம் நீட்டினார். அதைப் பாலா எட்டிப் பிடிக்க முயன்றபொழுது மாமா கையைத் தலைக்குமேல் தூக்கிவிட்டார். பாலா

எழும்பி எழும்பிப் பார்த்தாள். எட்டவில்லை. மாமா கொஞ்சம் மனமிரங்கிக் கையைக் கீழே தாழ்த்தினர். அதைப் பாலா பிடிக்கப்பார்க்கவும் மறுபடியும் மேலே தூக்கிவிட்டார். இப்படிக் கொஞ்சநேரம் விளையாட்டுக் காண்பித்தார். அடிக்கடி ஏமாற்றம் அடைய அடைய, பாலாவுக்கு மாமா கைக்குள்ளிருக்கும் சாமானைப் பார்த்து விடவேண்டும் என்ற ஆவலும் ஆத்திரமும் அதிகமாகிக் கொண்டே வந்தன. அவளுடைய முகத்தைப் பார்த்து அதை அறிந்து மாமா பரம சந்தோஷப் பட்டுக் கொண்டார். கடைசியில் மரப்பாச்சி ஒளித்துக் கொண்டிருந்த கையைப் பாலாவிடம் நீட்டினர். அவள் தன் இருகைகளாலும் அவர் கையைத் திறக்கப் பெரும்பாடுபட்டுக் கடைசியில் மாமாவின் உதவியால் திறந்துவிட்டாள். திறந்ததும் என்ன பார்த்தாள்? இவ்வளவுநேரம் தவம் கிடந்து பார்க்கவேணும் என்றிருந்த மரப்பாச்சியைத்தான்! அதைப் படக் கென்று பிடுங்கி மார்போடு சேர்த்து வைத்துக்கொண்டு உச்சி மோந்து முத்தமிட்டுக் கொஞ்சிக்கொண்டே அடுப்பங்கரைக்குள் ஓடிவிட்டாள். அங்கே மூலையில் தொங்கிக் கொண்டிருந்த தொட்டிலில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த மரப்பாச்சியை எடுத்துத் தன்னுடைய பெட்டிக்குள் வைத்தாள். மார்போடு சேர்த்து வைத்திருந்த புதிய மரப்பாச்சியை அந்தச் சின்னஞ்சிறு சிங்காரத் தொட்டிலில் படுக்கப் போட்டாள். ஆனந்த பரவசமாக, "ஆராரோ ஆரிரரோ!" என்று தாலாட்ட ஆரம்பித்துவிட்டாள்.

## 3

பீர் முகம்மதுக்கும் குஸுமா பீபீக்கும் கலியாணம் ஆகிவிட்டது. இரண்டு பேரும் முதல்முதலாகப் படுக்கை அறையில் சந்திக்கும் இரவு. பீர் முகம்மது கட்டிலில் உட்கார்ந்திருக்கிறான். பீபீ அறைக்குள் கொண்டு வந்து விடப்படுகிறாள். நாணமிகுதியினால் ஒரு மூலையில்போய் நின்று கொள்ளுகிறாள். முகம்மது அவள் கையைப்பிடித்துக் கூட்டிக்கொண்டு வந்து படுக்கையில் உட்கார வைத்துத் தானும் அவள் பக்கத்தில் உட்கார்ந்துகொள்ளுகிறான். கொஞ்சநேரத்துக்கு இரண்டு பேரும் என்ன செய்வதென்று தெரியாமல் வெட்கத்தினால் சும்மா விருக்கிறார்கள். அவன் அவளுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கலாமே என்றால், அந்த முகம் ஒரு மெல்லிய மஸ்லின் துணியால் மூடப்பட்டிருக்கிறது. அந்த முகத்தைப்பற்றி உம்மாவும் (அம்மா) அக்காளும் பிரமாதமாகச் சொன்னதெல்லாம் முகம்மதுக்கு ஞாபகத்திற்கு வந்தது. 'அவர்கள் சொன்னதெல்லாம் வாஸ்தவந்தானா? சரிதானா?' என்று தெரிந்துகொள்ளுவதற்கு எவ்வளவு ஆத்திரம் இருக்கும் அவனுக்கு? உடனே, அவன் அந்த முகத்தை மறைத்துக் கொண்டிருந்த மஸ்லின் துணியை மெல்ல விலக்கினான். அதைப் பார்த்ததும் முகம்மதுக்கு உண்டான ஆனந்தத்தை அளவிட்டுச் சொல்ல முடியாது.

## 4

ஒரு பெண் எதற்காகப் பிறக்கிறாள்? இன்னொரு பெண்ணை அல்லது பிள்ளையைப் பெற்றெடுத்து, வளர்த்து, உலகத்துக்கு அர்ப்பணம் செய்து விடத்தான் என்றால் பொருந்தும். இந்த உலகத்தில் இதுதான் ஒரு பெண் செய்யவேண்டிய ஒரு பெரிய வேலை. இதுதான் அவள் செய்யும் மகத்தான

சமூகத் தொண்டு. இதுதான் அவளுடைய ஒரே வாழ்க்கை லட்சியம். உலகத்துக்கு இந்தப் பேருபகாரத்தைச் செய்வதற்கென்றே கடவுள் பெண்ணைப் படைத்ததுவும் அல்லாமல் அவளுக்கு அதற்கு வேண்டிய ஓர் அற்புதமான மனசையும் கொடுத்திருக்கிறார். பெண்களின் மனமே ஒரு தனிப் பண்பு வாய்ந்தது.

பார்வதி சிறு பெண்ணாக இருக்கும் பொழுதே அவளுக்குக் குழந்தைகளின்மேல் ஓர் அற்புதமான பாசம் ஏற்பட்டு விட்டது. மரப்பாச்சிப் பொம்மையைக் குழந்தை என்று எண்ணிக்கொண்டு அதைச் சீராட்டிப் பாராட்டிய கால முதற்கொண்டே அவள் மனசில் தாயாராவதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் தாமாகவே அவளறியாமலே நடந்து கொண்டு வந்தன. நாளுக்கு நாள், பொதுவாகக் குழந்தைகள்மேல் பிரியமும், தானும் ஒரு குழந்தையைப் பெறவேண்டும் என்ற ஆசையும் வளர்ந்து கொண்டே வந்தன. ஒரு சிறு குழந்தையை அவள் ஒக்கலில் வைத்துக் கொண்டு அதை ஆர்வத்தோடு முத்தமிடும் போதெல்லாம் தனக்குப் பிறக்கப்போகும் குழந்தையைப் பற்றிய எண்ணமும் ஏக்கமும் அவளை யறியாமலேயே அவள் மனசில் உண்டாயின. இன்னும் அவளுடைய வாழ்க்கையில் அதி முக்கியமான சம்பவங்கள் நடக்கும்போதெல்லாம் இந்த எண்ணமும் ஏக்கமும் அவளுக்கு ஏற்படத்தான் செய்தன. குழந்தையைப் பற்றிய இந்த எண்ணமும் ஏக்கமும் அவள் கர்ப்பமாயிருக்கும் காலத்தில் உச்சநிலையை அடைந்தன. கர்ப்பமானதிலிருந்து அவள் குழந்தை பிறக்கப்போகும் நாளையே சதா எதிர்பார்த்தவண்ணமா யிருந்தாள். அந்தப் பத்துமாசத்தையும் பிறக்கப்போகும் குழந்தையின் ஞாபகமாகவே கழித்தாள். 'அந்தக் குழந்தைக்கு மூக்கு இப்படியிருக்கும், காது அப்படியிருக்கும், கண் இப்படியிருக்கும்' என்றெல்லாம் எண்ணிக்கொண்டிருந்தாள். பத்துமாசம் வயிற்றில் இருந்த குழந்தை பிறந்ததும் தன்னுடைய வாழ்க்கை லட்சியமே கைகூடிவிட்டது என்று மனம் பூரித்தாள். குழந்தை முதல்முதலாக அழுத சப்தம் பார்வதிக்குத் தெய்விகமாகவே இருந்தது; காதில் அமிர்தத்தை ஊற்றினாற்போலிருந்தது. குழந்தையைக் கண்ணால் கண்டதும் அவளடைந்த ஆனந்தத்துக்கு ஓரளவுண்டா? அந்த ஆனந்தத்தை இப்படி அப்படி என்று எடுத்துச் சொல்லத்தான் முடியுமா? முடியவே முடியாது. ஏனென்றால் அந்த ஆனந்த உணர்ச்சிக்கு ஒப்பான வேறோர் ஆனந்த உணர்ச்சி இந்த உலகத்தில் இல்லை.

இந்தச் சம்பவத்தில் நமக்கெல்லாம் (ஆண்மக்களுக்கு) இவ்வளவு ஆனந்தம் இருக்குமா? இராது. நம்மால் பார்வதி அளவு இதில் ஈடுபட்டு ஆனந்த பரவசம் அடைய முடியுமா? முடியவே முடியாது. காரணம், நாம் அவ்வளவு ஆத்திரத்தோடும் ஆர்வத்தோடும் இந்தச் சம்பவத்தை எதிர்பார்க்க முடியாததுதான். எதிர்பார்க்க முடியுமானால் நாமும் பார்வதி அளவு ஆனந்தம் அடையலாம். ஆனால் இது நமக்கு இந்த ஜன்மத்தில் சாத்தியமில்லை. இப்பேர்ப்பட்ட ஒரு மகத்தான இன்பத்தை அனுபவிப்பதற்காக நாம் அடுத்த ஜன்மத்திலாவது பெண்ணாகப் பிறக்கும்படி ஆண்டவன் அருள்வானாக!

## 5

ஆண்டவன் சித்விலாச நாதனாக விளங்குகிறான். அவன் இல்லாத இடமில்லை. அவன் ஆடாத இடமில்லை. அவன் ஆடாத நேரமும் இல்லை. சதா அவன் உலகமாகிய நாடக அரங்கத்தில் திருநடனம் புரிந்துகொண்டிருக்கிறான். பக்தசிரோன்மணியான ஒரு பெண்ணுக்கு எம்பெருமானின் திருநடனத்தைக் கண்டு களிக்கவேண்டுமென்று ஆசை; நாளுக்கு நாள் இந்த ஆசை அதிகமாகிக்கொண்டே வருகிறது. சதா அந்த நடனத்தையே நினைந்து நினைந்து உருகிக்கொண்டிருக்கிறாள். 'என்று காண்பேன்! எம்பெருமான் ஆடும் இணையில்லாக் காட்சியை என்று காண்பேன்!' என்று ஏங்கிக்கொண்டிருக்கிறாள். ஆனால் அவளால் அந்தக் காட்சியைப் பார்க்க முடியவில்லை. காரணம், அவளுக்கும் அந்தக் காட்சிக்கும் நடுவே அறியாமை என்ற திரை ஒன்று தொங்கிக்கொண்டிருக்கிறது. அதை நீக்கினால்தான் திருநடனக் காட்சியைக் கண்டு தரிசிக்கலாம். அவள் அந்தத் திரையை நீக்கப் பெரும்பாடு படுகிறாள். பெரும்பாடு பட்டுக் கடைசியில் திரையை நீக்கிவிடுகிறாள். நீக்கவும், ஞானக் கண்ணால் ஆண்டவன் ஆடும் திருநடனக் காட்சியைக் கண்டு ஆனந்தபரவசம் அடைகிறாள். அந்த ஆனந்தபரவச நிலையை அவள் பின்வருமாறு தெரிவிக்கிறாள் :

" வேற்றுமுகம் பாரேனென்னோ டாடவாரீர்
வெட்கமெல்லாம் விட்டுவிட்டேன் ஆடவாரீர்
மாற்றுதற்கெண் ணுதிரென்னோ டாடவாரீர்
மாற்றிலுயிர் மாய்ப்பேன்கண்டீ ராடவாரீர்
ஆடவா ரீர்என்னோ டாடவாரீர்
அம்பலத்தில் ஆடுகின்றீர் ஆடவாரீர்."





# சிறுவர் பகுதி

## கோடாலிக்காரன்

'முத்தண்ணா'

---

அமெரிக்கா தேசத்திலே ஒரு சிறு ஊர். அந்த ஊரிலே ஒரு வீட்டின் வாசல்புறத்திலே பையன் ஒருவன் நின்றுகொண்டிருந்தான். அப்பொழுது பனிக்காலம். குளிர் வெட வெட என்று நடுக்கிக் கொண்டிருந்தது.

வாசலோடு ஒருவன் போனான். அவனுடைய தோளிலே கோடாலி ஒன்று சார்த்தியிருந்தது. வாசலில் நிற்கும் பையனைப் பார்த்து, அவன் மிகவும் மலர்ந்த முகத்தோடு தனக்குத் தானே பேசிக் கொள்பவனைப்போல், "இந்தப் பையன் யாரோ தெரியவில்லை? நல்ல லக்ஷணமா யிருக்கிறான்" என்று பையனுடைய காதில் படும்படிச் சொன்னான். பையனுடைய முகமும் உடனே சந்தோஷத்தால் மலர்ந்தது. பிறகு கோடாலிக்காரன் கிட்ட வந்து, "குழந்தாய், உங்கள் வீட்டிலே சாணைக்கல் இருக்கிறதோ?" என்று கேட்டான்.



"இருக்கிறதே; அதோ அந்தக் கொட்டகையில் இருக்கிறது" என்ருன் பையன்.

"அப்படியா? நீ நல்லவனே இல்லேயோ! உங்கள் வீட்டுக் கல்லிலே என்னுடைய கோடாலியைக் கொஞ்சம் தீட்டிக்கொள்ளலாமா?" என்ருன் பெரியவன்.

"ஆஹா, நன்ருய்த் தீட்டிக்கொள்ளலாம்" என்ருன் முகஸ்துதியால் வசமான பையன்.

"சரி, சந்தோஷம். நீ சமர்த்தாயிற்றே. சாணைக் கல்லுக்குப் போடக் கொஞ்சம் தண்ணீர் கொண்டுவர மாட்டாயா?" என்று பையனைத் தட்டிக் கொடுத்துக் கொண்டே கேட்டான் பெரியவன்.

பையன் ஓடிப்போய் ஒரு செம்பில் தண்ணீர் எடுத்துக்கொண்டு வந்தான். "அடே, அதற்குள் கொண்டுவந்து விட்டாயே! நீ பலே கெட்டிக்காரன் போலிருக்கிறதே!" என்று புகழ்ந்தான் அந்த ஆள். பையனுடைய சந்தோஷத்துக்கு அளவே இல்லே.

கோடாலிக்காரன், "உன் பெயரென்ன? பையா! உனக்கு எத்தனே வயசாச்சு? உன்னைப் பார்த்தால் நல்ல பலசாலிபோல் இருக்கிறதே! எங்கே, கையை மடக்கு பார்ப்போம்" என்று அடுக்கிக்கொண்டே போனுன். பையனுக்குச் சந்தோஷம் வைக்க இடம் இல்லே.



"கண்ணே, இங்கே வா. இந்தச் சாணைக்கல்லேச் சற்றே சுற்றமாட்டாயா? ராஜாப் பயலாச்சே நீ" என்ருன் வந்தவன்.

பையன் சுற்றத் தொடங்கினுன். முதலில் ஜோராகவும் உற்சாகத்துடனும் சுற்றினுன். பிறகு வர வரச் சுற்றுகிற வேகம் குறைய ஆரம்பித்தது.

கோடாலி முழு மொண்ணையாக இருந்தது. சுற்றச் சுற்ற அது கூர்மையாகிற வழியைக் காணவில்லை. மூச்சைப் பிடித்துக்கொண்டு பையன் சுற்றிக்கொண்டே வந்தான். பையன் கையெல்லாம் கொப்புளித்துப் போய்விட்டது. பள்ளிக்கூடத்து மணி அடித்தது. கைவேலையை விட்டுப் போக முடியவில்லை. கை கொப்புளிக்க, மூச்சுத் திணறத் திணறப் பையன் எவ்வளவோ சுற்றியும் கோடாலி முக்கால் வாசிதான் கூர்மையாகி யிருந்தது. பிறகு எப்படியோ ஒரு மட்டுக்குக் கோடாலி தீட்டி முடிந்தது.

முடிந்ததோ இல்லையோ பெரியவனுடைய குணத்தில் ஒரு பெரிய மாறுதல் உண்டாயிற்று. பையனைப் பார்த்துச் சீறி விழுந்தான். "சோம்பேறிப் பயலே! மணி அடித்த பிறகும் பள்ளிக்கூடத்துக்குப் போகாமல் இங்கே விளையாடிக் கொண்டிருக்கிறாயே. ஓடிப்போ, பள்ளிக்கூடத்துக்கு! இல்லாவிட்டால் உதை விழப்போகிறது" என்று கோடாலியை எடுத்துக் கொண்டு நடந்து விட்டான்.



பையனுக்குத் துக்கம் நெஞ்சடைத்துக் கொண்டு வந்தது. 'எவ்வளவு கஷ்டப்பட்டு வேலை செய்தேன்! கையெல்லாம் புண்ணாய்ப் போச்சு. இந்தக் குளிர் நாளிலும் வேர்வை கொட்டுகிறது. சோம்பேறியாம்! நானா சோம்பேறி? எந்தச் சோம்பேறி இப்படி வேலை செய்வான்? விளையாடிக் கொண்டிருந்தேனாம். இதுவா விளையாட்டு? நான் செய்த வேலைக்குக் கிடைத்த உபகாரத்தைப் பார்த்தாயா? ஒரு நல்ல வார்த்தை சொல்லவில்லை. உதை விழுமாம், உதை!'

என்று வெகுநேரம் பையன் தன்னைத் தானே நொந்து கொண்டான். தான் முதலில் அடைந்த சந்தோஷத்தையும் பிறகு அடைந்த உடல்சிரமத்தையும் மனோ வேதனையையும் எண்ணி எண்ணி அவன் கண்ணீர் வடித்தான். அவனுடைய நெஞ்சு புண்ணாகிவிட்டது.

பிறகு, "அவனைக் குற்றம்சொல்லுவானேன்? அவனுடைய நயவஞ்சக வார்த்தைகளைக் கேட்டு ஏமாந்து போன என்னைத்தான் குற்றம் சொல்லவேண்டும்" என்று சொல்லிக்கொண்டான்.

அன்று படித்த பாடம் அவனுடைய மனத்திலே நன்றாகப் பதிந்துவிட்டது. அதை அவன் ஒரு நாளும் மறக்கவில்லை. பிற்காலத்திலே யாராவது தேனொழுகப் பேசினால், உடனே, 'ஓகோ! இவனுக்குக் கோடாலியைச் சாணைபிடிக்க வேண்டும் போலிருக்கிறது' என்று அவனிடம் வெகு ஜாக்கிரதையாய் நடந்துகொள்ளுவான்.

அந்தப் பையன் யார் தெரியுமா?

உலகப் பிரசித்திபெற்ற விஞ்ஞானியாய் ஐக்கிய நாடுகளில் முதன்மை ஸ்தானம்பெற்று, அவற்றுக்குத் தலைவனும் ஆகி மேதாவியாய் விளங்கிய பெஞ்ஜமின் பிராங்க்லின்தான் அந்தப் பையன்.



## ‘புக்ககு வாழ்வு’

### 1

ஐயா,

மார்கழி மாதத்துக் “கலைமகளி”ல் ஸ்ரீமான் வையாபுரிப் பிள்ளையவர்கள் ‘புக்கக வாழ்வு’ என்ற தலைப்பின் கீழ் ஒரு பழைய செய்யுளைக் கொடுத்து, அதன் ஆசிரியர் பெயர் தெரிந்திலது எனக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அந்தச் செய்யுள் சில பாடபேதங்களுடன் ஏற்கெனவே “செந்தமிழ்” ஐந்தாவது தொகுதி 107-ஆம் பக்கத்தில் பிரசுரமாகியிருக்கிறது. அதனைத் திரிசிரபுரம் ராமலிங்கம் பிள்ளை இயற்றினார் என்று அங்கே பிரஸ்தாபிக்கப் பட்டுள்ளது. அந்தச் செய்யுள் வருமாறு:—

“இராமழை பெய்த விரவீ ரத்துள்
பனைநுகங் கொண்டு யானையேர் பூட்டி
வெள்ளி விதைத்துப் பொன்னே விளையினும்
வேண்டேன் பிறந்தகத் தீண்டிய வாழ்வே
செங்கேழ் வரகுப் பசுங்கதிர் கொய்து
கன்று காத்துக் குன்றி லுணக்கி
ஊடுபதர் போக்கிமுன் னுதவினோர்க் குதவிக்
காடுகழி யிந்தனம் பாடுபார்த் தெடுத்துக்
குப்பைக் கீரை யுப்பின்று வெந்ததை
இரவற் றாலம் பரிவுடன் வாங்கிச்
சோறது கொண்டு பீறல டைத்தே
ஒன்றுவிட் டொருநாட் டின்று கிடப்பினும்
நன்றே தோழிநங் கணவன் வாழ்வே.”

கோபாலபுரம்
24—1—38

இங்ஙனம்,
அன்பன்
ஜி. தாதாசாரி.

‘புக்கக வாழ்வு’ என்ற தலைப்பின்கீழ் என்னால் வெளியிடப்பட்ட செய்யுள் ‘செந்தமிழ்’ப் பத்திரிகையில் (v. 107) ஏற்கெனவே வெளிவந்துள்ளமையை அன்புடன் தெரிவித்த நண்பர் ஸ்ரீ தாதாசாரியாரவர்களுக்கு எனது வந்தனம் உரியதாகின்றது. ஆனால் அச்செய்யுளை இயற்றியவர் இன்னாரென்பது இன்னும் அறியாப் பொருளாகவே யுள்ளது. ‘அதனைத் திரிசிரபுரம் ராமலிங்கம் பிள்ளை இயற்றினார் என்று அங்கே (செந்தமிழில்) பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளது’ என்று நண்பரவர்கள் எழுதுகின்றார்கள். ‘செந்தமிழ்’ அவ்வாறு கூறவில்லை. அங்கு, ‘திரிசிரபுரம் அஷ்டாவதானம் ஸ்ரீமத் இராமலிங்கம் பிள்ளையவர்கள் அகவலில் அமைந்த பழைய விடுபாடலொன்றை உதவினார்கள்’ என்றே காணப்படுகின்றது. ஆகவே செய்யுளியற்றியோரைக் குறித்து நண்பரவர்கள் எழுதியதற்கு ஆதாரமின்மை தெளியலாம்.

எஸ். வையாபுரிப் பிள்ளை.

## 2

## பிங்கலை கதை

**மா**சிமாதத்துக் 'கலைமகளி'ல் ம-ா-ா-ஸ்ரீ டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்கள் பதிப்பித்துவரும் "சிவ சிவ வெண்பா" வின் 123-ஆவது செய்யுளில் "பிங்கலை" என்ற பெயர் வந்திருக்கிறது. அச்செய்யுளின் குறிப்புரையில், 'பிங்கலை யென்பாள் இன்னளென்பது இப்பொழுது விளங்கவில்லை' என்று கண்டிருக்கிறது. பிங்கலை என்பாளுடைய கதை ஸ்ரீமத்பாகவதம், 11-ஆவது ஸ்கந்தம், 8-ஆவது அத்தியாயத்தில் கூறப்பெற்றுள்ளது. அதன் சம்பந்தமான குறள் 1230-ஆம் இலக்கத்தை யுடையது. அது வருமாறு:—

> "பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
> மாயுமென் மாயா வுயிர்."

இதற்குப் பரிமேலழகர் வரைந்த உரையாவது:—

> 'காதலர் பிரிவைப் பொறுத்து இறந்து படாதிருந்த என்னுயிர் இன்று பொருளியல்பே தமக்கியல்பாக வுடையவரை நினைந்து, இம்மயங்குமாலைக் கண்ணே இறந்துபடா நின்றது'

என்பது. இவ்வாக்கியத்திற்குப் பிங்கலை மிகவும் பொருத்தமான இலக்காய் நின்றனள் என்பதை வைத்துச் சிவசிவவெண்பா ஆசிரியர்,

> "வாடிக் கணவனுரு வல்லிரவிற் பிங்கலையும்
> தேடிமன நொந்தாள் சிவசிவா"

என்று பாடினர். பொருத்தத்தை நன்குணர்த்துமாறு பாகவதத்திலுள்ள வரலாற்றை இங்கே தருகின்றேன்:

"முற்காலத்தில் விதேஹ நகரத்தில் பிங்கலை என்ற ஒரு வேசை இருந்தாள். ஒரு சமயம் அவ்வேசை தன்னை வெகு சிறப்பாய் அலங்கரித்துக் கொண்டு சரியான நேரத்தில் வெளிவாசலில் தோன்றினள். அவள் பொருளாசை கொண்டவளாய் வழியே போகிறவர்களையெல்லாம் கண்டு, அவர்கள் தனக்குப் பணத்தைக் கொடுக்கக்கூடிய செல்வம் படைத்த காதலர்கள் என்று எண்ணினள். வந்தவர்கள் எல்லாம் போகவே, அவள், தனக்கு ஏராளமாகப் பணத்தைக் கொடுக்கக்கூடிய வேறு எவனுவது ஒரு தனவான் தன்னிடம் வருவான் என்ற வீணசையால் உறக்கமற்றவளாய், வெளிவாயிலைச் சார்ந்தவளாய், நடு நிசிவரையும் வெளியே வந்துகொண்டும் உள்ளே போய்க்கொண்டும் இருந்தாள். பொருளாசையால் அவளுக்கு முகம் உலர்ந்து, மனம்இடியவே, ஒரு திடவைராக்கியம்ஏற்பட்டது. மனிதனுடைய ஆசாபாசங்களுக்கு வைராக்கியமானது கத்திபோல் ஆகின்றது. ஞானமில்லாத மனிதன் எவ்வாறு மமதையை விடானே அவ்வாறே வைராக்கியமில்லாதவன் உடற்பாசத்தை விடான். பிங்கலை 'ஐயோ! மனத்தை அடக்காத என்னுடைய மோகத்தைப் பாருங்கள்! நிலையற்ற காதலனிடமிருந்து காதலை நான் வேண்டுவதால் நானொரு பேதை. அறிவிலியாகிய நான், என்பக்கத்திருக்கின்றவனும், உண்மையான இன்பந் தரக்கூடியவனும், நிலையுள்ள

பொருளைத் தருகின்றவனும், அழிவற்றவனும் ஆகிய ஒரு காதலனை விடுத்து, இன்பந்தர இயலாதவனும் துன்பத்தையும் அச்சத்தையும் கவலையையும் துயரத்தையும் மருட்சியையுமே தரக்கூடியவனும் இழிந்தவனுமான ஒருவனைப் போற்றுகின்றேனே! மிகவும் இகழப்படுகின்றதும் மானத்தை விற்று ஜீவிக்கவேண்டியதும் ஆகிய என் தொழிலால் எனது ஆத்மாவை வீணே பரிதவிக்கச் செய்தேன். ஸ்திரீலோலுபனும், பேராசை கொண்டவனும் உள்ளவனிடமிருந்து பொருளையும் இன்பத்தையும் விரும்பும் என்பால் எல்லோரும் இரங்கவேண்டும். எலும்புகளால் செய்யப்பட்டதும், கைகால்களாகிய மூங்கிற்றூண்களை யுடையதும், தோல், மயிர், நகம் இவைகளால் கட்டப்பட்டதும், நீர்வழிகின்ற ஒன்பது வாயில்களை உடையதும், மலமூத்திரங்கள் நிறைந்ததுமான இக்குடிலை என்னைத் தவிர வேறு எவள்தான் அடைவாள்? விதேகர்களுடைய இந்தப்புரியில் நான் ஒருத்தியே புல்லறிவுடையவள். தனது ஆத்மாவையும் கொடுக்கின்ற அழிவற்ற இறைவனை விடுத்து வேறு காதலனை விரும்பிய நான் எவ்வளவு தீயவள்! அவன் மிகவும் பிரியமான நண்பன், தலைவன், உடலுக்கு உயிர். அவனை என் ஆத்மாவைக் கொடுத்து விலைக்கு வாங்கி, அவனுடன் நான் திருமகள்போல் இன்புறுவேன். முதலும் முடிவும் உள்ள இன்பங்கள் என்ன சந்தோஷத்தைக் கொடுக்கும்? காமத்தைக் கொடுக்கும் மனிதரும் காலத்தால் தூத்தப்பட்ட தேவரும் தங்கள் மனைவிகட்கு என்ன சந்தோஷத்தைக் கொடுத்துவிட்டனர்? நான் செய்த ஏதோ ஒரு கர்மத்தினால் விஷ்ணுபகவான் நிச்சயமாய் என்னிடம் பிரியமாயிருக்கின்றான். ஆகையாற்றான், துராசையுள்ள எனக்கு இந்தஇன்பக்ரமான வைராக்கியம் உண்டாயிருக்கிறது. இல்லாமற்போனால், துரதிஷ்டக்காரியாகிய எனக்கு வைராக்கிய நிமித்தங்களாகிய கஷ்டங்கள் இவ்வாறு நேர்ந்திரா. வைராக்கியத்தினால் மனிதன் பாசங்களை அறுத்துக்கொண்டு சாந்தியடைகிறான். பகவானுடைய உபகாரத்தைத் தலையாலே வகித்து, புன்மையான கெட்ட ஆசைகளை நீக்கி,பரமேசுரனாகிய அவனைச் சரணமடைகின்றேன். சந்தோஷமுள்ளவளாய், நம்பிக்கை யுள்ளவளாய், கிடைத்ததை வைத்து ஜீவிப்பவளாய், என் மெய்க்காதலனாகிய அவனுடன் நான் விளையாடுகிறேன். ஸம்ஸாரமாகிய கிணற்றில் விழுந்து, சிற்றின்பங்களால் கண்ணிழந்து, காலசர்ப்பத்தால் பீடிக்கப்பட்டிருக்கும் ஆத்மாவைக் காப்பாற்றக்கூடிய ஈசுவரன் வேறு எவன்? எப்பொழுது ஒருவன் கலக்கமில்லாது இந்த ஜகமுழுவதும் காலசர்ப்பத்தால் பீடிக்கப்பட்டிருப்பதாக அறிந்து எல்லாவற்றையும் துறப்பானோ, அப்பொழுது அவனே தன்னைக் காப்பாற்றுபவன் ஆகிறான்' என்று இவ்வாறு அவள் உறுதிகொண்டு பொய்க்காதலனைக் காதலித்ததால் உண்டான துராசையை அறுத்தெறிந்து, சாந்தியடைந்து படுக்கப் புகுந்தாள். காதலன் ஆசையை அறுத்தபின் பிங்கலை சுகமாக நித்திரை செய்தாள்."

ஆர்த்ரா காரியாலயம்,
யாழ்ப்பாணம்.

இங்ஙனம்
ந. நாராயணன்.




சீன - ஜப்பான் : [ஆசிரியர்: எ. ஜி. வேங்கடாசாரி; நவயுகப்பிரசுராலயம் லிமிடெட், ஜி. டி. சென்னை; விலை அணா 8.] சீன ஜப்பான் யுத்தம் தொடங்குவதற்கு ஐந்தாறு வருஷங்களுக்கு முன்பு மஞ்சூரியா (இப்பொழுது மஞ்சுகோ)ப் பிரதேசத்தை ஜப்பான் அபகரித்துக் கொண்டதும் அவ்விரண்டு தேசத்தாரைப்பற்றியும் அவர்களுள் சச்சரவு ஏற்பட்டதன் காரணத்தைப் பற்றியும் அறிய நாம் எல்லோரும் ஆவல்கொண்டோம். சென்ற வருஷம் யுத்தம் ஆரம்பமானதும் அந்த அவா பன்மடங்காகியது. இப்பொழுது வெளிவந்திருக்கும் இப்புத்தகம் நாம் இதுவரை அந்தத் தேசங்களைப்பற்றி அறியாத பல புதிய விஷயங்கள் கொண்டதாகவும் மனதைக் கவர்வதாகவும் இருக்கிறது.

19-ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து சென்ற வருஷக் கடைசி வரை சீனாவிலும் ஜப்பானிலும் நிகழ்ந்த முக்கியமான சம்பவங்களை விரிவாகக் கூறி, அயல் நாட்டு வல்லரசுகளின் குட்டிக்கலகத்தினாலேயே இவ்விரு தேசத்தாருக்கு மிடையே மனக்கசப்பு ஏற்பட்டது என்பதை ஆசிரியர் தெரிவிக்கும்போது, ஜப்பானைவிட வல்லரசுகளின் மீதே நமக்கு அதிகக்கோபம் வருகிறது.

புத்தகத்தின் உள் அட்டைகளோடு சேர்ந்தாற்போல் சீனா-ஜப்பான், பஸிபிக் யுத்தரங்கம் என்ற படங்களைச்சேர்த்திருப்பது, ஜப்பான் சீனாவில் அபகரித்த பாகங்களை நாம் அறிய மிகவும் உதவியாக இருக்கிறது. அமெரிக்கா போன்ற வல்லரசுகளின் நிலையும் தெளிவாக விளங்குகிறது. மேலட்டையிலுள்ள வர்ணசித்திரமும் கண்ணைக் கவர்வதாக இருக்கிறது. நவயுகப்பிரசுராலயத்தார் இதுபோன்ற சமயத்திற்கேற்ற மலிவுப்பிரசுரங்களையே மேலும் மேலும் வெளியிட்டுத் தமிழ்மக்களுக்கு ஊக்கம் அளிப்பார்களாக.

### கடன்

(1) இந்திய விவசாயிகளின் கடனும் புதிய சட்டமும்:—விலை அணா 8.

(2) கடன் நிவாரணச்சட்டமும் அதைப்பற்றிய முழுவிவரங்களும்:—விலை அணா 12.

(3) அயல்நாடுகளில் கடன் தொல்லை ஒழிப்பு:—விலை அணா 12.

[இம் மூன்று புத்தகங்களும் எழுதியவர் : ஆசிரியர் ஏ. முத்தையா, எம். ஏ.; கிடைக்குமிடம் : தேசீய வித்யா சங்கம், 16, செம்புதாஸ் தெரு, சென்னை.]

விவசாயக் கடன் நிவாரண மசோதா சட்டமாகி அமுலுக்கு வரப் போகும் சமயத்தில் இம்மாதிரியான பிரசுரங்கள் வெளிவருவது போற்றத் தக்கதாகும். பொருளாதார ஆராய்ச்சியில் தேர்ச்சிபெற்ற இவற்றின் ஆசிரியர் அநேக புள்ளிவிவரங்கள் கொடுத்து, விவசாயிகள் கடன்வாங்க நேரிட்ட காரணங்களை ஒவ்வொன்ருக எடுத்துக் கூறும்போது இந்திய விவசாயிகளின் பரிதாபகரமான நிலைமை நம் கண்முன் வந்து நிற்கிறது. அதற்குப் பரிகாரம் தேடவேண்டியதன் அவசியத்தையும் உணர்கிறோம். அவர் எடுத்துக் காட்டியுள்ள காரணங்களின் சாராம்சம் பின்வருமாறு:

ஹிந்து சட்டப்பிரகாரம் ஒருவனுக்குக் கொஞ்சம் சொத்து இருந்த போதிலும் அதைச் சமமாகப் பிள்ளைகளுக்குப் பங்கிட்டுவிடவேண்டியிருப்ப தால், நாளடைவில்-ஜீவனத்திற்கு வேறு உபாயம் தேடினலொழிய-சொந்த மானது என்று சொல்லிக்கொள்ள ஒரு துண்டு நிலங்கூட இராதுபோய் விடுகிறது; சமூகத்தில் கௌரவமான பெயர் எடுக்கவேண்டுமென்று சுபாசுப காரியங்களுக்குத் தம் அந்தஸ்துக்கு அதிகமாகச் செலவழிக்க நேர்கிறது; திடீர்திடீரென்று விவசாயிகளின் உழவுமாடுகள் வியாதி கண்டு இறப்பது, பயிர்களைப் பூச்சி துஷ்டமிருகங்கள் முதலியவை அழிப்பது, வெள்ளத்தினல் சேதம் என்பன போன்ற எதிர்பாராத இயற்கைக்காரணங்கள் பல உள்ளன.

இவற்ருல் மொத்தத்தில் விவசாயம் லாபகரமற்ற தொழிலாகிவிடு கிறது. இந்நிலையில் தங்களால் கொடுபட முடியாத அதிக வட்டி விகிதத் திற்கு விவசாயிகள் கடன்வாங்கி அவதிப்படுவதில் வியப்பொன்றுமில்லை. இவ்வுண்மையை ஆசிரியர் முதல் புத்தகத்தில் நன்ருக விளக்கி விவசாயக் கடன் நிவாரணச் சட்டத்தின் அவசியத்தை வற்புறுத்துகிருர்.

இரண்டாவது புத்தகத்தில் அச் சட்டத்தின் எல்லா அம்சங்களையும் விரிவாக எடுத்துக்காட்டிப் பலவிவரங்களும் குறிப்புக்களும் சேர்த்து எழுதி யிருப்பது எல்லோருக்கும் பயன் படுவதாக இருக்கிறது.

ஜெர்மனி, பிரான்ஸ், இத்தாலி, ஸ்விட்ஜர்லாந்து, டென்மார்க்கு, நார்வே, ஸ்வீடன், பின்லாந்து, ஜப்பான், கனடா, அமெரிக்க ஐக்கிய நாடுகள், பல்கேரியா, கிரீஸ், ஹங்கேரி, போலந்து, ருமேனியா, செகோஸ்லோவகியா, யுகோசிலேவியா, எஸ்டோனியா, லேட்வியா, லிதுயேனியா ஆகிய அயல் நாடுகளில் கடன் பளுவைக் குறைக்கவும் ஒழிக்கவும் அந்த அரசாங்கத்தார் என்ன என்ன முறைகளைக் கையாண்டனர் என்பதைப்பற்றி மூன்ரும் புத்தகத்தில் மிகத் தெளிவாக எழுதியிருக்கிருர்.

இவ்வளவு சிக்கலான விஷயத்தைக் கூட அனைவருக்கும் புரியும்படியாக மிகவும் எளிய நடையில் திறம்படத் தமிழில் ஒருவர் எழுதியிருக்கிருர் என் ருல், அது தமிழருக்கே ஒரு பெருமையாகு மல்லவா ? கொஞ்சகாலத்துக்கு முன்னர்க் கூட நல்ல தமிழ்ப்புஸ்தகங்கள் சிலவற்றைத் தவிர வேறு இரா திருந்த நம் நாட்டில், ஒருவிதமான புத்துணர்ச்சியின் பயனுக இவைபோன்ற

உயர்தர நூல்கள் வெளிவருவதையும் மக்கள் அவற்றை ஆவலுடன் படித்து ரஸிப்பதையும் பார்த்தால், 'ஏது தமிழ்நாட்டுக்கு இனிமேல் நல்லகாலந் தான் !' என்று சொல்லாமலிருக்கமுடியுமா ?

இப்புத்தகங்களின் மேல் அட்டைகளில் காணப்படும் வர்ண சித்திரங்கள் அரிய கருத்துகள் நிறைந்தனவாயிருக்கின்றன.

பிழையேதுமின்றி நல்ல காகிதத்தில் இவை அச்சிடப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு புத்தகசாலையிலும், தமிழன் என்று சொல்லிக் கொள்ளும் ஒவ்வொருவன் கையிலும் இருக்கவேண்டியவை இப்புத்தகங்கள்.

முதலில் காணும் புத்தகத்தின் முதல் புதிப்பு வெளியான மறுமாதமே இரண்டாம் பதிப்பு வெளி வந்திருப்பதிலிருந்து அதன் அருமையை எல்லோரும் நன்குணர்ந்திருப்பார்கள் என்று தெரிகிறது. அதைப்படித்தவர்கள் மற்ற இரண்டு புஸ்தகங்களையும் கட்டாயம் படித்தே தீருவார்கள். அவ்வளவு அவசியமானவை அவை. —ஸே.

**கிராமச் சீர்திருத்தம்:** [ஸ்ரீமான் ஏ. முத்தையா அவர்கள், எம். ஏ. எழுதியது ; கிடைக்குமிடம் : கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி, ஜார்ஜ் டவுன், சென்னை ; விலை ரூ. 1.]

இந்தியநாட்டின் வாழ்வு கிராமங்களின் வாழ்வைப்பற்றியே நிற்கின்ற தென்பதைப் பலகாலமாக அறிஞர் கூறிவருகின்றனர். தேசத்தலைவர்கள் இந்தியக்கிராமங்களின் செல்வ நிலையும் வாழ்க்கை நிலையும் திருத்தமுற வேண்டுமென்பதை அடிக்கடி சொல்லிவருகின்றார்கள். மகாத்மாகாந்தியவர்கள் ஏனைய தொண்டுகளையெல்லாம் ஒதுக்கிவைத்துவிட்டுக் கிராமங்களின் நலத்தையே குறிக்கொண்டு வார்தாவில் வாழ்ந்து வருகின்றனர். இத்தகைய சிறந்த தொண்டாகிய கிராமச் சீர்திருத்தத்தைக் குறித்துத் தமிழில் புத்தகங்கள் அதிகமாக வெளிவரவில்லை.

அறிஞர் முத்தையா அவர்கள் தமிழருடைய உள்ளத்துக்குப் பொருந்த இந்தப்புத்தகத்தை எழுதியிருப்பது ஒருபெரியவிசேஷம். ஆங்கிலபாஷையில் நினைத்துத் தமிழுருவத்திலுள்ள ஆங்கிலமாக வாக்கியங்களை எழுதப்படாமல், தமிழ்மரபு தமிழ் மேற்கோள் முதலிய சிறப்புக்களுடன் இப்புத்தகத்தின் நடை அமைந்திருக்கின்றது. மிகப்பழைய நூலாகிய புறநானூற்றிலிருந்தும் புத்தம் புதிய பாரதிபாட்டிலிருந்தும் செய்யுட்களை எடுத்துக் காட்டும்போது நாம் இரண்டுக்கும் இடையேயுள்ள காலத்தை மறந்து இரண்டையும் சுவைக்கிறோம்.

பிரிட்டிஷ் அரசாங்கத்தார் செய்த நன்மைகளைப்பற்றிப் பலவருஷங்களுக்குமுன் கணக்கில்லாத புத்தகங்கள் எழுதப்பட்டன. சிலவற்றிற்குப் பரிசுகளும் கிடைத்தன. தந்தியும் தபாலும் மின்சாரமும் சாக்ஷாத் ஆங்கில துரைத்தனத்தார் பாம ஏழைகளாகிய இந்தியர்களுக்காகவே சிருஷ்டித்து இந்தியர்களின் நலத்துக்காகவே அமைத்தார்களென்பது போன்ற தோரணையில் அப்புத்தகங்கள் இருந்தன. நண்பர் முத்தையா கிராமங்களின் இறந்த கால சரிதம், நிகழ்கால வரலாறு, வருங்கால அமைப்பு இம்மூன்றையும் வெகு அழகாகச் சொல்லுகிறார். பழங்காலக் கிராம வாழ்க்கையை அவர்

புள்ளிவிவரங்களோடும் சாஸன ஆதாரங்களோடும் எடுத்துக்காட்டி, 'நீண்ட நாட்களாக இருந்த கிராம வாழ்க்கைத்திட்டம் பிரிட்டிஷார் ஆட்சி தொடங்குங்காலம் வரையில் எவ்வித ஊறும் இன்றிச் செவ்வையாயிருந்துவந்தது. பிரிட்டிஷாரின் ஆட்சி முறைகள் இந்திய முறைகளினின்றும் வேறுபட்டனவாய் இருந்தமையால், கிராம ஆட்சித் திட்டத்தின் அருமையை உணர்ந்து அதைப் போற்றிப் பாதுகாக்கும் உணர்ச்சி அவர்கட்கு உண்டாக இல்லை' (ப. 12) என்றும், 'பிரிட்டிஷாரின் ஆட்சி தொடங்கிய காலமுதலே இந்தக் கிராமங்கள் அழியத் தொடங்கின' (26) என்றும் பலவிடங்களில் அறிவுறுத்துகிறார். முத்தையா அவர்கள் வெறும் காங்கிரஸ் பிரசாரகராக இருந்துஇவற்றைச் சொல்லவில்லை. அக்காலத்தில் கிராம சுயராஜ்யம் இருந்த நிலையை ஆதாரங்களோடு எடுத்துக் காட்டுகிறார். அவை அழிந்ததற்குக் காரணங்களையும் சொல்லுகிறார். ஒரு பொருளாதார ஆசிரியர் ஆராய்ந்து சொல்லும் விஷயங்கள் அவை என்பதை நாம் நினைவில் வைக்க வேண்டும்.

இன்றைய கிராமங்களின் நிலையையும் நன்றாக எடுத்துக்காட்டுகிறார். என்ன செய்யவேண்டுமென்பதையும் சொல்கிறார். படிக்கப் படிக்க நம்முடைய மனம் இப்புத்தகத்தில் ஈடுபடுகிறது. படிப்பின் ஓட்டத்தில் நம் உள்ளத்தில் சிலசமயங்களில் பெருமிதமும், சிலசமயங்களில் இரக்கமும், சிலசமயங்களில் தேசபக்தியும் அலையோடுகின்றன.

நல்ல நடையில் நல்ல முறையில் எழுதப்பட்ட இந்தப் புத்தகம் நல்ல காகிதத்தில் படங்களோடு அச்சிடப்பட்டிருக்கின்றது. இத்தகைய புத்தகங்களை மாணுக்கர்களுக்குப் பாடமாக வைக்கவேண்டும். அவர்களுக்கு இதைக்காட்டிலும் சிறந்த புத்தகம் கிடைப்பது அருமை.

ஒரு சிறுயோசனை: இந்தப் புத்தகத்துக்கு மலிவுப்பதிப்பு ஒன்று அவசியம் வேண்டும். தமிழர் யாவரும் இதை வாங்கிப்படிக்க வேண்டுவது இன்றியமையாதது. அதற்குத் தடையாக இந்தப்புத்தகத்தின் விலையாகிய ஒரு ரூபா குறுக்கே நிற்கிறது. ஆசிரியருடைய எழுத்துத்திறமை இன்னும் வளர வேண்டும், அவருடைய புத்தகங்கள் பல இன்னும் வெளிவர வேண்டுமென்பதே நமது ஆவல். —ஜக.

சென்னை ஸங்கீத ஸபைப் பத்திரிகை, 1934 (The Journal of the Music Academy, Madras, 1934): சென்னையிலுள்ள ஸங்கீத வித்வத் ஸபை பல உபயோகமுள்ள காரியங்களைச் செய்து வருகின்றது. அதன் ஆதரவில் ஒரு பத்திரிகை நடைபெற்று வந்ததைப் பலர் அறிந்திருப்பார்கள். இப்பொழுது மறுபடியும் அதனைப் பிரசுரிக்கத் தொடங்கியிருக்கின்றனர். இந்த வருஷத்திற்குள் கடந்த ஆண்டுகளுக்குரிய பத்திரிகைகளையும் வெளிப்படுத்த இவர்கள் எண்ணியிருக்கின்றனர். இப்பொழுது 1934-ஆம் வருஷத்துக்குரிய இதழ் நான்கும் சேர்ந்து ஒருபுத்தகமாக வந்திருக்கின்றது.

இதில் ஸாமகான மென்பதைப்பற்றிய கட்டுரை யொன்றும் ஸங்கீத ஸுதா என்னும் வடநூலில் ஒருபகுதியும் அபிநயங்களைப்பற்றிக் கூறும் அபிநயஸார ஸம்புடமென்னும் நூற்பகுதியும், ஸங்கீதத்தைப் பற்றிய சில குறிப்புக்களும், 1933-ஆம் வருஷத்து ஸங்கீத மகா ஸபையின் நிகழ்ச்சிகளும்

வெளியாகி யிருக்கின்றன. பல வித்துவான்கள் கூடி ராகலக்ஷணங்களைப்பற்றிச் சர்ச்சைசெய்த விஷயங்கள் விரிவாகக் காணப்படுகின்றன. இவை ஸங்கீதாபிமானிகளுக்கு மிகவும் உபயோகப்படும். இளமையும் உழைப்பும் அறிவும் வாய்ந்த ஸ்ரீமான் டாக்டர் வே. ராகவனவர்கள் இதன் நிருவாக ஆசிரியராக இருக்கும்போது இப்பத்திரிகை மிக்க உபயோகமுள்ளதாக விளங்கு மென்பதில் தடையேயில்லை.

அழகர் கிள்ளைவிடுதூது: [பலபட்டடைச் சொக்கநாத பிள்ளை இயற்றியது; குறிப்புரை, முகவுரை, ஆராய்ச்சி முதலியவற்றுடன் மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பித்தது; கிடைக்குமிடம்: தியாகராஜ விலாஸம், திருவல்லிக்கேணி; விலை எட்டு அணா.]

பலபட்டடைச் சொக்கநாதபிள்ளையின் தனிப்பாடல்கள் பல வருஷங்களுக்குமுன் வெளி வந்த தனிப்பாடற்றிரட்டில் உள்ளன. அவற்றைப் படித்துத் தமிழ் நாட்டார் இன்புற்று வந்தனர். ஆயினும் அவர் இயற்றிய நூல் ஒன்றும் கிடைக்கவில்லை. ஐயரவர்கள் முதலில் அப்புலவரால் இயற்றப்பெற்ற தேவையுலாவை வெளியிட்டார்கள். பின்பு தென்றல்விடு தூதும், மதுரை மும்மணிக்கோவையும் அவர்களால் வெளியிடப்பட்டன. இப்பொழுது ஷை புலவர் இயற்றியநூல்களுள் நான்காவதாக இந்தத் தூதுவெளி வந்திருக்கிறது.

வழக்கம் போல வேண்டிய அளவிற் குறிப்புரை எழுதப்பட்ட இப்புத்தகத்திற்கு அங்கமாகத் திகழும் முன்னுரை, நூலாசிரியர் வரலாறு, நூலாராய்ச்சி என்பன நூலைக்காட்டிலும் படிப்போர்மனத்தைக் கவர்வனவாக உள்ளன. அழகர்மலை சம்பந்தமான செய்திகளனைத்தையும் தொகுத்துத் தனியே இப்புத்தகத்தில் ஐயரவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

கிள்ளை விடுதூது இனிய எளிய நடையில் இயற்றப்பட்ட நூல். இது தமிழ்ப் பிரபந்தங்களை ரஸிப்பவர்களுக்கு ஒரு விருந்தாக இருக்கும்.

—வாசகன்.

## புத்தகக் குறிப்பு

வங்கவீரர் சுபாஷ்சந்திர போஸ்: தினமணி ஆசிரியர் ஸ்ரீமான் டி. எஸ். சொக்கலிங்கம் அவர்கள் எழுதியது. 12 போடோபடங்கள் அடங்கியது. இதில் ராஷ்ட்ரபதி சுபாஷ்பாபுவின் வாழ்க்கைவரலாறு கொடுக்கப்பட்டிருக்கிறது. கிடைக்குமிடம்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை; விலை அணா 4.

## புத்தக வரவு

மைக்கேல் காலின்ஸ்: ஆசிரியர் ப. ராமஸ்வாமி; நவயுகப் பிரசுரம்; விலை, அணா 8.






## ஐயாவர்கள் படம்

ஸ்ரீ மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களுடைய வர்ணப்படமொன்று சென்னை இராசதானிக் கலாசாலையில் 3-3-38 - இல் நம் மாகாணக் கல்விமந்திரி ஸ்ரீமான் டாக்டர் சுப்பராயனவர்களால் திறந்துவைக்கப்பட்டது. அந்த விழாவிற்கு ஸ்ரீமான் டி. ராமலிங்க செட்டியாரவர்கள், பி.ஏ., பி. எல்., எம். எல். ஸி. தலைமை வகித்தனர். செட்டியாரவர்கள் ஐயரவர்களுடைய தமிழ்ப்பணியைப்பற்றிப் பாராட்டிவிட்டு நம் துரைத்தனத்தார் அவர்களுடைய தமிழ்ப்பணிக்குப் பொருளுதவி செய்து ஆதரிக்கவேண்டுமென்பதை வற்புறுத்திக் கூறினர். கல்விமந்திரியார் அங்ஙனமே செய்வதாக வாக்களித்தனர்.

## "தமிழ்நேசன்" ஆசிரியர் பிரிவு

மலேயாநாட்டில் திறமையுடன் தமிழ்ப்பத்திரிகைத் தொழிலை நடத்திவந்த ஸ்ரீமான் கி. நரசிம்ம ஐயங்கார் அவர்கள் சமீபத்தில் பிப்ரவரி மீ 4-ஆம் தேதியன்று தம்முடைய 48-ஆவது வயதில் காலமாகிவிட்ட செய்தியைக் கேட்டு நாம் மிகவும் வருந்துகிறோம். ஸ்ரீமான் ஐயங்கார் சிறுவயதிலிருந்தே மிக்க அறிவாளியெனப் பெயரெடுத்தார். ஆனால் அடிக்கடி நோயில் வீழ்ந்து உடல்நலங் குன்றிவிட்டார். மலேயாநாட்டில் 1921-ல் அவர் 'தமிழகம்' என்ற முதல் தமிழ்ப்பத்திரிகையை வாரம் இருமுறை வெளியிட்டுவந்தார். 1923-ல் அந்தக் கம்பெனியை விட்டு விலகினர். 1924-ல் 'தமிழ்நேசனை'த் தம் சகோதரருடன் வாரப்பத்திரிகையாக ஆரம்பித்து 1934 முதல் வாரம் மும்முறையாக வெளியிட்டு வந்தார். 1937-ல் அதைத் தினசரியாக்கிவிட்டார். வெளிநாட்டு இந்தியரின் ஒற்றுமைக்காக அவர் தம் பத்திரிகை மூலமாகவும் செயல்கள் மூலமாகவும் பாடுபட்டு வந்தார். அவர் சமூக விஷயங்களிலும் முற்போக்கான அபிப்பிராயங்களுடையவர். இத்தகைய சிறந்த தமிழ் அன்பரின் பிரிவு அனைவருக்கும் வருத்த மளிக்கக்கூடியதே.

———



ஆசார்ய பிரேம்சந்த்
காலஞ்சென்ற பிரசித்திபெற்ற ஹிந்தி கதாசிரியர்
[இவர் கதையை உள்ளே காண்க]

Courtesy: Hindi Prachar Sabha.




# வேங்கடராம பாகவதர்

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

---

சென்ற நூற்றாண்டில் தமிழ்நாட்டில் சங்கீதத்துக்குச் சிறந்த ஆதரவை அளித்து வளர்த்த ஸம்ஸ்தானங்கள் பல. அவற்றுள் தஞ்சாவூர் ஸம்ஸ்தானத்தை முன்னணியில் வைக்கலாம். அதனை ஆண்டு வந்த மகாராஷ்டிர அரசர்களுக்குப் பலவகைக் கலைஞர்களிடத்திலும் இருந்த அன்பு அளவற்றது. அவர்களுடைய ஆதரவைப் பெற்ற கலைகளில் சங்கீதமே தலைசிறந்து நின்றது. சிறந்த சங்கீதவித்துவான்கள் அந்த ஸம்ஸ்தானத்தோடு சம்பந்தமுடையவர்களாக இருந்தார்கள். நல்ல வித்துவான்கள் தமிழ் நாட்டில் எங்கே இருந்தாலும் அவர்களைத் தங்கள் ஸம்ஸ்தானத்துக்குரியவர்களாக ஆக்கிக் கொள்வதில் அந்த ஸம்ஸ்தான அதிபதிகளுக்கு ஒரு திருப்தி இருந்துவந்தது. ஆதலின் உயர்ந்த வித்தை தஞ்சையிலே தாண்டவஞ் செய்தது.

தஞ்சை ஸம்ஸ்தானத்தின் தொடர்பில்லாமலே பக்தி செய்வதையே தம் வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்டு அங்கங்கே சில சங்கீத வித்துவான்கள் இருந்து வந்தனர். அவர்களுள் வேங்கடராம பாகவதரென்பவர் ஒருவர். அவர் சிறந்த தெய்வ பக்தியுடையவர்; ஒழுக்கம் நிரம்பியவர்; பணத்தை மதியாதவர். இல்லற வாழ்க்கையை நடத்தினாலும் அவர்பால் உள்ளத் துறவு இலங்கியது.

வேப்பத்தூர், திருவிடைமருதூர். திருவிசலூர் முதலிய ஊர்களின் அக்கிரகாரங்களில் உள்ள பஜனை மடங்களில் அவர் வாசம்செய்து வந்தார். நாள்தோறும் உஞ்சவிர்த்தி செய்து

கிடைக்கும் அக்ஷதையைக் கொண்டு பூஜை, போஜனம், அதிதிகளுக்கு அன்னமிடுதல் முதலியவற்றைச் செய்துகொண்டு மனவமைதியோடு காலங்கழித்தார்.

அவர் நல்ல சங்கீதவித்துவானாக இருந்ததோடு தெலுங்கிலும் வடமொழியிலும் சிறந்த அறிவுடையவராக இருந்தார்; அவ்விரண்டு மொழிகளிலும் அழகிய கீர்த்தனங்களை இயற்றியிருக்கிறார். தெய்வத்துக்குத் தொண்டு பூண்டு தம்முடைய சங்கீதத்தை ஈசுவரார்ப்பணமாக்கி வாழ்ந்த அவருடைய பெருமை தமிழ் நாட்டில் மெல்ல மெல்லப் பரவியது. தஞ்சாவூர் ஸம்ஸ்தானத்தில் இருந்த வித்துவான்கள் அவரைப்பற்றி நன்றாகத் தெரிந்துகொண்டனர். சில சமயங்களில் அவருடைய பெருமையைப்பற்றி அவர்கள் தஞ்சை அரசரிடம் சொல்லும்படி நேரும். இங்ஙனம் தம்முடைய ஸம்ஸ்தானத்தில் உள்ள சிறந்த வித்துவான்களால் அடிக்கடி ஒருவர் பாராட்டப்படும்போது அத்தகைய சிறப்பையுடைய பெரியாரைப் பார்க்கவேண்டுமென்ற அவா அரசருக்கு எழாமல் இருக்குமா? வேங்கடராம பாகவதரைப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் வரவர அரசருக்கு அதிகமாக வளர்ந்தது.

தக்க மனிதர்கள் அரசருடைய ஏவலின்படி பாகவதர்பால் சென்று தஞ்சாவூர் ஸம்ஸ்தானத்துக்கே வந்துவிட வேண்டுமென்று வேண்டினார்கள். உள்ளத் துறவியாகிய அவர் முதலில் மறுத்தார். ஆயினும் வந்தவர்கள் வற்புறுத்தவே, 'பரமேசுவரனது திருவுள்ளம் இப்படி இருந்தால் நாம் ஏன் தடைசொல்ல வேண்டும்?' என்றெண்ணி அவர்களுடைய வேண்டுகோளுக்கு உடன்பட்டார்.

## 2

வேங்கடராம பாகவதர் தஞ்சாவூர் ஸம்ஸ்தானத்தின் தொடர்பைப் பெற்றார். அரசர் அவருடைய சம்பந்தம் தமக்கு உண்டானது குறித்து மிக்க திருப்தியை அடைந்தார்; பாகவதருக்குப் பலவகையான மரியாதைகளைச் செய்தார்; அரண்மனைக்கு வருவதற்குப் பல்லக்குக் கொடுத்தார்; பல உயர்ந்த ஆடையாபரணங்களை வழங்கினார்.

பஜனை மடங்களிலே வாழ்ந்து காலங்கழித்து வந்த பாகவதர் மாளிகையில் வசிக்கலானார். தினந்தோறும் அவர் தோளில் மாட்டிக்கொண்டு உஞ்சவிர்த்தி செய்யும்போது கொண்டுபோன செம்பு ஒரு பூஜைப்பொருளைப் போலத் தனியே ஓரிடத்தில் இருந்தது. அதிகமான சௌகரியங்கள் கிடைத்ததும் பாகவதருடைய மனநிலை மாறவில்லை. 'இவ்வளவு அநுகூலங்களும்

ஈசுவரனைத் தியானிப்பதற்கும், பூஜை செய்வதற்குமே நமக்கு ஏற்பட்டன. முன்னைக்காட்டிலும் ஏகாந்தமாக இருந்து நம் இஷ்டம்போல் ஈசுவரத் தியானம் செய்யலாம்' என்ற எண்ணந் தான் அவருக்கு உண்டாயிற்று.

பாகவதருடைய பூஜை முன்பு இருந்ததைவிடப் பன்மடங்கு பெருகியது; தியானமும் அங்ஙனமே விரிந்தது; அதிதிகளை உபசரிக்கும் காரியமோ மிக அதிகமாயிற்று.

அரசர் பாகவதருடைய பெருமையை ஓரளவு அறிந்திருந் தார். ஆதலின் பாகவதர் தாமாக மனம்வைத்து வந்தபோது அவருடைய சங்கீதத்தைக் கேட்டு இன்புற்று வந்தார். மற்ற வித்துவான்களும் பாகவதரிடத்தில் மிக்க மதிப்பு வைத்து ஒழுகி வந்தனர்.

பாகவதரிடம் பல மாணுக்கர்கள் சங்கீதப்பயிற்சி பெற்ற னர். அரசர் அம்மாணுக்கர்களின் போஷணைக்குரிய பொருளுதவி செய்துவந்தார். சங்கீத பரம்பரை அபிவிருத்தியாவதில் யாவருக் கும் சந்தோஷம் இருந்தது.

## 3

ஒருநாள் வேறு ஒரு ஸம்ஸ்தானத்திலிருந்து சில மந்திரி களும் பல தக்க மனிதர்களும் தஞ்சாவூருக்கு வந்திருந்தனர். தங்களுடைய ஸம்ஸ்தானத்திலுள்ள சிறந்த அமைப்புக்களைப் பற்றியும் தானதர்மங்களைப் பற்றியும் வித்துவான்களைப்பற்றியும் அவர்கள் அரசரிடம் கூறி ஸல்லாபம் செய்தனர். தங்கள் தங்கள் புகழை வெளியிட்டுக் கொள்வதில் யாவருக்கும் விருப்பம் இருக் கும் அல்லவா? அரசரோடு உடனிருந்த ஸம்ஸ்தான உத்தியோ கஸ்தர்கள் தஞ்சாவூரிலுள்ள விசேஷங்களைப்பற்றிச் சிறப்பித்துச் சொல்லலானார்கள். வித்துவான்கள் பலர் அரசருடைய ஆதர வின் கீழ் இருந்து வருவதை எடுத்துக்கூறினார்கள்; "எங்கள் ஸம்ஸ்தானத்தில் சங்கீதவித்தை மிகவும் பிரகாசிக்கிறது. இந்த உலகத்தையே அடிமைப்படுத்தும் சக்தியையுடைய வித்துவான் கள் பலர் இங்கே இருக்கின்றனர். ஸ்ரீ வேங்கடராம பாகவதர் ஒருவரே மற்ற எல்லா ஸம்ஸ்தானத்துச் சங்கீதவித்துவான்களுக் கும் மேலாக இருக்கும் தகுதிவாய்ந்தவர். அவர் ஒரு தெய்வப் பிறப்பு. அவருடைய சங்கீதத்துக்கு ஸமானமே இல்லை" என்று சொன்னார்கள். "அப்படியானால், அத்தகைய பெரியாரைப் பார்த்து அவருடைய சங்கீத இன்பத்தை அநுபவிக்க வேண்டு மென்று எங்கள் உள்ளம் விரும்புகிறது. வேங்கடராமபாகவத ரென்ற அரியவித்துவான் ஒருவர் இங்கே இருப்பதாக முன்பே

சிறிது கேள்விப்பட்டிருக்கிறோம்'' என்று வெளியூரிலிருந்து வந்தவர்கள் சொன்னார்கள்.

அரசர் அவர்கள் கூறியதைக் கேட்டுத் திருப்தியுற்றார். பாகவதருடைய புகழ் வெளி நாடுகளிலும் பரவியிருப்பதை உணர்ந்தபோது, 'நாமல்லவா இதற்குக் காரணம்!' என்ற நினைவு அவருக்குச் சிறிது உண்டாயிற்று. ''பாகவதரவர்களை அழைத்து வரச் சொல்லிப் பல்லக்கை அனுப்புங்கள்'' என்று அரசர் உத்தர விட்டார்.

அப்பொழுது காலை பத்துநாழிகை இருக்கும். பாகவதர் அக்காலத்தில் தெய்வபூஜையும் தியானமும் செய்வது வழக்கம். அவ்வாறே அன்றும் அவர் தியானத்தில் இருந்தார்; பூஜையறையில் தம்மை மறந்து இறைவன் திருவடிமலரில் தம் உள்ளத்தைப் பறிகொடுத்து அமர்ந்திருந்தார். அப்பொழுது அவர் வீட்டு வாயிலிற் பல்லக்கு வந்து நின்றது. ''அரசர் அழைத்துவரச் சொன்னார்'' என்று உத்தியோகஸ்தர் ஒருவர் அங்கிருந்த சிஷ்யர்களிடம் சொன்னார்.

பாகவதர் தியானத்தில் அமர்ந்திருப்பது தெரிந்து, ''என்ன செய்வது!'' என்று அவ்வுத்தியோகஸ்தர் யோசித்தார். சிறிது நேரம் காத்திருந்தார். பாகவதர் புற உலகத்திற்கு வரவில்லை. உடனே உத்தியோகஸ்தர் சிஷ்யர்களிடம் தாம் வந்த நோக்கத்தை அறிவித்து அரண்மனைக்குப் போய்விட்டார்.

பாகவதர் தியானத்தில் அமர்ந்தால் யாரும் அவரை அணுகுவதற்கு அஞ்சுவார்கள். ஆதலின் மாணுக்கர்கள் வலிந்து சென்று தெரிவிக்கவில்லை.

சிறிதுநேரம் சென்றது; அரண்மனையிலிருந்து வேறொருவர் வந்தார்; ''அரசர் காத்திருக்கின்றார்; உடனே பாகவதரவர்களைப் பல்லக்கில் அழைத்துவரச் சொன்னார்'' என்றார். மாணுக்கர்கள் என்ன செய்வார்கள்! வந்தவர் மீண்டு சென்றார்.

மூன்றும் முறையாக ஒருவர் வந்தார். அவரும் ஒன்றும் இயலாமற் சென்றுவிட்டார். அரசரோ, பாகவதர் வருவார் வருவாரென்று காத்திருந்தும் அவர் வரக்காணவில்லை. அரசர்களுக்கு ராஜஸகுணம் இயல்பு. எவ்வளவு நேரம் அது வெளி வராமல் இருக்கும்? ''நீர்போய் உடனே அழைத்து வாரும். நம்முடைய ஆஸ்தானத்துக்குக் கௌரவம் உண்டாவதற்கல்லவா அவர் இருக்கிறார்? எவ்வாறேனும் நீர் அவரை அழைத்து வரவேண்டும்'' என்று கடுமையான தொனியோடு கூறித் தம் மந்திரியை அனுப்பினர்.

அவர் பாகவதர் வீட்டிற்கு வந்தார். வெளியிலே ராஜஸ தாமஸ குணங்களின் திருவிளையாடல்கள் மிக்க வேகமாக நடந்து கொண்டிருப்ப, அவற்றில் ஓர் இம்மியளவையேனும் அறிந்து கொள்ளாமல் பரம ஸத்வ குணக்கடலில் மூழ்கி ஸர்வலோக சக்கரவர்த்தியாகிய பரமேசுவரனின் பாதத்தில் தம் இதய மலரை அர்ப்பணம் செய்து எல்லாம் மறந்த நிலையில் வீற்றிருந்தார் பாகவதர். மந்திரியானால் என்ன? அரசரே வந்தால் தான் என்ன? அவருக்குத் தெரியக் காரணம் இல்லையன்றோ?

மந்திரி சாதாரணமாக ஒருவர் வீட்டிற்கும் வருவதில்லை; அவரே வந்திருக்கும்போது காரியம் மிகவும் முக்கியமானதென்று மாணாக்கர்கள் ஊகித்துக் கொண்டார்கள். மந்திரி, அவர்களிடம், "எவ்வாறேனும் தியானத்திலிருந்து எழுப்புங்கள்" என்று கூறினார். தம் குருமூர்த்தியின் பெருமையை நன்குணர்ந்த அவர்கள் மிகவும் தர்மஸங்கடமான நிலையில் அகப்பட்டுத் தவிக்கலானார்கள்.

அவர்களுக்குள் புதிய மாணவன் ஒருவன் இருந்தான். அவன், 'இச் சமயத்தில் நம் துணிவைக் காட்டினால் நமக்கு அரசருடைய தயை உண்டாகும்' என்று எண்ணினான். "நான் முயன்று பார்க்கிறேன்" என்று சொல்லிப் பாகவதர் அமர்ந்திருந்த இடத்திற்குச் சென்றான். அவருக்கு அருகில் நின்று கனைத்தான்; மெல்லக் கையைத் தட்டினான்; ஒன்றும் பயன்படவில்லை. 'துணிந்தது துணிந்து விட்டோம்; இனி எழுப்பாமல் இருக்கக் கூடாது' என்ற தைரியம் அவனுக்கு உண்டாயிற்று. அவருடைய தோளைப் பிடித்துப் பலமாக அசைத்தான்.

பாகவதர் திடுக்கிட்டுக் கண்ணைத் திறந்தார்; "மகாராஜா தங்களைப் பார்ப்பதற்கு நெடு நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறார். ஆள்மேல் ஆள் விட்டார்; பல்லக்கு வந்திருக்கிறது. இதோ, மந்திரியவர்களே வந்திருக்கிறார்கள். நீங்கள் மணிக்கணக்காக உலகத்தையே மறந்து விட்டீர்கள்" என்று அவன் ஒன்றன் பின் ஒன்றாகச் சமாசாரங்களை அடுக்கிக் கொண்டு போனான். பாகவதர் சிறிது நிதானித்தார். தூக்கத்திலிருந்து விழித்த ஒருவன் எல்லாவற்றையும் அறிந்து கொள்வதற்குச் சிறிது நேரமாகுமல்லவா? பாகவதருக்கு விஷயம் விளங்கச் சிறிது நேரமாயிற்று. பரமானந்தக் கடலில் மூழ்கியிருந்த அவரை வலிய உலகமாகிய இருட்டறைக்கு அரசருடைய உத்தரவு இழுத்து வந்தது.

"அப்படியா! குருமூர்த்தே!" என்ற இரண்டு வார்த்தைகள் அவருடைய ஹிருதயத்திலிருந்து புறப்பட்டன. தமக்குப்

பிரியமான சிஷ்யரொருவரைக் கூப்பிட்டார். "பூஜையைக் கட்டப்பா!" என்று உத்தரவிட்டார். நேரே பழைய உஞ்சவிர்த்திச் செம்புள்ள இடத்திற்குச் சென்றார். அழுக்குப் படிந்து பலகாலமாகப் புறக்கணிக்கப்பட்டிருந்த அதை எடுத்துத் தோளிலே மாட்டிக் கொண்டார்.

"என்னோடு வரத் தைரியமுள்ளவர்கள் வரலாம்" என்று சிஷ்யர்களைப் பார்த்துக் கூறிவிட்டு அப்பெரியார் வீதியிலே இறங்கிவிட்டார். மாணாக்கன் ஒருவன் அவருடைய பழைய சொத்தாகிய பூஜையைக் கட்டி எடுத்துக் கொண்டு அவருக் கருகில் நிழல்போல நின்றான்.

மந்திரிக்கு-ஒன்றும் விளங்கவில்லை; "ஸ்வாமீ! என்ன இது? எங்கே புறப்பட்டீர்கள்? பல்லக்கு வந்திருக்கிறதே!" என்றார்.

"இனிமேல் எனக்கு இங்கே என்ன வேலை? உங்கள் ராஜாவுக்கு நான் உபயோகப்பட மாட்டேனென்பதைச் சொல்லி விடுங்கள்" என்று கூறித் திரும்பிப் பாராமலே பாகவதர் தாளத்தைத் தட்டிக்கொண்டு நடந்தார்.

அப்பொழுது அவர் திருவாக்கிலிருந்து அவருடைய குருநாதருடைய ஸ்தோத்திரமாக எட்டுத் தெலுங்குக் கீர்த்தனங்கள் வெளிவந்தன.

[இந்த வரலாற்றையும் ஷை கீர்த்தனங்களில் ஒன்றையும் என் தந்தையார் சொல்லக் கேட்டிருக்கிறேன்.]



# கற்பனைத் தேவி

சி. வே. பத்மநாபன்

[டர்ஜனேவ் என்னும் ருஷ்யக்கவிஞன் கவிதையைத் தழுவியது]

---

அதிகாலை வேளை; வஸந்தருதுவின் முதல்நாள்; நான் தனியாக வீட்டு மாடியிலே ஜன்னலருகே வீற்றிருந்தேன்.

இன்னும் கிழக்கு வெளுக்கவில்லை? ஆனால், குளிர்ந்த, இருள் செறிந்த இரவு வர வரத் தேய்ந்து போனதால், திக்வதூவானவள் தினகரனை வரவேற்கத் தயாராகப் பிரஸன்னமுகத்தோடு இருந்தாள்.

ஆனந்தமாகக் காற்று வீசியது. அது ஒரு புதிய உணர்ச்சியை எழுப்பி, எனக்குள்ளே இன்பமழையைப் பொழிந்தது. மற்றொருமுறை மெல்லெனத் தவழ்ந்துவரும் காற்றலைகள்! பூஞ்சோலையின் ஸுகந்தத்தை என்னால் தாங்க இயலவில்லை!

உடனே அந்தத் திறந்த ஜன்னல் வழியாக, விர்ரென்று காதிற்கு இனிமையான ஒரு சப்தத்தோடு, ஒரு பெரிய பறவை என் அறைக்குள்ளே பறந்து வந்தது.

நான் என்ன செய்வதென்று அறியாமல் திகைத்தேன்; சிறிது நேரத்திற்குள் அமைதி பெற்று அதை உற்று நோக்கினேன். அது பறவையன்று!

ஒரு சிறிய, சிறகுகளுள்ள, அதி ஸுந்தரமான ஸ்திரீ என் முன்னே நின்றாள். நேரேபார்த்ததால், அவளை, அந்தப் பிரிய ரூபிணியை வர்ணிக்கிறேன் வெகு துணிச்சலாக! பார்க்கும் பொழுதே மயங்கி விழச் செய்யும் அவளது திவ்யவடிவம் எங்கே? எனது பேதை எழுதுகோல் எங்கே? எத்தனைக்கெத்தனை! ஹூம்!

அவள் மேனி பத்தரைமாற்றுப் பசுந்தங்கம்; மேனியைச் சுற்றி ஒரு மெல்லிய உடை; அவளது சிறிய அழகிய உருண்ட தலையிலுள்ள சுருண்ட மயிரைச் சுற்றி ஒரு நீலோற்பல மாலை; அதன் கீழே பிறையைப் பழிக்கவல்ல நுதல்; வில்லினையொத்த புருவங்கள்; உயிரை வாங்கும் கண்கள்; காதுகளிலே இரண்டு பிரகாசமான குண்டலங்கள்; குண்டல ஒளியால் சிவந்த கண்ணாடியையொத்த கன்னங்கள்; எடுப்பான கூர்மையான நாசி; பிறகு செவ்விதழ்கள்; திருத்தமான மோவாய்க் கட்டை; கோடி மன்மதர்களையும் மயக்கும் மேனி!

படிப்படியாகப் பாதங்கள் வரையில் கண்களால் நுகர்ந்தேன் அவளை. பிறகு, திடீரெனப் படபடத்த ஹிருதயத்தோடு அவள் முகத்தை ஏறிட்டு நோக்கினேன்.

அவள் தனது அழகிய வாய்திறந்து கலகலவெனச் சிரித்தாள். அவளது அரிய பெரிய தடங்கண்களும் என்னை நோக்கிச் சிரித்தன.

எனது தலைக்கு நேரே உயரப் பறந்தாள் அவள். ஆ! அந்தச் சிறகுகளில் எத்தனை அழகு! உள் பகுதி கிளியின் பச்சைநிறம்; வெளிப்பகுதி அன்றலர்ந்த செந்தாமரையின் நிறம்; ஓரங்கள் தங்க நிறம். பறக்குங் காலை, அவளது இருகண்களும் இரு நக்ஷத்திரங் களெனத் திகழ்ந்தன.

அவள் கரத்திலிருந்த மல்லிகைச் செண்டால் தன் கையணி கள் ஆர்ப்ப என்னைத் தலையிலே தொட்டாள். என் மேனி சிலிர்த் தது! அவள் வண்டின் ரீங்காரம் போன்ற சுருதியிலே தன் சிறகு கள் அசைய வெளியே பறந்துசென்றாள்.

விழித்த கண் விழித்தபடியே என்னைப் புதியதோர் இன்ப ஜ்வரம் கவர, வெளியே நோக்கினேன்.

அதோ, அந்த நந்தவனத்தில், நறுமணம் கமழும் சண்பகச் செடியருகே, ஒரு வெண்புறா, தன் சிவந்த மெல்லடிகளால் தளர் நடை நடந்து, தன் அழகிய கழுத்தைத் தூக்கி, என் உள்ளம் கவர்ந்த கள்ளிக்குத் தன் இனிய குரலிலே வரவேற்புப் பாட்டுப் பாடுகிறது. அவளோ, அதோ மறைகிறாள். அவள் மறைந்த இடத்தே நீலஆகாயம் அவளுடைய கோமள ஸ்பரிசத்தால் வெட்கப்படுவதுபோலச் சிறிது வெளுக்கிறது.

* * *

ஆ! கள்ளி, கள்ளி! உன்னை நான் அறியேனா?

நீதான் கற்பனைத் தேவி! இன்றைய காலையிலே, என்னை மகிழ் விக்க வந்தாயே; என்னே உன் கருணை! சரி. இப்பொழுது வேறு கவிகளை நாடிச் சென்றாயோ, அவர்கள் உள்ளம் கவர?

நன்று, நன்று; மிக நன்று உன் கருணை.

காவியமே! இளமையே! ஸ்திரீகளின் ஸௌந்தர்யமே! கற்பனைத் தெய்வமே! இன்றைக் காலையிலே நான் மகிழும்படி காட்சியளிக்க உனக்கு ஒரு கணநேரந்தானா கிடைத்தது? உனது கருணை இவ்வளவுதானா என் விஷயத்தில்?

சரி. உன்னை இவ்வுலகு இழக்க இயலாது. நீ பல்லூழி காலம் இன்றென இருப்பாயாக! இதுவே நான் உன்னை யாசிப்பது.

---




## முற்பகல் செய்யின்—

தி. நா. சுப்பிரமணியன்

### 1

அரசன் படுத்த படுக்கையாகக் கிடக்கிறான். பல சமயங்களில் உணர்வையும் இழந்து விடுகிறான். இனிப் பிழைக்கமாட்டான். மரணப்படுக்கைதான். அரண்மனை வைத்தியர்களும் கைவிட்டு விட்டார்கள். அரசன் தேகஸ்திதியையே எல்லோரும் கவனித்து வருகிறார்கள். அரண்மனையில் உள்ளவர்களுக்கு, எவ்விதமான மாறுதல்கள் உண்டாகுமோ, என்ன குழப்பம் உண்டாகுமோ என்ற கவலை. நாட்டு மக்களுக்கு, நாட்டின் நலத்தையே முக்கிய நோக்கமாகக் கொண்டவனும் தங்கள் அன்புக்கு உரியவனுமான இளவரசன் அரசபாரத்தை மேற்கொள்ளுவானா என்ற சந்தேகம் இருந்தது.

அரசனுக்கு உணர்வு வந்தது. மந்திரியுடன் பேச விரும்பினான். நாட்டின் பிரதான உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் தலைநகரிலேயே காத்துக்கிடந்தார்கள். மந்திரி அரண்மனையிலேயே இருந்து வந்தார். அரசன் தம்முடன் பேச விரும்புகிறான் என்பதை அறிந்த அவர், ஓடோடியும் வந்தார். மன்னன் உணர்வுடன் இருக்கும்பொழுதே கண்டு அவன் விருப்பத்தை அறிந்து அதனை நிறைவேற்றிவைக்க விரும்பினார். அந்தியகாலத்தில் ஒருவன் விரும்புவதைச் செய்து முடிக்க எவரும் பின்வாங்க மாட்டார்களே! தெய்வம், அரசியல், நாடு ஆகியவற்றின் சேவையையே தம் வாழ்நாளின் லட்சியமாகக் கொண்டு அரசனுடைய நிழலைப்போல விளங்கி வரும் மந்திரிக்கு அதைக் காட்டிலும் வேறு வேலையும் உண்டோ?

மந்திரி அரசன் சமுகத்தை அடைந்தார். அவரைக் கண்டதும் மன்னன் படுக்கையை விட்டு எழுந்திருக்க முயன்றான்; ஆனால் முடியவில்லை. பக்கத்தில் உள்ளவர்கள் எல்லோரும் அரசனை அலட்டிக் கொள்ளாதிருக்குமாறு வேண்டிக் கொண்டார்கள். அவன் படுத்தபடியே மந்திரியைப் பக்கத்தில் வந்து உட்காருமாறு ஜாடை செய்தான். மந்திரி அரசன் படுக்கையை அணுகி ஒருமுறை மண்டியிட்டு வணங்கி அவன் பக்கத்தில் ஓர் ஆசனத்தில் அமர்ந்

தார். மன்னன் மந்திரியின் இரு கைகளையும் ஒன்ருகச் சேர்த்துப் பிடித்துக்கொண்டு கெஞ்சும் பாவனையுடன் அவர் முகத்தைப் பார்த்தான். பேசுவதற்கு நா எழவில்லை. பக்கத்தில் உள்ளவர் களைப் பார்த்து மிரள மிரள விழித்தான். மந்திரி நிலைமையை வெகு சீக்கிரம் உணர்ந்துகொண்டார். அரசன் தம்முடன் ரகசிய மாக ஏதோவொன்றைக் கூற விரும்புகிருன் என்பதை அறிந்த மந்திரி, பக்கத்தில் உள்ளவர்களை வெளியில் செல்லுமாறு சொல்லி அனுப்பிவிட்டு அரசன் ஆணையை எதிர்பார்த்திருந்தார்.

மன்னன் தன் மனத்தை ஒருவாறு திடம் செய்து கொண் டான். மிகவும் தாழ்ந்த குரலில் மந்திரியைக் கூப்பிட்டு, “திம்மாஜி! எனக்கு மரணம் கிட்டிவிட்டது. இனி அதிக நாழிகை ஜீவித் திருக்க மாட்டேன். நான் இறந்து போவதைக் குறித்து வருந்த வில்லை..........எனக்குப் பிற்காலம் ராஜ்யம் என்னவாகும் என் பதை எண்ணும்பொழுதுதான் எனக்கு இறப்பதற்குத் தைரியம் உண்டாகவில்லை........குழந்தை சிறுவனுக இருக்கிருன்...... தம்பி கிருஷ்ணனே நான் எப்பொழுது கண்ணை மூடப்போகிறேன் என்று காத்துக் கொண்டிருக்கிருன்......ராஜ்யத்தை நான் உன் வசம் ஒப்புவித்து விட்டேன். எனக்குப் பிற்காலம் என் பிள்ளைக்கு முடிசூட்டி வைப்பது உன் பொறுப்பு..........கிருஷ்ணனுக்கு ஆசாபங்கம் ஏற்பட்டால்தான் இது கைகூடும்........அதற்கு ஓரே வழிதான் உண்டு.......அவன் பார்வை யிழந்து அந்தகனுக ஆகிவிட வேண்டும்.....” என்று கூறினுன். அதற்குமேல் சிறிது நேரம் அப்படியே படுக்கையில் சாய்ந்திருந்தான். திடீரென்று வெறி கொண்டவன் போல ஒருமுறை உடலைக் குலுக்கி மந்திரி யைப் பார்த்து, “கிருஷ்ணன் கபோதியாகவேண்டும். இல்லாவிடில் என் பிள்ளை சிங்காதனம் ஏற முடியாது. கிருஷ்ணன் கண்ணை உடனே இங்கே கொண்டுவரவேண்டும். அது உன்னுல்தான் ஆகும். அதைப் பார்த்த பிறகுதான் என் ஆவி உடலை விட்டு நீங் கும்” என்று கூறினுன். அவ்வளவுதான்; மன்னனுக்கு அதற்கு மேல் பேச முடியவில்லை. களைப்பு மேலிட்டு விட்டது. அப்படியே மூர்ச்சையுற்றுப் படுக்கையில் சாய்ந்தான்.

இவ்விதம் நேரும் என்று மந்திரி எதிர்பார்க்கவில்லை. ஏதோ விபரீதம் நடக்கும் என்பது மாத்திரம் அவருக்குத் தெரியும். அது இவ்வளவு தூரம் செல்லும் என்பதை அவர் நினைக்கவில்லை. இதைக் கேட்டதும் மந்திரியின் உணர்ச்சி முழுவதும் போய்விட்டது. முகத்தில் பொலிவு நீங்கி உயிர் இழந்த மனிதரைப் போலவே விளங்கினுர். தலை கிறுகிறுத்தது. அவரால் அவ்விடம் உட்கார்ந் திருக்கமுடியவில்லை. மன்னனுக்கு மறுபடியும் உணர்வு வருவதற்கு

முன்பு தப்பித்துக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தோடு, என்ன செய்கிறோம் என்பதையும் மறந்தவராகி வெளியே போய்விட்டார்.

## 2

இவ்விதம் கட்டளை யிட்டவன், சுமார் நானூறு வருஷங் களுக்கு முன்பு விஜயநகர ஸாம்ராஜ்யத்தை ஆண்டுவந்த புஜபல மகாராயன் என்னும் துளுவ அரசனான மகாராஜாதி ராஜ ராஜ பரமேசுவர தக்ஷிணபஸ்சிம ஸமுத்ராதிபதி ஸ்ரீ வீரப்ரதாபவீர நரஸிம்ஹராய மஹாராயன் ஆவன். அவன் தன் தம்பியான கிருஷ்ணதேவராயனுடைய கண்களைப் பிடுங்கி விடுமாறுதான் கட்டளை யிட்டான்! கிருஷ்ணனுக்கு அப்பொழுது ஏறத்தாழ இருபத்திரண்டு வயதிருக்கும். நாட்டு மக்கள் அவனைத் தெய்வ மாகவே மதித்துப் போற்றி வந்தார்கள். அவன் சிங்காதனம் ஏறி விஜயநகர ஸாம்ராஜ்யத்தை ஆளும் காலம் எப்பொழுது வரும் என்றே ஏங்கியிருந்தனர்.

கிருஷ்ணன் மிகுந்த சாமர்த்தியம் வாய்ந்தவன். இந்திய நாட்டிலே உதித்த உத்தம அரசர்களுள் தலை சிறந்து விளங்குப வன். நாட்டின் நலத்தையே முக்கியமாகக் கருதியவன்.

மந்திரி திம்மாஜி என்ன செய்வார்! அவர் கிருஷ்ணனைத் தம் முடைய இரண்டு பிள்ளைகளுடன் சேர்த்து மூன்றாம் பிள்ளை யாகக் கருதி வந்தார். அப்படிச் சொல்வது கூடப்பிழை; அவ ருக்குக் கிருஷ்ணனே மூத்தபிள்ளை! மற்றிருவரும் அவனுக்கு இளையவர்களே. பிறந்தது முதல் கிருஷ்ணதேவனைத் திம்மாஜியே தூக்கி வளர்த்தார்.

தம் கண்ணின் கருவிழி போன்று வளர்த்துவந்த கிருஷ்ணனு டைய விழிகளைப் பிடுங்கிக் கொணருமாறு அரசன் உத்தரவிட்டது அவருக்கு இடி விழுந்தது போல இருந்தது. ஆயினும் அவர் என்ன செய்வார்? அரசன் ஆணை; அதிலும் மரணப்படுக்கையில் இருப்ப வனுடைய உத்தரவு.

அரண்மனையினின்றும் வெளிவந்த திம்மாஜி 'எவ்விடம் செல் கிறோம்' என்பதை அறியாமல் நடந்தார். அவருடைய கால்கள் தாமாகவே கிருஷ்ணன் இருப்பிடத்தை நோக்கிச் சென்றன. அரச குடும்பத்தைச் சேர்ந்தவனாயினும், கிருஷ்ணதேவன் சுயேச்சை உடையவனாக இல்லை. வீர நரஸிம்மன் தன் தம்பியின் உயர்ந்த குணத்தையும் நாட்டு மக்கள் அவனிடம் வைத்திருந்த பிரீதியையும் நன்கு அறிந்திருந்தான். ஆதலின் அவன் குடிகளுடன் அதிகமாகப் பழகுவதை மன்னன் விரும்பவில்லை. ஆகவே தன் தம்பியை-வயது வந்த இளவரசனை- சிறையிலிட்டது போல ஒரு கட்டிடத்தில் வைத்து வெளியில் செல்லமுடியாதபடி காத்துவந்தான்.

மந்திரி திம்மாஜி கிருஷ்ணனைக் கண்டார். அரசன் ஆணையை அவனுக்கு அறிவிப்பதற்கு அவருக்கு நாக்கு எழவில்லை. அவனைக் கண்டவுடன், அவருடைய துக்கம் பீரிட்டுக்கொண்டு வெளிக் கிளம்பியது. அவனைக் கட்டிக்கொண்டு ஓவென்று அழுதார். இளவரசனுக்கு ஒன்றும் புரியவில்லை; அப்படியே ஸ்தம்பித்து விட்டான்.

கிருஷ்ணன் திம்மாஜியைத் தன் தந்தையாகவே பாவித்து வந்தான். அவர் எதிரில் உட்கார மாட்டான். பரம வேதாந்தியான மந்திரி, உலகப்பற்றை விடுத்து ஸாம்ராஜ்யத்தின் க்ஷேமத்தையே முக்கியமாகக் கொண்டு தம் பதவியை வகித்து வருபவர், இவ்விதம் அழுவதைக் கண்டு அவனுக்குப் பொறுக்கவில்லை. சிறிது சிறிதாகவே அவரைத் தேற்றி விஷயத்தைத் தெரிவிக்குமாறு வேண்டிக்கொண்டான்.

மந்திரியால் சமாசாரம் முழுவதையும் தெரிவிக்க முடியவில்லை. இங்கொன்றும், அங்கொன்றுமாகத் தேம்பிக் கொண்டே கூறினார். கிருஷ்ணன் நிலைமையை அறிந்து கொண்டான். அவன் மிகுந்த திடசித்தம் வாய்ந்தவன்; உண்மை வீரன் அன்றோ?

"அப்பாஜி! இதற்காகவா வருத்தப்படுகிறீர்கள்? இந்த ஸாம்ராஜ்யத்தை ஆளும் சக்கரவர்த்திப் பதவியில் எனக்கு மோகம் இருந்தால் அல்லவோ இதைப்பற்றி யோசிக்க வேண்டும்? தாங்கள் ஆதியில் எனக்கு உபதேசித்த வேதாந்த சாரம் என்ன? இந்த மாயா உலகத்தில் எல்லாம் பொய்யே யன்றோ? எனக்கு இந்த ராஜ்யத்தில் சிறிதும் ஆசையில்லை. உலக பந்தத்தை அறுத்தெறிந்து, முக்திமார்க்கத்தையே கைக்கொள்ள விரும்புகிறேன். அதற்கு நான் முக்கியமாகத் தங்களுடைய ஆசீர்வாதத்தையும் உத்தரவையுமே எதிர்பார்த்து நிற்கிறேன். உத்தரவு கொடுங்கள். இப்பொழுதே துறவறம் மேற்கொண்டு வெளியே போய்விடுகிறேன்" என்று கூறினான்.

மந்திரி ஒருவாறு ஆறுதலுற்றார். கிருஷ்ணனை அணைத்துத் தடவிக்கொண்டே, "குழந்தாய்! நல்ல காரியம் செய்யப்பார்க்கிறாய்! அதற்கு ஒருகாலும் நான் இடங் கொடேன். நாடு உன்னையே எதிர்பார்த்து நிற்கின்றது. உன்னால் ஆக வேண்டிய காரியங்கள் பல உள. இந்த ராஜ்யபாரத்தை ஏற்றுக் கொள்வதற்கு நீதான் தகுதி வாய்ந்தவன்" என்று கூறினார்.

மந்திரி அவ்விடம் அதிகநேரம் தாமதிக்கும் நிலையில் இல்லை; உடனே அரண்மனைக்குத் திரும்பவேண்டும். இல்லாவிடில் அரசன் வேறு யாரையாவது மறுபடியும் அனுப்பக்கூடும். அப்படி நேர்ந்து விட்டால், இளவரசன், மந்திரி ஆகிய இருவருக்கும் ஆபத்துத்தான். புத்தி தடுமாற்றத்தையடைந்தவனாதலால், அரசன் எதைச் செய்யவும் பின்வாங்கமாட்டான்.

சுய உணர்வு இல்லாத அரசனைத் திருப்தி செய்விக்க மந்திரி ஒரு தந்திரத்தைச் செய்ய நினைத்தார். ஆட்டின் விழி மனிதனுடைய விழியைப் போலவே இருக்கும். அதனால் ஓர் ஆட்டின் விழியைப் பிடுங்கிக்கொண்டு போய் மன்னனுக்குக் காட்டி விடலாம் என்று எண்ணினார். மரணப் படுக்கையிலிருக்கும் அரசன் அவ்விரண்டுக்கும் உள்ள வித்தியாசத்தை அறியப் போகிறானா?

மந்திரி வேலையாட்களைக் கொண்டு தாம் எண்ணியபடியே செய்து முடித்தார். வீரநரஸிம்மன், தன் பிள்ளைக்கே சிங்காதனம் உரியதாயிற்று என்று எண்ணிச் சாந்தியுடன் உயிர்விட்டான்.

திம்மாஜி உயிருடன் இருக்கும் பொழுது, வீர நரஸிம்மனுக்குப் பிறகு யார் பட்டம் கட்டப் பெற்றான் என்பதைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமா? ஏழு வயதுச் சிறுவனால் என்ன செய்ய முடியும்? அந்தக் காலத்தில் ஸாம்ராஜ்யத்துக்கு மிகவும் சாமர்த்தியம் வாய்ந்த ஒரு சக்கரவர்த்தியே தேவை. கிருஷ்ணனை யன்றி வேறு யாராவது உளரோ? கிருஷ்ணதேவ ராயனே அரசனாக முடி சூட்டப்பெற்றான்.

## 3

மேலே கூறப்பட்ட சம்பவங்கள் நடந்த பின் பதினைந்து வருஷங்கள் ஆகிவிட்டன. மறுபடியும் விஜயநகரத்தில் மகுடாபிஷேக மஹோத்ஸவம் நடக்கிறது. அந்த விழாவையும் மந்திரி சாளுவதிம்மாஜியே உடன் இருந்து நடத்திவைக்கிறார். அரசனாக முடிசூட்டப்பெறுபவன் கிருஷ்ணதேவனுடைய மகனான திருமலைத் தேவராயன் என்னும் சிறுவனே.

அரசிளங் குமாரனுக்கு முடிசூட்டப் பெறுவதால், அதற்கு முன்பு நாட்டை ஆண்டுவந்த கிருஷ்ண தேவராயனுடைய காலம் முடிந்து விட்டது என்று நினைத்துவிட வேண்டாம். அவனே ராஜ்யம் தனக்கு வேண்டாம் என்று தன் மகனுக்குக் கொடுத்து, முடியும் சூட்டி வைக்கிறான்.

கிருஷ்ண தேவனுக்கு இளம்பிராயத்திலிருந்தே உலகம் அநித்தியம் என்னும் வேதாந்த சிந்தனை உண்டு. முன்னம் தன் தமையன் தன்னைக் கொல்லச் சதி செய்த காலத்திலும், கிருஷ்ணதேவன் உலகத்தைத் துறந்து காஷாயம் தரித்துச் சந்நியாசியாகவே விரும்பினான். இப்பொழுதோ, பரகதியடைவதற்கு இந்த உலகப்பற்றை விடுவதே உத்தமமான மார்க்கம் என்ற பழைய எண்ணத்தினால் அவன் நாட்டைத் துறக்கவில்லை.

பழைய காலத்தில் பாரத நாட்டு மன்னர்கள் தங்கள் குமாரர்களில் மூத்தவன் உரிய வயதை அடைந்தும் தங்களுக்கு மூப்பு

மேலிட்டும் விட்டால் அவர்கள் தங்கள் மூத்தபிள்ளைக்கு மகுடாபி ஷேகம் செய்து வானப்ரஸ்தர்களாக மாறித் தவம் செய்யச் செல்வார்கள். கிருஷ்ணதேவன் அவ்விதம் செல்ல உத்தேசிக்கவில்லை. அவனுக்கு இப்பொழுது வயது நாற்பதுதான் இருக்கும். நல்ல உடல் வலிமைபெற்றுச் சக்திவந்தனாக விளங்குகின்றான். அன்றி, அவன் மகனோ மிகவும் சிறியவன்; ஏழுவயதே யுள்ளவன்.

திருமலைத் தேவராயன் யுவராஜனாக முடிசூட்டப் பெறவில்லை; அவன் விஜயநகர ஸாம்ராஜ்யத்துக்கே சக்கரவர்த்தியாக முடிசூட்டப் பெறுகிறான். கிருஷ்ணதேவன் தன் பட்டம் பதவி யாவற்றையும் துறந்து நாட்டுக் குடிகளுள் ஒருவனாக ஆகிவிட்டான். குழந்தை முடிசூட்டப் பெற்றவுடன், தன் மகனேயாயினும், அவன் நாட்டின் அதிபதியானமையின், கிருஷ்ணதேவன் அவன்முன் மண்டியிட்டு ராஜவிசுவாசப் பிரமாணம் செய்தான். அவன் அவ்விதம் பிரமாணம் செய்யவேண்டியதற்கு மற்றொரு காரணமும் உண்டு. ராஜகுமாரன் தக்க வயதை அடைந்து ராஜாங்கக் காரியத்தைத் தானே நேரில் கவனிக்கக் கூடிய நிலைமைக்கு வரும் வரையில் கிருஷ்ணதேவனே அவனுடைய காரிய கர்த்தாவாகி இருந்து ராஜாங்க வேலைகளைக் கவனிக்கப் போகிறான்.

கிருஷ்ணதேவன் இப்படியெல்லாம் செய்தது எதற்காக? முன்னம் அவன் பட்டத்துக்கு வருங்காலத்தில் நடந்த சம்பவங்கள் அவன் மனத்தை அலைத்துக் கொண்டிருந்தன. தனக்குப் பிற்காலம் யார் அரசனாக முடிசூட்டப் பெறுவான் என்னும் சந்தேகமே அவன் உள்ளத்தில் ஊசலாடியது. அவனுக்கு அச்சுதன் என்ற தம்பி ஒருவன் இருந்தான். அவன் இக்காலத்தில் உரிய பருவத்தை அடைந்து ராஜீய விஷயங்களில் கலந்து கொண்டிருந்தான். குழந்தையோ சிறுவயதினன். திடீரென்று தான் இறந்துவிட்டால், ராஜ்யம் தன்பிள்ளைக்குக் கிடைக்காமல், அச்சுதன் கைப்பற்றி விட்டால் என்ன செய்வது? நிச்சயமாகத் தன் பிள்ளைதான் ராஜா என்பதை ஸ்தாபிக்க எண்ணினான். அதற்காகத்தான் தன் ஜீவிய காலத்திலேயே திருமலைத் தேவராயனுக்கு முடிசூட்டிவிட்டான். ஆசைகளை வெறுத்துத் துறவியாக விரும்பியவன் செய்கைகளா இவை!

## 4

நகர் எங்கும் ஒரே பரபரப்பு. செய்தியைக் கேட்டவர்கள் உண்மையாக இருக்குமா என்றே ஐயுற்றனர். உண்மை யறிந்தவர்கள் கலி முடிந்து பிரளய காலந்தான் தோன்றிவிட்டதோ என்று எண்ணினார்கள். வேறே எந்தவிதமாக இருக்கக் கூடும்?

கிருஷ்ணதேவராயனே, தன் தந்தையைக் காட்டிலும் அதிகமாக மதித்துப் போற்றிவந்த மந்திரி சாளுவ திம்மாஜியைக் கைது

செய்துவிட்டான். அவ்விதம் செய்வதற்கு அவனுக்குத் தைரியம் உண்டாயிற்று? உடல் நடுக்கமுற வில்லையா?

சாளுவ திம்மாஜி கிருஷ்ணதேவராயனுக்கு முன்பு மூன்று அரசர்களுக்கு மந்திரியாக இருந்திருக்கிறார். கிருஷ்ணதேவனுக்கும் பதினாறு வருஷங்கள் சேவை புரிந்திருக்கிறார். நாட்டில் அரசனுக்கு அடுத்தபடியாகச் செல்வாக்குப் பெற்றவர் அவர். பிரதமமந்திரி உத்தியோகத்தைத் தவிர ஒரு மண்டலாதிபதியாகவும், சேனாபதி பதியாகவும் இருக்கும் அவர், தர்ம சாஸ்திரங்களைக் கரை கண்டவர். வடமொழி நூல் விற்பன்னர். பல நூல்களையும், பழைய நூல் களுக்கு வியாக்கியானங்களையும் எழுதியவர். பழுத்த கிழவர். அப்படிப்பட்டவரைக் கைது செய்தால் நாடு முழுவதும் தனக்கு விரோதமாகக் கிளம்பும் என்பதைக் கிருஷ்ணதேவன் நன்கு அறி வான். அன்றி, தன்னிடம் உள்ள ஊழியர்களுள் எவரும் இச்செய் கையை நிறைவேற்றத் துணியமாட்டார்கள் என்பதையும் அறிவான்.

மந்திரியைச் சிறை செய்ய அவரை வெறுத்துவருபவர்களாகிய வைதிகமத விரோதிகளே துணியார்கள் என்பதை அறிந்த மன்னன், அக்காலத்தில் கோபகாபட்டணத்தில் (இப்பொழுது போர்த்துக் கீசிய இந்தியாவின் தலைநகராக விளங்கும் கோவா என்னுமிடத்தில்) வசித்துவந்த பறங்கிக்காரர்களின் உதவியை நாடினான். அவர்களு டைய குதிரைப்படைகள் முதலியவற்றின் உதவியாலேயே திம் மாஜி சிறை செய்யப்பட்டார்.

இவ்விதம் நடந்தது எதனால்? மன்னனுக்குச் சித்த சுவாதீன மில்லையா? ஆம். உண்மைதான். அரசன் பைத்தியம் பிடித்தவன் போலவேதான் நடந்து வந்தான்.

கிருஷ்ணதேவன் தன் உயிருக்கு உயிராக மதித்துத் தனக்குப் பிற்காலத்தில் நீடூழி காலம் நாட்டை ஆண்டு வர வேண்டு மென்று நினைத்துத் தான் முடியைத் துறந்து பட்டாபிஷேகம் செய்துவைத்த அவன் பிள்ளை திருமலைத்தேவராயன், மகுடாபிஷேகம் ஆகிப் பத்து மாதங்களில் இறந்துவிட்டான். மன்னனுக்கு அது பெரிய ஏக்கத் தை உண்டுபண்ணியது. தன் மகன் எப்படி இறந்தான் என்பதை அறியவேண்டுமென்பதே கவலையாக இருந்தது. அரசகுமாரன் விஷமிட்டுக் கொல்லப்பட்டான் என்று யாரோ அவன் காதில் போட்டு விட்டார்கள். நாளடைவில் அதுவே ஊர்ஜிதமாகிவிட்டது.

மகுடாபிஷேகத்திற்குப் பிறகு கிருஷ்ணதேவன் தன் குமாரனை மந்திரி திம்மாஜியிடம் ஒப்பித்தான். அரசகுமாரனை ராஜாங்க வியவகாரங்களிற் பயிற்றுவிப்பதற்கு அவரைக்காட்டி லும் தகுதியுள்ளவர் யாவர்? மந்திரி திருமலைத் தேவராயனைத் தம் மகன் மாதவனிடம் ஒப்புவித்தார். மாதவன் அல்ப சொல்ப

மானவன் அல்ல; மிகவும் கெட்டிக்காரன். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?

இங்ஙனம் தக்க இடத்தில் வளர்ந்து வரும்பொழுது தன் குமாரனுக்கு யார் விஷமிடத் துணிந்தார்கள் என்பதே அரசன் மனத்தை உறுத்தி வந்தது.

பழைய நிகழ்ச்சிகள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்ருக அவன் மனக்கண் முன் தோன்றலாயின: தன் அண்ணன் பிற்காலம் தான் நாட்டை அடையக் கூடாது என்பதற்காகத் தன் கண்ணைப் பிடுங்க உத்தரவிட்டதும், மந்திரி அண்ணனை வஞ்சித்துத் தனக்கு முடி சூட்டியதும் அப்பொழுதுதான் நடந்தவைபோலத் தோன்றின. மந்திரி ஒருகால் தன்னையும் வஞ்சித்திருக்கக் கூடுமா? தனக்குப் பிற்காலம் அரசு தன் பிள்ளை திருமலைத் தேவராயனுக்குப் போகக் கூடாது என்றும் அச்சுதனுக்கே போக வேண்டும் என்றும் மந்திரி திம்மாஜி செய்த சூழ்ச்சியாக இருக்குமா?

## 5

அரசன் கொலுவில் அமர்ந்திருக்கிருன். மந்திரி, பிரதானிகள் முதலியோர் பலரும் நாற்புறமும் சூழ்ந்திருக்கிருர்கள். அவர்கள் தங்கள் தங்கள் அந்தஸ்துக்குத் தக்க ஆசனத்திலோ கம்பளத்தின் மீதோ அமர்ந்தும் நின்றுகொண்டும் இருக்கிருர்கள். ஆயினும், அவர்களுள் ஒருவர் முகத்திலாவது பொலிவு காணப்படவில்லை. ஒவ்வொருவரும் பயத்தால் நடுக்கமுற்றவர் போலவே காணப்படுகிருர்கள்.

சபையின் முன்பாகத்தில் திம்மாஜியும், மஹாதண்ட நாயகர்களான அவர் குமாரர்கள் இருவரும் சங்கலியால் பிணைக்கப்பட்டு நிறுத்தப் பெற்றிருந்தார்கள்.

அரசனது முகம் கோபத்தாலும் ஆத்திரத்தாலும் ஜொலிக்கின்றது. கண்கள் சிவந்து திரண்டு பிதுங்கி விழுந்துவிடுவனபோல இருந்தன. மீசை படபடக்கிறது. புருவங்கள் நெற்றியில் ஏறிவிட்டன. அவன் பல்லை நறநறவென்று கடித்துப் பேச ஆரம்பித்தான். ஆயினும் வார்த்தைகள் சரளமாக வெளிவரவில்லை.

"மானிடப்பதரே! நான் உன்னைத் தந்தையினும் அதிகமாகப் பாவித்து வந்தேன்; என்ன பயன்! குட்டிச் சுவருக்கு ஆவதுபோல உனக்கு வயதாகி என்ன பிரயோஜனம்? உன்னைச் சொல்லி என்ன செய்வது? நான் அரசனுக முடிசூட்டப் பெற்றதற்கு நீ காரணமாக இருந்ததால், எந்தக் காரியத்தையும் நீ செய்வதற்குச் சுவாதீனம் உள்ளவன் என்று எண்ணிவிடாதே.

"உன்னை நான் பதினாறு வருஷங்களுக்கு முன்பே தண்டித் திருத்தல் வேண்டும். என். தமையனாரும் எனக்கு முன்னால் அரசராக இருந்தவருமான நரஸிம்ம தேவராயருடைய கட்டளையை மீறி அவருக்கு ஆட்டின் விழிகளை என்னுடைய விழிகள் என்று காண்பித்து ஏமாற்றிய குற்றத்துக்கு என்ன பதில் சொல்லப் போகிறாய்? ராஜத்துரோகியான உன்னை அப்பொழுது மன்னித்தது கெடுதலாகப் போயிற்று. இப்பொழுது அதற்குப் பிரதியுபகாரமாக மகாபாதகச் செயலைச் செய்துள்ளாய்."

இந்தவிதமாக அரசன் வெகுநேரம் யாது கூறுகிறோம் என்பதையும் கவனியாமல் பேசினான். சபை நிச்சப்தமாக இருந்தது. அங்கிருந்தோர் ஒவ்வொருவரும் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டிருந்தார்கள்.

இதைக் கேட்டதும் மந்திரி திம்மாஜிக்குத் தலை சுழன்றது. அவர் ஒன்றுமே பேசவில்லை. அவர் சார்பாகப் பேசுவோரும் இல்லாமல் இருந்தது அச்சபை. அங்ஙனம் யாராவது பேசியிருந்தாலும் அதனாற் பயன் ஒன்றும் ஏற்பட்டிராது என்பது மட்டில் நிச்சயம்.

இதற்குப் பிறகு நாம் கூற வேண்டியது அதிகம் இல்லை. முன்னம் தன் தமையன் தனக்கு எந்தத் தண்டனையை விதித்துத் திம்மாஜியால் அதனின்றும் காப்பாற்றப்பட்டானோ அதே தண்டனையை மன்னன் மந்திரிக்கு விதித்தான்.

தண்டநாயகர்கள் அதை உடனே நிறைவேற்றவில்லை. மன்னன் சிறிது காலத்தில் பச்சாத்தாபம் கொண்டு அவர்களை விடுதலை செய்து விடுவான் என்று எண்ணினார்கள் போலும். ஆயினும் அரசன் மனம் கரையவில்லை. சிறைவாழ்க்கையின் கொடுமையைச் சகியாமல் மந்திரியின் மகன் மாதவன் ஒருநாள் தப்பி ஓடிவிட்டான். அவன் பிடிபட்டு வந்தவுடன்தான் தன் கட்டளைப்படி அவர்களுடைய கண்கள் பிடுங்கப்படவில்லை என்பதை மன்னன் உணர்ந்தான். கன்னெஞ்சனாகிய அவனே பக்கத்தில் இருந்து அவற்றைப் பிடுங்கச் செய்தான். மந்திரியும் அதோடு உலக வாழ்க்கையினின்றும் மறைந்துவிட்டார்.

மகோந்நத ஸ்திதியில் வாழ்ந்த மந்திரி திம்மாஜிக்கு நேர்ந்த கதியின் நேர்மையைப்பற்றி நாம் ஒன்றும் கூறுவதற்கில்லை. தெய்வமே அறியும். ஆயினும், முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பது அவரது வாழ்க்கையினின்றும் உறுதிப்படுகின்றது.

---




# செயல் ஒரு பக்கம் செல்வம் இன்னொரு பக்கம்

பே. நா. அப்புஸ்வாமி ஐயர், பி.ஏ., பி.எல்.

---

உயிர் தோன்றிய காலத்திலேயே கொல்லும் வியாதியும் உடன்பிறந்தது என்று சொல்லலாம். வெள்ளமும், நெருப்பும், பாறையின் சரிவும், மரத்தின் வீழ்ச்சியும், காட்டு மிருகங்களும், வீட்டு மிருகங்களும், பகைவரின் கொடுமையும் துணைவரின் அன்பும்கூட மனிதருக்கு எத்தனையோ வகையான ஆபத்துக்களை உண்டாக்குவன. ஆகையால் மிகவும் பழமையான காலம் முதலே வைத்தியம் செய்யப்பட்டு வந்திருக்கிறது. இக்காலத்தில் கூட அரியவையாகக் கருதப்படுகின்ற சிற்சில இரணவைத்திய முறைகள் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்பும் செய்யப்பட்டு வந்தன என்று தெரியவருகிறது. உதாரணமாக, மண்டையோட்டைத் துளைத்துச் செய்யும் அதியற்புதமான இரணவைத்திய சிகிச்சை ஒன்றானது மூவாயிரம் நாலாயிரம் வருஷங்களுக்கு முந்தியகாலம் முதலே செய்யப்பட்டு வந்திருக்கிறது என்று இப்பொழுது நமக்கு அகப்படும் பழையகாலத்து மனிதர்களுடைய மண்டையோடுகளைப் பரிசோதித்த விஞ்ஞானிகள் சொல்லுகிறார்கள்.

இப்பொழுது மேல்நாடுகளில் இரணவைத்தியம் நாளுக்கு நாள் வளர்ந்து, விருத்தியடைந்து, தற்கால விந்தைகளுள் ஒன்றாக ஆகிவிட்டது. இதற்கு உரிய முக்கியமான காரணங்கள் இரண்டு. கத்தியால் செய்த புண்ணானது சீக்கோத்துக்கொள்ளாமல் சுலபமாக ஆறிவருவதற்கு வேண்டிய தக்க மருந்துகளையும் முறைகளையும் தெரிந்து கையாளுவது ஒன்று. கத்தி முனையால் வெட்டிக் கிறப்படும் நோயாளி தான் வெட்டுறும்போது நோவைச் சிறிதேனும் உணராமலும் தன் உடலை ஆட்டி அசைத்துத் தொந்தரவு செய்யாமலும் இருப்பது மற்றொன்று.

முன்காலத்திலே இரணவைத்தியம் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டால் வைத்தியனும் நோயாளியும் படும்பாடு கொஞ்ச நஞ்சமல்ல. லாடம் அடிக்கும் மாட்டைக் கட்டி உருட்டுவது போல், நோயாளியின் கையையும் காலையும் கட்டிவிடுவார்கள்; பக்கத்தில் நாலைந்து பேர் நின்றுகொண்டு அவனை அழுத்திப் பிடித்துக் கொள்வார்கள்; பக்கத்தில் ஒருவர் நின்று அவனை அதட்டிக்கொண்டே இருப்பார். இவற்றுள் ஒன்றாலும் வலி குறையாது அல்லவா? ஆதலால் நோயாளி கத்திக் கதறிக் கூச்ச லிடுவான்; உடலைத் திமிறி அசைத்து நெளிப்பான். ஆகையால், இரணவைத்தியம் செய்வது என்றால் சித்திரவதை செய்வதற்குச் சமானம் என்றாகிவிட்டது. கோழை மனம் உள்ளவர்களும் நல்ல தேகபலமற்றவர்களும் வைத்தியத்திற்கு உள்ளாகத் துணியார்கள். அதைப்போலவே, இரக்க முள்ளவனும் உடல்வலி குறைந்தவனும் வைத்தியனாக இருக்க முடியாது.

ஆனால், உயிரைக் காப்பதற்கோ இரணவைத்தியம் அவசியம். கை முறிந்தவனும் கால் நசுங்கியவனும் நோவு பொறுக்க முடியா மல் அலறுவதையும், காயம்பட்ட இடமானது சீக்கோத்துக் கொள் ளுவதால் அவன் நோயுற்று வருந்திச் சாவதையும் பார்க்கும் எவ னுடைய மனந்தான் இரங்காது? அவனைச் சிறிதுநேரம் இமிசைப் படுத்தியேனும் அவனுடைய தீராநோவைக் குறைப்பதும், அவ னுடைய உயிரைக் காப்பாற்ற முயலுவதும் தம்முடைய கடமை என்று இரணவைத்தியர்கள் கொண்டார்கள். ஆதலால் இரண வைத்தியம்—பலர் அஞ்ச, பலர் பரிகசிக்க, பலர் அருவருக்க— ஒருவாறு நடந்துகொண்டே வந்தது. ஆயினும் இரணவைத் தியம் செய்பவர்களைக் கசாப்புக் கடைக்காரர்களுக்கு ஒப்பிடு வதும் யமதர்மராஜனுக்குச் சகோதரர்கள் என்று சொல்லுவதும் சகஜமாக இருந்தன.

மிகப் பழையகாலந்தொட்டே, இரணவைத்தியம் செய்யும் போது ஏற்படும் நோவை எப்படிக் குறைப்பது, நோயாளியானவன் அந்நோவை எப்படி உணராமல் இருக்கச் செய்வது என்னும் வழி களை அறிவாளிகள் ஆராய்ந்துகொண்டுதான் இருந்தனர். சிற்சில வழிகளைக் கையாண்டும் பார்த்தனர். அபினியை விழுங்கச் செய் தும், கள் சாராயம் முதலியவற்றைக் குடிக்கச் செய்தும் நோயா ளிக்கு மயக்கம் உண்டாக்கினர். குளிர்ந்த தண்ணீர், பனிக்கட்டி முதலியவற்றால் நோவுற்ற இடத்தைச் சுரணையறச்செய்தனர். அவ்வாறே அவ்விடத்தை இறுக அழுத்திக் கட்டி உணர்ச்சியற்றுப் போகும்படி செய்தனர். அவனை மந்திரத்தால் மெய்ம்மறந்து பிரக்ஞையற்றுப் போகும்படி செய்ய முயன்றனர். தம்முடைய

சக்தியால் எத்தனையோ நோயாளிகளை உறங்கவைத்துச் சுரணை யறச் செய்ததாக மேஸ்மர் என்பவர் பிரஸ்தாபித்தார். ஆனால் அவருடைய செயல் தக்க வைத்தியர்கள் முன்பாக என்றும் செய்து காட்டப்படவில்லை யாதலால் விஞ்ஞான உலகமானது அவர் சொன்னதை நம்பவில்லை.

இவ்வாறு எவ்வளவோ காலமாக எத்தனையோ அறிவாளி கள் எப்படியெல்லாமோ முயன்று தேடியும் தக்க மயக்கமருந்து ஒன்றும் அகப்படவில்லை. ஆதலால் ஸஞ்ஜீவினி மாத்திரையும், ரஸாயன குளிகையும், சிந்தாமணியும் எந்தக்காலத்தில் கிடைக் குமோ அந்தக் காலத்தில்தான் சரியான மயக்க மருந்தும் கிடைக் கும் என்று அறிவாளிகள் எண்ணலாயினர். ஆகையால் இம் முயற்சிகள் மேன்மேலும் நடைபெறாமல் நின்றுபோயின. முயற்சி செய்வோரையும் அரைகுறைப் பயித்தியம் என்றே உலகம் பரிகசித்தது.

இப்படியிருக்கையில் சுமார் நூறுவருஷங்களுக்கு முன்பு, அதாவது ஆயிரத்து எண்ணூற்று இருபத்தெட்டாம் வருஷத் திலே, ஹிக்மன் என்னும் ஆங்கிலேய வைத்தியர் ஒருவர் அப் பொழுது பிரான்ஸ் தேசத்திலே அரசனாயிருந்த பத்தாவது சார்ல்ஸ் மன்னனுக்கு ஒரு கடிதம் எழுதினார். அந்தக் காலத்திலே விஞ்ஞான விஷயங்களிலே பிரான்ஸ் தேசமானது முன்னேற்றம் அடைந்திருந்தது; அவ்விஷயங்களை ஒட்டிய ஆராய்ச்சிகளை நடத்துவோரையும் ஆதரித்துவந்தது. இந்தக் காரணத்தாலோ, அல்லது தம்முடைய தேசத்திலுள்ள வைத்தியர்கள் தாம் சொல்லி யதைப் பொருட்படுத்தி ஆராயாமல் பரிகசித்ததாலோ தெரிய வில்லை, ஹிக்மன் பிரான்சு தேச மன்னருக்குக் கடிதம் எழுதினார். இரணவைத்தியத்துக்கு உள்ளாகும் நோயாளியை மயக்கமுற்றுச் சுரணையற்றுக் கிடக்கச் செய்யவல்ல மருந்து ஒன்றைத் தாம் கண்டுபிடித்திருப்பதாக அந்தக் கடிதத்தில் அவர் எழுதியிருந்தார். ஆராய்ச்சியில் பற்றுள்ள அவ்வரசர் அந்தக் கடிதத்தை வைத்தியக் கழகத்துக்கு அனுப்பிவைத்தார். சங்கத்தினர் கூடினர். அந்தக் கடிதத்தில் கண்ட விஷயத்தைப் பற்றி ஆலோசனை நடந்தது. 'மயக்கமாவது மண்ணாவது', 'அதெல்லாம் வெறும் கனவு என்று வெகுநாளாகத் தீர்ந்துவிட்டதே', 'இத்தனை பெரியவர்கள் செய்யாத காரியத்தை இந்தப் பெயர் தெரியாத ஆங்கிலேயனா செய்திருக்கப்போகிறான்?', 'அவன் அரைப் பைத்தியமாக இருக்க வேண்டும்; இல்லாவிட்டால் இவ்வளவு துணிச்சல் வராது' என்றெல்லாம் பேசிப் பரிகசித்தது அந்த அறிஞர் கழகம். இரண வைத்தியநிபுணராகிய லார்ரி பிரபு ஒருவர் மட்டிலும், "அந்த

ஆங்கிலேயரை வரவழைத்து நேரில் கேட்டுப் பார்க்கலாமே'' என்று சொன்னாரே யொழிய, வேறு ஒருவரும் அவர் எழுதிய கடிதத்தைப் பொருட்படுத்தவே இல்லை. ஆகையால் மற்றவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து, "இது பிரயோஜனமில்லாத விஷயம்; இதில் தலையிடவேண்டாம்'' என்று மறுக்கவே, ஆலோசனை அதோடு முடிந்துவிட்டது. ஹிக்மன் தொடங்கிய முயற்சி வீணாகிவிட்டது.

அந்தக்காலத்தில் வெளிவந்த இரணவைத்தியப் புஸ்தகம் ஒன்றைப் பார்த்தால் இவ்விஷயத்தைப்பற்றி அறிவாளிகள் என்ன நினைத்தனர் என்பது தெரியும். அத்தகைய புஸ்தகம் ஒன்றில் ஓர் அறிஞர் தம் அபிப்பிராயத்தைப் பின்வருமாறு வெளியிட்டிருந்தார்: 'இரணவைத்தியமுறையை நோவற்றதாகச் செய்யும் முயற்சியானது நிழலைப் பிடிக்க முயலுவதையே ஒக்கும். தெளிந்த அறிவையுடைய விஞ்ஞானிகளுள் ஒருவருக்கும் இதைப்பற்றிச் சந்தேகமே இல்லை. ஆதலால் இப்பொழுது ஒருவராவது நிழலைப் பிடிக்க முயலுவதில்லை. வைத்தியனுடைய கத்தி என்றால் பொறுக்க முடியாத வலி என்று அர்த்தம் என்று நோயாளிகள் நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் கொண்ட இந்த எண்ணமானது சரியானதுதான் என்பதையும், இந்தக் காரியம் என்றென்றைக்கும் இப்படியேதான் இருக்கும் என்பதையும் நாம் ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும்.' மயக்கமருந்தைத் தேடித் தேடிக் கிடையாமல் அலுத்துச் சலித்த விஞ்ஞானிகள் அம் முயற்சியைக் கைவிட்டது ஆச்சரியமல்ல.

இப்படியிருக்கையில், இங்கிலாந்திலே இரசாயன சாஸ்திர ஆராய்ச்சிகளை நடத்திவந்த ஸர் ஹம்ப்ரி டேவி என்பவர் தாம் பரிசோதித்துவந்த நைட்ரஸ் ஆக்ஸைட் என்னும் காற்றின் குணங்களைப் பற்றிச் சொல்லும்போது, "அந்தக் காற்றை நாலைந்து மூச்சு சேர்ந்தாற்போல் சுவாசித்து உட்கொண்டால், நோவின் உணர்ச்சி மிகவும் குறைந்துபோகிறது. வலி தோன்றாது சுரணையற்றிருக்கச் செய்யும் சக்தியும் இந்தக் காற்றுக்கு இருப்பதாகத் தெரிகிறது. ஆதலால் அதிகமாக இரத்தப்பெருக்கு ஏற்படாத சிறிய இரண வைத்திய முறைகளிலே இதை உபயோகித்துப் பார்த்தால் பிரயோஜனப்பட்டாலும் படலாம் என்று தோன்றுகிறது'' என்று சொல்லிவைத்தார். இவர் இவ்வாறு சொல்லியதை இங்கிலாந்தில் உள்ளவர்கள் ஒருவரும் அதிகமாகக் கவனிக்கவில்லை. எத்தனையோ குணங்களை உடையதாயும், புத்தியை விரோதமாய்ப் பாதித்து ஒருவனைத் தன்னையறியாமலே சிரிக்கச் செய்வதாயும் உள்ள இந்தக் காற்றினுடைய (அதனால் இந்தக் காற்றுக்குச் சிரிப்புக்காற்று என்ற பெயர் கிடைத்தது.) விசித்திரமான மற்றக் குணங்களை

ஜனங்கள் கவனித்தனரே யொழிய இந்தக் குணத்தை அவர்கள் கவனிக்கவே இல்லை.

ஆயினும் இங்கிலாந்திலிருந்து ஐயாயிரம் மைலுக்கு அப்பாலுள்ள அமெரிக்க ஐக்கியநாடுகளிலே, கன்னெக்டிகட் என்னும் மாகாணத்திலே, ஹார்ட்போர்ட் என்னும் சிறு ஊரிலே உள்ள ஹாரஸ் வேல்ஸ் என்பவருடைய மனத்திலே இது பட்டது. ஹாரஸ் வெல்ஸ் என்பவர் ஒரு பல்வைத்தியர். அதிக வருமான மற்றவர்; ஏழை. அதிகப் படிப்பும் அற்றவர். டேவி சொல்லிய விஷயத்தைப் படித்தவுடன், 'இத்தனை நாள் தேடிய மருந்து அகப்பட்டுவிட்டதே. இரணவைத்தியத்திலே இதை உபயோகித்துப் பார்க்கலாமே' என்ற எண்ணம் அவருக்குத் தோன்றிற்று. நல்லவேளையாக அந்தச் சமயத்தில் அவருக்குப் பல்வலி உபத்திரவம் இருந்து, பிடுங்கவேண்டிய பல் ஒன்று இருந்தது. 'நாமே இந்த மருந்தை நேரில் பரீக்ஷைசெய்து பார்க்கலாமே' என்று அவர் நினைத்தார். தாமே அந்தக் காற்றை உட்கொள்ளுவது என்றும், உட்கொண்டு மெய்ம்மறந்திருக்கும் நிலைமையில் தம் வீட்டிலுள்ளவர் வேறு யாரையாவது கொண்டு தம் பல்லைப் பிடுங்கிப் பார்ப்பது என்றும் அவர் தீர்மானித்தார். அப்படியே செய்யவும் செய்தார். பல்லைப் பிடுங்கும்போது வலியே தெரியவில்லை. அதன் குணத்தைத் தெரிந்துகொண்ட அவர், அதன் பிறகு தம்மிடம் பல்லைப் பிடுங்கிக்கொள்ள வரும் நோயாளிகளுக்கும் இந்த மருந்தைக் கொடுத்து உபயோகித்து வந்தார். இது பிரயோஜனமாக இருப்பதைக் கண்டு இதைப்போன்ற மற்றக் காற்றுகள் எவையேனும் பயன்படுமா என்று பரீக்ஷைசெய்து ஸல்பூரஸ் ஈதர் என்னும் காற்றும் இதேமாதிரியான குணமுள்ளது என்று கண்டு பிடித்து அதையும் உபயோகித்து வந்தார். பிறகு மார்சி என்னும் டாக்டர் ஒருவர், "ஸல்பூரஸ் ஈதரை உபயோகிக்க வேண்டாம். அது கொடிய குணமும், தீவிரமான சக்தியும் உடையது" என்று எச்சரிக்கை செய்ய, அதை விட்டுவிட்டு முன்போல நைட்ரஸ் ஆக்ஸைடைமட்டுமே உபயோகித்துவந்தார்.

ஹார்ட்போர்ட் என்னும் ஊருக்கு வருவதற்கு முன் வெல்ஸ் என்பவர் பாஸ்டன் நகரத்திலே கொஞ்சகாலம் பல்வைத்தியராக இருந்துபார்த்தார். அவரும் வில்லியம் மார்ட்டன் என்னும் ஒருவருமாகச் சேர்ந்து பாஸ்டனில் தொழிலை நடத்திப்பார்த்தார்கள். அங்கே வருமானம் ஒன்றும் கிடையாமல் செலவும் அதிகமாக ஏற்படவே, வெல்ஸ் ஹார்ட்போர்டுக்கு வந்து அங்கே சிறுகச் சிறுக ஏதோ கிடைத்ததைக்கொண்டு காலக்ஷேபம் பண்ணிக் கொண்டு வந்தார்.

வலிதெரியாமல் பல்லைப் பிடுங்கும் நூதனமுறையைக் கையாளத் தொடங்கிய பிறகு, மீண்டும் பாஸ்டன் நகரத்துக்கே போய், தாம் புதிதாகக் கண்டுபிடித்த முறையை அங்குள்ள வைத்திய நிபுணர்களுக்குச் சொன்னால் தமக்கு நல்ல பெயரும் பணமும் கிடைக்குமென்று வெல்ஸ் நினைத்தார். பாஸ்டனுக்குப் புறப்பட்டுப் போனார். அங்கே போய்த் தம்முடைய பழைய பங்காளியாகிய மார்ட்டனைப் பார்த்தார். அப்பொழுது அந்த நகரத்தில் டாக்டர் ஜாக்ஸன் என்ற இரணவைத்திய நிபுணர் ஒருவர் இருந்தார். அவ்விருவர்களிடமும், ஹேவேர்ட், வாரன் என்னும் வைத்தியர்கள் இருவரிடமும் தாம் கண்டு பிடித்த விஷயத்தைப் பற்றி விரிவாகச் சொன்னார். அவர்கள் எல்லோருமாகக் கூடி யோசித்து, வெல்ஸ் கண்டுபிடித்ததை உலகம் அறியும் பொருட்டு, பொதுக்கூட்டம் ஒன்றைக் கூட்டி அதிலே அவர் கண்டுபிடித்த மயக்க மருந்தின் சக்தியை அவரைக் கொண்டு நிரூபித்துக் காட்டச் செய்வதுதான் தக்க ஏற்பாடு என்று முடிவு செய்தனர்.

அந்தக் காலத்திலே இரணவைத்தியம் செய்துகொள்ளுபவரின் தொகை மிகக் குறைவு. ஆபரேஷன் செய்துகொள்ள வேண்டுமானால் நோயாளிக்கு மிக்க நெஞ்சுறுதி வேண்டும். ஆபரேஷன் செய்யும்போது நோவு பொறுக்க முடியாதபடி இருக்கும். செய்த பிறகோ பிழைத்தால்தான் நிச்சயம். வியாதியின் நோவைத் தாங்குவதைக் காட்டிலும் சாவதே மேல் என்று நினைத்துத் துணிந்தவன்தான் அநேகமாக ஆபரேஷனுக்கு உள்ளாக உடன்படுவான் என்றுகூடச் சொல்லலாம். ஆகையால், வெல்ஸ் பாஸ்டனுக்கு வந்தபொழுது, அந்த நகரத்து ஆஸ்பத்திரியிலும் கூட ஆபரேஷன் செய்யப்படவேண்டியவர் ஒருவரும் இல்லை. சமீபத்தில் எப்பொழுதாகிலும் யாராவது வரக்கூடுமா என்று சொல்லுவதற்கும் இல்லை. வெல்ஸ் சொல்லிய விஷயமோ முக்கியமான விஷயமாக இருந்தது. ஆகையால், அன்று மாலையிலேயே வைத்திய கலாசாலையில் வழக்கம்போல் நடக்கும் பிரசங்கத்தைக் கேட்பதற்குக் கூடும் வைத்தியசாலை மாணவர்களுள் யாராவது ஒருவனைப் பிடித்து அவன்மேல் ஏதாவது இலேசான பரீக்ஷை நடத்திப் பார்க்கலாம் என்று அவர்கள் தீர்மானித்தார்கள்.

சாயங்காலமாயிற்று. பிரசங்கம் நடக்கவேண்டிய அறையிலே மாணவர்கள் கூடினர். பிரசங்கமேடையில் ஏறிய வெல்ஸ் சிரிப்புக் காற்றின் மயக்க குணங்களைப்பற்றி விரிவாகப் பேசித் தம் அனுபவங்களை யெல்லாம் எடுத்துச் சொன்னார். எல்லோரும் ஆச்சரிய மடைந்தார்கள். "உங்களுள் யாருக்காவது இதை நேரில் பரீக்ஷை செய்ய ஆசை யுண்டா? பல்வலியோ, சிரங்கோ

இருந்தால், பரிகாரம் தேடிக்கொள்ளுவதற்கு இது நல்ல சந்தர்ப்பம்'' என்றார். பல்வலி ஒருபுறமும், குறைகுறைப்பு ஒருபுறமும், மாணவர்களுக்கு இயற்கையாயுள்ள விஷமத்தனம் ஒருபுறமும் தூண்ட ஒரு மாணவன் எழுந்து, "என் பல்லைப் பிடுங்குங்கள்'' என்று முன்வந்தான். அவனை மேடையிலேற்றி, அவனுக்கு அந்த நைட்ரஸ் ஆக்ஸைட் காற்றைக் கொடுத்துச் சுவாசிக்கச் செய்தார்கள். பிறகு, "இதோ பாருங்கள். இவனுக்கு வலியே தெரியாது'' என்று சொல்லிக்கொண்டே அவனுடைய பல்லைப் பிடுங்க முயன்றார் வெல்ஸ். மாணவன் வலி பொறுக்கமுடியாமல் கத்திக் கதறிவிட்டான்—வழக்கமாய் ஒவ்வொரு பல்வலிக்காரனும் கத்துவதுபோல. அந்தக் காற்று சிற்சிலருக்கு மயக்கம் உண்டாக்காத காரணத்தாலோ, அல்லது அது சரியான முறையில் தயார்செய்யப்படாத காரணத்தாலோ—எதனால் இருந்தால் என்ன?—வெல்ஸ் சொன்னபடி நடக்கவில்லை. மாணவர்களில் சிலர் சிரித்தனர்; சிலர் சீறினர். கூட்டத்திலே ஒரே குழப்பம் உண்டாகிவிட்டது. வெல்ஸ் அடிபடாமல் வெளியே தப்பிவந்தது பெரிய காரியமாகிவிட்டது. வெல்ஸ் நெஞ்சுறுதியற்றவர்; எளிதில் தளர்ச்சியுறும் சுபாவம் உடையவர். ஆகையால் அவர் வெட்கத்தால் மனமுடைந்து தம்முடைய ஆயுதங்கள் எல்லாவற்றையும் மார்ட்டனுக்குக் கொடுத்துவிட்டுத் திரும்பவும் தம்மூர்போய்ச் சேர்ந்தார். தாம் கட்டிய ஆகாசக் கோட்டையானது எதிர்பாராதவிதமாய்த் தகர்ந்து போனதைக் கண்ட அவருக்கு ஏக்கம் பிடித்து வியாதியே வந்துவிட்டது. அதிலிருந்து ஒருவாறு பிழைத்தெழுந்ததும், 'இனிமேல் நமக்கு இந்த உத்தியோகமே வேண்டியதில்லை' என்று தாம் அதுவரை நடத்திவந்த பல்வைத்தியத்தை உதறி எறிந்துவிட்டு, தம் ஜீவனோபாயத்தின் பொருட்டுப் பக்ஷிகளை வளர்க்கும் தொழிலை மேற்கொண்டார்!

ஆனால் வெல்ஸ் சொல்லிய விஷயங்களை டாக்டர் ஜாக்ஸன் மறக்கவில்லை. அவர் விஞ்ஞான சாஸ்திர அறிவுடையவர். சிறிது காலம் கழித்து அவர் வெல்ஸ் சொல்லியவற்றை நுணுகி ஆராயத் தொடங்கினர். நைட்ரஸ் ஆக்ஸைட் என்னும் சிரிப்புக்காற்றும் ஸல்பூரிக் ஈதரும் மயக்கத்தை உண்டுபண்ண வல்லன—நிஜமாகவே உண்டுபண்ண வல்லன—என்பதை நேரில் கண்டுகொண்டார். அரைகுறையாகப் படித்த வெல்ஸ் நடத்திய சோதனைகளைக் காட்டிலும் இவர் நடத்திய சோதனைகள் மிகவும் ஒழுங்கான முறையில் செய்யப்பட்டன. ஆகையால் இவற்றிலே தவறுகள் அதிகமாய் ஏற்படாதிருந்தன. ஆயினும் இம்மருந்துகளை உட்கொள்ளுவதற்கும், உட்கொண்டு ஆபரேஷன் செய்துகொள்ளுவதற்கும்

இணங்கும் ஆட்கள் எளிதில் அகப்படவில்லை. மேலும், கொடிய குணமுள்ள மருந்துகளை நூதனமாக உபயோகப்படுத்துவதிலும் வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டி யிருந்தது. அம்மருந்துகளின் குணங்கள் முழுவதும் அறிந்துகொள்ளப்படாமையால் எதிர்பாராத விபத்து எப்பொழுது உண்டாகும் என்று சொல்வதற்கில்லை.

ஆகையால், 'மார்ட்டன் நடத்திவந்த பல்வைத்தியத் தொழிலிலே பல்லைப் பிடுங்கிக் கொள்ள வரும் ஆட்களுக்கு இந்த மருந்துகளைக் கொடுத்துப் பார்ப்பதுதான் சரியான முறை. ஏனெனில் அதிலே ஆபரேஷனும் பெரியதாக இல்லை. கொஞ்சமாக மருந்து கொடுத்தாலும் போதும். அதிக நேரமும் கொடுக்கவேண்டியதில்லை. ஆகையால் கெடுதி அதிகமாக ஏற்படுவதற்கு இடமில்லை' என்று முடிவு செய்த ஜாக்ஸன் இந்த மருந்துகளை உபயோகிக்கும்படி மார்ட்டனைத் தூண்டினார். மார்ட்டனும் அரைகுறையாகப் படித்தவரே. ஸல்பூரிக் ஈதர் என்ற பெயரையே அவர் முன்னால் கேள்விப்பட்டதில்லையாம். ஆயினும் அவர் சாமர்த்தியசாலி. ஆதலால் ஜாக்ஸன் சொல்லிக் கொடுத்த விஷயங்களைக் கிரகித்துக் கொண்டார். அம்மயக்க மருந்துகளின் வேகத்தைத் தம்மீதே பிரயோகிக்கப் பார்த்தாராம். பிறகு தம்மிடம் பல்வைத்தியத்துக்கு வந்தவர்களின்மீது சிலகாலம் உபயோகித்துப் பார்த்து, அவற்றின் குணுகுணங்களை நன்ருகத் தெரிந்துகொண்டார். பிறகு அம்மயக்க முறையைத் தாமே கண்டுபிடித்ததாகக் கூறி ஐக்கிய நாடுகளில் ஒரு பேடெண்டும் எடுத்துக்கொண்டார். பிறகு டாக்டர் வாரனேடு கலந்து பேசி, பாஸ்டன் நகரத்தில் வைத்திய சங்கத்தின் ஆதரவிலே பிரபல வைத்தியர்களும் வைத்திய மாணவர்களும் கூடிய சபையின் முன்னிலையில் தம்முடைய மயக்க மருந்தின் வேகத்தை நிரூபிப்பதற்கு ஓர் ஏற்பாடு செய்தார்.

அவ்வளவு ஜனங்களின் முன்னிலையிலும், கழுத்திலே பெரிய பிளவை புறப்பட்டுஅவஸ்தைப்படும் ஒருவனுக்கு டாக்டர் வாரன் ஆபரேஷன் செய்வதென்று ஏற்பாடாகி யிருந்தது. அந்தப்படி ஆபரேஷனும் நடந்தது. நோயாளி கத்தவுமில்லை; கதறவுமில்லை. ஆபரேஷன் நடக்கும்போது யாரோ இலேசாகக் கழுத்தைச் சொறிந்ததுமாதிரி இருந்ததே தவிரத் துளிகூட வலி தெரியவே இல்லை என்று நோயாளி சொன்னன். பார்த்துக் கொண்டிருந்த ஜனங்கள் பிரமித்துப்போயினர். அந்த விந்தையைப்பற்றி எல்லோரும் உற்சாகமாகப் பேசிக்கொண்டிருந்தனர். சில காலத்துக்கு முன் அதே பரீக்ஷையை நடத்த முயன்று தவறியதால் அவமானமடைந்த வெல்ஸைப்பற்றி நினைத்தவர் ஒருவரும் இல்லை.

இப் புதிய மயக்கமுறையானது முற்றிலும் திருப்திகரமானது அன்று. ஆயினும் இதில் எத்தனையோ அனுகூலங்கள் இருந்தன. ஆதலால் ஐக்கிய நாடுகள் முழுவதும் இம்முறை பரவலாயிற்று. பரவிய இடமெங்கும் ஜாக்ஸனையும் மார்ட்டனையும் ஜனங்கள் கொண்டாடினர். பெரும் பரோபகாரிகளென்று அவர்களை வாழ்த்தினர். துரதிருஷ்டம் பிடித்த வெல்ஸைப்பற்றி ஒருவரேனும் நினைக்கவில்லை.

வெல்ஸுக்குச் சிறிதளவேனும் விஞ்ஞானப் பயிற்சி இருந்திருந்தாலும், அல்லது அவர் சோதனை நடத்தியவன்று அவருக்குச் சற்றே அதிருஷ்டம் இருந்திருந்தாலும், இந்தக் கதி அவருக்கு நேர்ந்திராது. பாஸ்டன் நகரத்திலே பலர் அறிய நடத்திய சோதனை துரதிருஷ்டத்தால் தவறிப்போகவே, அவர் வெறுப்புற்றுச் சோதனை நடத்துவதையே நிறுத்திவிட்டார். பிறகு மேற்கூறியபடி பக்ஷிகளை வளர்த்து ஜீவனம் செய்துவந்தார். அப்படி இருக்கையில் அவர் கண்டுபிடித்த மருந்தின் குணாதிசயங்கள் பிறர் மூலமாய் எங்கும் பரவவே, அவர் மனமானது ஒருபுறத்தில் சந்தோஷத்தையும் மற்றொரு புறத்தில் மிக்க வருத்தத்தையும் அடைந்தது. 'ஆகா! நாம் தொடர்ந்து ஆராய்ச்சிகளை நடத்தாமல் இருந்துவிட்டோமே' என்ற வருத்தமானது அவருடைய மனத்தைத் துன்புறுத்தித் துளைத்துக்கொண்டே யிருந்தது.

எப்படியாவது ஐரோப்பாவுக்குப்போய், தாமே அந்த மருந்துகளை முதன்முதலில் உபயோகித்த விஷயத்தை ருஜுப்படுத்தும் அத்தாட்சிகளை அறிவாளிகளுக்கு எடுத்துக் காட்டித் தம்முடைய பெயரை நிலைநாட்ட வேண்டுமென்று தீர்மானித்தார். இவ்விஷயங்களை யொட்டிய சரிதம் அப்பொழுது எல்லாருக்கும் தெரியாது. போதுமான அத்தாட்சிகளும் வெல்ஸினிடம் இல்லை. ஆதலால் இங்கிலாந்தில் ஒருவரும் அவருடைய கதையை நம்பவில்லை. பிரான்சுக்குப் போய் அங்கே முயன்றும் அதே கதிதான் ஆயிற்று. யாரேனும் ஒருவன் புதிதாக ஒரு விஷயத்தைக் கண்டுபிடித்தால், பிறகு பலர் 'கண்டுபிடித்தது நான் நான்' என்று பங்குக்கு வருவது அக்காலத்தில் வெகு சாதாரணமாயிருந்தது. ஆதலால் அரைகுறைப் படிப்புள்ள அவரை அப்பேர்ப்பட்ட போலி ஆட்களில் ஒருவராகவே மதித்த விஞ்ஞானிகள் அவர் சொல்லியவற்றைச் சரியாகக் காதில் வாங்கிக்கொள்ளவில்லை.

ஏமாற்றமடைந்து மனமுடைந்து, அல்ப சொல்பம் இருந்த காசையும் இழந்து, பரம ஏழையாய்ப் போன வெல்ஸானவர் மிக்க மனவருத்தத்துடன் மீண்டும் தம் நாட்டை அடைந்தார். மனம்

உறுத்திக்கொண்டேயிருந்தது. தாங்க ஒண்ணாத மன வருத்தத்தையும் தரித்திர நிலையையும் அடைந்த வெல்ஸ் மனம் தடுமாறித் தற்கொலை செய்துகொள்ளத் தீர்மானித்தார். கத்தியினால் தம்முடைய இரத்தக்குழாய் ஒன்றைக் கீறிவிட்டுக்கொண்டு, வலி தோன்றாதிருக்கும்பொருட்டுத் தாம் கண்டுபிடித்த ஈதரையே சுவாசித்து மயக்கமடைந்து மிகவும் பரிதாபமாக மாண்டார்!

சற்றேறக்குறைய அதேசமயத்தில் பிரான்சிலே உள்ள விஞ்ஞானிகளின் சமாஜமானது அம்மருந்தைக் கண்டு பிடித்ததற்காக டாக்டர் ஜாக்ஸனுக்குப் பரிசளித்தது! அந்த மருந்துக்குப் பேடன்ட் எடுத்த மார்ட்டனும் அம்மயக்க முறையை அநுஷ்டிக்கும் பாத்தியதையை விற்று ஏராளமாகப் பணம் சம்பாதித்துக் கொண்டிருந்தார்.

செயல் ஒரு பக்கம், செல்வம் இன்னொரு பக்கம்! காரியம் ஒருபக்கம், கீர்த்தி இன்னொரு பக்கம்!

---

## கண்ணாடி ஆடை

கண்ணாடியிலிருந்து நூலை உண்டாக்கி அதை ஆடையாக நெய்யும் முறையொன்று இப்பொழுது கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. ஓஹியோவிலுள்ள நிவார்க் ஆராய்ச்சிசாலையில் இதற்குரிய யந்திரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றனவாம். மிகவும் மெதுவாகவும் வழுவழுப்பாகவும் உள்ள ஆடைகளை உண்டாக்கலாமாம். ஒரு பவுண்டு கண்ணாடியிலிருந்து ஒரு கோடி கஜம் நூல் எடுக்கலாம். கண்ணாடியிலிருந்து சிலவகையான காகிதங்களை உண்டாக்கும் முறையையும் கண்டு பிடித்திருக்கிறார்கள். காற்றை வடிகட்டுவதற்குரிய கண்ணாடிச் சல்லடை ஒன்று கண்டுபிடித்திருக்கிறார்கள். அது காற்றிலுள்ள புழுதியில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பங்கை வடிகட்டுகிறதாம்.

—வ. ஸ.




## வேங்கடேசேந்திரன்

ச. சோமசுந்தர தேசிகர்

(இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை)

---

**ப**ணவிடு தூது என்ற பேருடைய ஒரு சிறுநூலைத் திருத்தணிகையிலிருந்த கந்தப்பையர் குமாரர் சரவணப்பெருமாளையர் பரிசோதித்து, கி. பி. 1834-க்குச் சரியான விளம்பி ஹூ தைமீ சென்னபட்டணத்திலுள்ள கல்விவிளக்க அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிட்டார். அந்த நூல் திருநெல்வேலிச் சீமையை யாண்ட வேங்கடேசேந்திரன் என்னும் வேங்கடேசையரது துரைத்தனச்சீரை மிகவும் விரிவாகக் கூறும். அந்நூலிலிருந்து பல செய்திகள் தெரிவதோடு சரித்திர சம்பந்தமான சில செய்திகளும் விளங்குகின்றன. அச்செய்திகளைச் சுருக்கமாக ஈண்டு வரைகின்றேன்.

வேங்கடேசையர் என்பார் மாதைத் திருவேங்கடநாதர் என்ற பெரியாருடைய இரண்டாம் புத்திரராவார். இதனைப் பணவிடு தூதுடையார்,

> "..............................................எங்கும்
> நிறைகொலுவாய்த் தானிருந்து நீதிமனு வாகித்
> திரைகொணர்ந்த வேந்தர் தினமும்—முறைமுறையே
> தெண்டனிடும் வாசற் றிருவேங் கடநாத
> மண்டலிகன் பெற்ற வரபாலன்"

என்று கூறுவர். பின்னும் இவர் சகோதரர்கள் இவரையன்றி ஐவருண்டு என்பதை அவர்,

"....................................பண்டைநாள்
ஆதிசுப்ர மண்ய ரமரர்சிறை மீட்கவந்த
சோதி மயவடிவாய்த் தோன்றியபின்—நீதிதிகழ்
ஆறுமுகம் வெவ்வே றவதார மாகியிந்நாள்
வீறுபுவி காக்கவந்த மேன்மைபோல்—பேறுமிகத்
தன்னுடனே யைவர் சகோதரருந் தானுமெழில்
மன்னவர்சி காமணியாய் வந்தபிரான்"

என்று கூறுவர். புரவலரை நேரிற் கண்ட பாவலர் கூறுவதனைப் பின்னும் உறுதிப்படுத்த வேங்கடேசையருடைய மூத்தோர்பெயர் சொர்ண கிருஷ்ண பூபாலன் என்பர். அவர் திருத்தம்பியர் பெயர் நான்கும் (1) மணிவண்ணப்பெருமாள், (2) ராஜகோபால நராதிபன், (3) கனகசபாபதி, (4) வேங்கடராமன் என்பர். இவ்வாறன்றி, திருவேங்கடநாதருடைய திருத்தம்பியர்களாவர் இந்நால்வரு மென்றும் அவர் வேங்கடேசரென்று அழைக்கப்படுவ ரென்றும் இருவரும் ஒருவரேயென்றும் சிலர் கூறுவர். அச்செய்தி பொருத்தமுடையதன்றும். திருவேங்கடநாதருடைய தந்தையார் பெருமாளையர் என்று இலக்கணவிளக்கப் பாயிரமும் கூறும். திருவேங்கடநாதர் செய்ததாகக் கருதப்படும் மேய்ஞ்ஞான விளக்கம் என்னும் பிரபோத சந்திரோதயமும்,

"அரும்பொறை வாய்மைநல் லறிவின் வேலையாய்
வரும்பெரு மாள்பெரு வரத்திற் றோன்றினேன்"

என்று கூறும். ஆதலினாலே திருவேங்கடநாதரும் வேங்கடேசரும் வேறு என்பதும், முன்னவர்க்குப் பின்னவர் குமாரரென்பதும் உறுதியான செய்திகளாம்.

வேங்கடேசருடைய தந்தையார் திருவேங்கடநாதையராகவே, இவர் சாதியில் அந்தணரென்பதும் திருமால் பத்தியிற் சிறந்தவ ரென்பதும் சொல்லாமலே அமையும். இவர் அக்காலத்திலே தமிழ் வித்துவானாக இருந்த திருவாரூர் வைத்தியநாத தேசிகரிடம் சிறந்த தமிழ்க்கல்வியும் பிறரிடத்து வடநூற் கல்வியும் கற்றவராவர். இதனைப் பணவிடுதூதுடையார், 'நானா கலைதெரிந்த நாகரிகன்' என்றும், 'விஞ்சுபெருங் கல்விக் கடலனையான்' என்றும் கூறுவர்.

## இவரது அரசாட்சி

இவருடைய தந்தையான திருவேங்கடநாதையர் மண்டலிக ராய்க் கயத்தாற்றுச் சீமையைத் திருமலை நாயக்கர் சொக்கநாத நாயக்கர் பிரதிநிதியாக ஆண்டுகொண்டிருந்தாரென்று மந்தித் தோப்பில் காணப்படும் கல்வெட்டால் அறிகிறோம். பின்னர் இவர் அரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் காலத்திலே அவருடைய கொற்றவாசலுக்கு ஒரு மந்திரியாய் மொத்தக் கணக்கை வகை

கண்டு பொக்கிஷக்குறை வாராமற் காத்துவந்தார். அக்காலத்திலே வேங்கடேசையர் இராசதானியான மதுரைக்கு ஒப்பாகும் திருநெல்வேலிப் பட்டணத்தில் இருந்துகொண்டு திருநெல்வேலிச்சீமையை ஆண்டு வந்தார். இவர் அரசாண்ட திறமையைப் பணவிடு தூது வெகு அழகாக வர்ணிக்கின்றது:

"..................................யோசனைசெய்
மந்திரி மாரு மறுமன்ன ரேவலரும்
தந்திரி மாருந் தளாதிபரும்—முந்தும்
தினசரிதக் காரர்களுஞ் சீமைக் கணக்கங்
கனுதினம்வா சிக்கு மவரும்—கனமுடைய
வர்த்தகருங் குர்ச்சரரு மாராட ருங்கொலுவில்
தத்தம் வரிசைகொடு தாநிற்ப—நித்தரொக்கச்
சாளிகை கட்டிவைக்குந் தந்திரமும் பிந்திவரும்
பாளையக் காரர் பணங்களுக்கங்—காளனுப்பும்
வல்லமையுங் கேட்கும் வரியோலைக் குத்தரங்கள்
சொல்லுவதி லேநினைவின் சூட்சமும்—எல்லைகண்டு
கூறப் படாத குளப்பாய்வுங் காற்பாய்வும்
ஏறப் பயிர்கொளுத்து மேற்பாடும்—பேறுதரும்
தேவா லயத்திற் றினப்பூசை தப்பாமல்
வேவா ளனுப்பும் விசாரிப்பும்—நேர்வாகக்
காணிக்கைக் காரர் கணக்குக்கேட் டவ்வவர்தம்
த்ராணிக்குத் தக்கதிட்டஞ் செய்வதுவும்—பாணித்துச்
செய்யு நயபயமுஞ் சேருஞ் சனங்களுக்கென்
ஐயன் புரியு மரவணைப்பும்—வையகத்தில்
மற்றொருவர்க்கு வருமோ வராதென்று
கொற்றவரெல் லாமெடுத்துக் கொண்டாட—முற்றும்
திருவடி தேசமொரு செங்கோல் செலுத்தும்
பருவமெல்லா நன்றூப் பழகி—ஒருமுகங்கொண்
டட்டவணை யிட்டதுபோ லத்தனையுந் தானிருந்து
சட்டமிடு கின்ற சமுகத்தான்" (பணவிடு. 19-30.)

இவருடைய ஆட்சியிலே[1] இவர் பாவலர் பலரைப் புரந்துவந்தனர். அவர்கள் இவர்மேல் பாடிய பாடல்களும் பலவாம். அவற்றுள் பணவிடுதூதும் ஒன்று. இதுவன்றி இந்நூலாசிரியரே வண்ணமொன்றும் பாடி இவரது சமுகத்திலே அரங்கேற்றினார்.

---

1. இவருடைய பவனியைக்குறித்துப் பணவிடு தூது மிக அழகாகக் கூறுகிறது. டெய்லர்ஸ் ஓரியன்டல் மானஸ்கிரிப்ட்ஸிலும் இச்செய்தி கூறப்பட்டுளது. Journal of Indian History: Vol XVI, 304-309, பார்க்க.

அதற்குப் பரிசிலாக மின்னும் முழுநீலமொன்றும் கைக்கு நிறைந்த கணையாழியும் சால்வை செம்பொற்சரப்பளியும் கொடுத்தார். இவ்வாறு பாவலர் பலரைப் புரந்து கொடுத்த கொடைகள் பலவாம்.

### காலம்

இவர் அரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கருக்குப் பிரதிநிதியாய்ச் சென்றனராகலின் அவருடைய காலமே இவருடைய காலமாகும். அரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் மதுரையை யாண்டது கி. பி. 1682-இல் ஆகும். அதற்குப் பின்னரே இவர் திருநெல்வேலிச்சீமை சென்றிருக்க வேண்டும். இதுவன்றி, திருவேங்கடநாதையர் அரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் புண்ணியத்துக்காகக் கொல்லமாண்டு 858-இல் வன்னிகூடம் என்ற ஊரிலுள்ள பெரியாரொருவர் திருநெல்வேலிச் சிவபெருமானுக்குச் சில நிலங்கள் விற்றதாகச் செப்பேடொன்று காணப்படுகிறது. இவைகளையன்றி வேங்கடேசமகிபன் திருவேங்கடநாதையருடைய இரண்டாம் புத்திரராதலின், அத்திருவேங்கடநாதருக்குப் பிந்தியவர் என்பது போதரும். திருவேங்கடநாதர், திருமலை நாயக்கர் சொக்கநாத நாயக்கர் காலத்தில் கயத்தாறு முதலான சீமைகளை ஆண்டவராதலாலே அவர்களுடைய காலத்துக்குப் பிற்பட்டவர் வேங்கடேசமகிபன் என்பது ஒருதலை.

---

## ஒப்புமை

தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு. —குறள் 396.

यथा खनन्खनित्रेण नरो वार्यधिगच्छति ।
तथा गुरुगतां विद्यां शुश्रूषु रधिगच्छति ॥ —மநுஸ்மிருதி ii. 218.

இவ்விரு செய்யுட்களின் முதல் அடிகளின் ஒப்புமை கவனிக்கத்தக்கது. இரண்டாம் அடிகள் மாறுபடுகின்றனவாயினும் ஒவ்வொன்றில் ஒவ்வொரு நயம் காணப்படுகிறது. பே. நா. அ.

# குமாரஸம்பவமும் சாகுந்தலமும்

ஸ்ரீ ரவீந்த்ரநாத் டாகுர்

[ஆசிரியரின் அனுமதிபெற்றுக் 'குமுதினி' மொழிபெயர்த்தது.]

---

## 3

**சா**ந்தியில்தான் அழகின் பூரணத்தன்மை இருக்கிறது; விரோதத்தில் அல்ல. காளிதாஸர் தம்முடைய காவியத்தின் ரஸப் பிரவாகத்தை வானிலும் வையத்திலும் விளங்கும் அந்த ஸர்வாங்க மான சாந்தியில் கொண்டுவந்து சேர்த்து, அதனுடைய முடிவை மகத்தானதாகச் செய்திருக்கிறார். அதைப் பாதியிலேயே "நய யௌந தஸ்தௌ" என்று சொல்லி நிறுத்திவிடவில்லை. நடுவில் ஓரிடத்தில் இந்த ரஸப்பிரவாகத்தைக் குறைத்திருப்பது, முடிவில் இருக்கும் அழகின் சாந்தியை மிக நன்றாய் வெளிப்படுத்துவதற் கும், அதனுடைய சாசுவதமான சுபமங்களத்தோற்றத்துடன் பல ஆபரணங்களணிந்த மோகனமான அழகை ஒப்பிட்டு அதைப் பிரகாசிக்கச் செய்வதற்குமேயாகும்.

ஸப்தரிஷிகளின் நடுவில் பதிவிரதை அருந்ததியைச் சங்கரன் பார்த்தான். அப்போது பத்தினியின் அழகு என்னவென்பதை அவன் உணரலானான். 'அவளைக் கண்டதும் சங்கரனுக்கு மனைவி யைக் கொள்வதில் மறுபடி விருப்பமுண்டாயிற்று. ஸத்பத்தினி யல்லவோ எல்லாத் தர்ம காரியங்களுக்கும் மூலகாரணம்?'

பதிவிரதையின் முகமண்டலத்தில் விவாகமான பெண்மணி யென்ற கௌரவமான காந்தி பதிந்து, அவள் நியமப்படி அனு சரித்துவரும் மங்கள கர்மங்களின் நிரந்தரமான சௌந்தரியமாய் விளங்குகிறது. அருந்ததியின் சாந்த முகத்திலிருந்த அந்தச் சௌந்தரியத் தோற்றம் புது மணப்பெண்ணின் கோலம் பூண்ட கௌரியின் முகத்தில் பிரதிபிம்பமாகச் சங்கரனின் மனோபாவத் தில் பட்ட சமயம், பார்வதிக்கு ஏற்பட்ட சோபையானது வஸந்த னின் ஸகல புஷ்பாபரணங்களாலும் ஏற்படவில்லை.

விவாகதினத்தன்று,

"ஸா மங்களஸ்நாந விசுத்த காத்ரீ
க்ருஹீதபத்யுத் கமனீய வஸ்த்ரா
நிர்வ்ருத்த பர்ஜந்ய ஜலாபி ஷேகா
ப்ரபுல்ல காசா வஸுதேவ ரேஜே"

மங்களஸ்நானம் செய்து தூய்மையுடன் பார்வதி தன் கணவனுடன் சேருவதற்குத் தகுந்த ஆடையைத் தரித்தபோது, மழை கொட்டி ஓய்ந்தபின் கோரைப்புற்களின் புஷ்பங்களை யதேஷ்டமாகச் சூட்டிக்கொள்ளும் பூதேவியைப்போல் விளங்கினாள்.

இவ்வித மங்கள காந்தியுடன் விளங்கும் சோபையில் எவ்விதச் சாந்தி! எவ்வளவு லக்ஷ்மீ கடாக்ஷம்! என்ன பரிபூரணத்தன்மை! எல்லா அலங்கார ஆபரணாதிகளும் இதில் வந்து முடிவைப் பெறுகின்றன. இதனுள் இந்திரசபையின் மந்திராலோசனை ஒன்றுமில்லை. காமதேவனின் மோகம் கிடையாது. வஸந்தனின் துணை இல்லை. இது தன்னுடைய தூய்மையாலும் மங்களத்தன்மையாலுமே தானாக அமைதியையும் பரிபூரணத்தன்மையையும் பெற்றிருக்கிறது.

நம்முடைய தேசத்தில் மாத்ருஸ்தானம் அடைந்த ஸ்திரீகளுக்கு முக்கிய பதவி இருக்கிறது. சந்தானோற்பத்தி நமது தேசத்தில் ஒரு மங்களமான விஷயம். ஆகையாலேயே மனு பெண்களைப் பற்றிச் சொல்லுகையில், "ப்ரஜார்த்தம் மஹாபாகா: பூஜார்ஹா: க்ருஹதீப்தய:" என்றார். அவர்கள் குழந்தைகளுக்கு ஜன்மம் அளிக்கிறார்கள்; அதனால் அதிக பாக்கியவதிகள், பூஜிக்கத் தகுந்தவர்கள், வீட்டிற்குத் தீபம் போன்றவர்கள். குமாரஸம்பவ காவ்யம் முழுவதும் குமாரஜனனம் என்னும் மகத்தான விஷயத்திற்கு ஏற்றதோர் பீடிகையே. காமதேவனின் பாணத்தினால் பொறுமை யிழந்து ஏற்படும் கூடுதல் புத்திரஜனனத்திற்குத் தகுந்த சேர்க்கையல்ல. அச்சேர்க்கை ஒருவரையொருவர் விரும்புவதே தவிரப் புத்திரனை விரும்புவதில்லை. ஆகையாலேயே கவி மன்மதனைக் கொளுத்திச் சாம்பராக்கிவிட்டுப் பார்வதியின் தவத்தை நிறைவேற்றிவைக்கிறார். அவ்விதத் தவத்தினால் இயற்கையின் சஞ்சல சுபாவத்திற்குப் பதில் திடமான நிஷ்டையினால் ஏற்படும் ஏகாக்ரதை, சௌந்தரிய மோகத்திற்குப் பதில் அழகிய காந்தி, வஸந்தனால் புளகிதமடைந்த வனப்பிரதேசத்திற்குப் பதில் ஆனந்தத்தில் ஆழ்ந்த உலகத்தின் தோற்றம் ஆகியவைகளைக் கவி கொண்டு வந்து நிறுத்துகிறார். இதற்குப் பிறகு குமாரஜனனம் ஏற்படுகிறது.

சாகுந்தலத்திலும், முதல் அங்கத்தில் துஷ்யந்தனின் வியர்த்தமான நட்பைக் காட்டி, கடைசி அங்கத்தில் பரதனின் தாயான சகுந்தலையுடன் அவன் நன்கு கூடுவதைச் சித்திரித்திருக்கிறார்.

சாகுந்தலத்தில், முதல் அங்கம் சஞ்சலமும் ஒளியும் நிறைந்ததாக இருக்கிறது. அதில் யௌவனப் பருவமடைந்த ரிஷி

கன்னிகை, குதூகலம் நிறைந்த இரண்டு தோழிகள், புதிதாகப் புஷ்பித்திருக்கும் நவமல்லிகை, மதுவுண்டு களித்துப் புத்தியிழந்த வண்டு, மரங்கள் கொடிகளுக்குப் பின் மறைந்து நின்று இவை களைக் கண்டு மகிழ்ந்த அரசன், ஆகிய எல்லாம் தபோவனத்தில் ஒரு தனிப்பட்ட இடத்தில் ஏற்பட்டு ஓர் அபூர்வக் காட்சி யளிக் கின்றன. இவ்விதக் களிகூரும் சுவர்க்கத்திலிருந்து துஷ்யந்தனின் காதலியான சகுந்தலை அவமானத்தையே அடைந்து வெளி யனுப்பப்படுகிறாள். ஆனால் மங்களரூபிணியான பரதனின் தாய் ஆச்ரயித்துச் செல்லும் தபோவனத்தின் காட்சியோ வேறுவித மானது. அங்கே இளம்பிராயத்தினரான தாபஸகன்னிகைகள் மரங்களுக்குத் தண்ணீர் விடவில்லை; கொடிகளைத் தம் சகோதரி யைப் போலப் பாவித்து அன்புடன் நோக்கவில்லை; மான்குட்டி களைப் புல் கொடுத்து வளர்க்கவில்லை. மரம், கொடி, புஷ்பம், தளிர் எல்லாவற்றின் மீதும் ஒரு குழந்தை தன் அதிகாரத்தைச் செலுத்துகிறான். எங்கு நோக்கினும் அப்பாலகனே கண்களில் படுகிறான். சினேகம்கொண்ட தபஸ்வினித் தாய்மார்கள் இந்தத் துஷ்டப்பிள்ளையைக் கவனிப்பதிலேயே முனைந்திருக்கிறார்கள். முதல் அங்கத்தில் துஷ்யந்தனுக்குச் சகுந்தலையுடன் பரிசயம் ஏற்படுவதற்கு முன்பு அவளுடைய யௌவன வனப்பின் அழகி னாலும் சேஷ்டைகளினாலுமே அவன் மோகித்திருக்கிறான். கடைசி அங்கத்தில் சகுந்தலையின் பிள்ளையே அவளுடைய முழுச் சௌந் தரியத்தையும் தன்னுடையதாகச் செய்துகொண்டு அரசன் துஷ் யந்தனின் அந்தக்கரணத்தைத் துடிக்கும்படிச் செய்கிறான்.

அழுக்கடைந்த காவிவஸ்திரம் தரித்து நியமானுஷ்டானங் களால் காய்ந்து சுண்டின முகத்தினளாய், கூந்தல் ஜடையாய்த் திரிந்தவளுமான, விரகவிரதத்தை யனுஷ்டிக்கும் தூயநடத்தை யுடைய சகுந்தலை தென்படுகிறாள். இவ்விதத் தவம் புரிந்த பின்பும் அதற்குப் பலனாய் ஒன்றும் கிடைக்காதா? முதன்முதல் மனதில் உதித்த அன்பின் ஆவல் வெகு நாட்களாய் அனுஷ்டிக்கப்பட்ட நியம விரதங்களால் கொளுத்தப்பட்ட பின், புத்திர சோபையினால் அதிகக் காந்திபெற்ற உருக்கமான அம்மங்கள முகத்தில் தோன் றும் தாய் என்கிற பாவனையின் அழகை யாரால் நிராகரிக்க முடியும்?

பார்வதியினுடைய கண்களில் சங்கரனிடம் ஏதாவது குறை யோ, ஏழைமைத்தனமோ சிறிதும் காணவில்லை. அவனை அவள் தனது ஹிருதயபாவத்தின் கண்களைக் கொண்டு நோக்கினாள். அவ்விதப் பார்வைக்குத் தனம், ரத்னம், ரூபம், யௌவனம் ஆகிய வற்றில் ஒன்றும் வேண்டியதில்லை. கடுமையான அவமானத்திற்குப்

பின்பும், சகுந்தலையின் அன்பு, பிற்பாடு அவ்விருவரும் கூடும் காலத்தில் துஷ்யந்தனிடம் ஏதாவது குறையைக் கண்டு துன்புற வில்லை. அச்சமயம் துக்கத்திலிருக்கும் அவளுடைய இரு கண்களி லிருந்தும் கண்ணீர்த் தாரைகளே பெருகின. அன்பு இல்லாத இடத்தில், குறைவு, ஏழைமை, குரூபம் எல்லாம் எல்லையற்றிருக் கின்றன. அன்பு இல்லாத இடத்தில் கணத்திற்குக் கணம் அபராதங்கள் கணக்கிடப்படும். ஆனால் பார்வதியின் அன்பு எவ்விதம் தன்னிடமுள்ள சௌந்தரிய ஸம்பத்துக்களிடையில் துறவியை அழகுள்ளவராகவும் ஈசுவரனாகவும் கண்டதோ, அவ்விதமே சகுந்தலையின் அன்பும் துஷ்யந்தனின் அபராதங்கள் அனைத்தையும் மறந்துவிட்டது. யௌவன தம்பதிகளின் மோக மான காதலில் இவ்விதம் பொறுத்துக்கொள்ளும் குணம் ஏது? பரதனைப் பெற்றெடுத்தவள் தன் வயிற்றில் எவ்விதம் அச் செல் வனைத் தாங்கி யிருந்தாளோ அவ்விதமே பொறுமையுடன் அவள் தபோவனத்தில் வசித்துக்கொண்டு தனது அந்தக்கரணத்தைக் குறை இல்லாததாகச் செய்துவைத்துக் கொண்டிருந்தாள். குழந்தை பரதன் துஷ்யந்தனைக் காண்பித்து, "அம்மா, இவர் யார்? என்னைப் 'பிள்ளை' என்று கூப்பிடுகிறாரே!" என்று கேட்டான். சகுந்தலை அதற்கு விடையாய், "குழந்தாய், விதியைக் கேள்!" என்கிறாள். இதற்கிடையில் கோபமும் ரோஷமும் இல்லை. இவ் வார்த்தைகளுக்கு அர்த்தம், விதி நன்றாக இருந்தால் அதற்கு விடை கிடைக்கும் என்பதே. இதைச் சொல்லிவிட்டு அவள் அரசன் பிரசந்நமாக இருக்கிறானோவென்று அவனுடைய முகத்தை நோக்குகிறாள். அவனுடைய முகத்தில் திரஸ்கரிக்கும் பாவனை யில்லை யென்று அவளுக்குத் தெரிந்ததும் உடனே ரோஷமெல் லாம் விட்டவளாய் அரசனின் காலடியில் புஷ்பாஞ்சலி செய்வது போல் தன்னை அர்ப்பணம் செய்துகொள்ளுகிறாள். தன்னுடைய பாக்கியத்தைத் தவிர வேறு எவர்பேரிலும் எவ்விதக் குற்றமும் அவள் கூறவில்லை.

குமாரஸம்பவம் சாகுந்தலம் இரண்டிலும் காவ்யவிஷயம் ஒன்றே என்பது பார்க்கையில் தெரிகிறது. மோகத்தில் பூரண மாகாத விஷயம் மங்களமான செய்கையில் பூரணத்தை அடை கிறது என்பதையே இவ்விரண்டிலும் கவி விளக்கியிருக்கிறார். தர்மத்திலிருக்கும் அழகே நிலைத்திருப்பது. சாந்தமும் ஒழுங்கும் கொண்ட அன்பே மேலானது. பந்தனத்தில்தான் உண்மையான சோபை இருக்கிறது. கட்டுப்பாடு மீறின செய்கை அழகிற்கு விரோதமானது. பாரததேசத்துக் கவிகள் இவ்விதமான கொள்கை யையே உடையவர்கள்,

ஒருபுறம் இல்லறதர்மத்தின் மங்களபந்தனம்; மற்ருெருபுறம் பற்றற்ற ஆத்மாவின் முக்தி. இவையே இந்நாட்டின் இருவித விசேஷ குணங்கள். இத்தேசத்தவருடைய வாழ்க்கையின் தர்மவழி பலருடன் பலவிதத்திலும் சம்பந்தப்பட்டுப் பிணைக்கப்பட்டிருக்கிறது. அவ்விதப் பந்தனத்திலிருந்து ஒன்றையும் தள்ளிவிடுவது இயலாதது. ஆனல் தவத்தில் அமர்வதில் பாரததேசம் தனிப்பட்டது. இவ்வித இல்லறம் துறவறம் இரண்டிலும் ஒன்றுக்கொன்று ஒட்டுதல் இல்லாமலில்லை. இவ்விஷயத்தையே காளிதாஸர் தமது இரண்டு காவியங்களிலும் காண்பித்திருக்கிருர். தபோவனத்தில் சிங்கக்குட்டியுடன் மனிதக்குழந்தை எவ்விதம் விளையாடுகிறதோ, அவ்விதமே இக்கவியின் காவ்ய தபோவனத்திலும் துறவியும் கிருகஸ்தனும் பிணைக்கப்பட்டு இருக்கிருர்கள். காமனின் வில்லானது அந்தச் சம்பந்தத்தை அறுக்க முயன்றது; ஆகையாலேயே கவி அந்த முயற்சியை நாசம் செய்து, தவத்தின் மூலம் மங்களமான இல்லறத்துடன் பற்றற்ற துறவறத்தின் தூய சம்பந்தத்தை மறுபடியும் ஸ்தாபித்திருக்கிருர். நம் நாட்டுச் சாஸ்திரப்படி ஆண் பெண்களின் ஒத்த சம்பந்தம் கடுமையான நீதிகளுக்கு உட்பட்டது. அவ்விதச் சாஸ்திரமே காளிதாஸருடைய காவ்யத்தில் அழகு நிறைந்ததாக விளங்குகிறது. இந்த அழகானது சோபை, மங்களம், இனிமை ஆகிய மூன்றும் கூடியது; கம்பீரத்திற்கு அவசியமான ஏகாந்தத்தன்மை பெற்றது; பரவுவதற்கு அவசியமான உலகமுழுவதும் ஆச்ரயமளிக்கும் குணமுமுள்ளது. அது தியாகத்தினல் பரிபூரணமானதாகவும், துயரத்தினல் நேர்மை பெற்றதாகவும், தர்மத்தினல் நிலைபெற்றதாகவும் இருக்கிறது. இவ்வித நீதியின் அழகினலேயே ஆண்பெண்களின் அடக்க முடியாததும், நீக்கமுடியாததுமான காதலின் மகாப்பிரவாகம் தன்னை ஒழுங்குபடுத்திக்கொண்டு மங்களரூபமான மகா சமுத்திரத்தில் சேர்ந்து ஸ்திரமான பரமநிலையை அடைகிறது. இதனலேயே அந்த ஒழுங்குபெற்ற அன்பானது பந்தனமற்ற தீய அன்பை விட மிக்க மேன்மையானது ஆச்சரியமானதுமாக இருக்கிறது.



# மொழிவளர்ச்சிபற்றித் தொல்காப்பியர் கொண்ட கருத்துக்கள்

# II

எஸ். வையாபுரிப் பிள்ளை, பி.ஏ., பி.எல்.,

(தமிழாராய்ச்சித் துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்)

---

தொல்காப்பியர் இயற்றிய பெருநூல் 'தொல்காப்பியம்' எனப் பெயர்சிறந்த தமிழ் இலக்கண நூலாகும். இந்நூல் நமது பாக்கியவசத்தால் இன்றுகாறும் நிலைபெற்றிருக்கின்றது. இதன் சிறப்புப் பாயிரத்திலே 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என ஆசிரியர் குறிக்கப்படுகின்றார். 'ஐந்திரம்' என்பது வடமொழி வியாகரணங்களுள் ஒன்றென்பதும், பாணினீய வியாகரணத்திற்குக் காலத்தால் முற்பட்டதென்பதும் அறிஞர் கொள்கை. சர்வவர்மன் என்பவர் இயற்றிய காதந்த்ரமும் வேதங்களுக்குரிய ப்ராதிசாக்கியங்களும் இவ் ஐந்திர வியாகரணமுறையைப் பின்பற்றியனவென்று டாக்டர் பர்ணல் கூறுவர். எனவே ஆசிரியர் தொல்காப்பியனார் வடமொழியை நன்கு பயின்றவரென்பதும் அதன்கணுள்ள ஒன்பது வியாகரணங்களுள் ஒன்றாகிய ஐந்திரத்திலே நிறைந்த புலமையுடையவரென்பதும் நன்கு விளங்கும்.

**தொல்காப்பியரது கல்விப் பெருமை**

ஆனால் வடமொழியறிவையும் ஐந்திரப் புலமையையும் மாத்திரந் துணையாகக் கொண்டு தமது பேரிலக்கணத்தைத் தொல்காப்பியர் இயற்றினாரல்லர். முதலாவது, அவர் காலத்துத் தமிழ் கூறு நல்லுலகத்துள்ள உலக வழக்கையும் செய்யுள் வழக்கையும் நன்கு ஆராய்ந்தனர். இங்கே 'நல்லுலகு' என்றது செந்தமிழ் நிலத்தையும் அதனொடு சேர்ந்த பன்னிரு நிலங்களையு மெனக்கொள்ளுதல் வேண்டும். எனவே தமிழ் வழங்கிய நாடுகளனைத்தினுமுள்ள இருவகை வழக்குக்களையும் முற்ற ஆராய்ந்தார் என்பது பெறப்படும். இரண்டாவதாக, செந்தமிழ்நிலத்து வழக்குக்களையும் அவற்றை ஆராய்ந்தெழுதிய நூல்களையும் தமது நூலுக்குச் சிறப்புரிமையுடையனவாகக் கருதி அவற்றைத் தொல்காப்பியர் பன்முறை நன்கு கற்று உண்மைநிலை கண்டனர். மூன்றாவதாக, தம் நூலுக்

குரிய பொருள்களை நெடுங்காலமாகச் சிந்தித்து முற்ற ஆராய்ந்து தெளிந்தனர். இவ்வகை ஆராய்ச்சிகளை எல்லாந் துணைக்கொண்டே தொல்காப்பியர் தமது பேரிலக்கணத்தை இயற்றினர். இதனை இவரோடுடன் கற்ற பனம்பாரனர்,

'வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச்
செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணிப்
புலந்தொகுத் தோனே'

எனத் தாம் இயற்றிய சிறப்புப் பாயிரத்துட் கூறியிருக்கின்றார்.

ஆகவே தொல்காப்பியர் தாம் இயற்றக்கருதிய பெருநூலுக்கு எவ்வகை யாராய்ச்சிகள் இன்றியமையாதனவெனக் கருதினரோ அவற்றையெல்லாம் செவ்வனே நிகழ்த்திப் பின் தாம் மேற்கொண்ட பெருஞ்செயலில் தலையிட்டனரென்பது போதருகின்றது. இவரது நுண்ணிய அறிவிற்கும் ஆராய்ச்சிக்கும் தமிழின் தனிப் பண்பு மிக விளக்கமாகத் தோன்றியிருத்தல் வேண்டும். ஐந்திர முதலிய வியாகரண உணர்ச்சியும் வடமொழி யுணர்ச்சியும் தமிழின் இயல்புகளை ஒப்புநோக்குதற்குப் பெரிதும் பயன்பட்டுத் தமிழின் தனிப் பண்பினைக் குன்றின்மேலிட்ட தீபம் போல எளிதிற் புலப்படச் செய்திருத்தல் வேண்டும்.

**தமிழின் தனிப் பண்பை விளக்கமாகக் காண்டல்**

ஒவ்வொரு மொழியின் தனிப்பண்பும் அதன் ஒலிக்கணவியலிற் (*Phonetic system*) சிறந்து விளங்குவதாகும். மக்களுடைய குரலினின்று எழும் ஒலிகளுக்கு அளவேயில்லை. அவ்வொலிகள் அனைத்தும் அவர்கள் பேசும் மொழிகளிற் காணப்படமாட்டா. ஒவ்வொருமொழியினும் ஒருசில வொலிகளே காணப்படுவனவாம். இவ்வொலிகளைக் குறித்தற்கே எழுத்துக்கள் அமைக்கப்பெற்றன. எனினும் ஒரு மொழியிலுள்ள எழுத்துக்களைக் கொண்டு அதன்கணுள்ள ஒலிகளைக் கணக்கிடுதல் கூடாது. ஏனெனின், எழுத்துக்களைக் காட்டினும் ஒலிகளின் தொகை மிகுதியாகவே பெரும்பாலும் உள்ளன. உதாரணமாக ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் முதலிய பாஷைகளைக் கூறலாம். சாதாரணமாக ஒரு மொழிக்குரிய தனியொலிகளின் தொகை அறுபதுக்கு

**தனிப்பண்பு சிறந்து விளங்கும் இடம் ஒலிக் கணம்**

மேற்பட்டுக் காணப்படுவதில்லையென எழுத்தொலி யாராய்ச்சி யாளர் (*Phoneticians*) கூறுகின்றனர்.

இவ்வொலிகளுள் ஒன்றேனும் தனித்து வாழமாட்டாது; ஓர் ஒலிக்கணத்தைச் (*Phonetic system*) சார்ந்ததாகவே இருக்கும். ஒலிக்கணம் என்ற கருத்தினை நாம் நன்கு தெரிந்து கொள்ளுதல்வேண்டும்.

**ஒலிக்கணத்தின் இயல்பு**

ஒவ்வொரு மொழியிலுமுள்ள ஒலிகள் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புடையவாயிருக்கும். இத்தொடர்பினை ஒரு குடும்பத்தினருக்குள் இருக்கும் உறவுமுறையோடு ஒப்பிடுதல் பெரிதும் பொருந்துவதாம். ஒரு குடும்பத்தினர் ஒருவரோடொருவர் ஒத்துவாழ்வர்; ஒவ்வொருவரும் குடும்ப நியதிக்கு உள்ளடங்கிச் செல்வர்; ஒவ்வொருவரும் இரத்தக் கலப்பினாற் பிணிப்புண்டு குடும்பத்தின் அங்கமாக இருப்பர். இங்ஙனமே ஒரு மொழியிலுள்ள ஒலிகள் அனைத்தும் ஒன்றோடொன்று ஒத்துப் பொருந்தி, கணநியதிக்கு உள்ளடங்கி, ஒன்றோடொன்று பிணிப்புண்டு ஏககணம் என்று சொல்லத் தக்கனவாயிருக்கும். குடும்பவொற்றுமை போன்றதோரொற்றுமை இவ்வொலிக் கணத்துள்ளும் இருப்பதாக அறிதல் கூடும்.

ஒவ்வொரு மொழிக்குந் தனிப்பட்ட ஒலிக்கணம் உளது. அந்நிய மொழியொன்றினை நாம் கேட்ட மாத்திரத்தில் 'இது தமிழன்று' என்ற உணர்ச்சி இவ் வொலிக்கண வேறுபாட்டினாலேயே உண்டாகின்றது.

**மொழிதோறும் ஒலிக்கணம் வேறு**

அந்நிய மொழிகளைப் பயிலுவோர் இவ்வொலிக்கண வேறுபாட்டினை எளிதின் உணர்வர். இவர்கள் அம்மொழிகளிலுள்ள ஒவ்வோரொலியையும் தனிப்படத் தெரிந்து உச்சாரண முறையை அறிந்து, வேண்டும் முயற்சியெடுத்து, உச்சரித்து அம்மொழியைப் பயிலுவதில்லை. இவ்வாறு செய்யத்தொடங்குவாராயின், அம்மொழியை எக்காலத்தும் நன்றாக விரைந்து பேச வல்லவர்களாகமாட்டார்களென்பது திண்ணம். மற்று, எவ்வாறு பயிலுவதென்னின் ஒலிக்கருவியாகிய உறுப்புக்களைப் பொதுப்பட நிலைவேறுபாடுசெய்துகொள்ளுவர். சிறு குழந்தைகள் ஆங்கிலம் பேசுவதாகப் பாவித்துத் தம் மழலை மொழியாற் குழறுவதை நாம் அடிக்கடி பார்த்திருக்கிறோம். இம்முயற்சி ஆங்கிலவொலிக்கணத்தின் உச்சாரணத்திற்குரிய பற்பல உறுப்புக்களையும் பொதுப்பட நிலைவேறுபாடு செய்துகொள்ளுவதால் எழுவதாகும். இதனால் தனியொலிகளைப் புறக்கணித்து ஒலிக்கணங்களை நாம் அறிந்து ஆட்சியிற் கொண்டுவருகின்றோமென்பது நன்றாக விளங்கும்.

பல மொழிகளைப் பேசவல்லவனை 'ஹார்மோனியம்' என்னும் இசைக்கருவி வாசிப்பவனோடு ஒப்பிடலாம். சுருதியை வேறுபடுத்தியவளவில், ஒவ்வொரு ஸ்வரத்தின் இயல்பும் அச் சுருதிக்கேற்க மாறுபடுகின்றது; எனினும் அந்த ஸ்வரங்களனைத்தும் ஒருகணத்திற் குரியன வென்னுமாறு ஒரு நெறிப்பட்டுச் செல்லுகின்றன. ஒலிக்குரிய உறுப்புக்களை நிலை வேறுபடுத்துதல் என மேலே கூறியது சுருதியை வேறுபடுத்தலோடு ஒப்பிடற்பாலது. இந்நிலை வேறுபாடுகள் எவ்வாறு உண்டாகின்றன? உச்சாரண நிகழ்ச்சியில் நா முதலிய உறுப்புக்கள்பல தொழிற்படுதல் இன்றியமையாததாகும். இவற்றுள் ஒவ்வோர் உறுப்பின் ஒவ்வொரு நிலைக்குந் தக்கபடி மற்றையுறுப்புக்களின் நிலை வேறுபடுவதாகும். ஒரு மொழியிலுள்ள ஒவ்வோரொலியினையும் அதன் தனிநிலையினும் சேர்க்கைநிலையினும் உச்சரித்து உச்சரித்துப் பயின்ற பழக்கத்தால் உறுப்புக்களில் ஒவ்வொன்றும் பல நிலைகளில் நின்று, அந்நிலைகளனைத்திற்குந் தக்கபடி மற்றையுறுப்புக்களும் பலவேறு நிலைகள் பெற்றுக் குறிப்பிட்ட ஒரு நெறியில் இயங்கிக் கொண்டிருக்கும். இங்ஙனம் இயங்கவே, உறுப்புக்களுள்ளே அமைதி யொன்று ஏற்படுகின்றது. இவ்வகை அமைதியின் பயனே ஒலிக்கணங்களாகும். இவ்வமைதியினை வேறுபடுத்துதலே உறுப்புக்களின் நிலைவேறுபாடெனச் சுட்டியது. மேற்கூறியவாறு உறுப்புக்களின் முயற்சியே யன்றி, உயிர்ப்பின் வன்மை மென்மையாலும் ஒலிக்கணம் பாதிக்கப்படுகின்றது.

**வேறுபாட்டின் காரணம்**

தமிழ்மொழிக்கெனத் தனிப்படவுரிய ஒலிக்கணத்தின் இயல்பினைத் தொல்காப்பியர் பிறப்பியலிலும் நூன்மரபிலும் மொழிமரபிலும் உணர்த்துகின்றனர். பிறப்பியலிலே எழுத்தொலிகள் ஒவ்வொன்றும் எவ்வெவ்வுறுப்புக்களின் துணையால் எவ்வெவ்வகை முயற்சிகளால் பிறக்கின்றன வென்பது விளக்கப்படுகின்றது. முற்பட, தொல்காப்பியர் காலத்து எழுத்துக்களின் பிறப்பினுக்கத்தைக் குறித்து வழங்கிய கொள்கை சுருங்க உரைக்கப்படுகின்றது. தமிழ்மொழிக்குரிய ஒலிக்கணத்தில் அடங்கிய அனைத்து ஒலிகளும், அவ்வொலிகளுள் ஒவ்வொன்றன் பிறப்பும் குறிக்கப்படுகின்றன. இக்கொள்கையினும் பிறப்பினுக்கத்தினும் வடமொழி நூல்களுட் கூறியனவே பெரும்பாலும் காணப்படும். ஆனால் தமிழ்மொழிக்கே தனித்துரிய ற, ன, ழ என்ற மூன்று எழுத்துக்களும் பிறக்குமாற்றினைத் தொல்காப்பியர் கூர்ந்துணர்ந்து விவரிக்கின்றனர்.

**தமிழொலிக் கணமும் தொல்காப்பியரும்**

பிறப்பியலில் ஒலிகளுள் ஒவ்வொன்றும் தனிப்பட்ட நிலையிற் பிறக்குமாற்றை யுணர்த்திய தொல்காப்பியர் ஓரொலி பிறிதொன்றனோடு சேர்ந்து நிற்கின்ற நிலையை மெய்ம்மயக்கம் உடனிலைமயக்கம் என இருகூறுபடுத்து நூன்மரபிலும், சொல்லுக்கு முதலாகெழுத்து ஈறுகெழுத்து என்பன முதலியவாகப் பகுத்து மொழிமரபிலும் உணர்த்துகின்றார். எழுத்துக்கள் ஒலிகளின் வரிவடிவமென்பதை நாம் நன்கு கடைப்பிடித்துக் கொள்ளுதல் அவசியம். ல முன்னர்க் 'கசபவென்னு மூவெழுத்துரிய' (தோல். நூன். 23) என்றால், 'ல்' என்பதனால் உணர்த்தப்படுகின்ற ஒலியின் முன்னர், க், ச், ப் என்பவற்றால் உணர்த்தப்படும் ஒலிகள் வரும்; பிற வாரா என்பது கருத்தாகும். நல்கு, வல்சி, செல்ப என்பன உதாரணங்களாம். தமிழின் ஒலிக்கணவியல்போடு இச்சொற்களின் உச்சாரணம் பொருந்தியிருத்தல் காணலாம். ல்ம, ல்ய என்ற இருமெய்களின் சேர்க்கை தமிழின் ஒலிக்கணவியல்போடு மாறுபட்டு உச்சாரணம் எளிதில் அமையாமை காணலாம். வடமொழியிலாயின் கல்மஷம், கல்யாணம் என அம்மொழியின் ஒலிக்கணவியல்பொடு உச்சாரணம் முற்றும் பொருந்தியமைகின்றது. தமிழில் 'ல்ட்' என்ற ஒலிச்சேர்க்கை வரமாட்டாது; ஆங்கிலத்தில் கல்ட் (cult), ஸால்ட் (salt) என அச்சேர்க்கை வருதல் காணலாம். தமிழில் 'ர் ன்' என்ற கூட்டொலி வாராது; கெர்னல் (kernel) என ஆங்கிலத்திலும் பிர்னே (Birne) என ஜெர்மன் மொழியிலும் வரும். இவற்றுக்கெல்லாம் ஒலிக்கண வேறுபாடும் அதனால் விளையும் உச்சாரண நியமமுமே காரணங்களாவன. மேற்காட்டியவற்றால் தொல்காப்பியர் தமிழொலிக்கணத்தின் நுட்பவியல்புகளையெல்லாம் நுணுகி யாராய்ந்துள்ளா ரென்பது விளங்கும்.





# மாயா விநோதினி

ஸ்ரீ ரவீந்த்ரநாத் டாகுர்

[ஆசிரியர் அனுமதியுடன் ஸ்ரீமதி தஞ்சம் மொழிபெயர்த்தது]

(சென்ற இதழ் 249-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## ஒன்பதாம் அத்தியாயம்

அதே சமயம் விஹாரி, "மஹேன், மஹேன்" என்று கீழே யிருந்து உரத்துக் கூப்பிடுவது கேட்டது. "யார்! விஹாரியா? வா" என்று பதிலளித்துக்கொண்டே மஹேந்திரன் கீழே இறங்கி வந்தான். சிலநாட்கள் பிரிந்திருந்ததற்குப் பிறகு இன்று தன் அருமைத் தோழனைக் காண்பது மஹேந்திரனுக்கு ஆனந்தத்தை அளித்தது. விவாகத்திற்குப் பிறகு விஹாரி பரிஹஸித்தும் குத்தலாகவும் பேசி மஹேந்திரனைப் புண்படுத்தியதுண்டு. ஆனால் இன்று நண்பனின் கோபப்பேச்சும் வாழ்விற்கு அவசியமெனத் தோன்றியது மஹேந்திரனுக்கு.

விஹாரியைப் பார்த்ததும் ஆசாவின் மனமும் சற்றுச் சாந்தமடைந்தது. அவனைக் கண்டதும் உள்ளே போக எழுந்தாள். அதற்குள் மஹேந்திரன், "ஏன்! எங்கே போகிறாய்? விஹாரி தானே வந்திருக்கிறான்?" என்றான்.

ஆசா: இல்லை; அவர் சாப்பிடுவதற்கு ஏதாவது கொண்டு வருகிறேன்.

வேலையில் தனக்குச் சற்று மன அமைதி ஏற்படுமென்பது ஆசாவின் கருத்து.

அவள் விஹாரியின் எதிரில் நின்று பேசுவதில்லை. ஆனால் மாமியாரைப் பற்றிய க்ஷேம சமாசாரம் தெரிந்து கொள்ளும் விஷயத்தில் அவளுக்கு மிகவும் ஆவல் இருந்தது. தன் கணவனருகில் அவள் வந்து நின்றுகொண்டாள்.

வந்தவுடனேயே விஹாரி ஆசாவைப் பார்த்து, "உங்கள் சந்தோஷத்திற்கு இடையூறாக நான் வந்து சேர்ந்தேனென்று நினைக்கிறேன். பாதகமில்லை; உட்காரம்மா. நான் போய்வருகிறேன்" என்றான்.

அவள் மஹேந்திரனைப் பார்த்தாள். அவன் அக்குறிப்பை உணர்ந்து, "விஹாரி! அம்மா எப்படி யிருக்கிறாள்?" என்றான்.

விஹாரி: (பராமுகமாக) அம்மா, பெரியம்மா இவர்களெல்லாம் எப்படிப் போனாலென்ன? பிறகு பார்த்துக்கொள்ளலாமே. அம்மாவைப் பற்றியும் மற்றொருவரைப் பற்றியும் நினைப்பதற்கு இது சமயமில்லை.

இதைச் சொல்லிவிட்டு அவன் வெளியே செல்லப் புறப்பட்டான். மஹேந்திரன் அவனது கரங்களைப் பிடித்திழுத்து அவனைப் பலவந்தமாக உட்காரவைத்தான். உடனே விஹாரி ஆசாவிடம், "பார்: எனது தப்பிதமில்லை, அம்மா. நான் போகிறேனென்றாலும் இவன் உட்காரச் சொல்லிப் பலவந்தப்படுத்துகிறான். என்னவோ, பாவம் அவனதும் பழி எனதுமாக ஆகாதிருக்கட்டும்!" என்றான்.

ஆசா பதிலொன்றும் சொல்லவில்லை. அவள் மனம் நொந்தது. வேண்டுமென்றே விஹாரி அப்படிப் பேசினான்.

விஹாரி: அடேயப்பா! வீடு என்ன லக்ஷணமாய்க் காணப்படுகிறது! அம்மாவை அழைத்துவர வேண்டுமென்று உனக்கு இன்னும் புத்தியில் உதயமாகவில்லையா?

மஹேந்: அவள் என்றைக்கு வருவாளென்றுதான் நாங்களும் எதிர்நோக்கியிருக்கிறோம்.

விஹாரி: புறப்பட்டு வரும்படி இரண்டுவரிக் கடிதமெழுதிவிட்டால்தான் என்ன, குறைந்தா விடும்? உன் இன்ப வாழ்க்கை இதனால் கெட்டுப்போய்விடாது; அம்மாவின் மகிழ்ச்சிக்கும் எல்லையிராது. (ஆசாவைப் பார்த்து) மஹேந்திரனுக்குக் கடிதமெழுத இரண்டொரு நிமிஷம் விடைகொடுக்குமாறு உன்னையும் பிரார்த்தித்துக்கொள்கிறேன்.

ஆசாவினால் பொறுக்க முடியவில்லை. அவள் கண்களில் நீர் ததும்பிற்று.

மஹேந்திரன் கோபத்துடன் விஹாரியைப் பார்த்து, "எந்த வேளையில்தான் உன்னைப் பார்த்தேனோ! ஏதாவதொரு கலகம் மூட்டிவிட்டுக் கொண்டே யிருக்கிறாய்" என்றான்.

விஹாரி: அம்மாவே உன்னை அதிகச் செல்வமாக வளர்த்துக் கெடுத்துவிட்டாள். போதாக்குறைக்கு மனைவி வேறு வாய்த்து உன்னை இன்னும் கெடுக்கிறாள். என்னால் பொறுக்க முடியாமல் நானும் அவ்வப்பொழுது இரண்டொரு வார்த்தைகள் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது.

மஹேந்: இதனால் உனக்கு என்ன லாபம்?

விஹாரி: உனக்கு வீணாகத் தோன்றினாலும் எனக்கு லாபம் இருக்கிறது.

---

## பத்தாம் அத்தியாயம்

விஹாரி, தன்னெதிரிலேயே மஹேந்திரனைத் தாய்க்குக் கடிதமெழுதச் சொல்லி, அதை வாங்கிக்கொண்டு மறுதினமே ராஜலக்ஷ்மியை அழைத்துவரச் சென்றான். அவன்தான் தன் மகனைக் கடிதமெழுதச் சொல்லியிருக்க வேண்டுமென்பது ராஜலக்ஷ்மிக்கு நன்றாகத் தெரியும். ஆனால் இனியும் பிள்ளையைப் பிரிந்திருக்க மனம் பொறுக்கவில்லை. வினோதினியையும் கூட அழைத்துக்கொண்டு வந்து சேர்ந்தாள்.

வீட்டின் அலங்கோலமும் குப்பை கூளங்களும் மருமகளின் மீது ராஜலக்ஷ்மிக்கு இருந்த சொற்ப மதிப்பையும் போக்கி விட்டன.

ஆனால் ஆசாவோ முழுதும் மாறியவளாகக் காணப்பட்டாள். வந்ததுமுதல் ராஜலக்ஷ்மியைப் பின்தொடர்ந்தே வந்து கொண்டிருந்தாள். சொல்லாமலே மாமியாருடன்கூட ஒவ்வொரு வேலையையும் செய்ய முன்வந்தாள். ராஜலக்ஷ்மியோ அவளை, "இருக்கட்டும், வைத்துவிட்டுப் போ; உனக்கு ஒன்றும் சரியாகவே செய்ய வருவதில்லை. நீ ஏன் செய்ய வருகிறாய்?" என்று போகச் சொல்லிவிட்டாள்.

அன்னபூரணி இல்லாமையால்தான் மருமகளின் மனம் இப்படி மாறிவிட்டதென்று ராஜலக்ஷ்மி நினைத்தாள். அன்னபூரணி வீட்டிலிருக்கும்போது மனைவி தன்னுடனேயே இருக்கச் சமயம் கிடைத்தது, அம்மா வந்து மறுபடி வேலைகொடுத்து வதைக்க ஆரம்பித்துவிட்டாளென்று மஹேந்திரன் எங்கே நினைப்பானோ வெனவும் ராஜலக்ஷ்மி அஞ்சினாள். 'பிள்ளையின் சுகத்தில் அன்னபூரணிக்கு இருக்கும் அக்கரை எனக்கு இல்லையா? நாட்டுப்பெண்ணை நான் ஏன் வேலைசெய்யச் சொல்லவேண்டும்?' என்று பலவாறு எண்ணினாள்.

இப்பொழுதெல்லாம் ஆசாவை மஹேந்திரன் கூப்பிடுகிறானென்று தெரிந்தால் உடனே ராஜலக்ஷ்மி அவளிடம், "போயேன். அவன் கூப்பிடுவது காதில் விழவில்லையா? நீ ஒன்றும் கறிகாய் நறுக்கவேண்டாம்!" என்பாள்.

பழைய நாடகம் திரும்பவும் ஆரம்பமாயிற்று! மஹேந்திரன் பாடம் சொல்லிக்கொடுப்பது; ஆசா படிப்பது! தம்பதிகளின்

பழைய லீலே, ஒன்றுமில்லாத விஷயத்திற்கெல்லாம் வாத விவாதம்; 'உன்னுடைய அன்பு அதிகம்', 'என்னுடைய அன்பு அதிகம்' என்று சண்டை; ஒருவர்மேலொருவர் குற்றச்சாட்டு—இப்படி விடாது நடந்துவந்தன. பழகப் பழகப் பாலும் புளிக்குமென் பது பழமொழி. காமாக்கினியை அணையவொட்டாமற் காப்பது கஷ்டம்; ஆனல் இதை யுவதம்பதிகள் ஒப்புக்கொள்ளுவதும் கடினம்.

ஒருநாள் விநோதினி ஆசாவின் தோளில் கையைப் போட்டுக் கொண்டு, "சகோதரி, உன் சௌபாக்கியம் நீடித்திருக்கட்டும். ஆனல் என்போன்ற துர்ப்பாக்கியவதியைச் சற்று ஏறெடுத்துப் பார்த்து நின்று பேசக்கூடாதா?" என்றாள்.

ஆசா சிறுபருவமுதலே பயந்த ஸங்கோச சுபாவமுடையவள். யாருடனும் பழகுவதற்கு வெட்கம். அவர்கள் தன்னேடு எப்படி யிருப்பார்களோ வென்ற பயம் வேறு. விநோதினியைப் போன்ற யௌவன ஸௌந்தரியமும், வசீகரிக்கும் முகமுமுடைய கட்டழகி யிடமுங்கூட நெருங்கிப் பேசிப் பழக அவளுக்குத் தைரியமில்லே.

தவிரத் தன் மாமியார் அவளிடம் விசேஷப் பிரியம் காண் பிப்பதையும், தனது அறியாமையையும் விநோதினியின் சாமர்த்தி யத்தையும் ஒப்பிட்டு அடிக்கடி சுட்டிக்காண்பிப்பதையும் பார்த்து ஆசா தான் விநோதினியைக் காட்டிலும் எல்லாவிதத்திலும் தாழ்ந் தவளென்று கருதலானள். வீட்டு வேலேயிலோ விநோதினிக்குத் தெரியாதது ஒன்றுமில்லே. ஆட்களிடம் சாமர்த்தியமாய் வேலே வாங்குவதிலேயோ அவளுக்கு நிகர் யாருமில்லே.

அழகும் புத்தியும் நிறைந்த விநோதினி எப்பொழுது தன் னிடம் வந்து சிநேகிதம் செய்துகொள்ள விரும்பினளோ, அப் பொழுதே ஆசாவுக்கு மட்டற்ற மகிழ்ச்சி யேற்பட்டது. அவர் களின் சிநேகம், ஒரே நாளில் பூத்துக் காய்த்துவிடும்போல முற்றியது.

ஆசா: அக்கா! நாமிருவரும் ஒருவரை யொருவர் வேறு பெயர் இட்டு அழைத்துக்கொள்ளலாம்.

விநோ: (புன்னகையுடன்) என்ன பெயர்?

ஆசா 'கங்கா', 'வகுளம்' என்று தனக்குத் தெரிந்த அழகிய பெயர்களாக அடுக்கிக் கொண்டே போனள்.

விநோ: சே! இவையெல்லாம் பழங்காலத்துப் பெயர்கள்! இப்பொழுது யாருக்கும் இவை பிடிப்பதில்லே.

ஆசா: பின் உனக்கு எது பிடித்திருக்கிறது?

விநோ: (சிரித்துக்கொண்டே) மாயா!

செவிக்கின்பமான வேறு எவ்வளவோ நல்ல பெயர்கள் இருக்க, வினோதினி இதைச் சொன்னது ஆசாவிற்குப் பிடிக்காவிடினும் அவள் சொன்னதை மறுக்கக்கூடாது என்பதற்காகச் சம்மதித்தாள். ஆசா வினோதினியின் கழுத்தைக் கட்டிப்பிடித்துக்கொண்டு "மாயா" என்று கூப்பிட்டுக் கொல்லெனச் சிரித்தாள்.

---

## பதினேராம் அத்தியாயம்

ஆசாவுக்கும் ஒரு தோழி அவசியம் வேண்டியிருந்தது. சதா கணவனும் மனைவியுமே பேசிச் சந்தோஷிப்பது சாத்தியமில்லை. மனம் விட்டுப் பேச, விளையாட மூன்றுமவர் ஒருவர் தேவையாயிருந்தார்.

வினோதினியும் இவ்வித நட்பிற்காக ஏங்கியிருந்தாள். ஆசா தனது காதல் வாழ்க்கையின் பரம ரகசியங்களையும் தனது சகிக்குச் சொல்லுவாள். யாவற்றையும் ஆவலுடன் கவனமாய் வினோதினி கேட்பது வழக்கம். அவளுக்கு இவை புதுமையாகத் தோன்றும். மரணதாகத்துடன் பாலைவனத்தைக் கடக்கும் பிரயாணி ஒருவனுக்கு எதிரே ஒரு தடாகம் தென்பட்டால் எங்ஙனம் குதூகலம் ஏற்படுமோ, அவ்வாறே இக்காதல் வரலாறு வினோதினியின் மனவேட்கையைத் தணிக்கும் அமிருதபானம் போல் இருந்தது. கேட்கக் கேட்க அவள் மதி மயங்கும்; உணர்ச்சி பொங்கும்.

உச்சிவேளை; எங்கும் நிச்சப்தமாயிருக்கும் சமயம்; ராஜலக்ஷ்மி வேலை முடிந்து சற்றுப் படுத்து உறங்குவாள். வேலைக்காரர்கள் இளைப்பாறப் போய்விடுவார்கள். விஹாரியின் வற்புறுத்தலின் பேரில் மஹேந்திரன் பகல் கொஞ்சநேரம் காலேஜுக்குப் போக ஆரம்பித்தான். ஆசா தனது அறையில் பாயின்மேல் ஒரு சிறு தலையணையை வைத்துக்கொண்டு படுத்திருப்பாள். வினோதினியும் அச்சமயம் அவள் பக்கத்தில் போய்ப் படுத்துக்கொள்வாள். ஆசாவுக்கும் மஹேந்திரனுக்கும் உள்ள அன்பைப் பற்றிய கதை ஆரம்பமாகும். வினோதினி மெய்ம்மறந்து கேட்டுக்கொண்டிருப்பாள். அவளது ரோஜா இதழையொத்த கன்னங்கள் குபீலெனச் சிவக்கும்; பெருமூச்செறிவாள்.

ஆசா சற்று நிறுத்திவிட்டால், வினோதினி அவளைத் தூண்டித் தூண்டிக் கேள்விமேல் கேள்வி கேட்டுக்கொண்டே இருப்பாள். ஒவ்வொரு சிறு சம்பவத்தையும் ஆதியோடந்தமாய்ச் சொல்லச் செய்து கேட்பாள். தனது கற்பனைசக்தியைப் பூர்ணமாக உபயோகப்படுத்தி, "இப்படி இப்படியானல் பிறகு என்னவாகும்?

நீ அப்பொழுது எப்படி நடந்துகொள்வாய்?'' என்றெல்லாம் விநோதினி கேட்பாள்.

இவ்விஷயங்களைப் பற்றிப் பேச ஆசாவும் அலுப்பதில்லை. அதை விஸ்தரித்துக்கொண்டு போவதில் அவளுக்கும் ஆனந்தம் இருந்தது.

விநோதினி: சரிதான்; நீ விஹாரியை விவாகம் செய்துகொண்டிருந்தால்?

ஆசா: சிச்சி! என்ன பேச்சுப் பேசுகிறாய்? எனக்குக் கேட்க வெட்கமாயிருக்கிறது. ஆமாம், உனக்கும் அவருக்கும் ஆகியிருந்தாலும் நன்றாய்த்தான் இருந்திருக்கும். அதற்கும் அப்பொழுது பேச்சு நடந்ததே!

விநோ: எனக்கு எத்தனையோ வரன் பார்த்தார்கள். ஒன்றும் நடக்கவில்லை. நல்லதாயிற்று. நான் இப்பொழுது இருக்கும் நிலைதான் எனக்கென்று ஏற்பட்டது. இதுவே எனக்குச் சரி.

ஆசா இதை ஒப்புக்கொள்ளவில்லை. தன்னைக் காட்டிலும் நன்னிலையில் விநோதினி இருப்பதாக அவள் நினைக்கவில்லை.

ஆசா: என் பதி இணங்கியிருந்தால் நீ அவரையே மணந்திருப்பாய்!

இது விநோதினியின் உள்ளத்தில் அடங்கிக்கிடந்த தீயை எழுப்பிற்று. 'மணந்திருப்பேன்! ஏன் மணக்கவில்லை? இந்த இன்ப வாழ்க்கை, இந்த வீடு எல்லாம் எனது ஏகபோகமாய் இருந்திருக்கும். இன்று இந்த வீட்டில் எனக்கென்ன அதிகாரம் இருக்கிறது? கேவலம் இன்று வந்து நாளைக்குப் போகப் போகிறவள்'—இவ்வெண்ணங்களினால் அவள் அசூயைத்தீ கொழுந்துவிட்டு எரிந்தது.

வேண்டாமென்றாலும் கேளாமல், விநோதினி தினமும் சாயங்காலம் ஆசாவின் தலையை விதவிதமாய்ப் பின்னிக் கொண்டையிட்டு மஹேந்திரனின் அறைக்கு அனுப்புவாள். தனது கைத்திறமையை இதன்மூலம் காண்பித்து அவன் மனத்தைக் கவரலாமென்ற நோக்கம் அவளுக்கு. சில சமயம் ஆசாவை அவள் கணவனிடம் போகவிடாமல் ஏதாவது பேச்சுக் கொடுத்துக்கொண்டே காலதாமதம் செய்வாள்; "என்ன அவசரம்? போனால் போயிற்று. உனது புருஷர் எங்காவது ஓடிப்போய் விடுவாரோ? உட்காரேன்'' என்பாள்.

இப்படி வேடிக்கை விளையாட்டில் ஒருநாள் ஆசா வர நேரமாகிவிட்டது. வெகுநேரம் காத்திருந்த மஹேந்திரன் அவள் வந்தவுடன் கோபத்துடன், "என்ன, உன் தோழி வீட்டைவிட்டு அசைவ

தாகக் காணோம். அவள் எப்பொழுது திரும்பிப் போகப்போகிருள் ?" என்ருன்.

ஆசா சற்று வருத்தத்துடன், "நீங்கள் என் தோழியைப் பற்றி இப்படியெல்லாம் பேசாதீர்கள். அவள் உங்களிடம் எவ்வளவு மதிப்பும் வாஞ்சையும் கொண்டிருக்கிருள் தெரியுமா? உங்களைப் பற்றிய விஷயம் எதுவானுலும் என்ன சிரத்தையுடன் கேட்கிருள்! சாயங்காலமானுல் எனக்குத் தலையை வாரிச் சிங்காரித்து உங்களிடம் அனுப்புகிருள்" என்ருள்.

ராஜலக்ஷ்மி மருமகளை வேலை செய்யச் சொல்வதை விட்டு விட்டாள். ஆனுல் விநோதினி அவளைத் தனது உதவிக்கு அழைத்துக்கொண்டாள்; அவள் தானும் ஒரு நிமிஷம் வீண்பொழுது போக்கமாட்டாள், ஆசாவையும் போக்க விடவில்லை. ஆசாவும் தினம் இவ்வளவுதான் வேலை செய்யவேண்டுமெனத் திட்டம் போட்டுவைத்திருந்தாள் விநோதினி. அதிலிருந்து ஆசா தப்பித்துக்கொள்ளவும் முடியவில்லை. மஹேந்திரன் மேலே தனது அறையில் அவளுக்காகக் காத்திருப்பானென்று விநோதினிக்கு நன்ருகத் தெரியும். அவன் அப்படித் தவிப்பதை நினைத்து மனத்திற்குள்ளேயே சிரித்துக்கொள்வாள்.

ஆசா மேலே போகவேண்டுமென்று அவசரப்படுவாள்; "நான் போகிறேன். இல்லாவிடில் அவருக்குக் கோபம் வந்துவிடும்" என்பாள்.

விநோதினி "நில்லேன். சற்று இதைச் செய்துவிட்டுப் போகலாம். அதற்குள் நாழிகையாகிவிடாது" என்பாள்.

ஆசா சற்றுப் பேசாதிருப்பாள். சிறிது நேரத்திற்கெல்லாம் மறுபடியும், "நிச்சயமாய் இனிப் போகாவிட்டால் அவர் மிகவும் கோபிப்பார். என்னைப் போகவிடு" என்பாள்.

விநோதினி, "அடியம்மா! சற்றுக் கோபித்துக் கொண்டு விட்டால் தான் என்ன? குழம்பிற்கு மிளகாய் எப்படி அவசியமோ, அப்படிக் காதல் வாழ்க்கையிலும் சற்றுக் கோபதாபம் அவசியம் வேண்டும். இல்லாவிடில் அது ருசிக்காது" என்று சொல்வாள்.

இந்த ருசியை விநோதினிதான் அறிவாளே தவிர சாதுவான ஆசா ஒன்றும் அறியாள். இவ்விதச் சுகத்தைத் தான் அனுபவிக்கக் கொடுத்துவைக்கவில்லையே யென்பதை நினைக்க நினைக்க விநோதினியின் மனம் பற்றி யெரியும். 'இம்மாதிரி அன்பான கணவன்! இப்பேர்ப்பட்ட சுகத்திற்கதிகாரி! இந்தப் பாக்கியம் எனக்கு வாய்த்திருந்தால் கணவனை என் கைக்குள் அடக்கி வைத்திருப்பேனே! அப்பொழுது இவ்வீட்டின் நிலையே வேறுமாதிரியாக

இருந்திருக்கும். இன்று அந்த ஸ்தானத்தில் ஏதும் அறியாத சிசுவையொத்த இந்த அசட்டுப் பெண் வெறும் விளையாட்டுப் பொம்மையா யிருக்கிறாள்' என்று ஆசாவைஉள்ளூறச் சபித்தாள்.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்

ஒருநாள் மஹேந்திரன் தன் தாயைக் கூப்பிட்டு மிகவும் ஆத்திரத்துடன், "இது என்ன? நன்றாயிருக்கிறது! யாரோ ஒரு பாலிய விதவையைக் கொண்டுவந்து வீட்டில் எவ்வளவு நாள் வைத்துக்கொண்டிருப்பது? எனக்குப் பிடிக்கவேயில்லை; என்ன அனர்த்தம் நேரிடுமோ தெரியவில்லை?" என்றான்.

ராஜலக்ஷ்மி: அவள் என்ன அன்னியமா? என் பெரியப்பாவின் மருமகள்தானே? நான் அவளை அன்னியமாக நினைக்கவில்லை.

மஹேந்: அம்மா, இது நன்றாயில்லை. அவளை அவள் வீட்டிற்கு அனுப்பிவிடுவதுதான் நல்லது.

மஹேந்திரன் தான் நினைத்த காரியத்தைச் சாதித்தே விடுவானென்பதை ராஜலக்ஷ்மி நன்றாயறிவாள். அவன் பேச்சைத் தட்டுவதும் கஷ்டம். ராஜலக்ஷ்மி விஹாரிக்குச் சொல்லியனுப்பினாள். வந்ததும் அவனிடம், "இவ்விஷயத்தில் நீதான் மஹேந்திரனுக்குப் புத்திமதி சொல்லவேண்டும். "விநோதினி வீட்டுவேலை எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ளுகிறாள். எனக்கு மிகவும் ஒத்தாசையாயிருக்கிறாள். அவள் யாராக இருந்தாலும் அவளைப் போல நமக்கு உழைக்க யார் இருக்கிறார்கள்?" என்றாள்.

விஹாரி அச்சமயம் ராஜலக்ஷ்மிக்குப் பதிலொன்றும் சொல்லவில்லை. மஹேந்திரனிடம் சென்று, "என்ன மஹேன்? விநோதினியைப் பற்றி யோசித்துக்கொண்டிருக்கிறாப் போலிருக்கிறது" என்றான்.

மஹேந்: ஸதா அதே விசாரந்தான். இரவில்கூடத் தூக்கம் போய்விட்டது. ஆசாவையே கேட்டுப் பார்; இரவு பகல் இதே விசாரத்தில் என் சுகவாழ்க்கைக்கே பங்கம் ஏற்பட்டுவிட்டது.

ஆசா அவனை முறைத்துப் பார்த்தாள்.

விஹாரி: ஏன்! அவளென்ன விஷஜந்துவா?

மஹேந்: ஆம்! எனக்கு அப்படித்தான் தோன்றுகிறாள்.

விஹாரி: நானும் இதைப்பற்றி யோசிக்காமலில்லை. ஆனால் அந்தப் பாழடைந்த கிராமத்தை என் கண்ணால் கண்டபிறகு அவளைத் திரும்பிப் போகுமாறு சொல்வதும் உசிதமென்று

எனக்குத் தோன்றவில்லை. இங்கும் அவளை எப்பொழுதும் வைத்துக்கொள்ள முடியாது. ஆனால் அந்தக் காட்டுக்கு அனுப்பு வதோ அவளுக்குக் கொடூர தண்டனை விதிப்பது போலாகும்.

விஹாரியின் எதிரில் விநோதினி வந்ததில்லையானாலும், அவன் தற்செயலாய் அவளை முன்பே பார்த்திருந்தான். அவளைப் போன்ற பெண் குக்கிராம வாழ்க்கைக்கு ஏற்றவளில்லையென்பதை அவன் அறிந்துகொண்டான். மஹேந்திரன் வீட்டில் அவளிருப் பதும் அனர்த்தமாய் முடியுமென்று அவனுக்குப் பட்டது. 'வீட் டிற்குப் பிரகாசத்தை அளிக்கும் விளக்கே வீட்டைக் கொளுத்த வும் காரணமாகலாம். இவ்விஷயத்தைச் சாவதானமாய் முடிவு செய்யவேண்டும். இந்த யுவதி விளையாட்டுப் பொருளல்ல. இவளைப்பற்றி அலட்சியமாயிருப்பது ஆபத்தாகும்' என்று கருதினான்.

இது இப்படியிருக்க, ராஜலக்ஷ்மி விநோதினியைக் கூப்பிட்டு, "பெண்ணே, நீ ஆசாவை உன்னிடமே வெகுநேரம் வரையில் பேச வைத்துக்கொள்ளாதே! நீ ஒரு பட்டிக்காட்டுப் பெண். இக் காலத்துப் பையன்களின் சுபாவம் உனக்குத் தெரியாது. முன்பின் யோசித்து ஜாக்கிரதையாக நடந்துகொள்" என்று எச்சரித்து வைத்தாள்.

இதன் பலனாக விநோதினி அன்று முதல் ஆசாவுடன் நெருங்கிப் பழகுவதையும் பேசுவதையும் நிறுத்திக்கொண்டாள். அவள் குத்தலாக ஆசாவிடம், "நான் யாரடியம்மா உனக்கு? காலம் நல்லதில்லை. எனது மானத்தை நான் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். இல்லாவிடில் எந்தச் சமயத்தில் என்னவாகுமோ?" என்றாள்.

ஆசா விம்மி விம்மி அழுதுபார்த்தாள். வலுவில் போய்ப் பேசிப் பார்த்தாள். எதற்கும் விநோதினி தனது மௌனத்தை விடுவதாகக் காணோம். ஆசாவுக்கோ, நாள் தவறாது தனது காதற் கதையைச் சொல்லுவது வழக்கமாகிவிட்டது. இப்பொழுது அதை யாரிடம் சொல்வது?

சிலநாட்களாய் மஹேந்திரனது சுபாவத்திலும் மாறுதல்கள் காணப்பட்டன. தம்பதிகளிடையில் அன்பும் பாசமும் தளர்ந்து வந்தன. ஸதா சேர்ந்திருக்க வேண்டுமென்ற ஆவலும் குறைந்து வந்தது. முன்பெல்லாம் ஆசா ஏதாவது தப்பிதம் செய்துவிட் டாலோ, வேலையைச் சரியாகச் செய்யாவிட்டாலோ மஹேந்திர னுக்கு அதுவும் ஒரு வேடிக்கையாகத் தோன்றும்; அதைக் கண்டு சந்தோஷப்படுவான். இப்போதோ அப்படியில்லை. அவ

ளது திறமையற்ற செய்கைகள் அவனுக்குப் பிடிப்பதில்லை. அவன் இதை வாய்விட்டுக் கூறாவிட்டாலும் முகக் குறிப்பிலிருந்து ஆசா அறிந்துகொண்டாள். ஸதா கூட்வேயிருப்பதன் பலனாகவே இன்பவொளி மங்கலாயிற்றென்று அவள் நம்பினாள். அவனுடைய பேச்சிலும் நடத்தையிலும் முன்பிருந்த ஆர்வமும் அன்பும் காணப்படவில்லை. அதைக் காண்பித்துக் கொள்ளாதிருக்க அவன் பிரயாசைப்படுவதையும் உணர்ந்தாள்.

இதற்கு ஒரே உபாயம், சற்றுப் பிரிந்து தூர இருப்பதுதான் என்று அவள் நினைத்தாள். ஸ்திரீகளுக்குச் சுபாவமாகவே இம்மாதிரி ஸமயங்களில் எப்படியிருந்தால் நலமெனத் தெரியும். ஆசாவும் மஹேந்திரனிடம் அதிகம் நெருங்காதிருக்க விரும்பினாள். ஆனால் எங்கே போவது, எப்படிப் பொழுதைக் கழிப்பது என்று தெரியவில்லை. விநோதினியை விட்டால் பேச்சுத் துணைக்கே வேறு ஒருவரும் இல்லை.

மஹேந்திரனும் புதுமோகம் சற்றுத் தணிந்ததும் மனம் தெளிந்து தனது தினசரி வேலைகளில் கவனம் செலுத்தலானான். மூலையில் கிடந்த வைத்தியப் புத்தகங்களையெல்லாம் தேடியெடுத்துத் தூசுபோக்கிப் படிப்பில் கவனம் செலுத்தினான்.

---

## பதின்மூன்றாவது அத்தியாயம்

விநோதினியை இணங்கச் செய்ய ஆசாவுக்குப் புதிய யுக்தி ஒன்று தோன்றியது. அவள் விநோதினியிடம், "ஆமாம்; நீயேன் அவரெதிரிலேயே தலைகாட்டாமல் இப்படி ஓடி ஓடி ஒளிகிறாய்?" என்றாள்.

விநோதினி முகத்தைச் சுளித்துக்கொண்டு கோபமாய், "சீ, போ!" என்றாள்.

ஆசா: ஏன்? நீ ஒன்றும் அன்னியமில்லையென்று மாமி கூடத்தான் சொல்லுகிறாளே!

விநோதினி: (சற்று உதாசீனமாக) உலகத்தில் நாம் யாரை வேண்டியவர்களென்று நினைக்கிறோமோ அவர்களெல்லாம் நமக்கு வேண்டியவர்களே. வேறாக நினைத்தால் நெருங்கிய பந்துக்களாயிருந்தாலும் அன்னியர்களே.

இதற்குச் சரியான பதில் ஆசாவிடமில்லை. தன் கணவன் அவளை வேறாகப் பாவித்து அவளுடன் பேசாமலும் பாராமலும் இருப்பது சுத்த அநியாயமென்று அவளுக்குத் தோன்றியது. அன்றிரவே அவள் மஹேந்திரனிடம், தன் தோழியோடு அவன் கட்டாயம் பேசத்தான் வேண்டுமென்று பிடிவாதம் செய்தாள்.

மஹேந்: (சிரித்துக்கொண்டே) உன் பிடிவாதம் ஒன்றும் சாதாரணமானதாயில்லை.

ஆசா: உங்களுக்கு அவளுடன் பேசச் சங்கோசமேன்?

மஹேந்: நீ அவளைப்பற்றிச் சொல்வதையெல்லாம் கேட்டால் அவளுடன் பேசுவதும் லேசல்லவென்று தெரிகிறது.

ஆசா: உங்களுக்கு ஏன் அதைப்பற்றிக் கவலை? நான் அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்கிறேன். நீங்கள் சிரிக்காது சொல்லுங்கள்: அவளுடன் பேசுவீர்களா, மாட்டீர்களா?

மஹேந்திரனுக்கும் விநோதினியைப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் இல்லாமற் போகவில்லை. ஆனல் அப்படிச் செய்வது உசிதமன்று என்றே சும்மா இருந்தான்.

பிறருடன் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதில் அவன் மிகவும் தாரதம்மியம் பார்ப்பதுண்டு. அவனுடைய லக்ஷியமே இவற்றில் வேறுயிருக்கும். எதிலும் மிதமிஞ்சிப்போவான். தாயின் அன்பு குறையாதிருக்க முதலில் கலியாணமே வேண்டாமென்றான். அப்படியே இப்பொழுது ஆசாவைத் தவிர வேறு ஸ்திரீயைக் கண்ணெடுத்துப் பார்ப்பதும் தகாதென்று நினைத்தான். மனைவியின்பால் தனக்குள்ள உண்மையான அன்பிற்காகத் தன்னைத் தானே சிலாகித்துக்கொண்டான். விஹாரியைத் தவிர அவன் வேறு யாரிடமும் தோழமையும் கொண்டாடியதில்லை. தனது சிநேகத்தை நாடி வருபவர்களை விஹாரியின் எதிரிலேயே எவ்வளவோ முறை உதாசீனமாய்ப் பேசி அனுப்பிவிட்டு அவர்களைக் கேலிசெய்வான். இப்படிச் செய்வது தகாதென்று விஹாரி சொன்னல், “உன்னைப்போல் என்னல் இருக்க முடியாதப்பா. நீ போகும் இடமெல்லாம் சிநேகிதம் கொண்டாடுவாய்; எல்லாரும் உன் நண்பர்களே!” என்பான்.

தனது தூய்மையைப் பற்றிக் கர்வங்கொண்ட மஹேந்திரனுக்கு விதவையான விநோதினியைப் பார்க்கத் தூண்டிய ஆசையொன்றே அவனை வெட்கமுறச் செய்தது. எப்படியாவது அவளை வீட்டை விட்டு அனுப்பிவிடவேண்டித் தாயுடன் சச்சரவு செய்ய ஆரம்பித்தான்.

ஒருநாள் ஆசாவிடம், “இந்தப் பேச்சை விடு ஆசா! எனக்கு அவளுடன் பேச நேரமெங்கே? படிப்பும் காலேஜும் போக ஒழிந்த நேரம் உன்னுடன் சற்றுப் பேசிக் கொண்டிருப்பதில் கழிந்துவிடுகிறது. பிறகு எனக்குப் பொழுது எங்கே இருக்கிறது?” என்றான்.

ஆசா: நல்லது. படிக்கும் சமயத்தில் வேண்டாம். என்னு டன்பேசும்நேரத்தை நான் என் தோழிக்காக விட்டு விடுகிறேன். அப்பொழுது அவளுடன் பேசுகிறீர்களா?

மஹேந்திரன், "உன்னுடன் இருக்கும் சிறிது நேரத்தை நீ விடத் தயாரானாலும் என்னால் அதைவிட முடியாது. தோழி யிடம் உள்ள அன்பின்மிகுதியால் என்மீதுள்ள அன்பு குறைந்து விட்டதுபோலும்! ஆனால், ஆசா, என்னால் உன்னைப்போல் இருக்க முடியாது" என்று சற்றுக் கோபத்துடனேயே உரைத்தான்.

ஆனால் ஆசா இதோடு விடுவதாகக் காணோம். அழுவாள். வாக்குவாதம் செய்து கடைசியில் தோற்றுப்போவாள்.

தங்களிருவருக்கும் இடையில் மூன்றுமவள் ஒருத்தி வந்து புகுவதற்குத் தான் சற்றும் இடங் கொடாமலிருப்பதைப்பற்றி மஹேந்திரனுக்குப் பெருமை. ஆசா இதைச் சரியென்று ஒப்ப வில்லை. கடைசியில் அவனைத் தன்னெதிரிலேயாவது விநோதினி யுடன் ஒன்றிரண்டு வார்த்தைகள் பேசுவதற்கு இணங்கச் செய் தாள்.

ஆசாவிடம் தனக்குள்ள ஆழ்ந்த அன்பைப்பற்றிப் பன் முறையும் தெரிவித்துக்கொண்டே மஹேந்திரன் இதற்கு ஒப்புக் கொண்டான். அப்பொழுதும் அவன் அவளிடம், "இதோ பார்: அவளுடன் அடிக்கடி என்னால் பேச முடியாது. வேண்டா வெறுப்பாக ஏதோ ஒன்றிரண்டு முறைதான் பேசுவேன்" என்று எச்சரித்தான்.

மறுநாள் அதிகாலையிலேயே ஆசா குதித்தோடி வந்து விநோ தினியின் கைகளைப் பிடித்துக்கொண்டாள். விநோதினி உடனே, "இது என்ன ஆச்சரியம்! வண்டு நறுமணம் கமழும் புஷ்பத்தை விட்டு உலர்ந்த இலையை நாடி வந்தது எப்படி?" என்று பரிகசித் தாள்.

ஆசா: இதோ பார்: இம்மாதிரியான கவித்துவச் சொற்களின் அழகு எனக்குத் தெரியாது. கழுதைக்குத் தெரியுமா கற்பூர வாசனை? யாருக்கு இதை அறிந்துகொள்ளும் சக்தியுண்டோ அவர்களிடமே ஏன் சொல்லக்கூடாது?

விநோதினி: யார் அப்பேர்ப்பட்ட கவி?

ஆசா: உன் மைத்துனர்தான்! சிரிக்காதே. இது ஒன்றும் பொய்யில்லை. உன்னுடன் சம்பாஷிக்க விரும்பி என்னிடம் எத் தனையோ முறை சொல்லியிருக்கிறார்.

கெட்டிக்காரியான விநோதினி உள்ளூற, 'மனைவி சொன்ன பிறகுதான் என்னுடன் பேசத் தோன்றியதாக்கும்! ஆனால் நான்

மாத்திரம் இவன் விரும்பியதும் பேச ஓடுவானேன்?' என்று நினைத்தாள்.

ஆசாவின் வேண்டுகோளிற்கு விநோதினி எவ்விதத்திலும் இணங்கவில்லை. இம்முயற்சியில் தான் தோற்றதைத் தெரிவிப்பதற்கு மஹேந்திரனிடம் ஆசா வெட்கினாள்.

'என்ன? என்னெதிரில் வருவதற்கா இவ்வளவு பிகு! நானும் என்ன மற்றப் புருஷர்களைப் போல வென்று நினைத்திருக்கிறாள் போலும்! வீட்டிலிருப்பவளைப் பாராமல் என்னைத் தவிர வேறு யாரால்தான் இருந்திருக்க முடியும்? நானென்ன அவளைப் பார்க்கவாவது முயன்றேனோ? என் குணத்தை அவள் இன்னும் அறியவில்லைபோலும்! ஒருமுறை அறிந்தால் பிறகு எனக்கும் மற்றவர்களுக்கும் உள்ள வித்தியாசம் நன்றாகத் தெரியும்' என்று எண்ணினான் மஹேந்திரன். விநோதினியின் மனத்திலும், 'இத்தனை நாளாக நானும் பார்க்கிறேன்: வீட்டில் நான் ஒருத்தி இருக்கிறேன் என்று திரும்பிக் கூடப் பார்த்ததில்லை; நான் அவ்வளவு பொருட்டில்லையா? நானும் ஒரு ஸ்திரீதானே? எனது பரிசயம் சற்று ஏற்பட்டால் பிறகு எனக்கும் ஆசாவுக்கும் உள்ள வித்தியாசம் தெரியும்' என்று பல எண்ணங்கள் தோன்றின.

ஆசா மஹேந்திரனிடம் ஒருநாள், "இன்று நீங்கள் காலேஜுக்குப் போய்விட்டதாகச் சொல்லி என் தோழியை உங்கள் அறைக்குக் கூட்டிவந்து உட்கார வைக்கிறேன். நீங்கள் காலேஜுக்குப் போவதுபோல் சற்று வெளியில் போய்விட்டுத் திடீரென்று அறைக்குள் வந்து நுழையுங்கள். விநோதினியும் நமது வசத்தில் சிக்கிவிடுவாள்" என்றாள்.

மஹேந்: என்ன அபராதத்திற்காக அவளுக்கு இப்படி ஒரு தண்டனை விதிக்கத் தீர்மானித்திருக்கிறாய்?

ஆசா: உண்மையில் அவள்மேல் எனக்குக் கோபந்தான். உங்களுடன் பேசிவிட்டால்தான் அவளுக்கென்ன குறைந்தா போய்விடும்? பேசாமலிருக்கச் சங்கல்பமாம்! அதை உடைத்தெறிந்தாலொழிய நான் விடப் போவதில்லை.

மஹேந்: உன் அருமைத் தோழியைப் பாராமல் எனது கண்களொன்றும் பூத்துப்போய்விடவில்லை. எனக்கு இப்படியெல்லாம் ஒளிந்து மறைந்து பார்ப்பது இஷ்டமில்லை.

ஆசா கெஞ்சியவண்ணம், "என்மீது ஆணை! நீங்கள் எப்படியாவது இந்த ஒருதரம் நான் சொல்கிறபடி செய்யுங்கள்; போதும். எப்படியாவது அவள் பிரதிக்ஞையைத் தகர்க்கவேண்டும். பிறகு உங்கள் இஷ்டம். பேசினாலும் சரி, பேசாவிட்டாலும் சரி" என்றாள்.

மஹேந்திரன் பேசாதிருந்து விட்டான். உள்ளூற விநோதினியைக் காணவேண்டுமென்ற ஆவல் அவனுக்கும் அதிகரித்து வந்தது. ஆனால் வெளிக்கு அலக்ஷியமாக ஆசாவிற்காகவே இதற்கு உடன்படுவதுபோலக் காட்டிக்கொண்டான்.

வஸந்தகாலம். வானம் நிர்மலமாயிருந்தது. பகற்பொழுது, எங்கும் நிச்சப்தம். விநோதினி மஹேந்திரனின் அறையில் உட்கார்ந்து ஆசாவுக்குத் துணியில் பூவேலை செய்யக் கற்றுக்கொடுத்துக் கொண்டிருந்தாள். ஆனால் ஆசாவின் கவனம் அதில் செல்லவில்லை. வாயிற்கதவுப்புறம் அடிக்கடி திரும்பிப் பார்த்துக்கொண்டே தப்புத் தப்பாய்த் தையலைப் போட்டுக்கொண்டிருந்தாள்.

விநோதினிக்குக் கோபம் பொறுக்கவில்லை. ஆசாவின் கையிலிருந்து தையலைப் பிடுங்கி மூலையில் எறிந்துவிட்டு, "இதெல்லாம் உனக்கு வராது! நான் போகிறேன். எனக்கு வேறு வேலையிருக்கிறது" என்று சொல்லி எழுந்தாள்.

ஆசா: இதோ சற்றுப் பொறு. இம்முறை நான் சரியாய்த் தைக்கிறேன்.

ஆசா மறுபடி துணியை எடுத்துத் தைக்க ஆரம்பித்தாள். இதற்கிடையில் மஹேந்திரன் சத்தமின்றி விநோதினியின் பின்புறம் கதவினருகில் வந்து நின்றான். ஆசா பார்க்காததுபோல் தலை குனிந்து சிரித்துக் கொண்டாள்.

விநோதினி: என்னடீ? என்ன சிரிப்புத் தாங்கவில்லை? எதை நினைத்துக்கொண்டாய்?

ஆசாவினால் சிரிப்பை அடக்கமுடியவில்லை. கையிலிருந்த பூத்துணியைத் தூர எறிந்துவிட்டு, "அக்கா, நீ சொல்வதுபோல் இது எனக்குத் தைக்கத்தான் வராது" என்று கூறிக் கொல்லென்று நகைத்தாள்.

விநோதினி முதலிலேயே ஒருவாறு இதையெல்லாம் அறிந்திருந்தாள். ஆசாவின் முகக் குறிப்பிலிருந்தே தன்னை வலையில் சிக்கவைக்க ஏதோ யுக்தி நடக்கிறதென்று தெரிந்துகொண்டாள். மஹேந்திரன் தன் பின்னால் வந்து நின்றதையும் அவள் அறியாமலில்லை. ஆனால் ஒன்றுமே அறியாதவள்போல் பாசாங்கு செய்தாள்.

மஹேந்திரனும் உள்ளே நுழைந்தவண்ணம், "இந்தச் சிரிப்பிற்குக் காரணம் எனக்கும் சற்றுத் தெரியக்கூடாதா?" என்றான்.

விநோதினி திடுக்கிட்டவள்போல் எழுந்து வெளியே போக முயன்றாள். ஆனால் ஆசா அவள் கையைக் கெட்டியாய்ப் பிடித்து இழுத்து இருத்திக் கொண்டாள்.

அதற்குள் மஹேந்திரன், "நீங்கள் இருங்கள். நான் வெளியே போகிறேன்" என்றான்.

ஆசா: இல்லை. இருங்கள்; போகவேண்டாம்.

விநோதினி மற்ற ஸ்திரீகளைப்போல் நாணத்துடன் எழுந்து ஓட எத்தனிக்கவில்லை. அங்கேயே உட்கார்ந்தாள். ஆசா அவளிடம், "இவ்வளவு வெட்கப்படுவானேன்?" என்றாள். விநோதினி மஹேந்திரனைப் பார்த்து, "உங்கள் விருப்பப்படியே நான் உட்காருகிறேன். ஆனால் என்னை உள்ளூற வைது சபிக்காதீர்கள்!" என்றாள்.

மஹேந்: உன் காலுக்கு வெகுநேரம் வரை எழுந்து ஓடச் சக்தி வராதிருக்குமாறு கட்டாயம் சபிக்கத்தான் போகிறேன்.

விநோதினி: இந்தச் சாபத்திற்கு நான் பயப்படவில்லை. ஏனெனில் உங்களுடைய வெகுநேரமென்பது ஐந்து நிமிஷமாயிருக்கும். அந்த ஐந்து நிமிஷ நேரமும் அநேகமாய் இப்பொழுதே ஆகிவிட்டிருக்கும்.

இதைச் சொல்லிக்கொண்டே விநோதினி எழுந்தாள். ஆசா மறுபடியும் அவளைத் தடுத்து, "என்மேல் ஆணை! நீ இன்னும் சற்றுநேரம் இருந்துவிட்டுத்தான் போகவேண்டும்" என்றாள்.

---

## பதினான்காம் அத்தியாயம்

ஆசா பதியிடம், "நிஜமாகச் சொல்லுங்கள்: என் தோழி எப்படியிருக்கிறாள்?" என்று கேட்டாள்.

மஹேந்திரன் அசட்டையாக, "பாதகமில்லை" என்றான்.

ஆசா மனத்தாங்கலுடன், "உங்களுக்கு யாரைக் கண்டாலும் பிடிப்பதில்லை" என்றாள்.

மஹேந்: ஆமாம், ஒருத்தியைத் தவிர!

ஆசா: அவளுடன் நன்றாகச் சம்பாஷித்துப் பார்த்தால் பிறகு தெரியும்.

மஹேந்: மறுபடியுமா? சரிதான். இது இனிமேல் நாள் தோறும் நடைபெறுமென்று தெரிகிறது!

ஆசா: எதிரில் வந்துவிட்டால்கூடப் பேசாதிருந்து விடுவீர்களோ? மரியாதைக்காகவாவது இரண்டொரு வார்த்தைகள் சொல்ல வேண்டாமா? ஒருமுறை தெரிந்த பிறகு உடனே பார்ப்பதையும் பேசுவதையும் நிறுத்திவிட்டால், அவள்தான் என்ன நினைத்துக் கொள்ளமாட்டாள்? உங்களுடைய விஷயமே விசித்திரந்தான்! இம்மாதிரி ஸ்திரீயுடன் சம்பாஷிக்கச் சமயம்

கிடைக்காதாவென்று யாராயிருந்தாலும் தோன்றும். நீங்கள்தான் ஏதோ பெரிய அபாயம் வருமென்று இதைத் தவிர்க்கிறீர்கள்!

இப்படி மற்றவர்களிலிருந்து தான் வேறுபட்டிருப்பதைப் பெரிய பெருமையாக நினைத்து மஹேந்திரன் கர்வங்கொண்டான். அவன் ஆசாவிடம், "நல்லது; நீ இதற்காக வருந்த வேண்டாம். எனக்குந்தான் போக்கிடமெங்கே? உன் தோழியும் வீட்டை விட்டுப் போவதாகக் காணோம். ஆகையால், இனிச் சந்திக்காமல் இருக்கப் போவதில்லை. அவளைப் பார்த்தால், எப்படி நடந்துகொள்ள வேண்டுமோ அப்படி நடந்துகொண்டுதானே ஆகவேண்டும்? இதைக் கற்றுக் கொடுக்க நீதான் என் குருவாக இருக்கவேண்டும்!" என்றான்.

மஹேந்திரன் ஏதாவதொரு விதத்தில் விநோதினியுடன் சந்திப்பும் சம்பாஷணையும் ஏற்படுமென்று நினைத்தான். ஆனால் இதில் அவன் ஏமாற்றமே அடைந்தான். அவள் அதற்கு இடங் கொடுக்கவில்லை.

மஹேந்திரனுக்கோ தனது ஆவலைக் காண்பித்துக்கொள்ளவும் முடியவில்லை. ஆசாவிடங்கூட அவன் விநோதினியின் பிரஸ்தாபத்தை எடுப்பதில்லை. ஆவலை வெளிக் காட்டாமல் அடக்க அடக்க அது பன்மடங்கு அதிகரித்தது. விநோதினி பராமுகமாயிருப்பது அவனது மனவெழுச்சியைப் பின்னும் தூண்டியது.

ஒருநாள் அவன் ஆசாவிடம் சிரித்துக்கொண்டே, "உன் தோழிக்கு என்னைப்பற்றி என்ன அபிப்பிராயம்?" என்று கேட்டான்.

தானாகவே ஆசா இதைப்பற்றி ஒரு விஸ்தாரமான அறிக்கை சமர்ப்பிப்பாளென்று அவன் எதிர்பார்த்திருந்தான். ஆனால் அவள் அப்படியொன்றும் சொல்வதாகக் காணோம். ஆகவே அவனே அவ்விஷயத்தை விளையாட்டுப்போல் சிரித்துக்கொண்டே ஆரம்பித்தான்.

ஆசா என்ன சொல்வதென்று தெரியாமல் திகைத்தாள். விநோதினியோ இதைப்பற்றி ஒன்றுமே அவளிடம் சொல்லவில்லை. இதற்காக ஆசாவுக்கும் சகியினிடம் சற்று வருத்தந்தான்.

ஆசா: இருக்கட்டும். இன்னும் சில தினங்கள் இப்படியே பேச்சு வார்த்தை ஏற்பட்டால் பிறகு உங்களைப்பற்றி அவளுக்கும் தெரியும். இதற்குள் அவள் என்ன சொல்வாள்?

இந்தப் பதிலைக் கேட்டு மஹேந்திரனுக்கு ஏமாற்றம் அதிகமாயிற்று; அவளைச் சந்தித்துப் பேசவேண்டுமென்ற அவாவும் கூடவே அதிகரித்தது.

இந்தச் சமயம் விஹாரி வந்துசேர்ந்தான். உள்ளே நுழையும்போதே, "ஏன்? என்ன பெரிய யோசனை நடக்கிறது?" என்று கேட்டுக்கொண்டே வந்தான்.

மஹேந்: இதோ பார்த்தாயா? அந்த விநோதினியோ கிநோதினியோ, அவள் பெயர்கூடச் சரியாய்த் தெரியவில்லை: அவளுடன் ஆசா மிகவும் சிநேகமாம். தங்களிருவருக்கும் பொதுப் பெயராக ஏதோ ஜகன்மோகினியோ ஜாலவிநோதினியோ என்று கூட வைத்துக் கொண்டிருக்கின்றனராம். எனக்கும் அவளைச் சிநேகம் செய்துவைக்க விரும்புகிறாள். கூப்பிடுவதற்கு ஒரு விசித்திரப் புதுப் பெயரும் வேண்டும். சமாசாரம் எப்படியிருக்கிறது கேட்டாயா?

அருகிலிருந்த ஆசாவின் முகம் கோபத்தினால் சிவந்தது.

விஹாரி நண்பனைப் பார்த்துக் கண்சிமிட்டிவிட்டு ஆசாவிடம், "இது என்னவோ சரியில்லைதான், அம்மா. எல்லாம் சுத்தப் புரட்டு. உனது மாயாவிநோதினியை நான் பார்த்திருக்கிறேன். நான் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்: அவளை அடிக்கடி சந்திக்க எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தால் நான் அதை என் பாக்கியமாக நினைப்பேன். அப்படியிருக்க மஹேந்திரனுக்கு அவளைக் காண விருப்பமில்லை என்று சொல்வதை நான் நம்பவேமுடியாது" என்றான்.

ஆசா மஹேந்திரனுக்கும் விஹாரிக்கும் உள்ள வித்தியாசத்தை அளவிட இதை ஓர் உதாரணமாகக் கொண்டாள்.

நிற்க; திடீரென்று மஹேந்திரனுக்குப் போட்டோ பிடிக்கும் பைத்தியம் ஏற்பட்டது. முன்பு ஒருமுறை அளவில்லாத உற்சாகத்துடன் போட்டோ எடுக்க ஆரம்பித்து, சில தினங்களுக்கெல்லாம் காமிரா மூலையில் எறியப்பட்டது. இப்பொழுது அதை எடுத்துப் பழுதுபார்த்து மறுபடியும் படம் எடுக்க ஆரம்பித்தான். வீட்டிலிருக்கும் ஆட்கள், நாய், பூனை யாவும் போட்டோ எடுக்கப்பட்டாய்விட்டன.

ஆசா அவனிடம், "நீங்கள் என் தோழியையும் ஒரு போட்டோ பிடிக்கத்தான் வேண்டும்" என்று வற்புறுத்தினாள்.

அவன் மிகவும் சுருக்கமாய், "சரி" என்று பதிலளித்தான்.

அதிலும் சுருக்கமாக விநோதினி, "முடியாது" என்று மறுத்தாள்.

ஆசா இதற்கும் ஒரு யுக்தி கண்டுபிடிக்க முயன்றாள். விநோதினிக்கு அவள் அப்படிச் செய்வாளென்று நன்றாகத் தெரியும்.

அன்று பகல் ஆசா தன் தோழியை எப்படியாவது தன் அறைக்குக் கூட்டிவந்து தூங்கச் செய்து விடவேண்டும்; அந்தச் சமயம் மஹேந்திரன் அவளைப் போட்டோ எடுக்கவேண்டும்; இது

தான் விநோதினியை வழிக்குக் கொண்டுவரத்தக்க உபாயம்- இவ்வாறு ஓர் ஏற்பாடு நிச்சயிக்கப்பட்டது.

விநோதினி பகற்பொழுதில் எப்பொழுதும் தூங்குவதில்லை. அதிசயிக்கத்தக்க விதமாய் அன்று ஆசாவின் அறைக்குள் வந்ததுமே அவளுக்குத் தூக்கம் வந்துவிட்டது. திறந்த ஜன்னலருகில்



கையை மடித்துத் தலைக்கு வைத்தபடி ஒரு சிவப்புச் சால்வையைப் போர்த்துக்கொண்டு விநோதினி படுத்திருந்த மாதிரியைப் பார்த்தால் போட்டோ எடுப்பதற்கு அனுகூலமாகவே அப்படிப் படுத்திருப்பதுபோலத் தோன்றியது.

மஹேந்திரன் காமிராவை எடுத்து வந்தான். வெளிச்சம் சரியாயிருக்கிறதா வென்று பார்ப்பதாகக் கூறிக்கொண்டே விநோதினியின் ஒவ்வோர் அங்கத்தையும் உற்றுக் கவனித்தான்.

போட்டோ சரியாக வரவேண்டுமாதலால் அவிழ்ந்து புரண்டு கொண்டிருந்த அவள் கூந்தலைச் சற்றே விலக்கினான். காலை மூடியிருக்கும் சால்வையையும் எடுக்கும்படி ஆசாவிடம் சொன்னான்.

சூது என்பவதையே அறியாத பெண்ணாகிய ஆசா, "என்னால் முடியாது. அவள் எழுந்து விடுவாள். நீங்கள் விலக்கி விடுங்கள்" என்றாள். மஹேந்திரன் அப்படியே செய்தான்.

எல்லாம் சரியாகிவிட்டது. காமிராவில் பித்தானை அமுக்க வேண்டியதுதான் பாக்கி. ஏதோ ஒரு சப்தம் கேட்டுத் திடீரென்று விழித்துக் கொள்பவளைப்போல வினோதினி சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள். ஆசா கலகலவென்று சிரித்தாள். வினோதினிக்குக் கோபம் பொங்கிற்று. கண்கள் சிவக்க மஹேந்திரனைப் பார்த்து, "இந்த அநியாயம் அடுக்காது!" என்று சீறினாள்.

மஹேந்: அநியாயந்தான்; சந்தேகமில்லை. ஆனால் திருடப் போன கள்வனுக்குக் கன்னம் வைத்தும் சொத்து கைக்கு அகப்படவில்லையே! ஆனது ஆயிற்று. நடந்த அநியாயம் பூராவும் நடந்துவிடட்டும். பிறகு எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் விதி.

ஆசாவும் தோழியைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். போட்டோ பிடித்தாயிற்று. ஆனால் அது கெட்டுப்போயிற்று. மறுபடி பிடிக்கவேண்டியதாயிற்று. தோழிகளின் நட்பிற்கு அறிகுறியாக இருவரையும் சேர்த்து ஒன்று பிடிப்பதற்கும் வினோதினி கடைசியில் இணங்கினாள். "இதுதான் கடைசி. இனி நான் போட்டோ எடுக்க விடவே முடியாது" என்றாள் அவள்.

ஆனால் மஹேந்திரன் வேண்டுமென்றே ஒவ்வொன்றையும் கெடுத்து விட்டுத் திரும்பத் திரும்ப எடுக்க ஆரம்பித்தான். இம்முறையில் அவர்களின் நட்பு விருத்தியடைந்து வந்தது.

(தொடரும்)



# உண்மை

## பிரேம்சந்த்

[கா. ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசார்யார் மொழிபெயர்த்தது]

### 1

அந்த ரகசியம் அமுதனின் மனத்தில் நிலையாகப் பதிந்துவிட்டது. அது வெளிப்படவேயில்லை. அவனுடைய பார்வையிலிருந்தோ வார்த்தையிலிருந்தோ அல்லது நடவடிக்கைகளிலிருந்தோ அந்தக் குறிப்பை அவள் அறியவில்லை. அண்டை அயலார்களுடன் எப்படிப் பழகவேண்டுமோ, இளம்பருவத் தோழமையை எப்படிப் பரிபாலிக்க வேண்டுமோ அதைத் தவிர அமுதனுக்கும் தனக்கும் வேறுவிதமான சம்பந்தம் இருக்கிறது அல்லது இருக்கக்கூடுமென்று பூர்ணிமை ஒருபொழுதும் ஐயமுறவே இல்லை.

அவள் குடத்தை எடுத்துக்கொண்டு கிணற்றங்கரைக்குப் போகும்போது அமுதன் எங்கிருந்தோ வந்துவிடுவான். அவள் கையிலிருந்து குடத்தை இழுத்துத் தண்ணீர் தூக்கிக் கொடுப்பான். அவள் மாட்டுக்குத் தீனி வைக்கும்போதும் அவள் கையிலிருந்து தவிட்டுக் கூடையை வாங்கிப்போய்த் தானே மாட்டுக்குத் தீனிவைப்பான்; செட்டியார் கடைக்கு அவள் சாமான் வாங்கப் போகும்போது அவளை இடைமறித்துத் தானே சாமான்களை அவளுக்கு வாங்கிக் கொடுப்பான்.

பூர்ணிமையின் வீட்டில் வேறு குழந்தையோ, புருஷனோ இல்லை. அவள் தந்தை பல வருஷங்களுக்கு முன்னமேயே காலஞ்சென்றுவிட்டார். அவள் தாய் 'பர்தா' வில் இருந்தாள். அமுதன் படிக்கப் போகும்போது பூர்ணிமையின் வீட்டுக்கு வந்து, "கடையிலிருந்து ஏதாவது சாமான் வாங்கி வரவேண்டுமா?" என்று கேட்டுக்கொண்டு போவான். அவனுக்கு வீடு வாசல்களும், நிலபுலங்களும், பசுமாடுகளும், தோட்டந் துரவுகளும் இருந்தன. அவன் யாருக்கும் தெரியாமல் தன் வீட்டில் உள்ள பொருள்களைப் பூர்ணிமைக்கு ஆதரவோடு கொண்டுபோய்க் கொடுப்பான். பூர்ணிமை இந்த உபகாரச் செய்கைகளை அவனுடைய பெருந்தன்மையெனக் கருதி அப்பொருள்களை உபயோகப்படுத்திக் கொள்வாள். இதைத் தவிர அவள் வேறு என்னசெய்வாள்? என்னதான் நினைப்பாள்? எதற்காக நினைக்க வேண்டும்? ஒருவிதமான ரத்தசம்பந்தமோ உறவோ இல்லாமற் போனாலும், ஒரே கிராமத்தில் இருப்பவர்கள் கிராம வழக்கப்படி உடன்பிறந்தவர்களைப் போலப் பழகுகிறார்கள். ஆகையால் இத்தகைய விஷயங்களிலே தனிப்பட்ட அர்த்தம் ஒன்றும் இல்லை.

ஒருநாள் பூர்ணிமை, "நீ நாள் முழுவதும் பள்ளிக்கூடத்திலேயே இருக்கிறாய்; எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது" என்று சாதாரண

மாக அவனுடன் சொன்னாள். அமுதனும் நேர்மையுடனே, "என்ன செய்வது? பரீக்ஷை நெருங்கி விட்டது" என்று பதிலளித்தான்.

"நான் போய்விட்டால் உன்னை மறுபடியும் எப்படிக் காண முடியும்? நீ அப்புறம் என் வீட்டுக்கு எதற்காக வருகிறாய்? எனக்கு இதே நினைவா யிருக்கிறது" என்றாள் அவள்.

அமுதன் திடுக்கிட்டான்; "எங்கே போகப் போகிறாய்?" என்று வினவினான்.

பூர்ணிமைக்கோ வெட்கம்; "உன்னுடைய தங்கைமார் எங்கே போனார்களோ, எல்லாப் பெண்களும் எங்கே போகிறார்களோ, அங்கேதான்" என்றாள் அவள்.

"அப்படியா!" என்று நம்பிக்கையிழந்தவனைப் போலக் கூறினான் அமுதன்.

அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. பூர்ணிமை எங்கேயாவது போய்விடுவாள் என்பதை அதுவரையில் அவன் நினைத்ததேயில்லை. அவ்வளவு தூரம் யோசிக்க அவனுக்கு ஒழிவுதான் ஏது?

அமுதன் எவ்வளவு விரைவில் இந்த ஆபத்தைக் கற்பனை செய்யக் கூடுமோ அதிலும் விரைவாக இது அவனுக்குச் செய்தியின் வடிவில் வந்து விட்டது. பூர்ணிமையின் விவாகம் நிச்சயமாகி விட்டது. நல்ல பணக்கார இடம்; மதிப்பு உள்ள குடும்பம். பூர்ணிமையின் தாய் மிக்க மகிழ்ச்சியுடன் கல்யாணத்துக்கு இணங்கிவிட்டாள். அந்த ஏழைமை நிலையில் அவளுக்குப் பணமே எல்லாவற்றைக் காட்டிலும் பெரிதாக இருந்தது. பூர்ணிமை எல்லா விதத்திலும் சுகமாக இருப்பதற்குரிய வசதிகளெல்லாம் அந்த இடத்தில் அமைந்திருந்தன. அவள் வேண்டிய வரம் அவளுக்குக் கிடைத்துவிட்டது. முன்பு அவள் கவலையே உருவாயிருந்தாள். பெண்ணின் விவாகத்தைப்பற்றி நினைக்கும்போது அவள் நெஞ்சம் திடுக்கிடும். இப்போது இறைவன் அவளுடைய கவலைகளும் கலக்கங்களும் ஒரேயடியாகப் போகும்படியாகக் கிருபை செய்துவிட்டான்.

அமுதன் இந்தச் செய்தியைக் கேட்டதும் பைத்தியம் பிடித்தவன் போல் ஆனான். அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. பூர்ணிமையின் வீட்டுக்கு ஓடினான். ஆனால் வழியிலேயே திரும்பிவிட்டான். 'அங்கே போவதனால் பிரயோஜனம் என்ன? இதில் அவளுடைய குற்றம் என்ன? பிறருடைய பிழைதான் யாது?' என்று நினைத்து அவன் வீட்டுக்குத் திரும்பினான்; முகத்தை மூடிக்கொண்டு படுத்திருந்தான். பூர்ணிமை போய் விடுவாள். அவளைப்பிரிந்து அவன் எப்படி இருக்கமுடியும்? அவன் மனம் கலங்கியது. அவன் உயிரைத்தான் ஏன் வைத்திருக்க வேண்டும்? வாழ்க்கையிலே இனிமேல் என்ன சத்து இருக்கிறது? இத்தகைய நினைவுகள் ஒன்றன்பின் ஒன்றாக எழுந்தன. பிறகு அவை மாறின. புயலுக்குப் பின் வரும் அமைதியைப்போல அவன் மனத்திலும் ஒரு சாந்தம் குடிகொண்டது. அவன் வெறுப்படைந்தவன்போல் ஆனான். பூர்ணிமைதான் போகிறாளே; அவளோடு உறவு என்ன வேண்டியிருக்கிறது? அவளை இனி ஏன் மீண்டும்

போய்ப் பார்க்கவேண்டும்? பூர்ணிமைக்கு இனி அவனைப்பற்றி என்ன கவலை? எப்பொழுதுதான் அவள் கவலையெடுத்துக் கொண்டாள்? அவன் தானே அவளுக்குப்பின் நாயைப்போல் வாலை ஆட்டிக்கொண்டிருந்தான்? பூர்ணிமையோ அவனுடன் சரியாக ஒரு வார்த்தைகூடப் பேசினது கிடையாது. இப்பொழுது அவளுக்குப் பெருமை இல்லாமலா போகும்? ஒரு லக்ஷாதிபதியின் மனைவியாகப் போகிறாள். ஜோராக ஆகட்டுமே! அமுதனும் பிழைத்திருப்பான்; சாகமாட்டான். இதுவே இந்த யுகத்து அன்பின் முறை.

ஆனால் இந்த வேகமெல்லாம் மனத்திற்குள்ளேயே அமிழ்ந்து கிடந்தது; இது பயனற்ற வேகம். பூர்ணிமையின் தாயினிடம் சென்று, "பூர்ணிமை எனக்குரியவள். அவள் என்னிடந்தான் இருப்பாள்" என்று சொல்ல அவனுக்குத் தைரியம் ஏது? பிரமாதமாகிவிடாதா? ஊர் அமர்க்களப் படுமே! இம்மாதிரி விஷயங்கள் கிராமக் கதைகளிலே வந்திருக்கின்றனவா? அல்லது கிராமவாசிகள் இம்மாதிரியான சம்பவங்களைக் கண்டுதான் இருக்கிறார்களா? நிற்க.

பூர்ணிமையின் நிலைமை என்ன? அவள் நாள்முழுவதும் அவன் வருவானென்று வழிபார்த்துக் கொண்டிருந்தாள். 'வீட்டு வாசல் வழியே போகிறவன், உள்ளே ஏன் வரவில்லை? வழியிலே என்னைக்கண்டால் தன் நிழலையே கண்டு ஓடுபவன்போலப் பதுங்குகிறானே!' என்று அவள் யோசிப்பாள். குடத்தை எடுத்துக்கொண்டு கிணற்றங்கரைக்குப் போய் அவன் வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பாள். ஆனால் அவன் அங்கே தென்படவே மாட்டான்.

ஒருநாள் அவள் அவன் வீட்டுக்கு, விடைபெற்றுக் கொள்ளும் பொருட்டுச் சென்றாள். "இப்பொழுதெல்லாம் நீ ஏன் வருவதே யில்லை?" என்று அவனைக் கேட்டாள். உடனே அவளுடைய தொண்டை அடைத்துக் கொண்டது. 'நாம் இந்த ஊரில் இன்னும் கொஞ்ச நாட்களே இருக்கப் போகிறோம்' என்ற ஞாபகம் அவளுக்கு வந்தது.

அமுதன் பேசாமல், அசையாமல் உட்கார்ந்திருந்தான். அவன் அலக்ஷியமாக, "பரீக்ஷை நெருங்கிவிட்டது; ஒழிவில்லை" என்று பதிலளித்தான்.

கொஞ்சநேரம் கழித்து மறுபடியும், "நீ போகிறாய்போல் இருக்கிறது. ......" என்று பேசத் தொடங்கினான் அவன். 'இனி அன்பை வளர்த்துப் பயன் என்ன?' என்று அவன் சொல்லக் கருதினான். ஆனால் அது முட்டாள்தனமாக முடியுமென்று அவனுக்குத் தோன்றியது. நோயாளி ஒருவன் இறப்பவனாக இருந்தால் அவன் இறந்துவிடுவானென்ற காரணத்தினாலே வைத்தியம் செய்வதை விட்டுவிடுவார்களா? அதற்கு மாறாக அவனுடைய நிலைமை மிகக் கேவலம் ஆக ஆகத்தான் அதிகக் கவலையோடு அவனுக்கு மருந்து கொடுக்கிறார்கள். அவனுடைய அந்திமகாலம் நெருங்கும் போதோ, அலைச்சலுக்கு எல்லையே இருப்பதில்லை.

அவன் பேச்சை மாற்றி, "அவர்களும் பணக்காரர்களென்று கேள்விப் பட்டேன்" என்றான். ஒருகால் இந்த வார்த்தைகள் அவளுடைய காதில்

விழவில்லையோ, அல்லது இதற்குப் பதிலளிக்க வேண்டிய அவசியம் இல்லை யென்றுதான் கருதினளோ, அவளுடைய காதுகளில் அவனுடைய முதல் வாக்கியமே ஒலித்துக்கொண்டிருந்தது.

அவள் துயரம் மிக்க பாவனையில், "இதில் என் தவறு என்ன? நான் என் சொந்தக் கருத்துடனா போகிறேன்? போகவேண்டி யிருக்கிறது; ஆகை யால் போகிறேன்" என்றாள்.

இதைக் கூறியதும் அவள் முகம் வெட்கத்தினால் சிவந்துவிட்டது. எவ்வளவு சொல்லவேண்டுமோ, அதற்கு மேலே சொல்லிவிட்டாள் அவள்.

அன்பிலும் சதுரங்க விளையாட்டைப்போலத் தந்திரங்கள் பலவுண்டு. அவள் கூறிய இந்த வார்த்தைகளிலே ஏதாவது பொருள் இருக்கிறதா, இல்லையா என்று சோதிப்பவனைப்போல, அவன் அவளைக் கூர்ந்து நோக் கினன். அவனுடைய கண்களிலே இந்த ஓரத்திலிருந்து அந்த ஓரம்வரை யில் பார்க்கும் வன்மை யிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! எல்லாப் பெண்களுமே, மணம் முடிந்தவுடனே தம்முடைய உயிருக்கே ஆபத்து நேர்ந்ததுபோல வெறுப்பாகத்தான் பேசுவது வழக்கம். ஆனால் எல்லாப் பெண்களும் ஏதாவது ஒருநாளில் நல்ல நல்ல நகைகள் அணிந்து அழகிய சேலை கட்டிக்கொண்டு கணவர் வீடு சென்று விடுகிறார்கள். இந்த வார்த்தை களினால், அவனுடைய மனத்திற்கு ஓர் ஆறுதலும் உண்டாகவில்லை. பின்பு பயத்துடனே, "இனி உனக்கு என் ஞாபகம் எதற்காக வரப்போகிறது?" என்று வினவினன் அவன்.

அவனுடைய உடல் புழுங்கியது. அவனுக்கு அதிக வெட்கம். அறையை விட்டு ஓடி விடலாமா வென்றுகூட அவன் நினைத்தான். பூர்ணி மையை நிமிர்ந்து பார்க்க அவனுக்குத் தைரியம் இல்லை. ஒருவேளை அவள் அறிந்துகொண்டாளோ?

பூர்ணிமை தலை குனிந்தாள்; 'நீ என்னை அன்பற்றவளென்று நினைக் கிறாய்? நான் குற்றமற்றவள். நீ என் மீது கோபம் கொள்ளுகிறாய். இந்தச் சமயத்தில் நீ எனக்கு ஆறுதல் சொல்ல வேண்டியிருக்க என்மேல் சினங் கொள்ளுதல் தகுமா? எனக்கு வேறுவழி எது? நீயே சொல். என் மனிதர் கள் என்று சொல்லக் கூடியவர்களே என்னை வேற்று வீட்டுக்கு அனுப்பு கிறார்கள். அங்கே என்ன நடக்குமோ? என் நிலைமை எவ்வாறு இருக் குமோ? என் உயிரை வாங்க இந்த ஒரு துன்பமே போதாதா? நீயும் கோபித் துக்கொள்ளுகிறாயே!' என்று அவள் தன் மனத்தோடு பேசிக்கொண்டாள் போலும்!

அவளுடைய தொண்டை மறுபடியும் அடைத்துக்கொண்டது. பூர்ணிமை இவ்வாறு துன்பப்படுவதையும் கலங்குவதையும் கண்டு, 'இவ ளிடத்திலும் வேதனை மறைந்திருக்கிறது' என்ற நம்பிக்கை அமுதனுக்கு உண்டாயிற்று. அவனுடைய கேவலத்தன்மையும் சுயநலமும் அவனுடைய முகத்திலே கரிபூசினாற்போல விளங்கின. பூர்ணிமை கூறிய சொற்களில் உண்மை நிறைந்திருந்தது. அதோடுகூடவே, எவ்வளவு விரட்டலும் எவ்வ ளவு பரிவும் நிரம்பியிருந்தன! அயலாரோடு யார்தாம் தம் குறையைக் கூறு

வார்கள்? உண்மையிலே இந்த நிலைமையில் அவன் அவளுக்கு ஆறுதல் அளிக்கவேண்டும். அது அவனுடைய கடமை. அதை அவன் மகிழ்ச்சியோடு நிறைவேற்றியிருக்கவேண்டும். பூர்ணிமை அன்பின் புதிய ஆதர்சம் ஒன்றை அவன் முன்பு வைத்தாள். அவனுடைய விவேகம், அந்த ஆதர்சத்தினின்றும் தப்பிப் போக அவனை விடவில்லை. அன்பும் ஒருவகையான சுயநலத் தியாகமே என்பதில் என்ன சந்தேகம் இருக்கிறது? அது மிகப் பெரிய தியாகம்; உள்ளத்தை எரிக்க வல்லது.

"என்னை மன்னித்துவிடு, பூர்ணிமா! நான் செய்தது பிழை; முட்டாள் தனம்" என்றான் அவன்.

## 2

பூர்ணிமைக்கு விவாகமாகிவிட்டது. அமுதன் அவளுடைய விவாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் முனைந்திருந்தான். மணமகன் வயதானவன்; தொந்திபோட்ட வயிறும் விகாரமான ரூபமும் உடையவன்; கர்வி; கெட்டவன். ஆனால் அமுதனோ அவனை ஒரு தேவதையைப்போலவும் அவனுடைய புன்சிரிப்பால் ஸ்வர்க்கபதவி யடைவதுபோலவும் கருதி அவனுக்கு அன்புடன் பணிவிடை செய்துவந்தான். பூர்ணிமையோடு பேச அவனுக்கு ஒழிவே இல்லை. ஒழிவு தேட அவன் முயற்சி செய்யவும் இல்லை. அவன் பார்க்கும்போதெல்லாம் பூர்ணிமை அழுது கொண்டிருந்தாள். அமுதன் பேசாமலே பார்வையாகிய பாஷையால் தன்னால் இயன்ற வரையில் அவளைத் தேற்றினான்; ஆறுதல் சொன்னான்.

மூன்றாம்நாள் பூர்ணிமை அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகப் புக்ககம் புகுந்தாள். அன்றே அமுதன் கோயிலுக்குச் சென்று பரம நிஷ்டையும் பக்தியும் நிறைந்த மனத்துடன், 'பூர்ணிமை எப்போதும் சுகமாக இருக்க வேண்டும்!' என்று சிவபெருமானைப் பிரார்த்தித்தான். புதிய துக்கத்திலே பயனற்ற பலவித எண்ணங்களுக்கு இடம் ஏது? துன்பம் ஆத்மாவின் நோய்களைக் களைய வல்லது.

அவன் மனத்திலேமட்டும் ஒரு குறை இருந்தது: தன்னுடைய வாழ்க்கையே பாழடைந்து விட்டதென்றும் இனி வாழ்க்கையிலே ஒரு லக்ஷ்யமும், ஓர் ஆசையும் இல்லையென்றும் அவன் கருதினான்.

## 3

மூன்று வருஷங்களுக்குப்பின் பூர்ணிமை மீண்டும் பிறந்தகத்துக்கு வந்தாள். இதன் நடுவிலே அமுதனுக்கும் விவாகமாகிவிட்டது; வாழ்க்கையாகிய ஏரிலே பிணைக்கப்பட்ட அவன், தன்வேலைகளைக் கவனித்துவந்தான். ஆனால் அவனுடைய மனத்தில் புலனாகாத உணர்ச்சி யொன்று அமுங்கியிருந்தது; அதற்குப் புலனாகும் உருவத்தைக் கொடுக்க அவனால் இயலவில்லை. அந்த உணர்ச்சி தர்மாமீடரிலிருக்கும் பாதரசத்தைபபோல் அவனிடத்தில் பத்திரமாக இருந்தது. இப்போது பூர்ணிமை வந்து அதில் உஷ்ணத்தை உண்டாக்கிவிட்டாள். பாதரசம் ஏறி உச்சியின் எல்லைவரையில் சென்றுவிட்டது. அவள் மடியிலே இரண்டு வயதுக் குழந்தை யொன்று

அன்புடன் தவழ்ந்துகொண்டிருந்தது. அமுதன் அந்தக் குழந்தையை அல்லும்பகலும் தூக்கிக்கொண்டு திரிவான். அவன் காலையிலும் மாலையிலும் குழந்தையை எடுத்துக்கொண்டு உலாவப் போவான். கடைகளிலுள்ள விதவிதமான பொம்மைகளையும் மிட்டாய்களையும் அதற்கு வாங்கிக் கொடுப்பான். கிழக்கு வெளுத்தவுடனே அதற்கு ஹல்வாவும் பாலும் கொண்டு வருவான். அதைக் குளிப்பாட்டித் தலைமயிரை வாரி ஒழுங்குபடுத்துவான். அதன் உடம்பிலுள்ள சொறி சிரங்குகளைக் கழுவி அதற்கு மருந்து தடவுவான். இந்தப் பணிவிடைகளெல்லாவற்றையும் அவன் தன் பொறுப்பில் ஏற்றுக்கொண்டான். குழந்தையும் அவனை விட்டுக் கணமும் பிரிய விரும்பாது. சில சமயங்களில் அவனிடமே படுத்துத் தூங்கிவிடும். பூர்ணிமை வந்து கூப்பிட்டாலும் போகாது.

"நீ யாருடைய பிள்ளை?" என்று அமுதன் கேட்பான்.

"உன் பிள்ளை" என்று சொல்லும் குழந்தை.

பூர்ணிமையின் அழகு இப்போது முன்னிலும் அதிகமாகக் கிளர்ந்தது. மொட்டு மலர்ந்து பூவாயிற்று. இப்போது அவளுடைய ஸ்வபாவத்தில் கொஞ்சம் பெருமையும் அகங்காரமும் கலந்துவிட்டன. செயற்கை அலங்காரங்களிலும் அவளுக்கு விருப்பம் உண்டாயிற்று. பொன் நகைகளணிந்து பட்டுத் துகில் புனைந்த அவளிடத்திலே கவர்ச்சி மிகுந்தது. அமுதனிடத்திலிருந்து அவள் தன்னைக் காத்துக் கொள்ள விரும்புகிறாளோ வென்று கூடத் தோன்றியது. முக்கியமான வேலை இருந்தாலொழிய அவள் அவனிடம் பேசுவதில்லை. எப்போதாவது கொஞ்சம் பேசினாலும் அமுதனுக்கு ஏதோ ஒரு பெரிய உபகாரம் செய்வதுபோலப் பேசுவாள். அமுதன் அவளுடைய குழந்தைக்காக இவ்வளவு சிரமப்பட்டும், அது விரும்புவதையெல்லாம் செய்தும், பூர்ணிமையின் நோக்கத்தில் அவன் செய்த அவ்வூழியங்களுக்கு மதிப்பேயில்லை என்றுதான் பார்ப்பவர்களுக்குத் தோற்றும். பணிசெய்து கிடப்பதே அமுதனது கடமைபோலும்! அவன் தன் கடமையைச் செய்துவந்தான். அதற்காக அவன் யாதொரு வந்தனத்துக்கும் நன்றியறிவுக்கும் உரியவனல்ல போலும்!

குழந்தை அழும்போது அவள், "ஜாக்கிரதை! அழாதே! அழுதால் உன்னோடு மாமா பேசமாட்டார்" என்று அதைப் பயமுறுத்துவாள். இதைக் கேட்டவுடனே குழந்தை அழுகையை நிறுத்திவிடும்.

அவளுக்கு ஏதாவது வேண்டியிருந்தால் அமுதனைக் கூப்பிட்டுக் க்கட்டளையிடுவாள். அமுதனும் ஒரு வேலைக்காரனைப்போலே அவளுடைய உத்தரவின்படி நடப்பான். அவளும் அமுதன் தனக்கு அடிமைச்சீட்டு எழுதிக்கொடுத்து விட்டதுபோலவே கருதுவாள்.

ஆறுமாதகாலம் பிறந்தகத்தில் இருந்துவிட்டுப் பூர்ணிமை மீண்டும் புக்ககம் சென்றாள். அமுதன் அவளைக் கொண்டுவிட ஸ்டேஷன்வரையில் வந்தான். அவள் வண்டியில் உட்கார்ந்ததும் அமுதன் குழந்தையை அவளுடைய கையில் கொடுத்துவிட்டான். அமுதனின் கண்களிலிருந்து நீர்த்துளிகள் பலபலவென்று உதிர்ந்தன. அவன் முகத்தைத் திருப்பிக்

கொண்டு கைகளால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டான். தன் கண்ணீரை அவன் பூர்ணிமைக்கு எப்படிக் காட்டுவான்? அவளுடைய கண்கள் ஏற்கெனவே வாடியிருந்தன. ஆயினும் அவன் மனம் கேட்கவில்லை. மீண்டும் நாம் எப்போது சந்திப்போமோ என்ற சிந்தனையில் அவன் மூழ்கி யிருந்தான்.

பூர்ணிமை சிறிது அபிமானத்தோடு, "குழந்தை வெகு நாட்கள்வரை யில் உனக்காக ஏங்கி அழுதுகொண்டிருக்கும்" என்றாள். அமுதன் அடைத்த குரலில், "என் உயிருள்ள அளவும் நான் இதன் உருவத்தை மறக்க இயலாது" என்றான்.

"எப்பொழுதாவது ஒன்றிரண்டு கடிதங்கள் போட்டுக்கொண்டிரு."

"போடுவேன்."

"ஆனால், நான் பதில் எழுதமாட்டேன்; இதை அறிந்துகொள்."

"எழுத வேண்டாம். நான் கேட்கவில்லையே! ஆனால் மறக்காதே."

வண்டி புறப்பட்டுவிட்டது. அமுதன் அவள் இருந்த ஜன்னலையே நோக்கிக்கொண்டிருந்தான். வண்டி ஒரு பர்லாங் தூரம் சென்றதும், பூர்ணிமை ஜன்னலிலிருந்து தலையை நீட்டித் தன்னைப் பார்ப்பதையும், குழந்தையைக் கையில் தூக்கித் தன்னைச் சிறிது காண்பிப்பதையும் அவன் கண்டான்.

அமுதனின் உள்ளம் ஒரே கணத்தில் பூர்ணிமையிடம் பறந்துபோக விரும்பியது. அவன் தன்னுடைய எண்ணம் நிறைவேறிவிட்டதுபோலக் களிப்புற்றான்.

## 4

அதேவருஷம் பூர்ணிமையின் தாய் இறந்துவிட்டாள். அச்சமயம் பூர்ணிமை பிரசவ அறையில் இருந்தாள். அவள் தன் தாயை அந்திம காலத்தில் பார்க்க முடியவில்லை. அமுதன் தன்னால் இயன்றவரையில் பூர்ணிமையின் தாய்க்கு முழு சிகிச்சையும் செய்தான். அவள் இறந்ததும் ஈமக்கடனைக்கூட அவனே செய்து முடித்தான். தன் தாய் இறந்தது போலவே கருதி அந்தணர்களுக்கும் பந்துக்களுக்கும் உணவளித்தான். அவன் தந்தை இறந்துவிட்டமையால் அவனே வீட்டுக்கு எஜமானனாக இருந்தான். அவனைத் தடுப்பவர் யாரும் இல்லை.

பூர்ணிமை, இனிமேல் பிறந்தகம் வர என்ன காரணம் இருக்கிறது? இனி அவளுக்கு ஓய்வுதான் ஏது? அவள் வீட்டிற்கு எஜமானி. வீட்டை யாரிடம் விட்டு வருவாள்? அவளுக்குப் பின்னும் புதல்வர்கள் பிறந்தனர். மூத்தவன் பெரியவனாகி ஹைஸ்கூலில் பயின்றுகொண்டிருந்தான்; இளையவன் கிராம பாடசாலையிலே படித்துவந்தான். அமுதன் வருஷத்தில் ஒருதடவை தன் ஆளை அனுப்பி அவளுடைய யோகக்ஷேமங்களை விசாரித்து வரச்செய்து அறிந்துகொள்வான். பூர்ணிமை எல்லாவிதத்திலும் சுகமாகவும் கவலை யின்றியும் இருக்கிறாளென்று கேள்வியுற்று அவன் மனம் சமாதானம் அடையும். அமுதனின் பிள்ளைகள்கூட இப்பொழுது வளர்ந்துவிட்டனர். வீட்டுத்தொல்லை அவனுக்குப் பெரிதாயிருந்தது. அவனுக்கு வயதும் நாற்ப

துக்குமேல் ஆகிவிட்டது. ஆயினும் பூர்ணிமையின் நினைவு இப்போதும் அவனுடைய உள்ளத்தின் ஆழத்திலே பத்திரமாக இருந்தது.

## 5

திடீரென்று ஒருநாள் பூர்ணிமையின் கணவன் இறந்துவிட்டானென்ற செய்தி அமுதனுக்கு எட்டியது. அதனால் அவனுக்குத் துன்பமே உண்டாகவில்லை யென்பதுதான் ஆச்சரியம். இந்தக் கொடிய கிழவனோடு பூர்ணிமை நடத்தும் வாழ்க்கையைக் கண்டு யாரும் பொறுமை கொள்ளாரென்று அவன் முன்பே நிச்சயித்திருந்தான். கடமையாலும் கற்பைக் காக்கும் சிந்தனையாலும் பிணைப்புண்ட அவள் தன் மனத்துன்பத்தை வெளியிடவில்லை. எல்லாவிதமான சுகங்களும் நிறைந்து கவலையற்றிருந்த போதிலும் வெறுத்தற்குரிய அந்த மனிதனிடத்திலே அவளுக்குக் காதல் இருக்குமென்று யார் கூறமுடியும்?

அவளுடைய மறைந்திருந்த உணர்ச்சிகள் மீண்டும் உயிர் பெறும். அவளிடத்தில் முன்போன்ற கூச்சம் இப்போது இராது. அவளுடைய நாவில் முன்னே இருந்த மௌன முத்திரையும் இப்போது மறைந்துவிடும். அவள் இப்போது விடுதலை பெற்றவள். வயசின் இயல்பினால் அவளிடத்தில் இரக்க உணர்ச்சியும் அதிகமாகியிருக்கலாம்; முன்பிருந்த கர்வமும், அலக்ஷ்யமும் எப்போதோ மலையேறியிருக்கும். முன்பிருந்த பால்யத்திற்குப் பதிலாக, அன்பை ஏற்றுக்கொண்டு ஆதரிப்பதற்கும் விரும்புவதற்கும் அநுபவமுள்ள பெண்களிடம் காணப்படும் விஷயங்களெல்லாம் அவளிடத்தில் இப்போது நிரம்பியிருக்கும். பூர்ணிமையின் வீட்டுக்குப் போய்த் துக்கம் விசாரித்துவிட்டு அவளையும் அவன் தன்னுடனே அழைத்துவருவான். தன்னால் இயன்றவரையில் அவளுக்குப் பணிவிடை செய்வான். பூர்ணிமை அருகில் இருப்பதொன்றினாலேயே அவனுக்கு மகிழ்ச்சியுண்டாகும். தன்னை அவள் மறவாமல் ஞாபகம் வைத்துக்கொண்டிருப்பதை அவளுடைய வாயிலிருந்து அறிந்து அவன் மனம் பூரிக்கும். இப்போதும் அவள் சிறுபிராயத்தில் இருந்ததுபோலவே அவனை நேசிப்பாள். இருபதுவருஷங்களுக்கு முன் அவன் கண்ட பூர்ணிமையின் உருவம்:—அவள் உடம்பு திரண்டு பருத்திருந்தது; கன்னம் சிவந்திருந்தது; மிருதுவான அங்கங்கள்; அமுதம் நிறைந்த குடத்தைப்போல் இருந்தது அவளுடைய நீண்ட மோவாய்க்கட்டை; அவளுடைய புன்சிரிப்பு மனத்தைக் கவர்ந்தது; மயக்கத்தை உண்டாக்கியது. அதே உருவம் சிறிது மாறுதலுடன் அவன் கண்களிலே புதைந்திருந்தது. பிரிவின் தனிமையை அநுபவித்த கண்களில் அந்த மாறுதல் அவனுக்கு முன்னிலும் இனிமையாகக் காணப்பட்டது. அந்த உருவத்தில் காலத்தின் அடையாளம் படிந்திருக்கலாம். ஆனால் பூர்ணிமையின் உருவத்தில் அழகுக்கும் குறைவுண்டாக்கக் கூடிய மாறுதலிருக்குமென்று அவன் கற்பனையிலும் கருதவில்லை. இச்சமயத்தில் அவன் அவளுடைய இனிய மொழிகளைக் கேட்பதற்கு ஆவல் கொண்டிருந்தானே யொழிய அவளது உருவத் தோற்றத்தில் அவனுக்கு அவ்வளவு ஆசை இல்லை. அவளுடைய அன்பு நிறைந்த பார்வையையும் நம்பிக்கையையுமே அவன் பெரிதும் வேண்டினான். ஆண்மகனுக்குரிய கம்பீரத்தோடு இப்போது நடக்கவேண்டுமென்றும் பொறுப்பற்ற

தன்மையினால் பூர்ணிமையின் அன்புணர்ச்சிக்கிடையிலே அதிருப்தியை உண்டாக்கக் கூடாதென்றும் முன்பு தான் செய்த பிழையைத் திருத்திக் கொள்ளவேண்டுமென்றும் கருதினான்.

இவ்வளவும் அவனுடைய மனத்திரையிலே ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றி அவனுக்குப் புதிய நம்பிக்கையையும் உத்ஸாகத்தையும் உண்டாக்கின.

## ௬

பூர்ணிமை ஒருநாள் தற்செயலாகத் தன் சிறு குழந்தையுடன் தன் சொந்த வீட்டுக்கு வந்துவிட்டாள். விதவையாகிய அவளுடைய சிற்றன்னை தன்னுடைய தாயுடன் காலத்தைக் கழித்து வந்தாள். அவளும் இப்போது பூர்ணிமையின் வீட்டில் தங்கலானாள். இவ்வாறு அந்தப் பாழடைந்த வீடு மறுபடியும் குடிவீடாகிவிட்டது.

அமுதன் இந்தச் சமாசாரத்தைக் கேட்டவுடன் மிகவும் உத்ஸாகத்தோடு மதம்பிடித்தவனைப்போல அவளுடைய வீட்டுக்குச் சென்றான். அவன் தன் பாலியப்பருவ நினைவுகளை மனமாகிய பையில் ஜாக்கிரதையாக நிரப்பிக்கொண்டு போனான். தன் தோழனைக்கண்டு அவனோடு விளையாடுவதற்காக உடைந்த பொம்மைகளை எடுத்துக்கொண்டு ஓடும் ஒரு சிறு பாலகனின் நிலையை ஒத்திருந்தது அவன் நிலைமை.

ஆனால் அவளுடைய உருவத்தைக் கண்டவுடனே அவனுடைய முழு உல்லாஸமும் உத்ஸாகமும் தணிந்து விட்டன. அவனுடைய மனக்கோட்டைகளெல்லாம் இடிந்துவிட்டன. அவன் திகைத்துப்போய் நின்றான். பூர்ணிமை அவன் முன்பு தலைகுனிந்து நின்றாள். வெள்ளைப் புடைவையின் முன்றானையால் பாதி மறைக்கப்பட்டிருந்தது அவள் முகம். முதுகு வளைந்திருந்தது. புஜங்கள் நூலைப்போல மெலிந்திருந்தன. கால்களின் பின்பாகத்தில் நரம்புகள் வெளியே தோன்றிக்கொண்டிருந்தன. கண்களிலிருந்து நீர் ஆறாகப் பெருகிக்கொண்டிருந்தது. முகம் வெளுத்திருந்தது. சிதையிலே வைக்கப்பட்ட பிணம் நிற்பதுபோலக் காணப்பட்டாள் அவள்.

"வாடா அப்பா! இவளுடைய நிலைமையைச் சிறிது பார். உலர்ந்து ஈர்க்குச்சி யாகிவிட்டாள். ஒருகணமாவது கண்ணீர் நிற்பதேயில்லை. ஒரே ஒருவேளைமட்டும் உலர்ந்த ரொட்டிகளைச் சாப்பிடுகிறாள். பால், நெய், உப்பு, புளி எல்லாவற்றையும் விட்டுவிட்டாள். ஏகாதசி, ஞாயிற்றுக்கிழமை, மங்களவாரம்—இப்படி விரதங்கள் வேறே. தரையிலே பாயை விரித்துப் படுக்கிறாள். பொழுதுவிடிய ஒரு ஜாமத்துக்கு முன்னமே எழுந்து பூஜையும் பாராயணமும் செய்கிறாள். பிள்ளைகள் எவ்வளவோ சொன்னார்கள்; மற்றவர்களும் சொல்லிப் பார்த்தார்கள்; யார் சொல்லியும் அவள் கேட்கவில்லை. 'கடவுளே என் மாங்கலியத்தை நீக்கிவிட்டபோது மற்ற எல்லாம் மித்தியை' என்று சொல்லுகிறாள். மனசிலே சாந்தி உண்டாக வேண்டுமென்று இங்கே வந்தாள்; இங்கும் அழுவதைத் தவிர வேறு வேலையில்லை. 'கண்ணே, பூர்ணிமா! தலைவிதிப்படி நடந்துவிட்டது. மனசைத் தேற்றிக்கொள்.

உனக்கு இறைவன் குழந்தை குட்டிகளை அளித்திருக்கிறான். அவர்களைக் காப்பாற்று. ஈசுவரன் உனக்கு வேண்டிய ஸம்பத்தைக் கொடுத்திருக்கிறான். நீ நாலுபேருக்கு உணவளிக்கலாம். மனம் சுத்தமாக இருக்கவேண்டும். உடம்பை வருத்துவதனால் பயன் என்ன?' என்றெல்லாம் என்னால் ஆனவரையில் சொன்னேன். அவள் கேட்கவில்லை. ஒருவேளை நீ சொன்னால் கேட்பாளோ, என்னவோ?" என்று கூறினாள் பூர்ணிமையின் சிற்றன்னை.

அமுதன் வெளிப்பார்வைக்கு அசைவற்றவன்போல் இருந்தான்; ஆனால் உள்ளே உள்ளத்தைப் பிளக்கும்படியான வேதனை மறைந்திருந்தது. ந்த அஸ்திவாரத்தின்மேல் அவன் தன் வாழ்க்கைக் கட்டடத்தைக் கட்ட ஆரம்பித்தானோ, அது சரிந்துவிட்டது. ஜன்மமுழுவதும் தான் எந்தப் பொருளை உண்மையெனக் கருதியிருந்தானோ அது வாஸ்தவத்திலே கானல் நீர் அல்லது கனவு என்பதை அவன் இன்றே உணர்ந்தான். பூர்ணிமையின் கடுமையான அடக்கத்தையும் தவசிகளுக்குரிய ஆசாரத்தையும் கண்டு அவனுடைய உணர்ச்சிகளும் அன்பின் அலைகளும் நசித்தொழிந்தன. 'மண்ணைத் தெய்வமாக்கும் சக்தி மனத்துக்கு இருக்கிறதென்றால், மனிதனையும் தெய்வமாக்கும் வல்லமை அதற்கு உண்டு' என்ற ஒரு புதிய உண்மை அவனுக்கு இன்று புலனாயிற்று. வெறுக்கத்தக்க ஒரு மனிதனை—தன் கணவனை—பூர்ணிமை தேவனாக்கிப் பூஜித்து வந்தாள்.

"என்னைப்போன்ற தன்னலப்பித்தர்கள் தபஸ்வினிகளுக்கு என்ன ஆறுதல் கூறமுடியும்? சித்தி! அவள் அடியிணைகளைப் பணிவதே நம் கடமை; அவளுக்குச் சமாதானம் சொல்வதல்ல" என்று அமைதியுடனே பதிலளித்தான் அமுதன்.

"உன் குழந்தை இன்னும் உன்னைப்பற்றியே ஸதா கேட்டுக்கொண்டிருக்கிறது" என்று முகத்திரையை விலக்கிக்கொண்டே கூறினாள் பூர்ணிமை.



# துப்பறிபவன்

'அநுஷம்'

---

கணபதி ஏதாவது ஒரு புஸ்தகத்தைப் படித்தால் அதே மயமாக ஆகிவிடுவான். ஒரு வாரம்வரையில் அவனுடைய பேச்சில் அந்தப் புஸ்தகத்துச் சரக்கு அடிக்கடி வெளிவரும். கதையைப் படித்தால் அந்தக் கதாபாத்திரங்களுள் ஒருவரைப்போல நடந்து கொள்வான்.

துப்பறியும் நாவல்களில் அவனுக்கு ருசிதட்டத் தொடங்கியது. கானன்டாயில் எழுதிய ஷெர்லக் ஹோம்ஸைப் படித்தான். அவனே ஒரு ஷெர்லக் ஹோம்ஸ் ஆகிவிட்டான். எட்வர்டு ஆலன் போ எழுதிய கதைகளையும் படித்தான். அப்புறம் அவனுடைய ஊகங்கள் விரிய ஆரம்பித்தன. அவன் யாரைச் சந்தித்தாலும் அவனுடைய ஊகசக்தியைக் காட்டுவதில் தவறுவதில்லை.

"நீ ஏன் அவ்வளவு வேகமாக நடந்தாய்?" என்று நம்மை ஒரு கேள்வி கேட்பான்.

"நான் நடக்கவில்லையே!" என்று சொல்லிப் பாருங்கள்.

"நீ சொன்னாலும் நான் நம்புவேனா? அதோ பார்! உன் வேஷ்டித் தலைப்பு டாரென்று கிழிந்திருக்கிறது. நீ எங்கோ அவசரமாகப் போகிறாய். உன்னை அறியாமல் டாரென்று வேஷ்டி கிழிகிறது. வீட்டிற்கு வருகிறாய்; உன்னுடைய மனைவியோ அம்மாவோ பார்த்து, 'ஏன் இப்படிக் கிழித்துக் கொண்டாய்?' என்று கேட்கிறாள். அப்பொழுதுதான் உனக்கு வேகமாக நடந்தது ஞாபகத்துக்கு வருகிறது......" இப்படியே கதை சொல்ல ஆரம்பித்து விடுவான்.

ஒருநாள் ஒரு புது நண்பரை நான் என்னுடன் அழைத்துக் கொண்டு கணபதியின் வீட்டிற்குப் போனேன். என்னுடன் வந்த நண்பர் நெட்டையானவர். சிறிது கூனலுடையவர். கணபதியின் வீட்டிற்குப் போனபோது அவன் ஏதோ ஒரு துப்பறியும் நாவலைப் படித்து முடித்த சமயம். நாங்கள் போனவுடன் அவன் எங்களை வாருங்களென்று சொல்லக்கூட இல்லை. "துப்பறிபவனென்றாலே ஒரு தனி மனிதன். அவன் மூளையே அபாரம்" என்றான்.

என்னுடன் வந்த நண்பர் என்ன நினைத்தாரோ அறியேன். அப்புறம் உட்கார்ந்தோம்.

"இவர் உன்னுடைய நண்பர்; என்னுடைய நண்பரும் ஆகப் போகிறார்" என்றான் கணபதி.

"ஆம்" என்றேன் நான்.

தான் துப்பறியும் சாமர்த்தியத்தில் இந்த விஷயமும் ஒன்றென்று அவன் திருப்திப்பட்டுக் கொண்டான்.

"உங்களுடைய மனைவி மிகவும் குட்டையானவள் அல்லவா?" என்று கேட்டான் கணபதி.

என்னுடைய நண்பர் ஒன்றும் பேசாமல் சிரித்தார்.

"ஆமாம், நெட்டையாக இருப்பவர்களுக்கு நெட்டையான வர்களே மனைவிகளாகக் கிடைக்கிறார்களா? உங்களுக்கு மிகவும் இளமையிலேயே கல்யாணம் ஆகியிருக்க வேண்டும்" என்று மற்றொரு ஜோஸ்யத்தைச் சொன்னான். வந்தவர் அதற்கும் பதில் பேசவில்லை. சிரிப்பதோடே நின்றுவிட்டார்.

"உங்களுடைய உருவம் குட்டையும் நெட்டையுமாக இருந்தாலும் உங்கள் இருவர் மனமும் ஒத்து இருக்கும். உங்கள் மனைவியின் யோசனைகளை நீங்கள் அன்போடு ஏற்றுக்கொள்ளும் சுபாவம் உடையவர்கள்."

நண்பர் சிரித்தவண்ணமாக இருந்தார். எனக்கும் ஆச்சரியமாக இருந்தது.

"இவையெல்லாம் எப்படித் தெரிந்தன?" என்று கேட்டேன்.

"இதென்ன பிரமாதமா? ஊகத்தால் அறிந்ததுதான். துப்பறிபவர்கள் எவ்வளவோ சூக்ஷ்மமான விஷயங்களையெல்லாம் கண்டு பிடித்து விடுகிறார்கள்."

"என்ன காரணங்களால் இந்த விஷயங்கள் உனக்குத் தெரிந்தன?"

"காரணம் சாதாரணந்தான். நான் சொல்லும்போது ஆச்சரியமாகவே இருக்கும். கொஞ்சம் மூளையை உபயோகித்துப் பார்த்தால் சாதாரணமாக எல்லோருக்கும் தெரியவரும்."

நான் மூளையில்லாதவனென்று அவன் நினைத்து அப்படிச் சொன்னானென்று நீங்கள் எண்ண வேண்டாம். தன்னுடைய மூளை அவ்வளவு சிறந்ததென்பதை வேறு வகையாக அவனால் தெரிவித்துக் கொள்ள முடியவில்லை!

"சொல்கிறேன் கேள்: இவரைப் பார்த்தவுடனே இவருடைய நெட்டையான ஆகிருதியில் ஒரு சிறு கூனல் தென்படுகிறது.

இது உடம்பிலே உண்டானதல்ல. குனிந்து குனிந்து பழகியதால் இப்படியாயிருக்கிறது. குனிந்து குனிந்து பேசிக்கொண்டிருந்தால் இப்படித்தான் ஆகும். இவர் மிகவும் சுவாரஸ்யமாகத் தினந் தோறும் ஒருவரோடு பேசவேண்டு மென்ருல் அவர் இவருடைய மனைவியாகத்தான் இருக்கவேண்டும். அவளோடு தினந்தோறும் குனிந்து குனிந்து பேசும்படி அவள் குட்டையாக இருப்பதனுல் தான் இவருக்குக் கூனல் உண்டாயிருக்கிறது. கூனல் விழவேண்டு மானுல் பல வருஷங்கள் குனிந்துகொண்டு பேசிய வழக்கம் இருக்கவேண்டும்; அதனுல் இவருக்கு இளைய வயதிலேயே அந்தக் குட்டையான மனைவி இவரோடு வாழத் தொடங்கியிருக்கவேண் டும். இவ்வளவு சிரத்தையாக இவர் குனிந்து பேசுவதும் அவள் வார்த்தைகளைக் கேட்பதுமாக இருப்பதில் இருவருடைய மன வொற்றுமையும் விளங்கவில்லையா? இதை முட்டாள்கூட ஊகித்து விடலாமே.''

மறுபடி என்னை முட்டாளென்று அவன் வைவதாக ஸந் தேகம் கொள்ளாதீர்கள்!

"உங்களுக்குக் குழந்தைகள் உண்டோ?'' என்று கணபதி அவரை நோக்கிக் கேட்டான்.

"அதையும் நீயே சொல்லி விடேன்'' என்றேன் நான்.

"அது ஒரு பிரமாதமான காரியமில்லை. இவருக்குக் குழந் தையே இல்லை யென்றுதான் சொல்லவேண்டும். குழந்தை இருந் தால் இவர் இவ்வளவு ஸந்தோஷத்தை வெளியிடும் முகத்தோடு இருக்க மாட்டார்'' என்று சொல்லிவிட்டு, "ஏன்? நான் சொல் வது எப்படி?'' என்று வெற்றிகொண்ட தொனியில் கேட்டான்.

"நீங்கள் கடைசியில் சொன்னது பரம வாஸ்தவம். எனக்குக் குழந்தைகளே இல்லை.''

"ஸந்தோஷம். மற்ற விஷயங்களிற்கூட அவ்வளவு அதிக வித்தியாசம் இராது.''

"வித்தியாசமென்ன? நான் பிரம்மசாரி! எனக்குப் பெண் டாட்டியும் இல்லை; பிள்ளைகளும் இல்லை.''

"பார்த்தீர்களா? அப்பொழுதே நினைத்தேன். 'இவர் முகத்தில் அதிகச் சுருக்கமில்லையே! என்ன இருந்தாலும் பெண் டாட்டி நகைக்கும் புடைவைக்கும் நச்சுப்பண்ணுமல் இருப்பாளா? இவர் பிரம்மசாரியாகத்தான் இருக்கவேண்டும்' என்று ஊகித் தேன். ஆனுலும் இப்போதுதான் என்ன? இவருக்குப் பிள்ளை கள் இல்லை யென்பது மட்டும் நிச்சயமாய்விட்டது.''

அவனேடு மேலே என்ன பேசுவது?

---

# மரண தாகம்

'குரு'

---

[முன்னெல்லாம் சென்னை ஆஸ்பத்திரிகளிலுள்ள பிணக்கிடங்குகளில் சாதாரணமாக ஜலம் வைக்கப்பட வேண்டுமென்ற கண்டிப்பு இல்லை. ஆனால் அடியிற் குறிப்பிட்ட ஸம்பவம் நடந்தபின் அரசாங்கத்தார் அவசியம் சுத்த ஜலம் வைக்கவேண்டுமென்று ஓர் உத்தரவு பிறப்பித்துவிட்டார்களாம்.]

நான் சென்னை வைத்தியக்கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தபோது ஒருநாள் எங்கள் போதகர் 'சுத்தம்' என்ற விஷயமாகப் பேசிக்கொண்டிருந்தார்:

"முக்கியமாக வைத்திய மாணவர்கள் பரம ஜாக்கிரதையுடையவர்களாகவும் சுத்தமுடையவர்களாகவும் இருக்க வேண்டியது அவசியம். இந்த இரண்டும் இல்லாதவன் வைத்தியத் தொழிலில் சோபிக்கமாட்டான்; ஆபத்துக்கும் ஆளாக நேரும். இதைப் பற்றிப் பிரஸ்தாபிக்கும்போது இந்த ஊரிலுள்ள பெரிய ஆஸ்பத்திரி ஒன்றில் சில வருஷங்களுக்கு முன் நடந்த ஒரு ருசிகரமான ஸம்பவம் என் நினைவுக்கு வருகிறது" என்றார்.

அதுவரை அசிரத்தையுடன் அவர் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்த நாங்கள் எல்லோரும், அவருடைய கடைசிவார்த்தைகளைக் கேட்டதும் ஆவலுடன், "அதென்ன ஸார், சொல்லுங்கள்" என்று ஒருமுகமாகக் கேட்டோம்.

அவர் புன்னகை புரிந்தவண்ணம் ஒரு கனைப்புக் கனைத்துவிட்டு மேலே பேச ஆரம்பித்தார்:

"அப்பொழுது இந்த ஊரில் காலரா பயம் அதிகமாயிருந்தது. காலரா கண்ட அநேகம் பேர் ஆஸ்பத்திரிகளில் சிகித்ஸைக்காகக் கொண்டு வரப்படுவதால் அங்குள்ள வைத்தியர்களுக்கு இரவும் பகலும் ஓயாமல் வேலை. கடைசி நேரத்தில் கொண்டுவருவதால் என்னதான் 'பர்மாங்கனேட் இன்ஜெக்ஷன்' செய்தபோதிலும் முக்கால் வாசிப் பேர் பிழைப்பதில்லை. ஒருநாள் ராத்திரி வெகுநேரம் வரை முன்னே சொன்ன அந்தப் பெரிய ஆஸ்பத்திரியில் வைத்தியர்களுக்கு வேலையிருந்தது. பரிசோதனை முடிந்து அவர்கள் அலுத்துத் தங்கள் தங்கள் இடத்திற்குப் போய்விட்டார்கள்.

அவர்கள் போனதும் அந்தப் பிணங்களையெல்லாம் ஆஸ்பத்திரி ஆள் ஒருவன் பிணக்கிடங்கில் போட்டுப் பூட்டிவிட்டுப் போய் விட்டான்.

"இராத்திரி ஆஸ்பத்திரியின் அருகிலுள்ள ஸ்டேஷன் கோபுரத்துப் பெரிய கடிகாரம் 'டாங்' என்று ஒரு மணி அடித்தது. அப்பொழுது பிணக்கிடங்கினுள் ஏதோ சப்தம் கேட்டது. ஆனல் வெளியிலிருந்த காவலாளி நன்றாகக் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்ததால் அவனால் இதைக் கவனிக்கமுடியவில்லை.

"கிடங்கினுள் இருளில் ஓர் உருவம் பிணக்குவியலிலிருந்து எழுந்து சுற்றுமுற்றும் பார்த்தது. ஒரே இருட்டாக இருந்ததால் அதற்கு ஒன்றும் புரியவில்லை. எழுந்து நின்று தன்னைச் சுற்றி லும் தடவித் தடவிப் பார்த்தது. பிறகு அந்த அறை முழுவதும் எதையோ தேடி ஆவலுடன் அலைந்தது. கடைசியாகக் கிடங்கின் வாயிற்படியருகில் ஒரு சிறு பீங்கான் தொட்டியில் அதன் கை தற்செயலாகப் படவே ஆத்திரத்துடன் அதைக் கையிலெடுத்துக் கொண்டு அதிலிருந்த திரவ பதார்த்தத்தை 'மடக் மடக்' என்று குடித்துவிட்டு அங்கேயே அயர்ந்து படுத்துக்கொண்டது. அதற்கு அப்பொழுது இருந்த தாகத்தில் அந்தத் தொட்டியி லிருந்த திரவ பதார்த்தத்தின் ருசி ஒன்றும் தெரியவில்லை.

"மறுநாள் காலையில் பிணங்களை அப்புறப்படுத்துவதற்கு வேலையாள் கதவைத் திறந்து உள்ளே நுழைந்தான். உள்ளே வாயிற்படியருகில் ஓர் உருவம் உட்கார்ந்திருப்பதைக் கண்டு 'ஓ' வென்று அலறிப் புடைத்துக்கொண்டு வெளியில் வந்தான். இந்தக் கூச்சலைக் கேட்டு எல்லோரும் அவ்விடத்திற்கு ஓடி வந்தார்கள். வாஸ்தவமாகவே ஒரு மனிதன் அறையினுள் திக்பிரமை பிடித்து உட்கார்ந்திருந்தான். அவனருகில் கை கழுவுவதற்கு வைக்கப் பட்ட 'பெர்மாங்கனேட்' கலந்த அழுக்குத் தண்ணீர்த் தொட்டி காலியாக இருப்பதையும் கண்டார்கள். அப்புறம் அருகில் வந்து பார்க்கையில், முந்தின இரவு உயிர் போய்விட்டவன் என்று டாக்டர்களால் கைவிடப்பட்டுக் கிடங்கில் தள்ளப்பட்ட ஆள் என்பது தெரிந்தது. இரவு ஒரு மணிக்குத் தான் எழுந்ததும் தாகம் அதிகமாக எடுத்ததாகவும் உடனே அந்தத் தண்ணீரைக் குடித்ததாகவும் அவன் சொன்னான்.

"அது முதல் எந்த ஆஸ்பத்திரியிலும் பிணக்கிடங்குகளில் சுத்தமான ஜலம் ஒரு தொட்டி நிறைய வைக்கப்படவேண்டும் என்று அரசாங்கத்தார் உத்தரவிட்டுவிட்டார்கள்" என்று சொல்லி முடித்தார்.

“இதெல்லாம் நிஜந்தானா, ஸார்? அப்படியே நடந்தது போலச் சொல்லுகிறீர்களே?” என்று நாங்கள் அவரைக் கேட்டோம்.

அச்சமயம் எங்கள் கலாசாலையிலிருக்கும் வேலையாட்களுள் ஒருவனான கிழவன் அங்கமுத்து வைத்தியச்சாமான்கள் சிலவற்றை எடுத்துக்கொண்டு உள்ளே நுழைந்தான்.

போதகர், “நான் ஏன் பொய் சொல்ல வேண்டும். அப்படிச் சந்தேகம் இருந்தால் அவனையே கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள்” என்று அங்கமுத்துவைச் சுட்டிக் காட்டினார்.

ஆச்சரியமடைந்தவர்களாய் நாங்கள் எல்லோரும் உடனே அவனைச் சூழ்ந்துகொண்டு, “அங்கமுத்து, நீயா அந்த ஆள்?— உன் வாயாலேயே உன் கதையைக் கேட்டால் இன்னும் ஸ்வாரஸ்யமாக இருக்கும். சொல்லு!” என்று அவனைப் பிய்த்தெடுக்கத் தொடங்கிவிட்டோம்.



# சிபார்சு

## (ஓர் ஒற்றையங்க நாடகம்)

### 'குகன்'

---

**நாடக பாத்திரங்கள்**

| | | |
|---|---|---|
| சந்திரசேகர ஐயர் | ... | ஊரில் ஒரு பிரமுகர் |
| கேசவ்லால் மோஹன்லால் | ... | ஒரு கம்பெனியின் மானேஜர் |
| பராங்குச முதலியார் | ... | சந்திரசேகர ஐயர், கேசவ்லால் இருவருக்கும் நண்பர் |
| எஸ். கோபால்சாமி | ... | ஒரு பட்டதாரி |
| முனியன் | ... | சந்திரசேகர ஐயரின் வேலையாள் |

---

காட்சி: 1. நேரம்: காலை மணி 7.

[சிறிய, ஆனால் அதிக ஆடம்பரமான அலங்கரிப்பையுடைய ஓர் அறை. அதன் மத்தியிலே ஜன்னலுக்கருகே, ஒரு நாற்காலி. அதில் சாய்ந்தபடி 'பேபர்' படித்துக்கொண்டிருக்கிறார் சந்திரசேகர ஐயர்.

அவருக்கு நேர் எதிராக, மரியாதையான தொலைவிலே, அதாவது வாயிற்படியண்டை வேலைக்கார முனியன் நின்றுகொண்டிருக்கிறான். ஐயர் அவனைத் தம் கடைக்கண்ணால் கவனிக்கிறார்.]

சந்திரசேகர ஐயர்: (இருமிக்கொண்டே) என்னடா, அது? என்ன? நான் சொன்ன வேலையெல்லாம் விட்டுவிட்டு இங்கே சும்மா மரமாட்டமா நிக்கிறே?

முனியன்: இல்லிங்க, எசமான். யாரோ ஒரு புள்ளாண்டாங்க. பிராம்மணர் போலிருக்கு. ஒரு நாழியாக் காத்துக்கிட்டு இருக்காரு. ஒங்களை அவசரமாப் பார்க்கணுமாம்.

சந்திரசேகர ஐயர்: (கொஞ்சம் நிதானித்தவராய்த் தமக்குள்) பிள்ளையாண்டான் பிராம்மணன்? (வேலைக்காரனிடம்) யாரடா அது? மூக்குக் கண்ணாடி போட்டுக்கொண்டு வட வடன்னு......

முனியன்: ஆமாங்க, ஆமாங்க அவர்தானுங்க. கையிலே, நீங்க படிப்பிங்களே, அந்தமாதிரி பத்திரிகை கூட வச்சிருக்காருங்க!

சந்திரசேகரர்: சரி, அவரை உள்ளே வரச் சொல்லிவிட்டு உன் வேலையைக் கவனி போ! நான் வெளியே போவதற்குள் அந்தத் தாழ்ப்பாள் கைப் பிடி—எல்லாவற்றிற்கும் 'பிராஸோ' போட்டாகி விடவேண்டும். தெரியுமா?

[தலையாட்டிக்கொண்டே வேலைக்காரன் வெளியே போகிறான். சில நிமிஷங்களுக்கெல்லாம் சந்திரசேகர ஐயரின் நண்பரான காலஞ் சென்ற சேஷாத்திரி ஐயங்காரின் மகனும் ஒரு பட்டதாரியுமான எஸ். கோபால்சாமி, பி. ஏ., உள்ளே நுழைகிறான்; ஐயருக்குப் பயபக்தி யுடன் ஒரு 'சலாம்' வைக்கிறான்.]

சந்திரசேகர ஐயர்: (அவன் வணங்கியதை அங்கீகரித்த பாவனையாகத் தம் தலையை அசைத்துவிட்டு) வா அப்பா, வா உட்காரு. எங்கே இந்தப் பக்கம் அபூர்வமாய்?

கோபால்சாமி: ஒன்றுமில்லை; சும்மாத்தான். பார்த்து ரொம்ப நாளாச்சே; பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்.

சந்திரசேகரர்: (ஒருவிதமான சிரிப்புச் சிரித்து) ஆத்தில் எல்லோரும் சௌக்கியந்தானே?

கோபால்சாமி: சௌக்யந்தான்......தாத்தா கூட உங்களைப் பார்க்கவேணும் என்று சொல்லிக்கொண்டிருந்தார்.

சந்திரசேகரர்: (முகம் மாறுகிறது) உங்கள் தாத்தாவா? என்னையா? என்ன விசேஷமோ?

கோபால்சாமி: (தயங்கித் தயங்கி) உம்... வந்து... கேசவ்லால் ராம்லா லுக்கு ஒரு 'டைப்பிஸ்டு' வேணுமாம்; கேள்விப்பட்டேன்.

சந்திரசேகரர்: அப்படியா? எனக்குத் தெரியாதே? முந்தாநாள் கூட நான் கேசவ்லாலுடன் பேசிக்கொண்டிருந்தேன். ஏதோ வியாபாரம் மந்தமாய் இருக்கிறதென்றும், 'ஆட்களிலேயே ஒருவர் இருவரை எடுத்துவிடலாமா என்று பார்க்கிறேன்' என்றும் சொன்னானே யொழியப் புதிகாக யாரையும் வைக்கிற யோசனை யொன்றும் என்னி டம் அவன் சொல்லவில்லையே?

கோபால்சாமி: வைக்கப்போவது என்னவோ உண்மைதான். ஆள் வேண்டும் என்பதாக இதோ இந்தப் பத்திரிகையில்கூட அவர்கள் போட்டிருக்கிறார்கள். (தன் கையிலிருந்த 'பேபரை'ப் பிரித்து ஒரு விளம்பரத்தைக் காட்டுகிறான். ஐயர் அதை வாசிக்கிறார்.) நீங்கள் மனசுவைத்தால் முடியும் என்று எல்லோரும் சொல்லுகிறார்கள்.

சந்திரசேகர ஐயர்: (படித்துக்கொண்டிருந்ததைக் கீழே வைத்துவிட்டு அல க்ஷியமாக) உனக்கு இந்தவியாபாரிகளின் விஷயமே ஒன்றும் தெரியாது போலிருக்கிறது. நிஜமாகவா அவர்களுக்கு ஆள் வேண்டும் என்று நீ நினைக்கிறாய்? கிடையவே கிடையாது! போன வருஷமே அவர்கள் கம்பெனி ரொம்ப அடி வாங்கிவிட்டது. இப்பவும் வாங்கிக்கொண்டு தான் வருகிறது. வாடிக்கைக்காரர்களுக்கும் லேவாதேவிக்காரர் களுக்கும் சம்பந்தப்பட்ட மற்றவர்களுக்கும் இது தெரியாமலிருக்க

என்ன என்னவோ வித்தைகள் எல்லாம் அவர்கள் கையாண்டு பார்க்கிறார்கள். தங்கள் கம்பெனியில் வியாபாரம் அதிக 'முடுக்கு'ப் போலவும், இருக்கிற ஆட்களினாலேயே நிர்வகிக்க முடியவில்லை போலவும் அவர்கள் தற்போது அனைவருக்கும் காட்டுகிறார்கள். இதெல்லாம் அந்த ஏமாற்றல் பேரமே ஒழிய வேறு ஒன்றுமில்லை.

**கோபால்சாமி:** (அவர் பதிலினால் அதிருப்தி யடைந்தாலும் அதை வெளிக்குக் காட்டாமல்) இருந்தாலும் கேசவ்லாலிடம் ஒரு வார்த்தை சொல்லிப் பார்த்தால்......

**சந்திரசேகரர்:** என்ன பிரயோஜனம்? நான் இதைப் பற்றிப் பிரஸ்தாபித்தால், சற்றுமுன்தான் வேறு ஓர் ஆளை வைத்ததாகச் சொல்வான். உண்மையைப் பார்க்கப் போனால் ஒரு 'டிபார்ட்மெண்ட்' ஆளை இன்னொரு 'டிபார்ட்மெண்டி'ல் போட்டுவிட்டு, முன்னால் வேலை செய்து கொண்டிருந்தவனை ஏதாவது குற்றங் காட்டி வீட்டுக்கு அனுப்பியிருப்பான். இதுதான் கம்பெனி உத்தியோகம்!

**கோபால்சாமி:** என் குடும்ப நிலை தற்போது ரொம்பக் கஷ்டமான தசையில் இருக்கிறது. ஒரு பைசாக்கூட வருமானம் கிடையாது. என் மாமனாரும் பணம் அனுப்பி வந்ததை நிறுத்திவிட்டார்.

**சந்திரசேகரர்:** உம்...என்ன பண்ணுவது? எதற்கும் காலம் சரியாயிருக்க வேண்டும்.

[இந்தச் சமயத்தில் சமையற்கார ஐயர் ஒரு கையில் காபியும், இன்னொரு கையில் இட்டிலியும் எடுத்துக்கொண்டு வருகிறார். மேலும் நிற்பது அழகல்லவென்று விடைபெற்றுக்கொண்டு வெளியே போகிறான் கோபால்சாமி.]

---

**காட்சி: 2.** **நேரம்: மாலை மணி 4-30.**

['ஈஸ்டர்ன் கபே'யின் மேல் மாடி. பளபளவெனத் தளவரிசை போடப்பட்ட ஒரு விசாலமான ஹால். அதிலே எங்கே பார்த்தாலும் சலவைக்கல் மேஜைகள்; நவநாகரிக நாற்காலிகள். ஒரு பக்கம் ரேடியோ பாடுகிறது. இன்னொருபக்கம் 'ஙொய்' என்று மின்சாரவிசிறியானது ரேடியோவின் பாட்டில் போதாத சுருதியைப் பூர்த்தி செய்கிறது. சந்திரசேகர ஐயரும் பராங்குச முதலியாரும் நேருக்கு நேராக உட்கார்ந்து கொண்டு காபி அருந்துகின்றனர்.]

**முதலியார்:** என்ன பிரதர், நம் வீட்டிலுந்தான் காபி வைக்கின்றனர்; இந்த ஊரில் இன்னும் எத்தனையோ ஹோட்டல்களிலுந்தான் காப்பி வைக்கின்றனர். என்றாலும் அவையெல்லாம் 'ஈஸ்டர்ன் கபே'யின் காப்பியாகுமா? ஹ ஹ்ஹ! ஹஹ!! (சிரிக்கிறார். சப்ளை செய்கிறவரைப் பார்த்து) ஐயர்! அவருக்கு இன்னொரு கப் காபி.

['ஐயர்' இரண்டு கோப்பைகளில் இரண்டு கப் காப்பி கொண்டு வந்து, ஒன்றைச் சந்திரசேகர ஐயர் முன்னும் மற்றொன்றை முதலியார் முன்னும் வைத்துவிட்டுப் போகிறார்.]

சந்திரசேகரர்: (ஸ்பூனால் காபியை அருந்திக்கொண்டே) இன்றைக்கு ஒரு விஷயம் கேள்விப்பட்டாயா நீ?

முதலியார்: இல்லையே; என்ன? என்ன?

சந்திரசேகரர்: நம் தேவசுந்தரி......

முதலியார்: உம்...உம்...

சந்திரசேகரர்: ரேடியோவில் பாடுகிறாளாம், ஆறு மணிக்கு.

முதலியார்: புரோகிராம் போட்டிருக்கிறதா?

சந்திரசேகரர்: ஆமாம். நான்கூடப் பார்த்தேன்.

முதலியார்: அடி சக்கை! அப்படியானால் இன்றைக்கு டென்னிஸ் கோர்ட் கான்ஸல். மணி ஐந்து அடித்ததோ இல்லையோ, 'டான்னு' மாதவன் வீட்டுக்குப் போய்விடவேண்டும்.

சந்திரசேகரர்: அந்த நேரத்தில் அவன் எங்கேயாவது வெளியே போயிருந்தால்?

முதலியார்: தேவசுந்தரிபாய் வாய்ப் பாட்டென்றால் ரேடியோ வைத்துக் கொண்டிருக்கிறவர்கள் வேறு என்ன வேலையைக் கவனிக்க முடியும்?

சந்திரசேகரர்: அப்படியானால் அவன் வீட்டில்தான் இருப்பான் என்கிறாய் நீ?

முதலியார்: சந்தேகமென்ன?

சந்திரசேகரர்: .....ஆமாம். நான் உன்னை ஒரு விஷயம் கேட்கவேண்டுமென்றிருந்தேன்.... (காதோடு) தேவசுந்தரியைக் கதாநாயகியாக வைத்துக் கேசவ் ஒரு படம் தயாரிக்கப் போகிறானமே? அது உண்மை தானா?

முதலியார்: (சற்று உரக்க) என்னப்பா, கதை அளக்கிறாய்? உனக்குத் தெரியாததா எனக்குத் தெரிந்துவிடப் போகிறது? கேசவ்லால் என்றால் நீ; நீ என்றால் கேசவ்லால். அப்படியிருக்க, உனக்குச் சொல்லாமலா அவன் எனக்குச் சொல்லியிருக்கப் போகிறான்?

சந்திரசேகரர்: பராங்குசம், என்னைப்பற்றி நீ வேறுவிதமாக நினைக்காதே. உண்மையைச் சொல்லுகிறேன்: நானும் அவனும் எவ்வளவோ அன்யோன்யமாய் இருந்துங் கூட, இது சம்பந்தமாக அவன் என்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை.

முதலியார்: ஆனால், என்னைப் பற்றியவரையில் ஒன்று: அவனுக்கும், அவளுக்கும் இருக்கிற உறவிலே அவன் கதாநாயகனாக நடிக்கப் போகிறான் என்றுசொன்னால்கூட நான் நம்பத் தயார்தான்! ஹஹ்ஹ (சிரிக்கிறார்).

சந்திரசேகரர்: கேசவ் என்றவுடன் ஞாபகம் வந்தது: நான் சொன்னேனே அந்தச் சங்கதியைக் கொஞ்சம் கவனித்தாயா? (கோப்பையில் மீதியாக இருந்த காபியைப் 'பிளேட்'டில் சாய்க்கிறார்.)

முதலியார்: எதை?

சந்திரசேகரர்: அதுதான்: தன் கம்பெனிக்கு ஒரு டைப்பிஸ்டு வேண்டும் என்று அவன் சொன்னதாகச் சொன்னேனே...

முதலியார்: உம்..உம்..கவனித்தேன். எங்கள் தெருவுக்கு மூன்றும் தெருவிலே ஒரு பையன் இருக்கிறுன். பாவம்! ரொம்ப ஏழை. என்னேச் சும்மா தொந்தரவு பண்ணிக்கொண்டிருந்தான், 'ஏதாவது சான்ஸ் இருந்தால் சொல்லுங்கள். சொல்லுங்கள்' என்று. அவனேயே ஏற்பாடு பண்ணிவிடலாம் என்று பார்க்கிறேன். உன் அபிப்பிராயம் என்ன?

சந்திரசேகரர்: ரைட்டோ! கேசவ்லால் கோருகிற யோக்கியதைகள் இருக்கின்றனவென்ருல் சரிதான். எனக்கு ஆக்ஷேபனே கிடையாது.

முதலியார்: அதைப்பற்றிக் கொஞ்சங்கூடச் சந்தேகம் வேண்டாம். பிள்ளேயாண்டான் ரொம்ப யோக்கியன்; பரம சாது; நல்ல உழைப்பாளி.

சந்திரசேகரர்: சரி, நாம் போவோமா? ஐந்தடிக்க இன்னும் பத்துநிமிஷந் தான் இருக்கிறது.

[சப்ளே செய்தவர் ஒரு பில்லேக் கொண்டுவந்து கொடுக்கிருர். பணத்தைக் கொடுத்துவிட்டு, அவர்கள் இருவரும் வெளியேறுகின்றனர்.]

---

காட்சி: 3. நேரம்: காலே மணி 9-30.

[கேசவ்லால் ராம்லால் கம்பெனியாரின் பிரதம 'ஆபீஸ்' அறை. ஸ்தாபனத்தின் முக்கியப்பங்குதாரரான ஸ்ரீகேசவ்லால் மோஹன்லால் சேட் சுழல் நாற்காலி ஒன்றில் உட்கார்ந்துகொண்டிருக்கிருர். அவருக்கு முன்னே ஒரு விசாலமான மேஜை. அதில் கடிதங்கள் சில அலங்கோலமாய்க் கிடக்கின்றன. தலைமைக் குமாஸ்தா சங்கர ஐயர் பென்சிலும் நோட்டுமாக முதலாளி அருகே நிற்கிருர்.

கேசவ்லால்: 'ஜி. எம். சி'க்கு நாம் கடைசியாக எப்போது கடிதம் எழுதியது?

சங்கர: மாணிக்கம் செட்டி அண்டு ஸன்ஸுக்கு இதோ... (ஒரு குறிப்புப் புத்தகத்தைப் புரட்டுகிருர்.) பிப்ரவரி இருபத்தைந்து.

கேசவ்லால்: அப்படியாளுல் போன மாதக் கடைசியில்...?

சங்கரர்: ஆம்.

கேசவ்லால்: அவர்களுக்கு என்ன கமிஷன் தருவதாகத் தெரிவித்திருந்தோம்?

சங்கர: நூற்றுக்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு முப்பதும், அதற்குட்பட்டவைகளுக்கு......

கேசவ்லால்: இருபத்தைந்தும்?

சங்கர: ஆமாம். (ஒரு டைப் அடித்த கடிதத்தைக் கேசவ்லால் சங்கரஐயரிடம் கொடுக்கிறார். அவர் அதைப் பார்க்கிறார்.) முப்பத்தைந்து கேட்கிறார்கள்.

கேசவ்லால்: (எரிச்சலுடன்) கத்தரிக்காய், வாழைக்காய் விற்கவேண்டியவர்கள்எல்லாம் 'பிஸினஸ்'பண்ண வந்துவிட்டால்! (இருவரும்மௌனம் சாதிக்கிறார்கள்.) அவர்களுக்கு என்ன பதில் எழுதுவது! என்னைக் கேட்கவேண்டுமோ? கண்டிப்பாய் முடியாது என்று தெரிவி. அவர்களுக்குச் சரக்கைக்கொடுப்பதைவிடக் கடலிலே கொட்டலாம். இதோ...... ......(இரண்டு கடிதங்களைக் கொடுக்கிறார்.) இவர்களுக்கு நம் 'கொட்டேஷன்ஸ்' அனுப்பிவிடு.

சங்கர: சரி.

கேசவ்லால்: சாலப்பன் பிரதர்ஸுக்கு எப்போது சரக்கு அனுப்புவதாய் எழுதினாய்?

சங்கர: அவர்களுக்கு நான் இன்னும் ஒன்றும் எழுதவில்லை.

கேசவ்லால்: ஏன்?

சங்கர: கப்பல் வரும் தேதியை நிர்ணயித்துக்கொண்டு பதில் பேசலாம் என்று நீங்கள்தானே சொன்னீர்கள்?

கேசவ்லால்: சரி! இன்றைக்கு எழுதிவிடு, 'பூகன்வீல்' வந்தபிறகுதான் பேல்கள் கிடைக்கும் என்று.

[சங்கர ஐயர் கடிதங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு போக, கேசவ்லால் வெகு ஆயாசத்தோடு தம் நாற்காலியில் சாய்கிறார். ஒரு சிகரெட் பற்றவைக்கிறார். கதவுப்பக்கமாக டக்டக் என்று சப்தம் கேட்கிறது. அப்போதுதான் சீமைக் கப்பலிலிருந்து இறங்கிய துரை போல் உடை உடுத்திக்கொண்டு, சந்திரசேகர ஐயர் உள்ளே நுழைகிறார்.]

கேசவ்லால்: ஹல்லோ, மிஸ்டர் சேகர்! வரவேண்டும், வரவேண்டும்! (இருவரும் கை குலுக்குகிறார்கள்.)......இப்படி உட்காருங்கள். (ஓர் ஆசனத்தைச் சுட்டிக் காட்டுகிறார். சேகர் நாற்காலியில் அமர்கிறார்.) அன்றைக்கே வருவதாகச் சொன்னீர்களே; எங்கே காணோம்?

சந்திர: மன்னிக்க வேணும். நான் வரவேண்டுமென்பதாகத்தான் இருந்தேன். அதற்குள் ஓர் அவசரவேலை யிருந்ததால் ஊரைவிட்டு வெளியே போகவேண்டியதாய்விட்டது.

கேசவ்லால்: ஓஹோ!

சந்திர: (மேஜையின்மீது இருந்த கடிதங்களைப் பார்த்து) என்ன? இன்றைக்கு மெயில் லேட்டா என்ன?

கேசவ்லால்: இல்லையே; வழக்கம்போல் சீக்கிரமே வந்துவிட்டதே. ஏன்?

சந்திர: இப்போதுதான் கடிதங்களை யெல்லாம் பார்ப்பதுபோல் இருந்தது; அதனால் கேட்டேன்.

கேசவ்லால்: இல்லை. அப்பொழுதே பார்த்தாய்விட்டது. (திடீரென்று எதையோ நினைத்துக்கொண்டு) சேகர்! நீங்கள் எனக்காக எடுத்துக் கொண்ட சிரமங்களுக்கு ரொம்ப ரொம்ப வந்தனம்.

சந்திர: (அவர் குறிப்பை அறிந்தவராய்) அப்பா, பிரமாத சிரமம்! இந்தக் காலத்தில் ஒரு வேலை காலியாய் இருக்கிறதென்றால் அதற்கு ஆள் கிடைப்பதுதானா கஷ்டம்?

கேசவ்லால்: கஷ்டமில்லைதான். ஆனால் கிடைக்கிறவர்கள் நம்பிக்கையுடையவர்களாயும், நல்ல யோக்யதைகள் உடையவர்களாயும் இருக்க வேண்டும்.

சந்திர: அந்த யோக்யதைகள் என்னால் சிபார்சு செய்யப்பட்ட பையனிடம் உண்டு என்பதாக நான் உறுதி கூறுகிறேன்.

கேசவ்லால்: அதற்காகத்தான் என் நன்றியறிதலைத் தங்களுக்குச் செலுத்துவது.

சந்திர: (சந்தோஷம் தாங்கமுடியாமல்) ஒன்றும் இல்லை. நீ பத்திரிகையில் ஆள் தேவை என்று விளம்பரம் போட்டாயா; அன்றைக்கு மறுநாள் எத்தனை பேர்கள் என்னை வந்து தொந்தரவு பண்ணினார்கள் என்று நினைக்கிறாய், தங்களைச் சிபார்சு செய்யும்படியாக?

கேசவ்லால்: நாம் இருவரும் நெருங்கிய நண்பர்கள் என்பதுதான் உலகம் அறிந்த உண்மையாயிற்றே?

சந்திர: என்னுடன் வாசித்த சேஷாத்திரியின் மகன்கூட ஒரு நாள் முழுவதும் என் பிராணனை வாங்கிக்கொண்டிருந்தான். இருந்தாலும் அவர்களையெல்லாம் சிபார்சு செய்ய எனக்கு இஷ்டமில்லை.

கேசவ்லால்: நீ என்ன சொல்லி அனுப்பினாய்?

சந்திர: தெரியாதா! சாக்குப் போக்குச் சொல்லி அனுப்பிவிட்டேன்...... சேஷாத்திரியின் மகன் யோக்கியமானவன்தான். அவன் அம்மா, தாத்தா, எல்லாரையுங்கூட எனக்கு நன்றாகத் தெரியும். எங்கள் வீட்டுக்கு எதிர்வீட்டில்தான் குடித்தனம் இருந்தார்கள்........ஆனால் அவர்களெல்லோருமே ஒரு போக்கு. அந்தப் பயலின் அப்பன் கொஞ்சம் கர்வி. பிறரை மதிக்கமாட்டான். அதேமாதிரி தான்............

[கையில் சில டைப் அடித்த கடிதங்களுடன் உள்ளே நுழைகிறார் டைப்பிஸ்டு, முதலாளியின் கையெழுத்தை வாங்கிச் செல்வதற்காக. சந்திரசேகர ஐயர் பார்வை அவர்மேல் விழுகிறதோ இல்லையோ, ஐயர் புருவம் நெற்றிக்கேறுகிறது. கண்விழிகள் பிதுங்குகின்றன. அவரை அறியாமல் அவர் வாயிலிருந்து 'கோ - பால் - சாமி' என்ற வார்த்தை விட்டுவிட்டு வெளிவருகின்றது.]

திரை

---

# அணைந்த விளக்கு

"கும்பன்"

---

"அப்பான்னு ஆரம்மா?"

"அடுத்த வீட்டுக் கிருஷ்ணனுடைய அப்பா இருக்கிறார் அல்லவா? அவரைப்போல உனக்கும் ஓர் அப்பா இருக்கிறார்."

"அவர் எங்கே அம்மா?"

"அவர் ஊருக்குப் போயிருக்கிறார்."

"எப்போ வருவாரம்மா?"

"சீக்கிரத்திலே வந்து விடுவார்."

அப்படிச் சொல்லும்போது லக்ஷ்மியின் கண்களில் நீர்த் துளிகள் ததும்பின. துக்கம் நெஞ்சை அடைத்துக்கொண்டது.

"வரும்போது எனக்கு என்னம்மா கொண்டுவருவார்?"

"எல்லாம் கொண்டுவருவார் கண்ணே! பப்பர்மெட்டு, பூட்ஸு, பொம்மை, எலக்ட்ரிக் விளக்கு, ரயில்வண்டி எல்லாம் கொண்டுவருவார்."

அவ்வளவுதான். குதித்துக் கொண்டு ஜயராமன் வாசலிலே ஓடினன்; "எங்கப்பா வரப்போரு! எல்லாம் கொண்டு வருவா!" என்று குதூகலத்தோடு கூவிக்கொண்டே தன்னுடைய நண்பர்களுடைய கூட்டத்திலே கலந்து விட்டான்.

* * *

லக்ஷ்மிக்கு அவன் ஒரு செல்வக் குழந்தை. அவளுடைய புருஷன் வேலை கிடைக்காமல் திண்டாடினன். கல்யாணமாகிப் பிள்ளையும் பெற்றுவிட்டான். வேலையில்லாமல் இருந்தால், குடும்பத்தை யார் காப்பாற்றுவார்கள்? லக்ஷ்மி பிறந்தகத்துச் செல்வி. ஆகையால் தகப்பனர் வீட்டிலேயே இருந்தாள். இருந்தாலும் எல்லோருடைய புருஷர்களும் வியாபாரமோ, உத்தியோகமோ செய்து ஸம்பாதித்து வாழும்போது தன் புருஷன் மாத்திரம் வெட்டியாளாக இருப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை. அவன்தான் என்ன செய்வான்!

குழந்தை பிறந்து ஒரு வருஷம் ஆயிற்று. லக்ஷ்மியின் கணவன் இல்வாழ்க்கையின் இனிமையை முற்றும் உணரமுடியவில்லை. பிற

ருடைய வீட்டில் இருந்துகொண்டு சாப்பிட்டு வந்தால் மனம் உடைந்து போகாதா? "திரைகட லோடியும் திரவியம் தேடு" என்று பாட்டி சொல்லியிருக்கிருள். கடல் கடந்தேனும் ஸம்பாதிக்க வேண்டுமென்ற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று; நாளடைவிலே அது முறுகி வளர்ந்தது.

துணிந்து ரங்கூனுக்குப் புறப்பட்டுவிட்டான். புறப்படும் போது, "கடவுளுடைய அருளால் எனக்கு ஏதாவது நல்ல வேலை கிடைக்குமென்றே நம்புகிறேன். கிடைத்தபிறகு உன்னையும் குழந்தையையும் அழைத்துக் கொள்கிறேன்" என்று சொல்லிப் போனுன்.

அங்கே ஒரு கம்பெனியில் வேலைக்கு அமர்ந்தான். அவ்வளவு நாள் ஒடிந்து போயிருந்த அவனது மனம் ஊற்றமடைந்தது. 'இனி நாமும் உலகத்தில் மனிதனுகப் பிழைக்கலாம்' என்ற தைரியம் வந்தது. 'லக்ஷ்மியை அழைத்துவரலாம்' என்று எண்ணினுன். 'இன்னும் இரண்டு வருஷங்கள் தனியாக இருந்தால் கையில் கொஞ்சம் பணம் சேரும். அப்புறம் அழைத்து வந்தால் நல்ல வீடாக வாங்கிக்கொண்டு சுகமாகக் குடித்தனம்செய்யலாம்' என்று மற்றொரு நினைவு தோற்றியது. 'இவ்வளவுகாலம் பெண்டாட்டியோடுதானே இருந்தோம். இப்பொழுது சிலகாலம் பிரிந்து இருப்போமே. என்ன முழுகிப்போகிறது?' என்று கருதினுன். சிலமாதங்கள் கழித்து வந்து அழைத்துப் போவதாகத் தன் மனைவிக்குக் கடிதம் எழுதிவிட்டான்.

ஆறு மாதங்கள் ஆயின. லக்ஷ்மியின் கணவன் வரவில்லை. தேளுக்குப் பயந்து பாம்பின் வாயில் அகப்பட்டது போல, உத்தியோகமின்மைக்குப் பயந்து பிரிவுத்தீயில் அகப்பட்டுக் கொண்ட லக்ஷ்மியின் சிந்தை அலைகடல் துரும்புபோல நிலைகலங்கித் தத்தளித்தது.

"நீங்கள் இங்கே இருந்தபோது அடிக்கடி நான், ஏதாவதொரு வேலை பார்க்க வேணுமென்று தொந்தரவு செய்தேனே; அதற்கு இது அபராதமா? என்னை இனிமேல் சோதனை செய்யவேண்டாம். உங்களுடைய குழந்தை எவ்வளவு அழகாக இருக்கிருன்! எப்படி விளையாடுகிருன்! அவனுடைய மழலையைக் கேட்கவேண்டாமா? எனக்காக நீங்கள் புறப்பட்டு வராவிட்டாலும், அவனுக்காகவாவது வாருங்கள்" என்று அவள் கடிதம் எழுதினுள்.

"அடி பயித்தியமே; என் குழந்தையைப் பார்க்க எனக்கு ஆவலில்லாமலா இருக்கும்? இங்கே எனக்கு 'லீவு' கிடைக்கிறது கஷ்டமாக இருக்கிறது. தவிர, இங்கே நானே இருந்து கவனிக்க

வேண்டிய முக்கியமான காரியம் ஒன்று இருக்கிறது. அது முடிந்தால், எங்கள் கம்பெனி துரை எனக்குச் சம்பளம் அதிகமாகப் போடுவான். நான் இங்கே இருந்து அந்தக் காரியத்தைப் பூர்த்தி செய்து எனக்குச் சம்பளம் அதிகமானல், அது நம் இருவருக்கும் நல்லதல்லவா? அதனால் இன்னும் சில மாதங்கள் பொறுத்திரு" என்று பதில் வந்தது.

பின்னும் ஆறுமாதங்கள் ஆயின. "ஒரு வருஷம் ஆய்விட்டதே; உங்கள் மனம் இரங்கவில்லையா? உங்களுக்கு நான் என்ன குற்றம் இழைத்து விட்டேன்!" என்று எழுதினள் லக்ஷ்மி.

ஒரு மாதத்திற்கு அப்புறம், "நான் இப்பொழுது சுற்றுப் பிரயாணத்தில் இருக்கிறேன். இந்தப் பிரயாணம் இன்னும் மூன்று மாதங்கள் செய்யவேண்டியிருக்கும். அப்புறம் அங்கே வருவதைப் பற்றி யோசித்துக் கடிதம் எழுதுகிறேன். குழந்தையை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்" என்று விடை வந்தது.

ஒரு வருஷத்துக் கப்பால் இரண்டாவது வருஷம் சென்றது; மூன்றுவருஷங்கள் கடந்தன; நான்கு வருஷங்களும் ஆய்விட்டன. இப்பொழுது ஜயராமன் தன்னுடைய ஐந்தாவது பிராயத்தில் விளங்குகிறுன். அவனுடைய இன்னிசை மழலைச் சொற்களைக் கேட்கும்போதெல்லாம் லக்ஷ்மி கண்ணீர் விடுகிருள்; 'இதை அவர் கேட்பதற்கில்லையே!' என்று விம்முகிருள்.

இந்த நான்கு வருஷங்களாக அவ்விருவரிடையேயும் கடிதப் போக்குவரத்துக்குக் குறைவொன்று மில்லை. அக்கடிதங்களிலே பிரேம வாசகங்களுக்கும் குறைவில்லை. தன் காதற்கணவனுடைய கடிதங்களை அருமையாகக் காப்பாற்றிவந்தாள் லக்ஷ்மி. ஒவ்வொரு கடிதமும் வரும்போது அவள், "நான் அடுத்த கப்பலில் வருகிறேன் என்று எழுதியிருக்கக் கூடாதா" என்று ஆர்வத்தோடுபார்ப்பாள். கடைசிவரி வரையில் படித்து விடுவாள். தான் வராததற்கு ஒரு காரணத்தை அதில் எழுதியிருப்பான் அவள் கணவன். அதோடு அடுத்த 'வாய்தா' வையும் எழுதியிருப்பான். அவள் என்ன செய்வாள்! ஒரு பெருமூச்சினுல் அந்தக் கடிதத்தை அலைத்து இரண்டு கண்ணீர்த்துளிகளால் முத்திரையிட்டுத் தன்னுடைய சேமப் பெட்டியிலே பழைய கடிதங்களோடு வைப்பாள். இப்படி எத்தனை தரம் ஏமாந்து விட்டாள்! கடவுளே, உனக்குக் கருணையில்லையா?

* * *

"அம்மா தபால்;லக்ஷ்மியம்மாளுக்கு" என்றுன்தபால்காரன். தன் தாய்க்கு முன் ஓடிச் சென்று அதை வாங்கி அம்மாவிடம் கொடுத்தான் குழந்தை. பழையபடி நாயகனை எதிர்பார்க்கும்

பேரார்வத்தோடு அதைத் திறந்து படிக்கத்தொடங்கினுள். அதில் என்ன இருக்கிறது ? அவள் விழியிலே எதற்காக இவ்வளவு ஒளி? அவள் முகத்திலே என்ன களிப்பு! இதென்ன? திடீரென்று அந்த முகசந்திரனிலே மேகத்திரை போட்டது போல ஒரு சோர்வு உண்டாவானேன்? எதற்காக அவள் தொண்டைக்குள் எச்சிலை விழுங்குகிருள் ?

குழந்தை வாயில் விரலை வைத்துக்கொண்டு தன் தாயின் முகத்தைப் பார்த்துக்கொண்டே நின்ருன். அந்த முகத்திலே திடீரென்று தோன்றிய ஒளியின் அர்த்தத்தையும் அடுத்த கணமே அது மறைந்துவிட்ட காரணத்தையும் அவன் எப்படி அறிவான்!

அவன் வரப்போகிருன்; உண்மை. இதுதான் அவள் முகத்திலே முதலில் சோபையை உண்டாக்கியது. ஆனல்—? அவனேடு அவனுடைய பழைய கட்டுடல் வரவில்லை; க்ஷய ரோகத்தால் குன்றிப்போன தேகந்தான் வருகிறது! "ஐயோ, கடவுளே!" என்று அவள் தலையிலே கையை வைத்துக்கொண்டாள்.

"கண்மணி, உனக்கு இனிமேல் மறைப்பதில் பிரயோசனம் இல்லை. வேலை மிகுதியினல் என் உடம்பு கெட்டுவிட்டது. அங்கே சுகபோகத்தை அனுபவித்துக் கொண்டிருந்த இந்தத் தேகம் இங்கே உள்ள புதிய சீதோஷ்ணஸ்திதியையும் அலைச்சலையும் தாங்க வில்லை. போன வருஷத்திலேயே எனக்கு க்ஷயரோகம் உண்டா யிற்று. தக்க மருந்துகள் சாப்பிட்டு நோய் நீங்கியபிறகு அங்கே வரலாமென்று நினைத்தேன். ஆனல் இது என் உயிருக்கு யமனுக வந்திருக்கிறது. இதுவரையில் இதை உனக்கு ஒளித்திருந்தேன். இனிமேல் ஒளிப்பதனுற் பிரயோசனம் இல்லை. என்னுடைய வாழ்வின் காலம் குறுகிக்கொண்டு வருகிறது. இதைத் தெரிவிக் காமலே அங்கே வந்துவிடலாமென்று எண்ணினேன். எப்படி யானுல் என்ன? எப்படியும் தெரியத்தானேபோகிறது? திடீரென்று தெரிவதைவிட முன்னுலே தெரிவது சிறிதளவு ஆறுதலாக இருக் கும். என்னுடைய இறுதிக்காலத்திலாவது நான் உனக்கருகில் இருக்கும்படி ஆண்டவன் அருள் புரிவானென்று எண்ணுகிறேன். அதோடு, ஏழையாகப் பிறர் வீட்டு உணவை உண்டு சாகவேண் டிய நிலையில் நான் இப்பொழுது இல்லையென்பதும் எனக்குத் திருப்தியை விளைவிக்கிறது. நம்முடைய குழந்தைக்கு, என்காலத் துக்குப் பின் பிறர்கையை எதிர்பாராதபடி வாழ்வதற்கேற்ற பொருள் வசதியும் என்னிடம் இப்பொழுது உண்டென்பதை உனக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். நமக்காக ஒரு தனி வீடு பார்த்து ஏற்பாடுசெய்யும்படி உன் தமையனிடம் சொல்.

உன்னை விரைவிலே பார்க்கவேண்டும் என்ற அவா நிமிஷந்தோறும் விஷம்மாதிரி ஏறிக்கொண்டே இருக்கிறது.'' இப்படி அவன் எழுதியிருந்தான். லக்ஷ்மியின் கனவுலகம் மறைந்து போயிற்று. அதில் அவள் கண்ட மாடமாளிகைகளும் சிங்கார வனங்களும் இன்ப ஊற்றுக்களும் பிரளய கால வெள்ளத்திலே மூழ்கடிக்கப்பட்டன. அவன் வருவான், வருவானென்று அவள் எதிர்பார்த்திருந்தாள்; வரவில்லை. இப்பொழுதோ அவன் வரப்போகிறான்; ஆனாலும் அவளுக்கு மகிழ்ச்சியில்லை.

* * *

வந்துவிட்டான்; இந்த வியாதியின் அழிவுச்சக்திதான் எத்தனை கொடிது! அழகு, வசீகரம், கட்டு எல்லாம் அமைந்திருந்த அவனுடைய தேகம் இப்பொழுது உளுத்துப்போய் எலும்பும் தோலுமாக இருக்கிறது. பெரிய பெரிய வைத்தியர்கள் பார்த்தார்கள். ''ஏது? மிஞ்சி விட்டது'' என்று எல்லோரும் சொல்லி விட்டார்கள்.

அவன் வரும்போது ஜயராமனுக்கு எத்தனையோ அபூர்வ வஸ்துக்கள் கொண்டுவந்தான்; பர்மியப் பொம்மைகள், ரங்கூன் மிட்டாய்கள், சீனதேசத்துச் சாமான்கள் எல்லாம் கொண்டுவந்தான். அருமையான வேலைப்பாடுகளையுடைய ஓர் எலெக்ட்ரிக் டார்ச்சு விளக்கும் கொண்டுவந்தான். அதிலேயுள்ள பொத்தானை அமிழ்த்தினால் பளிச்சென்று வெளிச்சம் வீசும்; வீசும்போது ஜயராமனுக்கு உண்டாகும் ஸந்தோஷம் இவ்வளவு அவ்வளவு அல்ல.

தன்னுடைய தாய் ஸதா அப்பா அப்பா வென்று தனக்குச் சொல்லிக் கொடுத்த மந்திரத்தினால் குறிக்கப்படும் புருஷன், ஒரு வற்றல் உடம்பையுடைய நோயாளியென்பதை அந்தக் குழந்தை அறிந்தபோது அவனுக்கு அந்த 'அப்பா' விடம் அதிகக் கவர்ச்சி உண்டாகவில்லை. 'அப்பா' மட்டும் குழந்தையை எத்தனையோ அன்போடு கொஞ்சிக் கொஞ்சி முத்தமிட்டுத் தழுவிக் கொண்டான். குழந்தை அந்த அன்புக்குச் சரியான மதிப்பை யளிக்கவில்லை. அவனுக்கு 'அப்பா' என்றாலே புரியவில்லை. ஆனால் அப்பாவைக் காட்டிலும் அப்பாகொண்டுவந்த பண்டங்களிலே அவனது குழந்தையுள்ளம் ஈடுபட்டது. அவைகளுக்குள், அந்த 'டார்ச்சு' விளக்கிலே அவன் தன்னையே இழந்து மயங்கி ஈடுபட்டான். தன்னுடைய சகாக்களில் ஒருவர்தவறாமல் யாவருக்கும் அதைக் கொண்டு போய்க் காட்டினான்.

''இங்கே பார்'' என்பான். அடுத்தவீட்டுப் பையன் பார்க்கும் போதே அவன் கண்ணுக்கு நேரே அந்த விளக்கைத் திடீரென்று

ஏற்றுவான். பளிச்சென்று அப் பையன் கண்ணிலே வெறியோடும். "அப்பாடா!" என்று அவன் கூவுவான். அந்தக் கூச்சலிலே ஜயராம னுக்கு ஓர் ஆனந்தம்.

"இது யார் கொடுத்தார்?"

"அப்பா!"

"அப்பா யார்?"

"இதைக் கொடுத்தாரே அவர்."

இவ்வளவுதான் அவனுக்கு அப்பாவைப் பற்றித் தெரியும்.

* * *

அந்தி வேளை. சூரியன் கடலிலே மறைந்தான். வீடுகளிலே எல்லோரும் தீபம் ஏற்றினார்கள். ஜயராமன் தன்னுடைய அம்மா சொற்படி, டார்ச்சு விளக்கை ராத்திரியிலேதான் அமுத்தி வேடிக் கை பார்ப்பது வழக்கம். அன்றைக்கு வீட்டில் ஒரே குழப்பம். லக்ஷ்மி துயரமே உருவாக இருக்கிறாள். அவளுடைய கணவனது உயிர் யமனுடன் போராடிக் கொண்டிருக்கிறது.

ஜயராமன் கையிலே 'டார்ச்சு' விளக்கை எடுத்தான். அமுத்தி னான். விளக்கேற்றிக்கொள்ளவில்லை. அது அவிந்துவிட்டது. அதே சமயத்தில் லக்ஷ்மியின் மாங்கல்ய விலாஸத்துக்கு ஆதாரமாகிய விளக்கும் அவிந்தது. அவள் கணவன் நோய்ப்புழுக்களால் அரிப் புண்டு பாழ்பட்ட கும்பியாகிய உடம்பினின்றும் விடுபட்டான். ஒரே அழுகை.

"ஐயையோ! இந்த விளக்கு அணஞ்சுபோச்சு. இதை ஏத்தித் தாயேன்" என்று ஜயராமன் தன் தாயினுடைய முன்றானையைப் பிடித்து அழத்தொடங்கினான். எல்லோரும் அழும்போது அவ னுக்கும் அழத்தோன்றியது. அதற்கு ஒரு காரணமும் ஏற்பட்டது. பலமாக அழத்தொடங்கி விட்டான். இருதயத்தைப் பிளந்து கொண்டோடிய துயரத்தினால் அலைப்புண்ட அக்கூட்டத்தின ருடைய அழுகையின் பெருங் கோஷத்திலே கள்ளங் கவடற்ற அந் தக் குழந்தையின் சிறு குரலும் கலந்து ஒன்றுபட்டது. அவர்கள் ஒரு விளக்கு அணைந்து விட்டதென்று அழுகிறார்கள்; அவனும் ஒரு விளக்கு அணைந்ததென்றுதான் அழுகிறான்!





# சிறுவர் பகுதி

## புத்தி வந்தது!

'ஸேஞ'

பத்மாவுக்கு நாலு வயசு. அவளுக்குத் தன் அக்கா சின்னியைக் கண்டால் பிடிப்பதே யில்லே. கொஞ்ச நாளேக்குமுன் திருப்பதியில் பத்மாவுக்கு மொட்டை அடித்திருந்தார்கள். அதனல் அவளுக்கு இன்னும் தலேமயிர் நன்ருக வளரவில்லே. சின்னிக்குத் தலேமயிர் நீளம்; அவளால் பூ வைத்துக் கொள்ள முடியும்; ஆனல் தன்னல் முடியாதே என்று பத்மா சின்னியைப் பார்த்துப் பொருமைப்பட்டாள். அவளேக் கண்டதற்கெல்லாம் அடிப்பாள் பத்மா.



ஒருநாள் சின்னி அவளே நாலு பேருக்கு எதிரில் 'மொட்டை' என்று விளேயாட்டாகச் சொல்லிவிட்டாள். உடனே பத்மாவுக்கு அதிகமாகக் கோபம் வந்துவிட்டது; சின்னியின் கையை நன்ருகக் கடித்து விட்டாள். பாவம்! சின்னி ஓவென்று அழுதாள். பத்மாவுக்குத் திருப்தியாக இருந்தது.

"அம்மா, பார், அம்மா! பத்மா என் கையைக் கடிச்சுட்டாளே" என்ருள் சின்னி விக்கிக்கொண்டே.

அம்மாவுக்குப் பத்மாவின்மேல் அதிக ஆசை. அதனல் அவளே ஒன்றும் சொல்லவில்லே. சின்னி

யைப் பார்த்து, "நீ ஏன் குழந்தையை ஏளனம் பண்ணினுய்?" என்ருள்.

சின்னி, பாவம்! ஒன்றும் பேசாமல் தன் சிநே கிதிகளுடன் வாசல் பக்கம் போய்விட்டாள்.

அன்று முதல் பத்மாவுக்கு எப்படியாவது தலே மயிர் சீக்கிரமாக வளரவேண்டுமென்று ஆசை. அத ஞல் வீட்டு அலமாரிகளில் இருந்த புட்டிகளேயெல் லாம் எட்டி எடுப்பாள். அவை தவறிக் கீழே விழுந்து உடையும். எண்ணெயெல்லாம் தரையில் கொட்டி விடும். நாளுக்குநாள் அவள் பண்ணுகிற அமர்க்களம் சகிக்கமுடியவில்லே. ஆனுலும் அம்மா அவளே ஒன் றும் சொல்லமாட்டாள். பத்மா பேரில் அவளுக்கு அதிக ஆசை என்று முன்னே சொல்லவில்லேயா? சின்னியைத்தான், "ஏண்டி குழந்தைக்கு எட்டும்படி யாகப் புட்டியை வைக்கறே?" என்பாள்.

கொஞ்சநாளேக்கு முன்ஞல்தான் பொங்கலுக்காக வீட்டில் புதிதாக வெள்ளே, வர்ணம் எல்லாம் பூசி யிருந்தார்கள். வாசல் திண்ணேயின் கீழ் அநேக புட்டிகள் வைக் கப்பட்டிருந்தன. பத்மா அங்கே வந்து பார்த் தாள். ஒரு புட்டியின் மேல், தலேமயிர் அதிக மாக வளர்ந்த ஒருபெண் ணின் படம் ஒட்டியிருந் தது. பத்மாவின் கண்கள் விரிந்தன. அந்தப் புட்டி யில் ஏதோ எண்ணெய் இருப்பதைப் பார்த்தாள். 'ஆஹா, இதைத் தடவிக்கொண்டால் எனக்கும் நீள மாக மயிர் வளரும்' என்று எண்ணிஞள். உடனே அந் தப் புட்டியைத் திறந்தாள். அதிலிருந்த பழுப்புவர்ண எண்ணெயைத் தலேயில் அவசர அவசரமாகத் தேய்த் துக் கொண்டாள்.



ஆனால் சற்று நாழிகைக்குள்ளாகவே அவள் கை 'பிசுக் பிசுக்' என்று ஒட்டிக்கொண்டது; தலையில் உள்ள எண்ணெயும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது.

பத்மா 'ஓ' வென்று கத்தி அழுதாள். அம்மா, சின்னி எல்லோரும் ஓடிவந்து பார்த்தார்கள். அம்மா, "ஐயோ, 'வார்னிஷ்' எண்ணெய் வாசனை வருகிறதே! அதுதான் அப்படி ஒட்டிக்கொண்டு விட்டது! படு பாவி, இங்கே ஏன் வைத்தான்?" என்று வர்ணக்காரனைத் திட்டினாள்.

உடனே பத்மாவைக் குழாயின் கீழ் நிறுத்தினாள்; நல்லெண்ணெய் தேய்த்துக் கசக்கிக் குளிப்பாட்டினாள். ஆனால் வர்ணம் தலையை விட்டுப் போகவில்லை. அதனால் பத்மாவுக்கு மறுபடியும் மொட்டையடிக்க வேண்டியதாயிற்று.

அம்மா, "பார்த்தாயா? சின்னியின் மேல் பொறாமைப்பட்டு அவளைக் கடித்தாயே; இப்பொழுது சாமி தண்டிச்சுட்டார் உன்னை" என்றாள்.

பத்மா அழுதுகொண்டே, "இனிமேல் அந்த மாதிரியெல்லாம் செய்ய மாட்டேன், அம்மா" என்றாள்.

சின்னி அவளை இடுப்பில் எடுத்துக் கொண்டு தேற்றினாள்.






## நல்லுரைக் கோவை

### (முதல்பாகமும் இரண்டாம் பாகமும்)

[ஸ்ரீ மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சுவாமிநாதையரவர்கள் எழுதியவை; ஒவ்வொரு பாகமும் விலை அணா 12.]

தற்காலத் தமிழ் இலக்கியம் விருத்தியடையாதிருப்பதற்குக் காரணம் எளிய நடையில் கருத்துக்கள் நிறைந்த நூல்கள் அதிகமாக இராமையே. ஆனால் சில காலமாக இதர இந்தியபாஷைகள் அபிவிருத்தி அடைந்திருப்பதைப் பார்த்துத் தமிழர்களும் விழித்துக்கொண்டுவிட்டார்கள்.

முதன்முதலாகப் பழைய முறையை விடுத்துச் சிறுவர்களுக்கும் புரியும்படியான இனிய சரளமான நடையில், ஆழ்ந்த கருத்துள்ள விஷயங்களை எழுதிய பெருமை மகாமகோபாத்தியாயரவர்களையே சாரும்.

இந்தக் கோவையில் ஐயரவர்கள் எழுதியிருக்கும் பல சிறந்த சிறுகதைகளையும், சுய அநுபவத்தை அடிப்படையாகக் கொண்ட வரலாறுகளையும், இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகளையும், சில ஸம்ஸ்தானங்களைப் பற்றிய விருத்தாந்தங்களையும், தமிழை ஆதரித்த பெருந்தகையோரின் ஜீவியசரித்திரங்களையும் படிக்கும்போது, 'நம்போன்ற இளைஞர் நேற்று நடந்ததை இன்று மறந்துவிடுகிறோமே; இந்தத் தொண்டு கிழவர் எவ்விதம் இவ்வளவு விஷயங்களையும் மனத்தில் கொண்டு எழுதுகிறார்!' என்று ஆச்சரியப்படாமலிருக்க முடியாது; அந்தக்காலத்து 'மண்' அல்லவா?

ஐயரவர்கள் பல துறைகளிலும் பரந்த ஞானம் படைத்தவர் என்பதற்கு இந்தக் கோவையே அத்தாட்சியாகும். இவ்விரண்டு பாகங்களிலுமுள்ள ஆராய்ச்சிக் கட்டுரைகளுள் 'தமிழ்நாட்டுப் பெண்பாலாரு'ம் 'பண்டைக்காலப் பள்ளிக்கூடங்களு'ம் முக்கியமானவை.

'பூண்டி அரங்கநாதமுதலியார்', 'உடையார்பாளையம்', 'வன்றொண்டர்', 'பெரியவைத்தியநாதையர்', 'முத்துஸ்வாமி தீக்ஷிதர்', 'குமரகுருபரர்' முதலியவை பல பெரியோரின் ஜீவியசரித்திரங்களாம். இவை மனத்தைக் கவரும் விதத்தில் எழுதப்பட்டிருக்கின்றன. 'நிலவில் மலர்ந்த முல்லை'யில் மகாமகோபாத்தியாயரவர்கள் சிரமப்பட்டு ஏடுதேடின வரலாற்றைப் படிக்கும்போது, 'அவர்கள் சுயசரித்திரம் ஒன்று எழுதினால் இன்னும் எத்தனையோ

அரிய விவரங்கள் பலவற்றை அறிந்துகொள்ளலாமே' என்று ஆவல்கொண்டு துடிக்கிறோம். அதுவும் நிறைவேறும் என்றே நம்புகிறோம்.

'தருமம் தலைகாக்கும்' என்ற மனத்தை உருக்கும் சிறுகதைக்கு ஈடானது இதுவரையிலும் தமிழில் வெளிவந்ததே கிடையாது; 'ராஜவைத்தியம்' என்றகதையில் நல்ல ஹாஸ்யரஸம் மிளிர்கிறது.

'தமிழ்வளர்ச்சி' என்ற கட்டுரையில் ஐயர் அவர்கள் எழுதியிருக்கும் ஒரு விஷயத்தை இங்கே குறிப்பிடவேண்டியது அவசியமாயிருக்கிறது. 'பண்டைக்காலப் புலவர்கள் வடமொழிப் புலவர்களோடு மனங்கலந்து பழகி அவர்களுடைய கருத்துக்களையும் சொற்களையும் தங்கள் நூல்களில் ஆண்டிருக்கிறார்கள். வடமொழியின் தொடர்பினால் தமிழ்மக்கள் எவ்வளவோ அரிய கருத்துக்களை அறிந்து பயனுற்றிருக்கிறார்கள். ஒரு பாஷை வேறு பாஷையின் தொடர்பினால் விரிவுறும். அதனால் அப்பாஷையின் அழகு ஒருபோதும் குறையாது.' எவரும் கவனியாமல் அழிவுற்று வந்த பத்துப்பாட்டுப் போன்ற அரிய பழந்தமிழ் நூல்களை, தேகசிரமும் பொருட்செலவும் பாராமல், நமக்குத் தேடித் தந்த பெரியாரான ஐயரவர்கள் இப்படிச் சொல்லுகிறார்கள். ஆனால் சிறிதும் சிரமப்படாத சிலர், உண்மைத் தமிழபிமானம் கொண்டவர்போல் வடமொழிக் கலப்பை வெறுத்துத் 'தனித் தமிழ்', 'தனித்தமிழ்' என்று ஓலமிட்டுத் தமிழன்னையை என்றென்றும் சிறையில் அடைத்துவைக்கப் பார்க்கின்றனர்.

இந்தக் கோவையின் இரண்டு பாகங்களிலும் நமது பத்திரிகையில் வெளிவந்த கட்டுரைகளே பெரும்பான்மையாக இருப்பது நமக்குப் பெருமை தரக்கூடிய விஷயமல்லவா? —ஸேனு.

மைக்கேல் காலின்ஸ் [ஆசிரியர்: ப. ராமஸ்வாமி. நவயுகப்பிரசுரம்; விலை அணா எட்டு.]

நவயுகப் பிரசுராலயத்தாரின் நான்காவது பிரசுரம் அயர்லாந்தின் சுதந்திரப் போரில் ஒரு பிரதம வீரனான மைக்கேல் காலின்ஸின் ஜீவிய சரித்திரம். "மைக்கேல் காலின்ஸ்" என்று ஆங்கிலத்தில் பீஸ்லேய் என்பவரால் விரிவாக எழுதப்பட்ட நூலை ஆதாரமாகக் கொண்டு, அதைச் சுருக்கி எழுதியிருப்பதாக ஸ்ரீ ப. ராமஸ்வாமி அவர்கள் முகவுரையில் கூறுகிறார்.

தமிழ்மக்களிடையே தற்காலம் தோன்றியிருக்கும் அறிவுத்தாகத்தை ஒருவாறு திருப்திசெய்யும் முறையில் இதை எழுதியிருப்பதாகவும் ஆசிரியர் அதில் குறிப்பிடுகிறார்.

இம்மாதிரி வெளியீடுகளின் விஷயத்தில் மற்றோர் அம்சமும் இருக்கிறது. மேலே குறிப்பிட்ட அறிவுத் தாகத்தைச் சமனம் செய்வதுடன் தமிழில் தோன்றும் புத்தகங்கள் இலக்கிய சிருஷ்டிகளாகவும் இருக்கலாம்; சில பகுதிகளில் இருந்தே தீரவேண்டும்.

உதாரணமாக இந்த விமரிசனத்திற்குச் சம்பந்தப்பட்ட புத்தகம் 'ஜீவிய சரித்திரம்' என்ற இலக்கியத்தின் ஒரு பகுதி; மேனாட்டு இலக்கியங்களில், அதிலும், ஆங்கில இலக்கியத்தில், 'ஜீவிய சரித்திரம்' (*Biography*)

வசன இலக்கியத்தின் ஒரு சிறப்புமிக்க பகுதியாக விருத்தியடைந்திருக்கிறது. நவீன இலக்கியத்தில் அது மிகவும் பிரதானமான ஒரு ஸ்தானத்தைப் பெற்றுவிட்டது.

தமிழில் நவீன இலக்கியத்திற்கு நாம் இப்பொழுதுதான் அடிப்படை போட்டுக் கொண்டிருக்கிறோம். அதிலும் வசன இலக்கியத்தின் பல பகுதிகளையும் இப்பொழுதுதான் விரிவாகக் கையாண்டு பரிசீலனை செய்து பார்த்து வருகிறோம். வசன காவியம், சிறுகதை, ஒற்றையங்க நாடகம், கட்டுரை, நாவல், நாடகம், ஜீவியசரித்திரம் (சுயசரிதையும் சேர்ந்தது), சரித்திரம்- இவை தற்காலம் வசன இலக்கியத்தின் பகுதிகளாக இருக்கின்றன. பலர் இத்துறைகளில் இறங்கித் திறமையுடன் இலக்கிய சிருஷ்டி செய்து வருகிறார்கள்.

ஜீவிய சரித்திரப்பகுதியில் சிருஷ்டி வேலை அதிகமாக நடைபெறவில்லை. டாக்டர் சாமிநாதையர் அவர்களின் மீனாட்சிசுந்தரம்பிள்ளை சரித்திரந்தான் முதல் முதலாக இலக்கியமுறையில் எழுதப்பட்டிருக்கும் நூல். ஜவாஹரின் சுயசரிதை தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. காந்திஜியின் சுயசரிதையும் 'சத்திய சோதனை' என்று மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ ராமஸ்வாமி எழுதியிருக்கும் புத்தகம் மொழிபெயர்ப்பல்ல; அதை ஒரு முதல் நூல் என்றே கருதலாம்; ஏனெனில் ஆங்கிலத்தில் கிடைக்கும் தகவல்களை வைத்துக்கொண்டு சுருக்கமாகத் தாமே தமிழில் கோவையாக எழுதி யிருக்கிறார்.

மைக்கேல் காலின்ஸின் சரிதை, ஊக்கமும் உணர்ச்சியும் ஊட்டக்கூடியது. அயர்லாந்தின் சுதந்திரப்போரில் அவருடைய செயல்களே ஒரு பெரும் பாகமாக இருக்கின்றன. ஆகையால் ஒருமுறையில் அவர் சரிதையே அயர்லாந்தின் சரித்திரம்; அயர்லாந்தின் சரித்திரமே அவர் ஜீவியம். என்றாலும் ஸ்ரீ ராமஸ்வாமியின் புத்தகத்தை வாசிக்கும்போது அது அயர்லாந்தின் சுதந்திர இயக்கத்தைப்பற்றிய வரலாறாக மனதில் படுகிறது; காலின்ஸின் ஜீவியமாக அவ்வளவாகப் படவில்லை.

ஆகையால் புத்தகத்தை, ஜீவிய சரித்திர இலக்கியத்தில் ஒரு சிருஷ்டியாகக் கருத முடியாது. ஸ்ரீ ராமஸ்வாமி அதை அவ்வாறு செய்ய முயலவில்லை என்பதையும் நான் குறிப்பிடக் கடமைப்பட்டிருக்கிறேன். அவர் முயன்றிருந்தால் வெகு சுளுவாக இதை ஒரு முதல்தரமான ஜீவியநூலாகச் செய்திருக்கலாம். ஆனால் அவர் நோக்கம் வேறு. நம் நாட்டின் தற்கால நிலையில் தாத்காலிகமாகப் பயன் அளிப்பதற்கே இதை எழுதியிருக்கிறார். அவர் இதை ஜீவியநூலுக்கு ஓர் ஆதர்ச கிரந்தமாகச் செய்திருக்கலாமென்பது என் எண்ணம். ஆனால் அவர் எண்ணத்தைப்பற்றி நாம் குறை கூறுவது சரியன்று.

அவர் செய்து முடித்திருக்கும் வேலையில் அவர் வெற்றி பெற்றிருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ஆசிரியர் சிரமமின்றி, திறமையுடன், ஸ்வாரஸ்யம் குன்றாமல், தெளிவாக எழுதியிருக்கிறார். மைக்கேல் காலின்ஸ், சரித்திர

நூல் என்ற முறையில் ஓர் இலக்கிய சிருஷ்டிதான். இதில் ஸ்ரீ ராமஸ்வாமியைத் தமிழ்நாட்டின் எழுத்தாளர்களில் ஒருவராக நாம் மகிழ்ச்சியுடன் வரவேற்கவேண்டும். —து. ப. ரா.

காப்பியத்துறைத்தெளிவு: முதற்பாகம்—புலவர் மறை [ஸ்ரீமான் வித்வான் வி. எஸ். வேங்கடராமன் எழுதியது; கிடைக்குமிடம்: ஆசிரியர், அர்ச் அந்தோனியார் உயர்தரக் கல்லூரி, கூனூர், நீலகிரி; விலை அணா 4.]

காவியங்களைப்பற்றி வடமொழி தென்மொழி நூல்களிற் கண்ட மரபுகளைத் தொகுத்து எழுதப்பெற்ற புத்தகம் இது. இதிற் கூறப்பட்ட செய்திகள் இன்ன இன்ன நூல்களிலிருந்து எடுக்கப்பட்டனவென்பதை அங்கங்கே தெளிவுபடுத்தி யிருப்பின் இப்புத்தகத்தின் மதிப்பு உயர்வுறும் என்றெண்ணுகிறோம். —வாசகன்.

## புத்தகக் குறிப்பு

பத (வேத) தானிய வருஷ திருக்கணித பஞ்சாங்கம்: பிரும்ம ஸ்ரீ டி.எஸ். விசுவநாதசிரௌதிகள், பி.ஏ., அவர்கள் பார்வையில் ஷை யார் சிஷ்யர் யாழ்ப்பாணம் மட்டுவில் சி. சுப்பிரமணிய ஐயர் அவர்களால் யாழ்ப்பாண மத்தியஸ்தானத்துக்குக் கணிக்கப்பட்டது; விலை அணா, 4; கிடைக்குமிடம்: சி. சுப்பிரமணிய ஐயர், 'தில்லைவாஸம்,' மட்டுவில், சாவகச்சேரி, இலங்கை.





விஹாரி அவள் சொல்வதை......உற்றுக் கேட்டுக்கொண்டு வந்தான். —மாயா விநோதினி (பக்கம். 446)




# இரண்டு புலவர்கள்

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

1

நம்முடைய நாட்டின்கண் பழைய காலத்தில் கல்வி வளர்ச்சி அடைவதற்கு முக்கிய காரணமாக இருந்தவர்கள் புலவர்கள். அவர்களுடைய வாழ்க்கைக் குரிய சாதனங்களை வழங்கி அவர் களுக்கு ஊக்கமளித்துவந்தவர்கள் மன்னர்களும் ஜமீன்தார்களும் பிரபுக்களும் ஆவார்கள். இந்நாட்டில் இருந்த சேரசோழ பாண்டியர்களும் குறுநில மன்னர்களும் தங்கள் தங்கள் ஆஸ்தானங்களிற் பல புலவர்களைக் கூட்டி ஆதரித்து அப்புலவர்களால் தமிழ் நூற் பெருக்கமும் தம் புகழ்வளர்ச்சியும் உண்டாகச்செய்தனர்; புலவ ராற் புகழப் பெறுதலையே சிறந்த மதிப்பாகக் கருதினர். புலவராற் பாடப் பெறுவிடின் அது வாழ்க்கைப்பயனை இழந்ததுபோலா கும் என்றே அவர்கள் கொண்டனர்.

சென்ற நூற்றாண்டுவரையில் ஸம்ஸ்தானாதிபதிகள் தமிழ்க் கவிஞர்களை ஆதரித்துவந்தனர்; சில மடாதிபதிகளும் அங்ஙனமே செய்தனர். ஒவ்வொரு ஸம்ஸ்தானத்தின் சரித்திரத்தையும் ஆராய்ந்து பார்த்தால் பல புலவர்கள் தமிழ் நாட்டில் வாழ்ந்து தமிழ்நூல்களை இயற்றியதற்கு அந்த ஸம்ஸ்தானங்களில் இருந்த தலைவர்களுடைய உபகாரமே முக்கியமான காரண மென்பது தெரியவரும். புலவர்களுக்குப் பலவகைப் பரிசில்களும், கிராமங் களும் அவர்கள் அளித்தனரென்பதற்குரிய ஆதாரங்கள் இருக்கின் றன.

இராமநாதபுரத்தில் உள்ள அரசர்களாகிய ஸேதுபதி மன் னர்கள் தமிழ்வளர்க்கும் பரம்பரையைச் சார்ந்தவர்கள். அவர்க

ளுள் இரகுநாத சேதுபதியென்பவர் ஒருவர். அவர் புலவர் பாடும் புகழுடையோராக விளங்கினார்.

இரகுநாத சேதுபதி தமிழ்நயம் அறிந்து பாராட்டும் வள்ளல். அமிர்தகவிராயர், அனந்தகவிராயர், சர்க்கரைப் புலவர், சவ்வாதுப் புலவர் முதலியவர்கள் அம்மன்னருடைய அன்பில் வளர்ந்தவர்களே.

அமிர்த கவிராயர் இரகுநாத சேதுபதியின் மீது ஒரு துறைக் கோவையொன்று பாடினார். ஒருதுறைக் கோவை யென்பது அகப்பொருளுக்குரிய துறைகளுள் ஏதேனும் ஒரு துறையையே பொருளாக வைத்து நூறு செய்யுளாலேனும் மேற்பட்ட செய்யுட்களாலேனும் பாடப்படுவது. அந்த வகையில் வேறு பல நூல்கள் இருப்பினும் ஒருதுறைக் கோவையென்று பொதுவகையாற் கூறின் யாவரும் இரகுநாத சேதுபதி ஒருதுறைக் கோவையென்றே கொள்ளும் தலைமை அதற்கு இருந்து வந்தது.

'நாணிக் கண் புதைத்தல்' என்னும் ஒரே துறையை வைத்துக்கொண்டு ஒவ்வொரு செய்யுளிலும் வெவ்வேறு கற்பனைகளை அமைத்து நானூறு செய்யுட்கள் பாடி அமிர்த கவிராயர் அப்பிரபந்தத்தை முடித்தார். அதன் இனிமையை அரசரும் அரசரைச் சார்ந்தோரும் புலவர்களும் அறிந்து இன்புற்றனர்.

சிறந்த நூல்களை அரங்கேற்றுதல் பழைய கால வழக்கம். அரங்கேற்றம் பெரிய திருவிழாவைப்போல நடைபெறும். அமிர்த கவிராயருடைய பிரபந்தமும் அரங்கேற்றப்பட வேண்டுமென்பது புலவர் பெருமக்களுடைய விருப்பமாக இருந்தது. அரசர் அது மிகச் சிறப்பாக நடைபெறுவதற்குரிய காரியங்களைச் செய்யும்படி மந்திரிகளுக்கு உத்தரவிட்டார்.

உள்ளூரிலிருந்தும் வெளியூர்களிலிருந்தும் பலர் அரங்கேற்ற விழாவிற்கு வந்திருந்தனர். பல கனவான்களும் புலவர்களும் கூடியிருந்த மகாசபையில் கோவையின் அரங்கேற்றம் தொடங்கப்பட்டது. அரசர் தம் இருக்கையில் வீற்றிருந்தார். ஒவ்வொரு செய்யுளாகக் கூறி அமிர்த கவிராயர் பொருள் சொல்லி வந்தார். ஒவ்வொரு செய்யுளும் ஆனவுடன் அரசர் பொன்னாற் செய்யப்பெற்ற *எலுமிச்சம்பழ மொன்றைப் புலவருக்குப் பரிசாக உருட்டி வந்தார். சில செய்யுட்கள் ஆயின. மேலே ஒரு செய்யுளைச் சொன்னபோது யாவரும் அதன் பொருட்சிறப்பிலே ஈடுபட்டார்கள். அதனால் மற்றச் செய்யுட்களைக் காட்டிலும் கவிராய

* பொன் தேங்காயென்று கூறுவதும் உண்டு.

ருடைய திறமை அதில் வெளிப்பட்டது. அதனைக் கூறி முடித்த வுடன் அரசர் வழக்கம்போலவே பொன் எலுமிச்சம் பழமொன்றை உருட்டினர். அப்பொழுது அருகில் இருந்த புலவர் ஒருவர், "இந்தச் செய்யுள் மிகவும் அருமையானது. இதை மகாராஜா அவர்கள் நன்ருக உடைத்துப் பார்த்து இதன் சிறப்பை உணர வேண்டும்" என்ருர்.

அதைக் கேட்ட அரசர், "நாம் நன்ருக இதன் சுவையை உணர்ந்தோம். இதற்கு உருட்டிய எலுமிச்சம்பழத்தை உடைத் துப் பார்த்தால் அது தெரியவரும்" என்ருர்.

உடனே அந்தப் பொன் எலுமிச்சம்பழத்தை உடைத்துப் பார்த்தார்கள். அதனுள்ளே மாணிக்கப்பரல்கள் இருந்தன. அரசர் வரிசையறிந்து பரிசளிக்கும் திறத்தை யாவரும் அறிந்து மகிழ்ந்து மிகவும் பாராட்டினர். பிறகு அரங்கேற்றம் இனிது நிறைவேறியது.

அதன்பின் அரசர் தம்மீது அப்பிரபந்தத்தைப் பாடியதற் காகத் தம் ஸம்ஸ்தானத்திலுள்ள பொன்னங்கால் என்னும் வளப்பம் மிக்க கிராமத்தை அமிர்த கவிராயருக்கு வழங்கினர். அது முதல் அவருக்குப் பொன்னங்கால் அமிர்த கவிராயரென்ற பெயரே வழங்கலாயிற்று.

## 2

இரகுநாத சேதுபதிவேந்தருடைய ஆஸ்தானத்தில் இருந்த அனந்தகவிராயரும் சிறந்த புலவர். அவர் அமிர்தகவிராயருக்கு உறவினர்; தமிழ்ச் செய்யுட்களை விரைவில் பாடக்கூடியவர். மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி என்ற நூலைப் பாடியவர் அவரே. அப்புலவர் தம் அரசரைப் பாராட்டிப் பல செய்யுட்களை இயற்றினர். சில பிரபந்தங்களைப் பாடியிருத்தலும் கூடும். ஆனல், அவை இப்போது கிடைக்கவில்லை. பாவாணர் தம்மைப் பாமாலை களாற் புனையப் புனைய அவர்களுக்குப் பரிசு பல வழங்கி ஆதரித் துப் பாதுகாத்து வந்த சேதுபதி வேந்தர் அனந்த கவிராயருக்கு மானூர் என்றதோர் ஊரை வழங்கினர். அது நல்ல வளப்ப முடையது.

மானூரைப் பெற்ற கவிராயர் மிக மகிழ்ந்து, "மகாராஜா அவர்கள் பல கலைகளைத் தம்மிடம் கொண்டு மானை எனக்கு வழங்கினர்கள்" என்று சாதுரியமாகக் கூறினர். கலையறிவுள்ளவ ரானமையாலேயே இந்தப் பரிசு வழங்கினரென்ற கருத்துக் கொண்டு இங்ஙனம் கூறினர்.

இந்த வாக்கியத்திலே 'அரசர் பல ஆண் மான்களை வைத்துக் கொண்டு எனக்கு ஒரு பெண்மானை யளித்தார்' என்று சமற்காரமாக ஒரு பொருள் தொனிக்கின்றது. அது கேட்ட அரசர், "உங்கள் மானுக்குக் கலையும் தருகிறேன்" என்று சொல்லிக் கலையூர் என்றதோர் ஊரையும் கவிராயருக்குப் பரிசாக அளித்தார்.

அரசருடைய சாதுர்யத்தையும் வள்ளன்மையையும் புலவர்கள் பாராட்டினார்கள். அனந்த கவிராயர் மானூரையும் கலையூரையும் ஒருங்கே தமக்கு உரியனவாக்கிக் கொண்டார்.

## 3

புலவர்களுக்குள் போட்டி வந்துவிட்டால் அப்பொழுது வெளிவரும் நூலோ செய்யுளோ சிறந்ததாக இருக்கும். இதனை அறிந்த சேதுபதி அரசர் இரண்டுபுலவர்களுக்குள் போட்டி விளைவித்துக் கலைவினோதம் காண்பார். அந்தப் போட்டியால் மன வேறுபாடு உண்டாகாதபடி பார்த்துக்கொள்வார். இறுதியில் இருசாராருக்கும் ஏற்றபடி பரிசளித்து மகிழ்விப்பார். சர்க்கரைப் புலவர் சவ்வாதுப் புலவரென்னும் இருவரிடையேயும் இத்தகைய வாதம் நடப்பதுண்டு. 'சர்க்கரை தொண்டைமட்டும்; சவ்வாது கண்டமட்டும்' என்னும் பழமொழியொன்று இவ்விரு புலவர்கள் சம்பந்தமாக வழங்கி வருகிறது.

உறவினர்களாகிய அமிர்த கவிராயரும் அனந்த கவிராயரும் ஒருமுறை ஒரு கவிதைப்போரில் ஈடுபட்டார்கள். வண்ணமொன்று குறித்த காலவரையறைக்குள் இருவரும் பாடவேண்டுமென்றும், அதில் இன்ன இன்ன வார்த்தைகளும் இன்ன இன்ன பொருளும் இன்ன இன்ன முறையில் அமைய வேண்டுமென்றும், யார் முன் பாடி முடிக்கின்றார்களோ அவர் மற்றவரின் காதை அறுத்து விடுவதென்றும் வரையறை செய்துகொண்டார்கள். அரசர் முன்பு இது நடைபெற்றது.

இருவரும் வண்ணம் பாடத் தொடங்கினர். அமிர்த கவிராயர் வண்ணம் பாடி எழுதிமுடித்து வைத்துவிட்டார். அப்போது அனந்த கவிராயர் இறுதி வரியை எழுதிக்கொண்டிருந்தார். அமிர்தனார் கையில் தோட்டியை எடுத்துக்கொண்டு, "இவரே தோற்றார்; இன்னும் வண்ணத்தை முடிக்கவில்லை. இவர் காதை அறுத்துவிடுவேன்" என்று அனந்தனாரை அணுகினார். அதற்குள் அனந்தனார் வண்ணத்தை முடித்து விட்டு, "பைத்தியமே! காதிருந்தாலல்லவோ அறுக்க முடியும்? அனந்தனுக்குக் காது ஏது?" என்று சாதுர்யமாகக் கேட்டார். அனந்தன் என்

பது ஆதிசேடனது பெயர். பாம்புக்குக் கண்ணே காதாக உதவுவதென்றும் அதற்குத் தனியே காதில்லையென்றும் சொல்வார்கள். அனந்தனுக்குக் காது ஏதென்ற வாக்கியம் ஆதிசேடனுக்குக் காதில்லையென்ற பொருளைத் தோற்றச் செய்தது. அனந்தனர் தாம் தோற்றதாகச் சொல்லிக்கொள்ளாமல் சாதுரியமாக இங்ஙனம் கேட்கவே யாவரும் கொல்லென்று நகைத்தார்கள். அமிர்த கவிராயர் தோட்டியைக் கீழே போட்டுவிட்டார். காதை அறுக்க வேண்டுமென்பது அவர் கருத்தன்று.

அரசர் அனந்த கவிராயர் பேச்சினுற் கவரப்பட்டார். அப்பேச்சுக்காகத் தனியே பரிசு வழங்கப்பட்டது. "அனந்த கவிராயர் பாட்டுக்கும் பரிசு பெறுவார்; பேச்சுக்கும் பரிசு பெறுவார்" என்று புலவர்கள் பேசிக்கொண்டனர்.






# கல்லினால் செய்த சாவி

பே. நா. அப்புஸ்வாமி ஐயர், பி.ஏ., பி.எல்.

---

மனிதர் எழுதுகிற எழுத்துக்களிலே எத்தனை பேதங்கள்! பாஷைக்குப் பாஷை வெவ்வேறு லிபி. சிற்சில பாஷைகளுக்கு—உதாரணம் ஸம்ஸ்கிருதம்—இரண்டு, மூன்று லிபிகள்; சிலவற்றுக்கு—உதாரணம் தமிழ்—ஒருகாலத்தில் ஒரு லிபியும் பின்னொரு காலத்தில் வேறு லிபியும் அதிகமாக வழக்கத்தில் இருந்திருக்கின்றன. காலத்தின் கொடுமையால் நாகரிகம் சிதைந்து அழிய அக்காலத்தில் வழக்கத்திலிருந்த சிற்சில லிபிகளும் அதனோடு மறைந்துபோயின. எகிப்திலும், பாபிலோனியாவிலும், மகேஞ்சதாரோவிலும் செழித்து வளர்ந்திருந்த நாகரிகங்கள் மண்ணோடு மண்ணாய்ப் போகவே அந்த நாகரிகங்கள் சிறப்புற்றிருந்த காலங்களில் அந்தப் பிரதேசங்களிலே வழங்கிய லிபிகளும் வழக்கொழிந்துபோயின.

இப்பொழுது, இந்தியாவின் வடமேற்குப் பிரதேசத்திலே உள்ள மகேஞ்சதாரோவிலே பழங்கால ஆராய்ச்சியின்பொருட்டுத் தோண்டிப் பார்த்தவர்களுக்குப் பற்பல பழைய சிதைவுகளும் சின்னங்களும் அகப்பட்டிருக்கின்றன. அவற்றுள் சிலவற்றிலே எழுத்துக்கள் காணப்படுகின்றன. 'என்ன பாஷை? என்ன லிபி? என்ன விஷயம்?' என்பவற்றில் ஒன்றும் உறுதியாகச் சொல்வதற்கில்லை. ஆனாலும் 'என்னுடைய நாகரிகம்', 'என்னுடைய லிபி', 'என்னுடைய பாஷை' என்று ஆராய்ச்சியாளர்கள் சண்டை போட்டுக்கொண்டிருக்கிறார்கள். போடட்டும்.

இதேமாதிரியாக எகிப்து தேசத்திலும் ஒருகாலத்தில் இருந்தது; அதாவது சுமார் நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னே. உலகத்திலே தோன்றிய நாகரிகங்கள் யாவற்றுள்ளும் காலத்திலே முற்பட்டது எகிப்துநாட்டு நாகரிகம் என்று சிலர் வாதாடுகின்றனர்; வேறு சிலர் இதை மறுக்கின்றனர். இதன் உண்மை என்னவாயினும், எகிப்திய நாகரிகம் மிகத்தொன்மையான நாகரிகங்களுள் ஒன்று என்பது உறுதி. மிகப்பழங்காலத்தில் எகிப்து நாடு

சீரிலும் செல்வத்திலும் கலைகளிலும் சிறந்திருந்தது என்பதும் நிச்சயம்.

அந்தப் பண்டைப் பழங்காலத்திலே எகிப்திலே வழங்கிவந்த லிபியை இப்பொழுது ஹைரோ-க்லிபிக்ஸ் என்று சொல்லுகிறார்கள். அதைச் 'சித்திர எழுத்து' என்று சொல்லலாம். கொக்கும் கழுகும் மனிதனும் கையும் இவற்றைப்போன்ற பிற சித்திரங்களுமே அந்த லிபியைச் சேர்ந்த எழுத்துக்கள். அந்தச் சித்திரங்களை எழுத்துக்களாகப் பாவித்து எகிப்து நாட்டினர் அவற்றை எழுதிப் படித்துவந்தார்கள். எகிப்தின் தொன்மையான நாகரிகம் அழிந்துபோனபோது இந்தச் சித்திர எழுத்தை எழுதும் வழக்கமும் அழிந்துபோய்விட்டது. அதனல் அந்நாட்டினர்கூட இவ்வெழுத்துக்களை முற்றிலும் மறந்துவிட்டார்கள்.

பிற்காலத்திலே, அந்நியநாட்டினர் எகிப்து தேசத்திற்குத் தேசாந்தரிகளாகவும் வியாபாரிகளாகவும் அதிகாரிகளாகவும் வந்த காலத்தில், அவர்கள் எகிப்தின் தொன்மை நாகரிகத்தின் சின்னங்கள் பலவற்றைக் கண்டார்கள். அவற்றிலே உள்ள சித்திரங்களைக் கண்டு மகிழ்ந்தார்கள். அச்சித்திரங்கள் யாவும் ஏதோ ஒரு லிபியைச் சேர்ந்தவை என்பதைத் தெரிந்து கொண்டார்கள். 'ஆனல் அந்த லிபி என்ன?', 'அதை எப்படிப் படிப்பது?' என்று தெரியவில்லை. எழுத்துக்களைப் படிக்கவே தெரியாதபோது எழுதியவற்றின் பொருள் விளங்கவில்லை என்று சொல்லவேண்டியதில்லை.

பதினெட்டாம் நூற்றுண்டின் முடிவிலே, பிரான்சு தேசத்தினர் எகிப்துநாட்டிலே ஆதிக்கியம் பெற்றிருந்தனர். அவர்களுடைய சைனியம் அங்கே இருந்தது. அவர்கள் அங்கே கோட்டைகள் முதலியவற்றைக் கட்டிக்கொண்டு தங்கள் அதிகாரத்தைப் பலப்படுத்திக்கொண்டிருந்தனர்.

ஒருநாள் அலெக்ஸாந்திரியா நகரத்தின் பக்கத்திலுள்ள ரோஸெட்டா என்னும் ஊரிலே ஸென்ட் ஜூலியென் என்னும் கோட்டைக்குச் சுவர் கட்டுவதற்காக அஸ்திவாரம் தோண்டிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது மண்ணிலே புதைந்துகிடந்த கருங்கல் ஒன்று அகப்பட்டது. மூன்றடி ஒன்பது அங்குல நீளமும், இரண்டடி நாலரை அங்குல அகலமும், பதினெரு அங்குல கனமும் உள்ளதாக அது காணப்பட்டது. அந்தக் கல்லும் முழுமையும் சுத்தமாய் இல்லை; மூளியாய்ச் சிதைந்தும் பெயர்ந்தும் போய்க் கிடந்தது; பார்ப்பதற்குத் துளிக்கூட அழகாகவே இல்லை. பின்னே அதைக் கவனிப்பானேன்? இரண்டாயிரம் வருஷமாய்ப் படிக்க முடியாமலிருந்த பாஷையின் இரகசியத்தை—

லிபியின் மர்மத்தைத்—துலக்குவதற்கு முதற்படியாயிருந்தது அந்தக் கல்! இதுதான் அதன் மகிமை.

அந்தக் கல் வெறும் படிக்கட்டுக் கல் அல்ல. அதிலே எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்தன. கோட்டை கட்டுகிற இடத்திலே படைத்தலைவராயிருந்த ஆந்த்ரே பூஸ்ஸார் என்பவர் அதிலே மூன்றுவகையான எழுத்துக்கள் இருக்கக் கண்டார். ஒன்று ஹைரோ-க்லிபிக்ஸ் என்னும் பழங்கால எகிப்துநாட்டு லிபி. இன்னொன்று, டிமாடிக் என்று சொல்லப்படும் பிற்கால எகிப்து நாட்டுப் பொதுமக்களிடை வழக்கிலிருந்த லிபி. மூன்றாவது கிரேக்க லிபி.

அப்பொழுது நெப்போலியன் கெய்ரோ நகரத்தில் இருந்தார். அந்தக் கல் கெய்ரோவுக்கு வந்து சேர்ந்ததும் அதைப் பார்த்த நெப்போலியன் அதனால் ஏற்படக்கூடிய பயனை உடனே தெரிந்துகொண்டார். அம்மூன்று வகையான லிபிகளில் எழுதப்பட்ட விஷயம் ஒரே விஷயமாக இருக்கக்கூடும் என்று அவர் எண்ணினார். அப்படியிருக்குமாயின் உலகம் அறிந்த கிரேக்கபாஷையை ஆதாரமாக வைத்துக்கொண்டு உலகம் மறந்த பழைய பாஷையைத் தெரிந்துகொள்ள முயலலாம் அல்லவா? அதனால் நெப்போலியன் அந்தக் கல்லைப்போலச் சில பிரதிகள் செய்து அவற்றைப் பாரிஸ் நகரத்துக்கு அனுப்பிவைத்தார். அந்தக் கல்லானது ரோஸெட்டா என்னும் ஊர்ப் புறத்திலே அகப்பட்டபடியால் அதற்கு ரோஸெட்டாக் கல் என்ற பெயர் வந்தது. அந்த ரோஸெட்டாக் கல்லின் பிரதாபமானது ஐரோப்பா முழுவதிலும் பரவிற்று. எங்கும், அறிவாளிகளிடையே, அதைப் பற்றிய பேச்சாகவே இருந்தது.

இப்படியிருக்கையில், நெல்ஸனுடைய கப்பற்படையானது பிரெஞ்சுக்காரரின் கப்பற்படையை நைல்நதியின் முகத்துவாரத்தின் அருகே முறியடித்ததன் பயனாக, ஆங்கிலேயர் அலெக்ஸாந்திரியா நகரைக் கைப்பற்றிக்கொண்டனர். அப்போது, பிரெஞ்சுக்காரர் எகிப்து தேசத்திலிருந்து திரட்டிய அருமையான பழங்காலப் பொருள்களெல்லாம் ஆங்கிலேயர்களுடைய கைவசமாயின. அவற்றினிடையே அவர்கள் ஆவலோடு தேடிய ரோஸெட்டாக் கல்லைக் காணவில்லை. அது எங்கே என்று விசாரித்தபொழுது, பிரெஞ்சுப் படைத்தலைவருள் ஒருவராகிய ஜெனரல் மெனூ என்பவர் அதன் மேல் ஆசைப்பட்டு அதைத் தம்முடைய சொந்தச் சாமான்களோடு வைத்துக்கொண்டார் என்பது தெரியவந்தது. உடனே, பீரங்கிப் படை ஒன்றை அனுப்பி அந்தக் கல்லை எப்படியாவது கைவசத்தில் கொண்டுவந்து விடவேண்டுமென்ற உத்தரவு பிறந்தது. பீரங்கிப் படையோடு சென்ற கர்னல் டர்னர் என்பவர் ஜெனரல் மெனூ

வின் வீட்டைச் சூழ்ந்துகொண்டு உள்ளே புகுந்து பார்க்கவே, அந்தக் கல்லை வெகு பத்திரமாகப் பாய்போட்டுச் சுற்றிக் கட்டி வைத்திருக்கக் கண்டார். கேவலம், ஒரு கல்லைக்கூட விடாமல் பற்றிக்கொண்டு போகிற ஆங்கில அதிகாரத்தைப் பார்த்து அங்குள்ள பிரெஞ்சுக்காரர் நகைக்க நகைக்க அவர் அந்தக் கல்லை எடுத்துக்கொண்டு வந்து, கப்பலேற்றி இங்கிலாந்துக்கு அனுப்பி வைத்தார்.

ஆயிரத்து எண்ணூற்றிரண்டாம் வருஷம் மார்ச்சு மாதத்திலே அந்தக் கல் லண்டனுக்கு வந்து சேர்ந்தது. அதைக் காட்சிச்சாலையில் வைத்துப் பத்திரப்படுத்தினர்கள். அந்தக் கல்லில் பொறித்த சில வரிகளை ஆதாரமாக வைத்துக்கொண்டு எகிப்திலே பிரமிட்டுகளிலும், எத்தனையோ கற்களிலும் பொறித்துள்ள பழங்காலச் செய்திகளின் மர்மங்களை விள்ள முடியுமா என்று உலகத்திலுள்ள அறிவாளிகள் பலர் மும்முரமாக முயலத் தொடங்கினர்கள்.

இப்போதைக்கு ஆறுயிரம் வருஷங்களுக்குமுன் வழக்கத்திலிருந்து, பிறகு வழக்கொழிந்து அழிந்துபோய், இரண்டாயிரம் வருஷகாலமாய் எழுதுவாரும் படிப்பாரும் இன்றி உருத்தெரியாமற்போன பாஷையின் மர்மத்தைக் கண்டுபிடிப்பது அவ்வளவு லேசான காரியம் இல்லை அல்லவா? ஆதலால் பலர் முயன்றும் அதன் இரகசியம் வெளியாவதற்கு இருபது வருஷத்துக்கு மேல் பிடித்தது. அதை ஆராய்ந்தறிந்து உலகம் அறியச்செய்த கௌரவம் நால்வரைச் சேர்ந்தது. ஜீன் பிரான்சாய் சம்போல்யன் என்னும் பிரெஞ்சு நாட்டினர் ஒருவரும், யங் என்னும் ஆங்கிலேயர் ஒருவரும், பாங்கேர்ஸ் என்னும் ஆங்கிலேயர் ஒருவரும், யான் ஏகேர்ப்லாட் என்னும் ஸ்வீடென் நாட்டினர் ஒருவரும் ஆகிய இந்நால்வருடைய முயற்சிகளால்தான் அந்தக் கல்லில் எழுதியிருந்த விஷயத்தைப் படிக்க முடிந்தது. அவர்களுடைய முயற்சிகளால் அவ்விஷயம் மட்டுமன்றி எகிப்து நாட்டுப் பண்டை லிபியையே தற்காலத்தில் வழங்கும் எழுத்தைப் படிப்பதுபோல எளிதில் படிக்க முடிந்துவிட்டது.

சித்திர எழுத்தால் எழுதியிருந்த விஷயத்திலே சில வார்த்தைகள் கட்டத்துக்குள்ளே அமைக்கப்பட்டிருந்தன. அப்படி அமைக்கப்பட்ட வார்த்தைகளிலே ஒரு வார்த்தை திரும்பத் திரும்ப ஐந்து முறை வந்திருந்தது. அந்தக் கல்லிலே எழுதப்பட்டிருந்த விஷயமானது, கி. மு. நூற்றுத் தொண்ணூற்றாரும் வருஷத்திலே, டாலெமி எபிபேனீஸ் என்னும் அரசன் எகிப்திலே

முடிசூடிய சந்தர்ப்பத்திலே மதகுரு ஒருவர் விடுத்த திருமுகம் என்பது தெளிவாகத் தெரிந்தது. இந்தத் திருமுகம் எழுதப்பட்டிருந்த கல்லில் கண்ட விஷயங்களை மீண்டும் மீண்டும் ஆராய்ந்து சிந்தித்துக்கொண்டிருந்த யங் என்பவரின் மனத்தில் திடீரென்று ஓர் எண்ணம் உதயமாயிற்று. சாதாரண எழுத்துக்களைப்போல் அல்லாமல் சிறப்பாகக் கட்டமிடப்பட்ட எழுத்துக்கள் அரசனுடைய திருநாமத்தைக் குறிப்பனவாக இருக்கலாம் என்று அவருக்குத் தோன்றிற்று. மேலும் டாலெமி அரசனுடைய பட்டாபிஷேகத்தை ஒட்டிய திருமுகத்தில் ஐந்து முறை காணும் பெயர் அந்த டாலெமி அரசனுடைய பெயராகத்தான் இருக்க வேண்டும் என்றும் அவருக்குத் தோன்றிற்று.

பிறகு, வேறொரு ஞாபகச்சின்னத்திலே பொறிக்கப்பட்ட அரசன்பெயரையும் ரோஸெட்டா கல்லில் கண்ட அரசன்பெயரையும் ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்த்தார். அவர் செய்த ஆராய்ச்சியின் முடிவாக ஞாபகச்சின்னத்தில் கண்டது பேரினிஸ் என்னும் அரசியின்பெயர் என்பது தெரியவந்தது. தாம் கண்டுபிடித்த விஷயங்களை அவர் பாங்கேர்ஸ் என்பவருக்குத் தெரிவித்தார்.

பாங்கெர்ஸ் என்பவரும் இந்த ஆராய்ச்சியில் மிகவும் ஈடுபட்டிருந்தார். டாலெமியின் பெயர் என்று யங் முடிவு கட்டிய எழுத்துக்கள் அதே முறையில் அதேபடியாக பைலே என்னும் தீவிலுள்ள ஜயஸ்தம்பம் ஒன்றில் பொறிக்கப்பட்டிருப்பதைப் பாங்கேர்ஸ் கண்டுபிடித்தார். அதே ஸ்தம்பத்தின் பாதத்திலே கிரேக்க மொழியிலே கிரேக்க லிபியில் குறித்திருந்தவற்றில் டாலெமி அரசனுடைய பெயரும் க்லியோப்பாட்ரா என்னும் அரசியின் பெயரும் ஒன்றாக எழுதப்பட்டிருந்தன. ஊகம் உறுதியாயிற்று.

மேலே சொன்னபடி யங், பாங்கேர்ஸ் என்னும் ஆங்கிலேயர் இருவர்தாம் இந்த மர்மத்தை விண்டனர் என்று ஒரு சாரார் கூறுகின்றனர். மற்றொரு சாரார் இந்த மகிமை முழுவதும் ஜீன் பிரான்சாய் சாம்போல்யன்* என்னும் பிரெஞ்சு ஆராய்ச்சியாளருக்கே உரியது என்று கக்ஷிசொல்லுகிறார்கள்.

---

*இவர் சிறுவயதிலேயே மிக்க ஆராய்ச்சித்திறம் படைத்தவராகக் காணப்பட்டார். பிரான்சு தேசத் தலைநகரிலுள்ள லூவர் காட்சிச்சாலையில் இவர் தலைமைஸ்தானம் வகித்துவந்தார். எகிப்து நாட்டைக் குறித்த ஆராய்ச்சிகளிலே இவர் மிகவும் ஈடுபட்டிருந்தார். இவருடைய ஆராய்ச்சித்திறனைத் தேசத்துக்குப் பயன்படுத்தும்பொருட்டு இவருக்கென்றே புதிதாக எகிப்து நாட்டுப் பழம்பொருள் ஆராய்ச்சியாளர் என்ற ஓர் உத்தியோகத்தை உண்டாக்கி, அந்த உத்தியோகத்திலே இவரை அமர்த்தினார்கள்.

இதன் உண்மை என்னவாயினும் இருக்கட்டும். டாலெமி, பெரினிஸ், க்லியோப்பாட்ரா என்னும் பெயர்கள் தெரியவே, அவற்றிலுள்ள எழுத்துக்கள் தெரியலாயின. இவ்வாறு தெரிய வந்த எழுத்துக்களை வைத்துக்கொண்டும், ரோஸெட்டா கல்லில் கண்ட கிரேக்க மொழியிலுள்ள திருமுகத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டும், அறிவாளிகள் மிகவும் முயன்று சித்திர எழுத்துக்கள் முழுவதையும் அறிந்துகொண்டனர். அதன் பிறகு அவ்வெழுத்துக்களிலே எழுதப்பட்ட எகிப்துநாட்டுப் பழங்காலக் குறிப்புகள் அனைத்தையும் படிப்பது எளிதாகிவிட்டது. அதனுல் எகிப்தின் பண்டைச் சரிதம்—ஆருயிரம் வருஷங்களுக்கு முற்பட்ட சரிதம்—நமக்கு நன்ருகத் தெரியலாயிற்று.

வெகு காலமாகத் திரட்டிய பொக்கிஷத்தைச் சிறு கதவானது பிறர் அணுகாமல் தடுக்கின்றது. சின்னஞ்சிறு சாவி அக்கதவைத் திறந்து பழஞ் செல்வத்தை அள்ளிக்கொள்ள உதவுகிறது. அச்சிறு சாவிபோன்றது இக்கல். இதன் மகிமையானது அறிவாளிகளால் என்றென்றும் கொண்டாடப்படும் என்பது உறுதி.






# அன்னுசி

ஸி. எஸ். ஜகதீசசுந்தரம் பிள்ளை

---

மொகலாய மன்னராகிய பேபர் குறித்துள்ள பழவர்க்க அட்டவணையில் அன்னுசிப்பழத்தைப்பற்றி யாதொரு குறிப்பும் காணப்படவில்லை. ஆனல் அக்பர் சக்கரவர்த்தியின் குமாரரான ஜஹாங்கீர் காலத்தில் அச்செடி இந்தியாவில் இருந்ததாக அவருடைய குறிப்புக்களினல் தெரியவருகிறது.

### உற்பத்தியான இடம்

முதலில் அன்னுசி தென் அமெரிக்காவிலுள்ள பிரெஸில் தேசத்தில்தான் பயிரிடப்பட்டு வந்தது. அமெரிக்காக் கண்டம் கண்டுபிடிக்கப்பட்ட பின்னர், மற்றைய நாடுகளில் பரவி, உஷ்ணப் பிரதேசங்களை யெல்லாம் தன் வளர்ச்சிக்குரிய இடங்களாகக் கொண்டது. பிரெஸில் தேசத்தில் இதற்கு நனுஸ் என்று பெயர் வழங்குகின்றது. போர்த்துக்கேஸியர் அனுனஸ் என்று பெயரிட்டனர். அதன் திரிபு அன்னுசி யாகும். ஆங்கிலத்தில் 'பைன் ஆப்பிள்' (Pine-apple) என்று பெயர்.

அன்னுசி இந்தியாவில் எந்தக்காலத்தில் எந்த நாட்டினரால் கொண்டுவரப்பட்டது என்று திட்டமாகச் சொல்லமுடியாது. இந்தியாவின் மேற்குச் சமுத்திரக்கரையில் முதன்முதலில் பயிரிடப்பட்டு வந்தது. அப்புறம் வங்காளம், அஸ்ஸாம், பர்மா, மலாய் முதலான நாடுகளில் பரவி அங்குச் செழித்து வளர்ந்து வருகின்றது. தென்னிந்தியாவிலும் ஏராளமாகப் பயிரிட்டு வந்த போதிலும் வட இந்தியப் பழங்களைப்போல அவ்வளவு உயர்தரமான பழங்களன்று இவை.

இந்தியாவிலிருந்து சீனதேசத்திற்குக் கொண்டு போகப்பட்ட அன்னுசி ஆங்கு விஸ்தாரமாகப் பயிராக்கப்பட்டு வருகிறது. சீனத்தவர் அதன் தாழையிலிருந்து நார் எடுத்து உயர்தர மஸ்லின்

உற்பத்தி செய்கின்றனர். நம் நாட்டில் நல்ல உயர்தரமான அன்னாசி கிடையாது. இந்தியாவைத் தவிர மற்றைய நாடுகளில் இனிமையுள்ள பழச் செடிகளைப் பயிரிட்டுப் பக்குவப்படுத்திக் குளிர்ப் பிரதேசங்களுக்கு அனுப்பிப் பெரும்பயன் அடைகின்றனர். வெள்ளையர் தோட்டங்களில் வளரும் செடிகள் சிலோன், பினாங்கு, மலாய் முதலான நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டவைகளே. வட இந்தியாவிலுள்ள ஸில்ஹெட் என்னும் இடத்தில் 'கூமலா' என்னும் சிறிய ஜாதிப்பழமும் டாக்காவில் வேறொரு வகையும் பயிராகின்றன.

## பயிரிடும் விதம்

அன்னாசி களிமண் நிலங்களில் செழித்துப் பெருத்து வளராது. மணற் பாங்கான நிலங்களிலும் சம சீதோஷ்ணமுள்ள இடங்களிலும் நன்றாய் வளர்ந்து சாறு நிறைந்த மாதுரியமான பெரும் பழங்களைத் தரும். இதனைப் பலவிதத்திலும் உற்பத்தி செய்யலாம். விதைகளை நட்டுப் பயிர் செய்யலாம். பக்கத்தில் விடும் கன்றுகளிலும் விருத்தி செய்யலாம். தலைக் கிளையாலும் அபிவிருத்தி செய்யலாம். தண்டின் துண்டினாலும் முளைக்க வைக்கலாம். வேர்களிலிருந்தும் பழங்களின் கீழ்ப்புறங்களிலிருந்தும் வளரும் கன்றுகளையும் பிரித்து நடலாம். நம் நாட்டிலுள்ள வியவசாய விற்பன்னர்களாவது வியவசாய இலாகா அதிகாரிகளாவது உயர்தரப் பழங்களை உற்பத்தி செய்வதற்கு வேண்டும் முயற்சிகளை இனியேனும் செய்துவந்தால் மற்றைய நாட்டினரைப் போல அபிவிருத்தியடைந்து நல்ல லாப மடைவார்களென்பது திண்ணம்.

மட்கின எரு, மணல், தழை, செத்தை, குப்பை, சாம்பல் முதலிய எருக்களை ஒரு பாத்தியில் கலந்து, தாய்ச் செடியிலிருந்து கன்றுகளைப் பிரித்து ஆறு அங்குலத்திற்கு ஒன்றாகத் தனித்தனியே நடவேண்டும். ஆறுமாதமானபின் செடிகளைப் பெயர்த்து அடிக்கு ஒன்றாக அவ்விடத்திலேயே நட்டுவிடவேண்டும். பின்னும் ஆறு மாதமானபின் கன்றுகள் ஒன்றரை அடி உயரம் வளர்ந்து இருக்கும். தண்ணீர் நிற்காத அதிக மணற் பாங்கான நிலங்களிலும் வடிகால் வசதிபொருந்திய நிலங்களிலும், ஆடி ஆவணிமாதங்களில் நடலாம். உஷ்ணம் அதிகமிருந்தால் நிழலுள்ள இடங்களில் நடலாம். குளிர்ச்சி பொருந்திய இடமானல் திறந்த வெளிகளில் நடலாம். எவ்வளவு உரமானாலும் அவ்வளவையும் அன்னாசிச் செடி ஏற்றுக்கொள்ளும் சக்திவாய்ந்தது. மீன் உரம், இரண்டாம் வருஷத்திய சாணி முதலிய எருக்களும் இருந்தால் நலம்.

ஓர் அடி ஆழமும் ஓர் அடி சதுரமுமான குழிகள் ஐந்தடி தூரத்திற் கொன்றாய் வெட்டினால் ஓர் ஏக்கரில் 1742 குழிகள் ஆகும். வெட்டியெடுக்கப்பட்ட மண்ணுடன் மட்கிய தழைகளைச் சமமாகக் கலந்து, கன்றுகளின் அடிப்பக்கத்திலிருந்து ஐந்தாறு தழைகளைக் களைந்துவிட்டு நடவேண்டும். தண்ணீர் பாய்ச்சும் போது தழைகளின் அடியில் நீர் தங்குமானால் செடிகள் அழுகி விடும். செடிகளின் நடுவில் இருக்கும் இடத்தைக் கொத்திக் களைகள் வளராவண்ணம் களைகளை நீக்கி விடவேண்டும். மழைக் காலத்தில் தண்ணீர் தேங்காவண்ணம் பார்த்துக் கொள்ளவேண்டும். மூன்று மாதமானபின் மட்கிய மாட்டு உரம் நாற்பது ராத்தலும், சாம்பல் இரண்டு ராத்தலும், முத்துக் கொட்டைப் பிண்ணாக்கு இரண்டு ராத்தலும், மீன் உரம் இரண்டு ராத்தலும் கலந்து செடி களின் பக்கத்திலிருக்கும் மண்ணையெடுத்து இவைகளைப் போட்டு மூடுதல் வேண்டும். கன்றுகள் நட்டு ஒரு வருஷமான பின்பு காய்க்க ஆரம்பிக்கின்றன. மேற்கிந்தியத் தீவுகளில் ஒன்பது மாதத்தில் காய்க்கின்றனவாம்.

## அதனால் ஏற்படும் பலன்கள்

தாழைநாரிலிருந்து பிலிப்பைன் தீவுகளில் நேர்த்தியான துணி நெய்கிறார்கள். மஹாராஷ்டிர தேசத்தில் மணிமாலைகள் கோப்ப தற்காக உபயோகிக்கிறார்கள். வங்காளத்தின் வடபாகங்களில் இந்நார் செருப்புத் தைப்பதற்காகப் பிரயோசனப்படுகிறது. சில கிராமங்களில் பந்தலுக்கு ஓலைக்கீற்று வேய்ந்து கட்ட உதவுகிறது. ஒரு சமயம் இந்த நாரை லண்டன் வர்த்தகச் சங்கத்திற்கு அனுப் பினபோது அவர்கள் இதைப் பரீக்ஷித்து அன்னாசி நார் சிறந்த தென்றும் டன் ஒன்றுக்கு 200 ரூபாயிலிருந்து 250 ரூபா வரை கொடுத்து வாங்கலா மென்றும் அறிவித்தார்களாம்.

அன்னாசிப் பழத்திற்குப் பூந்தாழம்பழம் என்றொரு பழமை யான பெயர் உண்டு. நல்ல பழுத்த பழத்தை உண்பதால் தேகா ரோக்கியம் உண்டாகின்றது. இது மலக்குடலைச் சுத்தம் செய்யும் குணமுடையது. நாம் உட்கொள்ளும் கடின பதார்த்தங்களை எளி தில் ஜீரணிக்கச் செய்யும் சக்திவாய்ந்தது. ஜீரண உறுப்புக்களைப் பலப்படுத்த வல்லது. சூலம், குன்மம், சோபம், ப்ளீகரோகம், நீடித்த காங்கை, வாதரோகம், வயிற்றுவலி இவைகளில் உப யோகிக்க நல்லது. அக்னி பலத்தை உண்டுபண்ணிப் பலத்தைக் கொடுக்கும். பிரமேகம், வெள்ளை, வெட்டை, வாந்தி, பித்தம், தாகம், தாபம், தலைவலி இவைகள் போம். மேனியழகுண் டாம்.

மேகவெட்டை வாந்திபித்த மீருவா மேனியிடும்
தாகமு மட்டாகுந் தலைவலிபோம்-பாகமுறு
பூந்தாழை யின்பழத்தைப் பூரிப் புடன்புசிக்க
ஆந்தாழ்வு மில்லை யறி.

## அன்னுசி ஷர்பத்

சாறுள்ளதும் பெரிதானதுமான பழுத்த அன்னுசிப் பழத்தைத் தோலைச் சீவி, சிறு துண்டுகளாக நறுக்கி ஆட்டுக்கல்லிலிட்டு ஜலம் விடாமல் அரைத்துச் சாற்றைப் பிழிந்து துணியில் வடிகட்டிக்கொண்டு காற்படி சாற்றுக்குப் படி ஜலம் விட்டு ஒரு வீசை அஸ்கா சர்க்கரையும் போட்டு அடுப்பில் வைத்துக் கிளறுக. சிறு தீ யிட்டு எரிக்கவேண்டும். சற்றுத் தேன்பதமானவுடன் கலர் பவுடர் போட்டு இறக்கவேண்டும். ஆறின பிறகு புட்டியில் போட்டுப் பத்திரப்படுத்திப் பாலிலேனும் ஜலத்திலேனும் ஐஸ் போட்டுச் சாப்பிட்டால் வாய்க்கு ருசிகரமாக இருக்கும். குளிர்ச்சி தரும். உஷ்ணத்தைத் தணிக்கும். வயிற்றுவலிக்கு நல்லது. ஆறு மாதம் கெடாமலிருக்கும்.






## என் புத்தகங்கள்

— அகராதி —

'குமுதினி'

---

ஒரு விதத்தில் நான் மிகவும் அதிர்ஷ்டசாலியே. ஏனெனில் பொழுதுபோகவில்லை என்ற குறையே எனக்குக் கிடையாது. எப்போதாகிலும் வேலை ஒன்றுமில்லாமலிருந்து, படிப்பதற்கும் புத்தகமொன்றும் இல்லாமலிருந்தால் உடனே எனது அருமை அகராதியை எடுத்து வைத்துக்கொள்வேன். *இந்தத் தமிழ் அகராதி இருக்கும்வரையில் பொழுதைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய நியாயமில்லையே!

நான் எழுதுவதில் சிற்சில சமயம் ஓர் அபூர்வச்சொல் இருந்தால் அதற்குக் காரணம் என்னுடைய அகராதியே. இது மாத்திரமல்ல. என்னுடைய அகராதியின் உதவியால் என் பாண்டித்தியத்தை வெளிப்படுத்துவதுடன், பிறருடைய அறியாமையையும் சில சமயம் வெளிப்படுத்துவேன். ஒருநாள் சற்றுக் கர்வியான ஒருவரைப் பார்த்து, "ஹைஹயம் என்றால் என்ன?" என்று கேட்டேன். "ஹைஹயமா? உம்....ஹைஹயம். ஹைஹயம்" என்று அவர் திரும்பத் திரும்பக் குதிரை ஓட்டுகிற மாதிரி கனைத்தாரேதவிர அந்த வார்த்தைக்கு அவருக்கு அர்த்தம் தெரியவில்லை. அதுமுதற்கொண்டு யாருடைய வாயையாகிலும்

---

*ஜூபிலி தமிழ்ப் பேரகாதி; B. அரங்கசாமி நாயகரவர்களால் வெளியிடப்பட்டது.

அடக்கவேண்டுமென்றால், "ஹைஹயம் என்றால் என்ன?" என்று நான் கேட்பது வழக்கம். இதைக் கண்ட ஒருவர் நான் கேலி செய்கிறேனென்றும் ஹைஹயம் என்ற வார்த்தையே கிடையாதென்றும் எண்ணி, நான் எதிர்பாராத சமயம் என்னிடம் வந்து திடீரென்று, "ஹைஹயம் என்றால் என்ன?" என்று கேட்டார். நானா தயங்குவேன்! "இது தெரியாதா? கார்த்தவீர்யார்ஜுனனுடைய தேசம்; நர்மதா தீரத்திலுள்ளது" என்றேன். அவர் ஏமாந்தவராய்ப் பேசாமல் போய்விட்டார். என்னுடைய அகராதியைப் படித்ததனால் ஏற்பட்ட லாபமல்லவோ இது!

இதர அகராதிகளைப் போன்றதல்ல என்னுடைய அகராதி. சாதாரணமாய் அகராதிகளில் சொற்களுக்கு அர்த்தம் இருக்கும். என்னுடைய அகராதியில் அவ்விதம் இருப்பதுடன் கூட, அர்த்தத்திற்கும் சொற்கள் இருக்கின்றன. உதாரணமாகப் பதினாறு வயதுப் பெண்ணைப்பற்றிச் சொல்ல விருப்பமிருந்தால் ஒவ்வொருமுறையும் அவளைக் குறிப்பிடப் பதினாறு வயதுப் பெண், பதினாறு வயதுப்பெண் என்று சொல்லிக்கொண்டேயிருக்கவேண்டியதில்லை. என்னுடைய அகராதியை எடுத்து நோக்கினால், "பதினாறு வயதுப் பெண்—யுவதி" என்றிருப்பதைக் காணலாம். அதற்கு மேல் அவளை யுவதி என்றே குறிப்பிடலாம். பனையின் பாளையில் உலர்ந்த இதழை நீங்கள் என்னவென்று சொல்லுவீர்கள்? இத்தனைநாட்கள்வரை எனக்கு அதன் பெயர் தெரியவே தெரியாது. உண்மையில் பனையின் பாளையில் உலர்ந்த இதழுக்கும், பாளையில் தங்காமல் கீழே விழுந்து உலர்ந்த இதழுக்கும் ஏதாவது வித்தியாசம் இருக்கிறதா என்பதுகூட எனக்குத் தெரியாது. என்னே என் மடமை! இப்பொழுது என்னுடைய அகராதியைப் பார்த்தேன். "பனையின் இளங்காய்—நுங்கு", "பனையின் பழுக்காய்—சீக்காய்", "பனையின் பாளையில் உலர்ந்த விதழ்—கொக்கரை" என்றெல்லாம் அதில் இருக்கிறது. இப்போது தெரிந்து கொண்டேன்: கொக்கரை. இவ்விதம் அகராதியில் அதைப் படிக்காவிட்டால் என் ஆயுள் முழுவதும் கொக்கரை என்ற பெயரை அறிந்து கொள்ளாமலே இருந்து கடைசியில் முழு அஞ்ஞானியாகவே மரிக்க நேரிட்டிருக்கும். எங்கள் வீட்டில் பனைமரமே கிடையாதாகையால் அதைப்பற்றித் தெரிந்துகொள்ள வேறு சந்தர்ப்பமும் வாய்த்திருக்காது.

மேலும், பொருளகராதி என்ற பாகம் ஒன்று இருக்கிறது. அதில் பொருள்களின் குணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஆத்மாவைப்பற்றி நாமெல்லோரும் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் ஆத்மா என்னவென்று ஸ்பஷ்டமாகச் சொல்வது மிகக்

கடினம். அநேகரால் அதை விளக்க இயலாது. என்னுடைய அகராதிக்கோ ஆத்மாவைப்பற்றி நன்ருகத் தெரியும். ஆன்ம லக்கணம் என்பதை எடுத்துப்பார்த்தால் ஆன்மா ஏகாநேக குண பாவமாய் நிற்பதையும், அதைப்பற்றிப் பரிணுமவாதி, சாங்கியன், பௌராணிகர், கவுளகர், பாதஞ்சலர், வைசேடிகர், பட்டாசார்ய மதத்தார், மிருதி நூலோர், சைவர், சமணர், ஐக்யவாதி, மாயாவாதி ஆகிய ஒவ்வொருவரும் எவ்வித அபிப்பிராயம் கொண்டுள்ளார்கள் என்பதையும் தெரிந்து கொள்ளலாம்.

இசைக்குப் பிறப்பிடம் எது என்று கேட்டால் சிலர் அவசரப்பட்டு முசிரி, செம்பை, அல்லது செம்மங்குடி என்று சொல்ல நேரிடலாம். அக்கேள்விக்குச் சரியான விடை எனக்குத் தெரியும்; அதாவது என்னுடைய அகராதிக்குத் தெரியும். இசைக்குப் பிறப்பிடம் நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணுக்கு, உதடு, பல், தலை எனவிவை. அடுத்தபடியாக மிடறு என்ருல் என்னவென்று நோக்கவேண்டியதே (என்னைப்போல் அதற்கு அர்த்தம் தெரியாதவர்கள்.)

ஆனல் என்னுடைய அகராதியில் மிக அருமையானது என்று நான் கருதும் விஷயம், "குறிற் கீழெதுகை", "நெடிற்கீழெதுகை" என்ற எதுகைச்சொற்கள் அடங்கிய பகுதியே. உண்மைக்கவி பிறப்பினுல் ஏற்படுபவர், படிப்பினுலல்ல என்ற கொள்கையை இந்த எதுகைச் சொற்களைப் படித்துப் பொய்யாக்கலாம் என்றே தோன்றும். புதிதாகச் செய்யுள், விருத்தங்கள் எழுத முயலுபவர்களுக்கு ஏற்படும் முக்கிய கஷ்டம் எதுகை ஒத்துவரும்படியான சொற்கள் அகப்படுவதே. என்னுடைய எதுகை அகராதியைப் புரட்டினுல் அந்தக் கஷ்டம் தீர்ந்துவிடும். எப்படிப்பட்ட சொற்களுக்கும் எதுகை எளிதில் அகப்படும். "மயக்கும் மங்காய்" என்று ஒரு கவி தமது காதலியைப்பற்றிக் கூறத்தொடங்கி விட்டுப் பிறகு எதுகைக்குத் திண்டாட நேரிடலாம். "கயக்கும்" என்ற கசப்பான வார்த்தை ஒன்றுதான் சுலபமாக ஞாபகத்திற்கு வரும். ஆனல் அந்தக் கவியிடம் என்னுடைய அகராதியிருந்தால் அன்னவள் பேரிலுள்ள காதலால் தன்னுடைய தேகத்தில் "குயக்கு" (தளர்ச்சி) ஏற்படுவதைப்பற்றியும், அக்காதலை வெளியிடத் தனக்கு இருக்கும் "தியக்கு" (கலக்கம், சஞ்சலம்) ப்பற்றியும் வெகு சுலபமாய்ப் பாடக்கூடும்.

வீராவேசம் கொண்ட கவிக்கு, "கத்து, குத்து, கொத்து, மொத்து, நொத்து, துத்து, தெத்து" என்று நிறைய எதுகைச் சொற்கள் இருக்கின்றன. அது, இது, எது என்று சுலபமாகத் தோன்றக் கூடிய மூன்று அடிகளை எழுதிவிட்டு நான்காவது அடிக்

குத் திண்டாடவேண்டாம். அகராதியைப் பார்த்துத் "துது" (எருது) என்ற பதத்தைத் தெரிந்து கொள்ளலாம். உண்மையில் அது, இது, எது என்ற பதங்களுடன் துது என்ற சொல்லை உபயோகித்து எழுதவேண்டுமென்று எனக்கு ஆவலாக இருக்கிறது:

> "எதுஎனக் களிப்பாய் செப்புவீர் அப்பா
> அது ஒரு மோட்டார் அண்ணன் கொண்டான்
> இது ஒரு குதிரை இளையவன் சொத்தாம்
> துதுவோ எனக்குத் தோற்றவன் நானே!"

என்று ஒரு பிள்ளை தன் தகப்பனாரைக் கேட்க நேரிடலாம்.

கிழம் என்பதற்கும் நான்கு எதுகைச் சொற்கள் இருக்கின்றன. 'பழம் கிழவர்களும் எங்களுடைய தழம் (தைலம்) உபயோகித்தால் மழம் (இளமை) பெறுவார்கள்' என்று தைலவியாபாரிகள் சொல்லலாம். ஆனால் சில சொற்களுக்கு மூன்று எதுகைகள் இருக்கின்றன. அண்ணி, கண்ணி, கிண்ணி என்பதுபோல. யாராவது ஒரு கவி தம் அண்ணியைப்பற்றி எழுத விரும்பினால் நான்காவது வரிக்குச் சற்றுச் சிரமப்படுவார்.

வண்ணார், நண்ணார், எண்ணார் எனக் காண்கிறது. வண்ணார் நமக்கு நண்ணாராக (சத்ருவாக)த் துணியை எண்ணார் (எண்ண மாட்டார்கள்) தொலைத்துவிடுவார்கள் என்று சொல்ல யாவருக்கும் விருப்பமுண்டாவது இயல்பே. ஆனால் எண்ணார் என்பதற்கும் சத்ரு என்ற அர்த்தமே இருக்கிறது. எண்ண மாட்டார்களென்ற அர்த்தத்தில் பிரயோகிக்கலாமோ என்னவோ தெரியவில்லை. இவ்விதம் சம்பந்தமற்ற சொற்களைக்கொண்டு விருத்தங்கள் எழுதினால் எவ்விதமிருக்கும் என்று கற்பனை செய்துகொண்டே இருந்தால் எனக்கு ஒரு நாள் ஒரு நிமிஷமாகக் கழிந்து விடுவதில் ஆச்சரியமென்ன?

இன்னும் மற்றொரு விதத்திலும் என்னுடைய அகராதி சிறந்து விளங்குகிறது. வெகுநேரம் படித்துக் களைத்துப் போனேனாகில் அதை அப்படியே தலைக்குக்கீழ்த் தலையணையாக வைத்துக்கொண்டு சுகமாய்த் தூங்கலாம். நான் என்னுடைய அகராதியைப் பெருமையுடன் வைத்திருப்பதைப் பார்த்த ஒருவர் மிகப் பொறாமைப்பட்டுச் சட்டென்று கடைக்குச் சென்று ஒன்றுக்கு இரண்டாக இருக்கட்டுமென்று இரண்டு அகராதிகளை வாங்கிக்கொண்டு வந்தார். என்ன பயன்! அவைகளை ஒரே கையினால் தூக்கிவிடலாம். மிகவும் மெலிந்தவை. இரண்டையும் சேர்த்து வைத்துக் கொண்டால்கூட என்னுடைய அகராதியின் பருமனாகிலும் விஸ்தீரணமாகிலும் இருக்குமா? சுகமாய்த் தூங்கமுடியுமா? முடியவே முடியாது. கழுத்தைத்தான் சுளுக்கிக்கொள்ளும். என்

னுடைய அகராதியைத் தூக்கிப் படிக்கமுடியாத சமயங்களிலெல்லாம், (அந்த அகராதியை எடுக்கும் ஒவ்வொரு சமயமும் அப்படித்தான்) நான், "இதன் ஆசிரியர் ஏன் இவ்வித அகராதியைப் பதிப்பித்தார்! சொல்லகராதி வேறு, பொருளகராதி வேறு', எதுகை அகராதி வேருக வெளியிட்டிருந்தால் எவ்வளவு நலமாக இருக்கும்" என்று நினைத்ததுண்டு. அவ்விதம் செய்திருந்தால் பொருளகராதியில் விடப்பட்டிருக்கும் இன்னும் பல விஷயங்களையும் சேர்த்துத் திரட்டி வெளியிட்டிருக்கலாம். ஆனல் நான் தூங்குவதற்கு இந்த அகராதி எவ்வளவு சௌகரியமாக இருக்கிறதென்று எண்ணுங்கால், 'போனல் போகிறது; பெரிய புத்தகமாக இருக்கிறதல்லவா?' என்றெண்ணிச் சந்தோஷிப்பேன்.

அகராதிகளைப்பற்றிச் சொல்லுகையில் என்னுடைய அலமாரியில் இருக்கும் மற்ரோர் அகராதியின் நினைவு வருகிறது. இது வங்காளி பாஷையில் தற்காலத்தில் வழங்கும் சொற்களின் அகராதி; "சலந்திகா" என்று பெயர் கொண்டது. சாதாரணமாகப் பேசப்படுபவையும், தற்காலத்துப் பத்திரிகை, கதைப் புத்தகங்கள் முதலியவற்றில் கையாளப்படுபவையுமான சுமார் இருபத்தையாயிரம் சொற்கள் அடங்கியது. மெல்லிய 'கிளேஸ்' காகிதத்தில் அச்சிடப்பட்டு நன்ருகப் பைண்டு செய்யப்பட்டது. ஒரு கோட்டின் ஜேபியில் அடங்கி விடும். அகராதியின் முன்னுரையில் வங்காளி எழுத்துக்கள், எண்கள், அவைகளை எண்ணும் விதம், இலக்கணச்சுருக்கம், வினைமுற்றுக்களின் இயல்பு ஆகியவை தெளிவாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு சொல்லும், அது வடமொழியிலிருந்து வந்த சொல் அல்லது வங்காளிச்சொல் என்பதைப் பற்றிய விவரத்துடன் விளக்கப்பட்டிருக்கிறது. அகராதியின் இறுதியில் தனித்தனிப் பகுதியாகக் கொச்சைப் பேச்சுக்களின் சரியான மொழி, (போச்சு=போயிற்று, கார்த்தாலே=காலையில்) ஆங்கில விஞ்ஞானச் சொற்களுக்குச் சரியான வங்காளி மொழி ஆகியவை கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவ்விதம் கொடுத்திருப்பதிலும் பார்ப்பவர்களின் சௌகரியத்தை உத்தேசித்து விஞ்ஞானப்பகுதிகள் பிரிக்கப்பட்டு, பூகோளம் (*Geography*), பூதத்வம், (*Geology*), ஜீவவித்தை (*Biology*), ஜோதிஷம் (*Astronomy*), ரஸாயனம் (*Chemistry*), கணிஜவித்தை (*Minerology*), பதார்த்த விஞ்ஞானம் (*Physics*), கணிதம் (*Mathematics*), மானஸவிஞ்ஞானம் (*Mental Science*), தர்சனம் (*Philosophy*) என்று பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. என்னுடைய அலமாரியில் மற்ருெரு பெரிய வங்காளி அகராதி இருக்கிறது. இருந்தும் - இரண்டுவருஷமாக நான் வங்காளி பாஷையைப் புதிதாகப்

படித்து வந்தபோதிலும் - இந்தச் சிறிய அகராதியைத் தவிர அப் பெரிய அகராதியை எடுத்து உபயோகிக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. கல்விகற்க ராஜமார்க்கம் கிடையாது என்று ஆங்கிலத்தில் சொல்வது வழக்கம். அதாவது ஓர் அரசனாக இருந்தாலும் அவன் தன்னுடைய மூளையை உபயோகித்துச் சிரமப்பட்டு உழைத்தே கல்வியைக் கற்றாக வேண்டும், அவனுக்காக மற்றொருவன் சிரமப்பட முடியாது என்பது. ஆனால் இவ்வித அகராதியை எழுதிய ஸ்ரீமான் ராஜசேகர வஸு வங்காளிபாஷை கற்பவர்களுக்கென்று ஒரு நேர்த்தியான கப்பிரோடு தயாரித்துக் கொடுத்திருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. இந்த அகராதியின் அமைப்பின் அழகைப் பார்ப்பதே ஒரு சந்தோஷமாகும்.



# மொழிவளர்ச்சிபற்றித் தொல்காப்பியர் கொண்ட கருத்துக்கள்

# III

எஸ். வையாபுரிப் பிள்ளை, பி.ஏ., பி.எல்.
(தமிழாராய்ச்சித் துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்)

---

**த**மிழொலிக்கண இயல்புபற்றித் தொல்காப்பியர் செய்துள்ள ஆராய்ச்சி போன்று பிறமொழிகளுக்கு இலக்கணம் வகுத்த ஆசிரியர்கள் செய்திலரென்று தோன்றுகிறது. ஒலிக்கணவியல்புகளில் ஒரு சில, சொற்கள் புணருமிடத்துக் காணப்படுவனவாம். இவ்வியல்புகளைச் சந்திவிதிகளாக இலக்கண நூல்கள் வகுத்துரைக்கும். தொல்காப்பியரும் இச்சந்திவிதிகளைப் புணரியல் முதல் குற்றியலுகரப் புணரியல் ஈறாகவுள்ள ஆறு இயல்களாற் கூறினர். இச்சந்தி விதிகளையே பிறமொழிகளுக்குரிய இலக்கண ஆசிரியர்களிற் பெரும்பாலார் நன்கு ஆராய்ந்து முறைப் படுத்துத் தெளிய உணர்த்தியிருக்கின்றனர்.

*தொல்காப்பியரும் பிறமொழி இலக்கண ஆசிரியர்களும்*

மெய்ம்மயக்கம் உடனிலைமயக்கம் முதலியவற்றை அவர்கள் ஆராய்ந்தாரல்லர். உதாரணமாக, பாணினியார் இயற்றிய வடமொழிப் பேரிலக்கணத்தில் இம்மயக்கங்கள் கூறப்பெறவில்லையெனத் தெரிகின்றது. இங்ஙனமாகத் தமிழொலிக்கண வியல்புகளில் ஒரு முக்கிய அம்சமெனக் கருதத் தக்க இப்பகுதி தொல்காப்பியமாதிய தமிழிலக்கணங்களில் மாத்திரமே காணப்பெறுகின்றது.

மெய்ம்மயக்கம் முதலியவற்றை முதன்முதல் ஆராய்ந்து தெளித்தவர் யாவர்? பண்டை இலக்கணநூல்களிற் பெரும்பாலன இறந்துபட்டமையினாலே ஒருதலையாகத் துணிந்து கூற இயலவில்லை. தொல்லாசிரியர்கள் பிறர் கூறுவனவற்றை மேற்கொள்ளுமிடத்துத் தொல்காப்பியர் 'என்மனார் புலவர்', 'என்ப' முதலிய வாசகங்களாற் பெரும்பாலும் உணர்த்திச் செல்வர். இவ்வகை வாசகங்கள் மெய்ம்மயக்க முதலியன கூறும் பகுதிகளிற் காணப்படவில்லை. தொல்காப்பியத்துக்கு உரை வகுத்த உரைகாரர்களும் இப்பகுதிகளுக்குரிய உரையிற் பிறநூல் மேற்கோள்கள் காட்டினார்களல்லர். இக்காரணங்களால் இவ்வொலிக்கண நுட்பங்களை முதன்முதலில் தொல்

*முதன் முதலில் ஒலியியல்புகளை ஆராய்ந்தவர் யார்?*

காப்பியரே ஆராய்ந்து வெளியிட்டிருக்கலாமென்று தோன்று கிறது.

ஒலிக்கண இயல்புகளை இங்ஙனம் நன்குணர்ந்த தொல்காப் பியர் வடமொழி முதலிய பிறமொழிச் சொற்களைத் தமிழில் வழங்குமிடத்து அதிகரிக்க வேண்டும் விதிகளை அவ்வொலி யியல்புகளோடு பொருந்தவே அமைத்திருக்கின்றனர். உதாரணமாக,

தொல்காப்பி யரது முறை

> வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
> எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே. (தொல். சொல். 885)
> சிதைந்தன வரினு மியைந்தன வரையார். (தொல். சொல். 886)

என்ற சூத்திரங்களைக் காண்க. வடசொற்கள் தமிழிலே வழங்கு மிடத்து, சில சொற்கள் இருமொழிக்கும் பொதுவாயுள்ள எழுத் துக்களால் இயன்றுவரும். கமலம், விமலம் என்பன இவ்வாறு வந்தன. சில சொற்கள் சிதைந்து வரும். இவ்வாறு சிதைந்து வருவனவற்றுள் ஆணை, நட்டம், கண்ணன் முதலிய பாகதச்சிதை வுகளும் உரைகாரர்களால் அமைக்கப் படுகின்றன. சொற்கள் சிதைந்து வரு முறையை,

> அந்நாற் சொல்லுந் தொடுக்கும் காலை
> வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
> விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்
> நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
> நாட்டல் வலிய வென்மனார் புலவர். (தொல். சொல்.)

என்ற சூத்திரம் அறிவிக்கின்றது. இங்கே குறிப்பிட்ட முறை களுள் ஏற்பன கொண்டு பிறமொழிச் சொற்கள் திரிந்துவரு வனவாம். ஆனால் திரிந்துவருதல் தமிழ்மக்களுடைய உச்சாரண நெறிக்கு—பேச்சு வழக்கத்திற்கு—ஒத்ததாயிருத்தல் வேண்டும்; அஃதாவது தமிழ்மொழிக்குரிய ஒலிக்கண வியல்புகட்கு ஒத்ததா தல் வேண்டும். மேலைச் சூத்திரத்தில் 'என்மனார் புலவர்' என்று காணப்படுவதனால், தொல்காப்பியரால் நன்கு மதிக்கப்பட்ட முந்து நூலாசிரியர்களுடைய கருத்தினையும் வழக்கினையும் ஒட் டியே இங்ஙனம் விதி வகுக்கப்பட்டதெனக் கொள்ளுதல் சாலும்.

தாம் விதித்த விதிகட்குத் தாமே இலக்கியம் காட்டுவார் போன்று தமது பேரிலக்கணத்திலே பிறமொழிச் சொற்கள் பல வற்றைத் திரித்து ஆசிரியர் தொல்காப்பியனார் வழங்கியுள்ளார். இவ்வாறு வழங்கியசொற்கள் இருவகைப்படுதல் காணலாம். ஒன்று வடமொழிக்கும் தமிழுக் கும் பொதுவாயுள்ள எழுத்துக்களான் இயன்ற வடசொற்களாம். அவையாவன ஒலியியல்பில் தமிழோடு ஒத்து

தொல்காப்பியரது வட சொல் ஆட்சி

இயங்கும் ஒரு சில வடசொற்கள். இவற்றைப் பெரும்பாலும் திரித்தலின்றி ஆசிரியர் வழங்கினர். பிறிதொருவகை பாகதச் சொற்களாகும். இப்பாகதச் சொற்கள் வடசொற்களின் திரிபென் பதே பூர்வாசிரியர்களின் கொள்கை. இக்காலத்துள்ள ஆராய்ச்சி யாளர் இவ்வாறு கொள்ளுவதில்லை. வழக்கிலிருந்த பாகதச் சொற் களை இலக்கண நெறிப்படி திருத்தியமைத்தனவே அச்சொற்களின் வடமொழி வடிவங்கள் என்பர். இவ்விரு கொள்கைகளின் வன் மை மென்மைகளை இங்கே ஆராயவேண்டும் ஆவசியகமின்று. பாகதத்தின் ஒலிக்கணவியல்பு பெரும்பாலும் தமிழொலிக்கண வியல்போடு ஒத்திருத்தலால் பாகதச் சொற்களை வடிவுசிதையாது இருந்தபடியே தொல்காப்பியர் எடுத்தாண்டனர்.

ஒலிக்கணவியல்பிலே வடமொழியும் தமிழும் வேறுபட்டும் பாகதமும் தமிழும் நெருங்கித் தொடர்பு பட்டும் இருத்தலினால் தொல்லாசிரியர்கள் வடமொழி வடிவங்களைக் காட்டினும் பாகத வடிவங்களையே தமிழில் எடுத்தாண்டு வந்தார்கள். தொல்காப்பிய ரும் இந்நெறியையே பின்பற்றித் தமது பெருநூலிற் சொற்களை எடுத்தாண்டனர். இங்ஙனம் செய்ததனால் தமிழொலிக்கணத் தின் தனிப்பட்ட பண்பானது பெரிதும் பாதுகாக்கப்பட்ட தாயிற்று.

இனி மேற்குறித்தவாறு தொல்காப்பியர் எடுத்தாண்டுள்ள வடசொற்கள்[1] வருமாறு:

அந்தம்: 487; பொ. 144, 145, 240.
அந்தரம்: பொ. 144.
அம்போதரங்கம்: பொ. 452, 455.
அமரர்: பொ. 79, 144.
அமுதம்: பொ. 144.
அவி: பொ. 75.
ஆரம் (மாலை): பொ. 623.
உலகம்[2]: 541; பொ. 76, 77.
உவமம்: 204, 210; பொ. 49, 51, 52, 194, 239, 273, 279, 281, 284, 286, 287, 288, 292, 293, 296, 302, 306, 308.
உவமை: பொ. 280, 303.
ஊறு: 783.
ஏது: பொ. 165, 204, 468, 480, 644.
கபிலை: பொ. 87.
கரகம்: பொ. 611.
கரணம்: பொ. 140, 141, 142, 143, 144.
கருமம்: 568; பொ. 121, 168, 503.
காமம்: பொ. 53, 54, 75, 79, 81, 89, 106, 109, 111, 113, 117, 144, 145, 149, 150, 158, 161, 175, 190, 194, 270, 427, 483.
காயம் (விண்): 305.
காரணம்: 504, 505, 523; பொ 109, 112.

---

1. சொற்களை யடுத்துள்ள எண்கள் திரு. நமசிவாய முதலியாரவர்கள் பதிப்பித்த தொல்காப்பிய மூலத்திற் குரியன. 'பொ' என்றது பொருளதி காரம்.

2. காலம், உலகம் என்பன தமிழ்ச்சொற்கள் என்பர் நச்சினர்க் கினியர்.

காலம்[2] : 164, 241, 541, 554, 593, 595, 682, 683, 685, 691, 697, 698, 699, 705, 713, 718, 723, 724, 725, 726, 729, 731, 732, 734, 738, 765, 899, 911, 941, 936; பொ. 39, 44, 74, 88, 110, 148, 184, 203, 245, 311, 504.
குணம் : 900.
குஞ்சரம் : பொ. 564.
சிந்தை : பொ. 109.
சின்னம் : பொ. 450, 453.
சூதர் : பொ. 88.
தா : 930.
தாரம் : பொ. 77.
திசை : 201, 431, 933.
தூது : பொ. 117, 268.
தெய்வம் : 487, 541; பொ. 20, 39, 50, 113, 148, 269, 416.
நாடகம் : 56.
நிமித்தம் : பொ. 39, 88, 101.
பதி : பொ. 189.
பருவம் : பொ. 144.
பலி : பொ. 75.
பூதம் : 242, 541.
மங்கலம் : பொ. 88, 241.
மண்டிலம் : பொ. 44, 421, 423.
மதி : 483; பொ. 125, 252.
மந்திரம் : 933; பொ. 468, 481.
மாயம் : பொ. 112, 145.
மானம் : பொ. 44.
முகம் : பொ. 150.
முரசு : பொ. 612.
வருணன் : பொ. 5.
வள்ளி : பொ. 85, 92.
வாணிகம் : பொ. 618.

வடமொழிச் சொற்கள் சிறிதளவே திரிந்துவந்தன மேலே தரப்பட்டன. அம்மொழியிலுள்ள தொகைமொழி தானும் யாதொரு வேறுபாடுமின்றி வழங்கப்பட்டிருப்பது அம்போதரங்கம் என்றதனை நோக்கியறியலாம்.

வடமொழிச் சொற்களை நேரே எடுத்தாளாது பாகதத்தின் வழியாகக் கொண்டு வழங்குதலே பண்டைக்காலத்துப் பெரு வழக்காயிருந்ததென மேலே குறித்தேன். இவ்வழக்கோடொப்ப, பாகதத்தின் வழியாகத் திரித்து, தமிழ்மொழியோடு வேற்றுமை தோன்றுவண்ணம் ஆசிரியர் தொல்காப்பியர் தமது நூலில் வழங்கியுள்ள சொற்கள் வருமாறு :

அரசர் : பொ. 74.
அரணம் : பொ. 66.
அவை : பொ. 75.
ஆசான் : பாயி.
ஆசிரியர் : 315, 389.
ஆணை : 880.
இமை : 7.
இலக்கணம் : 510, 544, 545.
உரு : 17, 40, 139; பொ. 244.
உருவு : 17.
ஏமம் : பொ. 40, 53, 77, 109, 190.
ஐயர் : பொ. 143, 144.
கவரி : பொ. 562, 580, 582, 600.
சுண்ணம் : 888, 890; பொ. 310.
தாபதம் : பொ. 74, 77.
தூணி : 239.
தேயம் : பொ. 43, 74.
நிச்சம் : பொ. 96.
பக்கம் : பொ. 44, 65, 75.
படிமை : சிறப்; பொ. 30.
பண்ணத்தி : பொ. 483.
பார்ப்பனர் : பொ. 74, 191, 491, 492, 499.
பையுள் : 825.
மாராயம் : பொ. 65.
வண்ணம் : 562; பொ. 199, 515-365.

---

# தமிழ்ப் புராணங்கள்

எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை, எம். ஏ., எல். டி.

## 2

மும்பையில் வெளியான வடமொழிச் சிவமஹாபுராணத்தில் ஏழு ஸம்ஹிதைகள் காணப்படுகின்றன வென்றும் தமிழ் மொழிபெயர்ப்பில் ஆறு ஸம்ஹிதைகள் காணப்படுகின்றன வென்றும் முன்னர் உரைக்கப்பட்டது. தமிழ் மொழிபெயர்ப்பு தென்னாட்டிற் காணும் கிரந்தக் கையெழுத்துப் பிரதிகளை மூலமாகக் கொண்டு இயற்றப்பட்டிருத்தல் கூடுமென்றும் உரைக்கப்பட்டது. பின் காண நேர்ந்த அடையாற்று நூல்நிலயத்து நாகரி லிபிச் சிவமஹாபுராணம்,

| | | | |
|---|---|---|---|
| ஜ்ஞாந ஸம்ஹிதை | 78 | அத்தியாயங்கள் | (தமிழ் 78) |
| வித்யேசுவர ஸம்ஹிதை | 16 | ,, | ( ,, 13) |
| கைலாஸ ஸம்ஹிதை | 13 | ,, | ( ,, 13) |
| ஸநத்குமார ஸம்ஹிதை | 57 | ,, | ( ,, 57) |
| வாயு ஸம்ஹிதை | 60 | ,, | ( ,, 60) |
| தர்ம ஸம்ஹிதை | 65 | ,, | ( ,, 64) |

என்னும் ஆறு ஸம்ஹிதைகளோடு கூடியதாய்த் தமிழ் மொழிபெயர்ப்புக்கு நேரே மூலமாகுந் தன்மையது. முறை மாத்திரம் சிறிது பிறழ்ந்துளது. அந் நாகரிலிபிப் பதிப்பு எவ்விடத்து அச்சானதென்று விளங்கவில்லை.

### திருவையாற்றுப் புராணம்

இது சேப்பேச புராணம் என வழங்கும் முதற்புராணம். இதனை இயற்றியவர் நிரம்பவழகிய தேசிகர் மாணாக்கர் ஞானக்கூத்தர். இவர் பாயிரத்துள் நூல்வந்தவழி யுரைக்குங்கால்,

> திருத்தமுள பதினெட்டிற் சிவபுரா ணம்பத்தாம்
> உருத்திரநற் சிவபுரா ணம்மதனி லொன்றின்பேர்
> அருத்திமிகு சிவபுரா ணந்தன்னை யாராய்ந்து
> பொருத்தமுடன் பஞ்சநதிப் புராணத்தைத் தமிழ்செய்வாம்

எனப் பஞ்சநத மான்மியம் சிவமஹாபுராணத்தில் உள்ளதெனக் குறித்தார். உருத்திர சிவபுராண மென ஒரு புராண மிருப்பதாகத் தெரியவில்லை. சிவமஹாபுராணத்துள் உருத்திர சங்கிதைகள் உருத்திர சங்கிதை, சதருத்திர சங்கிதை, கோடிருத்திர சங்கிதை யென மூன்றுண்டு. இவற்றுள் இத்தல மான்மியம் காணப்படவில்லை. இந்நூல் 20 விருத்தங்களையுடைய பாயிரமும், 417 விருத்தங்களையுடைய 12 சருக்கங்களும் கொண்டது.

ஞானக்கூத்தர் தமக்குக் கிடைத்த அகத்தியச் சருக்கமுதலிய பன்னிரண்டு சருக்கங்களைப் பாடினாரெனவும், இந்நூலையன்றி நிரம்பவழகிய தேசிகர் முதலிய பெரியார் பலரும் வடமொழியி னின்று மொழிபெயர்த்த நூல்களுமுண்டெனவும் 1930-ஆம் ஆண்டுப் பதிப்பின் முகவுரை கூறுகின்றது.

வடமொழியினின்று தமிழில் வசனமாக மொழிபெயர்த்து அச்சிடப்பட்ட இரண்டு புத்தகங்கள் உண்டு. திருவையாற்றில் பார்த்திவ ஹு கார்த்திகை மீ (1885) அச்சிடப்பட்ட புத்தகத் தில் 37 அத்தியாயங்களை யுடைய பஞ்சநத மான்மியம், 9 அத்தியா யங்களை யுடைய ஜப்பியேசுவர மான்மியம் என இரண்டு பாகங்க ளுண்டு. ஞானக்கூத்தர் புராணத்திலுள்ள விஷயங்களிற் பெரும் பான்மையும் ஜப்பியேசுவர மான்மியத்திற் காணப்படுகின்றன. 26 அத்தியாயங்கள் கொண்ட வேறொரு பஞ்சநத மான்மியம் 1907-இல் தஞ்சையில் அச்சிடப்பட்டது. மேல்மான்மியத்துக்கும் இதற்கும் ஒற்றுமை அதிகமுண்டு.

## திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்

திராவிட மாபாடியஞ் செய்த சிவஞான முனிவரின் மாணாக் கருளொருவராகிய இலக்கணம் ஸ்ரீ சிதம்பரநாத முனிவர் இயற்றிய திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்,

> சைவபுரா ணத்திலகு சதமருவு ருத்திரப்பேர் சார்ந்த கோடி
> மெய்வளர்சங் கிதையதனி லொருமூன்று முத்தரகாண் டத்துமேய
> பைவளர்பாம் பணியணிந்த பாடலேச் சுரன்சரிதைப் பகுதியாவும்
> தெய்வமுனி வரர்மகிழ வமுதமழை பொழிவனபோற் றெரித்த மன்னே

என ஆசிரியர் நூல்வரலாறு உரைத்தபடி சிவமஹா புராணத்துச் சதகோடி சங்கிதையில் மூன்றாவதாகிய உத்தரகாண்டத்துக் கூறிய கதையை உரைத்ததாகல் வேண்டும். சிவமஹாபுராணத்துச் சத ருத்திர சங்கிதையும் கோடிருத்திர சங்கிதையும் காணப்படுகின் றனவே யன்றி வேறுவகையான சங்கிதையும் காண்டமும் காணப் பெறவில்லை. திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம் பாயிரம், நாட்டுப் படலம், நகரப்படலம் உட்படப் பத்தொன்பது சருக்கங்களை யுடையது. செய்யுள்கள் 987. இது வசனத்தோடு துர்முக ஹு மேடரவி (1896) அச்சிடப்பட்டது.

## பூவாளூர்ப் புராணம்

திருவாவடுதுறை யாதீனத்து ஸ்ரீ கச்சியப்ப சுவாமிகள் இயற் றிய பூவாளூர்ப் புராணம்,

> திருத்த னல்கிய புராணமூ வாறினுட் சிறந்தரு டருஞ்சைவத்
> திருத்தி ரப்பெயர் பூண்டசங் கிதைதனி லோங்குகேத் திரகண்டத்
> தருத்த மல்கநன் குரைத்தகூ விளவனத் தான்றமான் மியஞ்சாலப்
> பெருத்த வையகத் தனைவருந் தெரிதரப் பெயர்த்துரைக் குவன்மாதோ

என ஆசிரியர் புராணவரலாற்றிற் கூறியபடி சிவமஹா புராணத்தில் உருத்திர சங்கிதையில் க்ஷேத்திரகண்டத்திலே உரைக்கப்பட்ட கதையாதல் வேண்டும். ஸ்காந்தத்திலும் பிரமாண்ட புராணத்தும் க்ஷேத்திரகண்டம் உளதெனச் சில தலபுராணங்க ளுரைக்கும். சிவமஹாபுராணம் என்று குறிக்குமிடத்தெல்லாம் ஸ்தல மாஹாத்ம்ய கிரந்தங்களிற் காண்பதை வைத்து ஆசிரியர்கள் அவ்வாறு குறிக்கிறார்களேயன்றிப் புராணத்தையே சோதித்துக் குறித்ததாகக் கொள்ளப்படாது. ஸ்காந்த முதலிய இதர புராணங்களின் பிரஸ்தாவம் வருமிடத்தும் இவ்வாறே கொள்ள வேண்டும். இந்நூல் பாயிரத்தோடு பதினெட்டுச் சருக்கங்களை யுடையது. விருத்தம் 885.

## திருவாப்பனூர்ப் புராணம்

திருப்பூவணம் கந்தசாமிப் புலவரியற்றிய திருவாப்பனூர்ப் புராணம்,

> சாற்றிய புராண மோரா றுமூன்றுட் சைவத்திற் க்ஷேத்திர கண்டத்
> தேற்றிய வேகா தசருத் திரசங் கிதையினி லீறிலா னருளாற் [தோன்ற
> லேற்றிய விடப புரியின்மான் மியத்தைச் சொற்சுவை பொருட்சுவை
> ஆற்றிய தவத்தீர் சொல்லுகே னுலக மறம்பொரு ளின்பம்வீ டடைய

என்று நூல்வரலாறு கூறியபடி சிவமஹா புராணத்து ஏகாதசருத்திரசங்கிதையி னுட்பிரிவாகிய க்ஷேத்திரகண்டத்திலே ஓதப்பட்ட மான்மியமாகும். சிவமஹா புராணத்திலே ஏகாதசருத்திர சங்கிதையென ஒரு சங்கிதை இல்லை. ஏகாதசருத்திரர் பிரசித்தம். இப்புராணத்தில் பாயிர முட்படச் சருக்கம் 12, செய்யுள் 515. இது ஸௌமிய ஹூ (1909 - 10) அச்சிடப்பட்டது.

## திருப்பூவணப் புராணம்

ஞானசம்பந்தப்பிள்ளை யென்னும் தீக்ஷாநாமம்பெற்ற இ. இராமசுவாமிப் பிள்ளை மன்மத ஹூ மாசி ஸ்ரீ (1896) தாம் அச்சிட்ட திருப்பூவணப் புராணம் முகவுரையில், 'செந்தமிழ்ப் பாண்டி நாட்டிலுள்ள சிவ க்ஷேத்திரங்களிலே மூவர் தேவாரம் பெற்றதும் விராட் புருடனது திருமுக மண்டலமாகக் கொள்ளப் பெற்றதுமாகிய திருப்பூவண க்ஷேத்திர மான்மியத்தை அப்பதியில் வதிந்த கந்தசாமிப் புலவர் வடமொழியினின்று மொழிபெயர்த்துப் பாடினர். அப்பாடலடங்கிய ஏட்டுப் பிரதி ஒன்றே கிடைத்தமையால் அது கொண்டு ஒருவாறு பார்வையிட்டு அச்சிடப்பட்டது' என்று எழுதினர். இறுதிச் சருக்கமாகிய சிதம்பரவுபதேசச் சருக்கத்தின் இறுதிச் செய்யுளுக்கு முந்திய செய்யுள் 'ஒப்பிலாத உருத்திரசங்கி

தையுற்ற பூவண நற்கதை' யென்றுரைத்தலால் திருப்பூவண மான்மியமும் சிவமஹாபுராணத்தி லுள்ளதென் றேற்படுகின்றது. பாயிரம், திருநாட்டுச் சருக்கம், திருநகரச் சருக்கம் உட்படச் சருக்கம் 27, விருத்தம் 1437.

### வேணுவன புராணம்

திருநெல்வேலித் தலமகிமை யுரைக்கும் வேணுவனபுராணம் திருநெல்வேலித் தலபுராணத்தின் வேறானது. புராண வரலாறு உரைக்குஞ் செய்யுளில் 'சைவ புராணத்தின் வந்துளது நிகழ்த்துமீதால்' என வரும் வாக்கியம் இப்புராணம் சிவமஹா புராணத்தில் வருங் கதையை உரைக்குமென்பதை யுணர்த்தும். இஃது ஒன்பது சருக்கமுடையது. விருத்தம் 454. ஆசிரியர் பெயர் புலப்படவில்லை. இது ஸ்ரீ மு. ரா. அருணசலக் கவிராயர் எழுதிய உரைக் குறிப்போடு 1914-இல் அச்சிடப்பட்டது.

### மார்க்கண்டேய புராண வசனம்

மார்க்கண்டேயபுராணம் மும்பைப்பதிப்பில் 134 அத்தியாயங் களுடையதாயும், கற்கத்தாப்பதிப்பில் 137 அத்தியாயங்களுடையதாயும், சென்னைத் தெலுங்குலிபிப் பதிப்பில் 139 அத்தியாயங் களோடு கூடியதாயும் காணப்படுகிறது. சென்னைப்பதிப்பை மூலமாகக் கொண்டு தொழுவூர் வேலாயுத முதலியார் இப்புராணத்தைத் தமிழில் வசனமாக மொழிபெயர்க்கத் தொடங்கினர். சஞ்சிகை சஞ்சிகையாக 24 அத்தியாயங்கள் வெளிவந்தன. நூலாசிரியர் குமாரர் தொழுவூர் வே. திருநாகேசுவர முதலியார் 1909-இல் இரண்டாம் பதிப்பு வெளியிட்டனர். அப் பதிப்பில் நூலாசிரியர் வரலாறு சேர்க்கப்பட்டது. புராணம் 163 பக்கம். மார்க்கண்டேயர் க்ரௌஷ்டியென்னும் சீடனுக்குக் கூறிய புராணமாதலின் இதனுள் மார்க்கண்டேயர் சரித்திரம் வருதற் கிடமில்லாது போயிற்று. 79 பக்கங்கொண்ட மார்க்கண்டேயர் வரலாறு புராணத்திற்குப் பீடிகையாக உள்ளது. அரும்பதவிளக்கம் மேற்கோள் விளக்கம் முதலியனவும் காணப்படுகின்றன.

ஸ்ரீ வத்ஸ வே. ஸோமதேவ சர்மா வெளியிட்ட ஸ்ரீ மார்க் கண்டேய புராணம் என்னும் புராணச் சுருக்கமும் உளது.

### இலிங்க புராணம்

கற்கத்தாவில் ஜீவாநந்த வித்யாஸாகரராலும், மும்பையில் வேங்கடேசுவர முத்ராலயத்தாலும் வெளியிடப்பட்ட நாகரிலிபி இலிங்கபுராணம் 108 அத்தியாயங்கொண்ட பூர்வபாகம், 55 அத்தியாயங் கொண்ட உத்தரபாக மென இரண்டு பகுதியுடையது. 1879-இல் சென்னையில் அச்சான தெலுங்கு லிபிப் பதிப்பில் பூர்வ

பாகத்தில் 109 அத்தியாயங்கள் காணப்படுகின்றன. மும்பைப் பதிப்பிலே உத்தரபாகத்தில் 55 அத்தியாயங்கள் காணப்படுமாயினும் இறுதியத்தியாயத்தில் 'பூர்வாம்சத்தில் 108 அத்தியாயங்களும் உத்தராம்சத்தில் 46 அத்தியாயங்களும் உள்ளன' என்றுரைக்கும் சுலோகம் உளது. உரைகாரர் 'ஒன்பது' என்னும் சொல் இடையில் விட்டுப் போயிற்று என்றார். தெலுங்கு லிபிப் பதிப்பில் அச் சுலோகத்தில் 55 என்றே அத்தியாய எண் குறிக்கப்பட்டுளது. தமிழ் மொழிபெயர்ப்பிற்கு ஆதாரமான பாடமும் ஒன்றிருந்ததுபோலும்.

தமிழ் இலிங்கபுராணம் 108 அத்தியாயங்கொண்ட பூர்வ காண்டம், 46 அத்தியாயங் கொண்ட உத்தரகாண்டமென இரண்டு பகுதியுடையது. கடவுள் வாழ்த்து 16 விருத்தமும், அனுக்கிரமணி 44 விருத்தமும் வேறாகவுண்டு. பூர்வகாண்ட விருத்தத் தொகை 1899, உத்தரகாண்டத்தது 547, ஆக விருத்தம் 2506. தாது ஹூ ஆனிமீ (1876) வெளியிடப்பட்டது. இப்பொழுது பிரதிகள் கிடைப்பது அருமை.

இதனை வடமொழியினின்று தமிழ்ச்செய்யுளாக மொழிபெயர்த்தவர் குலசேகர பாண்டிய ரென்பது,

> பூண்டபே ரன்பாற் புவிபுக ழிலிங்க புராணநான் மறைவகுத் திசைத்த
> காண்டமு முனிவ னுரைத்தவா றமுது கனிந்தசெந் தமிழினால் விரித்தா
> னீண்டநீ ராழி நெடுநில வளாக நிழற்றுதண் ணிழன்மதிக் கவிகைப்
> பாண்டிய குலசே கரனிகல் கடந்த பருதிவேற் றடக்கைமீ னவனே

என்னும் சிறப்புப்பாயிரச் செய்யுளால் விளங்குகின்றது. கடவுள் வாழ்த்துப் பகுதியில் ஆசிரியர்,

> துன்ப வாரிநின் றேற்றித் துகளில்பே
> ரின்ப வாரியின் மூழ்குவித் தேர்பெற
> அன்பு பூத்த வகோர சிவனடிப்
> பொன்செய் தாமரை போற்றி வணங்குவாம்

என அகோரசிவாசாரியரைத் துதித்தலின் அகோரசிவாசாரியர் அவர்க்கு உபதேச குருவெனத் தோன்றுகின்றது. பத்ததி முதலிய கிரந்தங்க ளியற்றின ஆசாரியரே அவராயின் குலசேகரபாண்டியர் காலம் பதினோராம் நூற்றாண்டென்று துணிந்துரைக்கலாம்.

இலிங்கபுராணம் மஹாபுராணங்கள் உரைக்கும் விஷயங்களை உரைப்பதோடு சைவர்க்கு அத்தியாவசியகமாகத் தெரிய வேண்டிய சரித்திரங்களும் பூசாவிதிகள் முதலியனவும் விரிவாக உரைக்கும். வடமொழியில் விரிவாக உரைக்கப்பட்டது தமிழில் மிகவும் சுருக்கமாக உரைக்கப்பட்டுளது. உதாரணமாக, வடமொழி மூலத்தில் சிவனை வாழ்த்தும் சகச்சிர நாமங்கள் இரண்டு

விரிவாகக் கூறப்பட்டன. பூர்வகாண்டத்தில் 63-ஆவது சகச்சிர நாமமுரைத்த வத்தியாயம் முதலாஞ் சகச்சிர நாமத்தைக் கூறுவது. தமிழில் அவ்வத்தியாயத்தில் 9 விருத்தங்களே உள்ளன. ஆசிரியர் 8 விருத்தங்களில் சில நாமங்களை உரைத்துப் பின் 'இவை கள் முதல வாயிரத்தெட் டீச ஞம மியம்பிடுவோர்' என முடித்து விட்டார். 99-ஆவது மாயவன் சக்கரம் பெற்ற வத்தியாயத்தில் 'பவாதி யாயிர நாம முளத்தினின் றெடுத்தெடுத் தோதி' என்று சுட்டியதோடு நிறுத்தினர்.

சிவமஹாபுராணம் போல இலிங்கபுராணமும் தமிழ் வசன மாக எழுதி வெளிவருமாயின் சைவர்க்குப் பெரும்பயன் விளைக் கும்.

சகல வேதாந்தங்களின் சாரத்தையும் உள்ளடக்கியதாய் ஐம் பது கண்டங்களாற் புனையப்பட்டதாய் ஓரிலக்ஷங் கிரந்தமுடைத் தாயிருக்கும் ஸ்காந்தபுராணமானது 55,000 கிரந்தமுடைய ஸநத்குமார ஸம்ஹிதை, 6,000 கிரந்தமுடைய ஸூத ஸம்ஹிதை, 3,000 கிரந்தமுடைய ப்ரஹ்ம ஸம்ஹிதை, 5,000 கிரந்தமுடைய விஷ்ணு ஸம்ஹிதை, 30,000 கிரந்தமுடைய சங்கர ஸம்ஹிதை, 1,000 கிரந்தமுடைய ஸௌர ஸம்ஹிதை என ஆறு ஸம்ஹிதை யுடையது.

சிவமஹாபுராணத்தில் ஸநத்குமார ஸம்ஹிதை யொன் றுண்டு. அதனின் வேறானது ஸ்காந்தத்திலுள்ள ஸநத்குமார ஸம்ஹிதை. அதில் காளிகாகண்டம் பிரசித்தமானது. அது வடமொழி மூலமும் மொழிபெயர்ப்புமாகத் திருவையாறு அநந்த வைத்தியநாத சிவன் பதிப்பித்த சிவபத்தி சந்திரிகையில் வெளிவந் ததாகத் தெரிகிறது.

## திருக்கூவப் புராணம்

பிரபுலிங்கலீலை முதலிய நூல்கள் இயற்றிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய திருக்கூவப்புராணம் காளிகா கண்டத்தின் வழி வந்த தென்பது அந்நூற்பாயிரத்தில்,

> காவி நேர்விழி மங்கைபங் கினனிசை காந்தம்
> மேவு மாசனற் குமாரசங் கிதையில் விரித்த
> தாவில் காளிகா கண்டமென் கடற்புகழ் தன்னிற்
> கூவ நீர்மையுட் கொண்டியான் கூறுவன் றமிழால்

என்னும் நூல்வந்தவழி கூறுஞ் செய்யுளாற் புலனுகின்றது.

இப்புராணம் பாயிரத்தோடு 703 செய்யுள்களையுடைய ஏழு சருக்கங்கள் கொண்டது. பொம்மைய பாளையம் சிவஞானபாலைய தேசிகராதீனத்துச் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகளாற் பரிசோ

திக்கப்பட்ட பதிப்பு தாரண ஹு ஆனிமீ (1884) வெளி வந்தது.

### காஞ்சிப் புராணம்

ஸ்ரீ காஞ்சீ மாஹாத்ம்யம் காஞ்சிபுரத்தின் பெருமையை விரிக்கும் ஒரு ஸம்ஸ்க்ருத நூல். ஐம்பது அத்தியாயங்களை யுடைய அந்நூல் ஸ்காந்த புராணத்து ஸநத்குமார ஸம்ஹிதையில் காளி காகண்டத்தில் தீர்த்தப்ரசம்ஸை உரைக்குங்கால் உரைக்கப்பட்ட தென்று அந்நூலிறுதியில் வரையப்பட்டுளது.

அதனைத் தமிழிலே மொழிபெயர்க்கத் தொடங்கித் திருவா வடுதுறைச் சிவஞான முனிவர் முற்பாகத்தை 2743 செய்யுளாற் பாடி முடித்தனர். பிற்பாகத்தை அவர் மாணாக்கருட் சிறந்த கச்சி யப்பமுனிவர் 2110 செய்யுள்களாற் பாடி முடித்தனர். இந்நூலுள் முற்பாகம் திரிசிரபுரம் மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை யவர்களாற் பதிப் பிக்கப்பட்டதாகத் தெரிகிறது. பின் 1878-இல் ஞானசம்பந்தப் பிள்ளை யென்னும் தீக்ஷாநாமம் பெற்ற இராமநாதபுரம் இராம சாமிப்பிள்ளை இரண்டு பாகத்தையும் பதிப்பித்தனர். சிவஞான யோகிகள் வரலாறும் நூலுக்கு முன் காணப்படுகிறது.

### கோயிலூர்ப் புராணம்

இது சமீவந க்ஷேத்ர மாஹாத்ம்ய மென்னும் வடமொழி நூலைத் திருவிடைமருதூர்ப் பிச்சு சாஸ்திரிய சுவாமிகள் வசன மாகச் செய்த மொழிபெயர்ப்பு. விகாரி ஹு கார்த்திகைமீ (1899) அச்சிடப்பட்டது. பாயிரத்திலே 'ஸ்காந்த புராணத்தில் முதலா வதான சனற்குமார சங்கிதையிற் க்ஷேத்திர கண்டத்தில் இருக் கின்ற வன்னிவன மான்மியத்தைச் சூதமகாரிஷி நைமிசாரணிய வாசிகளான ரிஷிகளுக்கு அருளிச்செய்த பிரகாரம் யான் என் புத் திக்குத் தோன்றின மட்டுந் தமிழ் மொழியாற் சொல்லுகின்றேன்' என்று நூலாசிரியர் கூறுவதிலிருந்து முதனூலாதி விளங்குவதோடு அவர் வடமொழியிலிருந்து நேரே மொழிபெயர்த்ததாகத் தெரி கிறது. இப்புராணம் பன்னிரண்டு அத்தியாயங்களை உடையது.

மஹாவித்துவான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை யவர்கள் தமிழ்ச் செய்யுளாகச் செய்த மொழிபெயர்ப்பு 1887-இல் அச்சாயிற்று. இதில் பாயிரம், திருநாட்டுப் படலம், திருநகரப்படலம் என்பன அதிகமாயுள்ளன. விருத்தம் 849. இந்நூலின் இரண்டாம் பதிப்பு சார்வரி ஹு புரட்டாசி மீ (1900) வெளிவந்தது.

பிச்சு சாஸ்திரிகள் வேதாந்த விற்பந்நராய், முத்திகண்டம், சூத கீதை, ரிபு கீதை, விவேக சூடாமணி, தசகம், விவேகசட்கம், சோரூபானந்தசந்தான துதி, மனீடா பஞ்சகம், சோபானபஞ்சகம்

என்னும் நூல்களைத் தமிழ்ச் செய்யுளாக மொழி பெயர்த்தவரும், ஜீவன்முக்திப் பிரகரணம் என்பதனையும் தமிழ் வசனமாக மொழி பெயர்த்தவரும், உலகநாத சுவாமிகள் என்னும் பெயராற் பிரசித்த ரானவருமாகிய பெரியார்.

## திருக்குற்றாலத்தலபுராணம்

இந்நூற் பாயிரத்தில் முதனூல் கூறவந்த ஆசிரியர்

> கிளர்ந்தபெருஞ் சங்கரசங் கிதையென்னும் பார்கடலும்
> வளம்பெருகுஞ் சனற்குமர சங்கிதையா மதக்கடலு
> முளந்தனிலொன் றுப்பெருக்கி யுயர்மதிமந் தரமாகக்
> குளந்தருகட் புனிதர்திரி கூடமான் மியவமிர்தம்

என ஸ்காந்தத்தின் இரண்டு ஸம்ஹிதைகளிலிருந்து திரட்டியது த்ரிகூடமாஹாத்ம்யம் என்றுரைத்தார்.

குறவஞ்சிமேட்டுத் தாமிர சாஸநத்தால் இந்நூலை யியற்றிய திரிகூட ராசப்ப கவிராயர் காலம் கி. பி. 1718 என்று தெரிகிறது. திருக்குற்றாலக் குறவஞ்சியை இயற்றியவரும் இவ்வாசிரியரே. இந்நூலுள் 1057 விருத்தம் கொண்ட 18 சருக்கங்களை யுடைய தான வைபவ காண்டம், 1013 விருத்தம் கொண்ட 14 சருக்கங்களை யுடைய சிவரகசிய காண்டம் என்னும் இரண்டு காண்டங்களுள. காப்பு இரண்டு செய்யுள். இதனை முதலில் கொல்லமாண்டு 1047 பங்குனியில் (1872) அச்சிட்டவர் கல்லிடைக்குறிச்சி சிதம்பர நாத கவிராயர்; பின் ஸ்ரீ மு. ரா. அருணசலக் கவிராயர் இதனைப் பல குறிப்புக்களோடு சாதாரண ஹூ ஆவணி மீ (1910) வெளி யிட்டனர்.

## சூத சங்கிதை

ஸூதஸம்ஹிதை சிவமாஹாத்ம்யகண்டம், ஜ்ஞானயோக கண்டம், முக்திகண்டம், பூர்வபாகம் உபரிபாக மென்னும் இரண்டு பாகங்களை யுடைய யஜ்ஞவைபவகண்டமென நான்கு கண்டங் களை உடையது. ஸ்ரீ சங்கராசாரியர் தாம் பிரம சூத்திர பாஷ்ய மியற்று முன் இந்நூலினைப் பதினெட்டு முறை வாசித்தன ரென்று பரம்பரை வரலாறு ஒன்றுண்டு. நான்காங் கண்டத்தின் உபரி பாகத்தில் பிரமகீதை சூதகீதை யென்று இரண்டு கீதைகள் உள. இவ்வரிய நூலினை வித்யாரண்யர் இயற்றிய தாத்பர்ய தீபிகை யென்னும் சிறந்த வியாக்கியானத்தோடு புநா ஆநந்தாசிரமத்தார் வெளியிட்டனர். சென்னையிலும் இரண்டு பதிப்புக்கள் வெளி வந்துள்ளன.

இதனை மஹாவித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை யவர்கள் மாணக்கரு ளொருவராகிய வல்லூர் தேவராஜ பிள்ளை யென்பவர்

சாதாரண ஸ்ரீ கார்த்திகை மீ (1850) தமிழ்ச் செய்யுள் வடிவாக இயற்றினர். இந்நூல் 3003 விருத்தங்கள் கொண்ட 109 அத்தியாயங்களை யுடையது.

| வடமொழி நூல் | அத்தியாயம் | சுலோகம் | தமிழ்நூல் அத்தியாயம் | செய்யுள் |
|---|---|---|---|---|
| சிவமாஹாத்ம்யகண்டம் | 13 | 700 | 13 | 545 |
| ஜ்ஞாநயோககண்டம் | 20 | 737 | 20 | 509 |
| முக்திகண்டம் | 9 | 563 | 9 | 501 |
| யஜ்ஞவைபவகண்டம் | 67 | 4000 | 67 | 1448 |

இந்நூலின் தமிழ்வசன மொழிபெயர்ப்பை 1918-இல் என். எஸ். இராஜாராமையர் பிரசுரித்தனர். பிரம்மஸ்ரீ ஆர். அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள் இதனை மொழிபெயர்த்துக் கொடுத்துப் பிரசுரிக்கும்படி தூண்டினரென்று முகவுரையால் விளங்குகின்றது.

## முத்திகண்டம், சூதகீதை

மூன்றாவதாகிய முக்திகண்டத்தையும், யஜ்ஞவைபவகண்டத்தின் உபரிபாகமாகிய சூதகீதையையும் திருவிடைமருதூர்ப் பிச்சு சாஸ்திரிகள் தமிழ்ச் செய்யுள் ரூபமாக மொழிபெயர்த்துள்ளார். இவையிரண்டும் சார்வரி ஸ்ரீ ஆவணிமீ (1900) வெளிவந்தன. முத்திகண்டம் அத்தியாயம் ஒன்பதுக்குப் பாயிரம் உட்பட விருத்தம் 370. சூதகீதை அத்தியாயம் எட்டுக்குப் பாயிரம் உட்பட விருத்தம் 481.

## பிரமகீதை

ஸூதஸம்ஹிதையுள் யஜ்ஞவைபவகண்டம் உபரிபாகத்தில் முதலாவது பிரமகீதை பன்னிரண்டு அத்தியாயங்களில் பத்து முக்கிய உபநிடதங்களின் பொருளை விரிக்கும். அதனைத் தனி நூலாக ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் மொழிபெயர்த்தியற்றினர். அந்நூல் ஆசிரியரது குரு சொரூபானந்த சுவாமிகள் பெயராற் சொரூபானந்த சித்தி யென்றும் வழங்கும். பாயிரத்தோடு 547 செய்யுள்க ளுடையது. அது வித்தியாரணிய சுவாமிகள் அருளிச் செய்த வடநூல் வியாக்கியானத்துக் கியையத் திருநெல்வேலி, கோடகநல்லூர் சுந்தரசுவாமிகள் இயற்றிய உரையோடு பிரஜோற்பத்தி ஸ்ரீ மார்கழி மீ (1871) அச்சாயிற்று. மூலபாடம் பின் பல முறை அச்சிடப்பட்டது.

ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் ஈசுரகீதையும், பாடுதுறை யென்னும் பிரபந்தத்திரட்டும், சிவப்பிரகாச வெண்பாவும், தத்துவாமிர்தமும், திருத்தாலாட்டு முதலிய பதினெட்டு நூல்களடங்கிய அடங்கன்முறையும், குறுந்திரட்டும் இயற்றியவர்.

---



# மாயா விநோதினி

ஸ்ரீ ரவீந்த்ரநாத் டாகுர்

[ஆசிரியர் அனுமதியுடன் ஸ்ரீமதி தஞ்சம் மொழிபெயர்த்தது]

---

(சென்ற இதழ் 360-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## பதினைந்தாம் அத்தியாயம்

நீறு பூத்த நெருப்பு, காற்றுப் பட்டவுடன் செந்தழலாகக் கனிந்தது. தணிந்துகொண்டே வந்த தம்பதிகளின் பிரேமாக்கினி மூன்றுமவர் ஒருத்தரின் சம்பந்தத்தினுல் மூண்டு எழுந்தது.

ஆசாவுக்கு ஹாஸ்யமாகப் பேசும் திறமை இல்லை. ஆனுல் விநோதினி இதில் கெட்டிக்காரி. இக்காரணத்தினுல்தான் ஆசா அவளைத் தனது ஆனந்தத்திற்கு இருப்பிடமாகக் கொண்டாள். மஹேந்திரனைச் சந்தோஷமடையவும் சிரிக்கவும் வைக்கவேண்டிய கவலை அவளுக்கு இப்பொழுது நீங்கிவிட்டது.

வட்டியைக்கொண்டு பிழைப்பதைவிட்டு மூலதனத்தையே கரைக்க ஆரம்பித்துவிட்டால் அசல் அழிய எவ்வளவு காலமாகும்? கலியாணமான சில தினங்களுக்குள்ளாகவே மஹேந்திரன் சிற்றின்பக் கடலில் மூழ்கிக் கரை கடந்துவிட விரும்பியதன் பலனுகக் காதலென்னும் தெய்விக அன்பு பெருக இடமில்லாமலே போயிற்று. குடிகாரன் குடிமயக்கத்தின் ஆனந்தத்தை நிரந்தரமாக அடைய வேண்டி மேலும் மேலும் குடித்துக்கொண்டே போகிறுன். மயக்கம் தெளிந்து தனது செயலற்ற தன்மை தெரிந்தும் மறுபடி குடிமயக்கத்தையே விரும்புகிறுன். மஹேந்திரனும் சிற்றின்ப ஸுகத்தில் சதா மயங்கியிருக்க விரும்பினுன். ஆனுல் அவனது மதுபானக் கிண்ணத்தை நிரப்ப ஆசாவினுல் முடியவில்லை. இந்தச் சமயத்தில் விநோதினி வந்து சேர்ந்தாள். அக்கிண்ணத்தை நிரப்பி ஆசாவின் கையில் கொடுத்தாள். அதை வாங்கிக் கணவனுக்கு அளித்து அவன் இன்புறுவதைக் கண்டு தானும் சிந்தனையற்றிருக்கலானுள் ஆசா.

வரவர ஆசாவின் தூண்டுதலின்றியே மஹேந்திரனும் விநோதினியும் சேர்ந்து வேடிக்கையாகப் பேசிக் காலங்கழிக்க ஆரம்பித்தனர். ஆசா தானும் இவ்வேடிக்கையில் கலந்துகொண்டு மனம் விட்டுப் பேசுவதும் சிரிப்பதுமா யிருந்தாள். சதுரங்கம் ஆடும் பொழுது மஹேந்திரன் தன்னைக் கேலியாகவோ கடிந்தோ பேசும் பொழுதெல்லாம் ஆசா தனக்காகப் பரிந்து பேசுமாறு விநோதினியின் முகத்தை நோக்குவாள். இவ்வாறு தினந்தோறும் மூவரும் ஒன்று சேர்ந்து வந்தனர்.

விநோதினி இவர்கள் விளையாட்டு விநோதங்களில் கலந்துகொண்டாலும், வீட்டு வேலை ஒன்றையும் அசட்டை செய்யவில்லை. சமையல், சாப்பாடு, லக்ஷ்மிக்கு வேண்டிய சுசுருஷை யாவும் செய்து முடித்து விட்டே வந்து உட்காருவாள். "ஆட்களைக் கூட வேலை செய்ய விடாது சோம்பேறியாய் அடித்து விடுவாய் போல் இருக்கிறதே!" என்று மஹேந்திரன் அவளைக் கடிந்து கொள்வான்.

விநோதினி, "வேலையின்றி நான் சோம்பேறி யாவதை விட ஆட்களைப் பாழாயடிப்பது எவ்வளவோ நல்லது. நீங்கள் காலேஜிற்குப் போங்கள்" என்பாள்.

மஹேந்: இன்று போக வேண்டிய முறையில்லை.

விநோ: இது முடியாது. வண்டி தயாராயிருக்கிறது. நீங்கள் போகத்தான் வேண்டும்.

மஹேந்: நான்தான் வண்டிகொண்டு வரவேண்டாமென்று சொல்லியிருந்தேனே?

விநோ: நான் கொண்டுவரச் சொன்னேன்.

இதைச் சொல்லிவிட்டு விநோதினி அவன் அன்று போட்டுக்கொள்ள வேண்டிய உடுப்புகளை அவன்முன் கொண்டு வந்து வைத்தாள்.

மஹேந்: நீ ஒரு ராஜபுத்திர ஸ்திரீயாய்ப் பிறந்திருக்க வேண்டும். அப்பொழுது யுத்தத்திற்குப் புறப்படும் கணவனுக்குக் கவசங்கள் அணிவித்து அனுப்பியிருப்பாய்!

விநோதினியின் நிர்ப்பந்தத்தினால் மஹேந்திரனுக்குக் காலேஜுக்குப் போகாமல் லீவு எடுத்துக் கொள்ளவோ படிக்காமலோ இருக்க முடியவில்லை. சாயங்கால வேளை தவிர வேறு எப்பொழுதும் வேடிக்கை விளையாட்டுகள் கூடாவென்பது அவளுடைய அமல். மஹேந்திரன் அந்த இன்பகரமான சாயங்காலம் எப்பொழுது வரப்போகிறதென்று ஒவ்வொரு நிமிஷத்தையும் கணக்கெண்ணிக் கொண்டு தினமும் எதிர்பார்த்திருப்பான். பகலெல்

லாம் உழைத்த பிறகு அந்திப் பொழுதில் கிடைக்கும் அவ்வின்பம் அவனுக்கு ஆனந்தமாயிருந்தது.

முன்பெல்லாம் வீட்டில் வேளைக்குச் சரியாய்ச் சமையல் ஆகாது. இதைச் சாக்காகக் கொண்டு அவன் காலேஜுக்குப் போகாது நின்றுவிடுவான். இப்பொழுதோ அப்படியில்லை. சரியான மணிக்கு விநோதினி சமைத்து அவனுக்குப் பரிமாறி விடுவாள். உடனே வாசலில் வண்டி தயாராய் நிற்பது அவனுக்குத் தெரிவிக்கப்படும். முன்பெல்லாம் உடுப்புகள் வண்ணானுக்குப் போடப்பட்டிருக்கிறதா, வீட்டிலிருக்கிறதா, எந்த அலமாரியின் அடியில் விழுந்து கிடக்கிறது என்னும் இவற்றில் ஒன்றும் மஹேந்திரனுக்குத் தெரியாது. இப்பொழுதோ எல்லாம் ஒழுங்காக மடித்துப் பீரோவில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

முதன்முதல் விநோதினி அவற்றையெல்லாம் மஹேந்திரனுக்கெதிரில் ஆசாவைக்கொண்டே செய்வித்து வந்தாள். சரியாகச் செய்யாவிடில் எதிரிலிருந்து அவளைக் கண்டிக்கவும் கண்டித்தாள். மஹேந்திரனும் தன் மனைவியின் திறமையற்ற தன்மையைக் கண்டு கேலி செய்வான். கடைசியில் இப்பொழுது தோழிக்கு உதவி செய்வது தனது கடமையென்று மதித்து, விநோதினி இவ்வேலையையெல்லாம் தானே ஏற்றுக்கொண்டாள். அவளே இப்பொழுது வீட்டின் எஜமானி.

ஒருநாள் மஹேந்திரனுக்குச் சட்டையில் பொத்தானில்லை. சீக்கிரம் பொத்தான் வைத்துத் தைத்துக் கொடுக்க ஆசாவிற்குத் தெரியவில்லை. உடனே விநோதினி அதை வாங்கி ஒரு நொடியில் தைத்துக் கொடுத்துவிட்டாள். ஒருநாள் மஹேந்திரனுக்காகத் தட்டில் வைத்திருந்த பலகாரத்தில் பூனை வாய் வைத்துவிட்டது. ஆசா என்ன செய்வதென்று தெரியாது திகைத்தாள். விநோதினி உடனே அடுப்பைப் பற்றவைத்து ஒரு க்ஷணத்தில் மறுபடி பலகாரங்கள் செய்துகொண்டு வந்து பரிமாறினாள். இவற்றையெல்லாம் பார்க்கும்போது ஆசாவிற்கு ஆச்சரியமாயிருந்தது.

இப்படித் தினசரி உண்பது உடுப்பது ஒவ்வொன்றிலும் விநோதினியின் சாதுரியம் மேலோங்கி நிற்பதை மஹேந்திரன் அநுபவத்தில் உணரலானான். அவன் காலிலிருக்கும் பட்டு மேல்ஜோடு அவள் பின்னியது. கழுத்து 'டை' அவள் கையால் போட்டது. இவைகளின் மூலம் அவளுடைய மெல்லிய மிருதுவான கரங்களின் ஸ்பர்சம் தன்மேல் படுவது போன்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. ஆசாவையும் தினம் புதுப் புதுமாதிரியாக அலங்கரித்து அவனிடம் அனுப்பித் தனது திறமையை

வெளிப்படுத்தினாள் விநோதினி. இப்படிப் புது அலங்கரிப்பில் தன்னிடம் வரும் மனைவியின் சௌந்தரியத்தில் விநோதினியின் சௌந்தரியமும் கூடக் கலந்திருப்பதாக மஹேந்திரனுக்குத் தோன்றும்.

இப்பொழுதெல்லாம் விஹாரிக்கு இங்கே முன்பிருந்த ஆதரவு இல்லை. அவனைக் கூப்பிடுவாரும் இல்லை. ஒருநாள் அவன், "நாளை ஞாயிற்றுக்கிழமை. அம்மாவின் கையால் போஜனமிட்டு உண்ண விரும்புவதால் நாளைப்பகல் அங்கேயே சாப்பிட வருகிறேன்" என்று எழுதி அனுப்பினான்.

அவன் வருவதால் அந்த ஞாயிற்றுக்கிழமை பாழாய் விடுமென்று மஹேந்திரனுக்குத் தோன்றியது. "நாளை ஓர் அவசிய மான வேலையை முன்னிட்டு நான் வெளியே போகவேண்டியிருக் கிறது" என்று மஹேந்திரன் உடனே பதில் எழுதி அனுப்பிவிட் டான்.

இந்தப் பதிலைப் பார்த்ததும் விஹாரி நிச்சயம் வரமாட்டா னென்று மஹேந்திரன் நினைத்தான். ஆனால் விஹாரி போஜனத்தை முடித்துக்கொண்டு நேரே மஹேந்திரனின் வீட்டை அடைந்தான். வேலைக்காரர்கள் மூலமாக மஹேந்திரன் வீட்டில்தான் இருக்கிறான், எங்கும் போகவில்லையென்பதை அறிந்துகொண்டான். அவனைக் கூப்பிட்டுக்கொண்டே மாடியில் அவனது அறைக்குள் நுழைந் தான். மஹேந்திரனுக்கு நண்பனைக் காணக் கூச்சமாயிருந்தது. "அப்பாடா, தலைவலி மண்டையை உடைக்கிறது" என்று சொல் லிக்கொண்டே படுக்கையில் படுத்துக்கொண்டான். தலைவலி என்று அவன் படும் அவஸ்தையைக் கண்டு என்ன செய்வதென்று தெரி யாமல் ஆசா கவலையுடன் விநோதினியைப் பார்த்தாள். விநோதி னிக்கு இது என்ன தலைவலி, எதற்காக வந்தது என்பவை யாவும் நன்றாகத் தெரியும். ஆனாலும் வெளிக்கு மிகத் திகிலடைந்தவளைப் போல் மஹேந்திரனிடம், "வெகுநேரமாய் உட்கார்ந்திருந்தது தான். போய்ப் படுத்துக்கொள்ளுங்கள். நான் யூ-டி-கோலோன் கொண்டுவருகிறேன்" என்று சொல்லி எழுந்தாள்.

மஹேந்: பாதகமில்லை; அதெல்லாம் ஒன்றும் அவசியமில்லை.

விநோதினி அவன் சொன்னதைப் பொருட்படுத்தவில்லை, ஐஸ் கலந்த தண்ணீரில் யூ-டி-கோலோன் போட்டுக்கொண்டு வந் தாள். அதில் கைக்குட்டையை நனைத்து அவன் நெற்றியின்மேல் போடுமாறு ஆசாவிடம் கொடுத்தாள்.

மஹேந்திரன் அடிக்கடி, "எனக்கு எதற்கு இவையெல்லாம்? விடமாட்டீர்களா?" என்று சொல்லிக்கொண்டேயிருந்தான்.

விஹாரியும் வெகு கஷ்டத்துடன் சிரிப்பை அடக்கிக்கொண்டு இந்த வேடிக்கையைப் பார்த்துக்கொண்டிருந்தான். மஹேந்திரன் தனக்கு நடக்கும் உபசாரத்தையும் கைங்கரியத்தையும் நண்பனும் பார்க்கட்டுமென்று உள்ளூறக் கர்வங்கொண்டான்.

விஹாரியின் எதிரில் தன் கணவனின் நெற்றியில் நீரில் நனைத்த கைக்குட்டையைப் போடுவதற்குள் ஆசாவுக்குக் கை நடுங்கியது. மஹேந்திரனின் கண்களிலெல்லாம் தண்ணீர்த் துளிகள் விழுந்தன. அவளால் சரியாய்ப் போடமுடியவில்லை. உடனே விநோதினி அதை அவள் கையிலிருந்து வாங்கி மெதுவாய் மஹேந்திரனின் நெற்றியில் வைத்து அதன்மேல் சொட்டுச் சொட்டாக ஐஸ் ஜலம் விட்டுக்கொண்டேயிருந்தாள். ஆசா அவனுக்கு விசிறிக்கொண்டிருந்தாள்.

விநோதினி மஹேந்திரனிடம் மிகவும் ஆதரவுடன், "இப்பொழுது சற்றுக் குணமாக இருக்கிறதா?" என்று கேட்டாள்.

விஹாரி சிரித்துக்கொண்டே, "அம்மா, இந்தமாதிரி அபார சுசுருஷையினால் வியாதி பலக்குமே தவிரக் குறையாது" என்றான்.

விநோ: மூட ஸ்திரீகள், எங்களுக்கென்ன வைத்தியமா தெரியும்? உங்களுடைய வைத்திய புஸ்தகத்தில் இதற்கு என்ன சிகித்ஸை சொல்லப்பட்டிருக்கிறது?

விஹாரி: புஸ்தகத்தில் என்ன சொல்லியிருந்தால் என்ன? கண்ணெதிரில் சிகித்ஸை நடப்பதைத்தான் பார்க்கிறேனே! உபசாரங்களைப் பார்த்தால் எனக்குக் கூடத் தலை வலிக்கிறாப்போல் இருக்கிறது. ஆனால் என்னைப் போன்ற நிர்ப்பாக்கியசாலிகளுக்கெல்லாம் நோய் வைத்தியமின்றியே சரியாகிவிடும். மஹேந்திரன் மிகவும் பாக்கியசாலி.

விநோதினி யூ-டி-கோலோனில் துணியை நனைத்துக்கொண்டே, "நண்பருக்கு வைத்தியம் நண்பரே செய்வார்" என்றாள்.

இருக்கும் நிலையைக் கண்டு விஹாரி உள்ளூறப் பொருமினான். சில தினங்களாக மும்முரமாகப் படிப்பில் கவனத்தைச் செலுத்தி வந்ததன் காரணமாக அவன் இந்தப் பக்கம் வரவேயில்லை. இங்கே மூவரும் இப்படி ஒன்றுசேர்ந்துவிட்டது அவனுக்குத் தெரியாது. இன்று விநோதினியை அவன் ஒருமுறை உற்றுப் பார்த்தான். அவளும் அவனை அப்படியே பார்த்தாள்.

விஹாரி சற்றுப் பதற்றமாகவே, "சரியான பேச்சுத்தான். நண்பனுக்குச் சேவை, சிகித்ஸை இவைகளை நண்பனேதான் செய்ய வேண்டும்! தலைவலிக்குக் காரணம் நான்தானகையால் நானே என் கூட அதை எடுத்துப் போய்விடுகிறேன். யூ-டி-கோலோன் விலை

யுயர்ந்த பொருள். அதை வீணாக்க வேண்டாம். வியாதியைப் போக்குவதைக் காட்டிலும் வியாதி வராமல் தடுத்துக் கொள்வது தான் புத்திசாலித்தனம்'' என்று கடைசி வாக்கியத்தை ஆசாவைப் பார்த்துச் சொல்லிவிட்டு எழுந்துசென்றான்.

---

## பதினாறும் அத்தியாயம்

'இனி இப்படித் தூர விலகிப் பார்த்துக்கொண்டிருந்தால் ஒன்றும் நடக்காது. இவர்கள் விரும்பட்டும் அல்லது வெறுக்கட்டும்; இவர்களிருவருக்கும் குறுக்கே நானே வலியப்போய் நின்றுகொண்டுதான் ஆகவேண்டும்' என்று விஹாரி நிச்சயித்தான்.

அவன் தன்னைக் கூப்பிட வேண்டுமென்ற மரியாதையொன்றும் வைத்துக்கொள்ளாது இந்தச் சக்கரவியூகத்திற்குள் தானும் புகுந்தான்.

அவன் வினோதினியிடம், ''சகோதரி! என் நண்பனை அவனது தாயே கெடுத்து வைத்தாள். நானும் அதில் சேர்ந்துகொண்டேன். மனைவி வேறு பாழாக்கினாள். இப்பொழுது நீயும் இதில் சேர்ந்துகொள்ளாதே'' என்றான்.

மஹேந்: இல்லாவிடில்?

விஹாரி: இல்லாவிடில் என்னைப் போன்ற கேட்பாரற்றவனை வேண்டுமானால்......

''...பாழ்பண்ணு'' என்று மஹேந்திரன் வார்த்தையைப் பூர்த்திசெய்துவிட்டு நண்பனைப் பார்த்து, ''குட்டிச்சுவராகப் போவதும் சாதாரண விஷயமல்ல. நீ மனுப்போட்டதுமே அதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு விடுவாயென்று நினைக்காதே'' என்றான்.

வினோதினியும் சிரித்துக்கொண்டே, ''ஆமாம்; குட்டிச்சுவராவதற்கும் தகுதிவேண்டும்'' என்றாள்.

விஹாரி: என்னிடத்தில் இயல்பாக யோக்கியதையில்லாவிட்டாலும் ஆட்டிவைப்பவர்களின் திறமையினாலும் காரியம் நிறைவேறக்கூடுமல்லவா? ஒருதரம் பரீக்ஷித்துத்தான் பாரேன்!

வினோ: இப்படி முன்னதாகவே முஸ்தீப்புக்களுடன் வந்தால் எதுவும் நடக்காது. ஜாக்கிரதையின்றி இருக்கும் நிலையில்தான் இவை முடியும். (ஆசாவைப் பார்த்து) நீ என்ன சொல்லுகிறாய்? இந்தப் பாரத்தை நீதான் சற்று ஏற்றுக்கொள்ளேன்.

ஆசா அவளை முழங்கையால் இடித்து அப்புறம் தள்ளினாள். விஹாரி பதிலே சொல்லவில்லை.

ஆசாவை இம்மாதிரி கேலிசெய்வது விஹாரிக்கு இஷ்டமில்லை என்று விநோதினிக்கு நன்றாகத் தெரியும். அவன் ஆசாவிடம் ஏதோ தேவதை போன்ற பக்தி சிரத்தையுடன் நடந்துகொள்வது, தன்னை மாத்திரம் அற்பமாக மதித்து நடந்துகொள்வது இவையெல்லாம் கான அவள் மனத்தில் முள் தைத்ததுபோலிருந்தது. அவள் மறுபடியும் ஆசாவைப் பார்த்துக் குத்தலாக, "உன் மைத்துனர் என்னைச் சாக்கிட்டுக்கொண்டு உன் அன்பையும் ஆதரவையும் பெறவேண்டித்தான் வந்திருக்கிறார். அவருக்கு அன்புப் பிச்சை இடமாட்டாயா?" என்றாள்.

ஆசா இப்பேச்சைக் கேட்டுச் சினந்து எழுந்தாள். விஹாரியின் முகமும் சிவந்தது. அவன் தன் கோபத்தை அடக்கிக்கொண்டு சிரித்தவாறே விநோதினியிடம், "என் குற்றத்தைப் பிறர் மேல் ஏன் வீணாய்ச் சாட்டுகிறாய்? மஹேந்திரனிடமே அமல் நடத்தக் கற்றுவிட்டாய்போலிருக்கிறது" என்றான்.

விஹாரி தங்கள் நட்பை முறிக்கத்தான் வந்திருக்கிறானென்று விநோதினிக்குத் தெரியும். 'இனி இவனிடம் ஜாக்கிரதையாய் நடந்துகொள்ள வேண்டும்' என்று நிச்சயித்தாள்.

மஹேந்திரனுக்கும் மனம் எரிந்தது. விஷயங்களை உள்ளபடியே உரைத்தால் யாருக்குத்தான் பிடிக்கும்? விஹாரியோ யாவற்றையும் வெளிப்படையாகவே சொல்லுகிறான். கோபமும் பரிஹாஸமும் கலந்த குரலில் மஹேந்திரன் நண்பனிடம், "இங்கே ஒன்றும் கொடுக்கலும் வாங்கலும் அமலும் இல்லை. அதற்கு அவசியமும் இல்லை. எனக்கிருப்பதைக்கொண்டு நான் சந்தோஷமாகவேயிருக்கிறேன்" என்றான்.

விஹாரி: சந்தோஷமாயிருக்கலாம். ஆனால் அதைச் சின்ன பின்னப்படுத்தக் கூடிய சக்தியும் வெளியிலிருந்து வரலாமல்லவா?

விநோதினி இதற்கு மறுமொழியாக அவனிடம், "உங்களிடம் ஏதாவதிருந்தால்தானே சின்னபின்னப்படுத்துவதற்கு?" என்றாள்.

இதைச் சொல்லிமுடித்து வெற்றியடைந்தவள் போல் புன்சிரிப்புத் தவழ அவனை ஒருமுறை உற்றுநோக்கினாள். மெதுவாய் ஆசாவையும் சற்று நிமிண்டினாள். ஆசா இச்சம்பாஷணையினால் கோபமுற்று எழுந்திருந்தாள். விஹாரி போக யத்தனித்தான். அதற்குள் விநோதினி, "போகவேண்டாம். இதோ என் தோழியை அனுப்பிவிட்டேன். நானும் போகிறேன் உள்ளே" என்று சொல்லி எழுந்து போனாள்.

விநோதினி போனதும் மஹேந்திரனுக்கு அந்த இடம் சூன்ய மாகத் தென்பட்டது. அவன் குதூகலமெல்லாம் மறைந்தது. இதை விஹாரியும் கவனிக்காமலில்லை. இதுவரை மனம் விட்டுப் பேசச் சமயம் கிடைக்காமல் தன் ஆத்திரத்தை அடக்கிக்கொண் டிருந்தான். இப்பொழுது தானும் நண்பனும் தனிமையில் விடப் பட்டதும் அவனால் இனி அடக்க முடியவில்லை.

“சகோதரா, நீ படுகுழியில் விழுந்து நாசமடையவிரும்பினால் விழுந்துகொள்; உனது வழக்கமே அப்படியாகிவிட்டது. ஆனால் ஒன்றும் அறியாத நிஷ்கபடச் சிறுமி ஆசா உன்மேல் பூரண நம் பிக்கை கொண்டிருக்கிறாள். அவளுக்கு உன்னைத் தவிரத் திக்கில்லை. அவளையும் படுகுழியில் தள்ளாதே. விசுவாச காதகமாய் நடந்து கொள்ளாதே. இதுதான் நான் உன்னைப் பிரார்த்திப்பது” என்று சொல்வதற்குள் அவனுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது.

மஹேந்திரன் கோபத்தை அடக்கிக்கொண்டு, “விஹாரி, நீ சொல்வது எனக்கு விளங்கவேயில்லை. இப்படிப் புதிர் போடுவதை விட்டுச் சற்று ஸ்பஷ்டமாகப் பேசு” என்றான்.

விஹாரி: ஸ்பஷ்டமாகவே சொல்லுகிறேன்: விநோதினி வேண்டுமென்றே உன்னைத் துன்மார்க்கத்தில் இழுக்கிறாள். நீயும் முன்பின் யோசியாது அவள் வலையில் விழச் சென்றுகொண்டிருக் கிறாய்.

“சுத்தப் பொய்! குடும்ப ஸ்திரீகளைப் பார்த்து நீ இவ்வித எண்ணம் கொண்டால் நீ ஸ்திரீகள் இருக்கும் இடத்திற்கே வரத் தகுதியற்றவன்!” என்று மஹேந்திரன் கோபத்துடன் கர்ஜித்தான்.

இச்சமயம் விநோதினி வெள்ளித்தட்டில் பலகாரங்களை வைத்து எடுத்து வந்து விஹாரியின் முன்பாக வைத்தாள். அவன், “என்ன இது? எனக்குப் பசியே யில்லையே” என்று மறுத்தான்.

விநோதினி: எங்கேயாவது உண்டா இப்படி? நீங்கள் சந்தோஷ மனத்துடன்தான் வெளியே போகவேண்டும்.

விஹாரி சிரித்துக்கொண்டே, “ஆனால் எனது வேண்டுகோள் அங்கீகரிக்கப்பட்டு விட்டதென்று நினைக்கிறேன். அதனால்தான் இந்த உபசாரமெல்லாம் போலும்!” என்றான்.

விநோதினி புன்சிரிப்புடன், “நீங்களோ மைத்துனர். உபசாரம் பெற உங்களுக்கு உரிமையில்லையா? எங்கே உங்கள் வேண்டுகோள் ஏற்கப்படுமோ அங்கே வேண்டத் தடையென்ன? ஆதரவும் அன் பும் கேட்காமலே அடையலாம். இல்லையா, மஹேந்திர பாபு?

மஹேந்திரனுக்கோ மிதமிஞ்சிய கோபத்தால் பேசவே முடிய வில்லை.

விநோ: விஹாரி பாபு, சாப்பிடச் சங்கோசமா அல்லது கோபமா? சாப்பிடச் செய்ய வேறு யாரையாவது கூப்பிடட்டுமா?

விஹாரி: அவசியமில்லை. கிடைத்ததே போதும்.

விநோதினி, "பரிஹாசத்தில்தான் உங்களை ஜயிப்பது கடினமென்று பலகாரத்தைக் கொண்டுவந்து முன்னே வைத்தால் அப்பொழுதும் வாய்மூடக் காணோமே!" என்று சொல்லிச் சிரித்தாள்.

அன்றிரவு சயன அறையில் ஆசா மஹேந்திரனிடம் அவனுடைய நண்பன் பேரில் தனக்குள்ள கோபத்தை நன்றாய்த் தெரிவித்துக் கொண்டாள். முன்போல் நண்பனுக்காகப் பரிந்து பேசாது மஹேந்திரனும் அவனைத் தூஷிப்பதில் அவளுடன் சேர்ந்துகொண்டான்.

மறுநாள் அதிகாலையிலேயே எழுந்திருந்து மஹேந்திரன் நண்பனிடம்சென்று, "விஹாரி, எத்தனைதான் ஆனாலும் விநோதினி நம் வீட்டுப் பெண்ணல்ல. உன்னெதிரில் வரவே அவளுக்கு இஷ்டமில்லை" என்றான்.

விஹாரி: அப்படியானால் சரி. நான் இனி அவள் எதிரில் போவதில்லை.

விஷயம் இவ்வளவு சுலபமாய்த் தீர்ந்துவிடுமென்று மஹேந்திரன் எண்ணவில்லை. விஹாரி உடனே இணங்கி விட்டதும் அவனுக்குச் சற்றுக் கலக்கமாகவே யிருந்தது.

அன்றே விஹாரி மஹேந்திரனின் வீடு சென்று நேரே விநோதினியிடம் போய், "என்னை மன்னிக்க வேண்டும்" என்றான்.

விநோ: ஏன்? எதற்காக?

விஹாரி: நீ என்னைக் காண விரும்பவில்லை யென்று நண்பன் சொல்ல இப்பொழுதுதான் எனக்குத் தெரிந்தது. திடீரென்று அன்று உனக்கு முன் வந்து நின்றதுபற்றி என்மேல் உனக்கு வருத்தமாம். அதனால்தான் மன்னிப்புக் கேட்க வந்தேன்.

"விஹாரி பாபு, நான் யார்? இன்று இருந்துவிட்டு நாளைக்குப் போகிறவள். எனக்காக இவ்வீட்டிற்கு நீங்கள் வராமல் இருப்பானேன்? இப்படியெல்லாம் சங்கடம் நேருமென்று தெரிந்திருந்தால் நான் இங்கு வந்தே யிருக்க மாட்டேன்" என்று சொல்வதற்குள் விநோதினியின் கண்களில் நீர் நிரம்பியது. சட்டென்று உள்ளே எழுந்து போய்விட்டாள்.

'மஹேந்திரனின் பேச்சை நம்பி நான் இவள் மனத்தை வீணாகப் புண்படுத்தினேனே!' என்று விஹாரி வருந்தினான்.

அன்று ராஜலக்ஷ்மி தன் மகனிடம், "மஹேன், விநோதினி தன் வீட்டிற்குப் போகவேண்டுமென்று பிடிவாதம் செய்கிறாள்" என்றாள்.

அவன் மனோவேதனையுடன், "ஏனம்மா, அவளுக்கு இங்கே இருக்கக் கஷ்டமாயிருக்கிறதா?" என்றான்.

ராஜலக்ஷ்மி: கஷ்டம் ஒன்றுமில்லை. தன்னைப் போன்ற விதவைப் பெண் பிறர் வீட்டில் வெகுநாள் தங்கினால் ஊரார் ஏசுவார்கள் என்று பயப்படுகிறாள்.

மஹேந்திரன் துக்கத்துடன், "இதென்ன, பிறர் வீடா?" என்று கேட்டான்.

அப்பொழுது விஹாரியும் அங்கே இருந்தான். மஹேந்திரன் அவனை வெறுப்புடன் நோக்கினான்.

தான் விநோதினியின் மனம் புண்படும்படியாகப் பேசியது தான் இதற்குக் காரணமென்று நினைத்து உள்ளூற வருந்தினான் விஹாரி.

விநோதினியிடம் மஹேந்திரனும் ஆசாவும், "நாங்கள் அன்னியர்களா? இவ்வளவு நாள் இங்கே தங்கியும் இவ்வளவு வேற்றுமையா?" என்று வருத்தத்துடன் கேட்டனர்.

விநோ: எப்பொழுதும் என்னை இங்கே வைத்துக்கொள்ள முடியுமா, என்ன?

மஹேந்: வைத்துக்கொள்ள எங்களுக்குச் சக்தியில்லைதான்.

ஆசா: எங்கள் மனதையெல்லாம் கவர்ந்து நட்பைப் பெருக்கியதெல்லாம் இதற்காகவா?

அன்று எதுவும் நிச்சயமாகவில்லை. "தோழி, என்னால் இருக்க முடியாது. இரண்டுநாள் வாழ்விற்கு இவ்வளவு நட்புக் கொண்டாடுவது சரியல்லதான்" என்று கூறி விநோதினி மிக வியாகுலப் பார்வையுடன் மஹேந்திரனை நோக்கினாள்.

அடுத்தநாள் விஹாரி விநோதினியிடம், "அம்மா, நீ ஏன் போகவேண்டுமென்கிறாய்? நான் ஏதாவது அபராதம் செய்தேனா? அதற்கு ஒருவேளை இது தண்டனையோ?" என்றான்.

விநோதினி முகத்தைத் திருப்பிக்கொண்டு, "உங்கள்மேல் தோஷமில்லை. எல்லாம் என் துர்ப்பாக்கியந்தான்" என்றாள்.

விஹாரி: இப்போது புறப்பட்டுப் போனால் என்மேல் கோபித்துக்கொண்டு போவதாகத்தான் நான் எண்ணுவேன்.

விநோதினி சற்று இரக்கத்துடன், "நான் இங்கேயிருப்பது சரியாவென்று நீங்கள்தான் சொல்லுங்களேன்" என்றாள்.

இதற்குப் பதிலளிப்பது சங்கடமாய்விட்டது விஹாரிக்கு. இருப்பது சரி என்று சொல்லவும் முடியவில்லை. அவன், "போகத் தான்வேண்டும். ஆனால் சில தினங்கள் கழித்துப் போகிறதுதானே; அதனால் என்ன கெடுதி?" என்றான்.

விநோதினி தலை குனிந்து, "எல்லாரும் இவ்வளவு தூரம் வேண்டும்போது, மீறிக்கொண்டு புறப்பட என்னால் முடியவில்லை. ஆனால் நீங்கள் செய்வது சரியென்று எனக்குத் தோன்றவில்லை" என்றாள்.

விநோதினியின் அகன்ற கண்களினின்றும் முத்துப்போன்று நீர் துளித்து அவள் இரு கன்னங்களிலும் வழிந்தோடியது.

அந்நீர்த் துளிகள் விஹாரியை இன்னும் வருத்தின. அவன், "உன்னுடைய குணத்தினால் எல்லாரையும் வசீகரித்து விட்டாய். உன்னைப் போன்ற குணவதியை யார் போக விடுவார்கள்?" என்றான்.

ஆசா ஒருபுறம் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே நின்று கொண்டிருந்தாள். அதற்குப் பிறகு விநோதினி வீட்டை விட்டுப் போகும் பிரஸ்தாபம் நின்றுவிட்டது.

---

## பதினேழாம் அத்தியாயம்

நடுவில் நடந்த இந்த அமர்க்களங்களை மறப்பதற்காக ஒரு ஞாயிற்றுக்கிழமை கல்கத்தாவிற்கு அருகிலிருக்கும் தம்தம் (*Dum Dum*) பூந்தோட்டத்தில் யாவரும் வேடிக்கையாய்ப் போய்ச் சாப்பிட்டு வரலாமென்று மஹேந்திரன் தீர்மானித்தான். இதைக் கேட்டதும் ஆசாவிற்கு ஒரே கொண்டாட்டம். ஆனால் விநோதினி வர இணங்கவில்லை. தங்களிடம் அவள் அதிகம் நெருங்காது தூர இருக்க விரும்புவதைக் காணும்போது மஹேந்திரனுக்கும் ஆசாவுக்கும் அவள்மேல் கோபம் உண்டாயிற்று.

அன்று விஹாரி வந்ததும் விநோதினி அவனிடம், "விஹாரி பாபு, வரும் ஞாயிற்றுக்கிழமை, தம்தம் பூஞ்சோலையில் போய் வேடிக்கையாய்ச் சாப்பிட்டு வரலாமென்று மஹேந்திர பாபு சொல்லுகிறார். கூட வர இஷ்டமில்லையென்று நான் சொன்னதற்காக இவர்களிருவரும் காலையிலிருந்து என்மேல் கோபித்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றாள். விஹாரி, "கோபிப்பதற்குக் காரணமில்லாமலில்லை. நீ வராவிடில் என்ன ஏமாற்றமும் துக்கமும் ஏற்படும் என்பதை அவர்களே அறிவார்கள்" என்றான்.

விநோ: நல்லது, நீங்கள் வருவதாயிருந்தால் நானும் வருகிறேன்.

விஹாரி: நான் தயார். ஆனால் வீட்டு எஜமானனின் இஷ்டம் எப்படியோ?

விநோதினி அவனிடம் காட்டிய ஆதரவு மஹேந்திரனுக்குப் பிடிக்கவில்லை. விஹாரி தானும் வருவதாகச் சொன்னதுமே மஹேந்திரனுக்குப் பாதி உற்சாகம் குன்றிவிட்டது. வேறு சமயமானால் நண்பன் வருவது விநோதினிக்கு இஷ்டமில்லை என்று சொல்லியிருப்பான். இப்பொழுதோ அதுவும் சாத்தியமில்லாது போயிற்று.

மஹேந்: நல்லது. ஆனால் நீ எங்கே வந்தாலும் கலாட்டாச் செய்யாமல் இருப்பதில்லை. தெருக்குழந்தைகளையெல்லாம் கூடக் கூட்டிவந்து உபத்திரவம் விளைவிப்பாயோ என்னவோ, யார் கண்டது?

விஹாரி: இதுதான் உலக விநோதம். எந்த நிமிஷம் என்ன பழி நம்மேல் சுமத்தப்படுமோ, யாருக்குத் தெரியும்? ஹூம்! இருக்கட்டும்! நான் எப்படியும் புறப்படும் நேரத்திற்குச் சரியாய் வந்து சேருகிறேன்.

ஞாயிற்றுக்கிழமை காலை இரண்டு கோச்சு வண்டிகள் கொண்டுவரப்பட்டன. ஒரு வண்டியில் சாப்பாட்டுச் சாமான்களுடன் வேலைக்காரர்கள் முன்னதாகவே அனுப்பப்பட்டனர். விஹாரியும் ஒரு பெரிய பெட்டியை எடுத்துக்கொண்டுவந்து சேர்ந்தான். மஹேந்திரன், "இதென்னடா இது! இத்தனை பெரிய பெட்டியை எங்கே வைப்பது? இடங்கூட இல்லையே?" என்றான்.

விஹாரி, "பயப்படாதே அப்பா; நான் எல்லாம் சரியாய் வைக்கிறேன்" என்று சொல்லி அதை வண்டியின்மேல் வைத்துக் கட்டினான்.

ஆசாவும் விநோதினியும் வண்டியில் ஏறிக்கொண்டனர். விஹாரியை எங்கு உட்கார வைப்பதென்று மஹேந்திரனுக்குப் பெரிய யோசனையாகிவிட்டது. தானும் வண்டியில் ஏறாது அங்குமிங்கும் பார்த்து விழித்தான். இதற்குள் விஹாரி வெளியே வண்டி யோட்டுபவன் பக்கத்தில் ஏறி உட்கார்ந்துவிட்டான்.

மஹேந்திரன் பிழைத்தான்! ஏனெனில் வண்டிக்குள் விஹாரி ஏறுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. வேண்டாமென்று சொல்லவும் தயக்கம். அவனாகவே வெளியே உட்கார்ந்ததும் தான் உள்ளே ஏறிக்கொண்டான்.

விநோதினி திகிலுடன், "விஹாரி பாபு, பத்திரம், எங்கேயாவது விழுந்துவிடப் போகிறீர்கள்" என்று கூறினாள்.

விஹாரி: பயப்படவேண்டாம். நான் அப்படியெல்லாம் விழும் ஆசாமியல்ல.

வண்டி புறப்பட்டது. மஹேந்திரன் குத்தலாக, "ஏன், நான் வேண்டுமானால் வண்டியோட்டியின் பக்கத்தில் உட்காருகிறேன். விஹாரி உள்ளே வரட்டும்" என்றான். அதற்குள் ஆசா கணவனின் அங்கவஸ்திரத்தைப் பிடித்திழுத்து, "வேண்டாம்; நீங்கள் இங்கேயே உட்காருங்கள்" என்றாள்.

விநோ: வழக்கமில்லாதிருக்கும்போது, அங்கே உட்கார்ந்து பிறகு கீழே விழுந்து கஷ்டப்படுவதற்கா?

மஹேந்திரன் மிகவும் ஆத்திரமாய், "விழுவதா? ஒருகாலுமில்லை!" என்று சொல்லிக்கொண்டே எழுந்தான்.

விநோதினி அதற்குள், "விஹாரி பாபுவைச் சொன்னீர்களே! இப்பொழுது நீங்களே முதலில் கலாட்டாச் செய்ய ஆரம்பித்துவிட்டீர்களே?" என்றாள்.

மஹேந்திரன் முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு, "இல்லாவிட்டால் நான் இன்னொரு வண்டி கொண்டுவந்து அதில் ஏறிக்கொள்ளுகிறேன். விஹாரி இதில் உட்காரட்டும்" என்றான்.

ஆசா: அப்படியானால் நானும் உங்களுடன்கூடவே அந்த வண்டியில்தான் உட்காருவேன்.

விநோ: நான் வண்டியிலிருந்தே குதித்துவிடுவேன்.

இப்படி இது வேடிக்கையில் முடிந்தது. ஆனால் மஹேந்திரன் வழி முழுவதும் முகவாட்டத்துடனேயே இருந்தான். வண்டி தம்தம் பூந்தோட்டத்தை அடைந்தது. முதலிலேயே புறப்பட்ட வேலைக்காரர்களின் வண்டி இன்னும் வரக் காணோம். அது எங்கே சென்றதென்று தெரியவில்லை.

வசந்த ருது. காலைநேரம் மிகவும் மனோரம்மியமாயிருந்தது. இளஞ்சூரியனின் ஒளியினால் மரங்களின் இலைகள் பிரகாசித்தன. மகிழமரத்தின் பூக்கள் கீழே உதிர்ந்து தோட்டம் முழுவதும் சுகந்தத்தைப் பரப்பின. வீட்டிற்குள் அடைபட்டுக் கிடந்த ஆசா அத்தோட்டத்திற்குள் நுழைந்ததும் விடுபட்ட பக்ஷிபோல் ஆனந்தித்தாள். இங்குமங்கும் ஓடினாள். விநோதினியுடன் கூடப் பூக்களைப் பறித்து மடிநிறையக் கட்டிக்கொண்டாள். கனிகளைப் பறித்து வேண்டியமட்டும் தின்றாள். அங்குள்ள தடாகத்தில் இருவரும் நீந்தி விளையாடிக் குளித்தனர். இவ்விரு சுந்தரிகளின் ஆனந்தக் களியாட்டம் அப்பூஞ்சோலைக்கே ஒரு புதிய சோபையைத் தந்தது. இவர்கள் குளித்தான பிறகுங் கூட வேலைக்காரர்களின் வண்டி வரவில்லை. மஹேந்திரன் ஒரு பெஞ்சியின்மீது

உட்கார்ந்து ஏதோ ஒரு விளம்பர நோட்டீசைப் படித்துக் கொண்டிருந்தான்.

விநோதினி அவனைப் பார்த்து, "விஹாரி பாபு எங்கே?" என்று கேட்டாள்.

மஹேந்திரனும் ஒரு வார்த்தையில், "தெரியாது" என்று பதிலளித்தான்.

விநோ: அப்படியானால் வாருங்கள்; அவரைத் தேடிப் பார்ப்போம்.

மஹேந்: அவனை ஒருவரும் தூக்கிக்கொண்டு போய்விட மாட்டார்கள். தேடாமலே வந்து சேருவான்.

விநோ: ஒருவேளை இப்பேர்ப்பட்ட அருமைத் தோழரைக் காணோமே என்று உங்களைத்தான் தேடிக் கொண்டிருக்கிறாரோ என்னவோ? வாருங்கள் போய்ப் பார்க்கலாம்.

தோட்டத்தில் ஒரு கிணறு உண்டு. அதனருகில் ஓர் ஆலமரத்தின் நிழலில் ஒரு மண்டபம். விஹாரி அம்மண்டபத்தில் தனது பெட்டியைத் திறந்து வைத்துக்கொண்டு அதிலிருந்து 'ஸ்டோவ்' ஒன்றை எடுத்து, டீ தயார் செய்துகொண்டிருந்தான். இவர்கள் யாவருக்கும் ஒவ்வொரு கோப்பை டீயும் ஒரு தட்டில் கொஞ்சம் மிட்டாயும் வைத்துக் கொடுத்தான்.

அதைச் சாப்பிட்டுக்கொண்டே விநோதினி அடிக்கடி, "விஹாரி பாபு இவற்றை யெல்லாம் எடுத்துவந்தது நல்லதாயிற்று. இல்லாவிட்டால் டீ குடிக்காமல் மஹேந்திர பாபு தவிக்க நேரிட்டிருக்கும்" என்றாள்.

டீ குடித்தானதும் மஹேந்திரனுக்குச் சற்றுத் தெம்பு ஏற்பட்டது. ஆனாலும் அவன் விஹாரியை நோக்கி, "இங்கே எடுத்து வந்து சமைப்பதும் சாப்பிடுவதுமாகச் செய்து இன்றைய சந்தோஷத்தையே கெடுத்துவிட்டாய்" என்று குறை கூறினான்.

விஹாரி: அப்படியானால் எனது டீயைத் திருப்பிக் கொடுத்துவிட்டு நீ போய்ச் சந்தோஷத்தை அநுபவித்து வாடா அப்பா!

நடுப்பகலாயிற்று. இன்னமும் வேலைக்காரர்களின் வண்டி வந்தபாடில்லை. விஹாரியின் பெட்டியில் சமையலுக்கு வேண்டிய சகல சாமான்களும் போதிய அளவிற்கு மிக ஒழுங்காய் வைக்கப்பட்டிருந்தன. விநோதினி இவை யாவற்றையும் கண்டு ஆச்சரியத்துடன், "ஸ்திரீகளாகிய நாங்கள்கூட இதைக் கண்டு வெட்கிப் போகவேண்டும். விஹாரி பாபு, உங்கள் வீட்டிலோ பெண்பிள்ளைகளே இல்லை; இவை யாவும் எங்கே கற்றுக்கொண்டீர்கள்?" என்றாள்.

விஹாரி: என்ன செய்வது? இந்தப் பாழும் வயிற்றை வளர்க்க எல்லாந்தான் கற்றுக வேண்டியிருக்கிறது! எனக்கு நானேதான் எல்லாம் செய்துகொள்ளவேண்டும்.

விஹாரி இதை வேடிக்கையாகச் சிரித்துக்கொண்டே சொன்னாலும் விநோதினிக்கு அவன்மீது இரக்கம் உண்டாயிற்று.

விநோதினியும் விஹாரியுமாகச் சேர்ந்து சமைக்க ஆரம்பித்தார்கள். ஆசா சங்கோசத்துடன் ஏதாவது உதவி செய்ய வந்தாலும் விஹாரி வேண்டாமென்று சொல்லிவிட்டான். மஹேந்திரனுக்கு என்ன செய்யவேண்டுமென்பதே தெரியாது. போதாக் குறைக்கு அவனுக்கு அன்று முழுவதும் மனக்குறையும் கோபமுந்தான். அங்கவஸ்திரத்தை விரித்துக்கொண்டு பேசாமற் படுத்துக்கொண்டான்.

சமையல் தயாராகி விட்டது. விநோதினி மஹேந்திரனிடம், "ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டு எத்தனை நாழிகை படுத்திருப்பீர்கள்? போய்க் குளித்துவிட்டுச் சாப்பிட வாருங்கள்" என்றாள்.

இதற்குள் வேலையாட்களின் வண்டியும் வந்து சேர்ந்தது. வழியில் வண்டிச் சக்கரம் கழன்றுபோய் அவர்கள் வர இத்தனை நேரமாகிவிட்டதென்று தெரிந்தது. சாப்பாடும் முடிந்தது. ஆல மரத்தின் நிழலில் சதுரங்கம் விளையாடுவதென்று தீர்மானிக்கப் பட்டது. என்ன சொல்லியும் மஹேந்திரன் ஆட வரமாட்டேன் என்று படுத்துத் தூங்க ஆரம்பித்தான். ஆசாவும் மண்டபத்திற் குள் போய்ப் படுத்துக்கொண்டாள். "நானும் போய்ப் படுத்துக் கொள்ளுகிறேன்" என்று விநோதினி கிளம்பினாள். விஹாரி அதற்குள், "வா. சற்றுப் பேசிக் கொண்டிருப்போமே. உங்கள் கிராமத்தைப் பற்றிய கதையெல்லாம் எனக்குச் சொல்லு" என்று அழைத்தான்.

காற்றினால் இலைகள் அசைந்துகொண்டிருந்தன. நதிக்கரையின்மீதுள்ள நாவல்மரத்தின்மீது இருந்து குயில் கூவிக்கொண்டிருந்தது. விநோதினி தனது பால்யம் முதற்கொண்டு நடந்த வரலாற்றையெல்லாம் ஒவ்வொன்றாய்ச் சொல்லிவந்தாள். தாய் தந்தையர், சிறுவயதுத் தோழிகள், இவர்களைப்பற்றிச் சொல்லிக் கொண்டே வரும்போது அவளது யௌவன முகத்தின் காந்தி அதிகரித்தது. முன்பு அவளது அகன்ற அழகிய கண்களின் தீட்சண்யப்பார்வை விஹாரிக்கு அவள்மேல் சந்தேகத்தை எழுப்பியது; இப்பொழுது அக்கண்களில் சாந்தமும் அன்பும் குடிகொண்டிருந்தன. முழுவதும் மாறிய மனுஷியாக அவள் இப்பொழுது காணப் பட்டாள். விதவை வாழ்க்கையானது இன்பத்தையெல்லாம் பஸ்ம

XIII—57

மாக்கிவிட்ட போதிலும் அவளுடைய ஹிருதயத்தில் மாத்திரம் அன்புத்தாரை வற்றவில்லை. பதிஸேவை செய்யவேண்டுமென்ற ஆர்வம் இன்னமும் அவள் மனத்தில் இருந்தது. இதுவரை அவள் ஹிருதயத்தை மறைத்திருந்த திரை விலக்கப்பட்டது; அதனுள் அன்புமயக் காட்சியை விஹாரி இன்றே கண்டான். வெளிப் பார்வைக்கு உல்லாசப் பிரியையாகக் காணப்பட்ட போதிலும் அவள் உள்ளே எதையோ அடைய விரும்பிப் பட்டினியுடன் கடுந்தவமிருப்பதை விஹாரி நன்கு அறிந்துகொண்டான். அவன் துக்கத்துடன் பெருமூச்செறிந்தான். தன்னையே நன்கு அறிந்து கொள்ளச் சக்தியற்ற மனிதன் பிறருள்ளத்தை எப்படி அறியப் போகிறான்? 'அப்படி யாவரையும் அறியும் சக்தி அந்தர்யாமி யான அக்கடவுளுக்குத்தான் உண்டு. வெளித்தோற்றத்திலிருந்து மனிதர்களின் குணத்தை நிர்ணயிப்பது மிகவும் தவறு' என்று அவன் நினைத்தான்.

விஹாரி ஆவலுடன் நடுநடுவில் கேள்வி கேட்டுக்கொண்டே அவள் சொல்வதையெல்லாம் வெகுநேரம்வரை உற்றுக் கேட்டுக் கொண்டு வந்தான். விநோதினிக்குத் தன் கதையைக் கேட்கக் கூடியவர் இதுவரை யாரும் கிடைத்திலர். அதுவும் ஒரு யுவா புருஷனின் முன்பு தன்னை மறந்து மனம்விட்டு அவள் இது வரை பேசியதே கிடையாது. பூரண அநுதாபத்துடன் கேட்கும் ஒருவனிடம் தன்னுள்ளத்தில் மறைந்து கிடந்ததையெல்லாம் அன்று வெளியிட்டுச் சொல்லிக்கொண்ட பிறகு மனத்திற்குச் சாந்தியும் திருப்தியும் ஏற்பட்டன.

அன்று அதிகாலையிலேயே எழுந்து விட்டதால் மஹேந்திர னின் தூக்கம் தடைப்பட்டிருந்தது. இப்பொழுது அதை நான்கு மணி நேரம் விடாது தூங்கித் தீர்த்தான். சுமார் ஐந்து மணிக்கு விழித்துக் கொண்டான். எழுந்துவந்து சிடுசிடுப்புடன், "நேரமாகி விட்டது. இனிப் புறப்படலாம்" என்றான்.

விநோ: இன்னும் சற்று நேரங் கழித்துத்தான் போவோமே?

மஹேந்: இந்தப் பக்கம் சாயங்கால வேளைகளில் ஸோல்ஜர் கள் குடித்துவிட்டுச் சுற்றிக் கொண்டிருப்பார்கள். அவர்களிடம் அகப்பட்டுக்கொண்டால் தொல்லைதான்.

சாமான்களை யெல்லாம் எடுத்துக் கட்டுவதற்குள் இருட்டி விட்டது. இதற்கிடையில் வேலையாட்கள் ஓடிவந்து, யாரோ வெள்ளைக்காரர் இரண்டு பேர் தங்களிடமிருந்து வண்டியைப் பல வந்தமாய்ப் பிடுங்கி எங்கோ ஓட்டிக்கொண்டு போய்விட்டதாகத் தெரிவித்தார்கள்.

உடனே வேறு வண்டி கொண்டுவர உத்தரவாயிற்று. அன்றைய ஸந்தோஷம் முழுவதும் பாழ்பட்டது பற்றி மஹேந்திரனுக்கு முதலிலேயே இருந்த ஆத்திரம் இப்பொழுது அடக்கமுடியாமற் போய்விட்டது.

வளர்பிறைச் சந்திரன் மரங்களின் மறைவிலிருந்து மெல்ல மெல்ல உயரக் கிளம்பிக்கொண்டிருந்தான். நிர்ஜனப் பிரதேசத்தில் அந்நிலவொளி மிக விசித்திரமாகக் காணப்பட்டது. மாயைசூழ்ந்த இவ்வுலகில் இன்று விநோதினிக்கு ஓர் அபூர்வ அனுபவம் ஏற்பட்டது. செயற்கை அன்பு மறைந்து இயற்கை அன்புடன் அவள் ஆசாவின் தோளின்மீது கையைப் போட்டுக்கொண்டே உலவிக் கொண்டிருந்தாள். ஆசா தோழியை உற்று நோக்கினுள்; அவள் கண்களிலிருந்து தாரைதாரையாய் நீர் பெருகுவதைக் கண்டாள். உடனே மனம் கரைந்து, "நீ அழுவானேன்?" எனக் கேட்டாள்.

விநோ: ஒன்றுமில்லே, தோழி. இன்று என் வாழ்வில் மிகவும் நன்னுளென்று தோன்றுகிறது.

ஆசா: என்? இன்று மாத்திரம் அப்படித் தோன்றக் காரணம் என்ன?

விநோ: தோழி, நான் இறந்துவிட்டதுபோலவும், இகலோகத்தில் எனக்குக் கிடைக்காத ஸகல சுகமும் பரலோகத்தில் எனக்குக் கிடைத்தது போலவும் ஆனந்தம் ஏற்படுகிறது.

ஆசாவிற்கு இப்பேச்சின் அர்த்தமே புரியவில்லே. தன் அருமைத் தோழி இறப்பதாகச் சொன்னது மட்டும் அவளேத் துக்கத்தில் ஆழ்த்தியது. அவள், "சீச்சீ! இது என்ன பேச்சு? இனி இப்படியெல்லாம் பேசாதே" என்ருள்.

வேறு வண்டி கிடைத்தது. விஹாரி முன்போலவே வெளியே வண்டிப் பெட்டியின் மீது உட்கார்ந்துகொண்டான். விநோதினி வண்டிக் கதவின் ஓரத்தில் உட்கார்ந்து ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டிருந்தாள். நிலவொளியில் கறுத்து அடர்ந்த மர வரிசைகள் கூடவே தொடர்ந்து வருவன போல் காணப்பட்டன. ஆசா ஒரு மூலேயில் சாய்ந்து தூங்கி வழிந்துகொண்டிருந்தாள். மஹேந்திரன் உற்சாகமற்று மனவெறுப்புடன் பாதிக் கண் மூடிய படியே யோசனேயில் இருந்தான்.

(தொடரும்)

# விளையாட்டு

ஜைனேந்திர குமார்

[ஹிந்தியிலிருந்து மொழிபெயர்த்தவர்: கா. ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசாரியார்]

---

மோனத்திலே ஆழ்ந்த அந்திவேளை, முறுவலொளி வீசிச் சிரித்துக்கொண்டிருந்தது. அந்த ஸமயத்தில் ஜனச்சந்தடியற்ற கங்கையின் மணற்கரைமீது, ஒரு சிறுவனும் சிறுமியும் தம்மையும் முழு உலகத்தையும் மறந்து, கங்கைக் கரையின் மணலையும் நீரையும் தம் ஒப்பில்லாத் தோழராகக் கொண்டு அவைகளோடு விளையாடிக்கொண்டிருந்தனர்.

பிரகிருதி தேவதை இந்தக் களங்கமற்ற பரமாத்ம கண்டங்களை அசையாமலும் இமைகொட்டாமலும் பார்த்த வண்ணமாயிருந்தாள். பாலகன் எங்கிருந்தோ ஒரு கம்பைக் கொண்டுவந்து, கரையோரத்தில் ஓடிய நீரைச் சடசட வென்று அடித்துக்கொண்டிருந்தான். தண்ணீரோ அடிபட்டுங்கூட, பாலகனோடு தோழமை பெற ஆவல் கொண்டு மேலெழும்பிக்கொண்டிருந்தது. பெண் குழந்தை தன் ஒரு காலின்மேல் மணலை நிரப்பி அதைக் கையினால் தட்டித் தட்டி ஓர் அடுப்புச் செய்துகொண்டிருந்தாள்.

செய்துகொண்டே சிறுமி அடுப்பைப் பார்த்து, "இதோ பார்! சரியாக ஆகாவிட்டால் இப்போதே உன்னை உடைத்துவிடுவேன்" என்றாள். பின்பு மிக்க அன்புடன் தட்டித் தட்டி அதைச் சரிப்படுத்தினாள். 'இதன்மேல் நான் ஒரு குடிசை அமைப்பேன்—அது என் குடிசை. மனோஹரன்?... இல்லை; அவன் என் குடிசையில் இருக்க மாட்டான்; வெளியில் நின்றவாறே அடுப்பில் இலைகளைப் போட்டுக் கொண்டிருப்பான். அவன் தோல்வியடைந்து, மிகவும் கெஞ்சிக் கையைக் கூப்புவான். அப்போது நான் அவனை என் குடிசையில் அழைத்துக் கொள்வேன்' என்று நினைத்தாள் அந்தக் குழந்தை.

மனோஹரனோ நீரோடு கலந்து விளையாடிக்கொண்டிருந்தான். இங்கே காரணமின்றியே அவன் மீது கோபமும் அனுக்கிரஹமும் உண்டாகின்றனவென்பதை அவன் எவ்விதம் அறிவான்?

'மனோஹரன் எவ்வளவு அழகாய் இருக்கிறான்! ஆனால், அவன் பெரிய சண்டைக்காரன். என்னை அழக்கிளப்பியவாறே இருக்கிறான். இப்போது சண்டையிடுவானாயின், நான் அவனைக் குடிசையில் கூட்

டாளியாகச் சேர்த்துக்கொள்ள மாட்டேன். கூட்டாளியாக விரும்பு வானுயின் நிபந்தனை கேட்பேன்; அதன் பின்பே அவனைக் கூட் டாளியாக்கிக் கொள்வேன்' என்று எண்ணமிட்டுக் கொண்டிருந் தாள் பெண்குழந்தை.

குழந்தை ஸுரபாலாவுக்கு வயது ஏழு. மனோஹரன் அவளை விடச் சுமார் இரண்டு வயது பெரியவன்.

திடீரென்று, 'அடுப்பின் மேல்பாகம் சுடுமே? அதன் மீது மனோஹரன் எவ்வாறு நிற்பான்? எனக்கென்ன, நான் இருந்துவிடு வேன்; ஆனால் மனோஹரனுக்குச் சுடுமே' என்ற நினைவு வந்தது சிறுமிக்கு.

'அவனோடு நான், அண்ணு, அடுப்பங்கரை மிகச் சுடும், நீ இங்கு வராதேயென்று சொல்லுவேன். ஆனால் அவன் கேட்கா விட்டால்? அவன் என்னிடமே உட்கார வந்து விட்டால்—? அப் போது, அண்ணு, நில்லு! நானே அங்கே வருகிறேனென்று சொல்வேன்..ஆனால் அவன் என்னிடமே வரவேண்டுமென்று அடம்பிடிப்பானு?....கட்டாயம் பிடிப்பான்; அவன் பெரிய பிடி வாதக்காரன். ஆனால் நான் அவனை வரவிடமாட்டேன். ஐயோ பாவம்! சுடும்—நல்லதுதானே; வேண்டும் அவனுக்கு! அதிகம் பேசினல், ஒரு தள்ளுத் தள்ளி, அடே முட்டாள், சுடுமடா!: என்று சொல்வேன்.'' இதை நினைத்ததுமே அவளுக்குப் பெரிய மகிழ்ச்சியாயிருந்தது; ஆனால் அவள் முகம் வாடியது. வாஸ்தவ மாகவே மனோஹரனைத் தள்ளி அவன் விழுந்ததுபோல, நகைப்பும் கருணையும் நிரம்பிய காட்சி உண்மையாகவே அவள் கண்ணுக்குத் தோன்றியது.

பாலிகை இரண்டொருதரம் கை நிறைய மணலைக்குவித்து, அடுப்பின்மேல் வைத்துப் பார்த்தாள். அடுப்புத்,தயாராகிவிட் டது. தாய் எவ்வளவு கவனமாகவும் ஜாக்கிரதையாகவும் அப்போது தான் பிறந்த தன் குழந்தையைப் படுக்கையில் விடுவாளோ, அவ் வாறே ஸுரபாலாவும் மெல்ல மெல்லத் தன் காலை அடுப்பின்கிழி ருந்து இழுத்துக் கொண்டாள். அப்படிச் செய்யும்போது, அவள் உண்மையிலே அடுப்புக்கு முத்தம் தருவது போலே யிருந்தாள். அவள் காலின் மீதுதானே அடுப்பு நிலைத்திருக்கிறது? காலின் ஆதரவு நீங்கியதும் பாவம் அது விழாமல் இருக்க வேண்டுமே! காலை நன்ருக நீக்கி விட்ட பின்பும் அடுப்பு அப்படியே நின்று விட்டது; ஆனந்தத்தால் ஒரு குதி குதித்தாள் அவள்.

உடனே ஓடிப்போய் முழு முட்டாளான மனோஹரனை இழு த்துவந்து, இந்தச் சாதுரியம் நிறைந்த விளையாட்டு அடுப்பை

அவனுக்குக் காட்ட வேண்டுமென்று தோன்றியது அவளுக்கு. முட்டாள் பையன் தண்ணீருடன் போராடிக் கொண்டிருக்கிறான். இங்கே எவ்வளவு அதிசயமான வேலைப்பாடு நடக்கிறது; இதை அவன் காணவில்லை! இப்படிப்பட்ட கெட்டியான அடுப்பை அவன் என்றாவது பார்த்திருப்பானா?

'ஆனால், இப்போது கூடாது; முதலில் குடிசையை அமைத்து விடுவோம்' என்று நினைத்து, அவள் ஒரு பிடி மணலெடுத்து மெல்ல மெல்ல அடுப்பின் தலையில் வைத்தாள். பின்பு இரண்டாவது பிடி, மூன்றாவது, நான்காவது—இவ்வாறு நான்கு பிடிகள் வைத்து ஸுரபாலா அடுப்பின் மேல் தன் குடிசையைக் கட்டிவிட்டாள்.

அடுப்புத் தயாராகி விட்டது. ஆனால் பக்கத்து வீட்டு அடுப்பைப்பற்றி முழுதும் ஞாபகப்படுத்திக்கொண்டபோது, அவளுக்கு இதில் ஒரு குறை இருப்பது தெரிந்தது. புகை எப்படிப் போகும்? சிறிது யோசித்து, அவள் ஒரு குச்சியைக் கோணலாக்கி அதில் நட்டு விட்டாள். அவ்வளவுதான். பிரம்மாண்டத்தில் எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்த அடுப்பு-உலக முழுவதிலும் எல்லாவற்றையும் விட அழகான பொருள்-தயாராகிவிட்டது.

'அந்தக் காட்டுமிராண்டி மனோஹரனுக்கு இந்த அபூர்வச் சிற்பத்தைக் காட்டுவேன்; ஆனால் இன்னும் சிறிது இதைப் பார்த்து விட்டுப் போவோம்' என்று கருதினாள் ஸுரபாலா. அவள் வாயைத் திறந்தவண்ணம், கண்களசையாது, அவ்வுயர்ந்த அடுப்பைப் பார்த்துப் பார்த்து ஆச்சரியமடைந்து மெய் சிலிர்த்தாள். 'இறைவன் எங்குளன்?' என்று யாராவது அக்குழந்தையை அப்போது வினவி யிருப்பாராயின், அவள் 'இந்த அடுப்பின் மாயத்திலே' என்று விடை கூறி யிருப்பாள்.

மனோஹரன் தன் 'ஸுரீ—ஸுரோ-ஸுர்ரீ'யை நினைத்துத் தண்ணீரின் ஸம்பந்தத்தை விட்டுவிட்டுக் கையிலிருந்த கழியை வேகமாகக் கங்கை வெள்ளத்திலே எறிந்துவிட்டுத் திரும்பியதும், ஸ்ரீமதி ஸுரபாலா தேவி கண் கொட்டாமல் தனது பரமாத்ம லீலையின் மாயத்தை அறிவதிலும், பிரித்துக் காண்பதிலும் ஈடுபட்டிருந்ததைக் கண்டான்.

மனோஹரன் சிறுமியின் பார்வையைக் கூர்ந்து நோக்கினான். அம்மாள் அவர்கள் அடுப்பிலேயே ஈடுபட்டிருப்பதை அவன் கண்டான். உரக்கக் கலகல வென்று நகைத்து, ஒரே உதையில் அந்த அடுப்பை உடைத்து விட்டான் அவன்!

ஏதோ ஒரு கோட்டையைப் பிடித்துவிட்டது போல, மிகப் பெருமை தோன்ற, "ஸுர்ரோ ராணீ!" என்று கத்தினான் மனோஹரன்.

பாடு திண்டாட்டம்தான். இந்த வருஷமும் என்னை நிறுத்தட்டும்; அவனை ஒரு கை பார்த்துடறேன். எப்படியிருந்தாலும் சரி. அடுத்த வருஷம், இங்கே படிக்கப்போவதில்லை. ஏ. கே. வி. ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் ஒத்தரைக்கூட நிறுத்தவில்லையாம். இந்தத் தோசிதான் நம்ப வயிற்றெரிச்சலை இப்படிக் கொட்டிக்கிறான்.

கல்யாணம்: அனுப்பறவங்களெல்லாம் தேறிடராங்களா? போனவருஷம் இவர் அனுப்பமாட்டேன்னு தகராறு பண்ணின ஆட்கள்தான் முதல்லே தேறினார்கள். எங்கே, ஸையத்தைக் காணோம்?

சோக்கலிங்கம்: அதோ ஜன்னல்கிட்ட சிக்கிறானே. ஏ ஸையத்! ஸையத்!

ஸையத்: (விரலை வாயில் வைத்து) உஸ். சத்தம்போடாதே! பொட்டையன் காதில் விழப்போவுது.

கல்யாணம்: என்ன இவ்வளவு பயம்? இப்பொழுது பணிவு, பயம் எல்லாம் வந்துவிட்டது போலிருக்கிறது. இது எவ்வளவு நாளைக்கு?

ஸையத்: 'ரிஸல்ட்' சொல்லுகிறவரையில்.

மீனாக்ஷி: உனக்கென்னப்பா; ஸெலக்ஷன் ஆகலேன்னா, மரக்கடையில் உட்கார்ந்து விடுவாய். பிழைக்கத்தெரியாத என்போன்ற ஆசாமிதான் பரீக்ஷை பரீக்ஷைன்னு அது நம்மை விடுகிறவரையில், அதோடு மாரடிக்கவேண்டியிருக்கிறது.

சோக்கலிங்கம்: அங்கே என்ன நடக்குது? ஏதாவது தெரியுதா?

ஸையத்: ஒண்ணுமே காதிலே விழல்லியே. கண்ணாடி அடைச்சிருக்காங்களோ இல்லியோ! இன்னம் கொஞ்ச நேரத்திலே எல்லாம் தெரிஞ்சு போவுது. அவுங்க என்னதான் பண்றாங்கன்னு பாத்துக்கிட்டிருந்தேன்.

கல்யாணம்: என்ன பண்றாங்க? அப்பா! அப்பொ முதற்கொண்டு ரொம்பக் கவனமாகக் கவனித்துக் கொண்டிருந்தாயே?

ஸையத்: ஹெட்மாஸ்டர், 'மார்க் ரிஜிஸ்ட'ரைக் கையில் வைத்துக்கொண்டிருக்கிறார். கையில் 'அட்டெண்டென்ஸ் ரிஜிஸ்டர்' மாதிரி ஒண்ணு இருக்குது.

கல்யாணம்: சரி. சரி. என் பாடு நிச்சயம் திண்டாட்டம்தான்.

மீனாக்ஷி: ஏண்டா! என்ன ஆபத்து வந்துடுத்து, புதுசா?

கல்யாணம்: ஊமைப் பெண்ணுக்குக் கண் வேறு குருடு. அந்தமாதிரி, 'மார்க்'கே இழுவல்; அதோடு 'டர்ம்டேஸ்' கொஞ்சம் போதாது. சரி சரி.

சோக்கலிங்கம்: மற்ற வாத்தியார்கள்ளாம் என்ன பண்றாங்க?

ஸையத்: ஹெட்மாஸ்டர், ஒவ்வொரு பையனையும்பற்றி ஒவ்வொரு வாத்தியாரையும் கேட்கிறார் போல இருக்கிறது. கம்பளிப்பூச்சியும்*, மிஸ்டர் ஆந்தையும்†தான் குறுக்கே விழுந்து விழுந்து பேசறதுகள். கே. வி. எஸ். வாயே திறக்கவில்லை; பேசாமல் உட்கார்ந்திருக்கிறார்.

கல்யாணம்: கே. வி. எஸ். ரொம்ப அப்பாவி. அவராலே ஒருவருக்கும் உபத்ரவமேயில்லை.

---

* கணக்கு வாத்தியார் † ஸயன்ஸ் வாத்தியார்

மீனுக்ஷி: பொட்டையன், கம்பளிப்பூச்சி, மிஸ்டர் ஆந்தை இதுகள் மூணும் மும்மூர்த்திகள்தான். இவங்க இருக்கிறவரையில் இந்தப் பள்ளிக் கூடமே உருப்படாது.

ஸையத்: இவங்களுக்கு என்னப்பா வந்தது? அனுப்பித் தொலைக்கறது தானே!

கல்யாணம்: ஒரு வருஷம் வீணுவதென்ருல் லேசாகவா யிருக்கிறது? இந்த வருஷம் கட்டுவதற்குப் பணம் சம்பாதிக்க நான் எப்படித் திண்டாடினேன் தெரியுமா? மற்றப் பள்ளிக்கூடங்களில் பரீக்ஷைக்குப் போகிறவர்கள் ஜாப்தாவைச் சொல்லிவிட்டு, அவர்களை மாத்திரம் பணம் கொண்டுவரச் சொல்லுவார்கள். இவர்மாத்திரம், முதல்லே எல்லோரையும் பணத்தைக் கட்டிவிடச்சொல்கிறது. பிறகு ஜாப்தாவை வெளியிடறது. ரொம்ப அக்ரமம்.

மீனுக்ஷி: அது என் தெரியுமா? பொட்டையன் பெரியபேர்வழி! 'ஸெலக்ஷன்' ஆகாதவர்கள் பள்ளிக்கூடத்தையும் படிப்பையும் விட்டுவிட்டுப் போனாலும் போய்விடுவார்கள். அதற்காக முதல்லேயே எல்லார் பணத்தையும் வசூல் பண்ணுகிறது. பரீக்ஷைக்குப் போகிறவர்கள் பணத்தை மாத்திரம் கவர்ன்மெண்டுக்கு அனுப்புகிறது. போகாதவர்களுக்கு, பாக்கியிருக்கும் மாதச்சம்பளத்தைப் பிடித்துக்கொண்டு, மீதியிருக்கும் இரண்டேகாலே வீசத்தைத் திருப்பிக்கொடுத்து வீட்டுக்கு அனுப்புவது. இது அவர் வழக்கம். ஆள் யமன்!

கல்யாணம்: அம்மாவும், அப்பாவும் பரீக்ஷைக்குப் பணம் கட்டப்போவதாக நினைத்துக்கொண்டிருப்பார்கள். இந்த வருஷம் அனுப்பவில்லையென்று சொல்லிவிட்டு, இரண்டேகாலே வீசத்தைத் திருப்பிக்கொடுத்தால் ரொம்ப நன்ருயிருக்கும்! —சகிக்கவில்லை இவர் பண்ணுகிற அக்ரமம்!

சோக்கலிங்கம்: போனவருஷம் அருள்சாமியை அனுப்பின சமாசாரம் தெரியுமா? மீனுக்ஷி, அதைச் சொல்லேன்.

மீனுக்ஷி: நீயே சொல்லு அப்பா! எனக்கு ஒன்றும் பிடிக்கவில்லை.

சோக்கலிங்கம்: போன வருஷம் அருள்சாமி எல்லாப் பாடத்திலும் ஒத்தை 'டிஜிட்' மார்க் வாங்கியிருந்தான். வகுப்பில் எல்லோருடனும் பணத்தைக் கட்டினுன். 'ரிஸல்ட்' அன்னிக்கி ஹெட்மாஸ்டர் அவனைக் கூப்பிட்டனுப்பித்தார். 'அடுத்தவருஷம், நீ இங்கே படிக்க வேண்டாம். வெட்டியில் பணத்தையும் காலத்தையும் செலவழிக்காதே' என்று சொல்லித் தயாராய்வைத்திருந்த 'டிரான்ஸ்பர் ஸர்ட்டிபிகேட்'டையும் பாக்கி ரூபா இரண்டேகாலே வீசத்தையும் கொடுத்தனுப்பினுர்.

மீனுக்ஷி: அந்தமாதிரி, எனக்கு இந்த வருஷம் பண்ணினுல்கூடப் போதும். இல்லையானுல், நானே 'ஸர்ட்டிபிகேட்'டை வாங்கிக்கொண்டு போய் விடப் போகிறேன்.

[சேவகன் ஒரு சீட்டைக்கொடுத்து ஹெட்மாஸ்டர் கூப்பிடுவதாகச் சொல்கிருன். சொக்கலிங்கம் வாங்கி, அந்தச் சீட்டைப் பார்க்கிருன்.]

சோக்கலிங்கம்: (பயத்துடன்) ஹெட்மாஸ்டர் என்னைக் கூப்பிடறார். யமகிங்கரன்மாதிரி ஆள் வந்தூட்டானே! என்னடா பண்றது?

மீனாக்ஷிநாதன்: சும்மா போடா! ஒண்ணும் பயப்படாதே!

[சொக்கலிங்கம் 'பயங்கர' அறைக்குள் நுழைகிறான்.]

கல்யாணம்: இதேதடா சங்கடமாயிருக்கிறது!

மீனாக்ஷி: இன்னிக்கிப் பூரா இந்த நரகவேதனையை அனுபவித்துத்தான் ஆகவேண்டும்.

[சொக்கலிங்கம் வாடிய முகத்துடன் திரும்பிவருகிறான்.]

கல்யாணம், மீனாக்ஷி, ஸையத்: என்னடா? என்ன சொன்னாருடா? சொல்லடா?

சோக்கலிங்கம்: (வருத்தத்துடன்) அனுப்பமாட்டாராம்டா.

எல்லோரும்: அனுப்பமாட்டாரா?

சோக்கலிங்கம்: ரொம்பக் கோவிச்சுண்டார்.

மீனாக்ஷி: கம்பளிப்பூச்சியின் வேலை அதிலேயிருக்கும். நீ வேணாப்பாரு.

கல்யாணம்: அடித்தாரா என்ன?

சோக்கலிங்கம்: ஆமாண்டா!

மீனாக்ஷி: அப்பொ உன்னை நிச்சயம் அனுப்பிவிடுவார். உதைவிழுந்தால் 'ஸெலக்ஷன்' ஆயிடுத்தென்று நிச்சயப்படுத்திக்கொள்ளலாம்.

[சேவகன் வந்து ஸையத்தைக் கூப்பிடுகிறான். ஸையத் போகிறான்.]

கல்யாணம்: எனக்கு ரொம்பப் பயமாயிருக்குதுடா.

மீனாக்ஷி: சும்மாத் தைரியமாயிருடா!

[ஸையத் முணுமுணுத்துக்கொண்டே வருகிறான்.]

எல்லோரும்: என்ன?

ஸையத்: என்ன, எல்லாம் தெரிஞ்சதுதான். போனேன். 'இந்தவருஷம் கட்டாயம் பரீக்ஷைக்குப் போகணுமா?'ன்னு கேட்டார். 'ஆமாம், போக வேண்டியதுதானே' என்றேன். 'போனால் தேறிடுவாயா?' என்று கேட்டார். 'முடியுமட்டும் சிரமப்பட்டுப் படிக்கிறேன்' என்றேன். 'இந்த வருஷம் நீ போகவேண்டாம். சாவகாசமாகப் படி. அடுத்த வருஷம் போகலாம். கணக்கிலே 25. பூகோளத்திலே 20. உன்னை அனுப்பி என்ன பண்றது? போயிட்டு வா' என்று அனுப்பிவிட்டார்.

[சேவகன் மறுபடியும் வருகிறான்.]

கல்யாணம்: யாருக்கு ஆபத்தோ தெரியல்லையே?

மீனாக்ஷி: கல்யாணம்! உன்னைத்தாண்டா கூப்பிடறான்.

[கல்யாணம் நடுங்கிக்கொண்டு போகிறான்.]

மீனாக்ஷி: பாவம்! கல்யாணம் ரொம்பப் பயந்தவன்.

சோக்கலிங்கம்: நம் ஹெட்மாஸ்டருக்குத் தாராதரமே தெரிவதில்லை. மஹாமோசம்.

[கல்யாணம் கண்ணீர் ததும்ப வருகிறான்.]

மீனாக்ஷி: ரொம்பப் பயமுறுத்தினானோ? உதை பலமோ?

**கல்யாணம்:** நான் பிரயோஜனமில்லையாம். 'மார்க் போதாது, டர்ம் டேஸ் போதாது' என்று ரொம்ப வைதார். கடுமையாகக் கோபித்துக் கொண்டார்.

[சேவகன் வருகிறான்.]

**ஸையத்:** (சீட்டைப் பார்த்து) மீனாக்ஷிநாதா! உனக்கு அழைப்பு வந்திருக்கு. போயிட்டு வா.

**மீனாக்ஷி:** வரட்டுண்டா பார்த்துக்கிறேன். (போகிறான்.)

**சொக்கலிங்கம்:** தைரியமாப் போறானே. வர்ரபோதுன்னா அவன் தைரியம் தெரியும்!

(மீனாக்ஷிநாதன் சிரித்துக்கொண்டு வருகிறான்.)

**எல்லோரும்:** என்னடா? அனுப்புவாராடா?

**மீனாக்ஷி:** அனுப்பமாட்டேன்னுதான் சொன்னார். இருந்தாலும் அடி நன்னா வெளுத்துட்டார். அதனாலே நிச்சயம் அனுப்பிடுவார். பாரேன், நம்ப எல்லோரையும் அனுப்பிடத்தான் போறார்.

**கல்யாணம்:** போடா போ! என்னடா விளையாட்டு? இப்ப என்னடா பண்றது? ஒண்ணும் புரியல்லியே!

**சொக்கலிங்கம்:** படிப்பும் போதும்; பரீக்ஷையும் போதும். தலையை முழுகிடப்போறேன். ஸையத்! உனக்குத்தான் மரக்கடையிருக்கே; போய்ப் பொட்டியடியில் உட்காந்திரு.

**ஸையத்:** பள்ளிக்கூடம் பெரிய லீவு கழித்து மறுபடியும் திறக்கும் வரையில் புஸ்தகத்தைத் தொடவேண்டாம். ஆறுமாசத்துக்குக் கவலையில்லை.

**சொக்கலிங்கம்:** நம்ப போய் அவரைக் கண்டு வருவமா? சித்தெ இரண்டு வார்த்தை சொல்லிக் கெஞ்சிப் பார்ப்போமே.

**மீனாக்ஷி:** இருங்கப்பா. ஜாப்தாவை அவர்கள் ஒட்டட்டும். அதற்கப்புறம் மேல் நடவடிக்கைகள் நடத்தலாம்.

**கல்யாணம்:** நான் அவரிடம் போய் முறையிட்டுத்தான் ஆகணும்.

**ஸையத்:** சொக்கலிங்கம்! நீதான் ஒரு வருஷமா அவரைக் காக்காப் பிடிச்சிண்டு வந்திருக்கியே; என் உன்னைக்கூட இந்தமாதிரி செய்திட்டார்?

**மீனாக்ஷி:** காக்காயும் குருவியும் இவங்கிட்டே நடக்காது. ஆனல் நான் இந்தவிசை விடப்போவதில்லை—டே! டே! டே! வாங்கடா. வாங்கடா. 'லிஸ்டை' ஒட்டறாண்டா.

[எல்லோரும் ஜாப்தாவைப் பார்க்கிறார்கள்.]

**மீனாக்ஷி:** ஸையத், கையைக் கொடு. கல்யாணம் உன் கையை நீட்டு. சொக்கலிங்கம்!

[ஒவ்வொருவரும் கைகுலுக்கிக்கொள்கிறார்கள்.]

**கல்யாணம்:** எல்லாரையுமா அனுப்பறார்?

**ஸையத்:** நல்ல வேளை. குஷிதான் இந்தவருஷம்!

சொக்கலிங்கம்: இருபத்தாறுபேரில் ஒத்தரைக்கூட நிறுத்தல்லியே! இந்த வருஷம்மாதிரி ஒரு வருஷமாவது எல்லோரையும் அனுப்பினதேயில்லே!

மீனாக்ஷி: நான்தான் சொன்னேனே, அவர் அடிக்க ஆரம்பித்தால் அனுப்புவது நிச்சயன்னு. நடுவாந்தரங்களைக் கொஞ்சம் பயமுறுத்த இப்படியெல்லாம் பண்றது சும்மா!

கல்யாணம்: எல்லாம் நமக்கு நல்லதுக்குத்தானே?

ஜைய்பத்: நம்ப சும்மாச் சொல்றோம். அடித்தால்தான் என்ன? இவர்மாதிரி, பையன்களைத் தனித் தனியாகக் கவனிப்பது வேறு ஒரு பள்ளிக்கூடத்திலும் இல்லே.

மீனாக்ஷி: ஏ. கே. வி. ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் பிரயோஜனமே இல்லேடா. பரீக்ஷை 'ரிஸல்டை'ப் பார். இந்தப் பள்ளிக்கூடத்திற்கும் அதற்கும் எவ்வளவு வித்யாசம்! வேலையைப் பொறுத்தவரையில், நம்மளவரை மிஞ்சறவன் ஜில்லாவிலேயே இல்லே.

சொக்கலிங்கம்: பாடம் சொல்லிக்கொடுப்பதில்தான் என்ன? எவ்வளவு புரியும்படி சொல்லித்தரார்! பால் மாதிரி போட்டறார்.

கல்யாணம்: வேறு ஒத்தரும் அப்படிச் சொல்லிக் கொடுக்கமுடியாது.

ஜைபத்: சொக்கலிங்கம், முக்யமா ஒரு சங்கதி மறந்துட்டமே! கடைசி வருஷமாச்சே; ஹெட்மாஸ்டருக்குப் 'பார்ட்டி' கொடுத்து ஒரு 'குரூப்' எடுத்துக்க வேண்டாம்?

மீனாக்ஷி: அவசியம் உடனே செய்யணும்டா. போன வருஷத்தைவிட இந்த வருஷம் நன்னாயிருக்கணும்.

சொக்கலிங்கம்: சிறப்பாகச் செய்துவிடலாம். சும்மாயிரு.

[சேவகன் சீட்டுக் கொண்டுவருகிறான்.]

கல்யாணம்: அடேடே! நம்ப நாலுபேரையும் ஹெட்மாஸ்டர் கூப்பிடுகிறாரடா! இதேதடா வம்பு?

மீனாக்ஷி: ஐயையோ! சனி விடாது போலிருக்கு! (போகிறார்கள்.)

ஹெட்மாஸ்டர்: தாட்சண்யத்திற்காக இந்த வருஷம் உங்களை அனுப்புகிறேன். பரீக்ஷைக்குள்ளே நீங்கள் சரியாப்படிக்கல்லேயோ, உங்களைப் பரீக்ஷை எழுதவிடமாட்டேன்; ஜாக்ரதை. ரொம்ப சிரத்தையாய்ப் படிக்கணும். தெரியறதா?

எல்லோரும்: ஆகட்டும் ஸார். ஆகட்டும் ஸார்.

ஹெட்மாஸ்டர்: படிப்பிலே உஷாராயிருங்கள். விளையாட்டு ஜாஸ்தியாச்சோ, தொலைத்துவிடுவேன்.

எல்லோரும்: இல்லே ஸார், ஆமாம் ஸார்.

ஹெட்மாஸ்டர்: சரி, போய்ப் படிக்க ஆரம்பியுங்கள். போங்கள்.

[எல்லோரும் வெளியே வருகிறார்கள்.]

மீனாக்ஷி: நல்ல வேளை! இத்தோடே விட்டார். இன்னிக்கி முழித்தவர்மூஞ்சியிலே முழிக்கவேணும். சரி, ஆளுக்கொரு கப் காபி! என்னசொல்றேள்?

ஸையத்: ஆகா, எல்லோரும் தயார். ஆனல், மீனுக்ஷி, நீதான் வாங்கிக் கொடுக்கணும்.

மீனுக்ஷி: நீதான் கொடேன்?

கல்யாணம், ஸையத், சோக்கலிங்கம்: மீனுக்ஷிதான் கொடுக்கணும். அவன்தான் பெரியவன்.

மீனுக்ஷி: சரி வாருங்கள். ஆனல் ஹெட்மாஸ்டருக்குக் கொடுக்கவேண்டிய 'பார்ட்டி'க்குத் தயார் செய்யவேண்டியது, ஸையத், உன் பொறுப்பு. சரிதானே?

கல்யாணம்: எங்கே போகலாம்? ராமவிலாஸுக்குத்தானே?

சோக்கலிங்கம்: சே, சே. அங்கே கூடவே கூடாது. ஹெட்மாஸ்டர் திடீரென்று வந்தாலும் வந்துவிடுவார். கிருஷ்ணவிலாஸுக்குப் போகலாம்.

மற்றவர்கள்: சரி. (போகிறுர்கள்.)

(திரை)



# மனக்குகை ஓவியங்கள்

'புதுமைப் பித்தன்'

## 1

கர்த்தராகிய பிதா, பரமண்டலத்தின் சாளரங்களில் ஒன்றைத் திறந்து எட்டிப் பார்த்தார்..

கீழே, பல யோஜனைகளுக்கு அப்பால், அவர் கற்பித்த பூமண்டலமும், அதன்மீது ஊர்ந்து திரியும் சகல ஜீவராசிகளும், அவர் தமது சாயையில் சிருஷ்டித்து மகிழ்ச்சியுற்ற ஆதாம் ஏவாளின் வாரிசுகளும் தென்பட்டன.

ஒரு தாயின் பெருமிதத்துடன், ஒரு சிருஷ்டிகர்த்தரின் கம்பீர மகிழ்ச்சியுடன், அப் பூமண்டலத்தைக் கவனித்தார்.

அன்று ஏழாம் நாள் தொழிலை (விளையாட்டை?) முடித்துக் கை கழுவிவிட்டுச் சிரமபரிகாரம் செய்துகொண்டிருந்தபொழுது எந்த நிலையில் இருந்ததோ அதே நிலையில், மனிதனைத் தவிர்த்துப் பூமண்டலத்தின் மற்றைய ஜீவராசிகளெல்லாம் அவருக்குத் தென்பட்டன.

மனிதன் மட்டிலும், ஏக்கத்தாற் குழிந்த கண்களோடு, விலாவெலும்பெடுத்த கூனல் உடலை வளைத்து, நெற்றி வியர்வை நிலத்தில் சொட்டச் சொட்ட, எதையோ குகை யொன்றில் வைத்து ஊதி ஊதி உருக்கிக் கொண்டிருந்தான்.

பிதாவின் களங்கமற்ற நெற்றியில், கண்ணாடியில் கலந்த ஆவி போலச் சோர்வு போர்த்திய துயரக் களை தோன்றி மறைந்தது.

தம் இரத்தத்தின் இரத்தமான, கனவின் கனவான, லட்சியத்தின் லட்சியமான, புதல்வனின் நினைவு தட்டியது போலும்!

இன்னுமா?

"ஹே! மானுடா, ஏனப்பா உன் பார்வை குனிந்தே போய் விட்டது?" என்ற குரல், பல யோஜனைகளுக்கு அப்பால் உள்ள மனிதனுடைய உள்ளத்தில் ஒலித்தது.

மனிதன், தன்னுடைய நம்பிக்கை வறண்ட கண்களைக் கொண்டு வானத்தை அண்ணாந்து பார்த்தான்.

"நீர் எப்பொழுதும் அங்கேயே இருக்கிறீரே?" என்று பதில் கேள்வி கேட்டான்.

"நான் என்ன செய்யட்டும்! உன்னை மாசு படுத்தும் அந்தப் புழுதி தோய்ந்த கரங்களுடன், மார்புடன், என்னைக் கட்டித் தழுவ முயலுகிறாயே?"

"என்னைச் சிருஷ்டிக்க நீர் உபயோகித்த புழுதியை விட்டு நான் எப்படி விலக முடியும்? உம்மை எப்படி வரவேற்க முடியும்? நான் நிமிர்ந்து நேராக நிற்பதற்கே இந்தப் புழுதிதானே ஆதாரம்? புழுதியைக் கண்டு அஞ்சும் உமக்கு, அதன்மீது நிற்கும் என்னை அறிந்துகொள்ளச் சக்தி உண்டா? நீர் அந்தச் சக்தி பெற்றுக் கீழே வரும்வரை, நான் இந்தப் புழுதியில் கண்டெடுத்த- அதில் என்னோடு பிறந்த என் சகோதரனை - இந்த இரும்புத் துண்டை வைத்து என்னைப் பாதுகாத்துக் கொள்ளுகிறேன்" என்று குனிந்து நெருப்பை ஊதலானான். குகையில் பளபள வென்று மின்ன ஆரம்பித்தது.

## 2

உத்தானபாதனது குழந்தை தெய்வத்திடம் வரம் கேட்பதற்காகத் தபஸ் செய்யக் கானகத்திற்கு ஓடிற்று.

மகாவிஷ்ணுவும் ஸ்ரீதேவியும் ஆகாய மார்க்கமாகச் செல்லும் பொழுது இக்குழந்தையைக் கண்டுவிட்டார்கள்.

ஸ்ரீதேவிக்குப் பசலைக் குழந்தையின் பக்தியைக் கண்டு பரிவு ஏற்பட்டுவிட்டது. விவரம் தெரியாத குழந்தைகள்கூடத் தன் கணவருக்கு இருக்கும், அந்தக் 'காத்து அளிக்கும்' சக்தியை அறிந்திருக்கின்றனவே என்பதில் ஒரு பூரிப்பு. கணவரைப் பார்த்துக் கொண்டாள்.

ஸ்ரீதேவியின் கடைக்கண் வீச்சுக்கிணங்கி, வரங்களை வாரிச் சொரியக் குழந்தையை அணுகினார் மகாவிஷ்ணு.

குழந்தை ஓடிக்கொண்டிருந்தது.

பகற்கனவை ரஸித்துப் பல முறை ஏமாந்த குழந்தை அது. எதிலும் சர்வ சந்தேகம் அதற்கு. மனதின் பேரில் அதற்கு அசைக்க முடியாத, நிரந்தரமான சந்தேகம்.

உத்தானபாதனது மடியில் உட்கார்ந்து விளையாடுவதாக, கொஞ்சுவதாக, நம்பி எத்தனையோ முறை ஏமாந்திருக்கிறது.

மகாவிஷ்ணு சங்கு சக்கராயுதராக, அதனை வழிமறித்து நின்று, "குழந்தாய்!" என்று அழைத்தார்.

"நீ யார்?" என்று கேட்டது குழந்தை.

"குழந்தாய், என்னைத் தெரியாதா? நான்தான் மகாவிஷ்ணு" என்று புன்சிரிப்புடன் தம்மை அறிவித்துக் கொண்டார்.

"பொய்! நான் என்ன கனவு காண்கிறேனா?" என்று தன்னைக் கிள்ளிப் பார்த்துக் கொண்டது குழந்தை.

"நிஜந்தான். இந்தா: இந்த வரத்தைக் கொடுக்கிறேன்; அதிலிருந்து தெரிந்து கொள்."

"ஓஹோ, செப்பிடு வித்தைகாரனா?"

"நான்தான் மகாவிஷ்ணு; என் பக்கத்திலிருக்கும் ஸ்ரீதேவியைப் பார்."

"பகல்வேஷக்காரனுங் கூடவா! எங்கப்பா கிட்டப் போ. சம்மானம் குடுப்பார்—என்னை ஏமாத்த முடியாது!" என்று சிரித்துக்கொண்டே, "நேரமாகிறது; தபஸ்பண்ணப் போறேன்" என்று காட்டிற்குள் ஓடிவிட்டது அக்குழந்தை.

கொடுக்க விரும்பிய வரத்தை ஒரு நட்சத்திரத்தின்மீது வீசி எறிந்துவிட்டு ஆகாசகங்கையில் ஒரு முழுக்குப் போட்டார் பகவான்.

பசியால் தவிக்கும், 'கல்லினுள் சிறு தேரை' ஒன்று தென் பட்டது. அதை நோக்கி விரைந்து சென்றார்.

## 3

யமபுரி.

மார்க்கண்டச் சிறுவனுக்காகப் பரிந்துகொண்டு வந்த சிவபிரான் கையில் தோல்வியுற்று, தர்மராஜன் அப்பொழுதுதான் திரும்பி வந்திருக்கிறான்.

தனது தர்மாசனத்தில் உட்காரவும் அவனுக்கு அச்சம். தயங்குகிறான்.

ஆசனத்தடியில் விடாப்பிடியாக உட்கார்ந்துகொண்டு முரண் செய்துகொண்டிருந்த நசிகேதக் குழந்தை, "மரணம் என்றால் என்ன?" என்று மறுபடியும் தன் மழலை வாயால் கேட்டது.

எத்தனையோ தத்துவங்களைச் சொல்லிப் பார்த்தான். குழந்தையை ஏமாற்ற முடியவில்லை. தன் ஒற்றைக் கேள்வியை வைத்துக்கொண்டு அவனை யுகம் யுகமாக மிரட்டி வருகிறது, அக் குழந்தை.

தோல்வியின் சுபாவமோ என்னவோ!

"மனிதர்கள் என்னைக் கண்டு ஏன் மிரளுகிறார்கள்? அஞ்சுகிறார்கள்? நான் உதவி செய்யத்தானே செல்லுகிறேன்? எனக்குப் பயந்து என்னையும்விடப் பெரிய எமனான சங்கரனிடம் சரண் புகுந்தாவது என்னை விரட்டப் பார்க்கிறார்களே! இது என்ன புத்தி? என்னைக் கண்டு பயப்படுவதற்கு என்ன இருக்கிறது?"

என்று அவனது ஏக்கப் படுதாவில் நினைவு அலைகள் தோன்றி விரிந்தன.

அன்றுதான் அவன் தன் தனிமையை முழுதும் அறிந்தான்.

அப்பொழுதுதான் கிங்கரர் இருவர் தன்முன் கொண்டு நிறுத்திய மனித உயிரைப் பார்த்துத் தன் அந்தரங்கக் கேள்வியை வாய் குழறிக் கேட்டுவிட்டான்.

"அதோ கிடக்கிறது பார், நான் போட்டுவிட்டு வந்த உடல்; அதில் போய் உட்கார்ந்துகொள். அப்புறம் உன் கிங்கரர்களை ஏவி, உன்னை அழைத்து வரும்படி உத்தரவு செய். அப்பொழுது தெரியும் உனக்கு" என்று சொல்லிச் சிரித்தது அந்த மனித உயிர்.

## 4

பர வெளியிலே, பேரம்பலத்திலே நின்று, தன்னையே மறந்த லயத்தில், ஆனந்தக் கூத்திட்டுப் பிரபஞ்சத்தை நடத்துகிறான் சிவ பிரான்.

ஒரு கால் தூக்கி உலகுய்ய நின்று ஆடுகிறான்.

பக்கத்தில் வந்து நின்றார் நாரதர்.

"அம்மையப்பா! எட்ட உருளும் மண்ணுலகத்தைப் பார்த் தருள்க: ......அதோ கூனிக் குறுகி மண்ணில் உட்கார்ந்து, ரஸவாதம் செய்கிறானே.

"சிற்றம்பலமான அவனது உள்ளத்திலே, தேவரீர் கழலொலி என்ன நாதத்தை எழுப்புகிறது தெரியுமா?

"துன்பம், நம்பிக்கை வறட்சி, முடிவற்ற சோகம்...."

தன்னை மறந்த வெறியில் கூத்தாடும் பித்தனுக்கா இவ்வார்த் தைகள் செவியில் விழப்போகின்றன!

வீணையை மீட்டிக்கொண்டு வேறு திசை பார்த்து நடந்தார் நாரதர்.

## 5

கைலயங்கிரியிலே, கண்ணைப் பறிக்கும் தூய வெண் பனிமலை யடுக்குகள், சிவந்த தீ நாக்குகளைக் கக்குகின்றன.

திசையும் திசைத் தேவர்களும், யாவரும் யாவையும் எரிந்து மடிந்து ஒன்றுமற்ற பாழாக, சூன்யமாகப் போகும்படி பிரான், கோரச் சுடரான நெற்றிக் கண்ணைத் திறந்து தன் தொழில் திற மையில் பெருமிதம் கொண்டு புன்னகை செய்கிறான். கண்ணில் வெறியனின் பார்வை.

பார்த்த இடங்களில் எல்லாம் தீ நாக்கு நக்கி நிமிர்கிறது.

இடியும் மின்னலும் இருளும் ஒளியும் குழம்பித் தறிகெட்டு நசிக்கின்றன.

இக்குழப்பங்களையும் மீறி ஒரு சிறு குழந்தை அவனது காலடியை நோக்கி ஓடி வருகிறது.

தோலாடையைத் தன் தளிர் விரல்களால் பற்றி இழுக்கிறது.

பிரான் குனிந்து பார்க்கிறான், புன்சிரிப்போடு.

"அழிப்பதற்குச் சர்வ வல்லமை இருக்கிற தெம்பில் வந்த பூரிப்போ?" என்கிறது குழந்தை.

"சந்தேகமா! நீதான் பார்க்கிறாயே!" என்கிறார் பிரான்.

"உமக்கு எல்லாவற்றையும் அழிக்க முடியும். உம்மை அழித்துக்கொள்ள முடியுமா? நீர் மட்டும் மிஞ்சுவதுதான் சூன்யம் என்று அர்த்தமா? உம்மையும் அழித்துக் கொள்ளும்படி நீர் தொழிலை நன்றாகக் கற்றுவந்த பின்பு நெஞ்சைத் தட்டிப் பார்த்துக்கொள்ளும்" என்று சொல்லிக்கொண்டே அருகி நசித்தது அக் குழந்தை.



# குத்து  விளக்கு

ஸ்ரீ வை. ரா. வே.

---

சின்னஞ் சிறியதோர் வீட்டினிலும்—இவள்
செல்வக் குமரிபோல் வாழ்ந்திடுவாள்
பொன்னொளி வெள்ளம் பொழிந்திடுவாள்—எங்கள்
புன்மை யிருளையும் போக்கிடுவாள்.

மங்கல மங்கையர் ஆதரவில்—ஒளி
வண்ண மிகுந்ததோர் மேனியுற்றாள்
குங்குமப் பொட்டும் அணிந்துநின்றாள்—மணங்
கூடு மலரையுஞ் சூடுகின்றாள்.

பாடிப் புகழ்ந்திடுங் கன்னியர்முன்—எழிற்
பாவை கொலுவமர்ந் தோங்குகின்றாள்
தேடும் அருளையுங் கூட்டுகின்றாள்—துயர்
சிந்தனை யாவையும் ஓட்டுகின்றாள்.

---



# சிறுவர் பகுதி

## கிளி

சோ. சுப்பையா

[ருஷ்யக்கதாசிரியர் ஆந்தோன் செக்கோவ் எழுதியதைத் தழுவியது]

---

கிளிகள் கூட்டங் கூட்டமாக நெற்பயிர் நிறைந்த நிலங்களில் வந்து நெற்கதிர்களைக் கொத்திக்கொண்டு இருந்தன. அவற்றில் வயது முதிர்ந்தது போன்று தோன்றிய ஒரு கிளியை நெருங்கிப் பேச்சுக்கு இழுத்தேன். அந்தக் கிளி நீதி, தர்க்க சாஸ்திரங்கள் கற்றதுபோல இருந்தது.



எங்கள் சம்பாஷணை பின்வருமாறு:

நான்:—கிளிகள் பல காலம் உயிர் வாழ்கின்றன என்று சொல்லுகிறார்களே? ஜந்து சாஸ்திரிகள் கிளிகளையும் ஆமைகளையுமே நீண்ட ஆயுளுக்கு உதாரணமாய்ச் சொல்லுகிறார்கள். உன் வயது என்ன?

கிளி:—எனக்கு வயது முந்நூற்றெழுபத்தாறு.

நான்:—(ஆச்சரியத்தோடு) என்ன! எவ்வளவு நீண்டகாலம் உயிருடன் இருந்திருக்கிருய்! நீ இருந்த முந்நூற்றெழுபத்தாறு வருஷம் நான் உயிருடன் இருந்திருந்தால் எத்தனை கதைகள், எத்தனை நாடகங்கள், எத்தனை கட்டுரைகள், எத்தனை வியாசங்கள் எழுதியிருப்பேன்? எவ்வளவு பணம் சம்பாதித்திருப்பேன்? இவ்வளவு காலமும் நீ என்னதான் செய்து கொண்டிருந்தாய்?

கிளி:—உண்டேன்; உறங்கினேன்; எங்கள் வம்சத்தைப் பெருக்கினேன்; வேறு ஒன்றும் செய்ததில்லை.

நான்:—அட கிழமே, உன்னை நினைக்கும்போதே எனக்கு வெட்கமாயிருக்கிறதே! உனக்கு வெட்கமாயில்லையா? உலகத்தில் முந்நூற்றெழுபத்தாறு ஆண்டுகள் வாழ்ந்து விட்டாய். முந்நூறு வருஷங்களுக்கு முன் எவ்வளவு அறிவு இல்லாமல் இருந்தாயோ அதேமாதிரி இன்னும் இருக்கின்ருயே! அபிவிருத்தி என்பது கொஞ்சங்கூட இல்லையே.

கிளி:—ஐயா, அறிவு வயதால் வளருவதன்று; கல்வியாலும் பயிற்சியாலுந்தான் வளரும். சீனுவைப் பாருங்கள். என்னைவிடப் பன்மடங்கு காலம் உலகத்தில் இருந்தும் என்ன பலன்? ஆயிர வருஷத்துக்கு முன் இருந்தபடியே பேதையாயிருக்கிறது.

நான்:— (ஆச்சரியத்துடன்) முந்நூற்றெழுபத்தாறு வருஷங்கள்! எவ்வளவு காலம்! அதை அழிவின்மை, நித்யம் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. அவ்வளவு காலத்தில் சர்வ கலாசாலையில் எல்லாப் பகுதிகளிலும் நடக்கும் பிரசங்கங்களையும் கேட்டிருப்பேனே! இருபதுதரம் மணஞ்செய்து கொண்டிருக்கலாமே! வெவ்வேறு தொழில்களெல்லாம் பயின்றிருக்கலாமே! என்ன என்ன அந்தஸ்துக்கள் அடைந்திருப்பேனே, கடவுளுக்குத்தான் தெரியும். நிச்சயம் கோடீசுவரன் ஆகியிருப்பேன்.

அட சனியனே! நினைத்துப் பார்: பத்துரூபாயை நூற்றுக்கு வருஷத்துக்கு ஐந்து வட்டிக்கு ஒரு பாங்கியிற் போட்டு வட்டிக்கு வட்டி போட்டிருந்தால் 283 வருஷத்தில் கோடி ரூபாய் ஆகியிருக்குமே! அட முட்டாளே, உனக்கு இவ்வளவு அசட்டுத்தனமாயிருக்கிறோமே என்று வெட்கமில்லையா?

கிளி:—இல்லவே இல்லை. நாங்கள் அசடுகளே. ஆனால் எங்களுக்கு ஒரு திருப்தி: எங்கள் நானூறு வயது ஆயுளில் நாங்கள் செய்யும் மடச்செய்கைகளைக் காட்டிலும் மனிதர்கள் தங்கள் நாற்பது வயது ஆயுளிற் செய்யும் மடச்செய்கைகள் பல மடங்கு அதிகம். ஆம். நான் முந்நூற்றெழுபத்தாறு ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருக்கிறேன். ஆனால் ஒருதரமாவது கிளிகள் கிளிகளோடு போரிட்டதை நான் இன்னும் பார்த்ததில்லை. ஒரு கிளி தன் இனத்தவர் எவரையேனும் இதுவரை மாய்த்தது இல்லை. எங்களுக்குள் ஒருவர் சொத்தை மற்றவர் அபகரிக்கும் வழக்கம் இல்லை. நாங்கள் பொய்ச்சாட்சி கூறுவதில்லை. நாங்கள் லஞ்சம் என்பதை அறியோம். கெட்டகதைகளோ உபயோகமற்ற பாட்டுக்களோ நாங்கள் எழுதுவது இல்லை. பிறரைத் தூற்றுவதே நோக்கமாகக் கொண்ட சமாசாரப் பத்திரிகைகளை நாங்கள் வெளியிடுவது இல்லை. எனக்கும் முந்நூற்றெழுபத்தாறு வயதாச்சே; இதுவரை எங்களுள் கணவனுக்கு மனைவி துரோகம் நினைத்ததை அறியேன். ஐயா, மனிதர்களுக்குள் எப்படி? எங்களில் பிச்சைக்காரர்கள் இல்லை. கோள் சொல்பவர் இல்லை. முகஸ்துதி செய்வோரும் இல்லை. மோசநாசம் எங்களுக்குத் தெரியாது. நாங்கள் கபடர்கள் இல்லை.

இப்படிப் பேசிக்கொண்டிருக்கும்போதே மற்றக் கிளிகள் பறந்து போகவே, தன் பேச்சையும் பூர்த்தி செய்யாமலே அந்தக் கிளியும் பறந்து போயிற்று.

---

# வான விளக்கு

பி. ஆர். சிதம்பரையர், பி.ஏ., எப். ஆர். ஏ. எஸ்.,
ஏ. இராமகிருஷ்ண பிள்ளை

---

## சந்திரன்

### 1

ஆகாசத்திலிருந்து ஒளி வீசும் சூரியனையும் சந்திரனையும் நீங்கள் எத்தனையோ முறை பார்த்திருப்பீர்கள். இராக்காலங்களில் சந்திரனோடு வேறு கணக்கற்ற ஜோதிகளையும் பார்த்திருப்பீர்கள். ஆனால் எல்லா ஜோதிகளிலும் சூரியனும் சந்திரனுமே மிகப் பெரியனவாக நமக்குத் தோன்றுகின்றன. இப்போது இராக்காலங்களில் நமக்கு இன்பத்தைத் தரும் சந்திரனைப் பற்றி ஆராய்வோம்.

பூரண சந்திரன் இரவில் பிரகாசிக்கும்போது நாம் மெய்ம்மறந்து வெளியே சென்று சந்தோஷமாக நம் காலத்தைக் கழிக்கிறோம். இவ்வளவு சந்தோஷத்தைத் தரும் காந்தி சந்திரனுக்குச் சுயமாய் உள்ளதா? பெரிய காந்தவிளக்கைப்போல் அது தானாகவே ஒளி கொடுக்கிறதா? இல்லை. பின் எப்படி அதற்கு ஒளி உண்டாயிற்று? சூரியன் உச்சியில் பிரகாசிக்கும்போது ஒரு முகம்பார்க்கும் கண்ணாடியை எடுத்து வெளியே சூரியனுக்கு எதிராகப் பிடித்துக் கொண்டால் சூரிய ஒளி கண்ணாடியில் தாக்கி வெயில் அடிக்காத வீட்டு முற்றத்துச் சுவரில் அடிப்பதைக் காண்போம். அப்படி வெளிச்சம் படும் இடத்தில் நின்றுகொண்டு நம் நண்பன் நாம் பிடித்திருக்கும்

கண்ணாடியைப் பார்த்தால் அவனுக்குக் கண்ணாடி சூரியனைப்போல் மிகவும் பிரகாசமாய்த் தெரியும். ஆனால் இந்தக் கண்ணாடிக்கு இவ்வளவு பிரகாசம் எங்கிருந்து வந்தது? வீட்டினுள் சுவரில் தொங்கும் போது அது இவ்வளவு பிரகாசத்தைத் தருகிறதா? இல்லையே. சூரிய ஒளியே கண்ணாடியில் தாக்கிப் பிரதி பலிக்கிறது. இவ்வாறே சந்திரனும் சூரிய ஒளியைக் கண்ணாடியைப்போல் பிரதிபலிக்கிறது. சந்திரனுக்கு ஒளி சுயமாய் இல்லை.

இனி, பூரணசந்திரனை நாம் கவனித்துப் பார்த்தால் நமக்கு என்ன தெரிகின்றது? சிலர் சந்திரனில் ஒரு முயல் இருக்கிறதென்றும், மான் இருக்கிற தென்றும், வேறு சிலர் ஒளவைப் பாட்டி இருக்கிறுள் என்றும் இன்னும் என்ன என்னவோ சொல்லுவார்கள். ஆனல் சந்திர மண்டலத்தில் ஒன்றும் இல்லை. 'நீ என்ன, போய்ப் பார்த்து வந்திருக்கிறுயோ?' என்று கேட்டு விடாதீர்கள். சந்திரனுக்கு இதுவரையில் ஒருவரும் போனதில்லை. 'தூரதரிசினி'(Telescope) என்ற கருவி மூலமாய்த் தூரத்திலுள்ள ஒரு மலையைப் பார்த்தால், அது அருகிலிருப்பதுபோல் அதில் உள்ள மரங்கள் முதலியவை தோன்றும். அந்தத் தூரதரிசினியின் மூலம் சந்திரனைப் பார்த்தால் முயலையாவது மானையாவது ஒளவையையாவது நாம் காண்பதில்லை. அநேக மலைகளும் பள்ளங்களும் பள்ளத் தாக்குகளுமே நம் கண்ணுக்குத் தென்படுகின்றன.

இங்கே காட்டியுள்ள படத்தைப் பாருங்கள். இது அமெரிக்காவிலுள்ள ஒரு பிரபல நக்ஷத்திரசாலையில் இருக்கும் பெரிய தூரதரிசினியின் உதவியால் பிடிக்கப் பட்ட சந்திரனது புகைப்படம். சந்திரனில் என்னவெல்லாம் இருக்கின்றனவென்று பாருங்கள். மேலே நீண்டதொரு மலைத்தொடரைக் காண்கிறீர்கள். அதன் ஒரு கோடியிலும் அதற்குக் கீழேயும் வட்டமான பள்ளங்கள் உயர்ந்த விளிம்புகளுடன் தெரிகின்றன.



சந்திரன்

இந்தப் பள்ளங்களில் நீர் தேங்கி யிருக்கும் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் சந்திரமண்டலத்தி லேயே தண்ணீராவது வாயுவாவது இல்லை. சந் திரனில் நாம் காணும் பள்ளம் ஒன்றிலும் தண்ணீர் இல்லை. இந்த மலைத்தொடர்களை நம் பூமியில்

உள்ள வெவ்வேறு மலைத்தொடர்களின் பெயர்களைக் கொண்டு வானசாஸ்திரிகள் குறிப்பிடுகிறார்கள். பள்ளங்களுக்குப் பிரபல அறிஞர்களின் பெயர்களை இட்டிருக்கிறார்கள்.

இந்தச் சந்திரன் நமது பூமியிலிருந்து 2,40,000 மைல் தூரத்தில் உள்ளதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். நமது பூமியின் விட்டம் (*Diameter*) 8000 மைல்கள். ஆகவே நமது பூமியைப் போல் 30 கோளங்களை ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கிப் பூமிக்கும் சந்திரனுக்கும் ஒரு பாலம் கட்டலாம். அப்பாலத்தின் மேல் மணிக்கு 60 மைல் வீதம் இராப் பகல் நிற்காமல் செல்லும் ஒருபுகை வண்டியில் நீங்கள் புறப்பட்டுச் சென்றால், ஐந்தரை மாதங்களில் சந்திரனைச் சேர்வீர்கள்.




சந்திரனே இல்லாதகாலமும் இருந்ததாம். அநேக ஆயிர வருஷங்களுக்கு முன்னால் நமது பூமி இப்போது இருப்பதைக்காட்டிலும் பெரிதாயும் அதிக உஷ்ணமுள்ளதாயும் இருந்ததாம். அந்தக் கோளம் அதிவிரைவாகச் சுற்றிக்கொண்டிருக்கையில் அதன் ரூபம் மாறிக்கொண்டே வந்து ஒருகாலத்தில் அதிலின்றும் ஒரு சிறுபாகம் பிரிந்துபோய் இப்போது உள்ள பூமியும் சந்திரனுமாக ஆகி யிருக்கிறதாம்.

---




இந்து சாதனம்: [சைவ பரிபாலன சபைப் பொன்விழாப் பிரசுரம். சைவபரிபாலன சபை, வண்ணார்பண்ணை, யாழ்ப்பாணம்; விலை சதம் 15.] இதில் பல அறிஞர்களால் எழுதப்பட்ட கட்டுரைகள் உள்ளன. ஸ்ரீமான் குல. சபாநாதனால் எழுதப்பட்ட விளாக்கை யென்னும் கட்டுரையும் துடிசை கிழார் சிதம்பரனார் எழுதியுள்ள திருக்குறள் - பரிதியுரை யென்னும் கட்டுரையும் தமிழறிஞர்களுடைய ஆராய்ச்சிக்கு உதவி புரிவனவாகும்.

நாவலர் நினைவு மலர்: [பண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர்கள் தொகுத்தது; கிடைக்குமிடம்: ஈழகேசரி நிலயம், யாழ்ப்பாணம்; விலை ரூ. 1.] நாவலரவர்கள் உருவப்படத்தை முகப்பிற் பெற்று விளங்கும் இம்மலர் அரிய உழைப்பின் விளைவாக வெளிவந்திருக்கிறது. இதில் இந்தியாவிலும் யாழ்ப்பாணத்திலும் உள்ள அறிஞர் பலர் நாவலரைப்பற்றி எழுதியிருக்கிறார்கள். நாவலரைப் பற்றி முன்பு பலர் வசனமாகவும் செய்யுளாகவும் வெளியிட்டவைகளிலிருந்து பல பகுதிகள் அங்கங்கே சேர்க்கப்பட்டுள்ளன. இந்த வெளியீடு ஸ்ரீ ஆறுமுக நாவலரிடத்தில் தமிழ் மக்களுக்குள்ள பேரன்பை நன்றாக வெளிப்படுத்துகின்றது.

நாவலர் நினைவுமலர் இனி வெளியிடும்போது பின்கண்ட விஷயங்களிலும் கருத்துச் செலுத்தினால் மலரின் உபயோகம் மிகுதியாகும் என்பது நமது கருத்து: (1) நாவலருடைய வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகள். (2) நாவலருக்கு உபகாரம் செய்தவர்களின் வரலாறுகள். (3) நாவலருடைய மாணாக்கர் சரித்திரங்கள். (4) நாவலர் வாழ்ந்திருந்த வீடு, அமைத்த நிலயங்கள் முதலியவற்றின் படங்கள்.

உடலுறுதி: [ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார் எழுதியது; கிடைக்குமிடம்: அன்பு நிலயம், இராமசந்திரபுரம்; விலை ரூ. 1.]

ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் தமிழ் ஆவேசம் பூண்டவர். தமிழ்த்துறையில் அவருடைய முயற்சி செல்லாத இடமில்லை. கலை, கவிதை, கதை, கட்டுரை முதலிய பலதுறைகளிலும் அவர் தறவுள்ளம்படர்ந்து நூல்களை உண்டாக்குகின்றது. இப்புத்தகம் தேகதத்துவ சாஸ்திரத் தொடர்புடையது. ஆனால் பள்ளிக்கூடத்தில் படிக்கும் தேகதத்துவ சாஸ்திரத்தைப் பற்றி நினைக்கும்போது நம் முன் எலும்புக்கூடு வந்து நின்று பயமுறுத்துகின்றது. இந்தப் புஸ்தகத்திலும் எலும்புக்கூடு இருக்கின்றது. ஆனால் அதைத் தமிழ்க்

கவிதை, தமிழ்ப் பண்பு, நல்ல நடை, யோகசாஸ்திரச் செய்திகள், இயற்கையின் நலம் முதலிய பல இனியவிஷயங்கள் மூடிக்கொண்டிருப்பதால் இந்தப் புஸ்தகத்தினிடம் நமக்குப் பயம் ஏற்படவில்லை; படிக்க வேண்டுமென்ற ஊக்கமே உண்டாகின்றது. 'ஆண்பெண் அடங்கலும் கேளுங்கள்: இந்த இயற்கையுடல் சிற்றுலகம், ஐம்பூதமாளிகை, நடமாடுங் கோயில், பிரம மந்திரம்' என்று தொடங்கி அந்த நடமாடுங் கோயில் அமைப்புக்களை விளக்கிக்கொண்டே சென்று அதற்கு வரும் பிணிகளையும் அவற்றைப் போக்கும் எளிய முறைகளையும் புலப்படுத்தி உணவு, வீடு என்பவற்றைப்பற்றிய ஆராய்ச்சிகளையும் யோகாஸனங்களைப் பற்றிய செய்திகளையும் கூறி ஜீவசக்தியைக் காப்பாற்ற வேண்டுமென்று வற்புறுத்தி 'உடலை உறுதிசெய்க, ஒளிசெய்க. உடம்பினில் கடவுளைக் காண்க' என்று முடிக்கின்றார் பாரதியார். அங்கங்கே உபயோகமுள்ள படங்கள் அமைந்துள்ளன. யோகாஸனப் படங்கள் மிகவும் நன்றாக இருக்கின்றன. கலைத்தொடர்புடைய ஆங்கில மொழிகளுக்கு ஏற்ற தமிழ்ச்சொற்களைப் பாரதியார் ஆண்டிருக்கின்றனர். ஸயன்ஸ் சம்பந்தமான ஆங்கிலச் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைத் தொகுப்பதில் ஆர்வமுடைய தமிழன்பர்களுக்கு இந்த நூல் ஒருவகையில் துணையாக இருக்கும்.

மாணுக்கர்களுக்குப் பாட புஸ்தகமாக வைக்கப்பெறுவதற்குப் பலவகையாலும் தகுதியுடையது இந்த நூல். சாஸ்திரத்தின் பிற பகுதிகளைப்பற்றிய நூல்களும் பாரதியார் இயற்றி வைத்திருக்கிறாரென்று தெரியவருகின்றது. அவையும் விரைவில் வெளிவருவதற்குரிய முயற்சிகளைச் செய்யவேண்டுவது தமிழர் கடன். —ஜக.

புதுமையும் பழமையும்: [ஒரு சமூக சம்பந்தமான நாடகம். சுவாமி சுத்தானந்த பாரதியார் இயற்றியது. கிடைக்குமிடம்: அன்புநிலயம், இராமசந்திரபுரம், புதுக்கோட்டை ஸம்ஸ்தானம்; விலை அணு 8.] உண்மையிலேயே இந்நாடகத்தில் புதுமையும் பழமையும் ஒன்றுசேர்ந்து காணப்படுகின்றன. சேஷிப்பாட்டியின் பழைய தோரணைப் பேச்சு, அவள் பிள்ளை குப்பண்ணுச்சாரியின் தாமரை இலைநீர் போன்ற தன்மை, அவர் மனைவி மகன் மகள் முதலியவர்களின் முற்போக்கு, சமூக முன்னேற்றத்திற்காக உழைக்கும் இளங் கைம்பெண் பங்கஜம் இளைஞன் வேணு போன்றவர்களின் ஆர்வம், குணக்கொழுந்து என்ற வேஷதாரியின் சூழ்ச்சி, இவையெல்லாம் இந்நாடகத்தின் முக்கிய அம்சங்கள். ஸமூக முன்னேற்றத்தில் அக்கறை கொண்டவர்களுக்கு இந்நாடகம் பயன்படுமென்று நம்புகிறோம். —ஸே.

இராஜாஜீ சரிதம்: [நாரண - துரைக்கண்ணன் எழுதியது; சக்தி பிரசுராலயம், இராபர்ட்ஸன்பேட்டை, மயிலாப்பூர், சென்னை; விலை அணு 6.]

தமிழ்நாட்டுப் பெரியோர்களுடைய சரித்திரங்கள் எழுதி வெளியிடப் படாதது ஒரு பெருங்குறையேயாகும். ஆயினும், அது கூடிய சீக்கிரம் நிவர்த்திக்கப்படும் என்பது இந்த நூலினின்றும் எண்ணக் கூடியதாக இருக்கிறது.

நம் நாட்டு இலக்கியத்திற்குப் புதிய துறைகளில் எழுதி வெளியிடும் புத்தகங்கள் பிற மொழிகளில் உள்ளவற்றையே லக்ஷியமாகக் கொண்டுள்

என. நம் நாட்டில் 'ஜீவிய சரித்திரம்' எழுதப்படும் முறை மிகவும் முன்னேற்றமடைய வேண்டும்.

'இராஜாஜீ சரித'மும் அந்த வரம்பைக் கடந்ததாகக் காணப்படவில்லை. ஆயினும் அது இலக்கியத்துக்கே உள்ள ஒரு குறையாதலின் அதனை நாம் பொருட்படுத்தக் கூடாது. இந்நூல் யாவருக்கும் புரியக்கூடிய எளிய நடையில் அமைந்துள்ளது. அன்றி, படிப்பவரின் கவனத்தை ஒருவாறு இழுக்கக்கூடிய 'பத்திரிகைப்போக்கில்' எழுதப்பட்டுள்ளது. அதனால் தமிழ் மொழிக்கு முற்றிலும் புறம்பான பிரயோகங்கள் சில காணப்படு கின்றன.

இந்நூலின் அடுத்த பதிப்பை வெளியிடும்பொழுது இதன் ஆசிரியர் இக்குறைகளை நிவர்த்தித்துத் திருத்தி அமைப்பார் என்று நம்புகிறோம்.

—தி. நா. சு.

## புத்தகக் குறிப்பு

அக்ஷர கணிதம் (*Algebra*) முதற்புத்தகம்; ஆறும் வகுப்புக்கேற்ற கணித புத்தகம். ஆக்கியவர் ச. சிதம்பரம் பிள்ளை, பி. ஏ., பி.எஸ்ஸி. பரமே சுவர ஆசிரியர் கலாசாலை, திருநெல்வேலி, யாழ்ப்பாணம். விலை சதம் 20.

தேகாப்பியாசம்: (மாத ஸஞ்சிகை) உடல் வளர்ச்சியைப் பற்றிய பல கட்டுரைகள் அடங்கியது. வருஷ சந்தா ரூ. 1—8—0. கிடைக்குமிடம்: தேகாப்பியாசம் ஆபீஸ், சென்னை (கிழக்கு.)

தமிழ் மலர் மாலை: இரண்டு பாகங்கள்: ஸ்ரீமான் வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார் தொகுத்தது; 4, 5-ஆம் பாரங்களுக்குரியவை; விலை ஒவ்வொன்றும் 12 அணா. கிடைக்குமிடம்: டி. ஜி. கோபால்பிள்ளை, தெப்ப குளம், திருச்சி. செய்யுட்பாடங்களும் வசனபாடங்களும் அவ்வவ் வகுப்புக்கு ஏற்றமுறையில் அமைக்கப்பெற்றுள்ளன. கலைமகளில் வெளிவந்த கட்டுரை கள் பல இத்தொகுதிகளில் உள்ளன.

## புத்தக வரவு

சென்னை விவசாயிகளின் கடன் சட்டங்கள்: எம். எஸ். பார்த்தசாரதி ஐயங்கார், பி. ஏ., பி. எல் இயற்றியது. கிடைக்குமிடம்: அகில இந்திய லா ஜர்னல் ஆபீஸ், திருவள்ளூர், எம். எஸ். எம். விலை ரூபா 1—8—0.

தமிழில் முடியுமா? : சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் எழுதியது. ராக்ஹவுஸ் அண்டு ஸன்ஸ். 292, எஸ்பிளனேட், சென்னை. விலை அணா 8.




## தேசோத்தாரகர் மறைவு

சென்ற ஏப்ரல் மாதம் 11-ஆம் தேதியன்று விசுவதாதா என எல்லோராலும் கொண்டாடப்பட்ட தேசோத்தாரகர் நாகேசுவர ராவ் பந்துலு அவர்கள் மரணமடைந்த செய்தியைக் கேட்டுப் பொதுஜனங்கள் சகலரும் துயரத்தில் ஆழ்ந்தனர். 'அமிருதாஞ்ஜன'த்தினுல் ஜகப்பிரஸித்தராகி, பிறகு தெலுங்கு இலக்கிய முன்னேற்றத்தில் மிகுந்த சிரத்தை கொண்டு 'பாரதி' என்ற பிரபல தெலுங்கு மாதாந்தர ஸஞ்சிகையினுலும், 'ஆந்த்ரபத்ரிகா' என்ற தெலுங்குத் தினசரியினுலும் ஆந்திரர்களுக்குள் பாஷாபிமானமும் தேசப் பிரேமையும் ஏற்படச் செய்தார். கொடையில் கர்ணனையே அவருக்கு ஈடாகச் சொல்லவேண்டும். பணக்காரராயிருந்தும் சிறிதும் அகந்தையற்றவராயிருந்தார். எளிய உடை உடுத்தி ஏழைமக்களுடனேயே பழகினுர். தேசத்திற்காக, அவர் தம் தேகசுகத்தையும் கெடுத்துக் கொண்டு,கிழப்பருவத்தில் சிறைவாசம் முதலிய கஷ்டங்களை அநுபவித்ததை எவரும் மறக்கமாட்டார்கள்.

## பாரதி சங்கம்

சென்ற ஏப்ரல் மாதம் 25-ஆம் தேதி மாலையில் சென்னைப் பிரபல வக்கீல் ஸ்ரீமான் சா. துரைசாமி ஐயரவர்கள் பங்களாவாகிய 'பாம் குரோவி'ல் அவருடைய அழைப்புக்கிணங்கித் தமிழ் இலக்கிய முன்னேற்றத்தைக் குறித்து ஆராய்வதற்குப் பத்திரிகாசிரியர்களும் எழுத்தாளர்களும் கூடினர். பலர் பலவித ஆலோசனைகளை எடுத்துரைத்தனர். பாரதி சங்கம் என்னும் பெயரோடு ஒரு சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. தமிழ் இலக்கிய முன்னேற்றம் பலவகைப்படும். ஒவ்வொரு துறையிலும் அன்பர்கள் கருத்தைச் செலுத்த வேண்டியது அவசியமாயினும் ஒரு வரையறை ஏற்படுத்திக்கொண்டு உருப்படியான காரியங்களைச் செய்ய வேண்டும். பாரதியின்பெயரால் ஆரம்பிக்கப் பெற்ற இச்சங்கம் தமிழ் இலக்கியவளர்ச்சிக்குப் பல வகையில் உதவுவதாக!

---



மஹேந்திரன் மூர்ச்சையுற்றவன் போல் கடிதத்தைக் கையில் பிடித்தவாறே படுத்திருந்தான்.—மாயா விநோதினி (பக்கம் 542)




# படக்காட்சி

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

---

தமிழ்மகள் களிநடம் புரிந்தகாலத்தில் அவளுடைய சிலம்பொலி எழுந்து தமிழரின் உள்ளத்தைக் கவர்ந்தது. இற்றைக்கு 1800 வருஷங்களுக்கு முன் இளங்கோவடிகளென்னும் புலவர் பிரான் இயற்றிய சிலப்பதிகாரமென்னும் நூல் தமிழ்மகளின் சிலம்பாகவே கருதத்தகும். இவ்வளவு நாட்களாகியும் அக்காவியம், என்றும் புதிய சுவையோடு விளங்குகின்றது.

தமிழ் ஆராய்ச்சியாளர்களுக்குச் சிலப்பதிகாரம் செய்யும் உதவி மிகவும் சிறந்தது. கடைச்சங்க காலத்தை அறிவதற்கு முக்கிய காரணமாக இருப்பது அதுவே. இறந்துபட்ட இசைத் தமிழ் நாடகத்தமிழின் சிலபகுதிகளையுடையதாகிப் பழந்தமிழ் வழக்கை வெளிப்படுத்திக்கொண்டு விளங்கும் அந்நூலுக்கு இணையாக வேறொன்றும் இல்லை.

அதை நான் முதன்முதலில் ஏட்டுச்சுவடியிலே படித்த போது பல அற்புதங்கள் நிறைந்த புதிய உலகத்திற்குச் சென்றது போலே தோற்றியது. மூலத்தைக் காட்டிலும் அடியார்க்கு நல்லார் உரையினால் அறிந்துகொள்ளும் செய்திகள் அளவிறந்தன. இசைத் தமிழ், நாடகத் தமிழ்களைப்பற்றி நாம் இக்காலத்தில் அறிந்துகொள்ளும் செய்திகளிற் பல அடியார்க்கு நல்லார் இட்ட பிச்சையென்றே சொல்லவேண்டும். எத்தனை நூல்கள்! எத்தனை கலைகள்! எத்தனை மேற்கோள்கள்!

சிலப்பதிகாரத்திற்கு உரையெழுதின அடியார்க்கு நல்லார் பிற்காலத்தவர். அவர் உரைக்கு முன்பு ஓர் உரை அதற்கு உண்டு.

அவ்வுரை அரும்பதவுரை எனப்படும். அடியார்க்கு நல்லார் உரையெழுதுவதற்கு அவ்வரும்பதவுரை பெரிதும் துணை செய்தது. அவ்வாறெனின் அரும்பதவுரையின் சிறப்பை நான் எப்படித் தெரிவிக்க முடியும்?

ஆனால் என்னுடைய துரதிர்ஷ்டம்: அரும்பதவுரையுள்ள ஏட்டுப்பிரதி ஒன்றே எனக்குக் கிடைத்தது. அப்பிரதியும் தமிழ் பிற்காலத்தில் போன போக்கையும், அடைந்த அலங்கோலத்தையும் நிதரிசனமாகக் காட்டியது. பிழைகள் மலிந்தும் முன்பின் மாறியும் இடையிடையே விட்டும் அப்பிரதியில் விஷயங்கள் எழுதப்பட்டிருந்தன. அதனை முற்றும் படித்தறிவதே கஷ்டமாக இருந்தது. உரைப்பகுதிகள் வெவ்வேறு இடங்களில் மாறிக் கலந்திருந்தமையின் 'மூலத்தில் எந்தப் பகுதிக்கு எது பொருள்?' என்று தேடிப் பொருத்திப் பார்ப்பதற்குள் சிலப்பதிகாரம் முழுவதற்குமே உரை யெழுதிவிடலாமென்று தோற்றியது. இத்தகைய பிரதியை வைத்துக்கொண்டு நான் என்ன செய்வது?

சிலப்பதிகாரத்தை ஆராய்ச்சி செய்துவந்தேன். அரும்பதவுரையின் பிரதிகள் வேறு எங்கேனும் கிடைக்குமோவென்று தேடிப்பார்த்தேன்; காத்திருந்தேன்; பயனில்லை. 1891-ஆம் ௵ சிலப்பதிகாரத்தை அடியார்க்கு நல்லார் உரையோடு பதிப்பிக்கத் தொடங்கினேன். அக்காலத்தில் நான் கும்பகோணத்தில் இருந்தேன். பதிப்புவேலை சென்னையில் வெ. நா. ஜுபிலி அச்சுக்கூடத்தில் நடைபெற்று வந்தது.

அரும்பதவுரைப்பிரதி வேறு கிடைத்தால் பரிசோதித்துச் சிலப்பதிகாரப்பதிப்பில் சேர்க்கலாமென்று எண்ணியிருந்தேன். என் எண்ணம் நிறைவேறவில்லை. ஒருசமயம் சென்னைக்கு வந்திருந்தபோது திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர் பரம்பரையினராகிய குருசாமி ஐயரென்பவர் வீட்டில் சில ஓற்றையேடுகள் கிடைத்தன. அவற்றுள் சிலவற்றில் அரும்பதவுரையின் பகுதிகள் காணப்பட்டன. அவற்றைக்கொண்டு என் பிரதியில் சில திருத்தங்கள் செய்துகொண்டேன். அந்தத் திருத்தங்களால் பழைய நிலையில் பெரிய மாறுபாடு ஒன்றும் உண்டாகவில்லை.

'இதை வெளியிடாமலே விட்டு விடலாம். அடியார்க்கு நல்லார் உரை விரிவாக இருக்கும்போது இந்த உரை எதற்கு?' என்று நினைத்தேன்.

'அடியார்க்கு நல்லார் உரை இல்லாதவிடங்களில் இந்த உரையின் துணுக்குகள் உபயோகப்படுமே' என்று வேறோர் எண்ணம் உண்டாயிற்று.

'இதில் உள்ள துணுக்குகளின் உதவியைக்கொண்டு நாமே ஒரு குறிப்புரை அப்பகுதிகளுக்கு எழுதிவிடலாமே' என்று அடுத்தபடி நினைத்தேன். சில பகுதிகளுக்கு அங்ஙனமே குறிப்புரையெழுதிப் பதிப்பித்து வந்தேன். 'அரும்பதவுரையை விட்டுவிடவேண்டியதுதான்' என்ற முடிவுக்கும் வந்தேன். ஆனால் என் மனம் உறுத்திக்கொண்டே இருந்தது; 'கைக்கெட்டியும் வாய்க்கெட்டவில்லையே! பிரதிகிடைத்தும் நன்றாக இல்லையே!' என்று வருந்தினேன். 'தமிழ்நாட்டின் தவக்குறைவோ, நம்முடைய தவக்குறைவோ, எதானாலும் நாம் ஓர் அரிய பொருளை இழந்துவிட்டோம் என்பது மட்டும் நிச்சயம்' என்று எண்ணி எண்ணி நைந்தேன்.

என் மனம் இப்படி ஊசலாடிக்கொண்டிருக்கையில் என்னுடைய அரிய நண்பர்களும் தமிழ்ச்சுவையறிந்து இன்புறுபவர்களுமாகிய சிலர், "எப்படியிருந்தால் என்ன? பழைய பொருளை அழியாமல் காப்பாற்றவேண்டும். இருக்கிறபடியே போட்டுவிடுங்கள்" என்று அறிவுறுத்தினார்கள்.

அவர்கள் கூறியது பொருத்தமாகத் தோற்றியது. 'பழைய மாளிகைகளின் சின்னங்களைப் பழமையை நினைத்துப் பாதுகாப்பதில்லையா? அழகிற் குறைந்தனவென்று அவற்றை யார் புறக்கணிக்கிறார்கள்? நமக்குத் தெரிந்தவரையில் செப்பஞ்செய்து தனியே பதிப்பித்துச் சிலப்பதிகாரத்தின் பின்னே சேர்த்துவிடுவோம்' என்று தீர்மானம் செய்துகொண்டேன்.

1892-ஆம் ஸ்ரீ கோடை விடுமுறையில் நான் சென்னைக்கு வந்திருந்தேன். சிலப்பதிகாரப் பதிப்பு முற்றுப்பெறும் நிலையில் இருந்தது. நான் இரவும் பகலும் சோம்பலின்றி உழைத்துவந்தேன். எனக்கு உண்டான துன்பங்கள் பல. அதுகாறும் என்னுடன் இருந்து உதவிகள் புரிந்துவந்த ஒருவர் திடீரென்று பிணக்குற்று ஊர்போய்விட்டார். இத்தனை துன்பங்களுக்கிடையில் சிலப்பதிகாரம் மூலமும் அடியார்க்கு நல்லார் உரையும் பதிப்பிக்கப் பெற்றன. அரும்பதவுரையும் பதிப்பித்தாயிற்று. அதற்கு ஒரு சிறு முகவுரை எழுதிச் சேர்த்துச் சிலப்பதிகாரத்தை வெளியிட வேண்டும். அப்பொழுது என் மனம் பரமசந்தோஷத்தில் மூழ்கியிருந்தது. முடிந்துவிடப் போகிறது என்ற எண்ணத்தினால் அதுகாறும் தெரியாத சிரமம் எனக்குத் தோற்றியது. நெடுந்தூரம் நடந்து செல்பவனுக்குத் தான் அடைய வேண்டிய இடம் நெருங்கும்போது கால்வலி அதிகமாகத் தோன்றுவது போல எனக்கு உழைப்பினால் உண்டான அயர்வு தோற்றியது.

அன்று வெள்ளிக்கிழமை. மறுநாள் சனிக்கிழமை அரும் பதவுரையின் முகவுரை அச்சாகி முடியவேண்டும். ஞாயிற்றுக் கிழமை அச்சுக்கூடம் இல்லை; நானும் கும்பகோணம் போய்ச் சேரவேண்டியவன்.

அச்சுக்கூடத்திற்கு அப்போது பணம் கொடுக்கவேண்டி யிருந்தது. என் கையில் பணம் இல்லை. திருவல்லிக்கேணியில் இருந்த விசுவநாத சாஸ்திரியாரென்பவர் எனக்கு அத்தகைய சமயங்களில் உதவி செய்வார். சில சமயங்களில் அவரிடம் பணம் கடனாக வாங்கி ஊருக்குப் போனபிறகு திரும்ப அனுப்பிவிடுவேன். அவர் பிரபல பாரிஸ்டரான நார்ட்டன் துரையினிடம் குமாஸ்தா வாக இருந்தார்.

மாலையில் அச்சுநிலயத்திலிருந்து மிகவும் களைத்துப்போய்த் திருவல்லிக்கேணிக்குச் சென்றேன். ஸ்ரீ பார்த்தஸாரதிப்பெரு மாளைத் தரிசித்துக்கொண்டு விசுவநாத சாஸ்திரியார் வீட்டில் உணவுண்டு அன்றிரவு அங்கேயே தங்கினேன். அவர் நான் படுத் துக்கொள்ள வசதியான இடம் கொடுத்தார். நான் படுக்கப் போகும்போது மணி பத்து இருக்கும். அதற்குமேல் அரும்பத வுரைக்கு முகவுரை எழுதலாமென்று எண்ணிப் பேனாவைக் கையில் எடுத்தேன். கண் எரிந்தது. உடம்பில் என்னை அறியாமலே ஒரு சோர்வு இருந்தது. தலை சுழன்றது. உடம்பெல்லாம் வலி யுண்டாயிற்று. 'இந்த நிலையில் நாம் என்ன எழுதப் போகிறோம்? விடியற்காலையில் எழுந்து எழுதிவிடலாம்' என்று எண்ணி ஒரு விளக்கும் நெருப்புப்பெட்டியும் வாங்கி வைத்துக்கொண்டு படுத் தேன். படுத்ததுதான் தாமதம்; தூக்கம் என்னை அமிழ்த்தி கொண்டது. ஆனந்தமாகத் தூங்கினேன்.

இடையில் விழித்துக்கொண்டேன். 'முகவுரை எழுத வேண்டுமே' என்ற கவலை முன்னால் வந்து நின்றது. உடனே விளக் கையேற்றி மணியைப் பார்த்தேன். அப்பொழுது சரியாக இரண்டு மணி. 'மறுபடியும் படுத்துக்கொண்டு விரைவில் விழித்துக் கொள் ளாமல் இருந்தால் காரியத்துக்குத் தடை ஏற்படும். இப்பொழுதே எழுதிவிடுவோம்' என்ற ஒரு யோசனை தோற்றியது. பேனாவைக் கையிலெடுத்தேன். மனம்மட்டும்சோர்விலிருந்து மீளவில்லை. சிரம மும் நீங்கினபாடில்லை. தூக்கமும் விழிப்பும் இல்லாத ஒரு நிலை யில் என்ன செய்ய முடியும்? என் மனத்துக்குள் ஒரு போராட்டம் நிகழ்ந்தது. எழுதலாமென்ற எண்ணத்தை அயர்ச்சி தடுத்தது.

மேலே நிமிர்ந்து பார்த்தேன். அங்கே ஒருவருடைய படம் இருந்தது. அவர் ஒரு வெள்ளைக்காரராகக் காணப்பட்டார்.

அவருடைய முகத்தில் ஒரு சுறுசுறுப்பும் அவர் பார்வையில் ஓர் ஊக்கமும் தோற்றின. என்னுடைய சோர்ந்த நிலைக்கு நேர் மாறாக இருந்தது அவர் நிலை. எனது உள்ளத்துள்ளே அந்தப் படத்தினால் ஓர் உணர்ச்சி உண்டாயிற்று. என் மனத்துக்குள் யாரோ என்னை இகழ்வதுபோல் இருந்தது. 'இவனல்லவா மனுஷன்! என்ன துடியாய் இருக்கிறான்! நம்மைப்போல் அழுது வழிந்து கொண்டிருந்தால் காரியம் எப்படி நடக்கும்?' என்ற எண்ணத்தோடு புதிய ஊக்கமொன்று உண்டாயிற்று. எழுந்தேன். கண்களை நன்றாகக் கழுவிக்கொண்டேன். படுக்கையிலேயே உட்கார்ந்து எழுதத் தொடங்கினேன்.

பக்கத்தில் புத்தகமும் இல்லை; குறிப்புமில்லை. எல்லாம் ஞாபகத்தில் இருந்தன. அரும்பதவுரைப்பிரதி கிடைத்தவரலாறு, அதன் இயல்பு, அதைப் பின்னே பதிப்பித்ததற்குக் காரணம், அதன் பெருமை முதலியவற்றை எழுதி முகவுரையை முடித்தேன். மீட்டும் அதைப் படித்துச் செப்பஞ்செய்தேன். அப்பொழுது ஏதோ பெரிய பாரம் நீங்கியது போல் இருந்தது. எனக்கு ஊக்கத்தை உண்டாக்கிய அப்படத்தைத் திரும்பத் திரும்பப் பார்த்து உளங்களித்தேன்.

விடிந்தது. நான் எழுதிய முகவுரையை அச்சுக்கூடத்துக்கு அனுப்பினேன். இரவில் நான் கண்ட அப்படம் யாருடையது என்று விசுவநாத சாஸ்திரியாரைக் கேட்டேன்.

"அவரே எங்கள் எஜமானாகிய நார்ட்டன் துரை" என்றார் அவர். "அவரை நான் நேரே அறியாவிட்டாலும் அவருடைய படத்தினால் நான் பெரிய லாபத்தை அடைந்தேன். அந்தப் படந்தான் எனக்குப் புதிய சக்தியை அளித்தது" என்று கூறி இரவில் நிகழ்ந்தவற்றைச் சொன்னேன்.

சனிக்கிழமையன்று சிலப்பதிகாரம் பதிப்பித்து நிறைவேறியது. ஞாயிறன்று அதைப் புத்தகவடிவத்தில் பார்த்து மகிழ்ந்து கும்பகோணம் சென்றேன். 1892-ஆம் வருஷத்திற்குப் பின் பலருடைய படங்களைப் பார்த்து இன்புற்றிருக்கிறேன். ஆனால் அன்றிரவு எனது தளர்ந்த உள்ளத்திற்கு முறுக்கேற்றிய அப்படத்தையே நான் சிறந்ததாக மதிக்கிறேன்.

சிலப்பதிகாரப் பதிப்பை நான் ஞாபகப்படுத்திக்கொள்ளும்போதெல்லாம் அந்தப் படக்காட்சியும் அதனால் விளைந்த பயனும் என் நினைவுக்கு வருகின்றன.

---

# கங்கைத் தாய்

ஆசார்ய காகா காலேல்கர்

[ஹிந்தியிலிருந்து மொழிபெயர்த்தவர்: கா. ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசாரியார்]

கங்காதேவி தேவவிரதனான பீஷ்மனைப் பெற்றெடுத்த பெருமையொன்றே அவளுக்குப் போதும்; அவள் வேறு ஒன்றுமே செய்யாதிருந்திருப்பினும் ஆரிய ஜாதியின் அன்னையாகவே கருதப்படுவாள். பீஷ்மனுடைய வயிர உறுதியும் பற்றொழிந்த தன்மையும் பிரம்மசரியமும் தத்துவ ஞானமும் ஆரிய ஜாதி என்றைக்கும் போற்றும்படியான ஆதர்சங்களாகிவிட்டன. இப்படிப்பட்ட மஹா புருஷனின் தாய் என்ற உருவத்திலேயே நாம் கங்கையைக் காண்கின்றோம்.



ஆசார்ய காகா காலேல்கர்

நதிக்கு அழகான உவமையொன்று சொல்ல வேண்டுமானால், தாயைத்தான் கூறவேண்டும். நதிதீரத்தில் வசிப்பவர்களுக்குப் பஞ்சத்தின் பயம் உண்டாவதில்லை. முகிற்கணங்கள் நம்மை ஏமாற்றும்போது நதித்தாய்தான் நம் பயிர் பச்சைகளைச் செழிக்கச் செய்கின்றாள். ஆற்றங்கரை சுத்தமாகவும் குளிர்ந்த காற்று வீசுவதாகவும் இருக்கும். அதன் கரையோரமாக உலவிக்கொண்டே சென்றோமாயின், இயற்கை அன்னையின் இடையறாத அன்பு வெள்ளத்தை நமது கண்களால் பருகலாம். நதி பெரிதாகவும், அதன்

ஓட்டம் வேகமாகவும் ஆழ்ந்தும் இருந்தால், அதன் கரையில் வசிப்பவர்களின் உயர்நிலையும் ஸந்தோஷமும் அந் நதியைப் பொறுத்தவையே. உண்மையில், நதியே ஜனஸமூகத்தின் தாய். ஒரு நதிக் கரையில் அமைந்த ஏதாவதொரு நகரத்தின் தெருவிலே சுற்றிக் கொண்டிருக்கும்போது, ஏதோ ஒரு மூலையிலிருந்து நாம் நதியைக் காண்போமாயின், நமக்கு அந்த ஸமயத்தில் எவ்வளவு ஆனந்தம் உண்டாகிறது! நகரத்தின் அசுத்தக் காற்று எங்கே? நதியின் ஆனந்தகரமான தரிசனம் எங்கே? அதே நிமிஷத்தில் அவ்விரண்டுக்குமுள்ள வித்தியாசம் நமக்குத் தெளிவாகத் தெரிந்துவிடுகிறது. நதி கடவுளல்ல; ஆனால் கடவுளை ஞாபகப்படுத்தும் ஒரு தெய்வ மகள் என்பதில் ஐயமில்லை. குருவை வணங்குவது நியாயமாயின், நதியை வணங்குவதும் நியாயமே.

ஒரு சாதாரண நதிக்கே இவ்வளவு பெருமை உண்டென்றால், ஆரிய ஜாதியின் அன்னையான கங்கை விஷயத்தில் நான் யாது கூறுவேன்! ஆரியர்களின் பெரிய பெரிய ஸாம்ராஜ்யங்களெல்லாம் கங்கைக் கரையிலேயே ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. குரு, பாஞ்சாலம், அங்கம், வங்கம் முதலிய தேசங்களை ஒன்றாக முடித்துப் போட்டவள் கங்கைதான். இன்றும் பாரத நாட்டின் பெரும்பாலான குடிகள் கங்கைக் கரையில்தான் வசிக்கின்றனர்.

நாம் கங்கையைத் தரிசிக்கும்போது, காற்றிலே அலையோடும் பச்சைப் பசேலென்ற பயிர்கள் நம் நினைவில் வருவதில்லை; கங்கையோடு வியாஸ வால்மீகிகளின் அமர காவியங்களும், புத்த மஹாவீரர்களின் விஹாரங்களும், அசோகன் ஸமுத்திரகுப்தன் அல்லது ஹர்ஷனைப் போன்ற மஹாமண்டலாதிபதிகளின் பராக்கிரமும், துளஸீ கபீர் போன்ற பெரியார்களின் பாட்டுக்களுமே நம் நினைவுக்கு வருகின்றன. கங்கையின் தரிசனம், தண்மை தூய்மைகளின் பிரத்தியக்ஷ தரிசனமாகும்.

ஆனால் கங்கையின் காட்சி ஒரே விதமாய் இருப்பதில்லை. கங்கோத்திரியின் அருகில் பனியினால் மூடப்பட்ட இடங்களில் விளையாட்டில் ஈடுபட்ட அவளுடைய கன்னியுருவம், வடகாசிப் பக்கம் அகில் தேவதாரு முதலிய மரங்களின் காவியமயமான பிரதேசங்களிலே அவளுடைய இளமை யுருவம், தேவப்பிரயாகையின் மலையிலும் குறுகிய இடங்களிலும் ஒளி வீசும் அலகநந்தாவுடன் அவளுடைய கேளிக்கைகள், லக்ஷ்மணஜூலாவின் கொடும் பற்களிலிருந்து விடுபட்டு ஹரித்துவாரத்தினருகில் பல கிளைகளாகப் பிரிந்து அவள் தன்னிஷ்டப்படி விளையாடுவது, கான்பூரிலிருந்து பிரிந்து செல்லும் அவளுடைய சரித்திரப் பிரஸித்தமான பிரவாஹம், உயர்தீர்த்தமான பிரயாகையின் அகன்ற வெளியில்

யமுனையுடன் அவளுடைய லோகபாவனமான த்ரிவேணீஸங்கமம்—ஒவ்வோர் அழகும் தனிமையானதுதான். ஒரு காட்சியைக் கண்டு மற்றொரு காட்சியைக் கற்பனை செய்ய இயலாது. ஒவ்வொன்றின் மாஹாத்மியமும் வெவ்வேறு.

பிரயாகையிலிருந்து கங்கை ஒரு தனியுருவம் பெறுகிறாள். கங்கோத்திரியிலிருந்து பிரயாகை வரையில் கங்கை மேன்மேலும் வளர்ந்து பெருகினாலுங்கூட ஒரே உருவமாகக் கருதப்படுகின்றாள். ஆனால் பிரயாகையினருகே அவளோடு யமுனையும் வந்து சேருகிறாள். யமுனைவெளியோ முன்னிலிருந்தே இரண்டு மடங்கானது. அவள் விளையாடுகிறாள், குதிக்கிறாள்; ஆனால் விளையாட்டில் ஈடுபட்டவளாகக் காணவில்லை. கங்கை சகுந்தலையைப் போன்ற தவமகளாகத் தோன்றினால், கறுத்த யமுனையும் த்ரௌபதியைப் போன்ற மானமுள்ள ராஜகன்னிகையாகக் காணப்படுகிறாள். சர்மிஷ்டை தேவயானிகளின் கதையைகேட்கும்போது, பிரயாகையின் அருகில் மிகக் கஷ்டத்தோடு கலக்கும், வெண்மையும் கறுப்புமான கங்கை யமுனை வெள்ளமே நம் நினைவில் வருகிறது.

பாரத தேசத்தில் எண்ணிறந்த நதிகள் இருக்கின்றன. நதிகளின் ஸங்கமங்களும் பல உள்ளன. நம் பெரியோர்கள் இவ்வெல்லாச் சங்கமங்களைக் காட்டிலும், கங்கையும் யமுனையும் அன்போடு சேருவதையே மிகவும் அதிகமாக விரும்பினர். அதனால் தான் அதற்குப் 'பிரயாக ராஜன்' என்ற கௌரவமான பெயரையும் வைத்தனர். முகம்மதியர்கள் வந்தபின்பு இந்தியாவின் சரித்திர உருவம் மாறியதுபோலவே, டில்லி, ஆக்ரா, மதுரை, பிருந்தாவனம் இவற்றின் அருகிலிருந்து வரும் யமுனையின் வெள்ளத்தினால் கங்கையின் உருவமும் முற்றிலும் மாறிவிட்டது.

பிரயாகையைத் தாண்டியதும், கங்கை ஒரு குலமகளைப்போல் கம்பீரமாகவும் ஸௌபாக்கியவதியாகவும் காண்கிறாள். இதற்குப் பின் கங்கையுடன் பெரிய பெரிய நதிமங்கையர் வந்து கலக்கின்றனர். யமுனை மதுரை, பிருந்தாவனம் இவற்றிலிருந்து ஸ்ரீ கிருஷ்ணனின் நினைவுகளைக் கொணர்ந்து ஸமர்ப்பிக்கின்றாள். அயோத்தியின் வழியாக வரும் ஸரயூ, ஆதர்ச சக்கரவர்த்தியான இராமபிரானின் பிரதாபம் நிறைந்ததும் கருணை ததும்பியதுமான வாழ்க்கையின் நினைவுகளைக் கொணர்கிறாள். தெற்கிலிருந்து வரும் சம்பல் நதி, ராஜா ரந்திதேவனின் யக்ஞயாகங்களின் கதைகளைச் சொல்லுகிறது. அப்போது மிகவும் கோலாஹலத்தோடு வரும் சோணபத்திரம் என்ற ஆறு, யானையும் முதலையும் பயங்கரமாகப் போரிட்ட காட்சியை நமக்குக் காட்டுகிறது. இவ்வாறு வன்மையும் வளர்ச்சியும் பெற்ற கங்கை, பாடலிபுரத்தினருகிற் செல்லும்

போது, மகத ஸாம்ராஜ்யத்தைப்போல் விசாலமாகிவிடுகிறாள். அந் நிலையிலும், கண்டகி தன் விலையில்லாக் காணிக்கைகளை அவளுக்கு அர்ப்பிக்கக் கூசுவதில்லை. ஜனக அசோகர்கள், புத்த மஹா வீரர்களின் பழைய நாட்டைக் கடந்தபின்பு, தான் இனி எங்கே செல்லலாம் என்ற யோசனையில் அவள் ஆழ்ந்துவிடுகின்றாள். பிர சண்டமான ஜலப்பிரவாஹம் மட்டற்ற வேகத்தோடு கிழக்கு முகமாக ஓடிக்கொண்டிருக்கும்போது அதைத் திடீரெனத் தெற்கு முகமாகத் திருப்புவது சாமானியமான காரியமா? ஆயி னும் அவள் தென்திசையில் திரும்பி விடுகிறாள். இரண்டு சக்கர வர்த்திகளேனும், இரண்டு ஜகத்குருக்களேனும் ஒருவரோடு ஒருவர் சேரமாட்டார்கள்; அவர்களைப்போன்றவர்களே கங்கையும் பிரம்ம புத்திராவும். பிரம்மபுத்திரா அந்தப் பக்கத்திலுள்ள ஜலராசி யைக் கூட்டிக்கொண்டு ஆஸாம் வழியாக மேற்கே செல்லுகிறாள். கங்கை மறுபக்கம் கிழக்கே செல்லுகிறாள். இருவரும் ஒருவரை யொருவர் காண்பது எங்ஙனம்? யார் முதலில் தாழ்வது? யார் முதலில் வழி விடுவது? கடைசியில் இருவரும் தாக்ஷிண்யத்தைக் கருதி, அதாவது ஒருவரை யொருவர் சந்தோஷப்படுத்த வேண்டு மென்னும் பெருநோக்கத்துடன், ஸமுத்திரராஜனைத் தரிசிக்கச் செல்லவேண்டுமென்றும், பக்தியுடன் வணங்கிச் செல்லும் வழி யில் தம்மால் இயன்ற விடத்தில் இருவரும் ஒன்று சேர்ந்து விடுவ தென்றும் தீர்மானித்தனர்.

இவ்வாறு, 'கோலந்தோ' என்னும் இடத்திற்கு அருகில் கங்கையும் பிரம்மபுத்திராவும் ஒன்று சேர்கின்றனர். அவ்விடத்தில் ஏற்படும் அகன்ற நீர்ப்பரப்பைக் காண்பவர்களுக்கு, 'இதைவிடக் கடலென்பது வேறு ஒன்று உண்டோ?' என்ற ஐயம் உதிக்கும். வெற்றி அடைந்த பின்பு சேனைகள் சிதறிப் போவது போலவும், ஜயமடைந்த வீரர்கள் இங்குமங்கும் சுற்றித்திரிவது போலவும், இந்த ஸங்கமத்துக்குப் பிறகு இவ்விரு நதிகளும் பல முகங்க ளாகப் பிரிந்து கடலில் கலக்கின்றன. கங்கையும் பிரம்மபுத்திரா வும் ஒன்றாகிப் 'பத்மா' என்னும் பெயர் பெறுகின்றனர். இந்தப் பத்மாவே பின்னும் மேலே சென்றபோது 'மேகனா' என்று அழைக் கப்படுகின்றாள்.

இந்த ஆயிரமுகங்களுள்ள கங்கை எங்கே போகிறாள்? ஸுந் தரவனத்தில் மூங்கிற் காடுகளை வளர்ப்பதற்கா, அல்லது ஸகரபுத் திரர்களின் ஆசையை நிறைவேற்றி அவர்களை உத்தாரம் செய்வ தற்கா? இன்று நீங்கள் அங்கே சென்று பார்த்தீர்களானால், பழங் காலத்து விஷயம் ஒன்றுமே இராது. கண்டகண்டவிடத்திலெல் லாம் சணலினால் கோணிகள் செய்யும் ஆலைகளும், அதைப்போன்ற

விகாரமான வேறு தொழிற்சாலைகளும் அங்கே நிற்கின்றன. எந்த இடத்திலிருந்து இந்தியக் கைத்தொழிலின் எண்ணற்ற பொருள்கள் இந்தியக் கப்பல்களில் ஏற்றப்பட்டு, இலங்கை, ஜாவா முதலிய த்வீபங்கள் வரையில் அனுப்பப்பட்டு வந்தனவோ, அவ்விடத்திலிருந்தே சீமைக் கப்பல்களும் ஜப்பானியக் கப்பல்களும், வெளிநாட்டு ஆலையில் செய்த குப்பைச் சாமான்களினால் இந்தியாவின் கடைத் தெருவுகளை நிரப்புவதற்காக வருவதை இன்று நாம் காணலாம். கங்கைத் தாய் இன்றும் முன்போன்ற வளத்தையேதான் நமக்கு அளிக்கிறாள்; ஆனால் நம்முடைய வன்மையிழந்த கைகளால் அந்த வளத்தைத் தாங்க முடியவில்லை. கங்கைத் தாயே! துன்பம் தரும் இக் காட்சியைக் காணும் தலையெழுத்து உனக்கு இன்னும் எவ்வளவு காலம் இருக்கப்போகிறது!






# இமயமலை

பே. நா. அப்புஸ்வாமி ஐயர், பி. ஏ., பி. எல்.

---

இந்தியாவின் வட எல்லையாக உள்ள இமய மலையானது வானளாவிய சிகரங்களை உடையது. அம்மலைத் தொடரின் நீளம், அதனோடு ஒட்டிய இந்துகுஷ் மலைத் தொடரைச் சேர்க்காவிட்டாலும் கூட, ஆயிரத்து ஐந்நூறு மைலுக்குக் குறைவில்லை. இந்த மலைத்தொடரைத் தூக்கி ஐரோப்பாவிலே வைத்தோமானால், இது ஆல்ப்ஸ் மலைத் தொடர் முதல் காக்கஸஸ் மலைத்தொடர்வரையில் நீண்டு கிடக்கும். இதன் உயரமோ உலகப் பிரசித்தி பெற்றது. உலகத்திலுள்ள மலைகள் யாவற்றிலுமுள்ள சிகரங்களைக்காட்டிலும் உன்னதமான சிகரங்கள் இதிலே இருக்கின்றன. அவற்றுள் ஒன்று இருபத்தொன்பதினாயிரம் அடிக்கு மேற்பட்டது; மூன்று சிகரங்கள் இருபத்தெட்டாயிரம் அடிக்கு மேற்பட்டவை; ஆறு சிகரங்கள் இருபத்தேழாயிரத்துக்கு மேற்பட்டவை; இருபத்தாறாயிரத்துக்கு மேற்பட்டவை பதினெட்டு; இருபத்தையாயிரத்துக்கு மேற்பட்டவை நாற்பத்தொன்பது; இருபத்து நாலாயிரத்துக்கு மேற்பட்டவை எண்பத்தாறு. இந்த எண்பத்தாறு சிகரங்களும் உலகத்திலுள்ள மலைகள் யாவற்றிலுமுள்ள சிகரங்களைக் காட்டிலும் உன்னதமானவை. இமயமலைச் சிகரங்கள் ஆல்ப்ஸ் மலைச் சிகரங்களைப்போல் கிட்டத்தட்ட இரண்டு பங்கு உயரம்.

இத்தனை சிறப்பு மிக்க இமயமலையானது பல்லாயிரக் கணக்கான வருஷங்களாக நமது நாட்டிலுள்ளோரின் மனங்களைக் கவர்ந்து வந்திருப்பது ஆச்சரியமல்ல. ஆயிரக்கணக்கான வருஷங்களாகக் கவிகள் இதன் அழகையும் பெருமையையும் வர்ணித்து வருகிறார்கள். பழங்காலத்து மன்னர்கள் தமது வெற்றிக்கு அறிகுறியான இலச்சினைகளை இதன்மீது பொறித்தார்கள் என்று அவர்களின் புகழ் பேசப்படுகிறது. பிரும்மத்தையும் தத்துவத்தையும் நாடும் ஞானிகளின் தியானத்துக்கு உரிய புண்ணிய ஸ்தல

மாக இதைக் கருதுகிறார்கள். இதிலே தேவர்களும் மகர்ஷிகளும் வசிக்கிறார்கள் என்று நம்புகிறார்கள். நமது புண்ணிய நதியான கங்கை இதிலே தோன்றுகிறது. இது பார்வதியின் தந்தை என்றும், இதன் வெள்ளிப்பனிமலைச் சிகரம் ஒன்றிலே சிவபிரான் வீற்றிருக்கிறார் என்றும் புராணங்கள் கூறுகின்றன.

இத்தகையதாய் மகோன்னதமாய் உயர்ந்துள்ள இந்த மலைத் தொடர்ப் பிரதேசமானது ஒரு காலத்தில் கடலுள் ஆழ்ந்து கிடந்தது. அப்பொழுது அது பள்ளமாய்க் கடலின் அடிமட்டமாக இருந்தது என்று விஞ்ஞானிகள் சொல்லுகிறார்கள். நம்ப முடியாததுபோல் இருக்கிறதல்லவா? ஆனால் இது வாஸ்தவம்.

விஞ்ஞானிகளில் ஒரு சாரார் பூமியின் இயல்பையும் தத்துவத்தையும் ஆராய்ந்துவருகிறார்கள், 'இத்தனை பெரிய மலைத் தொடர் எப்படி உண்டாயிற்று?' என்ற விஷயத்தை அவர்கள் ஆராய்ந்தார்கள். இமய மலையின் வடிவத்தையும், இதன் அமைப்பின் போக்கையும், இதில் காணப்படும் கல் கரடு முதலியவற்றையும், அவற்றின் தன்மைகளையும் கூர்ந்து கவனித்தார்கள். அவற்றினின்று, இமயமலையின் சரிதத்தைத் தெரிந்து கொண்டார்கள்.

'சமீபகாலத்துக்கு முன்பு வரையிலும் இமயமலைத் தொடரின் வடபாகமானது கடலுள் ஆழ்ந்து கிடந்தது' என்கிறார்கள். ஆனால் இந்தப் பூமிதத்துவ சாஸ்திரிகள் 'சமீபகாலம்' என்றால் அது ஒரு மாதிரி! அவர்கள் காலத்தை அளக்கும் கடிகாரம் பிரம்மாவினுடைய கடிகாரத்தைப் போன்றது. அந்தக் கடிகாரமானது, பல்லாயிரக்கணக்கான வருஷங்களை ஒரு க்ஷணநேரமாக மதிப்பது. அதன் காலக்குறிப்பின்படிதான் 'சமீபகாலத்துக்கு முன்புவரையில்' இப்பொழுது இமயமலைத்தொடராயுள்ள இடமானது கடலின் அடிமட்டமாயிருந்தது என்கிறார்கள். சாமானியருடைய கணக்குப்படி இது நிகழ்ந்தகாலம் சுமார் ஐந்து கோடி வருஷங்களுக்கு முன்பு!

வெகுகாலமாக இந்தப் பிரதேசம் கடலுள் ஆழ்ந்து கிடந்தது. அப்பொழுது இதன்மேலே மண்ணும், கடலுள் வாழ்ந்து இறக்கும் பிராணிகளின் எலும்புகளும் சிறிது சிறிதாகப் படிந்து கொண்டே வந்தன. பல்லாயிரக்கணக்கான வருஷங்களாக இவ்வாறு நடந்துகொண்டு வந்தது. சிறிது சிறிதாக—ஆனால் ஓய்வு ஒழிவு இல்லாமல்—கடலின் அடிமட்டம் உயர்ந்து கொண்டே வந்தது. ஆனால் ஆழநெடுங் கடல் இவ்வாறு தூர்ந்துபோகுமா? போகவில்லை; அடிமட்டம் சற்றே உயர்ந்தாலுங்கூட அடிமட்டமாகவே இருந்தது.

அதன் பிறகு, ஒரு காலத்தில், அதாவது சுமார் ஐந்து கோடி வருஷங்களுக்கு முன்பு, பூமியின் மேற்பரப்பிலே சிற்சில அதிர்ச்சிகளும் சுருக்கங்களும் உண்டாயின. இவற்றால் கடலின் அடிமட்டமானது நன்றாக நெருக்குண்டு சுருங்கிற்று. நீளமாய் அலை அலையான மடிப்புக்களும் அதன் மேலே உண்டாயின.

இவ்வாறு உண்டான மடிப்புக்களிற் சில கடலின் நீர்மட்டத்துக்கு மேலே எழுந்து உயர்ந்து நிலமாகத் தோன்றின; தோன்றி உயர்ந்தன. பிறகு நீரும் காற்றும் இவற்றைத் தாக்கி உதிர்த்துக் கரைத்துத் தாழ்த்தின. மீண்டும் மீண்டும் அடிமட்டமானது நெருக்குண்டது. நெருக்குற நெருக்குற அது மேன்மேலும் உயர்ந்தது. இவ்வாறு உயர்ந்து உயர்ந்து வானைத் தொடும் இமய மலைத்தொடராக ஆகிவிட்டது.

பூமியின் மேற்பரப்பு இவ்வாறு சுருங்கி உயருவதற்குக் காரணம் என்ன? ஏன் அது நெருங்குகிறது?

ஒரு காலத்தில் பூமியானது சூடாயிருந்தது. அது சுழலச் சுழல, அதன் சூடு குறைந்துகொண்டே வந்தது. சூடு குறைந்தால் அளவும் சுருங்குமல்லவா? அதனால் பூமியும் சுருங்கத் தொடங்கிற்று. ஆனால் ஒன்று: பூமி உள்ளும் புறமும் ஒன்றுபோலச் சுருங்கவில்லை. அதன் உட்புறம் வேகமாகவும் வெளிப்புறம் தாமதமாகவும் சுருங்கின. உட்புறம் அதிகமாகச் சுருங்கி வெளிப்புறமாகிய மேற்பரப்புக் குறைவாகச் சுருங்கவே, மேற்பரப்பானது பெரிதாயும் உட்புறம் சிறிதாயும் போய்விட்டன. இதனால் மேற்பரப்புக்கு அடியிலே ஆதாரமில்லாமல் போயிற்று. மேற்பரப்புச் சுருங்கி அதிலே நெளிவுகள் ஏற்பட்டன. அடியற்றுப்போன சில இடங்களில் மேற்பரப்புச் சரிந்து விழுந்தது. இவற்றால் மேடும் பள்ளமும்—மலையும் பள்ளத்தாக்கும்—உண்டாயின.

இமயமலை பிறந்து சுமார் ஐந்துகோடி வருஷங்கள் ஆகின்றன. அது யௌவனதசையை அடைந்து மூன்று கோடி வருஷங்கள் ஆகின்றன. இன்னும் யௌவனதசையில்தான் இருக்கிறது!

* * * *

சிலகாலமாக இமயமலைக்கு இன்னொரு விதமான பெருமை ஏற்பட்டிருக்கிறது. நெருங்கிய பழக்கத்தினாலோ, அல்லது நம்முடைய மனத்தின் பாங்கினாலோ, அல்லது வேறு ஏதேனும் காரணத்தாலோ நம் நாட்டுப் பெருமைகளை நாம் உணர்ந்து பாராட்டுவதில்லை. அயல் நாட்டினர் அறிந்து பாராட்டிய பிறகே நாமும், வேறு வழியற்றவர் போல, அவற்றைப் பாராட்டத் தொடங்குகிறோம். இமயமலையை நாம் பாராட்டாத முறை ஒன்றில் அயல்

நாட்டினர் பாராட்டத் தொடங்கியிருக்கின்றனர். ஐரோப்பாவி லுள்ள ஆல்ப்ஸ் மலைத்தொடரின் சிறு சிகரங்களில் திரும்பத் திரும்ப ஏறி ஏறி அலுத்துப்போன மலையேறிகளின் நெஞ்சிலே இமயமலையின் மகோன்னத சிகரங்களில் ஏறி வெற்றிபெற வேண் டும் என்னும் அவாவானது வேரூன்றிவிட்டது. அவர்களுடைய மனத்திலே இந்த எண்ணம் உண்டாகி இன்னும் ஐம்பது வருஷங் கள் ஆகவில்லை. அதற்குள் இத்தாலியிலும் ஜெர்மனியிலும் இங்கி லாந்திலுமிருந்து படையெடுத்து வந்த தீரர்கள் எத்தனையோ சிகரங்களின் உச்சியில் ஏறி வெற்றியடைந்து விட்டார்கள். சிகரங் களின் அழகு குறையவில்லை; பெருமையும் குறையவில்லை. ஏறினவர் களின் பெருமை வளர்ந்தது. உயிர்க்கொலை செய்வதும் நாட்டைப் பறிப்பதும் இம் முயற்சிகளின் நோக்கமல்ல. ஆயினும் இந்த முயற்சியில் எத்தனையோ தீரர்கள் தம் உயிரைப் பறிகொடுத்தார் கள். ஆனால் என்ன? அச்சத்தை உதறித் தள்ளும் மனத்தையுடைய வீரபுருஷர்கள் சிறிதும் பின்வாங்கவில்லை. மக்களுடைய பாத ஸ்பரிசத்தை அறியாச் சிகரங்கள் இன்னும் எத்தனையோ இருக் கின்றன. அவற்றின் உச்சியில் ஏறி நின்று வெற்றி பெறுதற்கு உரிய முயற்சிகள் மேன்மேலும் நிகழ்ந்துகொண்டே யிருக்கின்றன. முயன்று தோல்வி யடைந்தவர்களின் மனமானது இமயமலையின் இயற்கை யழகைப் பருகிப் பருகிக் களிப்பெய்துகிறது; மீண்டும் ஒரு முறை அந்த அழகை அனுபவிக்கவேண்டுமென்ற ஆசையை அவர்களிடத்தே தூண்டுகிறது. தோல்வியுற்றபோது மனம் தோல்வியால் ஏங்கி உடைந்து போவதில்லை. மறுமுறை தோல்வி யுறலாகாது, வெற்றிபெற வேண்டும் என்ற கிளர்ச்சியையே அது உண்டாக்குகிறது.

தடைசெய்கிறவர்கள் செய்யத்தான் செய்கிறார்கள்; என் றும் செய்யத்தான் செய்வார்கள். 'இமயமலை புண்ணிய பூமி; அதனால் அதன் சிகரங்களை மிதிக்கலாகாது' என்று சிலர் பய முறுத்துகிறார்கள். 'அழகான மலைகள் நம் ஊரில் இல்லையா? மலையின் அழகைப் பார்க்க வேறொரு தேசத்துக்குப் போகவேண் டுமா?' என்கிறார்கள் அயல்நாட்டுத் தேசபக்தர்கள். 'விழுந்து சாகவேண்டுமானால் நம்மூரிலேயே சாகலாமே. இதற்குத் தேசாந் தரம் போவானேன்?' என்று பரிகசிக்கிறார்கள் அயலூர் வாயாடி கள் சிலர். 'ஆங்கிலேயர் ஏறினாலென்ன? ஜெர்மானியர் ஏறினா லென்ன?' என்று பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் நம் ஊர் ஆட்கள்.

ஆனால், 'இமயமலையின் அழகைப் போன்ற அழகு வேறோர் இடத்திலும் கிடையாது. சாமானிய மலைகளின் சிகரங்களைக் கண்டு ஆச்சரியப்படும் மனம், ஆச்சரியப்படாத மனமும் கூட,

இமயமலைச் சிகரங்களைக் கண்டதும் அப்படியே திகைத்துப் போகிறது. இமயமலைச் சிகரத்தை ஒரு முறை தரிசித்தவனுடைய மனமானது ஒரு நாளும் அந்தக் காட்சியை மறக்கவே மறவாது. காணும்போதே களிப்பும் வியப்பும் அவனுடைய மனத்துள்ளே பொங்கிப் பெருகி மனமுழுவதையும் நிரப்புகின்றன. அவனுடைய மனம் விரிந்து விசாலமாகிறது. அன்று முதல் அவன் வேறு மனிதனாகிவிடுகிறான்?' என்று ஸர் பிரான்ஸிஸ் யங்ஹஸ்பண்டு சொல்லுகிறார்.

ஆதலால் இமயமலைச் சிகரங்களின் உச்சியில் ஏறவேண்டுமென்ற அவா மேலைநாடுகளில் நன்றாக வேரூன்றிவிட்டது.

ஆயினும் இது சாமானியர் நிகழ்த்தவல்ல காரியமன்று. நல்ல திடகாத்திரமும் நல்ல ஆரோக்கியமான உடல் நிலையும் போதிய பணமும் தக்க துணையும் இருந்தாலன்றி இந்த முயற்சியை மேற்கொள்ள முடியாது.

மலையின் மேலே உயர ஏற ஏறக் காற்றின் கனம் குறையும்; அதாவது காற்று மெல்லிதாக ஆகும். பூமி மட்டத்திலே சாதாரணமாய் வாழ்ந்துவரும் நம்முடைய உடலானது பூமிமட்டத்தில் வாழ்வதற்கு ஏற்றபடி தன் உறுப்புக்களை அமைத்துக்கொள்ளுகிறது; அந்த நிலைக்கு ஏற்றபடியே அவ்வுறுப்புக்கள் வேலை செய்யப் பழகியிருக்கின்றன. பூமி மட்டத்திலே உள்ள காற்றை நாம் சுவாசிக்கிறோம். அதிலுள்ள ஆக்ஸிஜனைக் கொண்டு நம்முடைய இரத்தமானது சுத்தமாகி உடலெங்கும் ஓடிப் போஷித்து வருகிறது. பூமிமட்டத்திலுள்ள காற்றிலுள்ள ஆக்ஸிஜனைக் கொண்டு வேலை செய்யும்படி நம்முடைய நுரையீரல் அமைந்திருக்கிறது. மேலே ஏற ஏறக் காற்றின் திண்மை குறைகிறது. அதனால் அதிலுள்ள ஆக்ஸிஜன் குறைகிறது. ஆதலால் உயரே ஏறும் மனிதனுக்கு அவன் சாதாரணமாய்ச் சுவாசித்துப் பழகிய அளவுள்ள ஆக்ஸிஜன் கிடைப்பதில்லை. மலையேறுவது முயன்று செய்யும் காரியம். ஆகையால் அப்பொழுது அதிகப்படியான அளவு ஆக்ஸிஜன் அவசியம். அதிகமாக வேண்டுவது ஒன்று குறைவாகக் கிடைப்பதால் மலையிலே உயர ஏற ஏறக் கஷ்டம் அதிகமாகிறது. இருபத்தையாயிரம் அடிக்கு மேல் ஏறிவிட்டால் ஓர் அடி எடுத்து வைத்தால் ஐந்தாறுதரம் மூச்சுவிட்ட பிறகு தான் மறு அடி எடுத்துவைக்க முடியும். அந்த உயரத்துக்கு மேலே பசி அதிகமாக இருக்கும்; கோபம் லேசாக வரும்; ஒன்

'இமயமலைச் சங்கம்' என்ற சங்கம் ஒன்று ஸ்தாபிக்கப்பட்டு, மலை ஏற முயலுவோருக்குக் கொஞ்ச நஞ்சம் பண உதவியும், அதிக அளவில் மற்ற விதமான உதவிகளையும் செய்கிறது.

றிலும் மனம் ஊன்றிச் செல்லாது; வெற்றியும் தோல்வியும் ஒரு பொருளாகத் தோன்றுவதில்லை; நினைவு மழுங்கும்; விடா முயற்சி குன்றும்.

குளிரைப் பற்றியோ கேட்கவேண்டியதில்லை. கீழும் மேலும் நாலுபக்கத்திலும் பனி—உறைந்தபனி. அங்கே அடிக்கும் காற்றானது கூரிய கத்தியைக் கொண்டு வெட்டுவது போல் உறைக்கும்; எத்தனை சட்டை போட்டுக் கொண்டாலும் அவற்றை யெல்லாம் துளைத்துக்கொண்டு உடலைச் சிலீரென்று தாக்கும். நின்றால் விறைத்துப் போகும்; நடந்தால் மார்பு வெடித்துப் போகும்படி மூச்சுவாங்கும்; நெஞ்சு படபடவென்று அடித்துக்கொள்ளும். இடை இடையே, மலையின் ஒரு புறத்திலே பெரிய பனிப்பாறைகள் பெயர்ந்து நகர்ந்து சரிந்து வழியிலுள்ள யாவற்றையும் அழித்துக்கொண்டு, மிகப்பெரிய ஓசையுடன் பள்ளத்தாக்கில் விழுந்து தகர்ந்துபோகும்.

இத்தனை துன்பங்களுக்கும் தம்மை உள்ளாக்கிக்கொண்டு எத்தனையோ தீரர் இமயமலைச் சிகரங்களில் ஏற முயன்று வருகின்றனர். இம்முயற்சிகளிலே எத்தனையோ பேர் தங்களுடைய உயிரைப் பறிகொடுத்தபோதிலும், பிறர் ஈடுபட்டு மேன்மேலும் முயன்றுவருகிறார்கள். இதுவரை ஆறுமுறை முயன்று தோல்வியடைந்திருக்கிறார்கள். ஏழாவது முறையாவது வெற்றிபெற வேண்டுமென்று மிகவும் மும்முரமான முயற்சிகளைச் செய்துவருகிறார்கள். தோல்வியால் தாங்கள் அறிந்துள்ள விஷயங்களைப் பயன்படுத்திக்கொண்டு 'இந்த முறை எப்படியாவது சிகரத்தின் உச்சியை அடைந்து விடவேண்டும்' என்ற தீவிரமான ஊக்கத்தோடு ஏற்பாடுகள் செய்கிறார்கள். அவர்களுடைய முயற்சி வெற்றிபெறுவதாக! அவர்களோடு, உடலால் அல்லாமற்போயினும், நம்முடைய மனத்தாலாவது நாம் 'வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம்!'






# இலங்கைத் தீவு

(அதன் சரித்திரத்தில் சில சம்பவங்கள்)

ஜி. தாதாசாரி, பி. ஏ.,

---

இலங்கைத்தீவு, "தப்ரபனி" என்ற பெயருடன் பூர்விக கிரேக்க ரோம கிரந்த கர்த்தாக்களுக்கும் மத்தியகால ஆங்கில நூலாசிரியர்களுக்கும் தெரிந்திருந்தது. இப்பெயர் "தாம்ப பண்ணி" என்ற பாலி வார்த்தையின் திரிபாகும். இந்தப் பெயர் ஏற்பட்டதற்கு ஒரு கதை சொல்லப்படுகிறது. ஆரிய அரசனான விஜயன் என்பவன் தன் பரிவாரங்களுடன் கப்பல் மார்க்கமாக நெடுந்தூரப் பிரயாணத்துக்குப் பிறகு இங்கு வந்து கரையேறியபோது கால்தடுக்கிக் கீழே விழ, அவனுடைய கைகள் பூமியில்பட்டுச் செந்நிறமாகியதாகவும், அப்போது அவன் தாமிர நிறமுள்ள அந்தப் பிரதேசத்தைத் தான் கைப்பற்றியதற்கு அச்சம்பவம் ஓர் அறிகுறியாகும் என்று சொன்னதாகவும் ஒரு வரலாறு உண்டு.

நமது இதிஹாஸமான இராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கும் விவரங்களைக் கொண்டு, இந்த இலங்கையில்தான் இராவணன் சீதாபிராட்டியைச் சிறை வைத்திருந்தான் என்பதும், அவளை மீட்கும்பொருட்டு இராமபிரான் இங்கே படையெடுத்து வந்தனன் என்பதும் பெறப்படுகின்றன. இங்கேயுள்ள ஸீதாவகை (ஸீதையின் நகரம்), ஸீதா எலியா (ஸீதையின் சோலை) என்பன மேற்கூறிய விஷயத்துக்கு ஆதாரங்களாகுமென்று சில சிங்களர்கள் கூறுகின்றனர். ஆனால், இவ்விடங்கள் ஒன்றோடொன்று நெருங்கியிராமல், உன்னதமான மலைகளால் பிரிவுபட்டு, நெடுந்தூரத்துக்கப்பால் உள்ளன. அன்றியும், இராமனைப்பற்றியாவது ஸீதையைப்பற்றியாவது பழைய கதைகளோ பாட்டுக்களோ இங்கே கேட்கப்படவில்லை. ஆகவே, இந்த இலங்கையும் இராமாயணத்தில் பிரஸ்தாபிக்கப்படும் இலங்கையும் ஒன்றே என்பதை நிச்சயமாகச் சொல்வதற்கில்லை.

விஜயனும் அவனுடைய பரிவாரங்களும் இங்கே குடியேறிய பின்னர், இந்தப் பிரதேசத்துக்கு விஜயனுடைய குடிகளான ஸிம்ஹளருடைய தீவு என்ற பெயர் தென்னிந்தியா வாசிகளால் கொடுக்கப்பட்டது. "ஸிம்ஹள த்வீபம்" என்ற வடமொழிப் பெயர் "ஸீஹல தீபம்" என்று பாலிபாஷையில் திரிந்தது. அரேபியா தேசத்திலிருந்து வியாபாரத்துக்காக இங்கு வந்த மாலுமிகள் "ஸெரன்திப்" என வழங்கினர்; அதனையே ஐரோப்பியர்கள் வழங்கலாயினர். இதிலிருந்துதான் இப்போது வழக்கத்திலிருக்கும் "ஸிலோன்" என்ற பெயர் எழுந்தது.

விஜயன் கி. மு. 483-ஆம் ஆண்டில் ஸிலோனில் முடியேறியதாகச் சொல்லப்படுகிறது. "தாம்பபண்ணி" என்ற அவனுடைய தலைநகர் இப்போது எதுவென்பது தெரியவில்லை. அவனது போர் வீரர்களில் சிலர் சிற்சிலவிடங்களில் கோட்டைகளைக் கட்டிக் கொண்டனர். அப்படிப்பட்டவைகளில் "அனுராதகாமம்" என்பது ஒன்று. இது அனுராதன் என்பவனாலேயோ அனுராத நக்ஷத்திரத்தின் பெயரைக் கொண்டோ ஏற்பட்டிருக்கவேண்டும். விஜயனுடைய காலத்துக்கு ஒரு நூற்றாண்டுக்குப் பின்னர் அவன் வம்சத்தில் உதித்த பாண்டுகாபயன் என்பவன், தன் தாய் மாமன்மார்களுடன் சண்டைபோட்டு, ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டு ஆளத்தொடங்கினான் (367 கி. மு.). இவன் முன்னர்க் கூறிய அனுராதகாமத்தையே தனது தலைநகராகவும் ராஜதானிப்பட்டணமாகவும் ஆக்கிக்கொண்டான். அது தொடங்கி, இந்நகரம் "அனுராதபுரம்" எனவும், நகரம் எனப் பொருள்படும் "நுவரம்" எனவும் பதினைந்து நூற்றாண்டுகள் வரையில் வழங்கலாயிற்று.

ஜனங்கள் ஹிந்துக்களானது பற்றி இங்கு அப்போது பரவியிருந்த மார்க்கம் ஹிந்துதர்மமே என்றாலும், இந்தியாவிலிருந்து வந்த பௌத்தர்கள் இங்கொருவர் அங்கொருவராக இருந்தனர் என்பதற்குச் சில சான்றுகள் உள்ளன. கி. மு. 247-இல் அரசியலை வகிக்கத் தொடங்கிய திஸ்ஸன் (திஷ்யன்) என்பவன் அப்போது இந்தியாவில் சக்கரவர்த்தியாக விளங்கிய மௌரிய அசோகவர்த்தனனுக்கு விலையுயர்ந்த ஏராளமான வெகுமதிகளையும் காணிக்கைகளையும் அனுப்பினான். திஸ்ஸன் அனுப்பிய தூதர்களை அசோகன் மரியாதையுடன் வரவேற்று அவர்கள் மூலமாகவே சில பிரதி வெகுமதிகளை அவனுக்கு அனுப்பினான். அவைகளில் திஸ்ஸனுடைய பட்டாபிஷேகத்துக்காகக் கொஞ்சம் கங்காஜலமும் வேறு உபகரணங்களும் இருந்தன. இவைகளைக் கொண்டு, திஸ்ஸன் இரண்டாமுறை பட்டாபிஷேகம் செய்துகொண்டு, தான் அசோகனுக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசன் என்பதைக் காட்டிக்கொண்டான்.

பின்னும் அசோகன், தான் அவலம்பித்துவந்த பௌத்த தர்மத்தின் மேன்மையைத் திஸ்ஸனுக்கு எடுத்துக் காட்டி, அதையே அவனும் பின்பற்றவேண்டுமென்பது தனது விருப்பம் என்பதைத் தெரிவித்தான். அதற்காகவே அவன் தன் குமாரனும் பிக்ஷுவுமான மஹிந்தனை இலங்கைக்கு அனுப்பினான். இவன் வந்ததும் அரசனும், அவனுடைய பிரபுக்கள், ஸபையோர், ஸ்திரீகள், ராஜ குமாரர்கள், ராஜகுமாரத்திகள், நகரமாந்தர், அனைவரும் பௌத்தர்களாகவே, பௌத்ததர்மமே நாட்டில் வழங்கவேண்டிய மார்க்கம் என்பது பிரசித்தப்படுத்தப்பட்டது. பௌத்த தர்மம் தழைப்பதற்குத் திஸ்ஸன் காரணனாக இருந்ததுபற்றி, பிற்பட்ட சரித்திர ஆசிரியர்கள் அனைவரும் அவனுக்கு, "தேவானம்பிய திஸ்ஸன்" (தேவர்களுக்கு உவந்த திஸ்ஸன்)* என்ற பெயரைக் கொடுத்தனர்.

பௌத்ததர்மப் பிரசாரத்தில் ஊக்கங்கொண்ட அசோகன், பின்னர், தன் குமாரத்தியும் பிக்ஷுணியுமான ஸங்கமித்ரையை இலங்கைக்கு அனுப்பினான். அவர்களுடன் சில பிரபுக்களும் சிற்பிகளும் அனுப்பப்பெற்றனர். புத்த பகவான் ஞானோதயம் பெற்ற போதிவிருக்ஷத்தின் கிளை யொன்றையும் அசோகன் இலங்கைக்கு அனுப்பினான். இது வெகு கௌரவமாக வரவேற்கப்பட்டு அனுராதபுரத்தில் வைத்து வளர்க்கப்பெற்றது. பற்பல விபரீதங்களையும் தாண்டிக்கொண்டு இது இன்னும் தழைத்து வருகின்றது. உலகத்திலுள்ள மரங்கள் எல்லாவற்றிலும் இது புராதனமான தென்பதில் தடையொன்றும் இல்லை. இதைப் பரிபாலித்து வரும் வம்சத்தார் தங்கள் வசம் அது வந்த வருஷம், மாதம், தேதி இவற்றைக் குறிப்பிட்டு வைத்திருக்கும் விஷயம் கவனிக்கற்பாலது.

அசோகன் அனுப்பிய சிற்பிகள் இலங்கையில் கற்களால் ஆலயங்களையும் விஹாரங்களையும் நிர்மாணித்தனர். 'தேவானம்பிய' திஸ்ஸனுக்கு முற்பட்ட காலத்துக் கற்கோயில்கள் இலங்கையில் கிடையா. பின்னர் இந்தியாவில் அரசாண்ட சுங்க, குஷான, குப்தவம்சத்தினர் இலங்கையில் ஆலய நிர்மாணத்துக்குப் பெரிதும் உதவிபுரிந்தனர். அனுராதபுரத்திலும் புலஸ்திய நகரம் எனப்படும் பொலநறுவாவிலும் கண்கவர் வனப்புக்கொண்ட கட்டிடங்கள் பல இன்னும் உள்ளன.

காலக்கிரமத்தில் இலங்கையில் பௌத்த பிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும் கணக்கற்றவராயினர். அவர்களுக்காகவும் பௌத்த

---

* தேவானம்பிய திஸ்ஸனென்பது அசோகனது பெயராதலின் அவனுடைய பெயரையே சிற்றரசனும் வைத்துக்கொண்டிருத்தலும் கூடும்—ப-ர்.

விஹாரங்களுக்காகவும் ராஜ்ய வருமானமும் நிலங்களும் பிரத்தியேகப்படுத்தப் பெற்றன. இது நாட்டின் அளவுக்கும் அவசியத்துக்கும் மிஞ்சியிருந்த காரணத்தால் சிங்களவரசர்கள், தங்களை எதிர்த்தவர்களின் பராக்கிரமத்தைத் தடுக்கக்கூடிய சௌகரியத்தைப் பெறுமற் போயினர். இதனுலேயே இவர்கள் சிற்சிலவேளைகளில் ராஜ்யத்தை இழந்து, அன்னியர்களுக்கு உட்பட்டிருக்க வேண்டியதாயிற்று. வீரம்படைத்த தென்னிந்தியர்கள் வளம் மிக்க இலங்கையின்மீது அடிக்கடி படையெடுத்து அதைச் சூறையாடினர். கி. மு. 145-இல் சோழநாட்டிலிருந்து படையெடுத்து வந்த ஏலேலன் என்பவன், இலங்கை யரசனை வெருட்டிவிட்டு அனுராதபுரத்தில் 44 வருஷங்கள் வரையில் அரசு புரிந்தான். இவன் ஹிந்துவென்றுலும், பௌத்ததர்மத்தைக் கௌரவித்து வந்தான். இலங்கைச் சரித்திர ஆசிரியர்களே இவனுடைய நீதியைக் கொண்டாடி யிருக்கின்றனர்.

ஏலேலன் நாட்டின் வடபாகத்தில் ஆண்டுவந்தான். அதன் தென்பாகத்திலுள்ள கல்யாணி என்றும் களனி என்றும் வழங்கப் பெறும் கெலனியாவிலும் மகமாவிலும் ஆண்டுவந்த சிங்கள அரசவம்சத்தினரை அவன் இம்சிக்கவில்லை. இவர்களும் ஏலேலனுக்கு விரோதமாகக் கிளம்பிக் கலகம் செய்ததில்லை. ஆனல் மகமா அரசனுடைய மகன் ஒருவன், காமனி அபயன் என்பவன், தன் பிதாவின் கோழைத்தனத்தைக் குறித்து ஏசின காரணத்தால் காட்டுக்குத் துரத்தப்பெற்றுன். தகப்பனுக்கு விரோதமாக எழுந்ததனுல் அவனுக்கு, "துஷ்ட காமனி" என்ற பெயர் வந்தது. என்றுலும் இந்தத் "துஷ்டன்" ஒரு பிரபல மஹாவீரனுகி, அரசர்களுக்கெல்லாம் எடுத்துக் காட்டாக விளங்கியுள்ளான். 'மஹாவம்சம்' என்ற இலங்கைச் சரித்திரத்தின் முற்பகுதியில் இந்தத் துஷ்ட காமனியின் வீரச்செயல்களே விரிவாகக் கூறப்பெற்றுள்ளன. பிதா இறந்த பிறகு இவன் நாட்டுக்குத் திரும்பிவந்து, அரச பாரத்தை வகித்த தன் ஸகோதரனை திஸ்ஸனைவென்று, ராஜ்யத்தைக் கைப்பற்றி, பின்னர் திஸ்ஸனுடைய உதவியைக் கொண்டு ஏலேலனை எதிர்க்கத் தொடங்கினுன். ஏலேலன் பௌத்த தர்மத்துக்கு யாதோர் இடையூறும் இயற்றினவன் அல்லன்; என்றுலும் அவன்மீது ஜனங்களுக்குத் துவேஷம் உண்டாகவேண்டியதற்காக அவன் காலத்தில் க்ஷீணிக்கத்தொடங்கிய பௌத்த தர்மத்தை நிலைநாட்டுவதற்காகத் தான் வருவதாகச் சொல்லிக்கொண்டு துஷ்டகாமனி எழுந்தான். வேண்டிய முஸ்தீப்புக்களுடன் 150 மைல் வடக்கே சென்று, அனுராதபுரத்துக்கருகில் நடந்த சண்டையில் ஏலேலனைவென்று

கொன்ருன். ) ஏலேலனும் காமனியும் தனித்தனி யானைகளின்மீது ஏறிக்கொண்டு சண்டை செய்தனரென்றும் காமனி ஏறியிருந்த யானையின் பெயர் கண்டுலா வென்றும் சரித்திரவாசிரியர் கூறுகின்றனர். கி.மு. 101-இல் காமனி இலங்கையரசனுகி, தலைநகராகிய அனுராதபுரத்தைப் பலவிதத்திலும் சிறப்படையச் செய்தான்.) அங்குள்ள 'தூபாராமம்' என்னும் விஹாரம், போதி விருக்ஷம் கொண்டுவரப்படுவதற்கு முன்னமேயே தேவானம்பிய திஸ்ஸனுல் கட்டப்பட்டதாம். துஷ்டகாமனியால் நிர்மாணம் செய்யப்பெற்றவையாகச் சொல்லப்படும் கட்டிடங்களில் மிரிஸ்வேதி தாதுகர்ப்பமும் ருவென்வெலி தாதுகர்ப்பமுமே இப்போது காணப்படுகின்றன. ஒன்பது மேல்மாடிகளை உடையதாகக் கட்டப்பட உத்தேசிக்கப்பட்ட பெரிய விஹாரத்தின் அடையாளங்களாக 1600 கற்றூண்கள் நிற்கின்றன. இதற்கு வெண்கலத்தால் மேன்முகடு வேய உத்தேசித்திருந்தனராம். இதுபற்றி இதற்கு 'வெண்கல மாடம்' என்ற பெயர் வந்துள்ளது.

துஷ்டகாமனி இறந்த 33 வருஷங்களுக்குப்பின், அதாவது கி. மு. 77-இல், தென்னிந்தியத் தமிழர்கள் இலங்கையின்மீது படையெடுத்தனர். அப்பால் கி. மு. 44-இல் அவர்கள் இன்னொரு முறை படையெடுத்து வந்தனர். அப்போது அரசனுகவிருந்த வட்டகாமனி (வலகம்பாகு எனவும் பெயர் உண்டு) நாட்டை விட்டுக் காட்டுக்கு ஓடிவிட்டான். தமிழத்தலைவர்கள் ஐவர் ஒருவர் பின் ஒருவராகப் பதினைந்து வருஷங்கள் வரையில் இலங்கையில் அரசு புரிந்தனர். அப்பால் வந்த காமனி சேனையைத் திரட்டிக் கொண்டுவந்து, சண்டையிட்டு, ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டான். ) இவன் ஒளிந்துகொண்டிருந்த இடங்களில் 'தம்புல்ல' என்னும் மலையிலுள்ள குகை ஒன்றென்றும், அதில் காணப்படும் அழகிய சித்திரங்கள் இவனுல் எழுதப்பட்டவை யென்றும் சொல்கிருர்கள். அந்தக் குகையின் வாயில் வழியாக மழைத்தண்ணீர் உள்ளே வராமல் இருப்பதற்காகச் சற்றுச் சரிவான பள்ளம் வெட்டப்பட்டுள்ளது. நாட்டில் உள்ள குகைகளுக்கெல்லாம் அப்படிப்பட்ட சரிவுப் பள்ளங்களை இவன் வெட்டச் செய்ததாகச் சொல்வதுண்டு.

மாத்தளை என்னும் இடத்துக்கு இரண்டுமைல் வடக்கேயுள்ள ஆலுவிஹாரத்தில் இவ்வரசன் ஒரு பௌத்த ஸங்கத்தைக் கூட்டி, அதன்மூலம் பௌத்த ஆகமங்களை எழுதிவைக்கச் செய்தான். அந்த ஸங்கத்துக்கு மஹாபண்டிதர் பலர் வந்திருந்தனர். இவ் விஷயத்தில் இவன் அசோகவர்த்தனனைப் பின்பற்றியது பாராட்டற்பாலதாம்.

(வட்டகாமனி கி. மு. 15-இல் காலகதியை அடைந்தான். அதன் பிறகு ஏழு நூற்றாண்டளவு வரையில் தென்னிந்தியத் தமிழர்கள் அதிகமாக இலங்கைக்குத் தொந்தரவு கொடுக்கவில்லை. என்றாலும் கி. பி. 479 முதல் 497 வரையில் அனுராதபுரம் தலைநகராக இருக்கவில்லை.) காச்யபன் (கஸ்ஸப்பன்) என்பவன் தன் பிதாவைக் கொன்றுவிட்டு அரசனான். அவன் அனுராதபுரத்தை விட்டுவிட்டு, ஸிகிரியா என்னும் குன்றை அரணாக்கி, அதில் ஓர் அரண்மனையைக் கட்டிக்கொண்டு வாழ்ந்தான். அதற்குப் படிக்கட்டுகளும், காவல் மண்டபங்களும் அமைக்கப்பட்டன. நியாயமாகப் பட்டத்துக்கு வரவேண்டிய மொக்கலண்ணன், தான் ஓடிப்போயிருந்த தென்னிந்தியாவிலிருந்து தமிழப்படையுடன் திரும்பி வந்து, சிங்களரையும் சேர்த்துக்கொண்டு காச்யபனுடன் சண்டை செய்தான். சண்டையில் தோற்ற காச்யபன் ரணரங்கத்தில் தற்கொலை புரிந்துகொண்டான். இந்த ஸிகிரியா மலையில் உள்ள குகைகளில் வெகு அழகாக எழுதப்பட்டுள்ள சித்திரங்கள் எல்லாம் காச்யபன் கட்டளையால் எழுந்தவையாம். அஜந்தாக் குகைச் சித்திரங்களை இவை நினைப்பூட்டுகின்றன.

காச்யபன் காலத்தில் தவிர, கி.பி. 8-ஆம் நூற்றாண்டின் முடிவு வரையில் அனுராதபுரமே ராஜதானியாக இருந்தது. அப்பால் தமிழர்களின் படையெழுச்சி காரணமாகச் சிறிதுகாலம் புலஸ்திய நகரம் (பொலநறுவா) தலைநகராயிற்று. 9-ஆம் நூற்றாண்டின் மத்தியில் அனுராதபுரமும், அப்பால் மறுபடியும் புலஸ்திய நகரமும் ராஜதானிகளாக இருந்தன. (கி. பி. 1001-இல் சோழ சக்கரவர்த்தியான முதலாம் இராஜராஜன் இலங்கையின் வடபாகம் முழுவதையும் வென்று, புலஸ்திய நகரத்தைக் கைப்பற்றி அதற்கு ஜனநாதபுரம் என்று புதியதோர் பெயருமிட்டான்.) பின்னர், தென்னிலங்கையில் ஆண்ட சிற்றரசர்களும் ஜனங்களும் ஒன்று சேர்ந்து வடக்கில் படையெடுத்து வந்து, சோழர்களை வெருட்டி விட்டுப் புலஸ்திய நகரத்தை மறுபடியும் ராஜதானியாக்கிக் கொண்டனர். அப்பால் இலங்கையில் ஆண்ட அரசர்களில் பராக்கிரமபாகு என்பவன் வெகு பிரபலனாக இருந்தான். இவன் 33 வருஷங்கள் அரசாண்டனன். பேருக்கேற்பப் பராக்கிரமம் வாய்ந்த இவன் தென்னிந்தியாவிலும் கம்போடியாவிலும் (காம்போஜத்திலும்) படையெடுத்துச் சென்று அங்கே தன் பெயரையும் புகழையும் நிலைநாட்டினான். புலஸ்தியநகரில் காணப்படும் அழகிய கட்டிடங்களில் பல இவன் காலத்தில் எழுந்தவையாம். இவனுக்குப் பிறகு பட்டத்துக்கு வந்தவர்கள் பலசாலிகள் அல்லர். ஆகவே பராக்கிரமபாகு இறந்த 50 வருஷங்களுக்குள்ளாகவே, தமிழர்

கள் இலங்கையின் மீது படையெடுத்து வந்து, சிங்கள அரசனைத் தெற்கோடச்செய்தனர். ரோஹணநாட்டரசன் ஒருவன் தமிழர்களுடன் சண்டைசெய்து அவர்களை வெருட்டினான் என்றாலும், தலைநகரை இலங்கையின் மேல்பாகத்துக்கு மாற்றிக்கொண்டான். அவன் சந்ததியார்கள் அடிக்கடி தலைநகரை மாற்றினர். கடைசியாகக் கி.பி. 1344-இல் தமிழர்களுடைய உபத்திரவத்தினால் தலைநகர் மலைகளுக்கிடையேயுள்ள கம்பளை என்னுமிடத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. அப்பால் அதுவும் அரணற்றதாகவே, கண்டிநகரம் ராஜதானியாயிற்று. இதைச் சிங்களர் மஹா நுவரம் (பெரிய நகரம்) எனவும் நுவரம் எனவும் அழைக்கத்தொடங்கினர். கி.பி. 1815-இல் கண்டி ராஜ்யத்தை ஆங்கிலேயர் கைப்பற்றியபோது அவர்கள் தலைநகரைக் கொழும்புக்கு மாற்றினர். அதுவே இலங்கைத்தீவு முழுவதுக்கும் இப்போதைய தலைநகராக உள்ளது.






## என் புத்தகங்கள்

— (இந்தியாவைபற்றிய பழைய புத்தகம் ஒன்று) —

'குமுதினி'

---

ஒரு தினம் சென்னைச் சர்வகலாசாலைப் புத்தகாலயத்தில் ஒரு விநோதப்புத்தகத்தைப் பார்த்தேன். அது 'ஓரியண்டல் ஆனுவல்' (*Oriental Annual*) என்பது. ஒரு பாதிரியார், கம்பெனிக் காரர்களின் நாட்களில் இந்தியாவிற்கு வந்து சுற்றிப் பார்த்து விட்டுத் தாம் கண்ட விஷயங்களைப்பற்றி எழுதியது. அப்புத்தகம் 1834-ஆம் வருஷம் பிரசுரிக்கப்பட்டது. நூறு வருஷங்களில் நாம் மாறியிருப்பது எவ்வளவு என்பது அப்புத்தகத்தைப் படித்து அதனுடைய சித்திரங்களைப் பார்த்தால் சட்டென்று விளங்குகிறது.

பாதிரியார் சாமான்யமானவரல்ல. முகவுரையில் அவர் பின்வருமாறு கூறுகிறார்: "இதைப் படிப்பவர்களுக்குச் சுவாரஸ்யமாக இருப்பதுடன் அறிவும் புகட்ட வேண்டுமென்ற உத்தேசத்துடன், மனோகரமானவை என்று புலப்படும் சம்பவங்களையே பொறுக்கி எழுதி, அதே சமயம் அவைகளின் மூலமாக ஒரு கண்காணாத த்வீபாந்தரத்தில் இருக்கும் அதிசயமான ஜனங்களின் நடையுடை பாவனைகளையும் தனிப்பட்ட நடவடிக்கைகளையும் தெரியப்படுத்த முயலுகிறேன்."*

---

*It has been his aim to blend entertainment with information. To record such events as he considered best calculated to

அக்காலத்தில் இங்கிலாந்திலிருந்து இங்கு வர, சுமார் நாற்பது திவங்களுக்கு மேல் ஆகும். ஆகையால் நாம் அவ்விதம் அவருக்குத் தோன்றியிருப்போம். இப்பொழுது வாரத்திற்கு நான்கு முறை ஆகாய விமானங்கள் இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்கும் இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்குமாகச் செல்லுகின்றன.

இவ்விதம் இரட்டை உத்தேசத்துடன் அவர் எழுதியிருந்த போதிலும் புத்தகம் படிக்க ரஸமாகவே இருக்கிறது. முக்கியமாக அப்புத்தகத்திலிருக்கும் இந்தியக் காட்சிகளைத் தெரிவிக்கும் சித்திரங்கள் பார்ப்பதற்கு மிக ஸ்வாரஸ்யமானவைகளாக இருக்கின்றன. பாதிரியார் சென்னையிலிருந்து மூன்று தினங்கள் பல்லக்கில் பயணம் செய்து மகாபலிபுரம் அடைந்தாராம். படத்தில் மகாபலிபுரத்தின் கோயில் சமுத்திர அலைகளுக்கு நடுவில் இருக்கிறது. இந்த நூறு வருஷத்தில் கடல் பின் சென்றிருக்கவேண்டும்.

தாம் கேள்விப்பட்டதாகப் பாதிரியார் வர்ணிக்கும் சம்பவங்களில் பாதிக்கு மேற்பட்டவை கற்பனைக்கதைகளோ என்ற சந்தேகம் உண்டாகிறது. பாதிரியார் தவறாக எழுதியிருக்கமாட்டார். ஆனால்......ஆனால்......உம். அந்த மாதிரி ஏதோ காட்டு மிருகத்தைப் பார்த்து ஆராய்ச்சி செய்வது போன்ற மனப்பான்மையுடன் ஒரு பாதிரி எங்கள் ஊருக்கு வந்து அவ்வூர்ச் செய்திகளைப் பற்றி என்னைக் கேட்டால், சில கற்பனைக்கதைகளைக் கூற வேண்டுமென்ற பேரவா எனக்கு உண்டாகத்தான் உண்டாகும். என்னுடைய தகப்பனார் மிகவும் கண்டிப்புடன் உண்மையையே உரைக்க வேண்டும் என்று பழக்கிவைத்த பழக்கத்தினால்தான் அவ்விதம் சொல்லாமலிருப்பேன். கண்டிப்பில்லாத தகப்பனார்களின் பிள்ளைகள் சிலர் அக்காலத்தில் இருந்திருக்கலாமல்லவா? நம்முடைய முன்னோர்கள்தாமே அக்காலத்தில் இங்கு வசித்தவர்கள்? நம்மைப் போலத்தான் அவர்களுக்கும் விருப்பமுண்டாயிருக்கும்; கதை சொல்லிப் பாதிரியாரின் ஆராய்ச்சி ஆவலைத் தணிக்க முயன்றிருப்பார்கள்.

அவர் கூறும் எல்லாச் சம்பவங்களும் அத்தகையனவல்ல. தகுந்த அத்தாட்சியுடனாவது அல்லது தாம் நேரில் கண்டது என்றாவது அவர் கூறும் விஷயங்களில் நமக்கு நம்பிக்கை ஏற்படுகிறது.

அவர் கதைகளில் ஒன்று பின்வருமாறு இருக்கிறது:—

---

amuse, at the same time, that they should afford an insight into the habits, manner and national prejudices of a remote and extraordinary people.

"பல வருஷங்களுக்கு முன்பு ஒரு வியாபாரக்கப்பலின் கப்பித்தான் வெகுகாலமாய்த் தான் சென்னையிலும் தெற்குக் கடல்களிலும் வியாபாரம் செய்து சம்பாதித்த தொகை முழுவதற்குமாகத் தங்கக் கட்டிகள் வாங்கித் தகுந்த பெட்டி ஒன்றில் வைத்து முத்திரை இட்டுச் சென்னைக் கடற்கரையிலிருக்கும் தனது கப்பலுக்கு அனுப்பினான். கப்பலில் இருந்த அவனுடைய அதிகாரி ஒருவன் அந்தப் பெட்டியில் என்ன இருக்கிறதென்று அறியாமல், அதனுடைய வெளித்தோற்றத்திலிருந்து அதன் கனத்தைச் சுமாராக ஊகித்துச் சாதாரணமாகச் சாமான்கள் தூக்கும் கயிற்றைக் கொண்டு அப்பெட்டியைப் படகிலிருந்து கப்பலின் மேல் தளத்திற்குத் தூக்கினானும். அப்பெட்டியின் கனம் அதிகமாக இருந்ததால் பாதி தூரம் வந்ததும் கயிறு அறுந்துவிட்டது. ஒரு க்ஷணப்பொழுதில் ஒரு பொக்கிஷத்திற்குரிய தனம் அனைத்தும் கடலில் விழுந்துவிட்டது. பிறகு அது அகப்படவே இல்லை. நீரில் மூழ்குபவர்கள் பலர் அதை எடுக்க முயன்றும் அது கிடைக்கவில்லை. இன்னும் அது சென்னைக் கடலிலேயே இருக்கிறது."

தங்கத்தின் விலை அதிகமாக ஏறியிருக்கும் இச்சமயம் அப்பெட்டி நமக்கு அகப்பட்டால் தேவலை!

மற்றொரு கதை, ஒரு ஹிந்துப் பெண்மணியையும் ஒரு முகம்மதியனையும் பற்றியது. அது, அவள் சிறையிலிருந்து தப்பியது, அவன் மீண்டும் அவளை அபகரித்துச் சென்றது முதலிய பல அத்தியாயங்கள் கொண்ட தொடர்கதையாக இருக்கிறது.

ஆனால் எனக்கு மிகவும் பிடித்தது அவர் நேரில் பார்த்ததாக வர்ணிக்கும் ஒரு புலிவேட்டையே. துப்பாக்கியும் ரிவால்வரும் வைத்துக்கொண்டு வெகுதூரத்திலிருந்து புலியைச் சுட்டுவிட்டு இக்காலத்தில் பலர் தங்களையும் தாங்கள் கொன்ற புலியையும் படம்பிடித்துப் பத்திரிகைகளுக்கு அனுப்புகிறார்கள். மாண்டேகு துரை தமது 'இண்டியன் டயரி' என்ற புத்தகத்தில், ஒரு நள்ளிரவில் ஓர் உயர்ந்த உப்பரிகையில் மிகப் பத்திரமாக இருந்துகொண்டு புலியைப் பார்த்ததைப்பற்றி வர்ணித்திருக்கிறார். நூறு வருஷத்திற்குமுன்பு நமது தென் தேசத்து மனிதன் ஒருவன் தனிமையில் ஒரு புலியை எதிர்த்துக் கொன்றதை—பாதிரியார் தாம் நேரில் கண்டதை—வர்ணித்திருக்கிறார். அவ்விதச் செய்கை இக்காலத்தில் மிக அரிது. ஆகையால் அக்கதையையும் இங்கே எழுதுகிறேன். பாதிரியார் மகாபலிபுரத்தைப் பார்வையிட்ட பிறகு செஞ்சிக்கோட்டைக்குச் செல்லுகிறார். அதன் அருகிலுள்ள காடுகளுள் ஏதோ ஒன்றில் நடந்த சம்பவம் இது. பாதிரியாரின் வார்த்தைகளிலேயே சொல்லுகிறேன்:

"அங்கராத்தை நாங்கள் அடைந்த மறுதினம், அருகிலுள்ள ஒரு காட்டில் ஒரு பெரிய புலி இருக்கிறதென்று எங்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. சீக்கிரத்தில் அப்புலியைத் தனிமையில் எதிர்த்துக்கொல்லச் சித்தமாகச் செல்லும் ஒருவன் எங்களெதிரில் வந்ததால் அப்புலியைப்பற்றின தகவல் ஊர்ஜிதப்பட்டது. அம் மனிதன் குட்டையாகவும் நல்ல தேகக்கட்டு வாய்ந்தவனுகவும் இருந்தான். சுறுசுறுப்புள்ளவன் போலத் தென்பட்டதுடன் அவனுடைய வதனத்தில் ஓர் ஆச்சரியகரமான அமைதியும் உறுதியும் விளங்கின. இடுப்பில் ஒரு சிறிய துண்டு மாத்திரமே கச்சமாகக் கட்டியிருந்தான். ஒரு கையில் ஒரு பிரம்மாண்டமான கத்தியும் மற்ரொரு கையில் ஒரு கேடயமும் வைத்திருந்தான். என் தோழரும் நானும் அந்த வீர ஹிந்துவுடன் அப்புலியின் இருப்பிடம் சென்ருேம். அவ்விதம் சென்ற எங்களுக்கு இரண்டு காரணங்களால் எங்களைப்பற்றின சொந்த பயமில்லாமலிருந்தது. முதலாவது: ஒரு புலி எப்பொழுதும் வெட்டவெளியில் வந்து வலுவில் மனிதரை எதிர்ப்பதில்லை; அது மிகக் கோழை மனமுடையதாயிருப்பதே அதற்குக் காரணமாகும். மேலும் அவ்விதம் எதிர்த்தாலும் அது ஆங்கிலேயர்களைவிட இத்தேசத்து மனிதர்களையேதான் முதலில் எதிர்க்கும் என்று நாங்கள் அறிவோம். (என்னே இவர்கள் தைரியம்!) நாங்கள் சீக்கிரம் அதன் இருப்பிடத்தை அடைந்தோம். மிக அழகிய பெரிய புலி ஒன்று வெயிலில் படுத்து உறங்குவதைக் கண்டோம். அது மிகப் பெரியது. அதைவிடப் பெரிதான புலியை நான் பார்த்ததே கிடையாது. அது படுத்திருந்த பள்ளத்தாக்கு அதை எதிர்ப்பதற்கு வாட்டமான இடமாகவே அமைந்திருந்தது. நாங்கள் அந்த இடத்தை அடைந்ததும் அம்மனிதன் தைரியமாகப் பள்ளத்தில் குதித்து அப்புலியைத் தூக்கத்திலிருந்து விழிக்கச்செய்யக் 'கீச்' என்று கத்தினன். அம்மிருகம் கண் விழித்து, இவ்விதம் தன்னை எதிர்க்க ஒருவன் வருவதைப் பார்த்து உரக்கக் கர்ஜித்துக்கொண்டு முன்னிரண்டு கால்களில் எழுந்து நின்றது. அந்தத் தீர ஹிந்து அப்புலியின் முகத்திலேயே தனது இரு கருவிழிகளையும் பதித்து அடிமேல் அடிவைத்து அதன் அருகில் நெருங்கவே, அம்மிருகம் நான்கு கால்களிலும் நன்ருக எழுந்து நின்று வாலினல் தனது தேகத்தை இருபுறமும் படீர் படீரென்று அடித்துக்கொண்டது. இருந்தும் என்ன செய்வது என்று தெரியாமல் அது தயங்குகிறதென்பது நன்ருக விளங்கிற்று. அம்மனிதன் மேன்மேலும் அருகில் வரவே கோபங்கொண்ட அந்த ஜந்துவின் கலக்கம் அதிகரித்தது. அம்மனிதனே அஞ்சாமல் மேலும் சென்ருன். கடைசியில் அம் மிருகம் அவன் பேரில்

பாயும் எண்ணத்துடன் நான்கு கால்களையும் மடக்கிப் படுக்கவே அம்மனிதன் உடனே மேலே செல்லாமல் அந்த இடத்திலேயே நின்றான்.

"அந்தப் புலி கோரமான ஒரு சப்தம் செய்துகொண்டு ஓர் அடி முன்வைத்து அவன் பேரில் பாய்ந்தது. சட்டென்று அந்தத் தீர ஹிந்து தனது உடம்பை வளைத்து அப் புலியின் பாதத்தைத் தனது கேடயத்தில் தாங்கிக் கத்தியை அதனுடைய தேகத்தில் செருகி, அதே சமயம் புலியின் கனம் தாங்கமுடியாமல் கீழே விழுந்தான். ஆனால் விழுந்தவன் தள்ளி விழுந்ததால் புலியைத் தாண்டிச் சென்றுவிட்டான். அப்புலி திரும்புவதற்கு முன் அவன் மறுபடி ஒரு கணத்திற்குள் எழுந்து மிக ஆச்சரியகரமான வேகத்துடனும் குறியுடனும் அதன் கழுத்தில் கத்தியினால் பலமாகக் குத்திவிட்டு அதனுடைய நகங்களுக்கு எட்டாமல் தள்ளித் தூரக் குதித்துவிட்டான். அந்தக் கத்தியினால் அம் மிருகத்தின் சுவாசக் குழாய் வெட்டுப்படவே அது சீக்கிரத்திலேயே இறந்து விட்டது."

தென்னிந்தியர்கள் புலியைத் தனித்து எதிர்த்ததைப்பற்றி இவ்வளவு விவரமாகவும் அத்தாட்சியுடனும் நான் வேறெங்கும் படித்ததில்லை யாகையால் இச்சம்பவம் எனக்கு மிக ரஸமாக இருந்தது.



# மொழிவளர்ச்சிபற்றித் தொல்காப்பியர் கொண்ட கருத்துக்கள்

# IV

எஸ். வையாபுரிப் பிள்ளை, பி.ஏ., பி.எல்.
(தமிழாராய்ச்சித் துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்)

---

**தமிழ் வளர்ச்சியைப் பேணிய மூன்று முறை**

இதுகாறும் தமிழின் தனிப்பண்பு சிதையாது தொல்காப்பியர் தமது நூலினை இயற்றிய முறைகளுள் இரண்டனைக் கூறினேன். இரண்டும் அப்பண்பு சிறந்து விளங்குவதான தமிழொலிக்கண இயல்பினைப் பற்றியன. ஒலிக்கண இயல்போடு மிக நெருங்கிய தொடர்புடைய பாகதச் சொற்களைத் திரியாது எடுத்தாளுதலும், அவ்வியல்போடு தொடர்பற்ற வடசொற்களுள் வேண்டுவனவற்றை வேண்டுமளவு திரித்து எடுத்தாளுதலும், என இவ்விரண்டே யான் கருதிய முறைகள். இனி வேறொரு வகையால் தமிழ்மொழிவளர்ச்சியைத் தொல்காப்பியர் பேணியதனைக் கூற விரும்புகிறேன்.

**வடமொழிப் பயிற்சி பாரத தேச முழுமையும் பரவியிருந்தமை**

வடமொழி இந்தியப் பொதுமொழியாய் அமைந்தது என்ற உண்மையை முன்னரே விளக்கியுள்ளேன். கன்னடம் முதலிய மொழிகளின் இலக்கண நூலார் தத்தம் மொழிகளைத் தேசியம் என்பர். இக்கருத்தொடு பொருந்தவே, 'சொல்லெல்லாம் உரிச்சொல்லேயாம்' என்றும் 'உரிச்சொல்லென்பது பதினெண் தேசிகச்சொல் வடசொல்லெனத் தொகையாற் பத்தொன்பதாம்' என்றும் 'தமிழுந் திசைச்சொல்லேயாம்' என்றும் பிரயோகவிவேக நூலாரும் கூறினர். வடசொல்லினின்றும் வேறுபிரித்துத் 'தேசிகச் சொல்' எனக் கூறுவதனாலே, தமிழ் தெலுங்கு முதலிய மொழிகளைப்போலன்றி அவ்வடசொல் பாரத தேசமுழுமைக்கும் பொதுவான மொழியாகக் கருதப்பட்டதென்பது விசதமாம்.

இக்கருத்து ஏதோவொரு மாறுபாடான கொள்கை பற்றி எழுந்தது மன்று. வழக்குநோக்கியே இது தோன்றியதாகும்.

இவ்வழக்கும் பல நூற்றாண்டுகளாக நிகழ்ந்து வருவதொன்றாம். குமரி முதல் இமயம்வரை வடமொழிப்பயிற்சி இன்றும் பரவி யிருத்தல் காணலாம். பயிற்சியென்ற அளவில் அம்மொழி பேச்சு வழக்கிலிருப்பதாக எண்ணுதல் தவறு; நூல் வழக்கிலிருந்து வருவதாகவே கொள்ளுதல் வேண்டும். தமிழ், தெலுங்கு முதலிய மொழிகள் வழங்கும் பலவேறு நாடுகளிலும் முற்காலத்தும் இக் காலத்தும் வடமொழி பயிலப்பட்டு வருகின்றது.

**வடமொழியும் லத்தீனும்**

வடமொழியும் லத்தீன் மொழியும் பலவகைகளில் ஒப்பு மையுடையன. இரண்டு மொழிகளும் பேச்சுவழக்கற்றுப் பல நூற் றாண்டுகளாய் விட்டன. இக்காரணத்தினாலே இவற்றை இறந்துபட்ட மொழிகளென்பர். வட மொழியினின்றும் ஹிந்தி, வங்காளம் முதலிய மொழிகள் தோன்றினமை போல, லத்தீன் மொழியினின்றும் பிரெஞ்சு, இத்தாலியன் முதலிய மொழிகள் (*Romance languages*) தோன்றின. பேச்சுவழக்கற்ற போதிலும் பாரததேசமுழு மையும் வடமொழி பயிலப்பட்டு வந்தமைபோல, ஐரோப்பிய கண்ட முழுமையும் லத்தீன்மொழி பயிலப்பட்டு வந்தது. இரண் டும் நூல்வழக்கிலே மிகுதியாகப் போற்றப்பட்டன. எண்ணிறந்த சமயநூல்களும், சாஸ்திரங்களும், பிறநூல்களும் இருமொழிகளி லும் இயற்றப்பட்டன.

**வடமொழியின் ஆதிக்கியம்**

ஒரு செய்தி இங்கே கூறுதற்குரியது: கன்னடம், தெலுங்கு, மலையாளம் முதலியவற்றுக்குரிய இலக்கணங்கள் தாமும் வட மொழியில் எழுதப்பட்டன. இது நமக்குப் பெரிதும் வியப்பினை விளைக்கத்தக்கது. வட மொழியின் தலைமைப்பாட்டினையும் பொது நிலையையும் தீர்ந்தபொருளாகக் கொண்டாலல்லது இச்செயலை விளக்குதல் ஏலாது. பிறிதொரு காரணமும் உணரற்பாலதாம். இம்மொழிகளின் இயல்பும் இலக்கணமும் வடமொழியின் இயல்பு இலக்கணங்களோடு நெருங்கிய தொடர்புடையனவாகக் கருதப் பட்டிருத்தல் வேண்டும். இக்கொள்கை முற்காலத்துப் பெரு வழக்காயிருந்தது போலும். தமிழ்மொழியைப் பற்றியும் இக் கொள்கை முற்காலத்து ஒரு சாராராற் கொள்ளப்பட்டிருந்தது எனற்குத் தக்கசான்று உளது. வீரசோழிய வுரையிலே (தாது. 1) 'தமிழ்ச்சொல்லிற் கெல்லாம் வடநூலே தாயாகி நிகழ்கின்றமை யின் அங்குள்ள வழக்கெல்லாம் தமிழுக்கும் பெறும்' எனவருவது காண்க. இக்காலத்துள்ள மொழி நூலாராய்ச்சியாளரது துணி பிற்கு இது முற்றும் மாறுபட்டதாம். எனினும் வடமொழியின் ஆதிக்கியத்தை இது நன்றாக விளக்கவல்லது.

வடமொழியில் இயற்றப்பெற்ற நூல்களே இப்போது நமது கவனத்திற்குரியன. அந்நூல்களுள்ளே வியாகரணம் என்னுந் துறைபற்றியன எண்ணிகந்தன வென்றே கூறலாம். வியாகரணத்தை வேதத்திற்கு முகம் என்பர் வடமொழியாளர். மணிமேகலையினும்,

வடமொழியில் வியாகரணத் துறையின் சிறப்பு

> 'கற்பங் கைசந் தங்கா லெண்கண்
> தெற்றெ னிருத்தஞ் செவிசிக் கைமூக்
> குற்ற வியாகர ணமுகம் பெற்றுச்
> சார்பிற் றோன்ற வாரண வேதக்
> காதி யந்த மில்லை'

என வந்துள்ளது. இத்தகைய வியாகரணத்துறையிலே இந்திரன் முதலிய ஒன்பதின்மர் ஒன்பது வகைப்பட்ட நூல்களை இயற்றின ரென்பர். பிராதிசாக்கியங்களே முதற்கண் தோன்றிய வியாகரண நூல்கள். பின்னர்ப் பன்னெடுங்காலமாக இத்துறையிலே ஆசிரியர்கள் உழைத்து வந்தனர். இவ்வுழைப்பின்பயனாக, வடமொழி வியாகரணமென்பது பலவகையானும் நிரம்பி முற்றியது. பிறமொழிகளுக்குரிய பற்றி வியாகரணம் இயற்றுவோர்க்கு, ஓர் எடுத்துக்காட்டாக அமைந்தது; அவர்கள் நூலியற்ற வேண்டும் நெறியின்னதென்று வழிகாட்டிற்று; அவர்கள் மேற்கொள்ள வேண்டும் சமிக்ஞை, பரிபாஷை முதலியவற்றை வேண்டுமளவு உதவியது. இப் பரிபாஷைகள் பாரத தேசமுழுமையும் அறிந்தனவாதலாலும், வியாகரணத்துறையிற் பல நூற்றாண்டுகளாக நிகழ்ந்த ஆராய்ச்சியின் பயனாகத் தோன்றியனவாதலாலும், பிறமொழிக்குரிய வியாகரணங்கள் இயற்றினோர் இவற்றைக் கையாளுவது இன்றியமையாததாயிற்று[1]. முன்னுள்ளோர் செய்த ஆராய்ச்சிகளைப் பின்னுள்ளோர் சாதி மதம் மொழி முதலிய வேறுபாடுகளைக் கருதாது, பயன்படுத்தினாலல்லது அறிவு மேன்மேலும் வளர்வதற்கு இடமின்றிப் போய்விடுமல்லவா?

இப்பேருண்மையையும் அதனாற் பயன்கொள்ளவேண்டும் ஆவசியகத்தையும் நன்குணர்ந்த தொல்காப்பியர் தமது பெருநூலுள்ளும் வடமொழி வியாகரணத்திற் பயின்றுவரும் ஸங்கேதபதங்களைக் கையாளுவாராயினர். இங்ஙனம் கையாளுதற்கண்ணும் தமிழ்மொழியின் வளர்ச்சிகருதி அக்குறியீடுகளிற் சிலவற்றை மொழிபெயர்த்தாண்டனர். அவை வருமாறு:—

ஸங்கேத பதங்களைத் தொல்காப்பியர் மொழிபெயர்த்தாளுதல்

1. கிரேக்கமொழியின் இலக்கணமும் லத்தீன் மொழியின் இலக்கணமும் ஐரோப்பியமொழிகளுக்குரிய இலக்கணங்கள் இயற்றுதற்குப் பயன்பட்டமையை இங்கே ஒப்புநோக்குதல் தகும்.

அவையல் கிளவி (असभ्यम) : 926.
அளபு (मात्रा): 765.
அன்மொழி நிலையல் (अन्यपदार्थप्रधान): 903.
இருமொழிமேலு மொருங்குடனிலையல் (उभयपदार्थप्रधान): 903.
உலகவழக்கு (लौकिकम्): பாயி.
குறிப்பிற் றோன்றல் (गम्यमानम्): 641.
செய்யுள் வழக்கு (छन्दस्): பாயி.
தகுதி (योग्यता): 500.
திசைச்சொல் (देश्यम्): 881, 884.
தெரிபுவேறு நிலையல் (श्रूयमाणम्): 641.
தொகை (समासम्): 896, 904.
பின்மொழிநிலையல் (पूर्वपदार्थप्रधान): 903.
முன்மொழிநிலையல் (उत्तरपदार्थप्रधान): 903.
வெளிப்பட வாராச்சொல் (अनवगत-संस्कारान् निगमान्): 782.
வெளிப்படு சொல் (संविज्ञातानि): 782.
வேற்றுமை (विभक्ति): 112.

**ஸங்கேத பதங்களை நேரே எடுத்தாளுதல்**

இங்ஙனம் மொழிபெயர்த்தல் கூடாது எனத் தாம் கருதிய இடங்களினும், மொழிபெயர்ப்பாயமைந்த சொல் பல பொருளுடைத்தாய் இடர்ப்படுக்குமெனக் கருதியவிடங்களினும், வடமொழிச்சொற்களையேனும் அவற்றின் பாகத வடிவங்களையேனும் தொல்காப்பியர் துணிந்து எடுத்தாண்டுள்ளார். அவை வருமாறு:

அதிகாரம்: பொ. 652.
இலக்கணம்: பொ. 544, 545.
உத்தி: பொ. 640, 652.
ஓரை: பொ. 133.
கரணம்: பொ. 140-144.
காண்டிகை: பொ. 641.
காரம்: 134.
காலம்: 683.
சூத்திரம்: பொ. 471, 472, 640-645.
ஞாபகம்: பொ. 652.
தாயம்: பொ. 218.
படலம்: பொ. 471.
பண்ணத்தி: பொ. 483.
பிண்டம்: 574; பொ. 471.
மாத்திரை: 7; பொ. 311, 410.
வாணிகம்: பொ. 618.
வைசிகன்: பொ. 618.





# மாயா விநோதினி

## ஸ்ரீ ரவீந்த்ரநாத் டாகுர்

[ஆசிரியர் அனுமதியுடன் ஸ்ரீமதி தஞ்சம் மொழிபெயர்த்தது]

---

(சென்ற இதழ் 447-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## பதினெட்டாம் அத்தியாயம்

தோட்டச் சாப்பாடு நடந்த துர்த்தினத்திற்குப் பிறகு விநோதினியை மறுபடியும் தன் வசம் செய்துகொள்ள மஹேந்திரன் துடித்துக்கொண்டிருந்தான். ஆனால் அதற்கு மறுதினமே ராஜ லக்ஷ்மிக்கு ஜுரம் வந்துவிட்டது. வியாதி கடுமையாக இல்லா விடினும் பலவீனம் அதிகமாயிருந்தது. விநோதினி இரவு பகலாக அவளருகில் இருந்து அவளுக்கு வேண்டியதைச் செய்து வரலா னாள். மஹேந்திரன் அவளிடம், "இரவும் பகலும் இப்படிக் கஷ்டப்பட்டால் கடைசியில் நீயும் நோயாய்ப் படுத்துக்கொள்வாய். அம்மாவைக் கவனித்துக்கொள்ள நான் வேறு ஒரு தாதியை ஏற்பாடுசெய்கிறேன்" என்றான்.

மஹேந்திரன் நோயாளியின் அருகில் நிமிஷத்திற்கு ஒரு முறை வந்து போய்க்கொண்டிருந்தான். வேலையின்றிச் சும்மா அவன் அங்கு வந்து பொழுதை வீணாக்குவது விநோதினிக்கு அசங்கியமாயிருந்தது. அவள் இரண்டு மூன்று முறை மஹேந் திரனிடம் போய், "படிப்பதை விட்டு இப்படி இங்கே பொழுதைக் கழிப்பானேன்?" என்று வெறுப்புடன் கூறினாள்.

தன்னைச் சுற்றியே மஹேந்திரன் இப்படி வட்டமிடுவது விநோதினிக்குப் பெருமையை உண்டாக்கிற்று. ஆனாலும் சமயா சமயமின்றி நோய் வாய்ப்பட்டிருக்கும் தாயின் முன்புகூட, அவன் இப்படித் தன்னைச் சுற்றுவது அவளுக்கே பிடிக்கவில்லை. அவள் இதை வெறுத்தாள். அவளுடைய சுபாவம்: ஒரு காரியத்திற்குப் பொறுப்பேற்றுக்கொண்டால் அது முடியும்வரை கவனம் வேறு எதிலும் செல்லாது. ராஜலக்ஷ்மிக்குச் சேவை செய்வதுதான் அவளது முக்கிய கடமையாயிருந்தது. இரவுபகல் அதிலேயே

முனைந்திருந்தாள். வேறு எதிலும் கவனம் செலுத்த அவள் விரும்பவில்லை.

விஹாரி அடிக்கடி ராஜலக்ஷ்மியைப் பார்க்க வந்துகொண்டிருந்தான். அவன் வந்ததுமே தானாகவே எல்லாம் தெரிந்துகொண்டு அவளுக்கு வேண்டிய சுசுருஷை யெல்லாம் செய்வான். எப்படிச் செய்யவேண்டுமென்பதையும் சொல்லிப் போவான். தான் செய்யும் சுசுருஷையைப் பார்த்து அவன் திருப்தி அடைவதே தனக்கு ஒரு வெகுமதியென்று விநோதினி கருதினாள்.

மஹேந்திரன் தன்னைத் தானே நொந்துகொண்டான். இனி, தினமும் காலேஜிற்குப் போவதென்று நிச்சயித்துக்கொண்டான். அவனது உற்சாகம் குன்றியது. சதா கடுகடுப்பும் கோபமும் கொண்டான். வீட்டிலோ பெரிய மாறுதல். விநோதினி நோயாளியின் அருகிலேயே இருந்துவிடுவதால் வேளைக்குச் சமையல் ஆகாது. இன்று வண்டியோட்டியைக் காணோம்; நாளை கால் மேஜோடுகளைக் காணோம். இப்படி அசௌகரியங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றவே அவனது கோபம் அதிகரித்தது. முன்போல் இதிலெல்லாம் இப்பொழுது வேடிக்கை தோன்றவில்லை. சரியான சமயத்தில் தனக்கு வேண்டியவையெல்லாம் ஒழுங்காய்ச் சிலதினங்களாய் நடந்து வர அவற்றின் சுகத்தை அனுபவித்த அவன், இப்பொழுது எல்லாம் நேர்விரோதமாய் நடப்பதைக் கண்டு ஆசாவின்மேல் குறை கூற ஆரம்பித்தான்.

"ஆசா, உனக்கு எத்தனை முறைதான் நான் சொல்வது? 'குளித்துவிட்டு வருமுன் துணிமணிகளை மடித்துத் தயாராக வை. கோட்டு, நிஜார் முதலியவைகளில் பொத்தான்கள் இல்லாமற்போனால் பார்த்துத் தைத்து வை' என்றெல்லாம் எவ்வளவோ முறை சொல்லியாய்விட்டது. ஆனால் அது ஒருநாளாவது நடப்பதில்லை. உடுப்புகளையெல்லாம் தேடி எடுத்துக்கொள்வதற்குள் எனக்குப் போதும் போதுமென்று ஆகிவிடுகிறது" என்று கடிந்துகொண்டான்.

இதைக் கேட்டு ஆசா வெட்கத்தாலும் துக்கத்தாலும் மனம் குன்றினாள். அவள் மெதுவாய், "நான் ஆளிடம் சொல்லியிருந்தேன்" என்றாள்.

மஹேந்: ஆளிடம் சொல்லிவிட்டாயா? ஏன் உன் கையால் செய்துவிட்டால் தவறோ? நீ எந்த வேலைக்கும் உபயோகமில்லை.

இது ஆசாவுக்கு வஜ்ராயுதம் துளைத்தது போன்று இருந்தது. மஹேந்திரன் எப்பொழுதும் இம்மாதிரி சொன்னதில்லை. 'நீங்களே என்னை வேலை கற்கவிடாது இதுவரையில் தடுத்து வைத்தீர்கள்'

என்று சொல்ல அவளுக்குத் தோன்றவில்லை. வீட்டு வேலையைத் திறம்படச் செய்யவும் பழக்கம் வேண்டுமென்பதை அவள் அறியாள். தான் ஒரு மூடம்; இதனால்தான் தன்னால் ஒன்றும் செய்து முடிக்கமுடியவில்லை யென்பது அவளது திடமான அபிப்பிராயம். மஹேந்திரன் விநோதினியின் திறமையைப் புகழ்ந்து ஆசாவை இகழும்போதெல்லாம் அப் பேதைச் சிறுமி பேசாது தாழ்மையுடன் அவற்றை ஏற்றுவந்தாள்.

ஆசா நோயுற்ற தன் மாமியின் அறையருகில் அடிக்கடி போவாள். வாசற்படியண்டை போனதும் வெட்கத்துடன் அங்கேயே நின்றுவிடுவாள். தானும் ஏதாவது சுசுருஷை செய்ய விரும்பினாள்; ஆனால் அதை விரும்புவார் ஒருவருமிலர். எந்த வேலையைச் செய்வது, எப்படித் தன்னைப் பயன்படுத்திக்கொள்வது, தனக்கும் ஒரு மதிக்கத் தகுந்த ஸ்தானத்தை எவ்விதம் ஏற்படுத்திக் கொள்வது என்பதைப்பற்றியெல்லாம் அவள் என்ன யோசித்தும் அவளுக்கு ஒன்றும் புலனாகவில்லை. தான் எதற்கும் தகுதியற்றிருப்பதுபற்றி வெட்கி அறைக்கு வெளியிலேயே சுற்றிக்கொண்டிருப்பாள். ஏதோ சொல்ல முடியாத வேதனை அவள் மனத்தை அரித்துக் கொண்டிருந்தது. தனது இன்பவாழ்க்கை நாசமடைந்து வருவது அவளுக்குத் தெரிந்தது. ஆனால் அவ்வின்பம் எப்படிக் கிடைத்தது, ஏன் நாசமடைகிறது, அதை நிலைத்து நிற்கச் செய்ய வழியெப்படி என்பவையெல்லாம் அவளுக்குத் தெரியவில்லை. "நான் சுத்த அசடு. எதற்கும் தகுதியற்றவள். என்போன்ற மூடம் இவ்வுலகத்திலேயே கிடையாது" என்று சொல்லி நன்றாய் அழுதுவிடவேண்டும் போல் இருந்தது அவளுக்கு.

முன்பெல்லாம் தம்பதிகள் இருவரும் பேசட்டும், பேசாதிருக்கட்டும், அவர்கள் ஒன்று சேர்ந்திருப்பதிலேயே சுகமும் சந்தோஷமும் இருந்தன. இப்பொழுதோ விநோதினியின்றி இவர்கள் இருவர் மட்டும் சேர்ந்தால் பேச விஷயமே அகப்படுவதில்லை. ஒன்றுமே பேசாது உட்கார்ந்திருப்பதும் மஹேந்திரனுக்குச் சரியென்று தோன்றவில்லை.

பிற்பகல் அவன் தோட்டத்தில் உலவிக்கொண்டிருந்தான். வேலையாள் கையில் ஒரு கடிதத்துடன் வெளியே வந்தான். அது யாருக்கென்று மஹேந்திரன் கேட்டான்.

வேலையாள், "விஹாரி பாபுவுக்கு" என்றான்.

மஹேந்திரன், "யார் கொடுத்தார்கள்?" என்று கேட்டான்.

வேலையாள், "விநோதினி அம்மா" என்றான்.

"எங்கே பார்க்கலாம், கொடு" என்று சொல்லி மஹேந்திரன் கடிதத்தைக் கையில் வாங்கிக்கொண்டான். பிரித்துப் படிக்கவேண்டுமென்று ஆவல். ஆனால் வேலைக்காரன் எதிரில் அப்படிச் செய்ய வெட்கினான். திருப்பி நிமிர்த்திப் பார்த்துவிட்டுக் கோபத்துடன் அவனெதிரில் எறிந்துவிட்டான். பிரித்துப் பார்த்திருந்தால் அதனுள் "அம்மா காய்கறி குழம்பு சாப்பிடமாட்டேனென்கிறாள். அவளுக்குப் பருப்புக்கூட்டு மாத்திரம் கொடுக்கலாமா?" என்று எழுதப்பட்டிருந்ததைத்தான் கண்டிருப்பான்.

ஆகாரம், மருந்து எதுவானாலும் விஹாரியின் சொற்படியே விநோதினி செய்துவந்தாள். வீட்டிலிருக்கும் மஹேந்திரனை ஒன்றும் கலந்து ஆலோசிப்பதில்லை.

மஹேந்திரன் சற்று நேரம் உலாவிக்கொண்டிருந்துவிட்டு உள்ளே தன் அறைக்குச் சென்றான். சுவரில் மாட்டியிருந்த ஒரு படம் ஆணியுடன் பிய்த்துக்கொண்டு விழுந்து விடும்போல் இருந்தது. அவன் ஆசாவைக் கூப்பிட்டு, "சாமானெல்லாம் கவனிப்பாரின்றி இப்படி நாசமாய்ப் போகின்றன. உனக்கு ஒன்றுமே தெரியவில்லை" என்று கடிந்தான். அறையிலிருந்த புஷ்பத்தொட்டிகளில், என்றோ விநோதினி கொண்டுவந்து வைத்த புஷ்பங்கள் வாடிக் கிடந்தன. அவற்றை எடுத்து எறிந்துவிட்டுப் புதுப்புஷ்பங்கள் கொண்டுவந்து வைப்பாரில்லை. அவையெல்லாம் இன்றுதான் மஹேந்திரனின் கண்ணிற் பட்டன. "விநோதினி இல்லை; இதை எடுத்தெறிவாரும் இல்லைபோல் இருக்கிறது!" என்று சொல்லிக்கொண்டே பித்தளைப் பூக்கிண்ணம் ஒன்றை எடுத்து வாடிய பூக்களுடன் வீசி விட்டெறிந்தான். அது மாடிப்படியிலிருந்து உருண்டு கீழேபோய் விழுந்தது.

"என் மனத்திற்குகந்தபடி நடந்துகொள்ளத் தெரியவில்லை! ஒரு வேலைக்கும் லாயக்கில்லை! எனக்கு ஸந்தோஷம் உண்டாக்கவும் தெரியவில்லை!" என்று பொருமிக்கொண்டே ஆசாவைத் திரும்பிப் பார்த்தான். முகம் கறுத்து அங்கம் பதறக் கட்டிலைப் பிடித்த வண்ணம் நின்றுகொண்டிருந்த ஆசா, அவன் திரும்பிப் பார்க்கவே, பயத்தினால் நடுங்கிக்கொண்டு அவ்விடத்தை விட்டு அகன்றாள்.

பிறகு மஹேந்திரன் தான் உருட்டித் தள்ளிய பூக்கிண்ணத்தைப்போய் எடுத்து வந்து வைத்தான். நாற்காலியில் உட்கார்ந்து மேஜைமீது முழங்கையை ஊன்றி இரண்டு கைகளாலும் தலையைப் பிடித்தவண்ணம் வெகுநேரம்வரை யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

இருட்டியதும் வேலைக்காரன் விளக்கேற்றிக்கொண்டு வந்து வைத்தான். ஆனால் ஆசா வரவில்லை. மஹேந்திரனின் மனம்

சஞ்சலம் அடைந்தது. மாடிமீதே இங்குமங்குமாக நடந்துகொண்டிருந்தான். மணி ஒன்பது அடித்தது. அப்பொழுதும் ஆசா வரவில்லை. மஹேந்திரன் அவளை வருமாறு சொல்லியனுப்பினான். ஆசா மெதுவாக வந்து ஸங்கோசத்துடன் வாயிற்படியண்டை நின்றுவிட்டாள். அதற்குமேல் உள்ளே செல்ல அவளுக்குத் தைரியம் வரவில்லை. மஹேந்திரன் அவளருகில் வந்து அவளை மார்போடு அணைத்துக்கொண்டான். இதுவரை அவளிடம் அடங்கியிருந்த துக்கம் கணவனின் ஆதரவைப் பெற்றதும் உடைத்துக்கொண்டு வெளிப்பட்டது. சிறு குழந்தைபோல் விம்மி விம்மி அழலானாள். மஹேந்திரன் அவளைப் பன்முறையும் முத்தமிட்டான்; அருகில் அணைத்துக்கொண்டவாறே வானிலுள்ள நக்ஷத்திரங்களைப் பார்த்தபடியே பேசாதிருந்தான்.

படுத்துக்கொண்ட பிறகு அவன், "ஆசா, என்னை இப்பொழுது ஆஸ்பத்திரியில் இரவுமுறை வேலை பார்ப்பதற்குப் போட்டிருக்கிறார்கள். இரவில் இங்கிருந்து எழுந்துபோவது கஷ்டமாயிருக்கும். ஆகையால் சில தினங்கள் வரை ஹாஸ்டலிலேயே இருக்கலாமென்று நினைத்திருக்கிறேன்" என்றான்.

'இன்னும் என்மீது கோபம் தணியவில்லைபோல் இருக்கிறது. அதனால் தூர இருக்க உத்தேசம் போலும். நான் எதற்கும் பிரயோஜனமற்றவள். நான் இருப்பதைக்காட்டிலும் இறப்பதே மேல்' என்று ஆசா தன்னைத் தானே நொந்துகொண்டாள்.

ஆனால் மஹேந்திரன் பேச்சிலோ கோபத்தொனியேகாணோம். ஆசா அவன் மடியில் படுத்தவாறே வெகுநேரம் வரை இருந்தாள். மஹேந்திரனும் அவளது முன் நெற்றியில் தொடங்கும் கூந்தலை ஒதுக்கியபடியே உட்கார்ந்திருந்தான். முன்பெல்லாம் அவன் அன்புடன் இப்படிச் செய்வது வழக்கம். இன்று பதியின் அன்புப் பிரவாகத்தில் மூழ்கி ஆசா புளகிதமானாள்.

திடீரென்று ஆசாவின் நெற்றியின்மீது ஒரு பொட்டுக் கண்ணீர் விழுந்தது. மஹேந்திரன் அவள் முகத்தோடு முகம் வைத்துக்கொண்டு தழுதழுத்த குரலில், "ஆசா, நான் மிகவும் அபராதி. என்னை மன்னிக்கவேண்டும்" என்றான்.

ஆசா தன் மிருதுவான கரங்களால் அவன் முகத்தைப் பொத்திக்கொண்டு, "இல்லை இல்லை! நீங்கள் இப்படிச் சொல்லவே கூடாது. நீங்கள் ஒரு குற்றமும் செய்யவில்லை. குற்றம் என்னுடையது. என்னை உங்கள் அடிமையாகக் கருதி எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் விதியுங்கள். உங்கள் பாதசேவைக்குத் தகுதியாக என்னைச் செய்துகொள்ளுங்கள்" என்றாள்.

ஹாஸ்டலுக்குப்போகும் தினம் காலையில் படுக்கையைவிட்டு எழுந்திருக்கும்போதே மஹேந்திரன், "ஆசா, நீ தான் என் வாழ்க்கையின் உயிர்நிலை. என் இருதயத்தின் மணி. உன்னை என் உள்ளத்தில் வைத்துப் போற்றுவேன். அங்கிருந்து உன்னை அகற்ற யாராலும் முடியாது" என்று உணர்ச்சி ததும்பக் கூறினான்.

கணவனைப் பிரிந்திருக்க ஆசா மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டாள். ஆனால் தனக்குத் தினம் ஒரு கடிதம் மாத்திரம் எழுதிக்கொண்டிருக்கவேண்டுமென்று பிரார்த்தித்தாள்.

மஹேந்: நீயும் அதற்குப் பதில் எழுதுவாயல்லவா?

ஆசா: எனக்கு நன்றாக எழுதத் தெரியாதே.

மஹேந்: (அவளை அன்புடன் தட்டிக்கொடுத்து) நீதான் நளதமயந்தி கதை படித்திருக்கிறாயே?

ஆசா: போதும், நீங்கள் என்னைக் கேலி செய்கிறீர்கள்!

ஆசா அன்று தனக்குத் தெரிந்தமட்டில் மஹேந்திரன் துணிமணிகளையெல்லாம் மடித்துப் பெட்டிக்குள் வைத்துக்கொண்டிருந்தாள். மஹேந்திரனும் அவளுக்கு உதவிசெய்ய வந்தான். எப்படியோ இருவருமாகச் சேர்ந்து ஒரு பெட்டிக்குள் அடங்கும் துணியை இரண்டு பெட்டிகள் நிறைய வைத்து அடைத்தனர்! அப்பொழுதும் சில துணிகள் பாக்கியிருந்தன. அவை சிறு மூட்டைகளாகக் கட்டப்பட்டன. சாமான்களைக் கட்டுவதில் தனது சாமர்த்தியமின்மையைக் குறித்து ஆசா வெட்கினாள். ஆனால் வேடிக்கை, அன்பு, குதூகலம் இவற்றில் அவ்வெண்ணம் மறைந்துபோய் முன் தினங்களைப் போன்ற ஆனந்தத்தில் மூழ்கினாள். தானும் ஆசாவும் அடைந்த சந்தோஷத்தில் புறப்படவேண்டிய சமயத்தைக்கூட மஹேந்திரன் மறந்துவிட்டான். வண்டிக்காரன் வண்டி வெகு நேரமாக வந்து காத்திருப்பதாகச் சொன்னான். ஆனால் அது மஹேந்திரனின் காதில் விழவில்லை.

சாயங்காலமாயிற்று. ஆசாவிடம் அவள் தேகாரோக்கியத்தை நன்றாகக் கவனித்துக்கொள்ளுமாறு மஹேந்திரன் அடிக்கடி கூறினான். அவளும் அவனைக் கடிதம் எழுதுமாறு வேண்டிக்கொண்டாள். மனவருத்தத்துடன் இருவரும் ஒருவாறு பிரிந்தனர்.

இரண்டு தினங்களாய் ராஜலக்ஷ்மி சற்று எழுந்து உட்காரும் நிலையில் இருந்தாள். அன்று கம்பளியைப் போர்த்துக்கொண்டு படுக்கையில் உட்கார்ந்தபடியே சதுரங்கம் ஆடிக்கொண்டிருந்தாள். அச்சமயம் மஹேந்திரன் வந்தான். விநோதினியின் பக்கம் அவன் திரும்பவேயில்லை. தாயிடம், "ஆஸ்பத்திரியில் இன்றையிலிருந்து எனக்கு இரவுமுறை. இங்கிருந்து தினம் போவது அசௌகரிய

மாயிருக்கும். ஆகையால் கொஞ்சநாள் ஹாஸ்டலிலேயே இருக்கத் தீர்மானித்திருக்கிறேன்'' என்றான்.

தன்னைவிட்டு இச்சமயத்தில் மகன் போவதாகக் கூறியதைக் கேட்க ராஜலக்ஷ்மிக்கு உள்ளூறக் கோபம். "போயேன்! படிப்புக் கெட்டுவிடுமென்று தோன்றினால் இங்கே இருந்து என்ன செய்வது?'' என்றாள்.

பிள்ளை வீட்டில் இருக்கப் போவதில்லை என்பதைக் கேட்டவுடன் குறைந்துவந்த ஜுரம் ஏறிவிட்டது போன்ற உணர்ச்சி அவளுக்கு ஏற்பட்டது. "விநோதினி, அந்தத் தலையணையைச் சற்று எடு'' என்றாள்.

விநோதினி அவளைச் சரியாய்ப் படுக்கவைத்து விசிறலானாள். மஹேந்திரன் தாயின் நெற்றியின்மேல் கையை வைத்துப் பார்த்தான். பிறகு நாடியைப் பிடித்துப் பார்த்தான். ராஜலக்ஷ்மி சட்டென்று கையை இழுத்துக்கொண்டு, "நாடி பார்த்து என்ன ஆகவேண்டும்? நீ போ, நான் எல்லாம் சௌக்கியமாய்த்தான் இருக்கிறேன்'' என்றாள்.

---

## பத்தொன்பதாம் அத்தியாயம்

'என்ன காரணம்? கர்வமா, கோபமா, அல்லது பயமா? என்னைப் பொருட்படுத்தவில்லையென்று காண்பித்துக்கொள்வதாக எண்ணம்போலும்! நானும் பார்க்கிறேன், இது எவ்வளவு நாளைக்கு நடக்கிறதென்று!' என்று விநோதினி குமுறினாள்.

ஆனால் மஹேந்திரன் வீட்டை விட்டுப் போனது முதல் விநோதினியின் மனமும் நிம்மதியற்றது. தனது அற்புத சாமர்த்தியம், சௌந்தர்யம் இவற்றைக்கொண்டு மஹேந்திரனைத் தனது மாயாஜாலத்தில் விநோதினி சிக்க வைத்துக் கொண்டிருந்தாள். இதில் அவளை அறியாத ஆனந்தம் அவளுக்கு ஏற்பட்டது. ஆனால் அந்த ஆனந்தம் மஹேந்திரன் கூடவே போய்விட்டது. அவனின்றி அவளுக்கு அந்த வீடு சூன்யமாகக் காணப்பட்டது. குடி மயக்கம் தெளிந்த குடிகாரனைப் போன்று இருந்தது அவளது நிலைமை. மஹேந்திரனது சிநேகம் இல்லாமல் ஆசாவின் நட்பு அர்த்தமற்றதாகவும் ரஸமற்றதாகவும் தோன்றியது. யௌவன தம்பதிகளின் இன்பவாழ்க்கை அவள் மனத்தில் விரகத்தீயை மூட்டி வைத்திருந்தது. கற்பனை யென்னும் நெய்யினால் அதைச் சுடர்விட்டு எரியச்செய்து வந்தாள். தன்னை நிராகரித்துத் தனது வாழ்க்கையைப் பயனற்றதாகச் செய்துவிட்டு ஆசா போன்ற ஒரு புத்தியற்ற பேதைச் சிறுமியைக் காதலிக்கும் மஹேந்திரன் மீது தனக்குள்

ளது அன்பா, விரோதமா வென்பது விநோதினிக்கே புரியவில்லை. தனது உள்ளத்தை அவனுக்கு அர்ப்பணம் செய்வதா அல்லது அவனைக் கடுந்தண்டனைக்கு உள்ளாக்குவதா என்பதொன்றும் அவளுக்குத் தெரியவில்லை. மஹேந்திரனின் மனத்தில் மூட்டப்பட்ட தீ காதல்தீயா அல்லது துவேஷத் தீயா, அல்லது இரண்டும் சேர்ந்ததா என்பதை அவளால் அறியமுடியவில்லை. தானே ஒரு பயங்கரச் சிரிப்புச் சிரித்துக்கொண்டாள். 'ஏ கடவுளே, என் போன்ற நிலை பெண்ணாய்ப் பிறந்தவர் எவருக்கும் வராதிருக்கட்டும்' என்று பிரார்த்தித்தாள். 'நாம் சாக விரும்புகிறோமா அல்லது பிறரைச் சாக அடிக்க விரும்புகிறோமா?' என்று தெரியாது திகைத்தாள்.

எரிப்பதற்கோ எரிக்கப்படுவதற்கோ எதற்கும் மஹேந்திரனின் சேர்க்கையின்றி முடியாதென்று நினைத்தாள். அவன் மீதன்றித் தனது விஷ அம்புகளை யார்மீது தொடுப்பது? அவனை நினைக்கும்போதெல்லாம் பெருமூச்செறிந்தாள். 'எங்கே போகிறான்; வந்தே விடுவான். அவன் என்னுடையவன்?' என்று சமாதானம் செய்து கொண்டாள்.

இரண்டுநாள் கழித்து மஹேந்திரனுக்கு ஒரு கடிதம் கிடைத்தது. விலாசம் எழுதியிருந்த கையெழுத்து அவனுக்குத் தெரிந்தவருடையதுதான். பகலில் வேலை அவசரத்தில் அவன் அதைப் பிரிக்க விரும்பவில்லை. வேலை முடிந்த பிறகு ஆர அமர அவ்வினிய கடிதத்தைப் படிக்க விரும்பி, அதைத் தனது கோட்டின் உட்புற ஜேபியில் வைத்துக்கொண்டான். காலேஜில் 'லெக்சர்' நடக்கும் போதும் ஆஸ்பத்திரியில் வேலை செய்யும்போதும் ஜேபியிலிருக்கும் அவ்வன்பின் உருவம் அவனைத் தீண்டுவதுபோலவே இருந்தது. அவ்வினிய குரலின் ஓசை செவியில் ஒலித்துக்கொண்டேயிருந்தது.

சாயங்காலம் காலேஜிலிருந்து நேரே தன் அறைக்குச் சென்று கதவை உட்புறம் தாளிட்டுக்கொண்டான். ஒரு சாய்வு நாற்காலியில் படுத்துக்கொண்டு ஜேபியிலிருந்த கடிதத்தை வெளியில் எடுத்தான். கடிதத்தைக் கையில் எடுத்ததும் தன்னை நினைந்து உருகும் அழகியின் உருவம் முன்வந்து நின்றது. கவரின்மேல் தனது பெயர் எழுதப்பட்டிருப்பதையே வெகுநேரம்வரை பார்த்துக்கொண்டிருந்தான். அதனுள் அதிக விஷயமொன்றும் இராது என்பது அவனுக்குத் தெரியும். ஏனெனில் ஆசாவுக்குத் தனது மனோபாவத்தை வெளியிடக்கூடிய கல்வியறிவு இல்லையென்பதை அவன் அறிவான். நான்கு வரிகள், சிறியனவும் பெரியனவுமான எழுத்துக்களில், கொச்சைப் பாஷையில் தனது அன்பை வெளியிட்டு எழுதப்பட்டிருக்கும் என்பது அவனுக்குத் தெரியும். ஆனால்

உள்ளத்திலிருந்து எழும் அத்தெய்விக உண்மையன்பின் தன்மை யை நினைந்து தானும் அதில் ஈடுபட்டுச் சிறிதுநேரம் தன்னை மறந்து இன்பத்தில் ஆழ்ந்தான்.

ஸதா சேர்க்கையினால் ஏற்பட்ட அலுப்பு இரண்டு தினங்கள் பிரிந்திருந்த பிரிவிலேயே தீர்ந்துவிட்டது. மனைவியுடன் தான் அனுபவித்த சுகவாழ்க்கை நீடித்து நடைபெற வேண்டுமென்ற ஆவல் எழுந்தது. ஆசாவின் அன்புருவம் ஸதா மனக்கண் முன் நின்றது. பிரிவானது அவனது காதலைப் பரிசுத்தப்படுத்தியது.

மஹேந்திரன் உறையைக் கிழித்துக் கடிதத்தை வெளியில் எடுத்தான். அதைப் பன்முறையும் முத்தமிட்டு உள்ளம் பூரித் தான். தான் எப்பொழுதோ ஆசாவுக்குப் பரிசாக அளித்த 'ஸெண்டி'ன் வாசனை அக்கடிதத்திலிருந்து எழுந்து அவன் உள்ளத்தை ஊடுருவியது.

கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தான். என்ன ஆச்சரியம்! எழுத்தென்னவோ ஆசாவினுடையதுதான்; ஆனால் விஷயம் அவள் மனத்திலிருந்து எழுந்ததல்ல. அக்கடிதத்தில் பின்வரு மாறு எழுதப்பட்டிருந்தது:—

"என் அருமைக் காதல,

யாரை மறந்திருக்க எண்ணி வீட்டைவிட்டுப் போனீர்களோ அவளைக் கேவலம் கடிதத்தின் மூலம் எப்படி ஞாபகப்படுத்துவது? கொடியை வேரறுத்துவிட்டால் அதனால் எப்படி மரத்தைத் தழுவிக் கொண்டு படர முடியும்? அது ஏன் இன்னும் முழுதும் பட்டுப்போக வில்லையோ காணேன்!

நாதா, உள்ளத்தில் எனக்கும் சிறிது இடம் கொடுப்பதால் என்ன அபாயம் நேரிட்டுவிடும்? இப்படி மறந்துபோவது என்பது என் மனத் தை ஆயிரம் வேல்கொண்டு துளைப்பது போன்று இருக்கிறது. உண் ணும்போதும், உறங்கும்போதும், இரவும் பகலும் ஸதா உங்கள் நினை வே என்னை வருத்துகிறது. நாதா, நீங்கள் எப்படி என்னை மறந்திருக் கக் கற்றுக்கொண்டீர்களோ அவ்விஷயத்தை எனக்கும் சற்றுக் கற்றுக் கொடுக்கலாகாதா?

நீங்கள் என்னிடம் அன்புகொண்டது எனது தவறா? இப்படி ஒரு பாக்கியம் கிடைக்குமென்று நான் சொப்பனத்திலும் நினைக்க வில்லை. நீங்கள் என்னைக் கண்ணெடுத்துப் பாராதிருந்திருப்பின் நான் வீட்டில் எந்த மூலையிலோ விழுந்துகிடந்திருப்பேன். இப்பொழுது நான் உங்கள் பேரில் தோஷம் கண்டு பிடிப்பேனா? என்னிடம் எதைக் கண்டு இப்படி என்மீது மோஹங்கொண்டீர்கள்? இவ்வளவு அன்பு காட்டக் காரணம் என்ன? மின்னலின்றி என்மேல் விழுந்த இடி என்னைச் சுட்டுவிட்டுப்போனது; என்னை ஏன் அது ஒரேயடியாய்ப் பஸ்மமாக்கவில்லையோ?

நானும் எவ்வளவோ யோசித்தேன். வீட்டில் இருந்துகொண்டே என்னைத் திரஸ்கரித்துவிட்டு நீங்கள் இருக்க முடியாதா? இதற்காக வீட்டைவிட்டுப் போவானேன்? நான் என்ன வீட்டில் உங்களையே சதா சுற்றிக்கொண்டிருந்தேனா? எங்கோ ஒரு மூலையில் விழுந்து கிடக்கும் நான் உங்கள் கண்ணிலா தென்படப்போகிறேன்? அப்படி என்மேல் வெறுப்பிருந்தால் என்னை என் வீட்டைவிட்டுப் போகச் சொல்லக் கூடாது? எனக்கென்ன போகவா இடமில்லை? எப்படி வந்தேனோ அப்படியே போகிறேன்.''

இம்மாதிரியான கடிதம், யாருடைய பாஷையென்பது அவனுக்குத் தெரியாதிருக்கவில்லை. மூர்ச்சை யுற்றவன்போல் சற்று நேரம் வரை கடிதத்தைக் கையில் பிடித்தவாறே படுத்திருந்தான். வேகமாய்ப் போய்க்கொண்டிருக்கும் ரெயிலின்மீது எதிர்ப்புறமிருந்து அதே வேகத்தில் வந்துகொண்டிருந்த மற்றொரு ரெயில் மோதி, இரண்டும் சின்னபின்னமாய் நொறுங்கியது போன்று இருந்தது அவன் மனநிலை.

மஹேந்திரன் அக்கடிதத்தை இரண்டு மூன்று முறை படித்தான். இதுவரை புலனாகாமலிருந்தது இப்பொழுது வெட்ட வெளிச்சமாய்ப் புலனாயிற்று. வாழ்க்கையின் ஒரு மூலையில் மறைந்துகிடந்த தூமகேது இப்பொழுது கொழுந்துவிட்டு ஜ்வாலையுடன் பிரகாசிப்பதைக் கண்டான்.

இக்கடிதமென்னவோ விநோதினியினுடையதே. பாவம்! பேதை ஆசா, அதைத் தன்னுடைய உணர்ச்சியைக் காட்டுவதாகப் பாவித்து எழுதியிருக்கிறாள். தனக்கு எழுதத் தோன்றாத விஷயங்களை வாக்கியம் வாக்கியமாக விநோதினி சொல்லத் தான் எழுதும்போது தன் மனோபாவத்தைத் தெரிவிப்பதாக ஆசா எண்ணினாள், கணவனின் பிரிவாற்றாது அவள் மனமும் துயருற்றது. ஆனால் அதை இவ்வளவு அழகாய் வருணித்தெழுதத் தனக்கு எங்கே தெரியும் என்று எண்ணினாள். தனது மனோவேதனையைத் தன் தோழி இவ்வளவு நன்றாக அறிந்துகொண்டிருப்பதைப் பார்த்து ஆசாவுக்கு அவள் மேலுள்ள பிரியம் அதிகரித்தது. ஏனெனில் அவள் மனத்தில் பிரிவுத் துக்கம் இருந்தது; அதை வெளியிடுவதற்குரிய பாஷையோ தோழியிடம் இருந்தது.

ஆசாவின் அறியாமையை நினைந்து மஹேந்திரன் மனமிரங்கினான். விநோதினியை இங்கிருந்தவாறே நொறுக்கி விடலாமா என்று கோபமெழுந்தது அவனுக்கு. சற்று நேரத்திற்கெல்லாம் அக்கோபம் ஆசாவின்மேல் திரும்பியது. 'அவள் சொல்வதை அப்படியே எழுதியது ஆசாவின் தவறுதானே? இப்படியும் ஒரு

பேதை உண்டா?' என்று வருந்தினன். கடிதத்தை மற்றமொரு முறை படித்தான். உள்ளூற ஒரு சந்தோஷம் ஏற்பட்டது. அதைத் தனது மனைவியே எழுதியிருப்பதாகப் பாவிக்க எவ்வளவோ முயன்முன். முடியவில்லை. நான்கு வரிகள் படிக்கும்போதே குடிகாரனுக்குச் சாராயத்தைக் கண்டதும் ஏற்படும் ஆனந்தம் அவனுக்கு உண்டாயிற்று. மறைந்திருந்தும் எதிரிலிருப்பது போலவும், தூரஇருந்தும் அருகிலிருப்பது போலவும், விஷக் கலப்பாயிருந்தும் அமிருதம்போலவும், மறக்க முயன்ற அந்நட்பு ஒரே சமயத்தில் மறுபடி கிளைத்து அவனை மயங்கச் செய்தது. தனது தேகத்தை ஒரு பாகத்தில் கத்தியால் கீறித் தன்னை அம்மயக் கத்திலிருந்து விடுவித்துக்கொண்டாலென்ன என்றுகூட மஹேந் திரன் நினைத்தான்.

ஆத்திரத்துடன் நாற்காலியை விட்டு எழுந்தான். மேஜை யின் மேல் ஓங்கிக் குத்தினன். "இதோ இக்கடிதத்தைக் கிழித்து நெருப்பில் போடுகிறேன் பார்!" என்முன். விளக்கண்டை கடிதத் தைக் கொண்டுபோனன். ஆனல் அதை எரிக்கவில்லை. பின்னும் ஒரு முறை படித்தான்.

மறுநாட் காலை அறையைச் சுத்தம் செய்ய வேலைக்காரன் வந்தபோது விளக்கினருகில் காகிதம் கொளுத்திய சாம்பலைக் கண்டான். ஆனல் அது ஆசாவின் விசித்திரக் கடிதத்தின் சாம்ப லன்று; அதற்குப் பதிலளிக்க விரும்பி மஹேந்திரன் இரவு முழுதும் அநேகம் கடிதமெழுதிப் பிறகு கொளுத்தி வீணுக்கி யதன் சாம்பல்தான் அது.

---

## இருபதாம் அத்தியாயம்

இதற்குப் பிறகு மற்றொரு கடிதமும் வந்து சேர்ந்தது. அது பின்வருமாறு :—

"காதல் கடிதத்திற்குப் பதிலே எழுதவில்லை. நல்லது. உண்மை யை எழுதுவது கஷ்டந்தான். ஆனல் உங்களுடைய பதிலை நானகவே அறிந்துகொண்டேன். பக்தன் கடவுளைக் கதறி அழைக்கும்போது கடவுள் பேசிக்கொண்டேயா ஓடி வருகிறார்? எனது கடிதமலர் தங்கள் சரணுரவிந்தத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டதை நான் அறிகிறேன்.

ஆனல் பக்தன் வேண்டிய வரத்தை அளிப்பதில் கடவுளின் தபோசக்திக்கே நஷ்டம் ஏற்படும்போலிருந்தால் அதற்காகப் பக்தனின் மேல் கோபங்கொள்ள வேண்டாம். வரமளிக்கட்டும் அளிக்காது போகட்டும், தன்னை எறெடுத்துப் பார்க்கட்டும் பார்க்காது போகட் டும், பக்தனல் கடவுளிடம் பக்தி செலுத்தாது என்னவோ இருக்க முடியாது. ஆகையால் இன்னும் இரண்டு வரிகள் எழுதியனுப்புகிறேன். கல்நெஞ்சுடைய நாதா, கலங்கவேண்டாம் இதனல்!"

மஹேந்திரன் இதற்குப் பதிலெழுத உட்கார்ந்தான். ஆனால் அவனை அறியாமலே ஆசாவிற்கு எழுதுவதற்குப் பதிலாக விநோதினிக்குத்தான் பதிலெழுதக் கையோடியது. ஒளித்து மறைத்து எழுதவோ முடியவில்லை. பாதி ராத்திரிவரை உட்கார்ந்து எவ்வளவோ முறை எழுதி எழுதிக் கிழித்துக் கடைசியில் ஒன்று எழுதி முடித்துக் கவரினுள் போட்டு மேலே ஆசாவின் பெயரை எழுத ஆரம்பிக்கும்போதே, தன்னைச் சவுக்கால் அடிப்பது போன்றிருந்தது மஹேந்திரனுக்கு. "ஹே, நம்பிக்கைத் துரோகி! உன்னை நம்பியிருக்கும் பெண்ணிடமா இந்த வஞ்சகம்!" என்று யாரோ நிந்திப்பதுபோல் இருந்தது.

அவன் உடனே அக்கடிதத்தைத் துண்டு துண்டாய்க் கிழித்தெறிந்தான். இரவு முழுவதும் தலையில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

மூன்றாவது கடிதமும் வந்தது. அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

"யாருக்கு மரியாதை தெரியவில்லையோ அவர்களுக்கு நேசிக்கவும் தெரியாது. அநாதரவும் அவமானமும் செய்யப்படும் எனது அன்பை உங்களுக்கு அர்ப்பணம் செய்வதுதான் எப்படி?

ஒரு வேளை நான் உங்களைச் சரியாக அறிந்துகொள்ளவில்லை போலும்! அதனால்தான் இவ்வளவு துணிவு. நீங்கள் வீட்டைவிட்டுப் போனாலும் நானாகவே வலுவில் கடிதம் எழுதினேன். ஆனாலும் பதிலில்லை. எனது உள்ளத்தைத் திறந்து காட்டினேன். உங்களை அறிந்துகொள்ள நான் தவறிவிட்டேனானால் அது என் தப்பிதமா? நான் சொல்பவை யாவும் சரியா அன்றாவென நீங்கள் நன்கு யோசித்துப் பாருங்கள்.

தப்போ சரியோ இதுவரை எழுதியதை நான் மறுத்துரைக்க முடியாது. கொடுத்ததைத் திருப்பி வாங்க முடியாது. இதைத்தான் பச்சாதாபமென்பது. சீ! என்னைப் போன்ற மானங்கெட்ட கதி ஒரு ஸ்திரீக்கும் ஏற்படாதிருக்கட்டும்! ஆனால் உங்களை மறக்க முடியுமென்று ஒருபோதும் நினைக்காதீர்கள். ஒருவரிடம் அன்புகொண்ட பிறகு அவர் திரஸ்கரித்தாலும் அதைச் சகித்துக்கொள்ள வேண்டியதுதான். இக்கடிதம் உங்களுக்கு வெறுப்பாயிருந்து இதற்கும் பதிலளிக்காவிடில், உங்கள் இஷ்டப்படியே நடந்துகொள்ளுங்கள். அதுவும் சரிதான்."

மஹேந்திரனால் மேலும் பொறுத்திருக்கமுடியவில்லை. ஆசாவின் கடிதங்களைக் காணச் சகியாது அவன் வீட்டிற்குத் திரும்பிவிட நினைத்தான். தவிர, தன்னை மறப்பதற்காகவே வீட்டைவிட்டு வெளியிலிருப்பதாக விநோதினி எண்ணியிருப்பதையும் பொய்ப்படுத்த விரும்பினான்.

இச்சமயம் விஹாரி வந்துசேர்ந்தான். மஹேந்திரனுக்கும் நண்பனைக் காணும்போது சந்தோஷமாயிருந்தது. அவன் மீதிருந்த சந்தேகங்களையெல்லாம் சமீபத்தில் கிடைத்த கடிதங்கள் போக்கடித்துவிட்டன. ஆகையால் இன்று மிகவும் சந்தோஷத்துடன் நண்பனை வரவேற்று முதுகில் தட்டிக்கொடுத்துக்கொண்டே ஒரு நாற்காலியில் உட்கார வைத்தான்.

ஆனால் விஹாரியின் முகம் வாட்டமடைந்து காணப்பட்டது. 'ஒருவேளை வீட்டிற்குப் போயிருப்பான். விநோதினி இவனைச் சரியாக வரவேற்காது நிராகரித்திருப்பாள். அதுதான் இப்படி வாடிய முகத்துடன் இங்கு வந்திருக்கிறான்' என்று மஹேந்திரன் நினைத்து, "விஹாரி, வீட்டுப் பக்கம் போயிருந்தாயா?" என்றான்.

"இப்பொழுது அங்கிருந்துதான் வருகிறேன்" என்று அழுத்தமாகச் சொன்னான் விஹாரி. நண்பனின் மனோவேதனையை எண்ணிப்பார்க்கையில் மஹேந்திரனுக்குத் திருப்தியே உண்டாயிற்று. பாவம், ஸ்திரீகளின் அன்பை அடையப் பாக்கியமற்றவனென்று மனத்தில் நினைத்துக்கொண்டான். இப்படி எண்ணித் தனது ஜேபியிலிருக்கும் கடிதங்களை ஒரு முறை தொட்டுப்பார்த்துக் கொண்டான்.

மஹேந்திரன்: வீட்டில் எல்லோரும் சௌக்கியந்தானே?

விஹாரி: சௌக்கியந்தான். வீட்டை விட்டு நீ ஏன் இங்கே வந்தாய்?

மஹேந்: இரவில் வேலையில் இருக்க வேண்டியிருக்கிறது. வீட்டிலிருந்து வரச் சௌகரியமாயில்லை.

விஹாரி: முன்பெல்லாம் கூட இரவுமுறை வேலை இருந்துகொண்டுதான் இருந்தது. அப்பொழுதெல்லாம் வீட்டை விட்டு வரக்காணோமே?

மஹேந்திரன், "என்ன, என்மேல் ஏதாவது ஸந்தேகமோ?" என்று கேட்டுச் சிரித்தான்.

விஹாரி: இந்த வேடிக்கையெல்லாம் இருக்கட்டும். முதலில் நீ வீட்டிற்குப் போ!

வீடு திரும்ப மஹேந்திரன் தயாராய்த்தான் இருந்தான். ஆனால் நண்பனின் வேண்டுகோளைக் கேட்டதும் சற்றுப்பிகுவுடன் தனக்கு இஷ்டமில்லாதது போல், "எப்படி முடியும்? வீடு சென்றால் படிப்பிற்காக ஒரு வருஷமுழுதும் உழைத்தது வீணாகி விடும்" என்றான்.

விஹாரி: நண்பா, உன்னைச் சிறுவயதிலிருந்து நான் நன்றாக அறிவேன். என்னையே ஏமாற்றப் பார்க்கிறாயே? நீ செய்வது அநியாயம்.

மஹேந்: யாருக்கு என்ன அநியாயம் செய்துவிட்டேனப்பா? ஜட்ஜ் துரையே, சற்றுச் சொல் பார்ப்போம்!

விஹாரி சற்றுக் கோபத்துடன், "'நான்தான் எப்பொழுதும் மிக நற்குணமுடையவன்' என்று பெருமை அடித்துக்கொள்வாயே, இப்பொழுது அந்நற்குணம் எங்கே போயிற்று?" என்றான்.

மஹேந்: அது இப்பொழுது ஆஸ்பத்திரியில் இருக்கிறது.

விஹாரி: போதும், உன்னுடைய கேலியெல்லாம்! இங்கே சிரிப்பும் கொண்டாட்டமுமாயிருக்கிறாய். அங்கே உன் ஆசா அழுத கண்ணும் சிந்திய மூக்குமாயிருக்கிறாள்.

ஆசா அழுதவண்ணம் இருக்கும் செய்தி மஹேந்திரனின் உள்ளத்தில் அம்பெனப் பாய்ந்தது. இவ்வுலகில் தன்னைத் தவிர வேறொருவருடைய சுகதுக்கத்திற்கும் தான் பொறுப்பாளி என்பதைப் புதுமயக்கத்தில் அவன் மறந்தே இருந்தான். திடுக்கிட்டவன்போல் கிலேசத்துடன், "ஆசா எதற்காக அழுதுகொண்டிருக்கிறாள்?" என்றான்.

விஹாரி எரிச்சலுடன், "அது உனக்குத் தெரியாது, எனக்குத்தான் தெரியும்போலிருக்கிறது!" என்றான்.

மஹேந்திரன்: உன் மஹேந் எல்லாவற்றையும் அறிந்து சொல்லக்கூடிய ஸர்வக்ஞனல்ல. இதற்காக உனக்குக் கோபம் வந்தால் என்னைச் சிருஷ்டித்த கடவுளைத்தான் கோபிக்க வேண்டும்!

நண்பனது ஆத்திரத்தைக் காணும்போது மஹேந்திரனுக்கு ஆச்சரியமாயிருந்தது. விஹாரியின் இளகிய மனத்தை அவன் அறிவான். ஆனால் ஆசாவினிடம் அவன் இரக்கம் காட்டுவது ஏனோ, என்றையிலிருந்தோ என்று யோசித்தான். 'ஐயோ பாவம்! துர்ப்பாக்கியசாலி' என்று நண்பனுக்காக இரங்கினான்.

ஐயோ பாவமெனத் தோன்றியபோதிலும் குதூகலமும் இல்லாது போகவில்லை. ஆசாவின் பூர்ண அன்பைப் பெறும் பாக்கியம் தனதென்பதை நினைத்துக் கர்வங்கொண்டான். நண்பன் இச்சித்தும் அடையப் பெறாத வஸ்து தனது ஏகபோக பாக்கியமாகக் கிடைத்திருப்பதுபற்றி உள்ளம் பூரித்தான்.

கடைசியில், "நல்லது, வீட்டிற்குப் போகலாம். வண்டி கொண்டு வா" என்றான்.

---

## இருபத்தோராம் அத்தியாயம்

மஹேந்திரன் வீடுவந்து சேர்ந்தான். ஆசாவின் துயரமெல்லாம் நிமிஷத்தில் மறைந்தது. ஆனால் தான் எழுதிய கடிதங்

களை நினைக்கும்போது நாணமும் துக்கமும் கொண்டு கணவன் முகத்தைக் காணவும் வெட்கினள். மஹேந்திரன் இனிய சொற்களாலேயே, "விட்டுப் போய்விட்டேன், மறந்துபோய்விட்டேன் என்றெல்லாம் கடிதம் எழுத உனக்கு யார் சொல்லிக் கொடுத்தது?" என்றான். கேட்டுக்கொண்டே ஜேபியிலிருந்த அம்மூன்று கடிதங்களையும் எடுத்தான்.

ஆசா மிகக் கிலேசத்துடன், "உங்கள் காலில் விழுந்து நமஸ்கரிக்கிறேன். தயவுசெய்து அக்கடிதங்களைக் கிழித்து எறிந்து விடுங்களேன்" என்று வேண்டினள்.

ஆசா கடிதங்களைத் தானே பிடுங்கி எறிய முயன்றாள். மஹேந்திரன் அவற்றை அவள் கைக்கு அகப்படாதவாறு பத்திரமாய் மறுபடி ஜேபியினுள் வைத்துக்கொண்டே, "ஏதோ வேலை நிமித்தம் சில தினங்கள் வெளியே யிருந்தால் ஏதேதோ நினைத்துக் கொண்டு என் மேல் குற்றஞ் சாட்டுகிறாயே?" என்றான்.

ஆசாவினால் கண்ணீரை அடக்க முடியவில்லை. கெஞ்சும் பாவனையாக, "தயை செய்து இம்முறை மன்னியுங்கள். இனி எப்பொழுதும் இப்படிச் செய்யமாட்டேன்" என்றாள்.

மஹேந்: எப்பொழுதும் மாட்டாயே?

ஆசா: எப்பொழுதும் மாட்டேன்.

மஹேந்திரன் அவளை இழுத்து அன்புடன் முத்தமிட்டான். ஆசா, "கடிதங்களைக் கொடுத்து விடுங்கள். கிழித்தெறிந்து விடுகிறேன்" என்றாள்.

மஹேந்: பரவாயில்லை. அவை இருக்கட்டும்; விடு.

தான் செய்த குற்றத்திற்குத் தண்டனையாகவே கணவன் அவற்றை வைத்திருக்க விரும்புவதாக ஆசா எண்ணினள்.

இப்படித் தன்னைக் கடிதங்கள் எழுதச் சொல்லியதற்காக விநோதினியிடம் கோபங் கொண்டாள். கணவன் வந்த சந்தோஷச் செய்தியைத் தெரிவிக்கவும் அவளிடம் ஓடவில்லை. அவளாகப் பேச வந்தபோதும் முகம் கொடுத்துப் பேசவில்லை. இதன் காரணத்தை விநோதினியும் ஊகித்துக்கொண்டு தனது வேலையில் கவனமாய்த் தூரவே இருக்கலானள்.

தன்னைக் கண்டதும் விநோதினி ஓடிவந்து எதிர்கொண்டழைத்துப் பேசுவாளென்று நினைத்திருந்த மஹேந்திரனும் ஏமாற்றமே அடைந்தான். பின் அக்கடிதங்களின் அர்த்தந்தான் என்னவென்று யோசித்தான்.

வீட்டை விட்டுப் போகுமுன் அவள் உள்ளத்தின் மர்மத்தை அறியத் தான் முயலக் கூடாதென்று உறுதிகொண்டிருந்தான்; அவளுடைய சகவாசத்தையே விலக்க வேண்டுமென்று நிச்சயித்

திருந்தான். ஆனால் இப்பொழுதோ அது சரியென்று அவனுக்குத் தோன்றவில்லை; தங்கள் இருவருடைய மனோவிகாரத்தையும் அகற்றிச் சுத்தமான சகோதரபாவம் கொள்ள இருவரும் சகஜமாய்க் கலந்து பழகுவதுதான் உற்ற முறையென்று கருதினான்.

அவன் ஆசாவிடம், "என்ன? உன் தோழியின் தரிசனமே கிடைப்பதில்லை? என்னைக் காணுவதற்கே அவளுக்குக் கரிப்பாயிருக்கிறதுபோலும்!" என்றான்.

ஆசா உதாசீனத்துடன், "யாருக்குத் தெரியும்? அவளுக்கு என்ன வந்துவிட்டதோ?" என்றாள்.

இச்சமயம் ராஜலக்ஷ்மி வந்து, "விநோதினி தன் வீட்டிற்குச் செல்லவேண்டுமாம்; இனி இங்கிருக்க முடியாதென்று பிடிவாதம் செய்கிறாள்" என்று உணர்ச்சி மேலிடக் கூறினாள்.

இதைக் கேட்டு மஹேந்திரனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. ஆனால் உடனே சமாளித்துக்கொண்டு, "ஏனம்மா போகவேண்டுமாம்?" என்றான்.

ராஜலக்ஷ்மி: எனக்கென்ன தெரியும்? என்ன சொல்லியும் கேட்கவில்லை. உனக்கோ பிறரை மதித்து நடந்துகொள்ளவே தெரிவதில்லை. 'ஏதடா, பிறர்வீட்டுப் பெண்ணொருத்தி நம் வீட்டில் வந்திருக்கிறாளே; அவளை மனுஷியாக மதித்துத் தக்க ஆதரவுடன் நடத்துவோம்' என்னும் எண்ணமும் உனக்குக் கிடையாது. பின் அவள் ஏன் இந்த வீட்டில் தங்க விரும்புவாள்?

விநோதினி எதிர்ப்புறம் ராஜலக்ஷ்மியின் படுக்கையறையில் உட்கார்ந்து ஒரு போர்வையைத் தைத்துக் கொண்டிருந்தாள். மஹேந்திரன் நேரே அவளிடம் சென்று, "என்ன மாயா விநோதினி?" என்று அழைத்தான். அவள் மிகவும் அழுத்தலாக, "யார்! ஸ்ரீயுத மஹேந்திர பாபுவா?" என்றாள்.

"எனக்கு இவ்வளவு மரியாதை எப்பொழுது முதல்?" என்றான் மஹேந்திரன்.

விநோதினி தையலை விட்டுக் கண்ணை எடுக்காது, "பின் என்னவென்று அழைப்பது?" என்றாள்.

மஹேந்: ஏன்? முன் போலத்தான்.

விநோதினி இதைக் கேட்டு முன்போல் வேடிக்கைப் பேச்சில் இறங்கவில்லை. அவள் பேசாமலே மேலும் தைக்கலானாள்.

மஹேந்: வரவர நமது நட்புக் குறைந்து வருகிறதுபோலும்!

விநோதினி தையலை முடித்து நூலை அறுத்துக்கொண்டே, "எனக்கென்ன தெரியும்? உங்களுக்கல்லவோ தெரியும். ஆஸ்பத்திரியிலிருந்து ஏன் வந்துவிட்டீர்கள்?" என்றாள்.

மஹேந்: எவ்வளவு நாள்தான் செத்த பிணங்களை அறுத்துக்கொண்டு அங்கே கிடப்பது?

விநோதினி தைத்துக்கொண்டே, "ஓஹோ! இப்பொழுது உயிரோடிருப்பவர்களை அறுக்க வந்திருக்கிறீர்களாக்கும்!" என்றாள்.

சகஜமாகவும் வேடிக்கையாகவும் பேசி அவளது தப்பெண்ணத்தை அகற்ற நிச்சயித்திருந்த மஹேந்திரனுக்கு அவள் இப்படி முரண் செய்வது ஏமாற்றமாயிருந்தது. அவள் பேசாது இருக்க இருக்க அவன் மனம் அவள்பால் அதிகமாய் இழுக்கப்பட்டது. எப்படியாவது அவள் கோபத்தைத் தணிக்க நிச்சயித்தான்.

அவள் கேட்ட கேள்விக்குப் பதிலளியாது அவளருகில் போய் உட்கார்ந்து, "நீ ஏன் எங்களை விட்டுப் போக விரும்புகிறாய்? நான் ஏதாவது தப்பிதம் செய்தேனா?" என்றான்.

விநோதினி அவனருகிலிருந்து நகர்ந்து உட்கார்ந்து, "எல்லோரும் அவசியமான வேலையை முன்னிட்டுத்தான் போகிறார்கள். நீங்கள் யார்மேல் கோபித்துக்கொண்டு ஹாஸ்டலில் போய் இருந்தீர்கள்? அதேமாதிரிதான் எனக்கும் போகவேண்டும். எனக்குமாத்திரம் அவசியமான வேலை இல்லையா?" என்றாள்.

இதற்குத் தகுந்த பதில் வெகுநேரம் யோசித்தும் மஹேந்திரனுக்குத் தோன்றவில்லை. கடைசியில், "அப்படி நீயின்றி நடவாத என்ன முக்கிய வேலை உனக்கு இருக்கிறது?" என்றான்.

அவள் மிக்க கவனமாய் நூலைக் கோத்துக்கொண்டே, "முக்கியமோ, முக்கியமில்லையோ அது எனக்குத் தெரியும். உங்களுக்குத் தெரிந்து என்ன ஆகவேண்டும்?" என்றாள்.

சில நிமிஷங்கள்வரை பேச்சேயில்லை. மஹேந்திரன் தூரத்திலிருக்கும் மரத்தை நோக்கியவண்ணம் இருந்தான். விநோதினி தைத்துக்கொண்டேயிருந்தாள். ஓரே நிச்சப்தம். ஊசி விழுந்தால் கூடக் கேட்கும். திடீரென்று மஹேந்திரன் ஏதோ பேச ஆரம்பித்ததும் விநோதினி திடுக்கிட்டுத் திரும்பினாள். ஊசி கையில் தைத்துவிட்டது.

மஹேந்: கெஞ்சி வேண்டிக்கொண்டாலுங்கூட இருக்க மாட்டாயா?

கையிலிருந்து வெளிப்பட்ட ரத்தத்தைத் துடைத்துக் கொண்டே விநோதினி, "நான் இருந்தாலென்ன, போனாலென்ன? இதற்கு வேண்டுவானேன்? நான் இல்லாது உங்களுக்கு என்ன கெட்டுவிடும்?" என்று சொல்லும்போது துக்கம் தொண்டையை

அடைக்கவே அவள் தலையைக் குனிந்துகொண்டு தைக்கலானாள். கண்ணீர் முத்துப்போல உதிர்ந்தது.

மஹேந்திரன் சட்டென்று அவள் கையைப் பிடித்துக்கொண்டு உணர்ச்சி மேலிட, "எனக்கு நீ இல்லாமல் கெட்டுத்தான் விடுமென்றால் அப்பொழுது இருப்பாயா?" என்றான்.

விநோதினி உடனே கையை விடுவித்துக்கொண்டு தூர நகர்ந்து உட்கார்ந்தாள். மஹேந்திரனின் மயக்கம் தெளிந்தது. தன்னுடைய வார்த்தையின் கோரத்தன்மை அவன் செவியில் எதிரொலிப்பது போல இருந்தது. மேலும் இத்தகைய வார்த்தை வெளிப்படாமலிருக்க நாவை அடக்கிக்கொண்டான். பிறகு பேசவில்லை.

அதேசமயம் ஆசா அறையினுள் பிரவேசித்தாள். உடனே விநோதினி சம்பாஷணையைத் தொடர்ந்து நடத்துவதுபோல் சிரித்துக்கொண்டே மஹேந்திரனிடம், "நீங்கள் எல்லோரும் இவ்வளவு சொல்லும்போது உங்களைக் கோபத்திற்குள்ளாக்க என்னால் முடியாது. நீங்களாகப் போகச் சொல்லும்வரை நான் இனிப் போவதில்லை" என்றாள்.

ஆசா: தோழி, கடைசியில் இதற்குத்தானா இவ்வளவு பிடிவாதமும்? எனது பதியின் முன்பு நீ தோல்விதான் அடைய நேர்ந்தது!

விநோதினி புன்சிரிப்புடன் மஹேந்திரனைப் பார்த்து, "நிஜத்தைச் சொல்லுங்கள்: தோற்றது நானா, நீங்களா?" என்று கேட்டாள்.

அவன் இதுவரை பேசவில்லை. தனது தகாத செய்கை அவ்வீடு முழுவதும் பரவிக் களங்கமுற்றுக் காணப்பட்டதுபோல் இருந்தது அவனுக்கு. ஆசாவின் முன் இனி எப்படித் தலை நிமிர்ந்து பேசுவது என்று திகைத்தான். தனது தகாத செயலை ஒரு விநாடி மறைத்துக்கொண்டு, வேடிக்கையாய்ப் பேசுவதுபோல் அவனால் எப்படி வேஷம் போட முடியும்? ஏமாற்றும் இந்திரஜால வித்தையை அவனால் செய்யமுடியவில்லை. முகம் குன்றி வாய் குழற, "நான்தான் தோற்றேன்" என்று சொன்னதும் வெளியே சென்றுவிட்டான்.

கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அவன் மறுபடி விநோதினியிடம் வந்து, "என்னை மன்னிக்க வேண்டும்" என்றான்.

விநோ: தப்பென்ன செய்துவிட்டீர்கள், நான் மன்னிப்பதற்கு?

மஹேந்: உன்னைப் போகவிடாது தடுத்து வைத்துக்கொள்வதற்கு எங்களுக்கு ஓர் அதிகாரமும் இல்லை.

விநோதினி சிரித்துக்கொண்டு, "என்னை நீங்கள் இருக்குமாறு பலவந்தம் ஒன்றும் செய்யவில்லை. சாதாரணமாகத்தான் சொன்னீர்கள். இது என்ன வற்புறுத்தலா? (ஆசாவைப் பார்த்து) சகோதரி, நீயே சொல். அன்பும் வற்புறுத்தலும் ஒன்றுதானா?" என்றாள்.

ஆசாவும் அவளுக்குப் பக்கபலமாக, "ஒருநாளும் இல்லை" என்றாள்.

விநோதினி: நான் போனால் உங்களுக்குக் கஷ்டமாயிருக்குமென்றெண்ணி என்னை இருக்கச் சொல்வதை நான் எனது பாக்யமாகக் கருதுகிறேன். (ஆசாவிடம்) சகோதரி, இவ்வுலகில் எனது சுகதுக்கத்தில் அனுதாபம் கொண்டு பகிர்ந்துகொள்ளக் கூடியவர் யார் இருக்கின்றனர்? அதிர்ஷ்டவசமாய் அப்படி ஒருவர் கிடைத்திருக்க அவரை விட்டுப் போக யாருக்குத்தான் மனம் வரும்?

மஹேந்திரன் பதிலொன்றும் சொல்லாது நிற்பதைக் காணவே ஆசாவுக்குச் சற்று வருத்தமாய்த்தான் இருந்தது. "சகோதரி, உன்னைப் பேச்சில் ஜயிக்க யாரால்தான் முடியும்?" என்று விநோதினியிடம் சொன்னாள் அவள்.

மஹேந்திரன் அங்கு நில்லாமல் வெளியே சென்றான். அப்பொழுதுதான் ராஜலக்ஷ்மியுடன் பேசிவிட்டு நண்பனைத் தேடிக்கொண்டு விஹாரி வந்துகொண்டிருந்தான். அவனைப் பார்த்ததுமே மஹேந்திரன், "நண்பா, என்னைப் போன்ற நீசன் - கபடன் - இப்புவியில் யாரும் இருக்க மாட்டார்கள்!" என்று துக்கம் நெஞ்சை அடைக்கச் சொன்னான்.

அவன் சொன்னது விநோதினியின் செவியிலும் பட்டது. அதேசமயத்தில் அவளும், "விஹாரி பாபு!" என்று கூப்பிட்டாள்.

விஹாரி: இதோ வருகிறேன். சற்றுப் பொறு.

விநோ: சற்று இப்பொழுதே வந்து கேட்டுவிட்டுப் போங்களேன்.

விஹாரி உள்ளே நுழைந்ததுமே ஆசாவைப் பார்த்தான். அவள் உடனே எழுந்துபோக யத்தனித்தாள். ஆனால் விநோதினி அவளை நிறுத்திக்கொண்டு, "விஹாரி பாபு, உங்களைக் கண்டால் எனது சகி ஏன் இப்படி ஓடப் பார்க்கிறாள்? உங்களுக்குள் இவ்வளவு வேற்றுமை ஏன்?" என்றாள்.

ஆசா மிகவும் வெட்கித் தோழியின் முதுகில் மெல்ல அடித்தாள்.

விஹாரி சிரித்துக்கொண்டே, "பகவான் என்னை அழகாய்ப் படைக்கவில்லை. அதனால்தான் யாரும் என்னைப் பார்க்க விரும்புவதில்லை" என்றான்.

விநோ: கேட்டாயா, ஆசா! எப்படிச் சாதுர்யமாய்ப் பேசத் தெரிந்து கொண்டிருக்கிறார்! உன்னைத் தோஷம் கூறாது தம்மைப் படைத்த கடவுளையே குறை கூறுகிறார். சாக்ஷாத் லக்ஷ்மணர் போன்ற மைத்துனரைப் போற்றத் தெரியாத உனது மதிதான் என்னே!

விஹாரி: இதனால் உனக்காவது என்மேல் இரக்கம் ஏற்படுகிறதே; பின் எனக்கு என்ன குறை?

விநோ: சமுத்திரம் பெரிதாய்த்தான் இருக்கிறது. ஆனாலும் சக்ரவாகப் பக்ஷியின் தாகம் மழைநீரின்றித் தணியாதே!

அதற்குமேல் ஆசாவினால் அங்கே நிற்க முடியவில்லை. விநோதினியின் பிடியிலிருந்து தனது கையை விடுவித்துக்கொண்டு ஓடிவிட்டாள். விஹாரியும் போக எழுந்திருந்தான். அச்சமயம் விநோதினி, "விஹாரி பாபு! உங்கள் சிநேகிதருக்கு என்ன வந்துவிட்டது? உங்களுக்குத் தெரியுமா?" என்றாள்.

இதைக் கேட்டதும் விஹாரி நின்றுவிட்டான். "எனக்கு ஒன்றும் தெரியாது. ஏன்? என்ன சமாசாரம்?" என்றான்.

விநோ: யாருக்குத் தெரியும்? எனக்கு ஒன்றும் அவரது மனப்போக்கு நன்றாய்த் தோன்றவில்லை.

விஹாரி கவலையுடன் உட்கார்ந்து முழுவிவரங்களையும் அறிய விரும்பினான். விநோதினியோ தைத்துக்கொண்டேயிருந்தாள். தானாக அவள் ஒன்றும் சொல்வதாகக் காணோம். பிறகு விஹாரியே, "மஹேந்திரனைப்பற்றி விசேஷ சங்கதி ஏதாவது கேள்விப்பட்டாயா? பார்த்தாயா?" என்று கேட்டான். விநோதினி மிகவும் சகஜமாய்ச் சொல்வதுபோல், "எனக்கென்ன தெரியும்? ஆனால் இருக்கும் மாதிரி ஒன்றும் சரியாயில்லை. எனக்கு என் பிரிய சகியைப்பற்றித்தான் கவலையாயிருக்கிறது" என்றாள். இதைச் சொல்லிப் பெருமூச்செறிந்தாள். தையலைத் தைத்துவிட்டு வெளியேபோக எழுந்து நின்றாள்.

விஹாரி மனக்கலக்கத்துடன், "சற்று உட்கார்" என்றான்.

விநோதினி ஜன்னற் கதவுகளையெல்லாம் நன்றாகத் திறந்து வைத்து விளக்குத் திரியையும் தூண்டிவிட்டு, மறுபடி தைக்கும் துணியை எடுத்துக்கொண்டு ஒருபுறம் உட்கார்ந்தாள். பிறகு விஹாரியிடம், "நான் எப்பொழுதும் இங்கிருக்க முடியாது. நான் போனபிறகு என் தோழிக்கு யாதொரு துக்கமும் நேராதவாறு நீங்களே பார்த்துக்கொள்ளவேண்டும்" என்றாள். இதைக் கூறிக்கொண்டே தனது துக்கத்தைச் சமாளித்துக்கொள்வதுபோல் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டாள்,

விஹாரி உணர்ச்சி ததும்ப, "நீ இங்கிருக்கத்தான் வேண்டும். உன் தோழி எனக்கு வேறல்ல. அந்த மாசற்ற பேதைச் சிறுமியை உனது வசமே ஒப்புவிக்கிறேன். அவளை அநாதரவாய் விட்டுப் போகவேண்டாம்" என்று வேண்டினான்.

விநோ: விஹாரி பாபு, நீங்கள் உலக இயல்பை அறியவில்லை. நான் இங்கேயே இருந்தால் ஊரார் என்ன நினைப்பார்கள்?

விஹாரி: என்ன வேண்டுமானாலும் நினைத்துக்கொள்ளட்டும்; நீ அதைக் கவனியாதே. அநாதையும் வெகுளியுமான அச்சிறுமியைக் காப்பது உனது பொறுப்பென்று நினை. விநோதினி, உன்னை நான் முதலில் அறிந்துகொள்ளாது உன்மேல் தப்பெண்ணம் கொண்டு சந்தேகித்தேன். அதற்காக என்னை மன்னிக்கவேண்டும். ஆசாவின் சுகத்தைக் காணச் சகியாது பொறாமைப்படுகிறாயென்று நினைத்தேன். இன்னும் . . . . அவற்றைச் சொல்வதும் பாவம்; நினைப்பதும் அடாது. உனது பரிசுத்தமான உள்ளத்தின் தன்மையை அன்றொருநாள் கண்டுகொள்ள எனக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. அதுமுதல் உன்மேல் எனக்குப் பக்தியும் சிரத்தையும் ஏற்பட்டிருக்கின்றன. எனது குற்றத்தை ஒப்புக்கொண்டு அதற்காக உன்னிடம் மன்னிப்புப் பெற்றாலொழிய என் மனம் நிம்மதி அடையாது.

விநோதினி ஆனந்தத்தினால் மயிர்க்கூச்செறிந்தாள். தான் அவனை ஏமாற்றுவதை அறிந்தும் விஹாரியின் தன்மையை அவள் சந்தேகிக்கவில்லை. இம்மாதிரி தன்னிடம் பக்தியும் சிரத்தையும் காட்டக்கூடிய ஒருவரைத் தன் வாழ்வில் அவள் இதுவரை கண்டதில்லை. உண்மையிலேயே தான் பரிசுத்த உள்ளம் படைத்தவளென்று கணநேரம் அவளுக்குத் தோன்றியது. ஆசாவின் பேரில் அபார தயை பிறந்து அவள் கண்களினின்றும் இரண்டொரு நீர்த்துளிகளும் உதிர்ந்தன. அவள் அதை மறைத்துக் கொள்ளவில்லை.

விநோதினி அழுவதைப் பார்த்துத் தனக்குள்ள துக்கத்தை மறைத்துக் கொள்வதற்காக விஹாரி சட்டென்று அவ்விடத்தை விட்டு அகன்றான். அதுவரை, "நான் கபடன், நான் நீசன்" என்று மஹேந்திரன் சொன்னதன் அர்த்தம் அவனுக்கு விளங்காதிருந்தது. மஹேந்திரனைத் தேடினான். அவன் வீட்டில் இல்லை. எங்கோ வெளியில் போயிருக்கிறானென்று தெரிந்தது. வேலையில்லாது வீட்டைவிட்டு உலாவப் போவதுகூட மஹேந்திரனுக்குப் பிடிக்காது. அப்படியிருக்க இருட்டிய பிறகு அந்நேரத்தில் அவன் வெளியே போனானென்பதைக் கேட்க விஹாரிக்கு ஆச்சரியமாயிருந்தது. அவன் யோசனையில் ஆழ்ந்தான்.

வினோதினி ஆசாவிடம் சென்று அவளைத் தழுவிக்கொண்டு, "சகோதரி, நான் மிகவும் துர்ப்பாக்கியசாலி! கோர ராக்ஷஸி" என்று அழுதாள்.

ஆசா மிக்க மனக்கலக்கத்துடனும் அன்புடனும், "தோழி, இப்படியெல்லாம் ஏன் பேசுகிறாய்?" என்றாள்.

வினோதினி சிறுகுழந்தையைப்போல் ஆசாவின்மேல் சாய்ந்து அழுதுகொண்டே, "சகோதரி, நான் இருக்குமிடமெல்லாம் கெடுதி நேரிடுமே தவிர நன்மை ஏற்படாது. நான் இவ்வீட்டை விட்டு ஒழியும்படி விட்டுவிடு. நான் எனது காட்டில்போய் வசித்துக் கொள்ளுகிறேன். அதுதான் எனக்கேற்பட்ட இடம்" என்றாள்.

ஆசா ஆதரவுடன் அவள் முகத்தை நிமிர்த்திப் பிடித்துக் கொண்டு, "தோழி, இம்மாதிரி சொல்லாதே. உன்னை விட்டுப் பிரிந்து இருக்கவே முடியாது என்னால்" என்றாள்.

விஹாரியின் மனம் என்ன யோசித்தும் நிம்மதியடையவில்லை. மஹேந்திரனுக்கும் ஆசாவுக்கும் இடையில் ஏற்பட்டு வரும் அன்புக் குறைவின் காரணத்தைத் தெரிந்துகொள்ள அவன் விரும்பினான். மஹேந்திரனை அன்று பார்க்க முடியாது போகவே, மறுநாள் அவனைத் தன் வீட்டிற்கே போஜனத்திற்கு அழைப்பதென்று நிச்சயித்துக்கொண்டான். இதை வினோதினியிடம் தெரிவிக்க எண்ணி அவள் அறைக்குள் வந்தான். அச்சமயம் இரு தோழிகளும் ஒருவரை ஒருவர் ஆலிங்கனம் செய்துகொண்டு கண்ணீர் பெருக நிற்கும் காட்சியைக் கண்டான். அவனைப் பார்த்ததும் ஆசாவுக்கு அவன் மீது சந்தேகம் ஏற்பட்டது. 'நம் தோழியின் துக்கத்திற்குக் காரணம் இவனாகத்தான் இருக்கவேண்டும்; அவள் மனதை இவனே புண்படுத்தியிருக்க வேண்டும்; இது அநியாயம். இவன் மனது பரிசுத்தமாயில்லை' என்று அவள் நினைக்கலானாள். அவள் விஹாரியைப் பார்க்க விரும்பாது உள்ளே சென்றுவிட்டாள்.

விஹாரிக்கு வினோதினியைப்பற்றிய நல்லெண்ணம் பின்னும் அதிகமாயிற்று. தான் சொல்ல நினைத்ததையும் மறந்து அப்படியே வீடு திரும்பினான்.

அன்று இரவு மஹேந்திரன் ஆசாவிடம், "ஆசா, நான் நாளைக் காலையில் காசிக்குப் போகிறேன்" என்றான்.

ஆசா திடுக்கிட்டு, "ஏன்?" என்றாள்.

மஹேந்: பெரியம்மாவைப் பார்த்து வெகு நாளாயிற்று. பார்த்துவர ஆவலாயிருக்கிறது.

ஆசா வெட்கிக் குன்றினாள். இவ்வெண்ணம் தனக்கல்லவோ முதலில் உதித்திருக்கவேண்டும்? தனது சுகதுக்கங்களையே பெரி

தாக எண்ணித் தன் அன்பான சிற்றன்னையைத் தான் மறந்திருக்க, தன் கணவன் அந்தத் தபஸ்வினியை மறக்கவேயில்லையென்பதை நினைத்துத் தனது கடின மனத்தை நொந்துகொண்டாள்.

மஹேநெ: அவள் ஸர்வத்தையும் எனக்கே அளித்துச் சென்றாள். அவளைக் கண்டு வரப் பேரவாவாயிருக்கிறது.

மேலே அவனால் பேசமுடியவில்லை. தனது அன்புமய ஆசீர் வாதத்தை அளிப்பதுபோல் ஆசாவின் நெற்றியையும் சிரசையும் மெதுவாய்த் தடவிக்கொடுத்தான். திடீரெனப் பெருகும் அவன் அன்பின் தன்மையை ஆசாவினால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவள் கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருகியது. அன்று சாயங் திரம் விநோதினி தன்னிடம் அபாரவாஞ்சை காட்டிப் பேசியது அவள் நினைவிற்கு வந்தது. தன் கணவன் காட்டும் அன்பிற்கும் விநோதினியின் பிரியத்திற்கும் என்ன காரணம், என்ன சம்பந்தம் என்பதொன்றும் அவளுக்குப் புரியவில்லை. ஏதோ தனது வாழ் வில் ஒரு புதிய மாறுதலுக்கு இவை அறிகுறியென்று நினைத்தாள். அது நன்மைக்கா தீமைக்கா என்று திகைத்தாள்.

தன்னை அறியாத பயம் அவள் மனத்தில் தோன்றியது. பதியிடம் அடைக்கலம் புகவேண்டி அவன் கைகளைப் பற்றிக்கொண்டாள். அவளது மனோநிலையை அவனும் ஊகித்து அறிந்துகொண்டு, "ஆசா, பரிசுத்த ஆத்மாவான உன் சித்தியின் ஆசீர்வாதம் உனக்குப் பூரண மாய்க் கிடைத்திருக்கும்போது உனக்கு ஒரு தீமையும் நேரிடாது. நன்மையே ஏற்படும். வருந்தாதே" என்று தைரியமூட்டினான்.

பயம், சமுசயம் எல்லாம் அகன்று ஆசா தன் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டாள்; பதியின் ஆசீர்வாதம் தன்னைப் பாது காத்து ரக்ஷிக்கும் கவசமென்று கருதினாள்.

தன் சித்தியைத் தன் மனக்கோயிலில் இருத்தி வணங்கினாள். தன் பதியின் நன்மையைக் கோரி ஆசீர்வதிக்குமாறு வேண்டிக் கொண்டாள்.

மறுநாட் காலை மஹேந்திரன் காசிக்குப் புறப்பட்டுச் சென் றான். விடைபெற்றுச் செல்ல அவன் விநோதினியிடம் வரவில்லை. இதைக் கண்டு விநோதினி, 'தானே அநியாயம் செய்வது; பிறகு தானே கோபித்துக்கொள்வது! இம்மாதிரிப் புருஷனை நான் கண் டதேயில்லை. ஆனால் இந்த விரக்தியெல்லாம் எத்தனை நாளைக்கு? பார்க்கிறேன்!' என்று தன்னுள்ளேயே சொல்லிக்கொண்டாள்.

(தொடரும்)

---

# அரக்கனின் அகந்தை

ஆஸ்கார் ஒயில்ட்

('கோதண்டராமன்' ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்தது)

---

தினந்தோறும் பிற்பகலில் சிறுவர்கள் பள்ளிக்கூடத்தி லிருந்து திரும்பி வருகையில் அரக்கனின் தோட்டத்தினுள் புகுந்து விளையாடிவந்தனர்.

அது மிருதுவான பசும்புல் நிறைந்த மனோஹரமான தோட்டம். அங்கே புற்களின் இடையே இங்குமங்கும் நட்சத்திரங்களைப் போலப் பூக்கள் பூத்திருந்தன. வஸந்த காலத்தில் ரோஜாமலரும் முத்துப் போன்ற வர்ணங்களுடைய மென்மையான பூக்களும் பூத்தன; சரத் காலத்தில் திவ்யமான பழங்களைத் தந்த பீச்மரங்கள் இருந்தன. புள்ளினங்கள் மரங்களின் மீது இருந்து கொண்டு அங்குள்ள சிறுவர்கள் தங்களது ஆட்டங்களையும் நிறுத்திச் செவிசாய்த்துக் கேட்டுக் களிப்புறும்படியான அவ்வளவு இன்னிசையுடன் கூடிய பாடல்களைப் பாடின. "இவ்விடத்தில் நாம் எவ்வளவு ஆனந்தமாயிருக்கிறோம்" எனக் கூறி அச்சிறுவர்கள் மகிழ்ந்தனர்.

ஒரு நாள் அரக்கன் திரும்பி வந்தான். அவன் காரன்வாலிலுள்ள தன் நண்பன் ஒருவனைப் பார்க்கச் சென்றிருந்தான். அவனுடன் எழு வருஷகாலம் தங்கி, அதற்குள் அவனுக்குச் சொல்லவேண்டியிருந்த யாவையும் சொல்லிமுடித்தான். அவன் சம்பாஷித்ததெல்லாம் கொஞ்சந்தான். பிறகு, தன் அரண்மனைக்குத் திரும்ப எண்ணங்கொண்டு அவன் மீண்டு வந்தபோது சிறுவர்கள் தோட்டத்தில் விளையாடுவதைக் கண்டான்.

"இங்கே நீங்கள் என்ன செய்கிறீர்கள்?" என்று வெடுவெடுப்புடன் கேட்டான் அரக்கன். சிறுவர்கள் ஓட்டம் பிடித்தனர். "என்னுடைய தோட்டம் என்னுடையது; எனக்காக இருப்பது. என்னைத்தவிர வேறு எவரையும் இங்கே விளையாட விடமாட்டேன்" என்று உறுமினான். அத்தோட்டம் முழுமையும் வளைத்து ஒரு சுவர் எழுப்பி, "இங்கே யாரும் நுழையக்கூடாது. மீறினால் தண்டனை" என்று ஒரு விளம்பரத்தையும் அதன் மீது ஒட்டினான்.

ஐயோ பாவம்! அச்சிறுவர்களுக்கு இனி விளையாட இடமில்லை. நடுத்தெருவில் விளையாட முயன்றனர். ஆனால் தெருவோ மிகவும் புழுதியாயும் பெரிய கற்கள் நிரம்பியதாயும் இருந்தது. அது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. பாடங்களைப் படித்து முடித்த பிறகு அச்சுவரைச் சுற்றி அலைந்து உள்ளே யிருக்கும் தோட்டத்தைக் குறித்து, "அங்கே எவ்வளவு குசாலாக விளையாடினோம்!" என்று தங்களுக்குள் சொல்லிக்கொண்டனர்.

பிறகு வஸந்தகாலம் வந்தது. வயல்களில் எங்கும் சிறு புஷ்பங்களும் சிறு புள்ளினங்களும் காணப்பட்டன. 'தனது' என்னும் மமதை பிடித்த அவ்வரக்கனின் தோட்டத்தில் மட்டும் இன்னும் பனிக்காலம் நீங்கினபாடில்லை. அங்கே சிறுவர்கள் இல்லாததால் புள்ளினங்கள் பாட மனங்கொள்ளவில்லை. மரங்களும் மலர மறந்தனபோலும். ஒரு நாள் புற்களின் மத்தியிலிருந்து ஓர் அழகிய மலர் கிளம்பித் தலைகாட்டியது. ஆனால் அது விளம்பரத்தைக் கண்டவுடன் சிறுவர்களின்மீது மிகவும் பரிதாபங்கொண்டு மீண்டும் பூமிக்குள் மறைந்து உறக்கங்கொண்டது.

பனிக்கட்டியும் உறைபனியும் மட்டும் திருப்தியாக அங்கே தங்கி இருந்தன. "வஸந்தன் தோட்டத்தை மறந்துவிட்டான். நம் பாடு கொண்டாட்டம். வருஷமுழுமையும் நாம் இங்கிருந்து சுகமாக வாழலாம்" என்று சொல்லி அவை மகிழ்ந்தன. பனி தனது வெள்ளைப்போர்வையால் பசும் புற்களையெல்லாம் மூடிவிட்டது. பிறகு அவை வடக்கிலிருந்து வரும் வாடைக்காற்றையும் தங்களுடன் சேரும்படி அழைத்தன. அதுவும் அழைப்புக்கு இணங்கி வந்தது. மயிர்க்கூச்செறியும் மேல் தோற்போர்வையுடன் அது வந்தது. பகல் முழுதும் கர்ஜித்துப் புகைக் கூண்டுகளைக் கவிழ்த்தது. "பேஷ்! இதுவே நேர்த்தியான இடம். கல்மழையையும் இங்கே அழைக்கவேண்டியதுதான்" என்றது அது. பிறகு கல்மழையும் வந்தது. அது தினந்தோறும் மூன்றுமணி நேரம் அரண்மனையின் மீது கடகடவென்று விழுந்தது. கூரைப் பலகைகள் பல உடைந்தன. பிறகு விரைந்து சென்று தோட்ட முழுமையும் பரவிக் கொட்டுக் கொட்டு என்று கொட்டிற்று. அது சாம்பல் வர்ணமுள்ள போர்வையைப் போட்டுக்கொண்டது. அதன் மூச்சோ மிகவும் ஜில்லென்று இருந்தது.

தன்னலமொன்றையே கருதிவந்த அரக்கன் ஜன்னலருகில் உட்கார்ந்துகொண்டு வெளுவெளுத்துச் சிலுசிலுத்திருந்த தனது தோட்டத்தைப் பார்த்துக்கொண்டே, "வஸந்தம் வருவதற்குத் தாமதமென்ன என்பதுதான் எனக்கு விளங்கவில்லை. பருவம்

சீக்கிரம் மாறுமென்றே நினைக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டான்.

வஸந்தமென்னவோ வரவேயில்லை. கோடையும் வரக்காணோம். சரத்காலத்தில் எல்லாத் தோட்டங்களிலும் பொன்னிறமான பழங்கள் மலிந்திருந்தன. அரக்கன்தோட்டத்தில் மட்டும் ஒரு பழமும் காணோம். "அவன் அகந்தை மிக்கவன்" என்றது சரத். குளிர்காலம் மாத்திரம் விடாமல் அங்கு இருந்து வந்தது. வாடைக்காற்றும் கல்மழையும் உறைபனியும் மரங்களிடையே தாண்டவம் புரிந்தன.

ஒருநாள் காலையில் அரக்கன் இன்னும் படுத்துக்கொண்டிருக்கையில் ஓர் இனிய சங்கீதத்தைக் கேட்டுக் கண்விழித்தான். அது செவிக்கினியதாக இருந்ததால் மன்னரின் பாடகர்களே அவ்வழியாகச் சென்றுகொண் டிருக்கவேண்டுமென்று எண்ணினான். உண்மையாக ஜன்னலுக் கருகில் வெளிப்புறமாக லின்னெட் என்னும் சிறு குருவிதான் இவ்விதம் பாடியது. அச்சமயம் அப்பட்சியின் தலைமேல் கல்மழை பெய்யாது நின்றது. வடகாற்றும் உறுமவில்லை. சுகந்தவாசனை யொன்று கிளம்பி, திறந்திருந்த ஜன்னலின் வழியாக அவனிருந்த இடம் வரையிலும் வீசியது. "அப்பாடா! கடைசியாக வஸந்தம் வந்துவிட்டது" என்று அரக்கன் சொல்லிக்கொண்டே படுக்கையை விட்டு எழுந்து வெளியே பார்த்தான்.

அவன் பார்த்தது என்ன தெரியுமா?

அற்புதமான காட்சியொன்றைக் கண்டான் அவன். சுவரிலுள்ள ஒரு சிறு துவாரத்தின் வழியாகச் சிறுவர்கள் மெல்ல உள்ளே நுழைந்து மரக்கிளைகளில் உட்கார்ந்திருந்தனர். அவன்பார்த்த ஒவ்வொரு மரத்திலும் ஒவ்வொரு சிறுவன் இருக்கக்கண்டான். திரும்பிவந்த சிறுவர்களை மீண்டும் காணவே களிப்புற்ற மரங்கள் பூக்கள் நிரம்பப் பூத்து அவர்கள் தலைமீது தங்கள் கிளைகளை மென்மையாக அசைத்தன. பட்சிகள் அங்குமிங்கும் பறக்கவும் ஆனந்தத்துடன் கீச்சுக் கீச்சென்று சப்திக்கவும் ஆரம்பித்தன. மலர்கள் பசும்புல்லுக்குமேல் தலையைத் தூக்கிப் புன்முறுவல் செய்தன. அக்காட்சி மிகவும் வசீகரமாயிருந்தது. ஆனால் ஒரு மூலையில் மட்டும் இன்னும் குளிர்காலம் நீடித்திருந்தது. அம்மூலை தோட்டத்தின் கடைக்கோடியில் இருந்தது. அங்கே ஒரு சிறு பையன் காணப்பட்டான். அவன் சின்னஞ் சிறுவனானதால் மரத்தின் கிளைகளை அவனால் எட்டிப்பிடிக்க முடியவில்லை. ஆகவே அம்மரத்தைச் சுற்றிச் சுற்றி அலைந்து மிகவும் துக்கத்துடன் கண்ணீர் சொரிந்துகொண்டிருந்தான். ஐயோ பாவம்! அம்மரம் இன்னும்

மூடுபனியாலும் உறைபனியாலும் மூடப்பட்டிருந்தது. வடகாற்று அதன் உச்சியின்மீது மும்முரமாக அடித்து ஊளையிட்டது. "ஏறு குழந்தாய்" என்று சொல்லித் தன்னால் எவ்வளவு தூரம் தாழ்த்தமுடியுமோ அவ்வளவு தூரம் கிளைகளைத் தாழ்த்தியது அம்மரம். ஆனாலும் அச்சிறுவன் ஏறமுடியாதபடி மிகவும் பொடியனாயிருந்தான்.

வெளியே இதைப் பார்த்துக்கொண்டிருந்த அரக்கனின் உள்ளம் இளகியது. "என் அகந்தையின் குரூரந்தான் என்னே! வஸந்தன் இங்கு வரப் பிரியப்படாததன் காரணத்தை இப்போது அறிந்துகொண்டேன். இச்சிறுவனை மரத்தின் உச்சியில் ஏற்றப் போகிறேன். என் தோட்டம் இனிமேல் என்றும் சிறுவர்களின் விளையாடுமிடமாக இருக்கும்" என்றான். தான் இதுவரையில் செய்ததைக் குறித்து உண்மையாகவே அவன் மனம் நொந்தான்.

அவன் சந்தடிசெய்யாமல் மெத்தையிலிருந்து இறங்கி, மெல்லக் கதவைத் திறந்து தோட்டத்தினுள் சென்றான். சிறுவர்கள் அவனைப் பார்த்தவுடன் திகிலடைந்து ஓட்டம் பிடித்தனர். தோட்டத்தில் மீண்டும் குளிர்காலம் வந்துவிட்டது. ஆனால் கோடியிலிருந்த அச்சிறுவன் மட்டும் ஓடவில்லை. கண்களில் நீர் மல்கியிருந்தபடியால் அவன் அரக்கன் வருவதைப் பார்க்கவில்லை. அரக்கன் சந்தடி செய்யாமல் பின்புறமாக வந்து மெல்ல அவனைப் பிடித்து மரத்தின் மீது ஏற்றினான். உடனே அம்மரம் முழுமையும் பூத்தது. புள்ளினங்கள் அங்கே வந்து பாட ஆரம்பித்தன. சிறுவன் தன் இருகரங்களாலும் அரக்கனின் கழுத்தைக் கட்டி அணைத்துக் கொண்டான். மற்றச் சிறுவர்கள் அரக்கன் முன்போலப் பொல்லாதவனாக இல்லை என்பதைக் கண்டு ஓடிவந்து மீண்டும் தோட்டத்திற்குள் புகுந்தனர். அரக்கன் அவர்களைப் பார்த்து, "இத்தோட்டம் இது முதல் உங்களுடையதே" என்று சொல்லி ஒரு பெரிய கடப்பாரையைக் கொண்டுவந்து சுவரை இடித்துத் தள்ளினான். விளம்பரத்தைப் பிய்த்தெறிந்தான். நடுப்பகலில் ஊர் ஜனங்களெல்லாம் கடைக்குப் போகும்போது தாங்கள் இதுவரையில் பார்த்தே இராத அவ்வளவு நேர்த்தியான இத்தோட்டத்தில் அரக்கன் சிறுவர்களுடன் விளையாடுவதைக் கண்டு வியந்தனர்.

சிறுவர்கள் அங்கே பகற்பொழுதெல்லாம் விளையாடிவிட்டு மாலையில் அரக்கனிடம் விடைபெற்றுச் சென்றனர்.

"நான் மரத்தின் மீது ஒருவனை ஏற்றினேனே, உங்கள் தோழனான அப் பொடிப் பையன் எங்கே?" என்று அவர்களைக் கேட்டான் அரக்கன், அப்பையன் ஒருவனே அன்று அவனை அணைத்துக்

கொண்டான். ஆகவே மற்றவர்களைவிட அவன் மீதுதான் அவனுக்கு மிகப் பிரியம் இருந்தது.

“நாங்கள் ஒன்றையும் அறியோம். அவன் போய்விட்டான்” என்று சிறுவர்கள் பதிலளித்தனர்.

“நாளை இங்கே வரும்படி அவனிடம் சொல்லுங்கள்” என்றான் மீண்டும் அரக்கன். ஆனால் தாங்கள் அவனை முன்பின் பார்த்ததேயில்லை யென்றும் அவன் குடியிருக்குமிடம் தங்களுக்குத் தெரியாது என்றும் அவர்கள் கூறினர். அரக்கன் மிகவும் வருத்தப்பட்டான்.

ஒவ்வொருநாளும் மாலையில் பள்ளிக்கூடம் முடிந்த பிறகு, சிறுவர்கள் அரக்கனுடன் விளையாட வருவார்கள். ஆனால் அரக்கன் நேசித்த சிறுபயல் மட்டும் காணப்படவில்லை. எல்லாச் சிறுவர்களுக்கும் அரக்கன் நல்லமாதிரியாகவே இருந்தான். ஆனாலும் தன் முதல் நண்பனான அப்பொடியனை மீண்டும் காண விரும்பினான். அவனைப்பற்றியே மீண்டும் மீண்டும் பேசுவான்; “அவனைக் காண எனக்கு எவ்வளவு ஆசையாயிருக்கிறது!” என்பான்.

இவ்வண்ணமாகப் பல வருஷங்கள் கடந்தன. அரக்கன் மிகவும் மூப்படைந்து பலஹீனமுற்றான். இனியும் விளையாட முடியாமல், பெரிய நாற்காலியின்மீது உட்கார்ந்து கொண்டே சிறுவர்களின் விளையாட்டைக் கவனித்துத் தோட்டத்தின் அழகைப் புகழ்ந்துகொள்வான். “என்னிடம் மிகவும் அழகான மலர்கள் இருக்கின்றன. ஆனால் அவையெல்லாவற்றைக் காட்டிலும் இச்சிறுவர்களே மிகவும் அழகிய மலர்கள்” என்று சொல்லுவான்.

குளிர்காலத்தில் ஒரு நாள் காலையில் அவன் உடைதரித்துக் கொண்டிருக்கும்போது ஜன்னல் வழியாகப் பார்த்தான். இப்பொழுது அவன் குளிர்காலத்தை வெறுக்கவில்லை. ஏனெனில் அது வஸந்தன் உறங்கும் சமயமென்பதையும் மலர்கள் இளைப்பாறும் பருவமென்பதையும் அறிவான்.

திடீரென்று ஆச்சரியத்துடன் கண்களைத் துடைத்துக்கொண்டு உற்றுப் பார்த்தான். தோட்டத்தின் கடைக்கோடியிலுள்ள ஒரு மூலையில் மிக அழகிய வெண்மலர்களுடன் நிரம்பியிருந்த மரமொன்று தென்பட்டது. அதன் கிளைகள் தங்கமயமாயிருந்தன. அவைகளில் வெண்ணிறமான பழங்கள் தொங்கிக்கொண்டிருந்தன. மரத்தின் கீழே தான் மிகவும் நேசித்த பொடிப்பையனும் இருக்கக்கண்டான் அரக்கன்.

அடங்கா மகிழ்ச்சியோடு, அரக்கன் ஒரே ஓட்டமாக மெத்தையிலிருந்து இறங்கிவந்து தோட்டத்தினுள் நுழைந்தான்.

அதை வெகு வேகமாகக் கடந்து சிறுவனருகில் வந்து சேர்ந்தான். அவனுக்கு மிக அருகில் வந்தபோது அவனது உள்ளங்கையிலும், சிறு கால்களிலும் இரண்டு ஆணிகள் தைத்த அடையாளங்களைக் கண்டான் அரக்கன். உடனே கோபத்தினால் முகம் சிவந்து, "உன்னை யாரப்பா காயம் பண்ணத் துணிந்தது? எனக்கு யார் என்றும் மட்டும் சொல்லு. நான் என் பெரிய வாளைக் கொண்டு அவனை வெட்டிக் கொன்றுவிடுகிறேன்" என்றான் அரக்கன்.

"இல்லை. இவை அன்புத் தேவன் இழைத்த காயங்கள்" என்று பதிலளித்தான் சிறுவன்.

"நீ யாரப்பா?" என்று அரக்கன் அச்சிறுவனைப் பார்த்துக் கேட்டான். ஒரு விசித்திரமான பயம் அவன் உள்ளத்தில் குடி கொண்டது. அச்சிறுவன் முன்பாக அவன் மண்டியிட்டான்.

அச்சிறுவன் அரக்கனைப் பார்த்துப் புன்முறுவல் செய்து சொல்லலானான்: "ஒருநாள் நீ என்னை உன் தோட்டத்தில் விளையாட விட்டாயே. இன்றையதினம் நீ என் தோட்டத்திற்கு என்னுடன் வா. அதுதான் சுவர்க்கம்."

அன்றையதினம் பிற்பகலில் சிறுவர்கள் அத்தோட்டத்தினுள்ளே சென்றபோது, அரக்கன் அம்மரத்தின் கீழ் ஒரே படுக்கையாகப் படுத்திருந்ததையும், அவன் உடல் முழுதும் மலர்களால் மூடப்பட்டிருந்ததையும் கண்டனர்.



# ஆறுமாவல நட்பு

'அநுஷம்'

---

"எப்படிப் பாடுகிறூர் பார்த்தீர்களா? ரவை எவ்வளவு அநுயாஸமாக உதிருகின்றது!'' என்றூர் அவர்.

"ஆமாம், நன்றூகத்தான் பாடுகிறூர்; ஆனூலும் பாவம் மட்டு'' என்றேன் நான்.

"என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? ஒரு ராகத்தை எத்தனை நாழி பாடுகிறூர்? ஒரு பல்லவியில் எவ்வளவு ஸங்கதி போடுகிறூர்?''

"அதெல்லாம் சரிதான். காதுக்குமட்டும் சில இடங்களில் குளிர்ச்சியாக விழவில்லை.''

இப்படியாக எங்களுடைய சிநேகம் கிருஷ்ணகான ஸபையில் ஆரம்பமாயிற்று. 'கல்யாணக் கோர்ட்' திறக்கும் உத்தராயணம் அன்றைக்குத்தான் ஆரம்பம்; பொங்கற் புதுநாள். ஸ்ரீநிவாஸை யருக்கு ஸங்கீதவிமரிசனத் திறன் அவ்வளவு போதாதென்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். ஆனூலும் ஸங்கீதம் தெரிந்தவர் போலவும் மஹாரஸிகர் போலவும் காட்டிக்கொள்வார்.

எங்களுடைய பழக்கம், உத்தராயணத்தில் சூரியனுடைய உஷ்ணம் வரவர ஏறுகிறது போல ஏறியது. அடிக்கடி ஸங்கீத ஸபையிலும் பிராட்வேயிலும் கடற்கரையிலும் கோவிலிலும் நாங்கள் சந்தித்துவந்தோம்.

இவ்வாறு பழகிவந்ததனூல் அவரைப்பற்றி நானும் என்னைப் பற்றி அவரும் தெரிந்துகொண்டோம். ஸர்வே ஆபீஸில் 150ரூபாய் சம்பளத்தில் அவர் இருக்கிறூர். மட்டுக்குடித்தனமாக இருந்து ஏதோ இரண்டு காசு சேர்த்து இப்பொழுது பெரியகுடித்தனம் நடத்துகிறூர். பெரிய பெரிய மனுஷ்யர்களெல்லாம் அவருக்குப் பழக்கம். அவருக்கு 13 வயசுக்குமேலே 14 வயசுக்குள்ளே ஒரு பெண் இருக்கிறூள். அவள் ஸங்கீதங்கூடக் கற்றுக் கொள்கிறூள். அவர் அப்பட்டமான வடதேசத்து வடமர். கோத்திரம் கௌசிக கோத்திரம்—இவ்வளவு விஷயங்கள் நான் அவரிடமிருந்து சேகரித்தவை. இவைகளிற் பெரும்பாலானவை நான் வேண்டாமலே அவராகத் தெரிவித்துக் கொண்டவை,

ஸ்ரீநிவாஸையர் பலவிதமாகக் குறுக்குக்கேள்விகள் போட்டு என்னிடமிருந்து தெரிந்துகொண்ட விஷயங்கள் பலவுண்டு. அவைகளில் முக்கியமானவை வருமாறு:

'நான் ஹாம்டன் கம்பெனியின் மானேஜர். எனக்கு ரூ 200 சம்பளம். என்னுடைய 20 வயசுப்பிள்ளை சுந்தரேசன் பி. ஏ. பரீக்ஷையில் தேர்ச்சிபெற்றுவிட்டுச் சும்மா இருக்கிறான். அநேகமாக அவனுக்கு எங்களுடைய கம்பெனியிலேயே வேலையாகிவிடும். நானும் வடமப் பிராமணன்; பாரத்வாஜ கோத்திரம்.'

ஒருநாள் அவர் வற்புறுத்தி என்னைத் தம்முடைய வீட்டுக்கு வரவேண்டுமென்று தொந்தரவு பண்ணினார்; நான் போயிருந்தேன். பிரமாதமாக உபசாரமெல்லாம் செய்தார். தம்முடைய பெண்ணைக் கூப்பிட்டு அன்று பாடச் சொன்னார்; அவளுக்கு அன்று விசேஷமாக அலங்காரம் செய்திருந்தார்கள்.

அவள் பாடினாள்.

"எப்படியிருக்கிறது பாட்டு?" என்று என்னைக் கேட்டார்.

"தேவலை" என்று சொன்னேன்.

"என்ன ஸார் பண்ணுகிறது? நல்ல பாட்டுவாத்தியார் கிடைப்பதில்லை. இருக்கிறவர்களைக் கொண்டு சரிப்படுத்த வேண்டியிருக்கிறது. இந்தக் குட்டிக்கு ஸங்கீதமென்றால் பைத்தியம். ஸதா பாட்டுத்தான்."

அப்படி ஸங்கீதப்பித்துடையவளாக அந்தப்பெண் எனக்குத் தோற்றவில்லை. யாரோ மூன்றாந்தரத்துப் பாட்டுவாத்தியாரோ அல்லது வீட்டிலுள்ள பெண்களோ சொல்லிக் கொடுத்திருக்க வேண்டும். அபஸ்வரங்கள் அபரிமிதமாக அவள் பாடும்போது இருந்தன. ஆனாலும் அதை ஸ்பஷ்டமாக நான் சொல்லலாமா?

"ஒன்று உங்களைக் கேட்கலாமென்று இருந்தேன்: உங்களுக்கு ஸங்கீதத்தில் அதிக விருப்பம் இருக்கிறதே. உங்கள் வீட்டில் எல்லோருக்கும் அப்படித்தானோ?"

"ஆமாம்; என்னுடைய பையன் எல்லா ஸங்கீத ஸபைகளிலும் அங்கத்தினனாக இருக்கிறான்."

"அப்படிச் சொல்லுங்கள். ஆமாம். இந்தக்காலத்தில் காலேஜ் பிள்ளைகள் ஸங்கீதப் போட்டிகளில் பரிசுபெறுகிறார்கள். சிலபேர்கள் வித்துவான்களைக் காட்டிலும் அருமையாகப் பாடுகிறார்கள்."

"உங்கள் பெண்ணுக்கு யார் பாட்டுச் சொல்லித் தந்தார்?"

"ஆங்! என்னவோ சொல்லித் தந்தான். எங்கள் ஊர் நட்டுவன் ஒருத்தன் இங்கே கொஞ்சகாலம் வந்திருந்தான். அவனைச் சொல்

வித்தாச் சொன்னேன். உங்களுக்கு யாராவது நல்ல வாத்தியா ராகத் தெரிந்தால் சொல்லுங்களேன்.''

"அப்படியே செய்கிறேன்.''

எனக்குச் சில ஸங்கீதவித்துவான்களின் பழக்கம் இருந்தது. அவர்களில் ஸங்கீத 'ட்யூஷன்' சொல்லிக்கொடுத்து ஜீவனம் செய் யும் ஒருவரை ஸ்ரீநிவாஸையர் வீட்டுக்கு அனுப்பினேன். மறு முறை சந்தித்தபோது அவர் என்னை மிகவும் பாராட்டினார்.

"என்ன இருந்தாலும் தெரிந்தவர்களைக்கொண்டு ஒரு காரி யம் பண்ணினால் அதன் சிலாக்கியமே வேறுதான்'' என்றார் அவர்.

"எதை நினைத்துக்கொண்டு இதைச் சொல்கிறீர்கள்?'' என்று நான் கேட்டேன்.

"இத்தனை வருஷகாலமாக ஒரு ஸங்கீத வாத்தியாருக்காக நான் பட்ட சிரமம் கணக்குவழக்கில்லை. வெறும் டம் பாசாரிகளாக இருக்கிறார்கள்; சரக்கு இருப்பதில்லை. சரக்கு இருந்தால் நடவடிக்கையிலே கோணல். பாருங்கள்: பக்கத்து வீட்டுப் பெண் ஒருத்திக்கு ஒரு ஸங்கீத வித்வான் பாட்டுச் சொல்லிக் கொடுத்துக்கொண்டு வந்தான். என்னவோ பொடி போட்டு மயக்கி அந்தப் பெண்ணைச் சினிமாவில் சேர்ந்துகொள் ளும்படி பண்ணிவிட்டான். யாரையும் நம்பமுடியவில்லை. இந்தச் சங்கடம் உங்களால் நிவர்த்தியாயிற்று.''

அவர் மேலும் உரைத்த புகழ்மாலைகளுக்கு அளவேயில்லை.

மற்றொரு நாள் ஸ்ரீநிவாஸையரைக் கடற்கரையிலே சந்தித் தேன்.

"நம்ம குட்டிக்கு இந்தத் தடவை கல்யாணம் செய்துவிட லாமென்று யோசனை. உங்கள் பிள்ளை ஜாதகத்தைத் தாருங்கள்; பார்க்கலாம்'' என்றார். இவ்வளவு நாள் என்னிடம் ஆதரவு காட் டிப் பேசியதற்குக் காரணமும் அவர் கருத்தும் முன்பே நான் ஊகித்திருந்தேன்; இப்பொழுது அவை நிச்சயமாகத் தெரிந்தன.

"அதற்கென்ன, பார்க்கலாம்'' என்று சொன்னேன்.

நான் அனுப்பிய ஸங்கீத வித்வானுக்கு மாதம் முதல்தேதி யிலேயே சம்பளம் வந்துவிடும். அவ்வித்வானிடம் அவர் சிஷ்யை யைப்பற்றி விசாரித்தேன்.

"என்னவோ கடனுக்குச் சொல்லித் தருகிறேன். மாதம் மாதம் தவறாமல் சம்பளம் வந்துவிடுகிறது. காபி, டிபன் முதலிய உபசாரங்களுக்குக் குறைவில்லை'' என்றார் அவர்.

நான் என் குமாரனது ஜாதகத்தை அனுப்பவேயில்லை. ஸ்ரீநிவாஸையர் கண்ணில் படாமலே இருந்துவந்தேன். அவர் பாட்டு வாத்தியாரை விசாரித்துப் பார்த்தார். "அவருக்கு எவ்வளவோ வேலை" என்று வாத்தியார் சொல்லிவிட்டார்.

சித்திரை மாதம் முடிவடைந்தது. வைகாசி மாதம் ஆரம்பமாயிற்று. ஸ்ரீநிவாஸையர் அடிக்கடி எங்கள் வீட்டிற்கே வரலானார். ஜாதகம் கொடுக்கும்படி கேட்பார். நான் ஏதாவது சாக்குச் சொல்லிவிடுவேன். கடைசியாய் அவருக்கு மனம் புளித்துவிட்டது.

ஆனி மாதம் இரண்டாம் வாரம்; ஒருநாள் பாட்டு வாத்தியார் சிறிது வருத்தத்தோடு வந்து நின்றார்.

"என்ன சமாசாரம்?" என்று நான் கேட்டேன்.

"'பாட்டுப் போதும்; நீங்கள் நாளைமுதல் நின்றுகொள்ளுங்கள்' என்று சொல்லிவிட்டார் உங்கள் நண்பர்" என்றார்.

நான் சிறிது யோசித்தேன். "ஸரி; நான் ஒரு ஜாதகம் தருகிறேன். அதை நாளைக்கு அவரிடம் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு வாருங்கள்" என்று சொல்லி என் பிள்ளையின் ஜாதகத்தைக் கொடுத்தேன்.

மறுநாள் நான் எதிர்பார்த்தபடியே வாத்தியார் மிகவும் குதூகலத்தோடு வந்தார்; "நீங்கள் ஏதோ மந்திரம் பண்ணியிருக்கிறீர்கள்! நான் கொடுத்த ஜாதகத்தை அவர் பார்த்தார். கண்ணில் ஒற்றிக்கொண்டார். அப்புறம் திடீரென்று என்னைப் பார்த்து, 'ராத்திரியெல்லாம் யோசித்துப் பார்த்தேன். இந்தக் காலத்துக் குழந்தைகளுக்கு எவ்வளவுக் கெவ்வளவு பாட்டுச் சொல்லிக் கொடுக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நல்லதென்று தோன்றியது. எங்கள் வீட்டிலும் அப்படித்தான் அபிப்பிராயப்பட்டார்கள். ஆகையால் பழையபடியே நீங்கள் வாருங்கள். இந்த இரண்டு நாளும் பாடமில்லாமற்போனாலும் பரவாயில்லை. குட்டிக்கு லீவு விட்டதுபோல் ஆயிற்று' என்று சொன்னார். எனக்கு ஆச்சரியமாக இருந்தது" என்றார்.

மறுபடி வாத்தியார் தம் சிஷ்யைக்குப் பாடஞ் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினார். இரண்டுநாள் கழித்து ஸ்ரீநிவாஸையர் எங்கள் வீட்டுக்கு வந்தார். "முதல்தரமான பொருத்தம். இதைக்காட்டிலும் வேறு ஜோடியே இணையாதென்று ஜோஸ்யர் சொல்லிவிட்டார்" என்றார். அவர் தெளிவாகப் பேசாவிட்டாலும் எனக்கு விஷயம் விளங்கிவிட்டது.

"நானும் பார்க்கிறேன்" என்று சுருக்கமாக விடை கூறி அவரை அனுப்பிவிட்டேன். என் குமாரனுக்கு வேறு ஓர் இடத்தில் விவாகத்திற்கு ஏற்பாடு ஆகிக்கொண்டிருந்தது.

ஆனி மாதம் கடைசிவாரம், ஸ்ரீநிவாஸையர் எங்கள் வீட்டிற்கு வந்தார். அப்பொழுதுதான் என் பிள்ளைக்குப் பெண் கொடுப்பதாக ஏற்பாடுகளெல்லாம் ஆகி முகூர்த்தம் எப்போது வைத்துக் கொள்ளலாமென்று கேட்பதற்கு ஸம்பந்தியாக வரப்போகிறவரும் வந்தார். அச்சமயம் ஸ்ரீநிவாஸையர், "என்ன பார்த்தீர்களா?" என்று உத்ஸாகத்தோடு கேட்டுக்கொண்டே வந்தார்.

"உட்காருங்கள். இவர்களைத் தெரியுமோ? இவர்கள் எனக்கு ஸம்பந்தியாக வரப்போகிறவர்கள். முகூர்த்தம் வைப்பதற்காக வந்திருக்கிறார்கள். நீங்கள் வந்து விவாஹத்தை நடத்திக் கொடுக்க வேண்டும்" என்று ஸ்ரீநிவாஸையரைப் பார்த்துக் கூறினேன். மேலே பேச்சை வளர்த்தாமல் இருக்க வேறு வழியில்லை.

"இவர்கள் ஸர்வே ஆபீஸில் பெரிய வேலையில் இருக்கிறார்கள். உத்தமமான குணம். ஸங்கீதத்தில் மஹாரஸிகர்கள்" என்று ஸம்பந்திக்கு நண்பரை அறிமுகம் செய்துவைத்தேன்.

ஸ்ரீநிவாஸையர் முகத்தை அப்போது பார்க்கவேண்டுமே!

மறுநாள் முதல் பாட்டு வாத்தியார் நிறுத்தப்பட்டார்.

*　　　　*

அன்று ஆடிமாதம் முதல் தேதி; தக்ஷிணாயனம் ஆரம்பம். கிருஷ்ணகான ஸபைக்குப் போயிருந்தேன். ஸ்ரீநிவாஸையர் அங்கே உட்கார்ந்திருந்தார். 'ஏன் எங்கள் வீட்டுக் கல்யாணத்துக்கு வரவில்லை?' என்று கேட்கலாமென்று அவரை அணுகினேன். அவர் என்னைக் கண்டவுடன் பேசாமல் எழுந்து நெடுந்தூரத்தில் உள்ள ஓர் ஆசனத்திற் போய் உட்கார்ந்துகொண்டார்.

உத்தராயண ஆரம்பத்தில் ஏற்பட்ட எங்கள் நட்பு தக்ஷிணாயன ஆரம்பத்தில் அறுந்துபோயிற்று.



# உத்தமப் பிராம்மணி

— ஒரு சிறு நாடகம் —

'ஸேனு'

## காட்சி 1

இடம்: வசக்னு ரிஷியின் ஆசிரமத்திற்கு வெளியில்.

நேரம்: உதயவேளை.

[வெளியே ஆசிரமத்தைச் சேர்ந்த மான்குட்டிகளும் பசுங்கன்றுகளும் துள்ளிக் குதித்து விளையாடுகின்றன. ஆசிரமத்தினுள்ளிருந்து வேதகோஷம் கேட்கிறது.]

"அஸதோ மா ஸத்கமய
தமஸோ மா ஜ்யோதிர்கமய
ம்ருத்யோர் மா அம்ருதம் கமய"

[சற்று நேரங்கழித்துச் செம்பட்டைத் தலைமயிரையுடைய ஆசிரமத்துப் பாலகர்கள் ஒவ்வொருவராக வெளியே வருகின்றனர்.]

முதல் சிறுவன்: (தன் ஸஹபாடி ஒருவனைப் பார்த்து) ஆத்ரேய! இன்றைய வேதபாடம் சற்றுக் கடினமாயிருக்கவில்லை?

ஆத்ரேயன்: ஆமாம், வாஜபேய! நம் குருதேவர் இன்றைய பாடத்தைத் தெளிவாகச் சொல்லிக் கொடுத்தும் எனக்கு இன்னும் சில ஸந்தேகங்கள் நீங்கினபாடில்லை.

வாஜபேயன்: எனக்கும் அப்படியே. ஆனால் குருதேவருடைய புத்திரி கார்கி மகா புத்தி தீக்ஷண்யம் வாய்ந்தவளாயிருக்கிறாள். இன்று அவள் பாடஸாரத்தைக் கிரஹித்துக்கொண்டு அவர் கேட்ட கேள்விகளுக்கு மடமடவென்று பதில் அளித்ததைப் பார்த்தாயா?

ஆத்ரேயன்: பார்த்தேன். இத்தனைக்கும் அவளுக்குத் தனியாக அவர் ஒன்றும் கற்றுக்கொடுத்துவிடவில்லை. நம்மோடு ஒருத்தியாகத்தான் அவள் படிக்கிறாள். பெண்பிள்ளைக்கு இவ்வளவு புத்தி கூர்மை எங்கிருந்து வந்தது? நமக்கு இல்லையே!

வாஜபேயன்: அடே! பெண்பிள்ளைகளென்றால் எந்த விஷயத்திலடா குறைந்துவிட்டார்கள்? இன்றைய பாட முடிவில் குருதேவர் சொல்லித் தந்த வரிகளை நீ காதால் கேட்டிருந்தும் இந்த மடமை இருள் உன்னைவிட்டு நீங்கவில்லையே! 'அஸத்தினின்று என்னை மீட்டு ஸத்தாக்குவாய்; இருளினின்று என்னை

ஒளிக்குக் கொண்டுவருவாய்; மரணத்தைத் தடுத்து எனக்குச் சாகா வரம் அளிப்பாய்' என்று அவர் சொல்லவில்லையா? நம்மைப் படைத்த அதே பகவான்தான் அவர்களையும் சிருஷ்டித்தார். நம்மைவிட வயசில் சிறியவள் இவ்விதம் தேர்ச்சி பெற்றிருப்பதைப் பார்த்து நாம் அவளை மெச்சிப் போற்றவேண்டும்; அவளைப்போல் ஆகப் பிரயத்தனப்படவேண்டும். அதைவிட்டுப் பொறுமைப் பட்டால் ஒன்றும் நிறைவேறாது.

ஆத்ரேயன்: நான் அப்படியெல்லாம் எண்ணவில்லையடா. அவளுடைய புத்திசாலித்தனத்தைக் கண்டுதான் ஆச்சரியப்பட்டேன்; வருகிறாயா?

வாஜபேயன்: எங்கே? ஓ! ஹோமத்துக்கு ஸமித்து, தர்ப்பை முதலியன சேகரிப்பதற்காகவா? சரி, போகலாம் வா; பசு மாடுகளையும் ஓட்டிக்கொண்டு போகலாம்.

[எல்லாப் பாலகர்களும் பசுமாடுகளை ஓட்டிக்கொண்டு அருகிலுள்ள வனத்தை நோக்கிச் செல்லுகின்றனர்.]

## காட்சி 2

இடம்: அதே ஆசிரமத்தின் உட்புறம்.
நேரம்: மத்தியான்னம்.

[வசக்னு ரிஷி தனியாக ஏதோ ஏட்டுச் சுவடிகளைப் புரட்டிப் பார்த்த வண்ணம் மான்தோல் ஆசனத்தில் அமர்ந்திருக்கிறார். அச்சமயம் ஆத்ரேயன் அங்கே வருகிறான்.]

ஆத்ரேயன்: நமஸ்தே. (அவரை வணங்கி வினயத்துடன்) குருதேவ! மஹர்ஷி யாக்ஞவல்க்யர் ஆசிரமத்தில் எழுந்தருளியிருக்கிறார்.

வசக்னு: (தலைநிமிர்ந்து வியப்புடன் தமக்குள்ளேயே) ஏழையின் ஆசிரமத்துக்கு விதேஹ ராஜபுரோஹிதரும் ரிஷி ச்ரேஷ்டருமான யாக்ஞவல்க்யர் வருவதற்குக் காரணம் என்ன? பாக்கியம்! பாக்கியம்! (ஆசனத்தை விட்டு எழுந்திருக்கிறார்.)

[யாக்ஞவல்க்யர் உள்ளே வருகிறார்.]

வசக்னு: (அவரை நமஸ்கரித்து) வந்தே மஹர்ஷிம்! அடியேன் குடிலுக்குத் தாங்கள் எழுந்தருளியிருப்பதற்கு நான் பூர்வஜன்மத்தில் என்ன புண்ணியம் செய்தேனோ! (ஓர் உயர்ந்த மான்தோல் ஆசனத்தில் யாக்ஞவல்க்யரை அமரச் செய்கிறார்.)

யாக்ஞ: (வசக்னுவை வணங்கி ஆசனத்தில் அமர்ந்து) நான் என்ன அப்படிப் பிரஸித்தனா, தங்கள் புத்திரியைவிட?

வசக்னு: (ஆச்சரியத்துடன்) அடியேன் புத்திரியா? அச் சிறு பெண்ணா?

யாக்ஞ: ஆமாம், மஹர்ஷே! அவளைப்பற்றிய புகழ் விதேஹ தேசம் வரையில் பரவியிருக்கிறது. தங்களுடைய அற்புதக் குழந்தையைப் பார்க்கவே இங்கே வந்தேன்.

வசக்னு: (பொங்கும் ஆனந்தத்தை அடக்கிக்கொண்டு) இதோ அவளைக் கூப்பிடுகிறேன். (உட்புறமாகச் சென்று) அம்மா, கார்கி! இப்படி வா!

[வசக்னுவின் மகளான வாசக்னவி என்னும் கார்கி அங்கே வந்து யாக்ஞவல்க்யரை நமஸ்கரிக்கிறாள்.]

யாக்ஞ: சிராயுஷ்மதீ பவ! (வசக்னுவை நோக்கி) மஹர்ஷே! தங்கள் ஆசிரமத்திலிருந்து விதேஹத்திற்கு வந்திருந்த பிராம்மண சிரேஷ்டர்கள் பலரிடமிருந்து இவள் தர்க்கத்தில் எல்லோரையும் வென்றுவிடுகிறாள் என்று கேள்விப்பட்டேன். முதலில் இப்பெண் 'அடங்காப் பிடாரி'யோ வென்று நினைத்தேன். ஆனால் பெண்மைக்குரிய அடக்க குணம் இவளுக்கு இருக்கிறது என்று அவர்கள் தெரிவித்ததும், ஸாக்ஷாத் ஸரஸ்வதியே அவதரித்திருக்கவேண்டுமென்று எண்ணி, இவளை நேரில் காணவந்தேன். வாஸ்தவத்தில் வாக்தேவி என்று சொல்லும்படியாகவே இருக்கிறாள். (கார்கியைப் பார்த்து) அம்மா! உன்னைச் சில கேள்விகள் கேட்கிறேன். பதில் சொல்வாயா?

கார்கி: (வணக்கத்துடன்) அப்படியே கேட்டருளுங்கள், மஹர்ஷே!

[யாக்ஞவல்க்யர் சில கடினமான வேதாந்தப்பிரச்னைகளை வினவ அவற்றிற்குச் சரியான உத்தரம் அளிக்கிறாள் கார்கி.]

யாக்ஞ: (ஸந்துஷ்டியுடன்) அம்மா, கார்கி! வசக்னு மஹர்ஷியின் குலவிளக்காகத் திகழப் போகிறாய் நீ! இவ்வளவு ஞானம் படைத்திருந்தும் உனக்குச் சிறிதும் வித்யாகர்வம் இராதிருப்பதைக் கண்டு அதிசயிக்கிறேன். தீர்க்க ஸுமங்கலீ பவ! (மறுபடியும் அவளை ஆசீர்வதிக்கிறார்.)

[தூரத்திலிருந்து ஆத்ரேயன் ஆச்சரியபரவசனாய் இவர்கள் சம்பாஷணையைக் கவனித்துக் கொண்டிருக்கிறான். வசக்னு ஆனந்தமேலீட்டினால் மெய்ம்மறந்து நிற்கிறார்.]

## காட்சி 3

இடம்: விதேஹ தேசத்தில் ஜனக மஹாராஜனின் அரண்மனை.
நேரம்: சாயங்காலம்.

[பாஞ்சாலம், குரு முதலிய பல்வேறு தேசங்களிலிருந்து வேதியர் பலர் அங்கே நடக்கும் ஒரு பெரிய யக்ஞத்திற்கு வந்து குழுமியிருக்கின்றனர், ஜனகன், யாக்ஞவல்க்யர், கார்கி, அச்வலர், ஆர்த்தபாகர்,

கஹோலர் முதலான பல முக்கியஸ்தர்களும் அங்கு இருக்கின்றனர். யக்ஞம் முடிவுறும் சமயம். ஆயிரம் கறவைப் பசுக்கள் யாகசாலையினெதிரே கொட்டகை ஒன்றில் நிறுத்தப்பட்டிருக்கின்றன. அவற்றின் கொம்பு களில் தங்கக் கட்டிகள் வைக்கப்பட்டிருக்கின்றன.]

ஜனகன்: (அந்தணர்களுக்குப் பூரி தக்ஷிணை கொடுத்துவிட்டு) ஹே பிராம்மணர்களே! உங்களுள் சிரேஷ்டமானவர் எவரோ அவருக்கு இந்தப் பசுமாடுகளைத் தானம் செய்துவிடுகிறேன். இந்தாருங்கள்.

ஒரு பிராம்மணர்: (தமக்குள்) நாம் பிராம்மணோத்தமர் என்று எப்படிச் சொல்லிக்கொள்ள முடியும்? ஆதியில் நாம் பிரம்மசர்ய விரதத்தைச் சரிவர அநுஷ்டிக்கவில்லையே.

மற்றொருவர்: (தமக்குள்ளாகவே) நாம் இதற்கு அருகரல்ல. இவற்றை வாங்கிக்கொள்வது நம் மனச்சாக்ஷிக்கு விரோத மாயிற்றே. எதற்கும் மௌனமாக இருந்து என்ன நடக்கிறதென்று கவனிப்போம்.

[இம்மாதிரியே மற்றப் பிராம்மணர்களும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தபடி பேசாமல் உட்கார்ந்திருக்கின்றனர்.]

யாக்ஞவல்க்யர்: (தம் சிஷ்யர்களுள் ஒருவனைப் பார்த்து) அடே வாசஸ்பதி! அந்தப் பசுக்களை நமது ஆசிரமத்திற்கு ஓட்டிக் கொண்டு போ.

வாசஸ்பதி: அப்படியே! (பசுக்களை ஓட்டிக்கொண்டு வெளியே செல்கிறான்.)

சில பிராம்மணர்கள்: (பொறுமையுடன் முணுமுணுத்துக் கொண்டே) இந்த அதிக்ரமம் அடுக்காது! எப்படி இவர் தாம் மட்டும் பிரம்மச்ரேஷ்டரென்று சொல்லிக்கொள்வார்?

மற்றும் பலர்: (குரோதத்துடன் உரக்க) இனிமேல் நாம் சும்மா இருக்கக்கூடாது. ஓய் எழுந்திரும்; அச்வலரே! விடாதேயும் அவரை.

அச்வலர்: (எழுந்து கோபத்துடன் யாக்ஞவல்க்யரை நோக்கி) தாங்கள் ஒருவர் மட்டுமே பிரம்மச்ரேஷ்டர் என்று எண்ணிக் கொண்டிருக்கிறீரோ?

யாக்ஞ: (நிதானமாக) நான் அவ்விதம் சொல்லவில்லையே! நீங் களெல்லோரும் பிராம்மண ச்ரேஷ்டர்களே; அதில் யாதொரு ஸந்தேகமும் இல்லை. (சிரித்தவாறே) ஆனால் உங்கள் எல்லோரையும் விட எனக்கு அந்தப் பசுக்களின்மேல் அதிக ஆசை இருந்தது. அதனால்தான் அவற்றை எடுத்துக்கொண்டேன்.

அச்வலர்: (யாக்ஞவல்க்யர் தங்களை ஏளனம் செய்கிறார் என்பதை அறிந்து அதிகக் கோபத்துடன்) அப்படியானால் தர்க்கம் செய்வோம் வாரும். அதில் யார் ஜயிக்கிறாரோ அவரைச் சேரட்டும், இந்தப் பசுமாடுகள்.

யாக்ஞ: அப்படியே!

[அச்வலர் யாக்ஞவல்க்யரை யக்ஞஸம்பந்தமான கேள்விகள் பல கேட்கிறார். யாக்ஞவல்க்யர் அவற்றிற்குச் சரியான பதில் அளித்து அச்வலரைத் தோல்வியுறச் செய்கிறார். அதற்குமேல் ஒன்றும் பேசாமல் அச்வலர் தம்மிடத்தில் போய் உட்கார்ந்துவிடுகிறார்.]

ஆர்த்தபாகர், கஹோலர் முதலியவர்கள்: (ஆக்ரோஷத்துடன்) நாங்கள் ஒரு கை பார்க்கிறோம்!

யாக்ஞ: (புன்னகையுடன்) ஆஹா! வரலாம்.

[அவர்களும் தர்க்கத்தில் தோற்றுத் தத்தம் இடங்களில் போய் அமர்ந்து முகவாட்டத்துடன் இருக்கின்றனர்.]

கார்கி: (தன் இடத்தை விட்டு எழுந்து யாக்ஞவல்க்யரை நோக்கி) மஹர்ஷே! அடியேனுடைய ஸந்தேகங்கள் சிலவற்றை நிவர்த்திக்க வேண்டும்.

யாக்ஞ: கேள், அம்மா!

மற்றப் பிராம்மணர்கள்: (வியப்புடன்) ஆஹா! வாசக்னவியா? தர்க்கசிரோமணியாயிற்றே இவள்! (குதூகலத்துடன்) யாஜ்ஞவல்க்யர் பாடு கஷ்டந்தான்!

கார்கி: இந்தப் பூமியானது ஜலத்தின்மீது இருக்கிறது; பூமியை வெட்டினால் ஜலம் வருகிறது. ஆகையால் ஜலத்திலிருந்தே பூமி உண்டாயிருக்க வேண்டும். ஆனால் இந்த ஜலம் எதிலிருந்து வந்தது?

யாக்ஞ: வாயுவினின்று.

கார்கி: ஏன் அப்படி?

யாக்ஞ: ஏனென்றால், நீரைவிடக் காற்று லேசானது; விரைவில் பரவும் தன்மையுள்ளது.

கார்கி: அது சரி. அந்த வாயு எங்கிருந்து வருகிறது?

யாக்ஞ: வெட்ட வெளியிலிருந்து — ஆகாசத்திலிருந்து.

கார்கி: ஆகாசம் எங்கு இருக்கிறது?

யாக்ஞ: கந்தர்வலோகங்களில்.

கார்கி: இவை எங்கிருக்கின்றன?

யாக்ஞ: இவை ஸூர்யமண்டலங்கள் இருக்கும் வெளியிலே; இந்த ஆதித்ய லோகங்கள் சந்திரலோகங்களிலும், இவை தேவலோகங்களிலும், இவை பிரும்மலோகங்களிலும் இருக்கின்றன.

கார்கி: இந்தப் பிரும்மலோகம் எங்கே இருக்கிறது?

யாக்ஞ: (அலுத்துப்போய்த் தமோற்றமும் சிறிது சினமும் அடைந்தவராய்) அம்மா, இனிமேல் கேட்காதே; நிறுத்திவிடு இதோடு! எல்லாம் பிரும்மலோகத்திலிருக்கும் பரப்பிரும்மத்தையே ஆதாரமாகக் கொண்டு இருக்கின்றன. இதற்குமேல் என்னால் சொல்ல முடியாது!

பிராம்மணர்கள்: (ஸந்தோஷ ஆரவாரம் செய்து) ஜய கார்கி! யாக்ஞவல்க்யர் தோற்றுவிட்டார். நியாயரீதியாகவும் அனுமான ஞானத்துடனும் மஹர்ஷியால் பதில் சொல்ல முடியவில்லை.

கார்கி: (அவர்களைப் பார்த்து) நீங்கள் நினைப்பது தவறு. இவர் சொன்னது சரியே! அதற்கு மேல் ஸர்வேசுவரனாலும் பதில் சொல்ல முடியாது; கேள்வி கேட்பதும் தகுதியல்ல. இவரை ஜயிப்பவர் எவரும் இங்கே இல்லை. எல்லோரும் இவரை நமஸ்கரியுங்கள்! (தான் முன்னதாக யாக்ஞவல்க்யரை வணங்குகிறாள்.)

யாக்ஞ: (அவளை ஆசீர்வதித்தவண்ணம்) குழந்தாய்! உன்னுடைய பெருந்தன்மையைக் கண்டு நாங்களெல்லோரும் வெட்கித் தலை குனியவேண்டும். நீயே இங்கிருப்பவருள் மிக ச்ரேஷ்டமானவள். நான் எடுத்துக்கொண்ட பசுமாடுகளும் உனக்கே உரியன.

ஜனகன், பிராம்மணர்கள் அனைவரும்: (திருப்தியுடன்) ததாஸ்து!

(திரை)



# மின்னக்கலை

கு. ப. ராஜகோபாலன், பி. ஏ.

அன்று வழக்கத்திற்கு விரோதமாகச் சோலை புல்கட்டுக் கொண்டு வந்தான்.

"என்ன, சோலை, உன் ஊட்டுக்காரிக்கு உடம்பு ஏதாவது சுகமில்லையா?" என்று அவனைக் கேட்டேன்.

"அதெல்லாம் ஒண்ணும் இல்லிங்கப்பா!"* என்று சொல்லி ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்துவிட்டு, சோலை நெளிந்துகொண்டு போய்விட்டான்.

ஆனால் என் மனது சமாதானப்படவில்லை. உயிரில் ஒரு விதமான ருசியும் இல்லாமற்போன எனக்குத் தினம் சாயங்காலம் மின்னக்கலையின் அழகான முகத்தைப் பார்ப்பது ஓர் ஆறுதலாக இருந்தது. ஒருவிதமான தாங்கமுடியாத ஏமாற்றத்துடன் வாசலில் போட்டிருந்த கட்டிலில் போய்ப் படுத்துக்கொண்டேன்.

"ராத்திரி கரூர்லெ வெள்ளி ரதமாம். நான் பாத்ததே இல்லே. இப்பவே சாப்புட்டேட்டா ஆறுமணி பஸ்ஸுக்குப் போகலாம்" என்று என் மனைவி வாசல் திண்ணையில் நின்றுகொண்டு சொன்னாள்.

"நீ வேண்டுமானால் யாருடனாவது போய் விட்டு வா; நான் வரவில்லை. எனக்கென்னவோ மாதிரி இருக்கு" என்றேன்.

"ஆமாம்! ஒரு நா மின்னக்கலெயெப் பாக்காட்டா அப்படித் தான் இருக்கும்!" என்று என் மனைவி எரிச்சலுடன் சொன்னாள்.

"தாறுமாறாகப் பேசாதே! உன் இஷ்டப்படியே நீ செய், என் இஷ்டப்படி நான் செய்கிறேன்."

"வாண்டாம், வாண்டாம்! நீங்க இல்லாமெ எனக்கென்ன வச்சிருக்கு கோவில்லே!" என்று சொல்லிவிட்டு என் மனைவி உள்ளே போய்விட்டாள்.

* * *

அரிசி மில்லும் பஸ்ஸும் வந்து கொடுமுடியின் அழகையே குலைத்து விட்டன. அதற்குமுன் அந்த ஊர், அமைப்பும் அடக்கமுமாய் அசல் கிராமாந்தரமாக இருந்தது.

காவேரிக்கரையில் ஊர். சுபிக்ஷமான பெரிய அக்கிரகாரம்; வளப்பம் கொண்ட நல்ல குடியானத் தெருக்கள்; தெம்பான வியாபாரிகள். சுற்றிலும் பயிர்பச்சை, தோட்டம் துரவு,

---

*கௌண்டர்கள் 'ஆமப்பா!', 'வரேனப்பா' என்று வார்த்தைகளுக்கு 'அப்பா' சேர்த்தே சொல்வது வழக்கம்.

மாடு கன்று நிறைந்த ஊர். சதா உயிர் ததும்பிக் கொண்டிருக்கும் காவேரிக்கரை யொன்றே போதும்.

அதுவும் காலைவேளையில் பார்க்கவேண்டும். குடியானப் பெண்கள் காப்புகள் ஒலிக்கக் கையை வீசிக்கொண்டு காட்டுக்குப் போகும் காட்சி மனதைக் கவரும். அவர்களுடைய நடையிலேயே ஒரு சுறுசுறுப்பும் ஊக்கமும் இருக்கும். சோம்பலற்றவர்கள். நவநாகரிக முறைகள் இன்னும் அந்தக் கௌண்ட ஜாதியை அவ்வளவாகப் பாதிக்கவில்லை. அப் பெண்கள் தலைமயிரை நன்றாகச் சீவி முடிந்திருப்பார்கள். சில பிராந்தியங்களில் செய்வதுபோல, மயிரை அள்ளிச் செருகுவதில்லை. இளம் பெண்கள் கூட ரவிக்கை அணிவது கிடையாது. செட்டிநாட்டுப் பெண்கள்போலச் சேலை கட்டுவார்கள்; ஆனால் உடம்பைச் சுற்றினது போக மிகுந்த தலைப்பை இறக்கி இடுப்பில் செருகிக் கொள்ளுவார்கள் எல்லோருமே பொதுவாக நல்ல உடற்கட்டுடையவர்கள். முகத்தைப் போலவே உள்ளத் தெளிவும் கொண்டவர்கள். அவ்வளவாகச் சூது வாது தெரியாது, சாதாரணமாக.

கௌண்டர்கள் பயிர்த்தொழிலில் புலிகள். இடுப்புக்கோவணத்துடன் இரவு பகலாக நிலத்திலேயே பாடுபடுவார்கள். தஞ்சாவூர் திருச்சி ஜில்லாக் குடியானவர்கள் போல உடம்பு வணங்காதவர்கள் அல்ல. காவேரியையும் கிணற்றையும் வைத்துக்கொண்டு மூன்றுபோகம் பயிர் ஏற்றி விடுவார்கள். உழவு மாடு இல்லாத கௌண்டனே சாதாரணமாக இருக்கமாட்டான்.

பிதுரார்ஜிதமாக எனக்கு அந்த ஊரில் ஒரு வீடும் கொஞ்சம் நிலமும் உண்டு. வடக்கே பல வருஷங்கள் சர்க்கார் உத்தியோகம் செய்துவிட்டு மனைவியும் நானும் கடைசியாக அங்கே வந்து வாசம் செய்தோம். குழந்தைகள் இல்லாத குறையை நீக்க என் மனைவி பல ஸ்தல யாத்திரைகள் செய்து முடித்தாள். ஏதாவது பொழுது போகவேண்டுமே. வீட்டில் 'பல் பட்ட' கிடாரிக் கன்று ஒன்றைச் செல்வமாக வளர்த்து வந்தேன். அதற்குக் காமு என்று பெயர் வைத்து ஸதா ஸதிபதிகள் இருவரும் அதன் சுச்ருஷையில் ஈடுபட்டோம்.

ஊரில் எல்லோரும் என்னை ஒருவிதமான பித்தன் என்று எண்ணியிருந்தார்கள். ஆனால் நான் ஒருவர் ஜோலிக்கும் போகாமல், நானுண்டு என் காரியமுண்டு என்று இருந்ததால் என்னிடம் ஒரு மரியாதையும் மதிப்புங்கூட இருந்தன அவர்களுக்கு. ஓர் உத்ஸவம், பஜனை, சமாராதனை என்றால் தாராளமாகக் கொடுத்தேனாதலால் கிராமத்தில் ஒரு ஸ்தானமும் எனக்கு இருந்தது.

ஒருநாள் சாயங்காலம் கயிற்றுக் கட்டிலைத் தெருவில் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். மூன்றும் வீட்டுக் கணபதி ஐயர் விசிறியும் கையுமாக வந்து சேர்ந்தார்.

"இன்னிக்கிக் கட்டாயம் மழை வரும்" என்றார்.

எனக்கென்னவோ அந்த விஷயத்தில் அப்பொழுது அவ்வளவு சிரத்தை ஏற்படவில்லை. "வரலாம்!" என்றேன்.

தெருவழியே ஒரு கௌண்டப்பெண் புல்கட்டு எடுத்துக்கொண்டு போனாள். புல் தளதளவென்றும் பச்சைப்பசேலென்றும் இருந்தது. அதை எடுத்துச் சென்ற பெண் அதற்கொப்பிடக் கூடிய புதுமையுடன் இருந்தாள். 'அனுக்ராதம் புஷ்பம்' என்று துஷ்யந்தன் சகுந்தலையைப் பற்றிச் சொன்னது எனக்கு ஞாபகத்திற்கு வந்தது. அப்பொழுதுதான் பூத்த ஒரு புது மலர்போல இருந்தாள் அந்தப் பெண்.

எனக்கு வயது நாற்பத்தைந்திற்கு மேலாகிறது. ஆசை, மீசையெல்லாம் நரைத்துப் போய்விட்டன. அப்பொழுது நான் அந்தப் பெண்ணின் சோபையைக் கண்டு பிரமித்தேன் என்றால் அது ஆசையால் அன்று; அழகும் புஷ்டியும் கொண்ட என் காமுவைப் பார்க்கும் பார்வையுடன் பார்த்தேன். ஒரு வாலிபன் பார்க்கும் கண்ணுடன் நான் அவளைப் பார்க்கவில்லை.

"புல்லுக்கட்டு என்ன பிள்ளெ வெலெ?" என்று அவளைப் பார்த்துக் கேட்டேன்.

தெருவின் நடுவே சுமையுடன் நின்றுகொண்டு இளமையின் வெட்கத்தால் என்னைப் பார்க்காமல் பார்வையை ஒரு பக்கமாகச் செலுத்தினவளாய், "ஒண்ணரைப் பணமப்பா!" என்றாள்.

நான் தனியாக உட்கார்ந்திருந்தால் அவள் இரண்டரைப் பணம் சொல்லியிருந்தாலும் வாங்கியிருப்பேன். பக்கத்தில் கணபதி ஐயர் இருந்ததை உத்தேசித்து, "சொல்லு, பிள்ளெ!" என்றேன்.

"அரைப்பணத்துக்குச் சீரழிகிறது ஸார், கட்டு" என்றார் கணபதி ஐயர். பெண்ணின் முகத்தில் கோபக்குறி தோன்றியது. திரும்பிப் போக யத்தனித்தாள்.

"இந்தா பிள்ளெ, என்ன அவ்வளவு கோவிச்சுக்கறயே?" என்று நான் கொஞ்சம் சிரித்துக்கொண்டு அவளைக் கூப்பிட்டேன்.

அவளும் லேசாகச் சிரித்துவிட்டு, "ஒரு பணம்னு போடறேனப்பா!" என்றாள்.

பக்கத்தில் கணபதி ஐயர், "அரைப்பணத்திற்குத் தானே போட்டுவிட்டுப் போவாள், ஸார். நீங்கள் சும்மா இருங்கள்" என்றார்.

அவர் சொன்னது என் காதில் படவில்லை. அவளைக் கண்டு நான் மெய்ம்மறந்து போனேன்.

நடுத்தரமான உயரம். அவள் பதினேழு பதினெட்டு வயதிற்குத் தகுந்த உடலமைப்புக் கொண்டிருந்தாள். கறுப்புமல்ல, சிவப்புமல்ல. பக்கத்துப் பார்வையில் முகவெட்டு மிகவும் கம்பீரமாக இருந்தது. ராணிபோல நிமிர்ந்து நின்றாள். சேலையின் தலைப்பை மடித்துத் தலையில் போட்டு அதன்மேல் புல்கட்டை வைத்துக்

கொண்டிருந்தாள். கடிவாளத்தின் இழுப்பில் துடித்து நிற்கும் குதிரை போல நின்றாள்.

"சரி, ரேழியில் கொண்டு போடு!" என்று சொல்லிவிட்டு நானும் எழுந்து சில்லறை எடுக்க உள்ளே போனேன்.

நான் வருவதற்குள் கட்டைக் கீழே போட்டுவிட்டுத் தலைப்பை உதறி இடுப்பில் செருகிக்கொண்டுவிட்டாள்.

"நாலைக்கும் கொண்டாரயா?" என்று கேட்டுக்கொண்டே காசைக் கொடுத்தேன்.

"ஆகட்டுங்க" என்று சொல்லிவிட்டு வெள்ளிமெட்டி ஒலிக்க நடந்து போய்விட்டாள்.

அடுத்த நாள் அவள் வந்தபொழுது அவளைச் சில கேள்விகள் கேட்டேன்.

"உன் பெயர் என்ன, அம்மா?"

"மின்னக்கலை" என்று சுவரில் சாய்ந்துகொண்டு வெட்கத்துடன் பதில் சொன்னாள்.

"கலியாணம் ஆகிவிட்டதா?"

"ஆகிவிட்டது" என்று அவள் குனிந்துகொண்டு தலையை ஆட்டினாள்.

"உன் புருஷனுக்கு என்ன வேலை?"

"கௌண்டன் ரயில்லே போட்டருங்க" என்று தலைநிமிர்ந்து சொன்னாள்.

நாலைந்து மாதம் இந்தமாதிரி தினம் புல்கொண்டு வந்து போட்டாள். மாதம் நாலு ரூபாய் என்று மொத்தமாகப் பேசிவிட்டேன். மண் மணல் இல்லாமல் நல்ல புல்லாகக் கொண்டு வந்து போட்டாள்.

என் மனைவிக்கு என்னவோ அவளைக் கண்டது முதலே பிடிக்கவில்லை. காரணமின்றி அவளிடத்தில் ஓர் அசூயை கொண்டாள்.

"பிடி புல்லெ கொண்டுவந்து போட்டுட்டு ஏமாத்தரா! அவள் பசப்பிலே நீங்க மயங்கிப்பேட்டேள்" என்றாள் ஒருநாள்.

"என்ன இப்படி அர்த்தமில்லாமல் பேசுகிறாய்? பிடி புல்லா கொண்டு வருகிறாள்? பெரிய கட்டு என்று எல்லோரும் சொல்லுகிறார்கள். அவள் பசப்புகிறாள் என்கிறாயே. அந்தக் குழந்தையைப் பற்றி நீ இப்படிச் சொல்லலாமா?" என்று நான் சொன்ன பிறகு என் மனைவி என்னிடம் அவளைப்பற்றி அதிகமாகப் பேசுவதில்லை. ஆனால் அவள் மனதில் மட்டும் அந்த எண்ணம் விடவில்லை.

மின்னக்கலை தன்னுடன் ஓர் இளமையையும் இன்பத்தையும் தினமும் கொண்டுவந்தாள். அவளுடைய மிதப்பான நடையும்

மெதுவான குரலும் எனக்கு ஓர் ஆறுதலாக இருந்தன. என் வாழ்க்கையின் வெயில் தாபத்தினுடைய இறுதியில் அவள் தினமும் ஒரு மலர்க்காற்றுப்போல வந்து குளுமை கொடுத்தாள்.

என் வாத்ஸல்யத்தை ஊகித்து அறிந்துவிட்டவள் போல் என்னிடம் ஒரு மகள்போன்று நடந்து கொண்டாள்.

தீபாவளிக்கு நான் அவளுக்கு ஒரு சேலை வாங்கிக்கொடுத்தேன். என் மனைவி என்னுடன் ஒரு வாரம் பேசவில்லை.

"என்னடி முட்டாளாயிருக்கிறாயே? நமக்குக் குழந்தைகளா, குட்டிகளா? ஓர் ஏழைப்பெண்ணுக்கு உபகாரம்செய்தால் நல்லது தானே?"

"என் தங்கை பொண்ணுக்குச் செய்யுங்களேன்!"

"அவளுக்குத்தான் பெற்றவன் பிடிபிடியாகச் செய்கிறானே."

* * *

பதினைந்து இருபது நாள் சோலையே புல் கொண்டுவந்து போட்டான். மின்னக்கலையைக் கண்ணால் பார்க்காத அப்பொழுது தான் அவள்தேவை எனக்கு நன்றாக அர்த்தமாயிற்று. என்வாழ்க்கையில் காலியாக, நிரம்பாமல் இருந்த ஓரிடத்தை அவள் பூர்த்தி செய்துவிட்டாள். அவள் என் பார்வையில் இருக்கிறாள் என்ற திருப்தியே என் வாழ்க்கையை ஸபலமாக்கிற்று. அவளுக்கு ஆதரவாக இருக்கிறோமென்ற நினைவே எனக்குப் போதுமானதாக இருந்தது. அவளைக்காணாமல் எனக்கு இருப்புக்கொள்ளவில்லை.

ஒருவேளை என் மனைவி ஏதாவது அவளை வராதே என்று தடுத்திருப்பாளோ என்றுகூடச் சந்தேகப்பட்டேன்!

ஒருநாள் அகஸ்மாத்தாக வயலுக்குக் குடியானத்தெரு வழியாகப் போகலாமென்று போனேன். சோலை வீடு அங்கு எங்கேயோ இருக்கிறதென்று தெரியுமே ஒழிய இடம் தெரியாது. ஒரு தெரு மூலை திரும்பி ஒரு குறுக்குத் தெருவில் நுழைந்தேன்.

அப்படியே நடுத்தெருவில் நின்றுவிட்டேன். எதிரே ஒரு சின்ன வீட்டின்முன், சாணி தெளித்து மெழுகியிருந்த மண் தரையில், எங்கோ பார்த்துக்கொண்டு படுத்திருந்தாள் மின்னக்கலை. பக்கத்தில் ஒரு மொட்டை வண்டியிருந்தது.

அவளைப் பார்த்துக்கொண்டு அப்படியே நின்றேன். என்னை அறியாமலேயே என் கண்களில் நீர் நிறைந்தது. அவள் கர்ப்பம்! அதனால் தான்.... என்முன் அந்தக் கோலத்துடன் வர வெட்கப் பட்டுக்கொண்டு தன் புருஷனை அனுப்பியிருக்கிறாள்!

ஆகையால் அவளை அப்பொழுது கலவரப்படுத்த எனக்கு இஷ்டமில்லை. ஆனால் திடீரென்று திரும்பி அவள் என்னைப் பார்த்து விட்டாள்.

சட்டென்று எழுந்து ஓடிக் கதவின் பின் நின்றுகொண்டு, "வாங்க சாமி, வாங்க! இந்த வண்டியிலே உக்காருங்க!" என்று

சொல்லிவிட்டு எதிர்வீட்டுச் சிறுமியைச் சமிக்ஞை செய்து அழைத்தாள். அவளை உள்ளே கூட்டிக்கொண்டுபோய் வெற்றிலை பாக்கு சுண்ணும்பு மூன்றும் ஓர் ஓலைத் தட்டில் வைத்து அவளிடம் கொடுத்தனுப்பினள்.

“கௌண்டன் புல்லுக்குப் போயிருக்காரு. இதோ வந்துடுவாரு—” என்று சொல்லிக்கொண்டு தெருக்கோடியை எட்டிப் பார்த்தாள்.

கொஞ்ச நேரத்திற்கெல்லாம் சோலை வந்தான்.

“என்ன சோலை, எங்கிட்ட ஏன் சொல்லவேயில்லை?” என்று கேட்டேன்.

இருவரும் வெட்கித் தலைகுனிந்து கொண்டார்கள்.

“சோலை, நீயா புல் பிடுங்கப் போகிருய்?”

“ஆமாங்க. போட்டர் வேலேலெ ஒண்ணும் வல்லிங்க. சின்ன டேசனுங்க.”

“பின் எப்படிக் காலக்ஷேபம்?” என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

“ஓங்க நாலு ரூவாதானுங்க கஞ்சி ஊத்துது.”

“அட பாவி! என்னிடம் ஏன் சொல்லவில்லை?” என்று பதைத்துப்போய்க் கேட்டேன்.

“நீங்க இன்னும் என்னதான் செய்வீங்க? அவ வீடு கூட்டலாம்ணு—”

அவன் சொன்னது என் காதில் படவில்லை. எனக்கு உயிரில் ஒரு பற்றை ஏற்படுத்தி உத்ஸாகம் கொடுத்த மின்னக்கலை அவ்வளவு நாளாக அரைவயிறு கஞ்சி குடித்து வந்திருந்தவள் என்ற எண்ணம் என்னைத் திடுக்கிடச் செய்தது. என் குழந்தையைப் பட்டினிபோட்ட குற்றவாளி போல நான் வேதனை அடைந்தேன்.

“உனக்கு உழவுவேலை தெரியுமா?” என்று திடீரென்று கேட்டேன்.

“நல்லாத் தெரியுங்க; ஊர்லே எடமில்லிங்க.”

“என் பண்ணையாளாக இரு!”

சோலை வெலவெலத்துப் போனன். அவனுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. அவன் கண்கள் கலங்கிவிட்டன.

“பிள்ளைகுட்டி நல்லா யிருக்கணும்” என்று கும்பிட்டான்.

“எனக்குப் புள்ளெயும் கிடையாது; குட்டியும் கிடையாது. எல்லாம் மின்னக்கலைதான்” என்று முகத்தை மறுபக்கம் திருப்பிக்கொண்டு சொன்னேன். மின்னக்கலையின் முகத்தைப் பார்க்க வெட்கி, சொல்லிக்கொள்ளாமலேயே விர்ரென்று கிளம்பி வீடுவந்து சேர்ந்தேன்.

---

# மண்வீடும் மாளிகையாம்

'மாரார்'

---

சென்ற மே மாஸத்தில் "இஷ்டம்போல் போகலாம்" என்று கொடுக்கும் ஒரு டிக்கெட் வாங்கிக்கொண்டு பல ஊர்கள் சுற்றித் திரும்பி வரும்போது பட்டணத்தில் மூன்று நாள் தங்கினேன். பத்துவருஷங்களுக்கு முன் திருவல்லிக்கேணியில் ஜாகை அமைத்துக்கொண்டு இரண்டு வருஷகாலம் படித்தேன். அதன் பிறகு இப்பொழுதுதான் பட்டணம் போக நேர்ந்தது. ஒரு நாள் சாயங்காலம் கடற்கரை சென்று காற்று வாங்கிவரலாமென்று நினைத்து அங்கே நடந்துகொண்டிருக்கையில், என்னுடன் காலேஜில் வாசித்த கிருஷ்ணரத்தினத்தைத் தற்செயலாய்க் கண்டேன். தான் இப்போது வக்கீலென்றும், மாஸம் ஒன்றுக்கு ஏறக்குறைய ஐந்நூறு ரூபாய் சம்பாதிப்பதாயும், பட்டணத்தில் குடும்பச்செலவு ஜாஸ்தியாயிருப்பதால் ஒரு கார் வாங்கக்கூடப் பணம் மிகுத்த முடியவில்லை என்றும் அவன் மூக்கால் அழுதான். பிறகு எங்களுடன் கூடப் படித்த சிலரைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். அந்தச் சந்தர்ப்பத்தில் அவன், "வேதரத்தினம் என்றொருவன் நம்மோடு படித்தானே, ஞாபகமிருக்கிறதா?" என்றான்.

"வேதரத்தினத்தைத் தெரியாதா என்ன? அவன் இங்கிலீஷ் ஸம்ஸ்கிருதப் பாடங்களில் நடந்த பரீக்ஷைகளில் வெகு நன்றாக எழுதினான் என்று நம் ஆசிரியர்கள் பலதரஞ் சொல்வார்களே. அவன் இப்போது எங்கே இருக்கிறான்?" என்றேன்.

அதற்கு அவன், "என்னத்தைச் சொல்லுகிறது? பள்ளிக்கூடத்தில் நன்றாகப் படித்தவர்கள் எல்லோரும் பின்னர் முன்னுக்கு வருகிறார்களா? வேதரத்தினம் ஒன்பது வருஷமாக டிவிஷனல் ஆபீஸில் குமாஸ்தாவாக இருந்து வருகிறான். இன்னும் சம்பளம் அறுபது ரூபாய்க்குமேல் உயரவில்லை. அவன் மேலதிகாரி நான் இருக்கும் தெருவில்தான் ஒரு பங்களாவில் குடியிருக்கிறார். 'நீ அடிக்கடி அவர் வீட்டுக்குக் காலை வேளைகளிலும் ஆபீஸ் இல்லாத நாட்களிலும் போய்ப் பார்த்து அவர் வீட்டுக்காரியங்களில் சிரத்தையெடுத்து ஒத்தாசை செய்துவந்தால் சீக்கிரம் மேலான சம்பளமுள்ள வேலைக்குச் சிபார்சு செய்வார். இந்த நாளில்

காக்காய் பிடிக்காமற் போனால் என்ன நடக்கும்? எத்தனைவருஷம் இந்தக் குமாஸ்தா வேலையில் உழைக்கிறது?' என்று வேதரத்தினத்திடம் சொல்லிப் பார்த்தேன். அதை அவன் காதில் கொஞ்சங் கூடப் போட்டுக்கொள்ளவில்லை. அவனுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்திருக்கின்றன. வாங்குகிற சம்பளம் குடும்பச் செலவுக்குக் கூடப் போதவில்லை. அவன் அதையெல்லாம் லக்ஷியம் பண்ணுவதில்லை. அவனுக்குக் காவியப் பித்துப் பிடித்திருக்கிறது. ஓழிந்த வேளைகளில் எப்போதும் இங்கிலீஷிலோ ஸம்ஸ்கிருதத்திலோ ஏதாவது ஒரு காவியத்தைத் திருப்பித் திருப்பிப் படித்துக்கொண்டிருக்கிறான். சாகிறவரையில் நூறு ரூபாய்க்கு உட்பட்ட சம்பளம் வாங்கிக் குமாஸ்தாவாகவே உழைக்கப்போகிறான்'' என்று சற்று இரக்கத்துடனும் சற்றுப் பரிகாசமாகவும் சொன்னான். அதைக் கேட்டதும் வேதரத்தினத்தைப் போய்ப் பார்க்கவேண்டுமென்று நிச்சயித்து அவன் வீட்டின் விலாசத்தைக் கிருஷ்ணரத்தினத்திடமிருந்து தெரிந்துகொண்டேன்.

மறுநாட் காலை ஏழுமணிக்குப் புறப்பட்டு வேதரத்தினத்தின் ஜாகைக்குப் போனேன். அது ஜார்ஜ் டவுனில் ஒரு சிறு சந்தினுள் இருந்தது. வீட்டிற்கு எதிரில் குப்பை நிரம்பிய தொட்டியொன்று காணப்பட்டது. அதற்குப் பக்கத்து வீடு ஓர் இடையன் மாட்டுக் கொட்டகை. அதில் பத்துப் பன்னிரண்டு பசுக்களும் எருமைகளும் கட்டப்பட்டிருந்ததால் துர்நாற்றம் தூக்கியடித்தது. வீட்டுத் திண்ணையின்கீழ்ச் சாக்கடை ஒன்று ஓடினதும் ஓடாததுமாயிருந்தது. நான் போன சமயம் நல்ல சமயம். வேதரத்தினம் தெருத்திண்ணையில் உட்கார்ந்து ஒரு சிறு புஸ்தகத்தை வாசித்துக் கொண்டிருந்தான். நாங்கள் ஒருவரையொருவர் பார்த்துப் பத்து வருஷகாலம் ஆகிவிட்டதால் காலேஜ் விட்டது முதல் எங்கள் இருவர் வாழ்க்கையிலும் நேர்ந்த முக்கியமான சம்பவங்களைப்பற்றிச் சற்று நேரம் பேசிக்கொண்டோம். பின்னர், "அது என்ன புஸ்தகம், கையில்?'' என்றேன்.

அவன், "இது காளிதாஸன் எழுதிய மேகதூதம். இப்பொழுது இந்தக் காவியத்தைப் பதின்மூன்றாந்தரம் வாசிக்கிறேன். தெவிட்டாத தேன்போல் இருக்கிறது. என்ன ஆனந்தம்? படிக்கப் படிக்கப் புதிய புதிய ரஸமும் கவிநயமும் வெளிப்படுகின்றன'' என்றான்.

நான் மேகதூதமென்ற பெயரைக் கேட்டிருந்தும் அது எதைப்பற்றினதென்று தெரிந்து கொண்டதில்லை. அதனால் அந்தக் காவியம் எதைக் குறித்து எழுதப்பட்டிருக்கிறதென்று

கேட்டேன். உடனே வேதரத்தினத்துக்கு உற்சாகம் கிளம்பி விட்டது. "இதுவரையில் கேட்டதில்லையா? ஒரு யக்ஷன் ஏதோ ஒரு குற்றத்தின் நிமித்தம் பத்தினியை விட்டுப் பிரிந்து தூரதேசத்தில் எட்டுமாஸம் மனம் நொந்து கழித்துவிட்டான். இன்னும் நான்குமாத காலம் செல்ல வேண்டியிருந்தது. அதற்குள் தன் மனைவிக்குத் தைரியம் சொல்லி மனதைத் தேற்றுவிட்டால், இறந்துவிடுவாள் என்ற பயத்தால் ஒரு மேகத்தை அளகாபுரிக்குத் தூது விடுகிறான். இந்தச் சிறு விஷயத்தை யொட்டி அந்த மகாகவி செய்துள்ள காவியத்தின் அழகை என்னென்று சொல்வது? யக்ஷன் அளகாபுரியிலுள்ள தன் மாளிகையைக் கண்டுபிடிப்பதற்காக மேகத்துக்குச் சில அடையாளங்களைக் குறிப்பிடுகிறான். கவியின் சித்திரம் மனதின்முன் வந்து நிற்கிறது. வாயிற்கதவண்டை சங்கநிதி அழகிய வர்ணங்களால் வரையப்பட்டிருக்குமாம். உட்புகுந்ததும் ஒரு சிறு தோட்டம். அதில் ஓர் இளம் மந்தாரவிருக்ஷம் வைத்து இரண்டொரு வருஷமே ஆயின. ஆனால் மரம் பூக்க ஆரம்பித்துவிட்டதாம். கையெட்டிப் பறிக்கக்கூடிய உயரத்தில் புஷ்பங்கள் குலு குலுவென்று நிறைந்திருக்கின்றனவாம். தன் வீட்டின் அழகை ஒரு சிறு குறியினால் காண்பிக்க வேறு வர்ணனை வேண்டுமோ?" என்று சொல்லிப் பின்னும் ஒரு சுலோகத்தை இனிய குரலால் பாடி வேதரத்தினம் அதன் பொருளையும் எனக்குச் சொல்ல ஆரம்பித்தான்: "மேகம் உள்ளே பிரவேசித்துப் பார்த்தால் யக்ஷன் மனைவி என்ன செய்து கொண்டிருப்பாள் என்பதைக் கவி தன் மனோபாவத்தால் ஊகித்துணர்ந்து வர்ணிக்கிறான். பார், மடியில் வீணையை வைத்துக்கொண்டு தன் நாயகனின் பெயரை இசைத்துக் கட்டிய ஒரு கீதத்தை வாத்தியத்தின் உதவியுடன் பாட ஆரம்பிக்கிறாள். உடனே கண்களிலிருந்து நீர் தாங்கமுடியாமல் வீணைக்கம்பியில் உதிர்கின்றது. பாட்டை நிறுத்துகிறாள். மோகமடைகிறாள். என்ன அழகு? யக்ஷஸ்திரீயின் அன்பின் அளவற்ற நிலையையும், அவளுக்குக் காவியம் கானம் இவைகளிலுள்ள ருசியையும், அவளுடைய உயர்ந்த நாகரிகத் தன்மையையும் இப்படி எடுத்துக்காட்ட மற்ற எந்தக் கவியால் முடியும்? வால்மீகி ஒருவரே காளிதாஸனுக்கு நிகரென்று சொல்லலாம். இராவணன் அந்தப்புரத்தில் அனுமான் புகுந்து இரவில் சீதையைத் தேடுகையில் அங்கே படுத்துத் தூங்கும் ஸுந்தரிகளின் நிலையை வர்ணிக்கும்போது மகரிஷி ஒரு புதிய உலகத்தையே சிருஷ்டிக்கிறார். அப்படியே காளிதாஸன் அளகாபுரியின் மகிமையையும் யக்ஷனுடைய மாளிகையின் சிறப்பையும் அவன் பத்தினியின் அழகையும் சித்திரித்துக் கொடுக்கிறான். அவன்

வாக்கிலிருந்து பெருகும் அமிருதத்தை நாம் பானம் பண்ண என்ன பாக்கியம் செய்தோம்!"

இப்படியெல்லாம் வேதரத்தினம் தன்னை மறந்து அளகாபுரியில் யக்ஷன் மாளிகையில் இருப்பதாகப் பாவித்துப் புகழும்போது அவன் வீட்டினுள்ளேயிருந்து ஒரு குழந்தை வெறிபிடித்தாற் போல் வீரிட்டுக் கத்தும் சத்தம் கேட்டது. "அப்பாவினிடத்தில் குழந்தையைக் கொண்டுவிடு. நான் பத்துத் தேய்த்து இன்னும் கரை காணவில்லை. வீட்டில் சமைக்கிறதற்கு உப்பில்லை. செட்டி கடை திறந்தவுடன் குழந்தையையும் எடுத்துக்கொண்டுபோய் ஒரு படி உப்பு வாங்கிக்கொண்டு வரச்சொல்லு. அப்புறம் புஸ்தகம் வாசிக்கட்டும்" என்று உரத்த குரலில் தூது வரப்போகிற ஒரு செய்தி என் காதில் விழுந்தது. வேதரத்தினத்துக்கு வீட்டு வேலை இருப்பதை அறிந்துகொண்டு, நான் வேறு எங்கேயோ ஒன்பது மணிக்குப் போகவேண்டி யிருக்கிறதென்று மன்னிப்புக் கேட்டுகொண்டு புறப்பட்டேன். இவரையா பித்தன் என்றான் கிருஷ்ணரத்தினம்? பித்தன் யார்?



# ‘நான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்’

ஹரிஹர சாஸ்திரி

குறிப்பு:—கர்ணீபுத்திரன் என்பவன் பிரசித்திபெற்ற ஒரு கள்வர் தலைவன். பண்டைக்காலத்து வடமொழி இலக்கியங்கள் இவனது துணிகரமான செயல்களைப் புகழ்ந்து பல கதைகள் கூறுகின்றன. குணாட்டியன் பிராகிருத பாஷையில் தொகுத்த பிருஹத்கதையில் கர்ணீபுத்திரன் வரலாறு விரிவாயுள்ளதென்பர். சில நூல்கள் கர்ணீ புத்திரனையும் களவுநூல் இயற்றிய கரபடனையும் ஒருவனாகக் கருது கின்றன. பாணனது காதம்பரிக்கு ‘ஆமோதம்’ என்று இதுகாறும் வெளிவராத செய்யுளுரை ஒன்றுளது. அதன் உரையாசிரியர், அஷ்ட மூர்த்தி என்பவர்; அவர் வாழ்ந்த இடம் கேரளதேசத்தில் குணகை என்பர். அவர் ‘கர்ணீஸுத சுதேவ’ என்ற மூலவாக்கியத்தை விளக்குங் கால், தாம் முதியோரிடமிருந்து கேட்ட கர்ணீபுத்திரன் கதை யொன்றை மேற்கோளாகக் கூறுகிறார். இது தமிழ்நாட்டில் வழங்கி வரும் ‘நான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்’ என்னும் பழமொழி யோடு நெருங்கிய தொடர்புடையதாயிருக்கிறது; ஒரு தமிழ்க்கதை யென்று கருத இடமுண்டு. ஆனால் இது இப்போது தமிழ் நாட்டில் ஓரிடத்தும் வழங்கிவருவதாகத் தெரியவில்லை. உரையாசிரியர் கூறுவது பின்வருமாறு மொழிபெயர்க்கப்பட்டுளது:

சூரிவர்மன் என்ற மன்னன் அரசு புரியுங்கால் அவன் நகரில் கர்ணீபுத்திரன் என்ற சோரவித்தை கற்பிக்கும் ஆசிரியன் ஒருவன் இருந்தான். அவனுக்கு விபுலன் என்றும் அசலன் என்றும் இரண்டு சிஷ்யர்கள் இருந்தனர். அவர்கள் மூவரும் தம்மை எவரும் காணாமல் மறைக்கும் சித்தாஞ்சனத்தைக் கண்ணிலிட்டுக் கொண்டு தினந்தோறும் அரண்மனை சென்று அரசனது உணவைப் புசித்துவந்தனர். ஒருநாள் ஆசிரியன் அசலனை அழைத்துச் சிராத்தத்திற்கு வேண்டும் மாமிசம் சம்பாதித்து வரும்படி ஏவினான். அசலன் காட்டிற்குச் சென்று ஒரு முயலைப் பிடித்துக் கொண்டு திரும்பும்போது முயலின் கால்களில் ஒன்றைப் பிய்த்துத் தின்று தன் பசியை ஆற்றிக்கொண் டான். பிறகு சித்தௌஷதங்களால் புண்ணை ஆற்றி முயலைக் குருவினிடம் சமர்ப்பித்தான். “முயலுக்குக் கால் ஒன்று குறைவா யிருப்பதேன்?” என்று ஆசிரியன் கேட்க, “நான்பிடித்த முயலுக்குக்



கால் மூன்றுதான்" என்றான் அசலன். தான் கற்பித்த வித்தையில் சிஷ்யன் தேர்ச்சிபெற்று வருவதைக் கண்டு ஆசிரியனுக்கு ஸந்தோஷமுண்டாயிற்று.

அரசன் மிதமிஞ்சிப் புசித்து வருவதாக நினைந்து கவலையுற்ற மந்திரியும் ஏனையோரும் அரசனிடம் சென்று, "ஸ்வாமி, தங்கள் இலையிலிடும் அளவற்ற சோறும் கறியும் உடனே மறைகின்றன; யாதாயினும் நோயுளதோ தங்களுக்கு?" என்று விசாரித்தனர். அரசன், "இல்லையே! என்றும்போல நான் மிதமாகவே உண்கிறேன்" என்றனன்.

பின்னர், மந்திரியும் மற்றவர்களும் யோசித்து அரசனுக்குச் சமைக்கும் கறியில் ஒருநாள் மிளகும் காரமும் மிகுதியாய் இடுவித்தனர். ஆசிரியனும் சிஷ்யர் இருவரும் வழக்கம்போல் யாராலும் காணவொண்ணாது மறைந்து அரசனது உணவைப் புசிக்க வந்தனர். ருசி பார்த்த பிறகே எதையும் உட்கொள்ளும் ஆசிரியனும் அவ் விரகசியத்தைக் கற்றிருந்த விபுலனும் காரம் இட்ட கறியைச் சுவைத்தறிந்து விலக்கி மற்றவைகளை உண்டனர். அந்த விஷயத்தில் உபதேசம் பெறாத அசலன் காரமான கறியை ஏராளமாக உண்ணவே, கண்களினின்று நீர் பெருகி, மை கரைந்தது; அதனால் அங்கிருந்த யாவரும் காணும்படி வெளிப்பட்டான். உடனே, "சோற்றுக் கள்ளன் அகப்பட்டான்" என்று அலறும் ஏவலாளர் அசலனைப் பிடித்துக் கையிலும் காலிலும் விலங்கிட்டுச் சிறையில் அடைத்தனர். "நீ யார்? ஏன் இங்கே வந்தாய்? உன் கூட்டாளிகள் யார்?" என்று இவ்வாறெல்லாம் கேட்டு ஒறுக்கும் ஏவலாளர்களிடம் அசலன் மௌனம் சாதித்தான்.



கர்ணீபுத்திரன் இதை அறிந்து மணிமந்திர சக்தியால் சிறைக்குட் புகுந்து தளைப்பட்டு வருந்தும் சிஷ்யனுக்கு ஆறுதல் கூறி, "நீ கொணர்ந்த முயலுக்குக் கால் மூன்றுதானா?" என்று கேட்டான். அசலன் சற்றும் சமுசயம் இன்றி, "நான் பிடித்த முயலுக்குக் கால் மூன்றுதான்" என்றான். அசலனது உறுதியைக் கண்டு ஆசிரியன் அகமகிழ்ந்து பல உபாயங்களைப் பிரயோகித்துச் சிறையினின்றும் அவனை விடுவித்தான்.

பிறகு, கர்ணீபுத்திரன் அவன் துணிவை இன்பநிலையிலும் பரீட்சிக்க எண்ணினன். அசலனின் மனைவியிடம் இரகசியமாய்த் தன் உள்ளக் கருத்தைத் தெரிவிக்க, அவள் அதற்கு இணங்கினள்.

ஒரு நாள் இரவு, அசலன் மனைவி தன் காதலன் மடிமீது தலை வைத்துப் படுத்திருக்கும்போது வானத்தில் மிதக்கும் பூரணசந்திரனைக் காட்டி, "அன்ப! சந்திரபிம்பத்தின் மத்தியில் தெரிவது என்ன?" என்று கேட்டாள். "அதை முயல் என்பார்கள்" என்றான் அசலன். அவள் மீண்டும், "முயல் என்றால் ஜடப்பொருளா? அல்லது உயிர்ப்பிராணியா?" என்று கேட்டாள். அசலன், "முயல் என்பது ஒரு நாற்கால் விலங்கைச் சேர்ந்ததுதான். ஆனால், மூன்றுகாலுள்ள முயலும் உண்டு" என்று விடையளித்தான். இதை மறைவினின்று கேட்ட கர்ணீபுத்திரன், சிஷ்யன் துன்பத்திலும் இன்பத்திலும் அசையாத துணிவுடையவனா யிருத்தலை அறிந்து அவனுக்குச் சோரவித்தையின் இரகசியம் அனைத்தையும் உபதேசித்தான்.



# நக்ஷத்திரக் குழந்தைகள்

சு. குருசாமி, பி. ஏ.

(பாப்பா பாடுகிறது)

சின்னச் சின்னத் தாரகைகாள்
சிங்கா ரச்சிறு தாரகைகாள்
மின்னி மின்னி எங்குச்செல்வீர்
மீண்டும் பகலில் வாரீரோ.

முத்து முத்துத்
தாரகைகாள்
மூடி மூடிக்
கண்விழிப்பீர்
கத்திக் கத்தி
அழைக்கின்றேன்
கையால் உம்மை
அழைக்கின்றேன்.



மாங்கனியையுண்
டறிவீரோ?
மாதுளை தின்று
களித்தீரோ?
தீங்கனி எல்லாம்
உமக்கீவேன்
தின்று களித்திட
வாரீரே.

வானப் பாலை
வனத்தினிலே
வாரா இந்தக்
கனிகளெல்லாம்
தீனக் குழந்தைகள் நீவிரெலாம்
தின்று களித்திட வாரீரே.

பந்து பாண்டி கோலிகளும்
 பரிவுடன் ஆடிக் களிப்போமே
வந்திங் கென்னை மகிழ்விப்பீர்
 வருந்தி அழைத்தேன் வருவீரே.

"மதித் தாய் எம்மை அடிப்பாளே;
 மாட்டோம்" என்று சொல்லாதீர்
குதித்துக் களிப்பாய் வருவீரே
 கும்பிடுவேன் நீர் வருவீரே.



# வீட்டுப் பாடம்

'பேனு'

வீட்டிலுள்ள பெரியவர்கள் பகலிலே வீட்டைவிட்டு வெளியேபோய் எட்டுமணிநேரமோ, பத்துமணிநேரமோ, அவற்றுக்குக் குறைவாக அல்லது அதிகமாக உள்ளநேரமோ வேலை செய்து விட்டுத் திரும்புகிறார்கள். வீட்டில் வந்தால் வேலை செய்வதில்லை; அதாவது, அவர்கள் உத்தியோக நிமித்தம் செய்யும் வேலையைச் செய்வதில்லை. வீட்டில் வந்ததும் குழந்தைகளோடு பேசி விளையாடிப் பொழுது போக்குகிறார்கள். சிற்சில பயித்தியக்காரர்கள்—ஆபீஸ் முழுவதையும் தாங்களே தாங்குகிறார்கள் என்று நினைக்கும் மேதாவிகள்—ஆபீஸ் வேலையைக் கட்டி வீட்டுக்குக் கொண்டுவந்து வீட்டிலும் ஆபீஸ் உத்தியோகம் பார்த்து உயிரை விடுகிறார்கள்; மற்றவர்களுடைய உயிரையும் வாங்குகிறார்கள். கோர்ட்டில் போய்ப் பேசவேண்டிய வக்கீல்களுக்குக் கோர்ட்டு நேரங்களில் தவிர மற்ற நேரமும் படித்துத்தான் ஆகவேண்டியிருக்கிறது. ஆகையால் அவர்களுக்குக் காலையிலேயே ஆபீஸ் தொடங்கிவிடுகிறது. காலையிலே வீட்டில் உள்ளவர்களோடு பேசி இன்பமாகக் காலம் கழிப்பதற்கில்லை. வேலையை ஒழுங்குபடுத்திக்கொண்டால், வாழ்க்கை இன்பங்களை அனுபவிப்பதற்கு, இன்னும் சற்று அதிகமான அளவிலே அவகாசத்தைஅவர்கள் பெருக்கிக்கொள்ளலாம். டாக்டர்களுடைய நேரத்தைப்பற்றி வரையறுத்துச் சொல்லமுடியாது. பொதுவாக அவர்கள் வெளி வேலையையும் வீட்டுக்காரியத்தையும் ஒழுங்கு படுத்தியே வைத்துக்கொள்ளுகிறார்கள். சிற்சில வேளைகளில் அவசரமாக ஏதாவது ஏற்பட்டாலொழிய இந்த ஏற்பாடு மாற வேண்டியதில்லை. மற்ற உத்தியோகங்களிலெல்லாம் ஆபீஸ் நேரத்தையும் வீட்டு நேரத்தையும் வேறாகப் பங்கிட்டுப் பிரித்து விடலாம். ஆகையால் மற்ற உத்தியோகங்களில் இருப்பவர்கள் எல்லாரும், அநேகமாக, வீட்டில் ஆபீஸ் வேலை செய்யாமல் குழந்தை குட்டிகளோடு பேசிப் படித்துப் பொழுதுபோக்கி வருகிறார்கள்—பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களையும் மாணவர்களையும் தவிர.

உபாத்தியாயர்களுக்குப் பள்ளிக்கூடத்து வேலை வீட்டிலும் பிடித்துக்கொள்ளுகிறது. மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டிய பாடத்தை வீட்டில் படித்தாகவேண்டும். அவர்கள்

எழுதிய கட்டுரைகளைத் திருத்தியாகவேண்டும். அவர்கள் உயிரின் சத்தை உறிஞ்சும் பரீக்ஷைக் கேள்விகளைக் கேட்டாகவேண்டும். அவற்றுக்கு அவர்கள் தம்முடைய மைக்கூட்டில் இருக்கும் மையில்-அல்ல, உயிரை வளர்க்கும் இரத்தத்தில்-தோய்த்து எழுதும் விடைகளைத் திருத்தி, அவற்றைப் பொன் தராசில் வைத்து நிறுத்துப் பார்த்து, அவற்றுக்கு மார்க்குக் கொடுத்தாக வேண்டும்.

பள்ளிக்கூடத்தில் படிக்கும் மாணவர்களுக்கும் பள்ளிக்கூட வேலை வீட்டில் துரத்திக்கொண்டு வருகிறது. பள்ளிக்கூடத்தில் நடக்கும் பாடங்களைச் சரிவரத் தெரிந்து கொள்ளுவதற்காக மாணவர்கள் தாமாகவோ, அல்லது சற்றே இலேசான தூண்டுதலின் பேரிலோ, பள்ளிக்கூடத்துப் பாடங்களை வீட்டிலும் சற்றே படித்துப் பார்ப்பதில் சிறிதுநேரம் செலவாகிறது. அதைத் தவிர, பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களின் நிபந்தனையின்மேல் பள்ளிக்கூடத்தில் 'ஒப்பிப்பதற்காக' வீட்டில் படிக்கவேண்டியிருக்கிறது. மேலும், கணக்கும் மொழிபெயர்ப்பும் கதை கட்டுரை முதலியன எழுதுவதும் காப்பியும் வீட்டுப்பாடமாக இடப்படுகின்றன. அவற்றை மாணவர்கள் செய்தாகவேண்டியிருக்கிறது.

இவற்றுக்குக் காரணம் பரீக்ஷைமுறையினால் ஏற்படும் நிர்ப்பந்தமே. பரீக்ஷையில் மார்க்கு வாங்கவேண்டுமென்றால் எழுதி எழுதிப் பழகினாலன்றி முடியாது. பள்ளிக்கூடத்தில், படிப்புநேரத்தில் எழுதினால் மட்டும் போதாது, வீட்டு நேரத்திலும் எழுதிப் பழகுவது அவசியமென்று கருதும் உபாத்தியாயர்கள் வீட்டுப் பாடத்தைக் குழந்தைகளின் தலைமீது சுமததுகிறார்கள். இதனால், வீட்டுக்கு வந்ததும் வாழ்க்கைக் கவலைகளை மறந்து, குழந்தைகளோடு பேசி, அவர்களுடைய களங்கமற்ற முகமலர்ச்சியைக் கண்டு ஆனந்தம் அடைய விரும்பும் பெற்றோர்கள் ஏமாந்து போகிறார்கள். குழந்தைகளுக்கு அவர்களோடு பேச நேரம் இருப்பதில்லை! காலைத் தாமரையைப் போல் மலர்ந்திருக்க வேண்டிய குழந்தைமுகங்கள் மாலைத் தாமரையைப் போல் வாடிக் குவிந்து பாடக் கவலையில் ஆழ்ந்திருக்கின்றன! முரட்டுக் குழந்தைகள் வீட்டுப் பாடத்தை அவ்வளவு பொருட்படுத்துவதில்லை. 'ஆனால் சரி; ஆகாவிட்டால் அதைவிடச் சரி' என்றே அவர்கள் நினைக்கிறார்கள். இளந்தளிர்போன்ற பெண்குழந்தைகள் வீட்டுப் பாடத்தைக் கருத்தாகச் செய்துமுடிக்கிறார்கள். மேனி வாடி வதங்க, கண் பஞ்சு பறக்க, அவர்கள் தம்முடைய வீட்டுப்பாடம் முடியாவிட்டால் உலகமே முழுகிப்போம் என்று வேலை செய்வதைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. இந்தப் படிப்பெல்லாம் எதற்கு என்று தோன்றுகிறது.

இந்த விஷயத்தைப் பற்றிச் சிறிது காலத்துக்கு முன்பு எடின்பரோவில் நடந்த 'பெற்றோர்-உபாத்தியாயர்' மகாநாட்டில் விவாதம் நடந்து, சிற்சில முடிவுகள் ஏற்பட்டன. அவை வருமாறு:

(1) வீட்டுப்பாடமே கொடுக்கக் கூடாது என்று பெற்றோர்கள் சொல்லவில்லை. அதற்கு ஓர் அளவு வேண்டும் என்றுதான் அவர்கள் சொல்லுகிறார்கள். கீழ் வகுப்புக்களில் உள்ள குழந்தைகளுக்கு வீட்டுப்பாடம் தினசரி அரைமணி நேரத்துக்கு மேல் பிடிக்கக்கூடாது. மேல் வகுப்புக்களில் உள்ளவர்களுக்கு இரண்டு மணிநேரம் வரை பிடிக்கலாம்; அதற்குமேல் பிடிக்கக் கூடாது.

(2) இந்த வரையறை ஒழுங்காக நடந்தேறும்படியாக மேற்பார்ப்பது தலைமை உபாத்தியாயருடைய வேலை. அவர் மேற்பார்க்கா விட்டால், ஒவ்வொரு பாடத்தைக் கற்றுக்கொடுக்கும் உபாத்தியாயரும் தனித்தனியே ஒருவருக்கொருவர் தகவல் இல்லாமல் வீட்டுப் பாடம் கொடுத்துவிட்டால், வீட்டுப்பாடம் அளவுக்கு மிஞ்சிவிடும்.

(3) பரீக்ஷையானது படிப்பிற்குக் குறியாயிருக்கும் வரையில் வீட்டிலே குழந்தைகள் படித்தாகவேண்டும்; ஆதலால் அவர்கள் சௌகரியமாகப் படிப்பதற்கு வேண்டிய வசதிகளைப் பெற்றோர்கள் செய்துகொடுக்கவேண்டியது அவசியம். மற்றப்படியும் அவர்கள் உதவிசெய்வது நல்லது.

(4) வீட்டிலே குழந்தைகள் படிப்பதற்கு என்ன விதமான வசதிகள் இருக்கின்றன என்பதையும் கவனித்து வீட்டுப்பாடம் இடப்படவேண்டும். வீட்டிலுள்ள எல்லாருக்குமாக ஒரே ஓர் அறைமட்டும் இருந்தால், மற்றவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போது, அதே அறையில் குழந்தைகள் உட்கார்ந்து கவனம் செலுத்தி எப்படிப் படிக்க முடியும்?

(5) குழந்தைகளுடைய சாயங்கால வேளை முழுதும் தங்களைச் சேர்ந்தது என்று உபாத்தியாயர்கள் நினைப்பது தவறு. தங்கள் தங்கள் குழந்தைகளோடு பேசி விளையாட வேண்டுமென்று பெற்றோர்கள் ஆசைப்படுகிறார்கள். அவரவர்களுக்குப் பிரியமான விளையாட்டுக் காரியங்களிலேயும் சிறிதுநேரம் செலவிட வேண்டுமென்று விரும்புகிறார்கள். வீட்டுப்பாடத்தைச் சுமத்தி விட்டால் இவற்றுக்கெல்லாம் நேரம் இருப்பதில்லை. ஆகையால் வீட்டுப் பாடம் அளவுக்கு உட்பட்டு இருக்கவேண்டும்.

———




## வீண் சண்டை கூடாது

எஸ். கே. விசுவேசுவர சாஸ்திரி

ராமன், கிருஷ்ணன் இருசிறுவரும் தோழர்கள். அவர்கள் ஒரு நாள் காட்டு வழியே போய்க்கொண்டிருந்தார்கள். ஒரு விளாமரத்திலிருந்து ஒரு பழம் விழுந்தது. அதை ராமன் கவனித்து, "அடே கிருஷ்ணு, அதோ ஒரு விளாம்பழம் விழுந்தது பார்த்தேன்" என்றான்.

அவன் காட்டின பக்கம் நோக்கி அதை எடுக்கக் கிருஷ்ணன் ஓடினான். ராமனும் பின்னே ஓடினான். அதைக் கிருஷ்ணன் எடுக்கையில் ராமன், "பழம் என்னுடையது" என்றான். கிருஷ்ணன், "ஓஹோ, வெகு சிரமப்பட்டு நீ எடுத்தாயோ, உன்னுடையது என்று சொல்ல?" என்றான். "நீ முன்னே ஓடிவந்து எடுத்து விட்டதனால் உன்னுடையதாகிவிடுமா? நான்தானே முதலில்பார்த்து உனக்குச் சொன்னேன்? ஆகையால் என்னிடம் பழத்தைக் கொடு" என்றான் ராமன்.



இருவரும் பழத்திற்காகச் சண்டையிடவே அது நழுவிக் கீழே விழுந்து விட்டது. அதை எடுக்க

இருவரும் சண்டையிட்டுக் கட்டி உருண்டார்கள். கூச்சல் அதிகமாகவே, வழியில் ஒரு பாறைமேல் உட்கார்ந்து இளைப்பாறிக் கொண்டிருந்த ஒரு செட்டியார், "என்னடா சிறுவர்களா, அங்கே சண்டை?'' என்று எழுந்திருந்தார்.

"நீங்கள்தான் வந்து பாருங்கள், கிருஷ்ணன் அநியாயத்தை'' என்றான் ராமன். செட்டியார் கிட்ட வந்து, "எழுந்திருங்கள். இதோ கிடக்கிறதே இந்தப் பழத்திற்குத் தானா, இவ்வளவு சண்டையும் கூச்சலும்?'' என்று சொல்லி எழுந்திருக்கச் செய்து, பழத்தை எடுத்துக் கொண்டு அவர்களுடன் பாறையண்டை போனார்.



"என்னடா, இப்போது உங்கள் கட்சியைச் சொல்லுங்கள்; நான் தீர்த்து வைக்கிறேன். ராமா, நீ இந்தப்பக்கம் நில். சொல்லுங்கள் பார்ப்போம்" என்றார்.

ராம: நாங்கள் போய்க் கொண்டிருக்கும் போது பழம் விழுந்ததை நான்தான் முதலில் பார்த்துச் சொன்னேன். ஆகையால் பழம் எனக்குத்தான்.

கிரு: ஐயா நான் ஓடிச் சிரமப்பட்டு எடுத்தேன். என்னுடையதுதான் பழம்.

செட்டியார்: ராமா! நீ பார்த்தவன்; கிருஷ்ணா! நீ எடுத்தவன். சரிதானே? நான் சரியாய்ப் பங்கிட்டுக் கொடுக்கிறேன்.

இப்படிச் சொல்லித் தம் முன்னே வைத்து அதை உடைத்தார். பழுத்தபழம் ஆதலால் உள்ளே பழம்

தனியாய் உருண்டையாய் இருந்தது. இது செட்டியாருக்குத் தெரியும். "பார்த்ததற்குப் பாதி உனக்கு" என்று ஒரு பக்கத்து ஓட்டை ராமனுக்கும், "எடுத்ததற்குப் பாதி" என்று மற்ற ஓட்டைக் கிருஷ்ணனுக்கும் கொடுத்து, உள் பழத்தைச் சரேலென்று தம் வாயில் போட்டுக் கொண்டு தின்று இளைப்பாறினார்.



"என்ன ஐயா? தீர்த்து வைக்கிறேன் என்று சொல்லிப் பழத்தை நீர் தீர்த்து விட்டீரே" என்றார்கள் சிறுவர்கள் இருவரும்.

"இல்லையப்பா, உங்களிடமிருந்து நான் பழம் வாங்கவில்லை. கீழே கிடந்தது; எடுத்தேன். உங்களுக்குப் பாதி பாதியாய்க் கொடுத்துச் சண்டையைத் தீர்த்ததற்கு உள்ள கூலியை மட்டுந்தான் நான் எடுத்துக் கொண்டேன்" என்றார் செட்டியார்.

இருவர்களும் ஏமாந்தவர்களாய்த் தங்கள் வழியே சென்றார்கள்.

---

# வான விளக்கு

பி. ஆர். சிதம்பரையர், பி.ஏ., எப். ஆர். ஏ. எஸ்.,
ஏ. இராமகிருஷ்ண பிள்ளை, பி. ஏ.

## 2

### சூரிய குடும்பம்

சென்றதடவை சந்திரனைப்பற்றி அநேக விஷயங்கள் அறிந்தீர்கள். சந்திரனையும், சந்திரனுக்கு ஒளி கொடுக்கும் சூரியனையும் தவிர ஆகாசத்தில் நீங்கள் வேறு என்ன பார்க்கிறீர்கள்? சில மாதங்களில் அதிகாலையில் கிழக்குத் திசையிலும் வேறு சில மாதங்களில் மாலைநேரங்களில் மேற்குத் திசையிலும் 'வெள்ளி' என்று சொல்லப்படும் ஒரு பிரகாசமான ஜோதியைப் பார்த்திருப்பீர்கள். இது வானத்திலுள்ள மற்ற நக்ஷத்திரங்களைக் காட்டிலும் அதிகப் பிரகாசத்துடன் விளங்குகிறது. ஆனால் இது ஒரு நக்ஷத்திரம் அன்று. நக்ஷத்திரங்கள் என்பன சூரியனைப் போல் சுய ஒளியினால் ஜொலிக்கும் ஜோதிகள். அவை எத்தனையோ கோடிக்கணக்கான மைல்களுக்கு அப்பால் உள்ளன. ஆகையினாலேயே அவை நம் கண்ணுக்கு மிகச் சிறியனவாய்த் தோன்றுகின்றன. ஆனால் இந்த 'வெள்ளி' எனப்படும் சுக்கிரன் சுயம்பிரகாசம் இல்லாமல் சூரியனது வெளிச்சத்தைப் பெற்றே பிரகாசிக்கின்றது. இதற்கு, 'கிரஹம்' என்று பெயர். இதைப் போல் இன்னும் எட்டுக் கிரஹங்கள் இருக்கின்றன.

இவ்வொன்பது கிரஹங்களாவன: புதன், சுக்கிரன், பூமி, செவ்வாய், வியாழன் அல்லது குரு, சனி, யுரானஸ், நெப்தியூன், ப்ளூட்டோ. இவற்றில் ப்ளூட்டோ என்பது 1930-ஆம் வருஷம் ஜனவரி

மாதம் கண்டுபிடிக்கப்பட்டதாகும். இந்தக் கிரஹங்கள் எல்லாம் சூரியனது ஆகர்ஷண சக்தியினால் சூரியனைச் சுற்றிக்கொண்டே வருகின்றன. இங்கே காட்டியுள்ள படத்தைப் பாருங்கள். மத்தியில்




சூரியனும் கிரஹங்களும்

சூரியனும் சுற்றிலும் மேலே சொல்லப்பட்ட ஒன்பது கிரஹங்களும் அவைகளுக்கு ஏற்பட்ட மார்க்கங்களில் சூரியனை வலம் வருகின்றன.

ஏன் இக்கிரஹங்கள் சூரியனைச் சுற்றிவரவேண்டும்? ஒரு காந்தமானது தன் அருகில் கொண்டு வரப்

படும் இரும்புத் துண்டுகளையெல்லாம் தன்னை நோக்கி இழுத்துக் கொள்ளுவதை நீங்கள் பார்த்திருக்கலாம். இது ஒருவிதமான ஆகர்ஷண சக்தி. இதே போன்ற சக்தி இந்தப் பிரபஞ்சத்திலுள்ள எல்லாப் பொருள்களுக்கும் உண்டு. அதிகக் கனமுள்ள பொருள்களுக்கும் உண்டு; குறைந்த கனமுள்ள பொருள்களுக்கும் உண்டு. ஆனால் அதிகக்கனமுள்ள பொருளின் ஆகர்ஷண சக்தி, குறைந்த கனமுள்ள பொருளின் சக்தியைக் காட்டிலும் அதிகமானதால் பெரியது சிறியதைத் தன் பக்கத்திலே இழுத்துக்கொள்கிறது. உதாரணமாக, மரத்திலுள்ள மாங்காய் அறுந்து ஏன் பூமியை நோக்கி விழவேண்டும்? ஏன் அது ஆகாசத்தை நோக்கி மேலே செல்லக் கூடாது? பூமி அந்த மாங்காயைக் காட்டிலும் எத்தனையோ கோடிக்கணக்கான கனமுடையதாதலால் அது மாங்காயைத் தன்பால் இழுக்க, மாங்காய் பூமியில் வந்து விழுகிறது.

இது போலவே சூரியனது கனம் எல்லாக் கிரஹங்களின் மொத்த கனத்தைவிட எத்தனையோ மடங்கு அதிகமானபடியால் இந்தக் கிரஹங்கள் எல்லாம் சூரியனது ஆகர்ஷண சக்தியில் அகப்பட்டுக் கொண்டு அதைச் சுற்றிக்கொண்டே வருகின்றன. மேலே காட்டியுள்ள படத்தை மறுபடியும் கவனியுங்கள். சூரியனுக்கு அடுத்தபடி புதனும், அப்பால் சுக்கிரனும், அப்பால் பூமியும் அவ்வாறே செவ்வாய், வியாழன், சனி, யுரானஸ், நெப்தியூன் ப்ளூட்டோ ஆகிய கிரஹங்களும் தத்தம் வழியில் (*Orbit*) சூரியனைச் சுற்றிவருவதை அந்தப் படம் காட்டுகிறது.

இனி, சூரியனிலிருந்து இந்தக் கிரஹங்கள் ஒவ்வொன்றுக்கும் உள்ள தூரத்தைக் கவனிப்போம். சூரியனிலிருந்து புதன் 3,60,00,000 மைல் தூரத்திலும், சுக்கிரன் 6,72,00,000 மைல் தூரத்திலும், பூமி 9,29,00,000 மைல் தூரத்திலும், செவ்வாய்

14,15,00,000 மைல் தூரத்திலும், வியாழன் 48,33,00,000 மைல் தூரத்திலும், சனி 88,61,00,000 மைல் தூரத்திலும், யுரானஸ் 178,28,00,000 மைல் தூரத்திலும், நெப்தியூன் 279,35,00,000 மைல் தூரத்திலும், ப்ளூட்டோ 464,40,00,000 மைல் தூரத்திலும் இருக்கின்றன. மணிக்கு 120 மைல் வீதம் நிற்காது செல்லும் ஓர் ஆகாய விமானம் சூரியனிலிருந்து புறப்பட்டால் அது புதனை 34 வருஷங்களிலும், சுக்கிரனை 64 வருஷங்களிலும், பூமியை 88 வருஷங்களிலும், செவ்வாயை 135 வருஷங்களிலும், வியாழனை 460 வருஷங்களிலும், யுரானஸை 1698 வருஷங்களிலும், நெப்தியூனை 2660 வருஷங்களிலும், ப்ளூட்டோவை 4532 வருஷங்களிலும் போய்ச் சேரும்.

சூரியனைச் சுற்றிவரும் ஜோதிகளில் மேலே சொல்லப்பட்ட கிரஹங்களைத் தவிர வால் நக்ஷத்திரங்கள் எனப்படும் தூமகேதுக்களும் உள்ளன. இவையும் கிரஹங்களைப் போலவே சூரியனைச் சுற்றி வருகின்றன. ஆனால் இவை கிரஹங்களைப் போலல்லாமல் வெகு தூரத்திலிருந்து பூமி முதலிய கிரஹங்களின் பாதைகளினிடையே குறுக்கிட்டு, சூரியனை நெருங்கி ஒரு பிரதக்ஷிணம் செய்து எதிர்த்திசையை நோக்கிச் சென்றுவிடுகின்றன. இவற்றில் சில, சில வருஷங்களுக்கு ஒருமுறை சூரியனை வலம் செய்து போகின்றன. வேறு சில ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு ஒருமுறை மேற்சொன்னவாறு சூரியனை வலம் செய்து மறைகின்றன. இன்னும் சில எங்கோ இருந்து வந்து சூரியனை வலம் வந்து எங்கோ போய்க்கொண்டே இருக்கின்றனவாம்; இவை பின்பு திரும்பாவாம். படத்தில் காட்டியிருப்பது 77 வருஷங்களுக்கு ஒருமுறை சூரியனைச் சுற்றிச் செல்லும் ஒரு தூமகேதுவின் மார்க்கம்.

மேலே சொல்லப்பட்ட கிரஹங்களும் தூம கேதுக்களும் சூரியனது ஆகர்ஷண சக்திக்கு உட்பட்டுச் சூரியனைச் சுற்றி வருவதால் 'சூரிய குடும்பம்'



தூமகேதுக்களின் மார்க்கங்கள்

என்னும் பெயர்பெறும். வானத்தில் சூரியன் நடு நாயகமாய் இருந்து கொலுவிருக்கக் கிரஹங்களும் தூமகேதுக்களும் அதன் பரிவாரங்களேபோல் அதைச் சுற்றி வலம் வருகின்றன.

---




**தர்மஸாதனம் அல்லது பொதுநெறி விளக்கம்:** [ஸ்வாமி சுத்தானந்த பாரதியார் இயற்றிய மூலமும் உரையும்; கிடைக்குமிடம்: தமிழ் நேசன் ஆபீஸ், கோலாலம்பூர்; விலை ரூ. 1 8 0.]

ஸ்வாமி சுத்தானந்த பாரதியார் குறட்பாவில் ஆக்கியிருக்கும் இந்நூல் விரிந்த பொருள்களைச் சுருங்க உரைக்கின்றது. பழைய குறள் உருவத்தில் இருப்பினும் புதுயுகத்தின் புதுக்கருத்துக்களை உடையது. இதன் உரையைத் தனி நூலாகவே பாவிக்கவேண்டும். அத்தனை விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன.

**ஈழகேசரி - ஆண்டுமலர்—1938:** இதில் பலதிறப்பட்ட துறைகளில் 50 கட்டுரைகள் காணப்படுகின்றன. அழகிய படங்களோடு அழுத்தமான காகிதத்தில் நன்றாக அச்சிடப்பட்டிருக்கிறது. கதை, ஆராய்ச்சி, கவிதைகள் அடங்கிய இது மிகவும் உபயோகமுள்ள விஷயங்களை உடைய வெளியீடு.

**திருக்குறட் குமரேச வெண்பா:** [ஆசிரியர்: ஜகவீர பாண்டியன்; கிடைக்குமிடம்: மானேஜர், திருவள்ளுவர் நிலையம், தூத்துக்குடி.]

தமிழ் நாட்டில் இடைக்காலத்தில் அளவற்ற பிரபந்தங்கள் புலவர்களால் இயற்றப்பெற்றன. அவற்றிற் பல படிப்பாரற்று அழிந்து போயின. திருக்குறளை யமைத்துப் பாடிய நூல்கள் பல. கலைமகளில் முன்பு வெளிவந்த சிவசிவ வெண்பாவின் முகவுரையினால் அவற்றின் இயல்புகளை அன்பர்கள் அறிந்திருப்பார்கள். அந்நூல்களைப் போல இக்காலத்தில் இயற்றப்பட்டது இத்திருக்குறட் குமரேச வெண்பா.

1330 குறட்பாக்களுக்கும் உதாரணம் தேடி அமைப்பதென்றால் மிகவும் சிரமமான காரியந்தான். அந்தச் சிரமமான காரியத்தை இவ்வாசிரியர் செய்திருக்கிறார். இந்த நூலால் ஆசிரியரின் பரந்த நூலறிவுதான் வெளிப்படுகின்றதேயன்றிக் கவித்துவம் வெளிப்படவில்லை. ஒவ்வொரு வெண்பாவிலும் பாதிப்பாட்டுத் திருவள்ளுவருடையது. முற்பாதியில் தாம் நினைத்த கதையைப் பொருத்திக் காட்டும் முயற்சியில் கவித்துவத்திற்கு இடமில்லை. ஆனாலும் கூடியவரையில் நன்றாகவே பொருத்தியிருக்கிறார். ஒவ்வொரு வெண்பாவிற்கும் ஆசிரியரே உரையெழுதியிருக்கிறார். மூலத்தைக்காட்டிலும் உரையே அதிகமாகப் பயன்படும். உரையிற் காணப்படும் கதை,

திருக்குறளைப்பற்றிய கருத்துக்கள் இவை ஆசிரியரது அறிவை வெளிப்படுத்திக்கொண்டு விளங்குகின்றன.

தொடங்கிய காரியத்தை விடாமுயற்சியோடு முடித்த இவ்வாசிரியரை நாம் போற்றவேண்டும். நம் பார்வைக்கு வந்திருக்கும் 12-ஆம் தொகுதி 8-ஆம் புத்தகத்தில் 1310-ஆம் குறள் வரையில் உள்ளன. இனி எஞ்சிய இருபது குறட்பாக்களும் விரைவிலே நிறைவேறிவிடும் என்பதில் என்ன தடை?

புது முறையிலே தமிழ்க்காப்பியங்களை அமைக்கும் முயற்சியில் இவ்வாசிரியர் ஈடுபடுவாராயின் அம்முயற்சியால் வெளிவரும் நூல் இந்த நூலைக் காட்டிலும் எவ்வளவோ உபயோகமாக இருக்கும். —ஜக.

மதுவிலக்கு: ['ஆத்ரேயன்' ஆங்கிலத்தில் ஆக்கியதைத் தழுவி 'ஸ்ரீவத்ஸன்' எழுதியது. கிடைக்குமிடம்: தீக்ஷித் பப்ளிஷிங் ஹவுஸ், தியாகராயநகர், சென்னை. விலை அணு 6.] மதுவிலக்குச் சட்டம் முதன் முதலாகச் சேலத்தில் அமலுக்கு வந்து இப்பொழுது ஒன்பது மாதங்கள் ஆகின்றன. அதற்குள் அந்த ஜில்லாவிலுள்ள ஏழைமக்களின் நிலைமை ஆச்சரியப்படும்படி அபிவிருத்தி அடைந்திருப்பதைக் கண்டும் கேள்விப்பட்டும் நாம் சந்தோஷப்படுகிறோம். ஆனாலும் அதன் முழுவிவரங்களும் நமக்குத் தெரிந்திருக்க வேண்டியது அவசியமல்லவா? இப்புத்தகம் அக்குறையை 20 அத்தியாயங்களால் நிவர்த்தித்து விடுகிறது. ஆதிகாலமுதல் தற்காலம் வரை பல்வேறு நாட்டினர்குடிப்பதைத் தடுக்க என்ன என்ன முயற்சிகள் செய்தனர், என்ன என்ன முறைகளைக் கையாண்டனர், அவை அளித்த பயன் என்ன என்பவையெல்லாம் விவரமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நம் பிரதம மந்திரி ஆண்டவனை நம்பி, பொது ஜனங்களின் ஒத்துழைப்புடன் மதுவரக்கன்மீது தொடுத்திருக்கும் இப்புனிதமான போர் வெற்றியடையாது போகுமா? இப்புத்தகம் சமயத்திற்கேற்ற பிரசுரமாக இருக்கிறது; மதுவிலக்குப் பிரசாரகர்களுக்கு மிகவும் இன்றியமையாதது. —ஸே.

## புத்தகக் குறிப்பு

ஹிந்தி பத்திரிகை: ஆசிரியர்கள்: பண்டித ரகுவர தயாலு மிச்ர, அ. ராம ஐயர், எம். ஏ., வருஷ சந்தா ரூ. 1. ஹிந்தி பத்திரிகை ஆபீஸ், தெப்பக்குளம், திருச்சி.

ஹிந்தியைக் கற்றுக்கொள்ளத் தொடங்குபவர்களுக்கு இந்த மாதப் பத்திரிகை மிகவும் உபயோகமானது.

ஸர் எம். ஸிடி. முத்தையா செட்டியார் ஹைஸ்கூல் பத்திரிகை: தொகுதி 2, பகுதி 2: இங்கிலீஷ், தமிழ், தெலுங்கு மூன்று பாஷைகளிலும் எழுதப்பட்ட கட்டுரைகள் அடங்கியது.

மாணவர் சுகாதார கீதங்கள்: ஆசிரியர், சாமி ஆறுமுகனார். கிடைக்குமிடம்: மாணவர் பிரசுராலயம், கோபாலசமுத்திரம்; விலை 0 1 3.

ஆரம்பப் பாடசாலைகளிற் பயிலும் சிறுவர் சிறுமியர் பாடுவதற்காகத் தயாரிக்கப் பெற்றவை.

சென்னை ஸங்கீத வித்வத்ஸபைப் பத்திரிகை [The Journal of the Madras Music Academy, Madras; Vols. vi—viii] இதில், அபிநய ஸார ஸம்புடம் முற்றுப் பெறுகிறது. ஸங்கீதஸுதாவின் தொடர்ச்சியும் புண்டரீக விட்டலரைப் பற்றிய கட்டுரை யொன்றும், 'தென்னிந்திய ஸங்கீதத்துக்குரிய ராகங்களின் ஆரம்பமும் வளர்ச்சியும்' என்னும் கட்டுரையும் ஸங்கீத ஸம்பந்தமான பல செய்திகளும், 1934-ஆம் ஆண்டு ஸங்கீத மகாநாட்டின் நிகழ்ச்சிகளும் இதில் உள்ளன.

சென்னை விவசாயிகளின் கடன் சட்டங்கள்: [எம். எஸ். பார்த்தசாரதி ஐயங்கார், பி. ஏ., பி. எல். இயற்றியது. கிடைக்குமிடம்: அகில இந்திய லா ஜர்னல் ஆபீஸ், திருவல்லூர் (எம். எஸ். எம்.) விலை ரூ. 1 8 0.] இதில் சென்னை விவசாயிகளின் பரிஹாரச்சட்டம், கடன் சமரஸச்சட்டம், கடனாளிகளின் பாதுகாப்புச்சட்டம், விவசாயிகளுக்குக் (கவர்ன்மெண்டார்) கடன் கொடுப்பதைப்பற்றின சட்டம், அநியாயவட்டிக்குக் கடன் பெறுவதைப்பற்றின சட்டம் இவைகளின் குறிப்புகள் வியாக்கியானம் முதலியவை அடங்கியுள்ளன.

## புத்தக வரவு

நல்லுரைக் கோவை (மூன்றும் பாகம்)—மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதியது; விலை 12 அணா.

எல்லோரும் ஓர் குலம்: நவயுகப் பிரசுரம்; ஸ்ரீமான் ப. ராமஸ்வாமி ஐயங்கார் எழுதியது; விலை எட்டு அணா.

அபிஜ்ஞான சாகுந்தலம்: ஸ்ரீ மகாவித்வான் பாஷாகவிசேகர, ரா. இராகவையங்கார் வடமொழியிலிருந்து மொழிபெயர்த்து இயற்றியது.

திருக்குறள் இன்பம், திருநூல் அல்லது தூயவாழ்வு: ஸ்வாமி சுத்தானந்த பாரதியார் இயற்றியவை.






## நாட்டியக் கலை

பல நூறு ஆண்டுகளுக்குமுன் பாரத நாட்டில் நாட்டியமானது அறுபத்துநான்கு கலைகளுள் முக்கியமான கலையாக விளங்கியது. இதற்கென்றே பரதமுனி நந்திதேவர் இவர்கள் இயற்றிய 'நாட்டிய சாஸ்திரம்', 'அபிநய தர்ப்பணம்' என்ற புத்தகங்கள் இருந்தன. தேவதாஸிகள் மட்டுமன்றி உயர்குலத்தினரும் இந்தக் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தார்கள். இன்றும் ஜாவா, பலித்வீபம் முதலிய இடங்களில் அரசகுடும்பத்தைச் சேர்ந்தவர்கள் இதைப் பயின்று வருகிறார்கள்; அற்புதமாக நிருத்தியம் செய்யும் நாட்டியப்பெண்கள் அங்கு இருக்கின்றனர். பிற்காலத்தில் பரத நாட்டியத்தின் மஹிமை குன்றிவிட்டது. அதற்கு முக்கிய காரணம் தேவதாஸிகள் மட்டும் அதைத் தங்கள் குலத்தொழிலாகக் கொண்டதே. அதனால், 'இது கேவலம் வேசிகளின் தொழில்' என்ற அருவருப்பு உயர்குலத்தினருக்கு ஏற்படவே அக்கலை க்ஷீணிக்கத் தொடங்கியது. ஆனால் ஸமீபத்தில் சில ரஸிகர்களின் முயற்சியால் இக்கலைக்குப் புதிய ஜீவன் ஏற்பட்டிருக்கிறது.

இந்நகரில் காட்டப்படும் 'ஜலஜா' என்னும் படம் பழைய பரதநாட்டியக் கலை ஸம்பந்தமுள்ளது. இந்தப் படம் பொதுவாகப் பரதநாட்டியத்தின் மீது வெறுப்புக் கொண்டிருந்தவர்களின் மனத்தை மாற்றி அக்கலையில் சிறிது ருசி ஏற்படும்படி செய்கிறது என்றே கூறவேண்டும். இப்படத்தின் முக்கியமான நல்ல அம்சம் என்னவென்றால், ஒரு தாசியைப்பற்றிய கதையாக இருந்தபோதிலும் இதில் மோசமான காட்சிகள் எவையும் இராதிருப்பதே. தனித்தனியே பார்க்கும்போது சில குறைகள் இருப்பது தெரிகிறது.

முதலாவதாகக் கதையை எடுத்துக்கொள்வோம்: ஜலஜா என்பவள் உண்மையில் நல்ல குணம் படைத்த, கடவுளிடத்தில் பக்திகொண்ட தேவதாஸி என்று நமக்குத் தெரிவதற்கு முன்னாலே அவளுடைய தூய்மையை விளக்கும் காட்சிகள் சில சேர்த்திருக்கவேண்டும். கடைசியில் அவள் கடவுளையே தன் காதலனாகக் கொண்டாள் என்ற முடிவு சினிமாத் திரை வரைக்கும் உண்மையாக இருக்கக்கூடும். ஆனால் வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டவேண்டியிருந்தால் அவ்வித முடிவு ஏற்பட்டிராது; கதாநாயகனான ராஜகோபாலன் தன் மனைவியின் சம்மதம்பெற்று ஜலஜாவைத் தன் காதலியாகக் கொண்டிருக்கவேண்டி வரும். ராஜகோபாலனின் மனைவி லக்ஷ்மிக்கு முதலில் குழந்தை பிறக்காததால் பைத்தியம் பிடித்திருப்பதாகத் தோன்றுகிறது. (ஸெல்லுலாய்டால் செய்யப்பட்ட குழந்தையை அவள் தொட்டிலில் இட்டு ஆட்டி யிராவிட்டால் இவ்வெண்ணம் நமக்குத் தோன்றி

யிராது) ஆனால் பின்னாலே டாக்டர் அவளுக்கு நாட்டியப்பித்துப் பிடித்திருக்கிறதென்று சொன்னதும் நமக்குத் தூக்கி வாரிப் போடுகிறது. இவை ஒன்றுக்கொன்று முரணானவையாகப் படுகின்றனவே யொழிய உண்மை யென்று நினைக்கும்படியாக இல்லை.

இரண்டாவதாக, நாட்டியத்தைப்பற்றிக் கூறுவோம். நாட்டியம் ஆடும் போது ஜலஜாவின் உடை கூடியவரை சுமாரானதாக இருந்தபோதிலும் அவ்வித உடையே பார்ப்பவர் கண்களுக்கு, பரதநாட்டியத்தின் மீதுள்ள அபிருசியைச் சிறிது குறைத்துவிடுகிறது. வடநாட்டு நாட்டியக்காரருட் சிலர் இக்கலையிற் சிறிதளவு ஞானமே படைத்தவர்களாயிருப்பினும் சந்தர்ப்பத்திற் கேற்றவாறு ஆடை உடுத்தி, பார்ப்பவர்களின் மனத்தைக் கவர்ந்து விடுகிறார்கள். வடநாட்டு நாட்டியக்காரன் ஒருவன் மோசமாக ஆடுவது போன்று எடுக்கப்பட்டிருக்கும் காட்சி அந்நாட்டு நாட்டியக்காரர்களே மோசமாக நிருத்தியம் செய்பவர்கள் என்ற தவறான எண்ணத்தை உண்டுபண்ணிவிடுகிறது. ஜலஜாவின் அபிநயம் குறைகளின்றியே இருப்பினும் சிறுமி ருக்மிணியின் நாட்டியமே நமக்குச் சிறந்ததாகத் தோன்றுகிறது. அதோடுகூட 'நாட்டியம் பெண்மையை மேன்மையாக்கியிருக்கலாம்; அது அந்தக் காலத்தில். இப்பொழுது அது பத்து வயதுக்குட்பட்ட சிறுமிகளுக்குத் தகுதியே யன்றி மற்றவர்களுக்கு ஏற்றதன்று' என்ற எண்ணமும் உண்டாகிறது.

மூன்றாவதாக நடிகர்களைப் பற்றி ஆராயும்போது, ராஜகோபாலனின் ஸஹதர்மிணி லலிதாவாக நடித்த ஸ்ரீமதி லக்ஷ்மியே முன்னணியில் நிற்கிறார். அந்த அம்மாளின் நடிப்பு எல்லா அம்சங்களிலும் சிறந்து விளங்குகிறது. ஆனால் ஓரிடத்தில் மட்டும்—பைத்தியக்காரியாகக் கார் ஓட்டிக்கொண்டு போகும்போது—காரின் கைப்பிடியைத் திருப்புகிறாரே யொழியக் காரை ஓட்டவில்லை என்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. அதற்கு அடுத்தபடியாகச் சிறுமி ருக்மிணியைக் குறிப்பிடவேண்டும். ஸ்ரீமதி பானுமதியைவிட அவர் தாயாராக வரும் அம்மாள் நன்றாக நடித்திருக்கிறார். ஸ்ரீமான் கோபாலகிருஷ்ணன் தம்முடைய பாகத்தை நன்றாகவே நடித்திருக்கிறார். ஸ்ரீமான் சேஷகிரியின் நடிப்புத்திறமை இப்படத்தில் நன்கு வெளியாகாதிருப்பதற்குக் காரணம் என்னவென்று தெரியவில்லை. மற்ற நடிகர்கள் சுமாராக நடித்திருக்கிறார்கள்.

நான்காவதாக, ஒளிப்பதிவு ஒலிப்பதிவு விஷயம்; சில காட்சிகள் அதிகமாக வெளுத்துத் தெரிகின்றன. ஸங்கீதம் செவிக்கினிமையாக இருக்கிறது; ஆனால் ஜலஜா தோட்டத்தில் துள்ளுநீரினருகில் இருக்கும் போது ஒரு பெரிய இரைச்சல் கேட்கிறதே, அது கர்ணகடூரமாயிருக்கிறது. இந்தச் சில்லறை விஷயங்களை நீக்கிப்பார்த்தால் மொத்தத்தில் இப்படம் நன்றாயிருக்கிறதென்று தடையில்லாமல் கூறுவோம்.

## பன்னிருவர் இயற்றிய நவீனம்

வங்க இலக்கிய உலகில் சில வருஷங்களுக்கு முன் ஒரு புதுமையான ஸம்பவம் நிகழ்ந்தது. பல சிறந்த எழுத்தாளர்களைக் கொண்டு ஒரு நாவலை எழுத வைத்தார் பிரசுரகர்த்தர்களுள் ஒருவர். முதலில் ஒருவர் இரண்டல்லது மூன்று அத்தியாயங்கள் எழுதினார். மற்றவர் அதைத் தொடர்ந்து எறக்

குறைய அதே அளவில் தங்கள் தங்கள் கற்பனை சக்தியையும் சொந்த நடையையும் தாங்கள் எழுதின பாகங்களில் வெளிக்காட்டினர். இவர்களுள் சமீபத்தில் காலஞ்சென்ற பிரபல கதாசிரியரான ஸ்ரீ சரத் சந்திர சட்டர்ஜியும் ஒருவராவர். பன்னிருவர் எழுதியதனால் இந்த நவீனத்திற்கு, 'பன்னிருவர் நவீனம்' என்றே பெயரிடப்பட்டது.

இம்மாதிரியே, தமிழ்நாட்டில் சிறந்த எழுத்தாளர்கள் அனைவரும் "அவன் உயர்த்தியோ? நான் தாழ்த்தியோ"? என்று ஒருவரையொருவர் ஏசிக்கொள்வதை விட்டு ஒன்று சேர்ந்து எழுதிப் பிரசித்தி பெறப்போகும் காலமும் வருமா?

## சூயெஸ் கால்வாயை வெட்டினவர்

பிரிட்டிஷ் வியாபாரத்தின் அபிவிருத்திக்கும் இன்று அவர்கள் இந்தியாவை ஆண்டு வருவதற்கும் அந்நிய வல்லரசுகள் அவர்களைக் கண்டு பொறாமைப்படுவதற்கும் சூயெஸ் கால்வாய் வெட்டப்பட்டதே காரணம் என்று சொல்லலாம். அதை வெட்டியவர் பிரெஞ்சு எஞ்ஜினியரான பெர்டினண்டு டி லெஸ்ஸெப்ஸ் என்பவர். 1867-இல் அவர் அதை வெட்டினதும் அவருடைய திறமையைக் கண்டு எல்லோரும் வியந்தனர்.

சில வருஷங்கள்கழித்து அவரை அமெரிக்காவிலுள்ள ஒரு கம்பெனியார் அழைத்தனர். வட அமெரிக்காவும் தென் அமெரிக்காவும் சேரும் இடம் மிகக் குறுகலானது. இங்கே ஒரு கால்வாய் வெட்டிப் பஸிபிக் மகாஸமுத்ரத்தைபும் அட்லாண்டிக் மகாஸமுத்ரத்தையும் ஒன்றுசேர்த்தால் வியாபாரப் போக்குவரத்துக்கு எவ்வளவோ சௌகரியமாயிருக்குமென்று அவர்கள் எண்ணினர். லெஸ்ஸெப்ஸ் பிரதான எஞ்ஜினியராக நியமிக்கப்பட்டார். அப்பொழுது அவருக்கு வயது எழுபது. ஆனாலும் உற்சாகம் மட்டும் குன்றவில்லை அவருக்கு. கால்வாயை வெட்ட ஒரு திட்டம் போட்டு வெட்ட ஆரம்பித்தார்கள். ஆனால் சற்று முன்யோசனை செய்திருந்தாரானல் லெஸ்ஸெப்ஸ் தாம் நினைத்தது போன்று அது சுலபமானதன்று என்பதை அறிந்துகொண்டிருப்பார். அப்பிரதேசம் சூயெஸ் கால்வாய்ப் பிரதேசத்தைப் போல் சமதளமுள்ளதாக இருக்கும் என்று அவர் எண்ணியிருந்தார். ஆனல் அங்கே பெரிய பெரிய மேடு பள்ளங்கள் குறுக்கிட்டன; மலைகள் தடையாக நின்றன. முக்கியமாகச் சாக்ரெஸ் என்ற ஒரு மலையிலிருந்து வரும் நதியின் ஓட்டம் கால்வாயை வெட்டமுடியாதபடி தடைசெய்யும் என்று தெரிந்தது. இதனால் கம்பெனிக்கு நஷ்டம் ஏற்பட்டதை அறிந்து அதன் முதலாளிகள் ஒரு கமிட்டி ஏற்படுத்தி இந்தத் தவற்றுக்கு மூல காரணம் யார் என்று விசாரணைசெய்ததில் லெஸ்ஸெப்ஸே அதற்குப் பொறுப்பாளி என்று தீர்மானிக்கப்பட்டது. ஆனல் அவருடன் வேலை செய்த அவருடைய மகன், தானே அதற்குப் பொறுப்பாளி என்று சொல்லித் தகப்பனாரை மீட்டான். இதனாலேயே சீக்கிரத்தில் மனமுடைந்து இறந்து போனர் லெஸ்ஸெப்ஸ். ஆனல் சூயெஸ் கால்வாயைச் சிருஷ்டிக்கும்போது அவர் காட்டிய வேலைத்திறமையை யாரும் மறக்கமாட்டார்கள்.

---